# விஷய அட்டவணை



## இதில் சேர்க்கப்பட்டுள்ள போடோ படங்கள்

புத்தக ரூபமாய் வெளிவரும்

---

திருப்பரங்குன்றம்,

பழமுதிர்சோலை,

குன்றுதோறாடல்

*இம்மூன்று படைவீடுகளின் திருப்புகழ்ப் பாடல்களும்*

*அவற்றிற்குப் பதவுரை விருத்தியுரைகளும்*

*புத்தக ரூபமாய் வெளிவரும்*

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்



## விநாயகர்

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன—தனதான

கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக — னடிபேணிக் -

கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை — கடிதேகும் ;

மத்தமு மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள்புய — மதயானை -

மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு — பணிவேனே ;

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய — முதல்வோனே -

முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த — அதிதீரா ;

அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை யிபமாகி -
அக்குற மகளுட னச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

(ப - ரை) மு தமிழ் அடைவினை - இயல் இசை நாடகம் என்னும் மூன்று வகைப்பட்ட தமிழ் மொழி முழுவதும் அடங்கிய பாரதத்தை, முன் படு கிரி தனில் - தமக்கு முன்னே தோன்றிய மேருமலையில், முற்பட எழுதிய முதல்வோனே - வியாசமா முனிவர் சொல்வதற்குமுன் அதிவேகமாய் எழுதிமுடித்த (சகல நாதங்களுக்கும் ஆதிகாரணமான) பிரணவத்தின் சொரூபியே !, முப்புரம் எரிசெய்த அ சிவன் - (மும்மலங்களின் உருவங்களான) திரிபுரங்களை (நெற்றிக்கண்ணின் ஞானத் தீயினால்) எரித்து அழித்த அந்தச் சிவபெருமான், உறை ரதம் அச்சு அது பொடி செய்த - அமர்ந்திருந்த இரதத்தின் அச்சினைப் பொடியாக்கிய, அதி தீரா - மகா தீரனே !, அ துயர் அது கொடு-(பரம்பொருள் ஆன்மாவை யடைய மார்க்கமில்லாததனால் வருந்துகிறது என்று சொல்லும்) அந்தத் துயரத்தை யடைந்து, சுப்பிரமணி படும் - சுப்பிரமணிய மூர்த்தி போய்ச் சேர்ந்த, அ புனம் அதனிடை இபம் ஆகி - அந்தத் தினைப்புனத்திலே யானையினுருவத்துடன் தோன்றி, அ குற மகளுடன் அ சிறு முருகனை - அப்புனத்தி லிருந்தவரும் வேடர்குலத்தில் வளர்ந்தவருமான வள்ளிநாயகியினுடன் என்றும் இளமை மாறாத அந்த ஞான சொரூபியை அக் கணம் மணம் அருள் பெருமாளே - தக்ஷணத்திலேயே விவாகம் செய்வித்தருளிய பெரியோனே !, கை தல(ம்)நிறைகனி அப்பமொடு அவல் பொரி கப்பிய - உள்ளங்கை நிறைய பழம் அப்பம் அவல் பொரி இவைகளை (எடுத்து) உண்ணும், கரிமுகன் அடி பேணி - யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளது பாதங்களை யடைய விரும்பி, கற்றிடும் அடியவர் - நூல்களைக் கற்கும் அடியவர்களுடைய, புத்தியில் உறைபவ - புத்தியில் அமர்ந்தருள்பவனே !, கற்பகம் - (இச்சித்தவைகளை யெல்லாம் கொடுக்கும்) கற்பக விருக்ஷத்தைப்போல அடியவர் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்பவனே !, என - என்று சொன்ன மாத்திரத்தில், வினை கடிது ஏகும் - முற்பிறப்புக்களிற் செய்த வினைகளின் பயன் வேகமாய் அகன்று செல்லும் ; (ஆதலால்), மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன் - ஊமத்தையையும் சந்திரனையும் (சடாமுடியில்) அணிந்துகொண்டுள்ள சிவபெருமானது புதல்வனும், மல் பொரு திரள்புய - மல்ல யுத்தத்துக்குத் தக்க திரண்ட புயங்களை யுடையவனும், மத யானை - மதயானையின் முகத்தையும், மத்தள வயிறனை - மத்தளம் போன்ற வயிற்றையு முடையவனும் உத்தமி புதல்வனை - பெண்கள் நாயகமான பார்வதி தேவியாருடைய புத்திரனுமான நின்னை, மட்டு அவிழ் மலர் கொடு பணிவேனே - வாசனை வீசும் மலர்களைக்கொண்டு அர்ச்சித்து வணங்குவேன்.

V

*தத்தனன தத்தனன தத்தனன தத்தனன*

*தத்தனன தத்தனன—தனதான*

பக்கரைவி சித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பக்ஷியெனு முக்ரதுர கமுநீபப்

பக்குவம லர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்

திக்கதும திக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்

செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ்வி ருப்பமொடு
செப்பெனஎ னக்கருள்கை மறவேனே

இக்கவரை நற்கனிகள் சர்க்கரைப ருப்புடனெய்
எட்பொரிய வற்றுவரை யிளநீர்வண்

டெச்சில்பய றப்பவகை பச்சரிசி பிட்டுவெள
ரிப்பழமி டிப்பல்வகை தனிமூலம்

மிக்கஅடி சிற்கடலை பக்ஷணமெ னக்கொளொரு
விக்கிநச மர்த்தனெனு மருளாழி

வெற்பகுடி லச்சடில விற்பரம ரப்பரருள்
வித்தகம ருப்புடைய பெருமாளே.

(ப - ரை) இக்கு அவரை நல் கனிகள் - கரும்பு அவரை நல்ல பழங்கள், சர்க்கரை பருப்புடன் - சர்க்கரை பருப்பு இவைகளுடன், நெய் எள் பொரி அவல் துவரை இளநீர்—, வண்டு எச்சில் - தேன், பயறு அப்பவகை பச்சரிசி பிட்டு வெ(ள்)ளரிப்பழம்-, இடி பல்வகை - பலவகையான சிற்றுண்டிகள், தனி மூலம் - ஒப்பற்ற கிழங்குகள், மிக்க அடிசில் - மிகுந்த சோறு, கடலை - கடலை (இவைகளை), பக்ஷணம் என கொள் - உணவாகக் கொள்பவரும், ஒரு விக்கின சமர்த்தன் எனும் - இடையூறுகளை அகற்றுவதில் ஒப்பற்ற சாமர்த்தியசாலி என்று சொல்லப்படுபவருமான, அருள் ஆழி - கருணைக் கடலே !, வெற்ப - (திருக்கைலாயம் என்னும்) மலையில் அமர்ந்திருப்பவரும், குடில சடில - வளைந்த சடாமுடியை யுடையவரும், வில் - ஒளி பொருந்திய திருமேனியை யுடையவரும், பரமர் அப்பர் - பரம்பொருளும் உலகையீன்ற தந்தையுமாகிய

சிவபெருமான், அருள் - தந்தருளிய, வித்தக - அறிஞனே !, மருப்புடைய பெருமாளே - தந்தங்களையுடைய பெரியோனே !, பக்கரை - அங்கவடியும், விசித்ர மணி பொன் கலணை - அற்புதமான இரத்தினங்கள் இழைக்கப் பெற்ற பொன் சேணமும், இட்ட - போடப் பெற்ற, நடை பக்ஷி எனும் - நடந்து செல்லும் பக்ஷி என்று சொல்லப்படும் மயிலாகிய, உக்ர துரகமும் - அதிவேகம் பொருந்திய வாகனத்தையும், பக்குவ நீப மலர் தொடையும் - பருவத்திலுள்ள கடம்ப மலர்களால் தொடுத்த மாலையையும், அ குவடு பட்டு ஒழிய- அந்தக் கிரௌஞ்சம் என்னும் மலை அழிந்து ஒழியுமாறு, பட்டு உருவ - அதைத் தாக்கி அதனூடே பாய்ந்து செல்லும்படி - விட்டு அருள் கை வடிவேலும் - பிரயோகித்தருளியதும் கையிற் பொருந்தியதுமான வடிவேலையும், திக்கு அது மதிக்க வரு குக்குடமும் - ஞான சூரியன் தோன்றும் திசை யாதென்று நிச்சயிக்கும் வண்ணம் வரும் சேவலையும், ரக்ஷை தரு சிற்றடியும் - ஜடவுலகத் துயரத்தினின்றும் காப்பாற்றும் சிறிய பாத மலர்களையும், முற்றிய ப(ன்)னிரு தோளும் - (காக்கும் திறமை பெறும்படி) முற்றிய பன்னிரண்டு தோள்களையும், செய்ப்பதியும் - வயலூரையும், வைத்து - குறித்துக் கூறி, உயர் திருப்புகழ் - சிறந்த திருப்புகழை, விருப்பொடு செப்பு என - ஆசையுடன் பாடுவாயாக என்று, எனக்கு அருள்கை மறவேனே - அடியேனுக்குக் கட்டளையிட்டருளியதை மறக்கமாட்டேன்.

## முருகன்

*தத்தத் தன தத்தத் தனதன*
*தத்தத் தன தத்தத் தனதன*
*தத்தத் தன தத்தத் தனதன—தனதான*

முத்தைத் தரு பத்தித் திருநகை
அத்திக் கிறை சத்திச் சரவண
முத்திக் கொரு வித்துக் குருபர எனவோதும்

முக்கட் பர மற்குச் சுருதியின்
முற்பட் டது கற்பித் திருவரு
முப்பத் துமு வர்க்கத் தமரரு மடிபேணப்

பத்துத் தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக் கிரி மத்தைப் பொருதொரு
பட்டப் பகல் வட்டத் திகிரியி லிரவாகப்

பத்தற் கிர தத்தைக் கடவிய
பச்சைப் புயல் மெச்சத் தகுபொருள்
பட்சத் தொடு ரட்சித் தருள்வது மொருநாளே

திக்தித் தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப் பதம் வைத்துப் பயிரவி
திக்குட் கந டிக்கக் கழுகொடு கழுதாடத்

திக்குப் பரி அட்டப் பயிரவர்
தொக்குத் தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப் பவு ரிக்குத் ரிகடக எனவோதக்

கொத்துப் பறை கொட்டக் களமிசை
குக்குக் குகு குக்குக் குகுகுகு
குத்திப் புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற் றெழ நட்பற் றவுணரை
வெட்டிப் பலி யிட்டுக் குலகிரி
குத்துப் பட வொத்துப் பொரவல பெருமாளே !

(ப - ரை) கள(ம்) மிசை—போர்க்களத்தில், திக்தி தெய் அ ஒத்த - நிர்த்தனஞ் செய்யும் தெய்வமான நடராஜப் பெருமானுடையவைகளை யொத்தவைகளாய், பரிபுர நிர்த்த பதம் வைத்து - கிண்கிணிகளை அணிந்து நிர்த்தனஞ் செய்யும் இயல்புடைவைகளாயுள்ள பாதங்களை யூன்றி, பயிரவி - காளிகள், திக்கு உட்க - எட்டுத் திக்குகளும் நிலைகெடுமாறு, நடிக்க - நிர்த்தனஞ் செய்யவும், கழு கொடு கழுது ஆட - கழுகுகளுடன் பேய்களும் சுற்றிச் சுழலவும், திக்குபரி அட்ட பயிரவர் - (எட்டுத்) திக்குகளையும் காக்கும் எட்டுப் பைரவர்களும், சித்ர பவுரிக்கு - அந்த விசித்திரமான கூத்துக்கு (இசைய), தொக்குத் தொகு தொக்குத் தொகு தொகு த்ரிகடக -, என ஒத - என்று பாடவும், கொத்து பறை கொட்ட - பலவகைப்பட்ட பறைகள் கொட்டவும், குக்குக் குகு குக்குக் குகுகுகு என்று தாரைகளை முழக்கிக்கொண்டு, குத்தி புதை புக்கு பிடி என - குத்திப் புதை ! (எதிரியின் சேனை அணிகளுள்) புகுந்து பிடி ! என்று பலர் கூவவும், முது கூகை கொட்பு உற்று எழ - வயது முதிர்ந்த கோட்டான்கள் சுழன்று பறந்து மேலே கிளம்பவும், நட்பு அற்ற அவுணர்களை வெட்டி பலியிட்டு - நின்னிடத்து நேசமில்லாத அசுரர்களை வெட்டி (பேய்களுக்கும் கழுகுகளுக்கும்) உணவாக அளித்து, குலகிரி குத்துப்பட - உயர்ந்த கிரௌஞ்ச மலையானது குத்துப்படுமாறு, ஒத்து பொர (வ)ல்ல பெருமாளே - (அசுரர்களது மாயப்

போருக்குத்) தக்கபடி போர்செய்யும் வல்லமை பொருந்திய பெரியோனே !, முத்தை தரு பத்தி திருநகை அத்திக்கு இறை - முத்துக்களின் காட்சியைத் தரும் வரிசையாகவுள்ள அழகிய பற்களையுடையவரும் ஐராவதம் என்னும் யானையினால் வளர்க்கப்பட்டவருமான தெய்வயானை யம்மையாருக்கு நாயகனே!, சத்தி சரவண - ஞான சக்தியாம் வேலாயுதத்தைத் தரிப்பவனே ! சரவணப் பொய்கையில் அவதரித்தவனே !, முத்திக்கு ஒரு வித்து - முத்தியைத் தரத் தக்க தனி வித்தே ! குருபர - பரம்பொருளை யடையும் நெறியைப் போதிக்க அவதரித்த குருவே !, என ஓதும் - என்று நின்னைப் புகழ்ந்து நின்ற, முக்கண் பரமற்கு - மூன்று கண்களையுடைய சர்வேசுவரருக்கு, சுருதியின் முற்பட்டது கற்பித்து - வேதத்தின் சாரமான பொருளை உபதேசித்து, இருவரும் முப்பத்து மூவர்க்கத்து அமரரும் அடி பேண - உருத்திரனும் விஷ்ணுவும் முப்பத்து மூன்று வர்க்கமாகவுள்ள (முப்பத்து முக்கோடி) தேவர்களும் நினது பாதங்களை வணங்கப் பெற்று, பத்து தலை தத்த கணை தொடு - (இராவணனது) பத்துத் தலைகளும் தாவிக் கீழே விழுமாறு அம்பைப் பிரயோகித்தவரும், ஒற்றை கிரி மத்தை பொருது - ஒப்பற்ற மலையான மந்தர மலையை மத்தாக உபயோகித்து (திருப்பாற்கடலைக்) கடைந்தவரும், ஒரு பட்டப்பகல் - (பாரத யுத்தத்தில்) ஒரு நாள் பட்டப்பகலை, வட்ட திகிரியில் இரவாக - தமது வட்ட வடிவமான சக்கரத்தை உபயோகித்து இரவாகும்படி செய்து, பத்தற்கு இரதத்தை கடவிய - தம்மிடத்து அன்பு பூண்ட அடியவனாகிய அருச்சுனனுக்கு(ச் சாரதியாக அமர்ந்து) இரதத்தைச் செலுத்திய (வரும்), பச்சை புயல்-(ஸ்ரீ ராமாவதாரத்தில்) பச்சை நிறம்பொருந்திய திருமேனியையும் (ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில்) கார் மேகத்தின் நிறம்பொருந்திய திருமேனியையு முடையவராய் அவதரித்த விஷ்ணு, மெச்ச தகு பொருள்-மெச்சத்தக்க பராபர வஸ்துவாக இருப்பவனே!, பக்ஷத்தொடு ரக்ஷித் தருள்வதும் ஒரு நாளே - அடியேனிடம் அன்பு பூண்டு அடியேனை இரக்ஷித்து அருளும் நாளும் உண்டோ ? (எந்நாளிலாயினும் இரக்ஷித்தருள்வாயோ ?)

(வி - ரை) பாரதப் போரில் அருச்சுனனுக்குச் சாரதியாக அமர்ந்து அவனுக்குப் **பகவற்கீதை** என்று சொல்லப்படும் மெய்ஞ்ஞான உபதேசத்தைச் செய்த விஷ்ணுவானவர், முருகப்பெருமான் பரம்பொருளான சிவபெருமானுக்கே ஞானோபதேசம் செய்த திறத்தைக் கண்டு அவரை மெச்சிக் கொண்டார்.



உ

குகப்பெருமான் பாதமலர்களே துணை!

# திருப்புகழ் விருத்தி உரை

"நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரவா னைபதம் பணிவாம்!

காளைக் குமரே சனெனக் கருதி
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே!" — கந்தரனுபூதி.



## 1. திருவேரகம் எனும் சுவாமிமலை

*தனனதன தனதனன தனனு தனத்தனன*
*தனனதன தனதனன தனனு தனத்தனன*
*தனனதன தனதனன தனனு தனத்தனன — தனதான.*

குமரகுரு பரமுருக குகனே குறச்சிறுமி
கணவசர வணநிருதர் கலகா பிறைச்சடையர்
குருவெனரு ளுரையுதவு மயிலா எனத்தினமு முருகாதே

குழில்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலன வரதமன மெனவே நடப்பர்நகை
கொளுமவர்க ளுடைமைமன முடனே பறிப்பவர்களனைவோரும்

தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீ திநிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய கமுவா வுழப்பியர்கண் வலையாலே

சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீ துருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமா தரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியே வழுத்தஅருள் தருவாயே!

சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருநொடியி லவர்கள்படை கெடவே லெடுத்தவனி
தனில்நிருதர் சிரமுருள ரணதூள் படுத்திவிடு செருமீதே

தவனமொடு மலகைநட மிடவீ ரபத்திரர்க
ளதிரநிண மொடுகுருதி குடிகா ளிகொக்கரிசெய்
தசையுணவு தனின்மகிழ விடுபேய் நிரைத்திரள்கள் பலகோடி

திமிதமிட நரிகொடிகள் கழுகா டரத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதின கரஅமரர் பதிவாழ் வுபெற்றுலவு முருகோனே!

திருமருவு புயனயனொ டயிரா வதக்குரிசி
லடிபரவு பழநிமலை கதிர்கா மமுற்றுவளர்
சிவசமய அறுமுகவ திருவே ரகத்திலுறை பெருமாளே! (க)

**(பதவுரை.)** சமரமொடும் அசுரர்படை களமீது எதிர்த்தபொழுது - போர் புரியக்கருதி அசுரசேனைகள் போர்க்களத்தில் நின்னை எதிர்த்தபொழுது, ஒரு நொடியில் அவர்கள் படை கெட வேல் எடுத்து - ஒரு நொடிப் பொழுதில் அந்த அசுரசேனைகள் அழிந்துபோகுமாறு வேலாயுதத்தைக் கையில் எடுத்து, அவனி தனில் நிருதர் சிரம் உருள - தரையின்மீது அசுரர்களின் தலைகள் உருளுமாறு, ரணம் தூள்படுத்திவிடு செருமீதே - பகைவர்களைப் பொடியாக்கிய போர்க்களத்தில், தவனமொடும் அலகை நடமிட - ஆசையுடன் பேய்கள் நிர்த்தனஞ்செய்யவும், வீரபத்திரர்கள் அதிர - வீரபத்திரர்கள் ஆரவாரஞ் செய்யவும், நிணமொடு குருதி குடி காளி கொக்கரிசெய்து - மாமிசத்தை யுண்டு இரத்தபானஞ்செய்து காளி கர்ச்சித்து, தசையுணவுதனில் மகிழவிடு-மாமிசத்தை யுண்டு மகிழ்ச்சியடையுமாறு அவிழ்த்துவிட்ட, பேய் நிரைத் திரள்கள் - வரிசை வரிசையாகவுள்ள பேய்க் கூட்டங்கள், பலகோடி - அநேககோடி, திமிதமிட - பெருத்த ஓசையுண்டாகுமாறு (களிப்பினால்) கூத்தாடவும், நரி கொடிகள் கழுகு ஆட - நரிகளும் காக்கைகளும் கழுகுகளும் கூத்தாடவும், ரத்தவெறி வயிரவர்கள் சுழல-இரத்தபானஞ்

செய்ததனால் வெறிகொண்ட வயிரவர்கள் சுழன்று ஆடவும், ஒரு தனி ஆயுதத்தை விடும்-ஒப்பற்ற வேலாயுதத்தைப் பிரயோகிக்கும், திமிர தினகர - (அஞ்ஞான) இருளைநீக்கும் (ஞான) சூரியனே!, அமரர்பதி வாழ்வுபெற்று உலவு முருகோனே-தேவர்களுக்கு இறைவனாகிய மேலானபதவியைப்பெற்று உலாவுகின்ற ஞானசொரூபியே! திருமருவு புயன்-இலக்ஷ்மியை அணைந்துகொள்ளும் புயங்களையுடைய திருமாலும், அயன்-பிரமதேவரும், அயிராவதக் குரிசில்-ஐராவதத்தை வாகனமாகவுடைய அரசனாகிய தேவேந்திரனும், அடிபரவு-நினது அடியை வணங்கும்படியான மேன்மையுடையோனாய், பழநிமலை கதிர்காமம் உற்று வளர்-பழநிமலை கதிர்காமம் என்னும் திவ்ய ஸ்தலங்களில் வந்து (அடியார் கலிகளைத் தீர்ப்பதற்காக வரதனாய்) அமர்ந்திருக்கும், சிவசமய அறுமுகவ - சைவசமயத்தோருக்கே கிடைக்கத்தக்க பெரும்பேறாகிய ஆறுமுகனே!, திருவேரகத்தில் உறை பெருமாளே - அழகிற்சிறந்த திவ்ய ஸ்தலமாகிய சுவாமிமலையில் அமர்ந்திருக்கும் பெரியோனே! குமர-என்றும் இளமைப் பருவத்திலிருப்பவனே!, குருபர-பரம்பொருளை யடைவதற்குரிய நெறியைப் போதிக்கும் குருவே!, முருக (ஞான) வாசனை வீசுபவனே!, குகனே - மெய்யன்பரது இதயத் தாமரையில் வசிப்பவனே!, குறச்சிறுமி கணவ - யௌவன பருவமுள்ள குறப்பெண்ணான வள்ளிநாயகியின் நாயகனே!, சரவண-(தாமரைமலர் நிறைந்த) சரவணப்பொய்கையில் அவதரித்தவனே!, நிருதர் கலகா - அசுரர்கள் மனத்தில் கலக்கத்தை விளைவித்தவனே!, பிறைச்சடையர் - பிறைச்சந்திரனைச் சடாமுடியில் தரித்தருளிய சிவபெருமான், குரு என நல் உரை உதவும் அயிலா-(தாம் சிஷ்யனாக நின்று) நீ குரு என்று சொன்னபொழுது (பிரணவத்துக்குச்) சிறப்பாகப் பொருள் உரைத்தருளிய (ஞானசக்தியாம்) வேலாயுதத்தைக் கையில் தாங்கியவனே!, என தினமும் உருகாதே-என்று (உனது திருநாமங்களைக் கூறிப் புகழ்ந்து) தினம் மனம் உருகாமல்; குயில் மொழி நல் மடவியர்கள்-குயில் கூவுவதுபோல் இனிமையாகப் பேசும் பெண்கள், விழியால் உருக்குபவர்-கண்களின் பார்வையினால் (காமத்தை மூட்டி) மனத்தை உருகச்செய்பவர்கள், தெருவில் அனவரதம் அனம் எனவே நடப்பர்-(தெருவில் நடப்பவர்கள் மனத்தில் காமத்தீயை மூட்டுவதற்காக) எப்போதும் தெருவில் அன்னபக்ஷியைப்போல் அழகாக நடப்பவர்கள், நகை கொளுமவர்கள் உடைமை மனம் உடனே பறிப்பவர்கள்-(தங்கள் அழகைக்கண்டு ஆனந்தமடைந்து, அதன் அறிகுறியாக) நகைப்பவர்களுடைய கைப்பொருளையும் மனத்தையும் தக்ஷணத்திலேயே கொள்ளை கொள்ளுகிறவர்கள், அனைவோரும் தமது வசம் உற - எல்லோரும் தமக்கு வசப்படும் வண்ணம், வசிய முகமே மினுக்கியர்கள் - மனத்தைக் கவரத்தக்க (அழகு வாய்ந்த) முகத்தை ஒளிபெறச்செய்து காட்டுபவர்கள், முலையில் உறு துகில் சரிய நடுவீதி நிற்பவர்கள்-தங்கள் தனபாரங்கள் (சிறிது காணப்படும் வண்ணம் அவைகளின்) மீதுள்ள புடவை சரிந்துவிழத் தெருவின் நடுவில் நிற்பவர்கள், தனம் இலியர் மனம் முறிய நழுவா உழப்பியர் - பொருள் இல்லாத ஏழைகளின்

மனம் ஒடிந்து போகும் வண்ணம் அவர்கள் கைகளுக்கெட்டாமல் நழுவி அவர்களை வருத்துபவர்கள், கண் வலையாலே சதிசெய்து - தங்கள் கண்களாகிய வலைகளை வீசி வஞ்சித்து (மனத்தைக் கவர்ந்து), அவரவர் மகிழ அணைமீது உருக்கியர்கள்-அந்தந்தக் காலங்களில் தாங்கள் வஞ்சித்த புருஷர்கள் மனமகிழுமாறு அவர்களைப் பஞ்சணைக்கு அழைத்துச் சென்று அதன்மீது தங்கள் (கலவிகளினால்) அவர்களை மனமுருகச் செய்பவர்கள், வசம் ஒழுகி-(அப்படிப்பட்ட குணங்களையுடைய பொதுமாதர்களுக்கு வசப்பட்டு நடந்து, அவர் அடிமையென-அவர்களுடைய அடிமையென்று கூறுமாறு, மாதர் இட்டதொழில்தனில் உழலும்-அம்மாதர்கள் இட்ட வேலைகளைச் செய்வதிலேயே மனத்தைச் செலுத்தித் திரியும், அசடனை உன் அடியே வழுத்த - புத்தியீனனாகிய என்னை உனது பாதாரவிந்தங்களையே துதிக்கச்செய்ய, அருள்தருவாயே - கிருபை புரியவேண்டும்.

(விருத்தியுரை.) 'அன்புக்கு அருள் காரணமா, அருளுக்கு அன்பு காரணமா' என்னும் கேள்விக்கு அருணகிரிநாத சுவாமிகள் அருளே அன்புக்குக் காரணம் என்று பல விடங்களிற் கூறியுள்ளவாறு இப் பாடலிலும் முருகப்பெருமானுடைய பாதாரவிந்தங்களைத் துதிக்கும் பாக்கியத்தைபெற அப்பெருமானுடைய அருள் வேண்டுமென்று குறித்துக்காட்டுவதற்காக, 'அசடனை உன் அடியே வழுத்த அருள்தருவாயே' என்று கூறியருளினர். 'அராப்புனைவேணியன் சேய் அருள் வேண்டும், அவிழ்ந்த அன்பாற் குராப்புனை தண்டையந்தாள் தொழல்வேண்டும்' என்று கந்தரலங்காரத்திலும் அன்புக்கே அருள் காரணம் என்னும் பெரிய உண்மையை விளக்கிக் காட்டியிருக்கிறார்.

'பிறைச்சடையர் குருவென நலுரையுதவு மயிலா' என்ற விடத்தில், முருகப்பெருமான் ஞானபோதகனாய் இருப்பதைக் கூறுகிறபடியால், 'உதவும் மயிலா' என்று பிரிப்பதைவிட 'உதவும் அயிலா' என்று பிரித்து உதவும் ஞான சக்திதரனே என்று பொருள் கூறுவதே சிறந்ததாகும். சைவசமயத்தைத் தழுவி நிற்பவர் பெறும் சிவஞானமும் பேரின்பமும் சிவஞான சொரூபியாகிய முருகப்பெருமானே யாதலாலும், ஒரு ஜீவாத்மாவானது உலக மாயையை அகற்றிவிட்டுத் தம்மை அடைவதற்கு அவசியமான ஆறு உதவிகளையும் செய்யத் தாம் தயாராக இருப்பதை யுணர்த்துவதற்காகவே முருகப்பெருமான் ஆறுமுகங்களுடன் விளங்குகிறா ராதலாலும், சுவாமிகள் அப்பெருமானை 'சிவசமய அறுமுகவ' என்று விளித்தார்போலும். முருகப்பெருமான் மிகுந்த அழகுவாய்ந்தவர் என்பதைக் குறிக்க 'குழகன்' என்னும் திருநாமமும், அவர் என்றும் இளமைப்பருவம் மாறாதவர் என்பதைக் குறிக்க 'குமரன்' என்னும் திருநாமமும் இருப்பதனாலும், முருகு என்ற பதத்துக்கு அழகு, இளமை அல்லது வாசனை என்று பொருள் கூறலாமாகையினாலும், ஞானசொரூபியாகிய முருகப்பெருமான் எங்கும் ஞான வாசனை கமழச்செய்கிறா ராகையினாலும், 'முருகன்' என்னும் திருநாமத்துக்கு ஞான வாசனை வீசும் ஞானசொரூபி என்று பொருள்கூறத் துணிந்தேன். (க)

தனன தனதன தனன தனதன
தனன தனதன—தனதான.

குமர குருபர முருக சரவண
குகசண் முககரி — பிறகான
குழக சிவசுத சிவய நமவென
குரவ னருள்குரு — மணியேயென்
றமுத இமையவர் திமிர்த மிடுகட
லதென அநுதின — முனையோதும்
அமலை அடியவர் கொடிய வினைகொடு
மபய மிடுகுர — லறியாயோ ?
திமிர எழுகட லுலகை முறிபட
திசைகள் பொடிபட — வருசூரர்
சிகர முடியுடல் புவியில் விழவுயிர்
திறைகொ டமர்பொரு — மயில்வீரா !
நமனை யுயிர்கொளு மழலி னிணைகழல்
நதிகொள் சடையினர் — குருநாதா !
நளின குருமலை மருவி யமர்தரு
நவிலு மறைபுகழ் — பெருமாளே ! (உ)

(11-வா.) திமிர எழுகடல் உலகம்-இருள்நிறைந்ததும் ஏழு கடல்களினால் சூழப்பட்டதுமான பூவுலகம், முறிபட - ஒடிந்து போகுமாறும், திசைகள் பொடிபட - எட்டுத் திக்குகளும் பொடியாகுமாறும், வருசூரர் - (எண்ணிறந்த சேனைகளுடன் ஆரவாரித்துப்) போருக்குவந்த சூரர்களுடைய, சிகரமுடி உடல் புவியில்விழ - கிரீடங்களைத் தரித்த தலைகளும் தேகங்களும் (தனித்தனியாக) பூமியில் விழும் வண்ணம், உயிர் திறைகொடு-அவர்களது உயிர்களை அரசனுக்குரிய இறையாக வாங்கிக்கொண்டு, அமர்பொரும் அயில்வீர - போர்செய்தவனும் வேலாயுதத்தைக் கரத்தில் எந்தியவனுமான வீரனே ! நமனை உயிர்கொளும் அழலின் இணைகழல் - (எல்லோருடைய உயிர்களையும் கொள்ளை கொள்ளும்) இயமனுடைய உயிரைக் கவர்ந்தவைகளும் அக்கினியையொத்தவைகளுமான இரு பாதாரவிந்தங்களையும், நதிகொள் சடையினர் - கங்காநதியைத் தாங்கிக்கொண்ட சடாமுடியையும் உடைய சிவபெருமானுக்கு, குருநாதா - ஞானகுருவாக வந்த நாதனே !, நளின குருமலை மருவி அமர்தரு - நீர்வளப்பம் பொருந்திய சுவாமிமலையில் வந்து (வரதருகை) வீற்றிருப்பவனும், நவிலும்

மறைபுகழ் - முத்தி நெறியைப் போதிக்கும் வேதத்தினால் (கருணைக்கடல் என்று) புகழப்படுபவனுமான பெருமாளே - பெருங்குணமுடையோனே !, குமர - என்றும் இளமைப்பருவத்தி விருப்பவனே !, குருபர - பரம்பொருளை யடைவதற்குரிய நெறியைப் போதிக்கும் குருவே !, முருக - (ஞான) வாசனை வீசுபவனே!, சரவண-தாமரைமலர் நிறைந்த சரவணப்பொய்கையில் அவதரித் தவனே !, குக-மெய்யன்பரது இதயத்தாமரையில் வசிப்பவனே !, ஷண்முக - ஆறுமுகனே !, கரிபிறகான குழக - விநாயகக் கடவுளுக்குத் தம்பியாக அவ தரித்த சௌந்தரியமிக்க மூர்த்தியே !, சிவசுத - சிவபெருமான் (தம்மைச் சரண்புகுந்த தேவர்களுக்கு அரிய வரமாக அளித்தருளிய) புதல்வனே ! சிவய நம என குரவன் அருள் குருமணியே - சிவயநம என்னும் பஞ்சாக்ஷரத்தின் நாயகனும் என்னுடைய தந்தையுமான சிவபெருமான் (உலகத்தோருக்கு ஞானத்தைப் போதிப்பதற்காக) அளித்தருளிய ஒப்புயர்வற்ற ஞானகுருவே ! என்று-என்று கூறி, அமுத இமையவர் திமிர்தமிடு கடலதென-அமுதத்தைப் பெற விரும்பிய தேவர்கள் பெருத்தவொலி யுண்டாகுமாறு கடைந்த கடலே போல, அநுதினம் உனையோதும் - (பெருத்த கோஷமுண்டாகுமாறு) தினந் தோறும் உன்னைத் துதித்துப் புகழும், அமலை அடியவர் - எண்ணிறந்த அடி யார்கள், கொடியவினை கொடும் - முற்பிறப்புக்களிற் செய்த வினைகள் கொடு மையாக வருத்துவதைப் பொறுக்கமுடியாமல், அபயமிடு குரல் அறியாயோ - அபயம் கொடுத்து இரக்ஷிக்கும்படி உன்னைப் பிரார்த்தித்து முறையிடும் அவர்களது தீனக்குரல் யாருடையதென்று உனக்குத் தெரியாதோ ?

(வி-ரை.) சர்வ சக்தி வாய்ந்தவராகவும், முந்தை வினைகளின் பயனை யொழிக்கும் வல்லமையுடையவராகவுமுள்ள முருகப்பெருமான் தம்மைச் சரண் புகுந்து மெய்யன்புடன் தம்மை வழுத்துவோர்கள் இச் சன்மத்தில் அனுபவிக் கும் வினைப்பயனையும் அகற்றி இரக்ஷிப்பாரென்னும் உண்மையை இப்பாடலில் 'அமலை அடியவர் கொடிய வினைகொடுமபய மிடுகுர லறியாயோ' என்னும் கேள்வியிலிருந்து குறிப்பாக உணர்ந்துகொள்ளக்கூடும். (உ)

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன—தனதான.

கோமள வெற்பினை யொத்தத னத்தியர்
காமனை யொப்பவர் சித்தமு ருக்கிகள்
கோவையி தழ்க்கனி நித்தமும் விற்பவர் பயில்காலை
கோகில நற்புற வத்தொடு குக்குட
ஆரணி யப்புள்வ கைக்குரல் கற்றிகல்
கோலவி ழிக்கடை யிட்டும ருட்டிகள் விரகாலே

தூமம லர்ப்பளி மெத்தைப டுப்பவர்
யாரையு மெத்திம னைக்குள ழைப்பவர்
சோலைவ னக்கிளி யொத்தமொ ழிச்சியர் நெறிகூடா

தூசுநெ கிழ்த்துரை சுற்றிபு டுப்பவர்
காசுப றிக்கம றித்துமு யக்கிகள்
தோதக வித்தைப டித்தந டிப்பவ ருறவாமோ ?

மாமர மொத்துவ ரிக்குள்நெ ருக்கிய
சூரனை வெட்டிநி ணக்குட லைக்கொடி
வாரண மெச்சஅ ளித்தஅ யிற்குக கதிர்காம

மாமலை யிற்பழ நிப்பதி யிற்றனி
மாகிரி யிற்றணி கைக்கிரி யிற்பர
மாகிரி யிற்றிரை சுற்றிவ ளைத்திடும் அலைவாயில்

ஏமவெ யிற்பல வெற்பினி னற்பதி
ஞனுல கத்தினி லுற்றுறு பத்தர்கள்
ஏதுநி னைத்தது மெத்தஅ ளித்தரு ளிளையோனே !

ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி மெச்சிய சித்தஇ
ராஜத லக்ஷண லக்ஷுமி பெற்றருள் பெருமாளே ! (௫)

(ப - ரை.) மாமரம் ஒத்து உவரிக்குள் நெருக்கிய (நெருங்கிய) சூரனை வெட்டி-மாமரத்தின் வடிவத்தை யெடுத்துக்கொண்டு சமுத்திரத்துக்குள்போய் ஒடுங்கிய சூரபதுமனை வெட்டி, நிணக்குடலை கொடி வாரணம் மெச்ச அளித்தருள் - அவனது மாமிசத்தையும் குடலையும் காகமும் வாரணமும் தன்னைப் புகழும்படி அவைகளுக்குத் தந்தருளிய, அயில்குக - வேலாயுதத்தைக் கையிலேந்திய குகப்பெருமானே, கதிர்காம மாமலையில் பழநிப்பதியில் தனிமாகிரியில் தணிகைக்கிரியில் பரமாகிரியில் - கதிர்காமம் என்னும் சிறந்த மலையின்மீதும், பழநி என்னும் தலத்திலும், ஒப்பற்ற கந்த மலையின்மீதும், திருத்தணிகை என்னும் சிறந்த மலையின்மீதும், திருப்பரங்குன்றம் என்னும் சிறந்த மலையின் மீதும், சமுத்திரத்தினாற் சூழப்பெற்ற சீரலைவாய் என்னும் திருச்செந்தூரிலும், ஏமவெயில் பல வெற்பினில் - பொன்னைப்போல் பிரகாசிக்கும் மற்றும் பல மலைகளிலும், நல் பதினுலு உலகத்தினில் உற்று - நல்ல பதினான்கு உலகங்களிலும் அமர்ந்தருளி, உறு பத்தர்கள்-தன்னைச் சரண்புகும் பக்தர்கள், ஏது நினைத்தது மெத்த அளித்தருள் இளையோனே - எப்பொருளை இச்சித்தாலும்

அப்பொருளை ஏராளமாக உதவியருளும் குமாரக்கடவுளே!, ஏரக வெற்பு எனும் அற்புதம் மிக்க சுவாமிமலைப்பதி - ஏரகம் (அழகியதலம்) என்னும் மிகவும் அற்புதமான சுவாமி மலையாகிய திவ்யஸ்தலத்தை, மெச்சிய சித்த - (மிகவும் சிறந்த தலமாகக்) கொண்டாடும் சித்த புருஷனே !, இராஜத லக்ஷண லக்ஷுமி பெற்றருள் பெருமாளே - இராஜதகுணத்தைச் சிறப்பான இலக்ஷணமாக வுடைய (சிவசக்தியான) பார்வதி தேவியார் பெற்றருளிய பெருங்குணமுடை யோனே !, கோமள - இளமைபொருந்தியவைகளும், வெற்பினை ஒத்த - மலை போல் உயர்ந்து பருத்தவைகளுமான, தனத்தியர் - தனபாரங்களையுடையவர் கள், காமனை ஒப்பவர் சித்தம் உருக்கிகள் - மன்மதனைப்போல் காமம் மிகுதி யாகவுடைய ஆடவர்களது மனமானது காமத்தினால் உருகும்படி செய்பவர்கள், கோவை இதழ் கனி - கோவைப் பழத்தைப்போல் சிவந்தவைகளும் பழத்தைப் போல் இனிமை பொருந்தியவைகளுமான உதடுகளை, (அவைகளினால் முத்தங் கொடுத்து அவைகளின்மீது முத்தமிடப் பெறுவதற்கு) விற்பவர்-பணத்துக்கு விற்பவர்கள், மயில் காடை கோகிலம் நல்புறவம் (ஒடு - இசை) குக்குடம் ஆரணியப்புள்வகை-மயில், காடை, குயில், நல்ல புறா, கோழி, பல வகையான காட்டுப்பறவைகள் (இவைகளின்), குரல் கற்று - குரலை யொத்த குரலுடன் பேசக் கற்றுக்கொண்டு, இகல் கோல விழி கடை இட்டு மருட்டிகள் - (மனத் தைக் கவரும்) வலிமைபொருந்தியதும் அழகுமிக்கதுமான கண்ணின் கடையி னால் நோக்கி (கடைக்கண்ணாற் பார்த்து) ஆடவர் மனம் மயக்கமுறும்படி செய் பவர்கள், விரகாலே - காமத்தீயினால் வருத்தப்பெற்று, தூம மலர்பளி - (நறு மணமுள்ள) புகையினாலும் மலர்களினாலும் வாசனை யூட்டப்பெற்ற பள்ளி யறையில், மெத்தை படிப்பவர் - பஞ்சணையின்மீது படிப்பவர்கள், யாரையும் எத்தி - எல்லோரையும் வஞ்சித்து, மனைக்குள் அழைப்பவர் - தங்கள் வீட்டுக் குள் வரும்படி அழைப்பவர்கள், சோலை வனக்கிளி ஒத்த மொழிச்சியர் - பூஞ் சோலைகளிலும் நந்தவனங்களிலும்வசிக்கும் கிளிகளைப்போல் இனிய குரலுடன் பேசுபவர்கள், நெறிகூடா தூசு நெகிழ்த்து அரைசுற்றி உடுப்பவர்-நல்லொழுக் கத்துக்குப் பொருத்தமில்லாதபடி புடவையைத் தளரவிட்டு அரையைச் சுற்றி உடுப்பவர்கள், காசுபறிக்க மறித்து முயக்கிகள் - கைப்பொருளைப் பறிக்கும் நோக்கத்துடன் தெருவிற்செல்லும் ஆடவர்களை வழிமறித்து அவர்களுடன் கலவி செய்பவர்கள், தோதக வித்தை படித்து நடிப்பவர் - வஞ்சிக்கும் வித்தை யைக்கற்றுக்கொண்டு பாசாங்கு செய்பவர்கள்,' இப்படிப்பட்ட விலைமாதர்களின்) உறவாமோ - சம்பந்தம் வைத்துக்கொள்ளத் தக்கதோ? (தக்கதல்ல என்றபடி).

(வி ரை.) ஸத்வகுணத்தைத் தமது இலக்ஷணமாகக்கொண்ட சிவபெரு மான், உலகத்திலுள்ளவர்களது துயரத்தையும் அதற்குக் காரணமான அஞ்ஞா னத்தையும் நீக்குவதற்காக அவர்களுக்கு ஞானத்தைப் புகட்ட நிச்சயித்து, தாம் சுத்த ஸாத்விக மூர்த்தியாதலாலும், ஞானத்தைப் புகட்டுவதற்கு ஸத்வமும்

இராஜதமும் பொருந்திய மூர்த்தி அவசியமாதலாலும், தம் சக்தியான-இராஜத குணத்தை இலக்ஷணமாகக்கொண்ட - பார்வதிதேவியாருடன் கலந்து, பரம ஞானத்துக்குக் காரணமான ஸத்வகுணமும் போதகத்துக்கு அவசியமான இராஜதகுணமும் பொருந்திய மூர்த்தியான குமாரக்கடவுளைத் தந்தருளினார். சிவபெருமானது ஐந்து திருமுகங்களும் பார்வதிதேவியாரது ஒரு திருமுகமும் சேர்ந்து ஷண்முகப்பெருமானது ஆறு திருமுகங்க ளாயினவென்று ஓர் ஐதிகமும் உண்டு. முருகப்பெருமான் சிவபெருமானுக்குப் பிரணவத்தின் பொருளை எடுத்துரைத்தது சுவாமிமலை என்னும் திவ்ய ஸ்தலத்தி லென்பது ஐதிகமாதலால், முருகப்பெருமான் ஞானத்தைப் போதிக்க வந்த மூர்த்தியென்பதை விளக்குவதற்காக இப்பாடலில், " இராஜத லக்ஷண லக்ஷ்மி பெற்றருள் பெருமாளே " என்று கூறப்பட்டிருக்கிறது. (ங)

தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன
தானன தத்தன தத்தன தத்தன—தந்ததான.

வாார்குழ லைச்சொரு கிக்கரு விற்குழை
காதொடி ணைத்தசை யக்கதிர் பற்கொடு
வாயிதழ் பொற்கம லர்க்குமி ழொத்துள துண்டக்ரீவ
வார்கமு கிற்புய நற்கழை பொற்குவ
டாடிள நிச்சுரர் பொற்குட மொத்திணை
மார்பழ கிற்பொறி முத்தொளிர் சித்திர ரம்பைமாதர்
காருறும் வித்திடை யிற்கத லித்துடை
சேரல்குல் நற்பிர சத்தட முட்கொடு
கால்மறை யத்துவ ளச்செறி பொற்கலை யொண்குலாவக்
கார்குயி லைக்குர லைக்கொடு நற்றெரு
வீதில்நெ ளித்துந கைத்துந டிப்பவர்
காமனு கப்பம ளிச்சுழல் குத்திரர் சந்தமாமோ ?
சூரர்ப தைக்கர வுட்கிநெ ளித்துய
ராழியி ரைப்பநி ணக்குட லைக்கழு
சூழந ரிக்கெரு டக்கொடி பற்பல சங்கமாகச்
சூழ்கிரி யைக்கைத டித்தும லைத்திகை
யானையு ழற்றிந டுக்கிம தப்பொறி
சோரந கைத்தயி லைக்கொடு விட்டருள் செங்கைவேலா!

ஏரணி நற்குழ லைக்கக னச்சசி
 மோகினி யைப்புணர் சித்தொரு அற்புத
 வேடமு தச்சொரு பக்குறத் திமணங்கொள்வோனே!
ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
 வாமிம லைப்பதி நிற்குமி லக்ஷண
 ராஜத லக்ஷண லக்ஷ்மி பெற்றருள் தம்பிரானே! (௪)

(ப - ரை.) சூரர் பதைக்க - சூரபதுமன் முதலான அசுர வீரர்கள் மனம் பதைக்கவும், அரவு உட்கி நெளித்து ஆழி உயர இரைப்ப - (பூமியைத் தாங்கும்) ஆதிசேஷன் என்னும் பாம்பு அச்சமுற்றுத் தனது உடலை நெளித்துச் சமுத்திரமானது உயரமான அலைகளை வீசிக் கோஷிக்கும்படி செய்யவும், பிண குடலை கழு சூழ - மடிந்து விழும் அசுரர்களது மாமிசம் நிறைந்த குடலை (உண்ணுவதற்காக) கழுகு சூழவும், நரி கெருடன் கொடி பற்பல சங்கமாக சூழ் - நரி, பருந்து காக்கை இவைகள் பற்பல கூட்டங்களாகக் கூடிச் சூழ்ந்துகொண்டிருந்த கிரியை - கிரௌஞ்ச மலையை, மலை திசை யானை உழற்றி நடுக்கி மதப்பொறி சோர - எட்டுத் திக்குகளிலும் நின்று பூமியைத் தாங்கும் மலையையொத்த யானைகள் துன்புற்று நடுங்குமாறும் மதநீர் பொழியும் அவைகளின் வன்மையுடைய பொறிகளும் சோர்வடையுமாறும், நகைத்து அயிலை கொடு கைதடித்து விட்டு அருள்-முகத்தில் புன்சிரிப்புடனே (விளையாட்டாக) கைவேலைக்கொண்டு தறித்துப் பிளந்தருளிய, செங்கைவேலா - தாமரையையொத்த சிவந்த கையினில் வேலாயுதத்தைத் தாங்குபவனே!, ஏர் அணி நல்குழலை ககனச்சசி மோகினியை புணர் சித்த - மிகவும் அழகு பொருந்திய நல்ல கூந்தலையுடையவளும், ஆகாயத்தில் உலாவும் இந்திராணியின் மகளாக உதித்தவளும் மனத்தைக் கவரும் பேரழகு வாய்ந்தவளுமான தெய்வயானையம்மையை மணந்துகொண்ட சித்தனே!, ஒரு அற்புத வேட அமுத சொருபத்த குறத்தி மணங்கொள்வோனே - ஒப்பற்ற அழகுடையவளாய் வேடர்குலத்தில் அமுதத்தை யொத்த இனிய உருவத்தை யுடையவளாய் உதித்த குறவர் சிறுமியான வள்ளிநாயகியை மணந்து கொண்டவனே! ஏரகவெற்பு எனும் அற்புதமிக்க சுவாமி மலைப்பதி நிற்கும் இலக்ஷண - திருவேரகமலை என்று பெயர் வழங்கும் சுவாமிமலை யென்னும் மிகவும் அற்புதமான திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் சகல லக்ஷணங்களும் வாய்ந்துள்ள குமாரனே! ராஜதலக்ஷண லக்ஷ்மி பெற்றருள் தம்பிரானே - ராஜத குணத்தைத் தனக்கு முக்கியகுணமாகக் கொண்ட லக்ஷ்மியான சிவசக்தி உலகத்துக்குத் தந்தருளிய கடவுளே!, வார்குழலைச் சொருகி - நீண்ட கூந்தலைச் சொருகிக்கொண்டு, கருவில் குழைகாதொடு இணைத்து அசைய - மேன்மை பொருந்தியவைகளாய் மிக்க ஒளி வீசும் குழைகளைக் காதுகளில் அணிந்துகொண்டு அவைகள் அசையவும், கதிர் பல்கொடுவாய் இதழ் பொற்க - ஒளிவீசும் பற்களினால்

வாயும் உதடுகளும் அழகுபெற்றுத் தோன்றவும், மலர்க்குழிழ் ஒத்துள துண்டம்-மலரும் பருவத்திலுள்ள அரும்பைப் போன்றதாயுள்ள மூக்கினாலும், க்ரீவ வார்கமுகின் நீண்ட-பாக்குமரத்தை ஒத்ததாயுள்ள கழுத்தினாலும்,புய நல்கழை-நல்ல மூங்கிலையொத்த தோள்களினாலும், பொன் குவடு ஆடு இளநி சுர பொற்குடம் ஒத்த இணை மார்பு அழகின்-பொன்னொளி வீசும் குன்றையும், ஆடும் இளநீர்க்காயையும், மது நிறைந்த பொன்குடத்தையும் ஒத்த இரண்டு தனபாரங்களின் அழகினாலும், பொறி-விளங்குகிறவர்களும், முத்து ஒளிர் சித்தர ரம்பை மாதர் - முத்துப்போல் பிரகாசிப்பவர்களும் பேரழகு வாய்ந்தவர்களும் அரம்பை மாதர்களை ஒத்தவர்களுமான மாதர்கள், கார் உறும் வித்து இடையில் - மழை காலத்தில் தோன்றும் மின்னலையொத்த இடையில், கதலித்துடை - வாழை மரத்தையொத்த துடைகளையும், சேர் அல்குல் நல் பிரசத்தடம் - அவைகளைச் சேர்ந்த அல்குலின் இனியதேன் நிறைந்த விசாலமான இடத்தையும், உட்கொடு (அவைகள் மறையுமாறு) மூடி, கால்மறைய - கால்கள் மறையும் வண்ணம், துவள செறி பொன் கலை ஒண் குலாவ - தளரவிட்டு அடர்த்தியாய்க் கட்டியுள்ள பொன்னுடையின் ஒளியானது அழகாகத்தோன்ற, கார்குயிலைக்கொடு - கருமை நிறமுள்ள குயிலின் இனிய குரலுடன், நல் தெருமீதில் நெளித்து நகைத்து நடிப்பவர் - நல்ல தெருவின்மீது தங்கள்தேகத்தை நெளித்துநகைத்து அழகாக நடையிடுபவர்கள், காமன் உகப்பு அமளிச்சுழல் குத்திரர் - மன்மத லீலைகளைச் செய்து களிக்கும் பஞ்சணையாகிய சுழலில் சேர்க்கும் வஞ்சகர்கள் (மீது) சந்தம் ஆமோ - ஆசை கொள்ளுதல் தகுதியோ ?

(வி - ரை.) ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களின் சொரூபமான திரிபுரர்களைச் சிவபெருமான் நகைத்து எரித்தது போலவே,அவர் குமாரராகிய ஷண்முகக் கடவுளும் மாயையின் சொரூபமாகிய கிரௌஞ்சத்தை ஞான சக்தியாம் வேலாயுதத்தினால் பிளந்து அழித்தபொழுது அவர் முகத்தில் புன்னகை தோன்றிற்று. ஏனெனில், ஈசன் ஒருவனே ஆண், ஜீவர்களெல்லோரும் அவனைப் பதியாக அடையவேண்டிய பெண்களே யென்னும் உண்மையையும், செய்கையும் செய்பவனும் செய்யப்படுவதும் யாவும் ஈசன் ஒருவனே என்னும் உண்மையையும் ஜீவர்கள் அறிந்தால், கன்மம் மாயை இரண்டுக்கும் காரணமாய் மும்மலங்களுள் முதன்மைபெற்று நிற்கும் தான் என்னும் அகங்காரம் அழியுமாதலால், தங்களைச் சுற்றி நடக்கும் சம்பவங்களை ஊன்றிப் பார்ப்பதனாலேயே எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய மேற்குறிய உண்மைகளை அறிந்து கொள்ளாம லிருக்கின்றார்களே யென்று ஜீவர்களது பேதைமையை நினைத்து முக்கணெந்தையும் அவரது செல்வப் புதல்வரும் நகைத்தனர்போலும் ! உலகத்தைக் காப்பாற்றும் மழைக்கு அதிபதியான இந்திரனது குமாரத்தியும் கிரியா சக்தியுமான தெய்வயானையம்மையைப் புணர்ந்த சித்தனே என எம்பெருமானை விளித்ததனால், கிரியா மார்க்கத்தில் நின்றவர்களுக்கு ஞானம் சித்திக்குமென்

றும், இச்சா சக்தியான குறத்தியை மணங்கொள்வோனே என விளித்ததனால், அப்பெருமானை அடையவேண்டுமென்று மிகுந்த இச்சையிருக்குமாயின், குமாரசுவாமி தாமே வலியச்சென்று தடுத்தாட்கொள்வா ரென்றும் அறிந்து கொள்ளக் கூடியதாயிருக்கிறது. சுத்த ஸத்வமூர்த்தியான சிவபெருமான் ஜீவர்களுக்கு ஞானத்தைப் புகட்டுவதான ரஜோகுணத்தை மேற்கொண்டபோது சுப்ரமண்யமூர்த்தியாகத் தோன்றினார் என்பதை சுவாமிகள் "ராஜதலக்ஷண லக்ஷ்மி பெற்றருள் தம்பிரானே" என்னும் மொழிகளினால் குறிப்பாகக் காட்டியிருக்கிறார். ஸத்தான சிவபெருமானது ஐந்து முகங்களும் சித்தான சிவ சக்தியின் ஒருமுகமும் சேர்ந்தே சச்சிதாநந்த மூர்த்தியான ஷண்முகக்கடவுளது ஆறு முகங்களாயின வென்பதும், சிவபெருமான் தேவர்களின் வேண்டு கோளின்படி குமாரசுவாமியைத் தம்மிடத்தேயே உதிக்கச்செய்தாரேயெனினும், அப்படிச்செய்யுமுன் உமாதேவியாரை அன்புடன் நோக்கினார் என்பதும் கந்தபுராணத்தில் தெளிவாய்க் கூறப்பட்டிருக்கின்றன. (ச)

தனந தனத்த தனந தனத்த
தனந தனத்த—தனதான.

**ம**ருவே செறித்த குழலார் மயக்கி
மதன கமத்தின் — விரகாலே
மயலே யெழுப்பி யிதழே யருத்த
மலைபோல் முலைக்கு — ளுறவாகிப்
பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாஉது பட்ச — மறவாதே
பிழையே பொறுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற — அருள்வாயே!
குருவா யரற்கு முபதேச மவைத்த
குகனே குறத்தி — மணவாளா!
குளிர்கா மிகுத்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு — வடபாலார்
திருவே ரகத்தி லுறைவா யுமைக்கொர்
சிறுவா கரிக்கு — மிளையோனே!
திருமால் தனக்கு மருகா அரக்கர்
சிரமே துணித்த — பெருமாளே! (ரு)

(ப-ரை.) குருவாய் அரற்கும் உபதேசம்வைத்த-சிவபெருமானுக்கும் குருவாகநின்று பிரணவப்பொருளை உபதேசஞ்செய்த, குகனே-குகனே, குறத்திமணவாளா - வேடுவர் குலத்தில் வந்து வளர்ந்த வள்ளிநாயகியை (வலுவிற்சென்று) மணந்துகொண்டவனே! குளிர் கா மிகுத்த-குளிர்ச்சியைத் தரும் சோலைகள் மிகுதியாக இருக்கப்பெற்றதும், வளர் பூகம் மெத்தும்-ஓங்கி வளரும் கமுகு மிகுதியாக இருக்கப்பெற்றதும், குடகாவிரிக்கு வடபால் - மேற்குத் திசையிலிருந்து ஓடிவரும் காவிரி நதிக்கு வடபுறத்தில் உள்ளதுமான, ஆர் திருவேரகத்தில் உறைவா - அருமையான திருவேரகம் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருப்பவனே! உமைக்கு ஓர் சிறுவா - உமைக்கு ஒரு பிள்ளையான சிறுவனே! கரிக்கும் இளையோனே - யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளுக்குத் தம்பியே! திருமால் தனக்கு மருகா - மகாவிஷ்ணுவுக்கு மருகனே! அரக்கர் சிரமே துணித்த பெருமாளே - அசுரர்களுடைய தலைகளை வெட்டிய கடவுளே! மருவே செறித்த குழலார் - (வாசனைபொருந்திய) மருவைச் சூட்டியுள்ள கூந்தலையுடைய மாதர்கள், மயக்கி - (அடியேனது) புத்தியை மயக்கி, மதன் ஆகமத்தின் விரகாலே - மன்மதனுக்குரிய சாஸ்திரத்திற் கூறியுள்ள தந்திரத்தினாலே, மயலே எழுப்பி - (அடியேன் மனத்தில்) காம விகாரத்தை உண்டாக்கி, இதழே அருத்த - தங்கள் கனிவாயின் அமுதத்தைப் பானம் பண்ணச் செய்ததனால், மலைபோல் முலைக்குள் உறவாகி - மலைபோல் வளர்ந்து பருத்துள்ள அவர்கள் தனபாரங்களில் ஆசையுடையவனாகி, பெருகாதல் உற்ற - அவர்களிடத்து அளவற்ற காதல்கொண்ட, அடியேனை-நினது அடிமையாகிய என்னை, நித்தல்பிரியா உது பட்சம்-என்றும் (ஜீவாத்மாவை விட்டுப்) பிரியாமல் (அதைக் காத்திருக்கும் நின் கருணையான) அந்தப் பிரியத்தை, மறவாதே - (என்பால் காட்ட) மறந்திடாமல், பிழையே பொறுத்து - அடியேன் செய்துள்ள பிழைகளை மன்னித்து, உன் இருதாளில் உற்ற - நினது இரண்டு பாதத்தாமரைகளில் பொருந்தியிருக்கும், பெருவாழ்வு-உயர்ந்த வாழ்வான பேரின்பத்தை, பற்ற அருள்வாயே-அடியேன் ஆசையுடன் நாடுமாறு அடியேனுக்கு மெய்யுணர்ச்சியைத் தந்தருள்வாயே!

(வி-ரை.) உலகத்திலுள்ள அஞ்ஞான விருளை யகற்றுவதற்காக அவதரித்து, அந்த அஞ்ஞானத்துக்குக் காரணமான பிரமதேவரைச் சிறையிலடைத்து, சிருஷ்டித்தொழிலைத் தானே நடத்தி, பிரணவப்பொருளை நீ அறிவாயோ என்று கேட்ட சிவபெருமானுக்குக் குருவாக இருந்து பிரணவப்பொருள் ஈதென்று உரைத்தருளிய ஞானதேசிகனே! நீ ஜீவர்களது இதயத்தை விட்டுப் பிரியாது அதில் வசித்தருளும் குகனல்லவோ? ஐம்புலன்களாகிய வேடர்கள் கையிற்சிக்கி அவர்கள் செலுத்தியவழியே சென்று நின்னையடைய வழியறியாமல் தியங்கிய வள்ளிநாயகியைத் தடுத்தாட்கொண்டு மணந்துகொண்ட கருணைவள்ளலே! ஞானகுருவாக அவதரித்த நீ, குருவாக

நின்று ஞானோபதேசம் செய்த திவ்யத்தலமான அழகிய சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் முருகனே! உலகத்திலுள்ள ஜீவராசிகளையெல்லாம் ஈன்றருளிய தாயான உமாதேவியாரின் செல்வப் புதல்வனே! என்றும் இளையவனாகவே யிருப்பவனே! உமாதேவியாரின் அண்ணனும் உலகத்தைக் காப்பாற்றும் தொழிலையுடையவருமான மகா விஷ்ணுவின் மருகனே! சத்துவகுணங்களின் சொரூபிகளான தேவர்கள் தலையெடுக்கவொட்டாது அவர்களைத் துன்புறுத்திவந்த தமோ குணங்களின் சொரூபிகளான அசுரர்களைச் சங்காரஞ் செய்த கடவுளே! அடியேன் காமவலையிற்சிக்கித் தியங்குகிறேன்; ஜீவர்களை விட்டுப் பிரியாமல் எப்போதும் அவர்களது இதயத்தில் குகனாய் நின்று அவர்களுக்கு நன்மையே புரிந்துவரும் நீ அப்படிப்பட்ட கருணையை அடியேன்பால் காட்ட மறந்துபோகாமல், அடியேன்செய்த பிழைகளைப் பொறுத்துக்கொண்டு, நினது பாதாரவிந்தங்களிற் சேர்வதாகிய பேரின்பத்தை அடைய வேண்டுமென்ற இச்சையுடன் அவ்வின்பத்தை ஆவலுடன் நாடும்படியான மெய்யுணர்ச்சியை அடியேனுக்குத் தந்தருளவேண்டும்.

அப்படிப்பட்ட இச்சை உண்டாவதற்கும் அப்பெருமானது திருவருள் அவசியம் என்பது, பழநித் திருப்புகழில்,

"மறைமுறையி னிறுதிநிலை முத்திக் கிசைத்தபடி
உடலுயிர்கள் கரணவெளி பட்டுக் குணத்திரயம்
வழிபடவும் நினதடிமை யிச்சைப்படுத்துவது மொருநாளே?"

என்று சுவாமிகள் முறையிடுவதனால் விளங்குகிறது. (ரு)

தனதனன தானந் தனதனன தானந்
தனதனன தானந்—தனதான.

இராவினிருள் போலும் பராவுகுழ லாலும்
இராமசர மாகும் விழியாலும்
இராகமொழி யாலும் பொருதமுலை யாலும்
இராதஇடை யாலும் இளைஞோர்நெஞ்
சராவியிரு போதும் பராவிவிழ மேவுந்
தடாதவிலை கூறும் மடவார்பன்
படாமலடி யேனும் சுவாமியடி தேடும்
அநாதிமொழி ஞானந் தருவாயே!
குராவினிழல் மேவுங் குமாரனென நாளும்
குலாவியினி தோதன் பினர்வாழ்வே
குலமிடு சூரன் பனுமுடிக டோறுங்
குடாவியிட வேலங் கெறிவோனே!

துராலுமிகு தீமுன் பிராதவகை போலும்
தொடாமல்வினை யோடும் படிநூறும்
சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே ! (சு)

(ப - ரை.) குராவின் நிழல் மேவும் குமாரன் என-(நறுமணமிக்க மலர்களை யுடைய) குரவமரத்தினடியில் (பழநியில்) ஆசையுடன் அமரும் குமாரன் என்று, நாளும் - தினந்தோறும், குலாவி இனிது ஓது - அன்புடனும் சந்தோஷத் துடனும் நினது திருநாமங்களை மொழியும், அன்பினர் வாழ்வே - மெய்யன்பர் பெறும் பேரின்பமே! குலைமிடு சூரன் - போர்க்களத்தில் வீராவேசத்தால் கொக்கரித்தசூரபதுமனுடைய, பணமுடிகள் தோறும் குடாவியிட-கிரீடங்களைத் தரித்த தலைகள் ஒவ்வொன்றையும் துளைக்குமாறு, வேல் அங்கு எறிவோனே - அப்போர்க்களத்தில் வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே! துரால் மிகுதி முன்பு இராதவகைபோலும் - துரும்பானது பெரிய அக்கினியின் முன்னே அழியாமல் நிலை நிற்க முடியாதது போலவே, வினை தொடாமல் ஓடும்படி நூறும்-வினைப் பயன் பீடிக்காமல் விலகி ஓடும்படி அதைப் பொடியாக்கும், ஞானம் சுபானம் உறு தபோதனர்கள் - ஞானத்தை இனிமையாய் உட்கொண்ட சிறந்த தவசிகள் சேரும் - போய்ச்சேரும், சுவாமிமலை வாழும் பெருமாளே - சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் கடவுளே!, இராவின் இருள்போல் பரவு குழலாலும்-இரவில் பரவி உலகத்தை மூடும் இருளைப்போலப் பரவியுள்ள கரிய கூந்தலினுலும், இராமசரம் ஆகும் விழியாலும் - இராமபாணத்தையொத்த வலிமையும் கூர்மையுமுள்ள கண்களினுலும், இராக மொழியாலும் சங்கீதத்தைப்போல் இனிமை தருபவைகளும் மோகத்தை யுண்டுபண்ணக் கூடியவைகளுமான மொழிகளினுலும், பொருத முலையாலும் - தாங்கமுடியாமல் பருத்துள்ள தனபாரங்களினுலும், இராத இடையாலும்-இல்லையென்று சொல்லும்படி அவ்வளது மெல்லியதாயுள்ள இடையினுலும், இளைஞோர் நெஞ்சு அராவி - காளைப் பருவத்திலுள்ள ஆடவர்களது மனத்தைத் துன்புறச்செய்து, வந்து இருபோதும் பரவி விழவே-அவ்வாடவர்கள் வந்து அவர்களது மலர்களையொத்த பாதங்களில் வீழ்ந்து வணங்கிய காலத்து, அடாத விலை கூறும் மடவார் அன்பு - (தம்மை அனுபவிப்பதற்கு) தகாத அளவு மிகுந்த பொருள் கேட்கும் விலைமாதர்களது (பொய்யான) பிரியம், அடாமல்-அடியேனை வென்று அடிமையாக்கிக்கொள்ளாவண்ணம், அடியேனும் சுவாமி அடிதேடும் - (குணமொன்றுமில்லாத) அடியேனும் இறைவனுன நினது பாதாரவிந்தங்களை அடைய விரும்பித் தேடுமாறு, அநாதிமொழி ஞானம் தருவாயே - ஆதியில்லாத மொழியான பிரணவத்தில் அடங்கியுள்ள ஞானத்தை அடியேனுக்கு உபதேசித்தருள வேண்டும்.

(வி-ரை.) குமாரக்கடவுளுடைய திருநாமங்களை அன்புடனும் களிப்புடனும் மொழிந்து அப்பெருமானிடத்து மெய்யன்புபாராட்டுபவர்கள் அப்பெருமானது பாதாரவிந்தங்களாகிய பேரின்பவீட்டை யடைவது திண்ணம். சூரன் எம்பெருமானைப் போர்க்களத்தில் எதிர்த்தபொழுது, எம்பெருமான் அவனது சிரத்தை யறுக்கவறுக்க, அவன் வெவ்வேறு சிரங்கள் முளைக்கப்பெற்று எம்பெருமானுடன் போர்புரிந்தான். அவனுக்கு அவ்வாறு புதிதுபுதிதாக முளைத்த தலைகளையெல்லாம் குமாரக்கடவுள் துளைத்தெறிந்தார். சூரன் அகங்கார சொரூபி, ஈசனது அனுக்கிரகத்தைப் பெறுவேன் என்ற அகங்காரத்துடன் கொடியதவம் புரிந்தான். அவரிடமிருந்துசிறந்த வரங்களைப்பெற்றான். பிறகு 'என்னை வெல்பவர் எவருமில்லை, நான் என்னிஷ்டபடி நடப்பேன்' என்று கூறி அகங்காரத்துடன் நடந்துகொண்டான். அவனை அழிப்பதற்குச் சிவசக்தியாகும் குமாரக்கடவுள் வந்தார். அவன் பலவித சொரூபங்களை எடுத்துக்கொண்டான். அந்த அகங்காரத்தின் பலவித சொரூபங்களும் எம்பெருமானருளினால் அழிந்தன. பிறகு எம்பெருமானருளினால் அந்த அகங்காரமானது எம்பெருமானைச் சுமப்பேன் என்ற அகங்காரமாகவும் (மயிலாகவும்), எம்பெருமான் புகழை எடுத்துக்கூறுவேன் என்ற அகங்காரமாகவும் (கோழியாகவும்) மாறினபிறகு, அவ்விரண்டு அகங்காரங்களும் அழியாமல் நிலைபெற்று நிற்கின்றன. அகங்காரமானது, எம்பெருமானுக்குத் தொண்டு செய்வேன், எம்பெருமான் புகழை ஓதுவேன் என்னும் சொரூபங்களை எடுத்துக்கொண்டால் அழியாமல் நிலைத்து நின்று நன்மை பயக்கும்; வேறு எந்தச் சொரூபத்தை எடுத்துக்கொண்டாலும் அழிவதுமன்றி தீமையும் விளைவிக்கும். ஞானத்தைப் பெற்றவர்களது முந்தை வினைப் பயன் அவர்களை யணுகாமல் விலகியோடும். (ச)

தனதான தத்த தந்த தனதான தத்த தந்த
தனதான தத்த தந்த—தனதான.

கடிமாம லர்க்கு ளின்ப முளவேரி கக்கு நண்பு
தருமாக டப்ப மைந்த தொடைமாலை
கனமேரு வொத்தி டும்ப ளிருமாபு யத்த ணிந்த
கருணாக ரப்ர சண்ட கதிர்வேலா!
வடிவார்கு றத்தி தன்பொ னடிமீது நித்த முந்தண்
முடியான துற்று கந்து பணிவோனே!
வளவாய்மை சொற்ப்ர பந்த முளகீர னுக்கு கந்து
மலர்வாயி லக்க ணங்க ளியல்போதி
அடிமோனை சொற்கி ணங்க வுலகாமு வப்ப என்று
னருளால ளிக்கு கந்த பெரியோனே!
அடியேனு ரைத்த புன்சொ லதுமீதும் நித்த முந்த
னருளேத ழைத்து கந்து வரவேணும்!

*செடிநேரு டற்கு டம்பை தனின்மேவி யுற்றி டிந்த*
*படிதான லக்க ணிங்க ணுறலாமோ ?*

*திறமாத வர்க்க ணிந்து னிருபாத பத்ம முய்ந்த*
*திருவேர கத்த மர்ந்த பெருமாளே ! (எ)*

(ப - ரை) *கடிமா மலர்க்குள் இன்பமுள வேரி கக்கு - அப்போது மலர்ந்து வாசனை வீசும் சிறந்த மலர்க்குள்ளிருந்து இனிமைதரும் தேன்சொரியப் பெறுவதும், நண்புதரும் மா - நினக்கு அணிவிப்பதனால் நினது அருளைப் பெறும்படி செய்யத்தக்க மாட்சிமை பொருந்தியதுமான, கடப்பு அமைந்த தொடை மாலை - கடம்ப மலர்கள் தொடுக்கப்பெற்ற மாலையை, கனமேரு ஒத்திடும் ப(ன்)னிரு மாபுயத்து அணிந்த - வலிமைமிக்க மேருமலையையொத்த சிறந்த பன்னிரு தோள்களிலும் அணிந்துகொண்ட, கருணாகர - கருணையின் சொருபமான மூர்த்தியே ! ப்ரசண்ட கதிர் வேலா - மிகுந்த வெப்பமும் வேகமும் பொருந்தியதும் மிகுந்த ஒளிவீசுவதுமான வேலாயுதத்தைக் கையிலேந்தியவனே ! வடிவு ஆர் குறத்தி தன் பொன்னடிமீது - அருமையான அழகுவாய்ந்த குறப் பெண்ணான வள்ளிநாயகியின் அழகிய அடிகளின்மீது, நித்தமும் தண் முடியானது உற்று உகந்து பணிவோனே - தினந்தோறும் நினது குளிர்ந்த கிரீடமானது பொருந்துமாறு உளமகிழ்ச்சியுடன் அந்நாயகியை வணங்குபவனே ! வளவாய்மை சொல் ப்ரபந்தம் உள கீரனுக்கு - அழகும் வன்மையும் பொருந்திய சொற்களைத் தொடுத்துப் பாக்கள் பாடவல்ல* நக்கீர தேவருக்கு, *உகந்து இலக்கணங்கள் இயல்பு மலர்வாய் ஓதி - (அவர் பாடிய பாக்களைக் கேட்டு) மகிழ்ச்சியுற்று இலக்கணத்தின் இயல்பை நீயேதிருவாய்மலர்ந்து ஓதுவித்து, அடிமோனை சொற்கு இணங்க - அடி மோனை சொல் இவைகளுக்கு இசைவாக, உலகம் உவப்ப என்று உன் அருளால் அளிக்க உகந்த - (அப்புலவர்) உலகமானது களிப்படையுமாறு உனது அருளினால்* திருமுரு காற்றுப்படையைப் *பாடி உலகத்தோருக்கு உதவியதைக்கண்டு மகிழ்ச்சியுற்ற, பெரியோனே - பெருங்குணமுடையோனே? அடியேன் உரைத்த புன்சொல் அதுமீது - (இயற்கையாகவே சொல் வன்மை யில்லாதவனும் நின்னிடம் இலக்கணம் கல்லாதவனுமாகிய) அடியேன் அற்பமான சொற்களினால் தொடுத்த பாடல்மீதும், தண் அருளை தழைத்து - நினது குளிர்ந்த அருள் வந்து படியச்செய்து, நித்தமும் உகந்து வரவேணும் - தினந்தோறும் மனமகிழ்ந்து வந்தருளவேண்டும் ; செடி நேர் உடல் குடம்பை தனில் மேவி உற்று - புதரையொத்த தேகமாகிய பறவைக்கூட்டில் பொருந்தியிருந்து, இடிந்தபடி இங்கண் அலக்கண் உறலாமோ - அது அழிந்த காலத்தில் (அடியேன்) இவ்விடத்தில் துன்பமுறுவது நினது கருணைக்குத் தகுதியோ ? திறமாதவர் கனிந்து உன் இருபாத பத்மம் உய்ந்த - மேன்மைபொருந்திய தவசிகளின்மீது அன்புகூர்ந்து நினது இருபாதத் தாமரைகளில் அவர்களைச் சேர்த்து*

வாழ்வுபெறச் செய்த, திருவேரகத்து அமர்ந்த பெருமாளே - திருவேரகம் என்னும் சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் கடவுளே!

(வி - ரை) "மொய்தாரணி குழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால், வைதாரையுமங்கு வாழவைப்போன்" என்று கந்தரலங்காரத்திற் கூறியுள்ளபடி, குமாரசுவாமிக்குத் தமிழின்மீது மிகுந்த பிரியமுண்டாதலால், அப்பெருமான் நக்கீரதேவர் முன்பே மிகுந்த கவித்திறமை வாய்ந்த தமிழ்ப்புலவராயிருந்தும், அவருக்குத் தாமே தமிழ்ப்பாஷையின் இலக்கணத்தை நன்கு கற்பித்து, தமது புகழை அப்புலவர் முன்னிலும் அதிகத்திறமையோடு இனிய தமிழ்ப்பாடல்களினால் உலகத்தார் கேட்டு மகிழுமாறு எடுத்துரைக்கும்படி அருள் செய்தார். அப்பெருமானுக்குக் கடம்பமலர்மாலையின்மீதுள்ள பிரியமானது அவருக்குக் கடம்பன் என்று ஒரு திருநாமம் இருப்பதனாலேயே நன்குவிளங்கும். தேவாதிதேவரான முருகப்பெருமானுடைய பாதமலர்களில் பிரமதேவர் முதலிய தேவர்கள் பணிகிறார்களேயாயினும், அப்பெருமான் தமக்கு ஜீவர்களிடத்துள்ள அளவற்ற கருணையினால் அவர்களைத் தடுத்தாட்கொள்வதற்காக அவர்களைப் பணிவது, உருமாறுவது, திருடுவது முதலிய அவர் பெருமைக்குத்தகாத காரியங்களையும் செய்யத் தயாராகவிருக்கிறார் என்பது 'குறத்தி தன் பொன்னடிமீது நித்தமும் தண் முடியானதுற்றுகந்து பணிவோனே' என்று அப்பெருமானை விளித்ததனால் விளங்குகிறது. இவ்வுண்மை கந்தரநுபூதியில், 'வேதாமுதல் விண்ணவர் சூடு மலர்ப்பாதா குறமின் பதசேகரனே!' என்று விளக்கமாய்க் கூறப்பட்டிருக்கிறது.

'ப்ரசண்ட' என்ற பதத்துக்கு மிகுந்த வேகம், வெப்பம் என்னும் இரண்டு பொருள்களையும் கூறத் துணிந்தேன். ஏனெனில், வேறொரு பாடலில் "அசுரனதகலமிடந்து போக வகிர்ந்த வேகம், விரிகடல் தூகளெழ வென்றவேலவா!" என்று எம்பெருமானை சுவாமிகள் விளித்திருக்கிறார். கருணாகரா என்பது கருணகர என்று மாறியது செய்யுள் விகாரம். (எ)

தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன
தந்தத் தனதன தனதன தனதன—தனதான

எந்தத் திகையினு மலையினு முவரியி
னெந்தப் படியினு முகடினு முளபல
எந்தச் சடலமு முயிரியை பிறவியி னுழலாதே

இந்தச் சடமுட னுயிர்நிலை பெறநளி
னம்பொற் கழலிணை களில்மரு மலர்கொடு
என்சித் தமுமன முருகிநல் சுருதியின் முறையோடே

சந்தித் தரஹர சிவசிவ சரணென
கும்பிட் டிணையடி யவையென தலைமிசை
தங்கப் புளகித மெழஇரு விழிபுனல் குதிபாயச்

சம்பைக் கொடியிடை விபுதைதயி னழகுமு
னந்தத் திருநட மிடுசர ணழகுற
சந்தச் சபைதனி லெனதுள முருகவும் வருவாயே !

தொந்தத் திகுகுட தகுகுட டிமிடிமி
தந்தத் தனதன டுடுடுடு டமடம
துங்கத் திசைமலை யுவரியு மறுகச லரிபேரி

துன்றச் சிலைமணி கலகல கலினென
சிந்தச் சுரர்மல ரயன்மறை புகழ்தர
துன்புற் றவுணர்கள் நமனுல குறவிடு மயில்வேலா !

கந்தச் சடைமுடி கனல்வடி வடலணி
யெந்தைக் குயிரெனு மலைமகள் மரகத
கந்தப் பரிமள தனகிரி யுமையரு ளிளையோனே !

கஞ்சப் பதமிவர் திருமகள் குலமகள்
அம்பொற் கொடியிடை புணரரி மருகநல்
கந்தப் பொழில்திகழ் குருமலை மருவிய பெருமாளே! (அ)

(ப-ரை) (போர்க்களத்தில்) தொந்தத் திகுகுட தகுகுட டிமிடிமி தந்தத் தனதன டுடுடுடு டமடம என்று, துங்க திசை மலை - எட்டுத் திக்குகளிலுமுள்ள சிறந்த குலபர்வதங்களும், உவரியும் - சமுத்திரமும், மறுக - சுழன்று புரளும்படி, சலரி பேரி துன்ற - அநேக கைத்தாளங்களும் பேரிகைகளும் நெருங்கி முழங்கவும், சிலை மணி கலகல கலின் என—(பூத சேனைகளிலுள்ள வீரர்களது) விற்களில் கட்டியமணிகள் கலகலகலின் எனச் சத்திக்கவும், சுரர்மலர் சிந்த - தேவர்கள் புஷ்பமாரி பொழியவும், அயன் மறை புகழ்தர - பிரமதேவரும் வேதங்களும் நினது கீர்த்தியைப் பாடித் துதிக்கவும், அவுணர்கள் துன்புற்று நமன் உலகு உறவிடும் - அசுரர்கள் பூதவீரர்களால் வெட்டுண்டு அங்கங்கள் துடிக்க இயமலோகத்துக்குப் போய்ச்சேரும்படி செய்த, அயில் வேலா - கைவேலாயுதத்தை யுடையவனே ! கந்தச் சடைமுடி - (வாசனை பொருந்திய மலர்மாலைகளைச் சூடியதனால்) வாசனை வீசும் சடாமுடியை யுடையவரும், கனல் வடிவு - நெருப்பையொத்த திருமேனியை யுடையவரும், அடல் அணி எந்தைக்கு - வலிமை பொருந்தியவருமான எமது தந்தையாகிய சிவபெருமானுக்கு, உயிர்

எனும் மலைமகள்-உயிரென்று சொல்லத்தக்க பர்வதராஜபுத்திரியும், மரகத கந்தப் பரிமள தனகிரி உமை - பச்சைமேனியை யுடையவரும் நல்லவாசனைவீசும்(சந்தனம் முதலியவைகளை அணிந்துள்ள)தனபாரங்களையுடையவருமான உமாதேவியார், அருள் இளையோனே - (உலகத்தாருடைய துயரத்தையும் அதற்குக் காரணமான அஞ்ஞானத்தையும் நீக்குவதற்காக) உலகத்தாருக்குத் தந்தருளிய(என்றும் இளமைப்பருவம் மாறாத) சிறுவனே! கஞ்சப்பதம் இவர் திருமகள் - தாமரை மலரின்மீது எழுந்தருளியிருக்கும் இலக்ஷ்மிதேவியாகிய, அம்பொன் கொடியிடை குலமகள் - மிகுந்த அழகு வாய்ந்தவளும், மின்னற்கொடியை யொத்த மெல்லிய இடையையுடையவளுமான உத்தமமான பெண்மணியை,புணர்அரி - சதா காலமும் தமது இதயத்தில் அமர்த்தி அவளுடன் கலந்திருக்கும் ஸ்ரீமந் நாராயணனுடைய, மருக - சகோதரியின் புத்திரனே! நல் கந்த பொழில் நிகழ்- நல்ல வாசனை வீசும் பூஞ்சோலைகள் அழகாய்த் தோன்றும், குருமலை மருவிய பெருமாளே-சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் பெருங்குணமுடையோனே! எந்த திசையிலும் மலையினும் - எந்தத் திசையிலும் எந்த மலையிலும், உவரியின் எந்த படியினும் - சமுத்திரத்திலுள்ள எந்த நீர்நிலையிலும், முகடினும் - மலையின் உச்சியிலும்,உள - வாழும், எந்த சடலமும்-எந்தப் பிராணிக்குரிய சரீரத்திலும், உயிர் இயை பிறவியின் உழலாதே - (அடியேன்) உயிர்பொருந்தி அடியேன் பிறந்து ஜனன (மரணமாகிய)கடலில் அகப்பட்டு வருந்தாமல், இந்த சடமுடன் உயிர்நிலைபெற - (இனி வேறு உடல் பெறுவதற்கு வழியில்லாமல்)அடியேனது இவ்வுடலுடன் அடியேனது உயிர் அலைச்சலொழிந்து (முத்திவீட்டில்) நிலையாய்ப் பொருந்துமாறு, (அடியேன்), என் சித்தமும் மனம் உருகி - அடியேனுடைய அந்தக்கரணமான மனம் (நின்னிடத்துக்கொள்ளும்) மெய்யன்பினால் உருகி, நல்சுருதியின் முறையோடே - சன்மார்க்கத்தைப் போதிக்கும் வேதங்களிற் கூறியுள்ள விதிப்படி, நளினம் பொன் கழலிணைகளில் - தாமரை மலரையொத்த அழகிய இரு பாதாரவிந்தங்களிலும், மருமலர்கொடு சந்திந்து - வாசனை பொருந்திய புஷ்பங்களைச் சொரிந்து அப்பாதமலர்களில் வந்துசேர்ந்து, அரஹர சிவசிவ சரண் என - அரகரா! சிவ சிவா! தாமே எனக்குப் புகலிடம் என்று கூறி, கும்பிட்டு - கைகளைக் கூப்பி, இணையடி அவை என தலைமிசை தங்க-அவ்விருபாதமலர்களும் அடியேனது தலையின்மீது பொருந்தும்படி நின்னை வணங்கி, புளகிதம் எழ - அடியேனது தேகமெங்கும் உரோமம்சிலிர்க்கவும்,இரு விழிபுனல் குதிபாய - அடியேனது இருகண்களிலிருந்தும் ஆநந்தபாஷ்பம்வேகமாய்ப்பெருகவும்,எனது உளம் உருகவும் - அடியேனது உள்ளம் உருகவும்,சம்பை கொடி இடை விபுதையின் அழகும் - மின்னற்கொடியை யொத்த இடையையுடைய தேவகுமாரியான தெய்வயானையம்மையின் அழகும், திருநடம் இடு உன் அந்த சரண் அழகு(ம்) உற - (பொன்னம்பலத்தில் எமது தந்தையான சிவபெருமானுடன்) அற்புதமாக நிர்த்தனஞ்செய்யும் நினது அழகிய பாதங்களின் அழ

கும் தோன்றும்படி, சந்த சபைதனில் வருவாயே - சந்தக்கவி பாடும் இந்தச் சபைதனில் வந்தருளவேண்டும் !

(வி - ரை) விரிந்த உலகத்தின் எண் திசைகளிலும் நிலத்திலும் நீரிலும் ஆகாயத்திலும் வாழும் எண்ணிறந்த வகைப்பட்ட ஜீவராசிகளுள் எதுவாகப் பிறந்து இறந்தபோதிலும் ஜீவன்மறுபடியும் பிறந்து மற்றொருஉடலையடைவது நிச்சயமாதலின், ஜீவன் அல்லற்படுவது ஒழிந்து எம்பெருமானது பாதாரவிந்தங் களில் நிலையாக இருக்கவேண்டுமாயின், ஜீவனை அது ஒரு பிறவியில் அடைந்த உடலிலேயே நிலைபெறச்செய்து, அந்த உடலைத் தெய்வத்தன்மை பொருந்திய தாகச்செய்து, அந்த உடலுடன் ஜீவனை எம்பெருமானது பாதாரவிந்தங்களான நித்தியமான முத்தி வீட்டிற்சேர்க்கும்படி பிரார்த்திப்பதே தகுந்த வழியெனக் கருதி சுவாமிகள் முகப்பெருமானை இப்பாடலில் இவ்வாறு பிரார்த்தித்தார் போலும் ! அன்றியும், ஒரு ஜீவன் அது எடுத்த ஒரு உடலை விட்டுப் பிரிந்தால், அது அந்த ஜன்மத்தில் செய்த பாபங்களுக்குத்தக்க இயமதண்டனையை அனுப விக்கவேண்டி யிருக்குமாதலின், அத்தண்டனையை அடையாமல் தப்புவதற்காக வும் இவ்வாறு பிரார்த்தித்திருக்கலாம். ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளுக்கு இவ் விரண்டு நோக்கங்களும் உண்டு என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன. திருப்புகழில்,

"எழுகடல் மணலை அளவிடி னதிக
மெனதிடர் பிறவி அவதாரம்

இனியுன தபய மெனதுயி ருடலு
மினி யுடல் விடுக முடியாது ;

கழுகொடு நரியு மெரிபுவி மறலி
கமலனு மிகவு மயர்வானார் ;

கடனுன தபய மடிமையு னடிமை
கடுகியு னடிகள் தருவாயே !' என்றும்,

கந்தரனுபூதியில்,

"கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள் பேசியவா !" என்றும்,

திருப்புகழில்,

"வருபவர்க ளோலை கொண்டு
நமனுடைய தூதரென்று
மடிபிடிய தாக நின்று தொடர்போது

மயலதுபொ லாத வம்பன்
விரகுடைய னூகு மென்று
வசைகளுட னேதொ டர்ந்து அடைவார்கள் ;

கருவியத ஞலெ நிந்து
சதைகள்தனை யேய ரிந்து
கரியபுன லேசொ ரிந்து விடவேதான்

கழுமுனையி லேயி ரென்று
விடுமெனும வேளை கண்டு
கடுகிவர வேணு மென்றன் முனமேதான் !''

என்றும் சுவாமிகள் கூறியுள்ளவைகளே தகுந்த ஆதாரங்களாகும்.

பிரபுடதேவ மகாராஜன் சபையில், சம்பந்தாண்டான் என்னும் உமாதேவி யாருடைய அடியானுடன் நமது சுவாமிகள் வாதஞ்செய்தகாலத்தில், அவனுடன் போட்ட பந்தயத்துக்காகத் தாம் வழிபட்டுவந்த முகப்பெருமானை அச்சபையில் வரவழைப்பதற்காக இப்பாடலைப் பாடினதாகப் பலர் அபிப்பிராயப்படுகின்றனர். (அ)

தனதனன தனதனன தான தந்தனம்
தனதனன தனதனன தான தந்தனம்
தனதனன தனதனன தான தந்தனம்—தனதான.

ஒருவரையு மொருவரறி யாம லுந்திரிந்
திருவினையி னிடர்கலியொ டாடி நொந்துநொந்
துலையிலிடு மெழுகதென வாடி முன்செய்வஞ் சனையாலே-

ஒளிபெறவெ யெழுபுமர பாவை துன்றிடுங்
கயிறுவித மெனமருவி யாடி விண்பறிந்
தொளிருமின லுருவதென வோடி யங்கம்வெந் திடுவேனைக்;

கருதியொரு பரமபொரு ளீது என்றுஎன்
செவியிணையி னருளியுரு வாகி வந்தஎன்
கருவினையொ டருமலமு நீறு கண்டுதண் டருமாமென்-

கருணைபொழி கமலமுக மாறு மிந்துளந்
தொடைமகுட முடியுமொளிர் நாபு ரஞ்சரண்
கலகலென மயிலின்மிசை யேறி வந்துகந் தெனையாள்வாய்;

திரிபுரமு மதனுடலும் நீறு கண்டவன்
தருணமழ விடையனட ராஜ னெங்கணுந்
திகழருண கிரிசொருப ஞதி யந்தமங் கறியாத-

சிவயநம நமசிவய கார ணன்சுரந்
தமுதமதை யருளியெமை யாளு மெந்தைதன்
திருவுருவின் மகிழெனது தாய்ப யந்திடும் புதல்வோனே;

குருகுகொடி யுடன்மயிலி லேறி மந்தரம்
புவனகிரி சுழலமறை யாயி ரங்களும்
குமரகுரு வெனவலிய சேட னஞ்சவந் திடுவோனே-

குறமகளி னிடைதுவள பாத செஞ்சிலம்
பொலியவொரு சசிமகளொ டேக லந்துதிண்
குருமலையின் மருவுகுரு நாத வும்பர்தம் பெருமாளே. (௬)

(ப-ரை) திரிபுரமும் மதன் உடலும் நீறு கண்டவன் - திரிபுரத்தையும் மன்மதனுடைய தேகத்தையும் சாம்பலாகச் செய்தவரும், தருண மழவிடையன் - மிகவும் இளமைபொருந்திய இடபத்தை வாகனமாக உடையவரும், நடராஜன் - பொன்னம்பலத்தில் நடனஞ் செய்பவரும், எங்கணும் திகழ் அருணகிரி சொருபன் - உலகமெங்கும் ஒளிவீசி ஜோதிப்பிழம்பாய் நின்று பிறகு திருவருணைமலையின் சொரூபத்தைத் தரித்தவரும், அங்கு ஆதி அந்தம் அறியாத - அக்காலத்தில் அடியையும்முடியையும் அறியமுடியாதவண்ணம்நின்றவரும், சிவயநம நமசிவய - நமசிவாய என்னும் பஞ்சாக்ஷரத்துக்குக் காரணபூதராயிருப்பவரும், அமுதமதை சுரந்து அருளி எமை ஆளும் - சிவஞானம் என்னும் அமுதத்தை ஏராளமாய்ச் சுரந்து அளித்து எம்மை ஆட்கொண்டருளும், எந்தை தன் திருவுருவின் மகிழ் - எமது தந்தையுமாகிய சிவபெருமானது அழகிய திருமேனியைக்கண்டு மனமகிழும், எனது தாய் பயந்திடும் புதல்வோனே - எனது தாயாராகிய பார்வதிதேவியார் பெற்றருளிய புத்திரனே! குருகு கொடியுடன் மயிலில் ஏறி - கோழிக் கொடியுடன் மயிலின்மீது ஏறி, மந்தரம் புவனகிரி சுழல - மந்தரமலையும்(உலகத்தைச் சுற்றி வளைந்து வளர்ந்திருக்கும்) சக்கரவாள பர்வதமும் அசைந்து சுழலவும், மறை ஆயிரங்களும் குமரகுரு என - ஆயிரம் சாகைகளையுடைய வேதமானது ஞானகுருவான குமாரசுவாமி வருகிறார் என்று களிப்புடன் கூறவும், வலிய சேடன் அஞ்ச - வலிமைபொருந்திய ஆதிசேஷன் பயப்படவும், வந்திடுவோனே - (உலகத்தை வலமாகச்சுற்றி)வந்தவனே! குறமகளின் இடைதுவள - வேடர்குலத்தில் வளர்ந்த வள்ளிநாயகியின் இடை நெளியும்படியாகவும், பாத செம் சிலம்பு ஒலிய - அத்தேவியார் பாதங்களில் அணிந்திருந்த அழகிய சிலம்புகள் சத்திக்கும்படியாகவும், (அத்தேவியாரைப் புணர்ந்தும்), ஒரு சசிமகளொடே கலந்து - இந்திராணியின் புதல்வியான ஒப்பற்ற தெய்வயானையம்மையுடனும் புணர்ந்து, திண் குருமலையின் மருவு குருநாத - சிறந்த சுவாமிமலையின்மீது எழுந்தருளியிருக்கும் ஞானகுருவாகிய நாதனே! உம்பர்தம்பெருமாளே - தேவர்

களுக்குத் தலைவனுகிய தேவாதி தேவா! ஒருவரையும் ஒருவர் அறியாமலும் திரிந்து - (எங்கும் வியாபித்திருப்பது ஒன்றே என்பதை யுணரமுடியாததனுல்) ஒருவரை யொருவர் அறிந்துகொள்ளாமல் (மாயையினுலும் ஆசாபாசங்களினுலும்) அலைந்து திரிந்து, இருவினையின் இடர் கலியொடு ஆடி நொந்து நொந்து - முற்பிறப்புக்களிற் செய்த நல்வினை தீவினைகளின் பயனுக நேரிடும் துன்பங்களையும் கெடுதிகளையும் அனுபவித்து மனம் மிகவும்நொந்து,உலையில் இடுமெழுகதென வாடி - நெருப்பின்மேல் வைத்த மெழுகைப்போலத் துவண்டு வருந்தி, முன் செய் வஞ்சனையாலே - முற்பிறப்புக்களிற் செய்த வஞ்சனையான காரியங்களினுலே, ஒளி பெறவே எழுபு மர பாவை - (பொம்மலாட்டத்தில்) பிரகாசத்துடன் எழும்பிக் குதிக்கும் மரப்பொம்மை, துன்றிடும் கயிறு விதமென (தன்னை யாட்டுவிக்கத் தன்னை அதனுல் கட்டப்பட்டதனுல்) தன்னுடன் கயிறு பொருந்தப்பெற் றிருப்பதுபோலவே, மருவி - (அவ்வஞ்சனைச் செயல்களின் பயனுடன்) நெருங்கிப் பொருந்தி, ஆடி - (அவ்வினைப்பயனுல் ஆட்டுவிக்கப் பெற்று) ஆடி, விண்பறிந்து ஒளிரும் மினல் உருவது என ஓடி - ஆகாயத்தில் ஓடிப் பிரகாசிக்கும் மின்னல்தான் என்று சொல்லும்படி (சொற்பகாலம் கீர்த்தியுடன் விளங்கி உலகில்) சஞ்சரித்து, அங்கம் வெந்திடுவேனை - தேகமெங்கும் நொந்து வருந்தும் அடியேனை, கருதி - (நினதுகருணையைப் பெறத்தக்கவனுக) நினைத்து, ஒரு பரம்பொருள் ஈது என்று என் செவியிணையின் அருளி - ஒப்புயர்வற்றதும் பரகதியைத் தரத்தக்கதுமான மெய்ஞ்ஞானம் இதுதான் என்று தெளிவாக அடியேனது இருகாதுகளிலும் உபதேசித்து, உருவாகி வந்த என் கருவினையொடு அருமலமும் நீறுகண்டு-(அழியும்)தேகத்தையெடுத்துக்கொண்டு வந்திருக்கும் அடியேனை ஓயாமல் ஜனனமரண சாகரத்தில் புகுத்தும் அடியேனது பிறவி வினையும் அடியேன் தானுக நீக்கிக்கொள்ளமுடியாத ஆணவம்,காமியம்,மாயையென்னும்மும்மலங்களும் வெந்துசாம்பலாகும்படிசெய்து,தண்தருமாமென் கருணைபொழி கமலமுகம் ஆறும் - (வெந்துயரையாற்றி மனத்தைக்)குளிரச்செய்வதும், மாட்சிமை பொருந்தியதும், (அடியார்களது துயரத்தைக்கண்டு சற்றும் சகிக்கமுடியாதவளவு) மென்மை பொருந்தியதுமான கருணையை மழைபோற் பொழியும் தாமரையை யொத்த ஆறு திருமுகங்களும், இந்துளம் தொடை - கடப்பமலர் மாலையும், மகுடமுடியும் - கிரீடங்களும் (தோன்றவும்), சரண் ஒளிர் நூபுரம் கலகலென - பாதாரவிந்தங்களில் அணிந்துள்ள பிரகாசமான தண்டைகள் கலகலவென ஒலிக்கவும், மயிலின்மிசை ஏறிவந்து உகந்து எனை ஆள்வாய் - மகிழ்ச்சியுடன் அடியேனை ஏற்றுக்கொண்டு ஆண்டருள வேண்டும்.

(வி - ரை) முன்பு ஒருகாலத்தில் பிரமதேவரும் திருமாலும் மருட்சியுற்று, தங்களுக்குள் யார் பரம்பொருள் என்பதைப்பற்றி ஒருவரோடொருவர் வாதாடிப் போர் புரிந்தபோது, தேவாதிதேவரான சிவபெருமான் அடிமுடி தெரியாத

ஜோதிப்பிழம்பாய்த் தோன்றினர். அப்போது "உங்களுள்எவர் இச்சோதிப்பிழம்பின் அடிமுடிகளைக் கண்டுபிடிக்கிறாரோ அவரே பரம்பொருள்" என்று ஓர் அசரீரிவாக்கு வானத்தில் உதித்தது. உடனேபிரமதேவர் அன்னபக்ஷி வடிவத்தையும் திருமால் பன்றியின் வடிவத்தையும் எடுத்துக்கொண்டு முடியையும் அடியையும் முறையே தேடியும் காணுமல் அயர்ந்து திரும்பினர். அப்போது எம்பெருமான் அவர்கள் முன்னே தோன்றி அவர்களது மயக்கத்தை அகற்றியருளினர். பிறகு அஜ்ஜோதிப்பிழம்பானது சிவலிங்கஸ்வரூபமான ஒரு மலையாக மாறிற்று. அதுவே தற்காலம் திருவருணை அல்லது திருவண்ணுமலை என்னும் பெயருடன் விளங்கி வருகிறது.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களின் உருவமான திரிபுரங்களையும், பிறவிப்பிணியை உண்டாக்கி வளர்க்கும் மன்மதனது தேகத்தையும் எரித்துச் சாம்பலாக்கியவரும், சிறிதும் வலிகுன்றுமல் எப்போதும் இளமைப் பருவத்திலுள்ள வலிமையுடையதாகவே இருந்துகொண்டு உலகம் நிலைகுலையாம லிருக்கும்படி காத்துவருகிற தருமதேவதையையே இடபமாக்கித் தமது வாகன மாக்கிக்கொண்டவரும், திருவண்ணுமலையின் சொரூபத்தைத் தரித்தவரும், நமசிவாய என்னும் பஞ்சாக்ஷரத்தின் நாயகரும், கருணை சுரந்து எம்மைக்காப்பவரும் எமது தந்தையுமானசிவபெருமானது திருவுருவத்தைக்கண்டு மகிழும் எமது தாயாகிய பார்வதிதேவியார்பெற்ற புதல்வராகிய தேவரீர்-அடியேனது சகோதராகிய தேவரீர்-அன்று விநாயகக் கடவுளோடு பந்தயமாக உலகப் பிரதக்ஷணம் செய்து தமது பராக்கிரமத்தைக் காட்டியருளினீர். தமது சகோதரனுகிய அடியேன் முந்தைவினைப்பயனுல் ஆட்டுவிக்கப்பட்டு ஆடி நொந்து வாடுகிறேன் ; உலகமாயையில் உழலும் அடியேன் தமது அருளைப்பெறும் தகைமையுடையவனல்லன் ; ஆயினும், தேவரீர் அடியேனது சகோதரராகையினுல், அடியேன்மீது கருணைகூர்ந்து, தமது கருணைபொழியும் திருமுகங்களையும் கடம்பமாலையையும் அடியேனுக்குப்புகலிடமான இருபாதாரவிந்தங்களையும் அடியேன் கண்டு மகிழ்ச்சியடையுமாறு அடியேன் முன்னே தோன்றி, பாகதியைத் தரும் மெய்ஞ்ஞானத்தைஉபதேசித்து,நீக்குவ்தற்கரிய மும்மலங்களையும்,பிறவிநோய்க்குக் காரணமான வினைப்பயனையும் அழித்தருளவேண்டும். தேவரீரது தந்தையாகிய சிவபெருமான் உலகத்தைக் காப்பதற்காகவே திரிபுரங்களையும் மன்மதன் உடலையும் அழித்தருளினர்.

இவ்வுலகத்தில் ஜீவர்கள் ஒருவரோடொருவர்போராடி ஒருவரையொருவர் வஞ்சிக்க முயன்று அலைந்து திரிவதற்குக் காரணம் ஒருவரையொருவர் அறிந்து கொள்ளாததுதான். சகலஜீவராசிகளினிடத்தும் உறைந்திருப்பது பரம்பொருள் தான். ஜீவர்களாகவுமிருந்து ஜீவர்களை ஆட்டுவிப்பவனுகவு மிருப்பவன் பரம்பொருளே யாதலால், உலகத்தில் காணப்படும் பூதபேதங்கள் சரீரபேதங்களேயன்றி,பொருள்பேதங்களல்ல. எங்கும் உறையும்பொருள் ஒன்றே என்னும் உண்

மையை யறிவதே மெய்ஞ்ஞானமாகும். அந்த மெய்ஞ்ஞானத்தை யடைந்தால், பூதபேதங்கள் ஒழிந்து, ஆணவம் முதலிய மலங்களும், அவைகளினால் உண்டாகும் ஆசாபாசங்களும் ஒழியும். அவையொழிந்தால், ஜீவன் அல்லற்பட்டு அலைந்து திரிவதும் ஒழியும். எம்பெருமான் அருள்கிடைத்தால், 'துராலு மிகுதீமுன்பிராத வகைபோலும்', இருவினைப்பயன் அணுகாமல் விலகியோடும். (கூ)

தனதன தனதன தனதன தனதன
தனதனன தானந்—தனதான.

அவாமரு வினாவசு தைகாணும டவாரெனு
மவார்கனலில் வாழ்வென் றுணராதே

அராநுகர வாதையு றேதரைக திநாடும
றிவாகியுள மால்கொண் டதனாலே

சிவாயமெ னுநாமமொ ருகாலுநி னையாததி
மிராகரனை வாவென் றருள்வாயே!

திரோதமல மாறும டியார்கள ருமாதவர்
தியானமுறு பாதந் தருவாயே!

உவாவினி யகானுவி னிலாவும யில்வாகன
முலாசமுட னேறுங் கழலோனே!

உலாவுத யபானுச தகோடியு ருவானவொ
ளிவாகுமயில் வேலங் கையிலோனே!

துவாதச புயாசல சடானன வராசிவ
சுதாஎயினர் மானின் புடையோனே!

சுராதிப திமாலய னுமாலொடு சலாமிடு
சுவாமிமலை வாழும் பெருமாளே! (கo)

(ப-ரை) உவா - இளையோனே! இனிய கான் உ - இனிய வாசனை வீசும் கடவுளே!, வில் நிலாவு மயில்வாகனம் உல்லாசமுடன் ஏறும் - வில்லைப் போல் தனது தோகையை விரிக்கும் மயில்வாகனத்தின்மீது களிப்புடன் ஏறும், கழலோனே - வீரக்கழல்களை யணிந்த பாதாரவிந்தங்களை யுடையோனே! உலா உதயபானு சதகோடி உருவான ஒளிவாகும் - உதயகாலத்தில் மெல்லெழும் சூரியர்கள் ஆயிரங்கோடி சேர்ந்து ஒரு உருவெடுத்தாற்போல் பிரகாசிக்கும், அயில் வேல் அம் கையிலோனே - கைவேலாயுதத்தை அழகிய கையில் தரித்துக்கொண்டிருப்பவனே!, துவாதச புயாசல - மலைகளை யொத்த பன்னிரண்டு தோள்களை

யுடையவனே !, சடானன - ஆறு முகங்களை யுடையோனே !, வரா - சிவபெருமானால் தேவர்களுக்கு வரமாக அளிக்கப்பட்டவனே !, சிவ சுதா - சிவ பெருமானது புதல்வனே ! எயினர் மான் அன்பு உடையோனே - வேடர்கள் பெண்ணான அழகிய வள்ளிநாயகியினிடத்து அன்புடையவனே !, சுர அதிபதி மால் அயனும் - தேவராஜனாகிய இந்திரனும் திருமாலும் பிரமதேவரும், மாலொடு சலாமிடு - அன்புடன் வணங்கும், சுவாமிமலை வாழும் பெருமாளே - சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் பெருமாளே !, அவா மருவின் - (மனத்தில்) ஆசையுண்டாகுமாயின், ஆவசுதை காணு(ம்) - உலகமுழுவதையும் தோன்றச்செய்யும் இயல்புள்ள, மடவார் எனும் அ(வ்)வார் கனல் இல்வாழ்வு - பெண்கள் என்று உலகோர் சொல்லும் நீண்டநெருப்புத்தான் இல்லறவாழ்க்கை, என்றுணராதே - என்று அறிவினால் அறிந்துகொள்ளாமல், அரா நுகர வாதையுறு தேரை கதி நாடும் அறிவாகி - பாம்பினால், தின்னப்படும்போது பெருந்துன்பத்தை அனுபவிக்கும் தவளையின் துன்ப நிலைமையை அடைய ஆசைப்படுமளவு அறிவில் கீழ்ப்பட்டவனாகி, உள(ம்)மால் கொண்டு அதனாலே - மனம் மயக்கமடையப் பெற்று அக்காரணத்தினால், சிவாயம்எனு(ம்)நாமம் ஒருகாலும் நினையாத - சிவாயம் என்னும் சிவபெருமானது திருநாமத்தை எச்சமயத்திலும் நினைக்கவும் நினைக்காத, திமிர ஆகரன் - (அஞ்ஞான) இருளில் வசிப்பவனை, வா என்று அருள்வாயே - வா என்று சொல்லி அழைத்து அருள்புரிவாயே ! திரோதமலம் மாறும் அடியார்கள் அருமாதவர் - ஞானத்தை மறைக்கும் மும்மலங்களையும் அகற்றிய மெய்யடியார்களும் அரிய சிறந்த தவத்தைச்செய்த பெரியோர்களும், தியானமுறு பாதம் தருவாயே-(எப்போதும்) மனத்திலமர்த்தி வணங்கும் நினது பாதாரவிந்தங்களை அடியேனுக்குத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) ஆசையற்றவர்களுக்கு உலகத்தில் யாவர் புலப்பட்டாலும் எப்பொருள் புலப்பட்டாலும் அவர்கள் கருத்து மாறாது. உலகத்தில் காணப்படும் ஜடபேதங்கள் அவர்களுக்குத் தோன்றா. அவர்களுக்கு எல்லாம் ஒன்றே. **கந்தரநுபூதியில்** "சும்மாவிரு சொல்லறவென்றலுமே, அம்மா பொருளொன்று மறிந்திலனே" என்று இப்பொருளையே சுவாமிகள் தெளிவாய் உரைத்தருளி யிருக்கிறார். ஒருவருக்கு ஆசை உதித்தால், பூத பேதங்களெல்லாம் தோன்றும். ஏனெனில், அவர் தமது ஆசைகளில் ஒவ்வொன்றையும் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய பொருள்களை நாடித்தேடி, அவைகளில் எவை உயர்ந்தவை எவை தாழ்ந்தவை என்று ஆராய்ந்து பார்க்கிறார். அப்போது உலகத்தில் காணப்படும் வஸ்துக்களின் வித்தியாசங்கள் அதிகரித்துக் காணப்படுகின்றன. ஆசைகளுக்கெல்லாம் மூலகாரணமாய் நிற்பவை மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் மூன்று ஆசைகள்தாம். அம்மூவாசைகளுள் தலைமை பெற்றுள்ளது பெண்ணாசைதான் என்பது சற்று ஆலோசித்தால் எளிதில் விளங்கும். அப்பெண்ணாசைதான் உலகத்திலுள்ள பொருள் வித்தியாசங்களை விசேஷ

மாய் எடுத்துக்காட்டி மற்ற ஆசைகளான அக்னிகளையும் தொடர்ச்சியாய் மூட்டி, உயிர்கள் அவைகளில் வீழ்ந்து வெந்தழியும்படி செய்கிறது. ஆசையினுல்தான் பெண்கள் உலகத்தையெல்லாம் தோன்றச் செய்பவர்களென்றும், நீண்ட தீயை யொத்தவர்களென்றும் கூறப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட தீயில் வீழ்ந்து நொந்து அழிவதே இல்லறவாழ்க்கை யென்னும் மெய்யுணர்ச்சியில்லாமல், பாம்பின்வாயிலகப்பட்ட தவளையின் நிலைமையை அடையவிரும்பும் அறிவீனத்துக்குச் சமானமான அறிவீனத்துடன் அந்த இல்லற வாழ்க்கையை அடைய விரும்புகிறேன். அடியேன் அவ்வாறு மனம் மயங்கியிருப்பதனுல், அடியேன் அஞ்ஞான விருள்நிறைந்த வீட்டில் குடியிருந்துகொண்டு, நமசிவாய என்னும் பஞ்சாக்ஷரத்தை மனத்தினுல் ஒரு முறை நினைப்பதுமில்லை. ஆயினும், அடியேன் ஆசைகளையும், அவைகளுக்குக் காரணமான ஆணவம்,கன்மம்,மாயை என்னும் மும்மலங்களையும் அகற்றிக்கொள்ளச் சக்தியற்றவனுயிருப்பதனுல்தான் மூலமந்திரத்தை ஒருமுறையேனும் நினையாமலு மிருக்கிறே னுகையினுலும், அவைகளை அகற்றிக்கொள்வது நின்னருளைப்பெற்றவர்களன்றி வேறு எவர்க்கும் சாத்தியமானதல்ல வாதலாலும், நீ 'வா வா வென வாவென்றழைத்து வானோர் பரிதாபம் தவிர்த்த' பெருமாளாதலாலும், நீ அடியேனையும் 'நீ வாவென நீ யிங் கழைத்து பாராவர வானந்த சித்தி நேரே பரமானந்த முத்தி தரவேணும்'; நீ அடியேனை வா என்று அழைத்துத் தடுத்தாட்கொண்டு, அஞ்ஞானத்தை யுண்டாக்கும் மும்மலங்களையும் நினது திருவருளினுல் அகற்றிக்கொண்ட மெய்யடியார்களும் சிறந்ததவசிகளும் சதாகாலமும் தமது சிந்தையில் அமர்த்திவணங்கும் நினது பாதாரவிந்தங்களை அடியேனுக்கு உதவியருளவேண்டும். இப்படிப்பட்ட உதவியை எனக்குப் புரியும்படி பிறரை வேண்டாமல் நின்னை என் வேண்டுகிறேன் என்ருல்; — ஜீவனிடத்து உனக்கு உள்ள காதல் ஒருபோதும் சிறிதளவும் குன்ருவண்ணம் நீ என்றும் இளையோனுய்க் காளைப் பருவத்திலேயே இருக்கிருய்; துயருற்றவர்கள் வேறு கதியின்றி நின்னைச் சரண் புகுந்து நின்னை அழைத்த மாத்திரத்தில் விரைவில் வந்து அவர்களைக் காப்பதற்காக மயில்மீதேறி எப்போதும் சேவகனுய்க் காத்துக் கொண்டிருக்கிருய்; நீ ஒப்பற்ற கொடையாளியென்றும் நிகரற்ற வீரனென்றும் உணர்த்துவதற்காக நினது பாதாரவிந்தங்களில் கழல்களை அணிந்து கொண் டிருக்கிருய்; இரவில் உலகத்தைப் போர்த்தியிருந்த இருளை அகற்ற உதிக்கும் சூரியனைப்போல் - தீயிலிட்டு நன்ருய்க்காய்ச்சின பொன்னைப்போல் இனிமையான ஒளி மிகுதியாய் வீசும் சூரியனைப்போல் - ஆயிரங்கோடி சூரியர்களைச் சேர்த்துத்திரட்டி ஓர்உருவமாகச்செய்தால் அது எவ்வளவு ஒளிவீசுமோ அவ்வளவு ஒளி வீசும் வேலாயுதத்தை - அஞ்ஞான விருளை நொடிப்பொழுதில் அகற்றவல்ல வேலாயுதத்தை - கையில் வைத்துக்கொண்டிருக்கிருய்; என்னைக் காப்பதற்கு வலிமைபொருந்திய பன்னிருபுயங்களையும்,என்னைக் கருணையுடன்

பார்ப்பதற்குப் பன்னிரு கண்களையும் உடையவனுயிருக்கிறாய்; உலகத்தில் அதிகரித்துத் தலைமைபெற்றிருந்த தமோகுணங்களை அழிக்கவேண்டுமெனப் பிரார்த்தித்துத் தேவர்கள்செய்த தவத்துக்கு உவந்து சிவபெருமான் வரமாக அளித்தருளிய ஞானதேசிகனு யிருக்கிறாய்; ஐம்புலன்களின் கைகளிற் சிக்கி அவைகள் செலுத்திய வழியே செல்லும் ஜீவனது சொரூபமான வள்ளிநாயகியின்மீது மிகுதியான அன்பு பாராட்டுகிறாய்; இந்திரன் முதலியோர் அன்புடன்வணங்கும் கருணைக்கடலாகிய தேவாதிதேவனுக இருக்கிறாய். மேற்கூறிய சக்திகளும், பெருங்குணங்களும், பேரன்பும்வாய்ந்த பொருளாக நீ இருப்பதனால்,நின்னையன்றி வேறு புகலிடம் அடியேனுக்குக் கிடையாது. ஆகையினால்தான் நின்னைப் பிரார்த்திக்கிறேன். வள்ளிநாயகியினிடத்தில் காட்டிய பேரன்பை ஐம்புலன்களுக்கு அடிமையாகித் தியங்கும் அடியேனிடத்தும் காட்டி அடியேனை நினது பாதாரவிந்தங்களிற் சேர்த்துக்கொள்ளவேண்டும். (கo)

தனதனன தந்ததான தனதனன தந்ததான
தனதனன தந்ததான—தனதான.

கதிரவனெ ழுந்துலாவு திசையளவு கண்டுமோது
கடலளவு கண்டுமாய மருளாலே

கணபணபு யங்கராஜன் முடியளவு கண்டுதாள்கள்
கவினறந டந்துதேயும் வகையேபோய்

இதமிதமி தென்றுநாளு மருகருகி ருந்துகூடு
மிடமிடமி தென்றுசோர்வு படையாதே

இசையொடுபு கழ்ந்தபோது நழுவியப்ர சண்டர்வாச
விரவுபகல் சென்றுவாடி யுழல்வேனே ?

மதுகரமி டைந்துவேரி தருநறவ முண்டுபூக
மலர்வளநி றைந்தபாளை மலரூடே

வகைவகையெ ழுந்துசாம வதிமறைவி யந்துபாட
மதிநிழலி டுஞ்சுவாமி மலைவாழ்வே !

அதிரவரு சண்டவாயு வெனவருக ருங்கலாப
அணிமயில்வி ரும்பியேறு மிளையோனே !

அடைவொடுலகங்கள்யாவு முதவிநிலை கண்டபாவை
அருள்புதல்வ அண்டராஜர் பெருமாளே ! (கக

(ப - ரை) பூகமலர் வள நிறைந்த பாளைமலரூடே - பாக்குமரத்தின் மலருக்குரிய செழுமையை முற்றிலும் பெற்ற அம்மரத்தின் மலரும் பருவத்திலுள்ள பாளைக்குள்ளிருந்து, மதுகரம் - வண்டுகள், வேரி தரு நறவம் உண்டு - வாசனை வீசும் தேனைக்குடித்து, இடைந்து - வசங்கெட்டு, வகைவகை எழுந்து - இனம் இனமாக வெளிப்பட்டு, சாம அதி மறை வியந்துபாட - வேதங்களுள் சிறந்த சாமவேதத்தை(கேட்போர்) அதிசயிக்கும்படி பாடும்வண்ணம், மதிநிழல் இடும் - குளிர்ச்சியைத்தரும் சோலைகள் நிறைந்த, சுவாமிமலை வாழ்வே - சுவாமிமலை என்னும் ஸ்தலத்தில் எழுந்தருளி அதைச் சிறப்புறச் செய்பவனே! அதிர வரு சண்டவாயு எனவரு - எதிர்ப்படும் வஸ்துக்களெல்லாம் அதிர்ச்சி யடையும்படி வீசும் புயற்காற்றோ இது என்று சொல்லும் வண்ணம் மிகுந்த வேகத்துடன் வரும், கரும் கலாப அணி மயில் விரும்பி ஏறும் இளையோனே - கருநீல நிறமுள்ள தோகையையுடைய அழகிய மயிலின்மீது ஆசையுடன் ஏறும் சிறுவனே! உலகங்கள் யாவும் அடைவொடு உதவி நிலைகண்ட பாவை - எல்லா உலகங்களையும் அவைகளுக்குவேண்டிய எல்லாவஸ்துக்களுடனும்படைத்துத் தருமத்தினால் அது நிலைநிற்கும்படி செய்த பார்வதிதேவியார், அருள் புதல்வ - தந்தருளிய புதல்வனே! அண்டராஜர் பெருமாளே - சகல அண்டங்களிலுமுள்ள அரசர்களெல்லோருக்கும் தலைவனே! மாயமருளாலே - மாயையினால் ஏற்பட்ட மயக்கத்தினாலே, கதிரவன் எழுந்து உலாவு திசை அளவுகண்டு - சூரியன் உதித்துச் சஞ்சரிக்கும் எட்டுத்திசைகளின் முடிவான எல்லைகள் வரைக்கும், மோதுகடல் அளவுகண்டு - அலைவீசும் சமுத்திரத்தின் எல்லைகள்வரைக்கும், கணபண புயங்க ராஜன் முடியளவு கண்டு - கூட்டமான படங்களையுடைய ஸர்ப்பராஜனாகிய ஆதி சேஷனுடைய தலைகள் இருக்கும் இடம் வரைக்கும், தாள்கள் கவின் அற - கால்களின் அழகு அழியுமாறும்,தேயும்வகையே நடந்துபோய்-தேய்ந்துபோகுமாறும் நடந்து சென்று, இதம் இதம் இது என்று - நன்மையைத் தரத்தக்கது இதுவே யென்று நிச்சயமாய் நினைத்து, நாளும் அருகு இருந்து - தினந்தோறும் சமீபத்தில் இருந்து, கூடும் இடம்இடம் இதென்று-எண்ணம்கைகூடும் இடம்இதுவே என்றுநம்பி, சோர்வுபடையாதே-(பலநாள்நடந்தும் பயனடையாமல்போனதை நினைத்து) மனச்சோர்வு அடையாமல், இசையொடு புகழ்ந்தபோது - இன்னிசை பொருந்திய பாடல்களினால் புகழ்ந்தகாலத்தில், நழுவிய ப்ரசண்டர்வாசல் இரவு பகல் சென்று - (அவ்விடத்தில் நிற்காமலும் ஒருவார்த்தையேனும் பேசாமலும்) நழுவினாற்போல் அப்பாற்செல்லும் வலியாருடைய வீட்டின்வாயிலுக்கு இரவும் பகலும் போய், வாடி உழல்வேனோ - தேகம் அயரும்படி அலைந்து திரிதல் தகுதியோ?

(வி - ரை) சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் ஞானதேசிகனே! அடியேன் எனது துயரத்தைச் சகிக்கமுடியாமல், நின்னைச் சரண்புகுந்து நின்னைக் கூவி அழைத்த மாத்திரத்தில் தாமதமின்றித் தக்ஷணத்தில் வந்து அடியேனைக்

காப்பதற்காகச் சதாகாலமும் மயிலின்மீது ஆவலுடன் ஏறி வீற்றிருப்பவனே! நினது நாயகியான ஜீவாத்மாவின்மீதுள்ள காதல் சிறிதும் குன்றுவண்ணம் எந் நாளும் இளையோனுகவே யிருக்கும் காளைக் குமரேசா! நின்னை இன்னிசை பொருந்திய பாடல்களினுல் புகழ்ந்து, முத்தமிழால் நின்னை வைதாரையும் வாழ வைக்கும் நினது அருளையும் இகபரசுகங்களனைத்தையும் அடையாமல், மாயை யினுல் மனமருண்டு, பூலோகமெல்லாம் திரிந்தும், கடல்களின் எல்லைவரையில் சென்றும், பூமி தேய்ந்து ஆதிசேஷன் தலைகளின்மீது அடியேன் பாதங்கள் படும்படி ஓயாமல் நடந்தும், கால்கள் தேய்ந்து நொந்ததையும் பாராட்டாமல், 'ஆகாதெனினும் அகத்துநெய் யுண்டாகிற், போகாதெறும்பு புறஞ்சுற்றும்-யாதுங், கொடாஅ ரெனினும் உடையாரைப் பற்றி, விடாஅ லருகத் தவர்' என்றபடி, உள்ளே செல்ல வழியில்லாமல் நன்ருய் மூடப்பெற்ற நெய்க்குடத்தை விட்டு அகலாமல் எறும்புகள் சுற்றிக்கொண்டி ருப்பதுபோல், பொருளுடையோருடைய தயவை நாடுவதே நல்ல பயனைத் தருமென்றும், பொருள் அடையவேண்டுமென்ற நோக்கம் அவர்கள்பாற் சென்ருல்தான் கைகூடுமென்றும் நிச்சயமாய் நம்பி, அவர்களுடைய வீடுகளுக்கு ஓயாமல் இரா வும் பகலும் சென்று புகழ்ந்தாலும் சிறிதும் பொருள் கொடாமல் அலக்ஷியமாய் அகன்று செல்லும் லோபியோர்கள்பாற் சென்று அடியேன்மனம் சஞ்சலமடையும் படி விட்டிருப்பது நினது கருணைக்குத் தகுதியோ?

"மிடுக்கிலாதானை வீமனே விறல் விஜயனே வில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலைப்
பொடிக்கொள் மேனி யெம்புண்ணியன் புகலூரைப்பாடுமின் புலவீர்காள்
அடுக்குமேலம ருலகமாள்வதற் கியாது மையுற வில்லையே"

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்திருப்பதையும் காண்க. (கக)

தனதன தனந்த தானன
தனதன தனந்த தானன
தனதன தனந்த தானன—தனதான.

கறைபடு முடம்பி ராதெனக்
கருதுத லொழிந்து வாயுவைக்
கருமவ சனங்க ளால்மறித் தனலூதிக்

கவலைப டுகின்ற யோககற்
பனைமரு வுசிந்தை போய்விடக்
கலகமி டுமஞ்சும் வேறறச் செயல்மாளக்

குறைவற நிறைந்த மோனநிற்
குணமது பொருந்தி வீடுறக்
குருமலை விளங்கு ஞானசற் குருநாதா

குமரச ரணென்று கூதளப்
புதுமலர் சொரிந்து கோமளப்
பதயுக ளபுண்ட ரீகமுற் றுணர்வேனோ ?

சிறைதனை விளங்கு பேர்முடிப்
புயலுட னடங்க வேபிழைத்
திமையவர் கள்தங்க ளூர்புகச் சமராடித்

திமிரமி குசிந்து வாய்விடச்
சிகரிக ளும்வெந்து நீறெழத்
திகிரிகொ ளநந்த சூடிகைத் திருமாலும்

பிறைமவு லிமைந்த கோவெனப்
பிரமனை முனிந்து காவலிட்
டொருநொடி யில்மண்டு சூரனைப் பொருதேறிப்

பெருகும த கும்ப லாளிதக்
கரியென ப்ரசண்ட வாரணப்
பிடிதனை மணந்த சேவகப் பெருமாளே. (௧௨)

(ப-ரை) சிறைதனைவிளங்குபேர் இமையவர்கள்-ஒளிவீசும்விலங்குகளுடன் சிறைச்சாலையில் அடைபட்டிருந்தவர்களான தேவர்கள், முடிப்புயலுடன் (புயல் முடியுடன்)-மேகவாகனனாகிய இந்திரனுடன், அடங்கவே-யாவரும், பிழைத்து தங்கள் ஊர்புக சமராடி - சூரபதுமன் முதலியோர் செய்த கொடுமைகளினின்றும் தப்பிப்பிழைத்து தங்கள் அமராவதிநகரத்தில் மீண்டும் வசிக்கும்படி அசுரர்களுடன் போர்புரிந்து, திமிரமிகு சிந்து வாய்விட - இருள் நிறைந்த சமுத்திரமானது வாய்விட்டு அலறவும், சிகரிகளும் வெந்து நீறு எழ - மலைகளும் வெந்து சாம்பலாகி அச்சாம்பல் மேலெழுந்து (எங்கும்) பரவவும், திகிரிகொள் அநந்த சூடிகை திருமாலும் - சக்கராயுதத்தைக் கையில்தரித்துக்கொண்டு எண்ணிறந்த படங்களையுடைய ஆதிசேஷன்மீது சயனித்திருக்கும் மகாவிஷ்ணுவும், பிறை மவுலிமைந்த கோ என - பிறைச்சந்திரனைச் சடாமுடியில் தரித்திருக்கும் சிவ பெருமானுடைய புதல்வனே ! இது முறையோ என்று கூறவும், பிரமனை முனிந்து காவலிட்டு பிரமதேவரிடத்துக் கோபமுற்று அவரைச் சிறையிலடைத்து, மண்டு சூரனை ஒருநொடியில் பொருது ஏறி - (போர்க்களத்தில்)

நெருங்கிவந்த சூரபதுமனுடன் போர்புரிந்து அப்போரை ஒரு நொடிப்பொழுதில் முடித்துப் போர்க்களத்தைவிட்டு நீங்கி, பெருகு மத கும்ப லாளித கரி என-மத நீர் சொரியும் மத்தகத்தையுடைய அழகிய யானை என்று சொல்லப்படும், ப்ரசண்ட வாரணப் பிடிதனை - மிகுந்த வலிமை பொருந்திய யானையான ஐராவதத்தினால் வளர்க்கபட்ட பெண்ணாகிய தெய்வயானை யம்மையை, மணந்த - மணந்து கொண்ட, சேவகப்பெருமாளே - வீரனாகிய பெரியோனே ! கறைபடும் உடம்பு இராது என கருதுதல் ஒழிந்து-குற்றம் பொருந்திய தேகம் அழியாமல் நிலைத்தி ராது என்று எண்ணுவதைவிட்டு, வாயுவை கருமவசனங்களால் மறித்து-(தேகம் அழியாமல் நிலைபெற்றிருக்கும்படி செய்யவேண்டுமென்ற நோக்கத்துடன்) சுவா சத்தை உள்ளேயிழுத்துத் தேகத்துக்குள்ளேயே அடைபட்டு வெளியிற் செல் லாமல் இருப்பதற்குரிய மந்திரங்களை உச்சரித்து சுவாசித்த வாயு வெளியேறாமல் மறித்து, அனலூதி - அவ்வாயு தேகமெங்கும் பரவும்படி செய்து அதனால் மூலாக்கினியான குண்டலி சக்தியை எழுப்பி, கவலைபடுகின்ற - சித்தியடைய வேண்டுமென்று கவலைப்படுகிற, யோககற்பனை - யோகமார்க்கத்தின் காரண மான மருட்சியானது, மருவு சிந்தை போய்விட - பொருந்தியுள்ள சஞ்சல புத்தி யானது நீங்கிப்போய்விடவும், கலகமிடும் அஞ்சும் வேர் அற - (அமைதி ஏற்பட வொட்டாமல்) மனத்தில் சதாகாலமும் கலகம் உண்டுபண்ணிக்கொண் டிருக்கும் ஐம்புலன்களினால் ஏற்படும் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தம் என்னும் ஐந்து ஆசை களும் வேருடன் அழிந்து போகவும், செயல் மாள -என்செயல் என்பது ஒழிந்து போகவும், குறைவற நிறைந்த மோன நிற்குணமது பொருந்தி வீடுற - குறை வின்றிப் பரிபூரணமாயுள்ள மவுனமும் குணமின்மையும் பொருந்தப்பெற்று முத்தியடையவும், குருமலை விளங்கு ஞானசத்குருநாதா - சுவாமிமலையில் எழுந் தருளியிருக்கும் நல்ல ஞானகுருநாதா !, குமர-என்றும் இளமை மாறாதிருக்கும் குமாரக்கடவுளே ! சரண் என்று - நினது பாதமலர்களே அடியேனுக்குப் புக லிடம் என்று கூறி, கோமள பதயுகள புண்டரீகம் உற்று - இளமைபொருந்திய இருபாதங்களான தாமரை மலர்களினிடம் வந்து சேர்ந்து, கூதள புதுமலர் சொரிந்து-அன்றுபூத்த கூதளமலர்களினால் அப்பாதத் தாமரைகளை அருச்சித்து உணர்வேனோ -அவைகளின் தன்மையை உணரும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைக்குமோ ?

(வி—ரை) உலகத்தை இரக்ஷிப்பது மழை ; அதற்கு நாயகன் இந்திரன், அதாவது, கிரியாமார்க்கத்தில் செலுத்தும் நற்குணம் ; அதற்கு உதவியானவை சற்குணங்கள் பல ; அவைகளின் சொரூபிகளே ஏனைய தேவர்கள். நிற்க, இப் பாடலில் கூறப்பட்டுள்ள சம்பவங்கள் மூன்று. அவையாவன :—1. பிரமனைச் சிறையிலிட்டது ; 2. சூரனை அழித்தது ; 3. தெய்வயானையம்மையை மணந்து கொண்டது. இவைகளை வரிசைக்கிரமமாய்க் கவனிப்போம். பிரமனைச் சிறையி லடைத்ததன் காரணம், உலகத்தில் அஞ்ஞானம் தலைமைபெற்று சத்வகுணங்கள்

மறைந்து கிடந்ததை யுன்னி, உலகோருக்கு ஞானத்தைப் போதித்து அஞ்ஞானத்தை நீக்குவதற்காகவே அவதரித்தருளிய குமாரக்கடவுள், உலகத்தில் அஞ்ஞானிகள் நிறைந்ததற்குக் காரணம் அவர்களைப் படைத்த பிரமதேவரது அஞ்ஞானமே யென்று தீர்மானித்து, தாம் அவதரித்த பின்னுவது அஞ்ஞானிகள் பெருகாம லிருக்கும்பொருட்டு, குமாரசுவாமி பிரமதேவரை அவர் பதவியினின்றும் நீக்கிச் சிறையிலிட்டு, சிருஷ்டித் தொழிலைத் தாமே நடத்திவந்தார். அஞ்ஞானம் மேன்மேலும் பெருகுவதை அவ்வாறு தடுத்த பின்னர், ஞானதேசிகராகிய முருகப்பெருமான், முன்னமே உலகில் பாவியிருந்த அஞ்ஞானத்துக்குக் காரணமான ஆணவம் அல்லது அகங்காரத்தின் சொரூபியான சூரபதுமனை அழித்தருளினார். அப்போது அஞ்ஞானம் நிறைந்துள்ள சமுசாரம் என்னும் சமுத்திரம் ஞானசக்தியாம் வேலினால் தன் பொய் நிலைமை வெளியாகிவிட்டதேயென்று வருந்திக் கதறிற்று. சமுசாரத்தின் பொய்ம்மையை வெளிப்படுத்தி அகங்காரத்தைக் கொலைத்தபின்னர், குமாரசுவாமி கிரியாமார்க்கத்தில் ஞானம் கலந்தால்தான் அம்மார்க்கத்தினால் தம்மை யடையமுடியும் என்பதைக் குறிப்பாகக் காட்டுமாறு, கிரியாசக்தியாம் தெய்வயானை யம்மையைத் திருமணஞ் செய்துகொண்டு, ஞானசொரூபியாகிய தாம் அத்தேவியாருடன் கலந்துகொண்டார். ஜீவாத்மாவானது சமுசார சாகரத்தைக் கடந்து கரையேறி, அகங்காரத்தை யொழித்து ஞானமடையுமாறு வேண்டியவற்றைச் செய்யக் காத்திருக்கும் முருகப்பெருமானை விளித்து, சுவாமிகள் காயகற்பந்தேடும் யோகமார்க்க மருட்சியை அகற்றிக்கொள்ளவும், ஐம்புலன்களின் வழியே மனத்தையிழுக்கும் ஐந்து வகை ஆசைகளை வேருடன் களைந்தெறியவும், ஆசைகளை யொழித்து அமைதியுற்ற மனமும் செயலற்றிருக்கும் தேகமும் மௌனமுற்ற வாக்கும் பொருந்தப்பெற்று முத்தியடையவும் மெய்ப்பொருள் யாதென்று உணரவேண்டுவது அவசியமென்றும், அவ்வுணர்ச்சியைப் பெறுவதற்குரிய மார்க்கம் முருகப்பெருமானது பாதத்தாமரைகளை அணுகி; அவைகளை அன்று பூத்த கூதளமலர்களினால் அருச்சித்து வணங்குவதே யென்றும் இப்பாடலில் கூறியிருக்கிறார். (கஉ)

தனனதன தானதத்த தனனதன தானதத்த
தனனதன தானதத்த—தனதான.

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம்வைக்க அறியாத

சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்மயக்க முறுவேனோ?

கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளைசெப்பு
கயிலைமலை நாதர்பெற்ற குமரோனே!

## 1. திருவேரகம் எனும் சுவாமிமலை கரு

கடகபுய மீதிரத்ன மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடப்ப மணிவோனே!

தருணமிதை யாமிகுத்த கனமதுறு நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு

தகைமைசிவ ஞானமுத்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணுநெய்த்த வடிவேலா!

அருணதள பாதபத்ம மதுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா!

அதிசயம நேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழகதிரு வேரகத்தின் முருகோனே! (கஙு)

(ப-ரை) நெய்த்த வடிவேலா-அசுரர்களது இரத்தத்தைக் குடித்ததும் வடித்துக் கூர்மையாகவுள்ளதுமான வேலாயுதத்தைக் கையில் தரித்தவனே! அருணதள பாதபத்மம் அது நிதமுமே துதிக்க - மிகவும் சிவந்த இதழ்களையுடைய தாமரை மலர்களை யொத்த நினது பாதங்களைத் தினந்தோறும் துதிக்குமாறு, அரிய தமிழ் தான் அளித்த மயில்வீரா - அருமையான தமிழ்ப் பாஷையை உலகத்தோருக்குத் தந்தருளிய மயில்வீரா!, அதிசயம் அநேகம் உற்ற - அதிசயங்கள் பல சம்பவித்த, பழநிமலைமீது உதித்த அழக - பழநிமலைமீது எழுந்தருளியிருக்கும் நிகரற்ற அழகுடையோனே!, திருவேரகத்தின் முருகோனே - திருவேரகம் என்னும் திவ்யஸ்தலத்தில் ஞான வாசனை வீசும் ஞான சொரூபியாய் விளங்குபவனே!, சரணகமல ஆலயத்தை - உயிர்கள் (இறுதியில்) தங்குமிடமாகிய நினது இருபாதத் தாமரைகளை, அரை நிமிஷ நேரமட்டில் - அரை நிமிஷ நேரமாவது, தவமுறை தியானம் வைக்க அறியாத - தவமார்க்கத்துக்குரிய முறைப்படி தியானஞ் செய்ய வகையறியாத, சட கசட மூட மட்டி - (ஞானத்தை மறைக்கும்) இந்தத் தேகத்தினுல் மாயையிற் சிக்கினவனும் அடிவண்டலையொத்த கடைப்பட்டவனும் அறிவில்லாதவனும் (கீழான எண்ணங்களையுடைய) மட்டியும், பவவினையிலே சனித்த தமியன் - மீண்டும் மீண்டும் பிறந்து இறக்கும்படி செய்யும் கருவினையினுல் இவ்வுலகில் பிறந்துள்ள ஏழையேன், மிடியால் மயக்கம் உறுவேனோ - வறுமையினுல் மனமயங்கித் தியங்கும்படி விட்டுச் சும்மாவிருத்தல் நீதியோ?, கருணைபுரியாது இருப்பது என குறை - நீ அடியேன்மீது கருணை காட்டாமலிருப்பதற்கு அடியேனிடத்துள்ள எந்தக் குற்றத்தைப் பெரிதாக மதித்தாய், இவேளை செப்பு - அதை இச்சமயம் அடியேனுக்குக் கூறியருளவேண்டும்; கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே-திருக்கைலாய மலையில் எழுந்தருளியிருக்கும் நாதரான சிவபெருமானிடத்தே உதித்த என்றும் இளமை மாறாத குமாரசுவா

மியே!, கடக புயமீது - கடகங்களை யணிந்த வலிமை பொருந்திய (பன்னிரு) தோள்களின்மீது, இரத்நமணி அணி பொன்மாலை செச்சை கமழு மணம் ஆர் கடப்பம் அணிவோனே - இரத்தினங்க ளிழைக்கப் பெற்ற அழகிய பொன்னு லாகிய மாலையையும் வெட்சிமலர் மாலையையும் அருமையான வாசனை வீசும் கடம்பமலர் மாலையையும் அணிந்துகொள்பவனே!, தருணம் இது ஐயா - ஐய னே! அடியேனைக் காப்பதற்கு இதுவே தருணம், மிகுத்த கனம் அது உறு நீள் சவுக்ய(ம்)சகலசெல்வ யோக(ம்) மிக்க பெருவாழ்வு - மிகுந்த மாட்சிமை பொருந் திய நீண்ட சுகவாழ்க்கை சகல செல்வங்களையும் பெற்று அனுபவித்தல் இவை கூடிய மேலான வாழ்வையும், தகைமை சிவஞான(ம்)முத்தி பரகதியும் - (பெறத் தக்க பேறு இதுவே யெனும்படி) பெருமைவாய்ந்த சிவஞானத்தையும் பரலோ கத்தில் முத்தி வீட்டையும், நீ கொடுத்து உதவிபுரியவேணும் - நீ அடியேனுக் குக்கொடுத்து உதவி புரியவேண்டும்.

(வி - ரை) இன்சுவை மிக்க தமிழின்மீது நினக்குள்ள பிரியத்தினால் அப் பாஷையை அகத்தியமா முனிவருக்குப் போதித்து அவர் மூலமாக அதை உலகத்தோருக்கு அளித்து, செந்தாமரை மலர்களை யொத்த நினது பாதங்களை மானிடர், தினந்தோறும் துதித்துப் பவசாகரத்தைக் கடந்து ஈடேறுவதற்கு ஒரு மார்க்கத்தை உண்டு பண்ணிய கருணைக் கடலே! நாதத்துக்கெல்லாம் விந்து வான ஓங்காரத்தின் அழகிய சொரூபமான மயிலின்மீது அமர்ந்துள்ள நீ உபதே சித்த அப்பாஷையின் பெருமையையும் இனிமையையும் அளவிடவல்லவர் யார்! முத்தமிழால் நின்னை வைதாரையும் வாழவைத்து அப்பாஷையின்மீது உனக் குள்ள ஆசையை விளக்கிக் காட்டின தமிழ் நாயகனே! நினது வல்லமையையும் பேரருளையும் காட்டத்தக்க பல அதிசயங்கள் நிகழ்ந்த பழநிமலையின்மீது நிகரற்ற அழகு வாய்ந்தவனாய் எழுந்தருளி யிருப்பவனே! திருப்பாற்கடலைக் கடைந்து அமுதத்தைப் பகிர்ந்த காலத்தில் அசுரர்களை மயக்குவதற்கு நிகரற்ற அழகு வாய்ந்த மோகினியின் உருவத்தை எடுத்துக்கொண்ட திருமாலின் சகோதரியான நாராயணியின் புதல்வனாகவும், பொன்னம்பலத்தில் திருநடனம் புரிந்த காலத்தில் தாம் தமது காதிலணிந்த குழை நழுவிக் கீழே விழுந்ததை மீண்டும் எடுத்துக் காதிலணிந்ததை அக் கனக சபையில் சூழ்ந்து நின்ற தேவர்களும் முனி வர்களும் கவனிக்கமுடியாதபடி தமது போழ்கினால் அவர்கள் மனதைக் கவர்ந்த சிவபெருமானுக்குப் புதல்வனாகவும் அவதரித்து, இரத்தினங்களிடையே வைத்த மாணிக்கத்தைப் போல் தேவர்களுக்கு நாயகனாய் விளங்கி, ஞானசொரூபியாய் ஞானவாசனை வீசுபவனே! நினது அழகுக்குப் பொருத்தமான அழகுடைய தலம் இதுவே யென்று திரு ஏர் அகம் (அழகிய வீடு) என்னும் சுவாமிமலையில் எழுந்தருளி, சர்வேசுவரனாகிய சிவபெருமானுக்குக் குருவாக நின்று பிரணவத் தின் பொருளை உபதேசித்து ஞானவாசனை உலகமெங்கும் வீசும்படி செய்யும் முருகோனே! அடியேனுக்கு உறுதியான புகலிடம் நினது பாதார விந்தங்களை

அவைகளைத் தவமுறைப்படி தியானித்தால் சிறந்த பலன் பெறலாம். தவமுறைப் படி தியானிப்பதற்கு, மனம் தூய்மையுடையதாய் உருகி நீர்மையுடையதாய் சஞ் சலமற்று ஒருமைப்பட் டிருக்கவேண்டும். அடியேன் மனமோ கல்லைப் போன்ற கடினமுடையது. "திணியான மனோ சிலைமீதுனதாள் அணி யாரரவிந்த மரும்புமதோ?" மிகவும் கடினமான மனமாகிய பாறையின்மீது நினது பாதாரவிந்தங்களாகிய தாமரை மலர்கள் புஷ்பிக்குமோ? தாமரை புஷ்பிக்க நீர்மை அவசியமாயிற்றே. அடியேன் மனம் கரைந்து நீர்மை யடை யும் இயல்புடையதன்றே. சுத்தமான நீரில்தான் தாமரை படர்ந்து புஷ்பிக்கும். அடியேன் மனமோ காமம் குரோதம் முதலியவைகளினால் உண்டான கெட்ட எண்ணங்களினால் அழுக்கடைந்திருக்கிறது. நீர் அமைதியாய் நிற்கும் நீர்-நிலைகளில்தாம் தாமரை படர்ந்து மலரும். அலைமோதும் சமுத்திரத்தில் தாமரை படர்ந்து மலருமோ? அடியேன் மனம் அலைகளைப்போன்ற ஆசா பாசங்களினால் ஓயாமல் சஞ்சலமடைகின்றதே! தூய்மையும் நீர்மையும் அமைதியுமில்லாத அடியேன் மனத்தில் நினது பாதாரவிந்தங்கள் எவ் வாறு வந்து அமரும்? அடியேன், இச்சரீரமானது ஞானத்தை மறைப்பத னால், இந்த ஜடவுலக வாழ்க்கையைச் சதமென எண்ணி, அதிலேயே உழன்று திரிகிறேன்; யாவர்க்கும் கீழ்ப்பட்டவன் அடியேன்; அறிவு என்பது சிறிதளவும் வாய்க்கப்பெற்றிலேன்; கீழான எண்ணங்களேயன்றி மேலான எண்ணங்கள் ஒருபோதும் மனத்தில் உதிக்கப்பெறாத மட்டி; மீண் டும் மீண்டும் ஜனன மரண சாகரத்தில் மடுக்கும் கருவினையை அகற்றிக் கொள்ள வகையறியாமல், மீண்டும் மீண்டும் பிறந்து இறந்து நொந்து மெலிந் தேன்; நினது அருளாகிய அழியாத செல்வத்தைப் பெறாத ஏழையேன், நினது அருளைப் பெறவேண்டுமென்ற எண்ணமும் அடியேன் மனத்தில் உதிப்பதற்கும் வழியில்லாமல், தினந்தோறும் உடலென்ற கும்பிக்கு உணவென்ற இரை தேடு வதிலேயே ஓயாமல் இரவும்பகலும் உழலும்படி செய்யும் கொடிய வறுமையினால் மயங்கித் தியங்கும்படி அடியேனைக் கைவிட்டு விடுதல் நினது கருணைக்குத் தகுதியோ? வெள்ளமாகப் பாய்ந்து ஓடும் நினது கருணைப் பிரவாகம் அடியேன் பால் மட்டும் வாராதவண்ணம் நீ அணைபோட்டுத் தடுக்கும்படி அடியேன் என்ன அவ்வளவு பெரிய குற்றம் செய்தேன்? "இல்லே யெனுமாயையி லிட்டனை நீ, பொல்லே னறியாமை பொறுத்திலையே" "பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே வீழ்வா யெனவென்னை விதித்தனையே!", "வாட்டியெனைச் சூழ்ந்தவினை ஆசையமு வாசையனல், மூட்டியுலைக் காய்ந்தமுழு வாமெனவி காசமொடு, மாட்டி யெனைப் பாய்ந்துகட வோட்டமொ டாடிவடு - விஞ்சையாலே" அடியேன் ஜடவுலக வாழ்க்கையில் உழன்று தியங்குகிறேன். வினைப்பயனை நீக்கவல்லவர் நின்னையன்றி வேறு யாருளர்? வினைப்பயன் அடியேனை அதன் இச்சைப்படி ஆட்டுவிப்பது நீ அறியாததோ? ஜீவர்களது அஞ்ஞானத்தை யகற்றி அவர்களை

இரக்ஷிப்பதற்காகச் சர்வேசுவரன் அளித்த செல்வப்புதல்வனன்றோ நீ! பகைவர்களை முறியடித்துத் தூரத்தும் வல்லமையுடையவன் நீ என்பதை அறிவிப்பதற்காக வெட்சிமலர் மாலையை அணிந்துகொண்டிருக்கிருயே? அடியேனுடைய பகைவர்களாகிய அஞ்ஞானத்தையும், இருவினையையும் கருவினையையும், வறுமையையும் அடித்துத் துரத்த நினக்கு வல்லமையில்லையோ? அடியேன் இவ்வுலக வாழ்க்கையினுல் உண்டாகும் துயரத்தினுல் மிகவும் வருந்துகிறேன். இனி என்னுல் இத்துயரத்தைப் பொறுக்கமுடியாது; இத்தருணம் வந்து நோயற்ற நீண்ட ஆயுளையும், சகல செல்வங்களும் ஏராளமாக நிறைந்த பெருவாழ்வையும், எல்லாவற்றிலும் மேலான சிவஞானத்தையும், இறுதியில் முத்திவீட்டையும் கொடுத்து உதவி புரியவேண்டும்.

தனதன தனன தனதன தந்தன
தனதன தனன தனதன தந்தன
தனதன தனன தனதன தந்தன — தந்தன.

விடமும்வ டிவேலு மதனச ரங்களும்
வடுவகி கரான மகரநெ டுங்குழை
விரவியு டன்மீளும் விழிகளு மென்புழு கதுதோயும்

ம்ருகமத படீர பரிமள குங்கும
மணியுமி ளநீரும் வடகுல குன்றமும்
வெருவவ னபார புளகத னங்களும் வெகுகாம

நடனப தநூபு ரமுமுகில் கெஞ்சிட
மலர்சொ ருகுகேச பாமுமி லங்கிய
நளினம லர்சோதி மதிமுக விம்பமும் அனநேராம்

நடையுந ளிர்மாதர் நிலவுநெ டார்ந்தனு
முழுதும பிராம அரிவைய கிண்கிணை
னகையுமு ளமாதர் கலவியி னைந்துரு கிடலாமோ?

வடிவுடை யமானு மிகல்கர னுந்திக
ழெழுவகை மராம ரமுநிக ரொன்றுமில்
வலியதி றல்வாலி யுரமுநெ டுங்கட லணையேழும்

மறநிரு தர்சேனை முழுதுமி லங்கைமன்
வகையிர வியோலு மணியும லங்க்ருத
மணிமவு லியான வொருபதும் விஞ்சிரு பதுதோளும்

அடைவல முமாள விடுசர அம்புடை

தசரத குமார ரகுகுல புங்கவன்

அருள்புனை முராரி மருகவி ளங்கிய  மயிலேறி

அடையலர் கள்மாள வொருநிமி டந்தனி

லுலகைவ லமாக நொடியினில் வந்துயர்

அழகிய சுவாமி மலையில மர்ந்தருள் பெருமாளே!  (௧௪)

(ப—ரை) வடிவுடைய மானும் – அழகிய வடிவத்தையுடைய மானின் உருவத்துடன் எதிர்ப்பட்ட மாரீசனும், இகல் கரனும் - போரில் எதிர்த்த கரன் என்னும் இராக்ஷதனும், திகழ் எழு வகை மராமரமும்–செழித்து வளர்ந்து விளங்கிய எழு மராமரங்களும், நிகர் ஒன்றும் இல் வலிய திறல் வாலி உரமும் - இணையெனக் கூறுவதற்கு எவருமில்லை யெனும்படி அவ்வளவு வலிமையும் திறமையும் உடைய வாலியின் தேகமும், நெடும் கடல் அவை எழும் - நீண்ட சமுத்திரங்கள் ஏழும், மற நிருதர் சேனை முழுதும் - கொடிய இராக்ஷதர் சேனை முழுவதும், இலங்கை மன் அணியும் - இலங்கை மன்னவனாகிய இராவணன் அணிந்துகொண்டிருந்த, வகை இரவிபோலும் அலங்கிருத மணி மவுலியான ஒருபதும் - பலவித நிறமுள்ள சூரியர்களைப்போல் ஒளிவீசும் இரத்தினங்களிழைக்கப்பெற்ற மகுடங்களினால் அலங்கரிக்கப்பெற்ற பத்துத் தலைகளும், விஞ்சு இருபது தோளும் - மிகவும் வலிமை பொருந்திய இருபது தோள்களும், அடை வலமும் - அவனைச்சேர்ந்த சேனையும், மாள - அழியுமாறு, விடு (ம்) சர அம்பு உடை(ய) - விடும் அம்புகளையுடைய, தசரதகுமார ரகுகுல புங்கவன்- ரகுவின் வம்சத்தில் தசரத மகா சக்கரவர்த்தியின் புதல்வனாய் - ஸ்ரீ ராமனாய் அவதரித்த பெரியோனும், அருள் புனை முராரி – கருணையுடையவரும் நரகாசுரன் தம்பியான முரன் என்னும் அசுரனை அழித்தருளியவருமான மகாவிஷ்ணுவின், மருக - சகோதரியின் புத்திரனே!, விளங்கிய மயிலேறி அடையலர்கள் மாள - மிகவும் அழகாய் விளங்கும் மயிலின்மீது ஏறிச்சென்று பகைவர்கள் அழியும்படி செய்து, ஒரு நிமிடந்தனில் உலகை வலமாக வந்து - (சிவபெருமான் கூறியருளியபடி விநாயகக் கடவுளுடன் பந்தயமாக) உலகத்தைச்சுற்றி ஒரு நொடிப்பொழுதில் வலம் வந்து, உயர் அழகிய சுவாமிமலையில் அமர்ந்தருள் பெருமாளே - சிறப்பும் அழகும் வாய்ந்த சுவாமிமலையின்மீது கோயில்கொண்ட பெருமாளே!, விடமும் வடிவேலு(ம்) மதன சரங்களும் வடிவு(ம்) நிகரான-விஷத்தையும் வடித்துக் கூர்மையாகவுள்ள வேலாயுதத்தையும் மன்மதனுடைய பாணங்களையும் மீனையும் ஒத்திருப்பவைகளும், மகரநெடும் குழை விரவி உடன் மீளும் விழிகளும்; (காதில் அணிந்திருக்கும்) மீனையொத்த நீண்ட குழைகளின் புறமாக ஓடி அவைகளுடன் ஒரு க்ஷணநேரம் பொருந்தி அடுத்த க்ஷணத்தில் அவைகளை விட்டு மீண்டுமீடும்சஞ்சலசுபாவ முடையவைகளுமான கண்களும், மென் புழுகு அது

தோயும் ம்ருக மத படீர பரிமள குங்குமம் அணியும் - மென்மையான வாசனை வீசும் புனுகு கலந்த கஸ்தூரி, சந்தனம், வாசனைமிகுந்த குங்குமப்பூ இவைகளைப் பூசப்பெற்றவைகளும், இளநீரும் வடகுல குன்றமும் - வெருவுவன (வெருட்டுவன) - இளநீர்க்காய்களையும் வடக்குத்திசையிலுள்ள குலபர்வதமான மகா மேரு மலையையும் பயப்படச் செய்பவைகளுமான, பார புளக தனங்களும் - மிகவும் பருத்துள்ள தனபாரங்களும், வெகுகாம நடனபத நூபுரமும் - மிகுந்த காமத்தை மூட்டும்படி அழகாய் நடக்கும் பாதங்களில் அணிந்துள்ள சிலம்புகளும், முகில் கெஞ்சிட மலர் சொருகு கேசபாரமும் - மேகமும் வணங்கத்தக்க அளவு கருத்திருப்பதும் புஷ்பங்கள் சூட்டப்பெற்றிருப்பதுமான அடர்ந்து வளர்ந்து நீண்டுள்ள கூந்தலும், இலங்கிய நளின மலர் சோதி மதி விம்பமுகமும் - அழகாய் விளங்கும் தாமரைமலரை யொத்ததும் ஒளிவீசும் பூரண சந்திரனது உருவத்தை யுடையதுமான முகமும், அன(ம்) நேராம் நடையு(ம்) - அன்ன பக்ஷியின் நடையை யொத்த அழகிய நடையும் (உடையவர்களும்), நளிர் மாதர் நிலவு தொழும் - (நல்லநாயகன் கிடைக்கவேண்டுமென்று) குளிர்ந்த கிரணங்களையுடையதும் அழகு வாய்ந்ததுமான சந்திரனை வணங்குபவர்களும், முழுதும் அபிராம தனு - முற்றிலும் பேரழகு வாய்ந்த தேகத்தை யுடையவர்களும், அரி வைய கிண்கிணென நகையும் உள - வலிமை யுடையதும் வெற்றியைத் தருவதுமான கிணுகிண் என ஒலிக்கும் சிரிப்பும் உள்ள, மாதர் கலவியில் நைந்து உருகிடலாமோ - பெண்களது புணர்ச்சியில் மிகுந்த ஆசையுற்று மனம் நொந்து அடியேன் வருந்தும்படி விட்டிருப்பது நீதியோ?

(வி - ரை) ஸ்ரீராமனது பாணத்தின் சிறப்பு இப்பாடலில் கூறப்பட்டிருக்கிறது. ஒருவரை யழிக்க ஸ்ரீராமன் இருமுறை அம்பு தொடுத்ததில்லை. ஸ்ரீராமனைச் சீதாதேவியின் பக்கத்திலிருந்து அகற்றவேண்டுமென்ற நோக்கத்துடன் இராவணனால் அனுப்பப்பட்ட மாரீசன் அழகிய மானின் உருவத்துடன் தோன்ற, சீதாதேவி அம்மானைத் தனக்கு அவசியம் பிடித்துத் தரவேண்டுமென வேண்டினள். ஸ்ரீராமர் அந்த மானைப் பின்தொடர்ந்து சென்று ஓர் அம்பினால் அம்மானைக் கொன்றார். ஸ்ரீராமர் தமது வில் திறமையைச் சுக்ரீவனுக்குக் காட்டுமாறு ஏழு மரா மரங்களை ஒரே பாணத்தினால் துளைத்தார்; நிகரற்ற வல்லமையுள்ள வாலியை ஒரே பாணத்தினால் அழித்தார்; இலங்கைக்குச் செல்ல வழி விடாமலிருந்த சமுத்திர ராஜன்மீது ஓர் அம்பை விடுத்து அவன் தம்மைச் சரண் புகும்படி செய்தருளினார்; இராவணனது பத்துத் தலைகளையும் இருபது தோள்களையும் ஒரே அம்பினால் அழித்தருளினார். அவ்வளவு பராக்கிரமம் பொருந்திய திருமாலின் மருகனாகவும், மயிலின் மீதேறிச்சென்று அசுரர்களை அழித்தருளியவனாகவும், ஒரு நொடிப்பொழுதில் உலகப் பிரதக்ஷணம் செய்தவனாகவும் இருக்கும் முருகோனே! சுவாமிமலையில் ஞானதேசிகனாய் வந்து அமர்ந்துள்ள நீ, அடியேனுக்குமட்டும் ஞானத்தைப் போதிக்காமல், அடியேன் பெண்கள்மீது ஆசை கொண்டு அவர்கள் கலவியை விரும்பிச் சதாகாலமும் மனமுருகி வாடும்படி விட்டுச் சும்மா விருப்பது நினது கருணைக்கு அழகோ? (கக)

## 1. திருவேரகம் எனும் சுவாமிமலை



தனதன தானதந்த தனதன தானதந்த
தனதன தானதந்த—தன தான.

நிலவினி லேயிருந்து வகைமலர் சேர்தெரிந்து
நிறைகுழல் மீதணிந்து குழைதாவும்

நிகரறு வேலினங்கள் வரிதர வாசகங்கள்
நினைவற வேமொழிந்து மதனூலின்

கலபம னோகரங்க ளளவற வேபுரிந்து
கனியித ழேயருந்தி யநுராக

கலவியி லேமுயங்கி வனிதையர் பால்மயங்கு
கபடனை யாளவன்ற னருள்கூராய் !

உலகமொ ரேழுமண்ட ருலகமு மீசர்தங்கு
முயர்கயி லாயமும்பொன் வரைதானும்

உயிரொடு பூதமைந்து மொருமுத லாகிநின்ற
உமையரு ளால்வளர்ந்த குமரேசா ;

குலைபடு சூரனங்க மழிபட வேலெறிந்த
குமரக டோரவெங்கண் மயில்வாழ்வே

கொடுமுடி யாய்வளர்ந்து புயனிலை போலுயர்ந்த
குருமலை மீதமர்ந்த பெருமாளே ! (கரு)

(ப - ரை) உலகம் ஓர் எழும் அண்டர் உலகமும் ஈசர் தங்கும் உயர் கயிலாயமும் - ஏழு உலகங்களாகவும் வானவர்களது பொன்னுலகமாகவும் சர்வேசுவரரான சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் உன்னதமான கைலாசமலையாகவும், பொன் வரைதானும் - இமயமலையாகவும், உயிரொடு பூதமைந்தும் - உலகத்தில் காணப் படும் ஜீவராசிகள் எல்லாவற்றின் உயிராகவும் அவைகளின் சரீரங்கள் எப் பதார்த் தங்களினால் செய்யப்பட் டிருக்கின்றனவோ அப்பதார்த்தங்களான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களாகவும், ஒருமுதலாகிநின்ற- அவைகள் 'எல்லாவற்றிற்கும் ஆதிகாரணமாகவும் இருக்கும், உமை அருளால் வளர்ந்த குமரேசா - உமாதேவியாரது முலைப்பாலை யுண்டு வளர்ந்த குமாரசுவாமி யே !, குலைபடு சூரன் அங்கம் அழிபட வேல் எறிந்த - வலிமைகுன்றிய சூரபதுமனது தேகமானது அழியுமாறு வேலாயுதத்தை அவன்மீது வீசிய, குமர-குமார சுவாமியே !, கடோர - சூரன் முதலியோர்களைக் கடுமையாகத் தண்டித்தவனே !

வெங்கண் மயில் வாழ்வே - எதற்கும் அஞ்சாத வீரத்தன்மை பொருந்திய மயிலின்மீது எழுந்தருளி அதைச் சிறப்புறச் செய்பவனே!, கொடுமுடியாய் வளர்ந்து - உன்னதமான சிகரத்துடன் வளர்ந்து, புயல் நிலைபோல் உயர்ந்த - மேகங்கள் தங்குமிடம்போல் உயர்ந்துள்ள, குருமலை மீது அமர்ந்த பெருமானே - சுவாமி மலையின்மீது எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, நிலவினிலே இருந்து - சந்திரனது குளிர்ந்த கிரணங்கள் அடியேன்மீது படும்படி ஒருபுறத்தில் அமர்ந்து, வகைமலரே தெரிந்து - பலவகையான மலர்களை அவைகளின் சிறந்த வாசனை காரணமாகப் பொறுக்கி யெடுத்து, நிறை குழல்மீது அணிந்து - (மாதர்களின்) அடர்ந்து வளர்ந்துள்ள கூந்தலில் சூட்டி, குழை தாவும் - காதுகளில் அணிந்துள்ள குழைகள்வரையில் பாய்ந்து செல்லும், நிகர் அறு வேல் இனங்கள் வரிதர - ஒப்பற்றவைகளும் வேலையொத்தவைகளுமான கண்கள் விசாலமாகவும் அழகாகவுமிருக்க, (அதைக்கண்டு) நினைவு அறவே - தன் நல்லுணர்ச்சியை இழந்து, வாசகங்கள் மொழிந்து - ஏதேதோ வார்த்தையாடி, மதநூலின் கலவ மனோகரங்கள் - மன்மதலீலைக்குரிய சாஸ்திரத்தில் கூறியுள்ள ஆநந்தத்தை விளைவிக்கும் ஊடல் முதலிய விளையாடல்களை, அளவறவே புரிந்து - அளவில்லாமல் விளையாடி, கனி இதழே அருந்தி - பழத்தையொத்த இனிய உதடுகளினின்றும் அதராமுதத்தைப் பானஞ் செய்து, அநுராக கலவியிலே முயங்கி - காமமிகுதியினால் மாதர்களைப் புணர்ந்து தழுவி, வனிதையர் பால் மயங்கும் - பெண்களின்மீது ஆசைகொண்டு மதிமயங்கும், கபடனை - வஞ்சகனை, ஆள - தடுத்தாட்கொள்ள, உன்தன் அருள் கூராய் - நீ கருணை புரியவேண்டும் !

(வி - ரை) "இயகிரி வந்த பொன்பாவை பச்சை வஞ்சி அகிலதலம் பெறும்பூவை சத்தியம்மை, இளமுலையின் செழும்பால் குடித்திலங்கு மியல் நிமிர்த்திடுவோனே !" என்று கூறியுள்ளபடி உலகங்களை யெல்லாம் படைத்து தாமே அவைகளாகி நின்ற சிவசக்தியாம் உமாதேவியாரது திருமுலைப்பாலுண்டு வளர்ந்த குமரேசா ! அப் பார்வதி தேவியார் அடியேனுக்கும் அன்னையாதலின் உனக்கு அடியேன் சகோதரனல்லவா? மாயை, வஞ்சகம், காமம், குரோதம் முதலிய துர்க்குணங்க ளெல்லாவற்றையும் தம்பிமார் முதலான சுற்றத்தாராக அடைந்துவலிமையுற்றிருந்த அகங்காரத்தின் சொரூபமான சூரபதுமனது வலிமையைக் குலைப்பதற்காக முதலில் அவன் சுற்றத்தவர்களை யெல்லாம் அழித்து அவனைத் தனியாளாக்கி, அப்போதும் அவன் தருமத்தைத் தழுவி நடக்க இணங்காத காரணத்தினால், அவனைக் கடுமையாகத் தண்டித்த குமாரக் கடவுளே ! மிகுந்த தீரம் பொருந்திய மயில்வாகனத்தின்மீது சதாகாலமும் அடியார்களைக் காப்பதற்காக வீற்றிருப்பவனே ! காமத்தின் கையிற்சிக்கிப் பெண்கள்மீது ஆசைகொண்டு உழல்வதைப் பார்த்தும் அடியேனைத் தடுத்தாட்கொள்ளாமல் சும்மா விருத்தல் கருணைக்கடலாகிய உனக்குத் தகுதியோ ? (சரு)

# 1. திருவேரகம் எனும் சுவாமிமலை  சரு

*தனன தானதத்த தனன தானதத்த*
*தனன தானதத்த—தனதான*

மகர கேதனத்த னுருவி லாநெடுந்து
 மதுர நாணியிட்டு நெறிசேர்வார்
மலைய வேவளைத்த சிலையி னூடொளித்த
 வலிய சாயகக்கண் மடமாதர்
இகழ வாசமுற்ற தலையெ லாம்வெளுத்து
 இளமை போயொளித்து விடுமாறு
இடைவி டாதெடுத்த பிறவி வேரறுத்து
 னினிய தாளளிப்ப தொருநாளே?
அகில மேழுமெட்டு வரையின் மீதுமுட்ட
 அதிர வேநடத்து மயில்வீரா!
அசுரர் சேனைகெட்டு முறிய வானவர்க்கு
 அடைய வாழ்வளிக்கு மிளையோனே!
மிகநி லாவெறித்த அமுத வேணிநிற்க
 விழைசு வாமிவெற்பி லுறைவோனே!
விரைய ஞானவித்தை யருள்செய் தாதைகற்க
 வினவ வோதுவித்த பெருமாளே! (கக)

(ப-ரை) அகிலம் ஏழும் எட்டுவரையின்மீது முட்ட - ஏழு உலகங்களும் எட்டுக் குலபர்வதங்கள்மீதும் வந்து மோதும்வண்ணம், அதிரவே மயில் நடத்தும் வீரா - எங்கும் மிகுந்த அதிர்ச்சி யுண்டாகும்படி மயிலை (அதிவேகமாக) நடக்கச் செய்யும் வீரனே!, அசுரர் சேனை கெட்டு முறிய - அசுரர்களுடைய சேனை குலைந்து தோற்று ஓடும்படி செய்து, வானவர்க்கு அடைய வாழ்வு அளிக்கும் இளையோனே - தேவர்களுக்கு எல்லாவிதச் செல்வங்களையும் அளித்தவனும் என்றும் இளமை மாறாத விருப்பவனுமான குமாரா!, மிக நிலா எறித்த அமுத வேணி நிற்க விழை சுவாமிவெற்பில் உறைவோனே - மிகுந்த ஒளிவீசும் அமுத கலைகளை யுடையவனாயிருந்த சந்திரனைச் சடாமுடியில் தரித்து அவனைக் காப்பாற்றி யருளிய சிவபெருமான் உனக்குச் சிஷ்யனாக நிற்கவேண்டுமென ஆசை கொண்ட ஸ்தலமான சுவாமிமலையில் எழுந்தருளியிருப்பவனே!, அருள் செய் தாதை - நின்னை உலகத்துக்கு (ஞான குருவாகத்) தந்தருளிய தந்தையாகிய சிவபெருமான், கற்க வினவ - தான் கற்றுக்கொள்ள (இச்சைப்பட்டதாகக் கூறி) அது யாதென கேட்டருளியபோது, ஞான வித்தை விரைய ஓதுவித்த - ஞான

மாகிய கல்வியைச் சீக்கிரத்தில் கற்பித்த, பெருமாளே — பெரியோனே ! மகர கேதனத்தன் உருவிலான் - மீனைக் கொடியாகவுடையவனும் உருவ மில்லாதவனு மான மன்மதன், நெறி சேர்வார் — தான் இருக்கு மிடத்துக்கு வரும் வழியில் வந்து சேர்பவர்கள், மலையவே — புத்தி தடுமாறும்படி, மதுர நாணியிட்டு - இனி மையாகப் பாடும் வண்டுகளாலாகிய நாண்கயிற்றைப் பூட்டி யிழுத்து, வளைத்த சிலையினூடு ஒளித்த - (அம்புகளை விடுவதற்காக) வளைக்கும் வில்லுக்குள் மறைந் திருக்கும், வலிய சாயக கண் மடமாதர் - வலிமை பொருந்திய அம்புகளையொத்த கண்களை யுடைய அழகிய மாதர்கள், இதழ - நிந்திக்கும் வண்ணம், வாசமுற்ற தலையெலாம் வெளுத்து - ஒரு காலத்தில் (வாசனைத் தைலங்கள் இடப்பெற்று, வாசனை வீசிய தலைமயிரெல்லாம் நரைத்து, இளமைபோய் ஒளித்து விடுமாறு - இளமைப் பருவம் நீங்கிப் போனவிடம் தெரியாதபடி ஒளித்துக்கொள்ளும்படி, இடை விடாது எடுத்த பிறவி வேர் அறுத்து - ஓயாமல் இப்புவியில் பிறப்பதன் காரணமான வேரான வினைப்பயனை யொழித்து, உன் இனிய தாள் அளிப்பது ஒருநாளே - உனது இனிமையான பாதாரவிந்தங்களை அடியேனுக்குத் தந்தருளப் போகிற நாளும் உண்டோ ?

(வி - ரை) தீனரக்ஷகனாகிய முருகப்பெருமான் தம்மைச் சரணடைந் தோர்கள் துயரம் பொறுக்காமல் தம்மைக் கூவி யழைத்த நேரத்தில் அவர்க ளிருக்கு மிடத்தை அடைந்து அவர்களைக் காக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் உக்கிரமான வேகமுடையதும் மிகுந்த வல்மை பொருந்தியதுமான மயிலின்மீது எப்போதும் வீற்றிருக்கிறார். சுவாமிகள் மயிலை வருணிக்கும் இடங்களிலெல் லாம் அதன் வலிமையையும் வேகத்தையுமே பெரிதும் புகழ்ந்திருக்கிறார். " பக் கரை விசித்ரமணி பொற்கலணை யிட்டநடை பக்ஷியெனும் உக்ர துரகமும்" என்றும்,

" அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்த மோகர மயிலினி லியலுடன் வரவேணும் " என்றும்,

- - - - - இருதிசை - இருநாலும்
படியு நெடியன எழுபுண ரியுமுது
திகிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வருமொரு மரகத துரகத மிசையேறி " என்றும்,

" (பாரதம்) எழுதிய பவளக் குன்று தாதையை யன்றுசூழ
வலம்வரு மளவிற் சண்ட மாருத
விசையினும் விசையுற் றெண்டி சாமுக
மகிதல மடையக் கண்டு மாசுண முண்டுலாவு
மரகத கலபச் செம்புள் வாகன(ம்) என்றும்,

பல திருப்புகழ்ப் பாடல்களில் மயிலை வருணித்திருப்பதைக் காண்க. அவ்வளவு வலிமையும் வேகமும் உள்ள மயிலை வாகனமாக எப்போதும் உபயோகிக்க வல்லவன், அன்று உலகங்களிலெல்லாம் சென்று எதிர்ப்பட்டவைகளை யெல்லாம் அழித்த ஆட்டுக்கடாவை நாரதமாமுனிவர் வேண்டுகோளின்படி வாகனமாக்கிக் கொண்ட வீரனை யன்றி வேறு யாருளர்? அகங்காரத்தை அடக்கி யாண்டு சன்மார்க்கத்திற் செலுத்தி நன்மை விளைவிக்கும்படி செய்யக்கூடியது ஞானம் ஒன்றேயல்லவா?

அமுதத்தைப் பொழியும் பூரண கலைகளும் ஒருநாளும் குறைவடையாமல் பிரகாசித்துக்கொண்டிருந்த சந்திரன் தன் மாமனாரான தக்ஷனால் சாபமளிக்கப் பெற்று, பதினைந்து கலைகளை யிழந்து ஒரு கலையே மிஞ்சி அதுவும் மறுநாள் தொலைந்து போகும்படியிருந்த சமயத்தில், ஞானமில்லாததனால் இந்திரனிடமும் பிரமதேவரிடமும் சென்று தன்னைக் காத்தருளும்படி வேண்டினான். அவர்கள் தம்மால் அவ்வாறு செய்ய முடியாதென்று சொல்லி சர்வேசுரரான சிவபெருமானது பாதமலர்களில் அடைக்கலம் புகும்படி புத்திகூறி அனுப்பினார்கள். அப்போது சந்திரன் வேறு கதியில்லாமல் தீனனாய் எம்பெருமானிடம் சென்று அவரது பாதங்களில் வீழ்ந்து தன்னைக் காத்தருளும்படி வேண்டினான். உடனே கருணைக் கடலாகிய முக்கண்ணனை அவனுக்கு அபயமளித்ததுமன்றி, தமது சரணங்களைத் தவிர புகலிடம் வேறில்லை யென்ற திடமான நம்பிக்கையோடு தம்மைச் சரண்புகுவோர் யாவரேனும், எவ்வளவு கொடிய பாபத்தைச் செய்தவரேனும், அவரது பகைவர்கள் எவ்வளவு மகிமையுடையவர்களா யிருப்பினும், அவ்வாறு சரண்புகுந்தவர்களுக்கு அபயமளித்து அவர்களைக் காப்பது சத்தியமென உலகத்தோர் யாவரும் தமது திருவுருவத்தைக் காணும்போதெல்லாம் உணர வேண்டுமென்னும் கருத்துடன், சந்திரனது எஞ்சிய ஒரு கலையைத் தமது சடாமுடியின் முன்பக்கத்தில் நிலையாக வைத்துக்கொண்டருளினார். அப்படிப்பட்ட கருணைக்கடலான கடவுள் ஞானசொரூபியான குமாரசுவாமியைத் தமக்குப்பிரணவத்தின் பொருளை உபதேசிக்கும்படிசெய்து மகிழவேண்டுமென ஆசைகொண்டு அப்பொருளை எவரும் குருவாக நின்று சிஷ்யனுக்கு உரைக்கலாமே யல்லாது வேறுவிதமாக எடுத்துரைத்தல் தகாதாகையினால், தமது செல்வப் புதல்வனைக் குருவாக அமர்த்தித் தாம் சிஷ்யனாக நின்று கேட்டார். பதி பசு பாசம் இவைகளின் தன்மையும் இவைகளுக்குள் ஏற்பட்டுள்ள சம்பந்தமுமே பிரணவத்தில் அடங்கிய பொருளென்பதை சுவாமிகள் ஒரு பாடலில், "பதி பசு பாசத்தீர்வினை முதிய புரார்ரிக்கோதிய குருவே!" என்று எம்பெருமானை விளித்துக் குறிப்பாகக் காட்டியருளி யிருக்கிறார். ஜீவாத்மாவானது தனது கால்களிலிட்ட தளைகளான மும்மலங்களை யகற்றிக்கொண்டு பரமனை அடையும் மார்க்கத்தை அறிவதே ஞானம் என்று கந்தபுராணம் தக்ஷகாண்டத்தில் கூறியிருப்பதையும் காண்க.

மன்மதனுக்கு அடிமையாவதனால்தான், ஜீவன் பஞ்சமகா பாதகங்களையும் செய்யத் தயாராக நின்று, வினைகளை அளவும் வரம்பும் இல்லாமல் செய்து மீண்டும் மீண்டும் பிறந்திறந்து நொந்து மெலிவதற்கு வழி தேடிக் கொள்ளுகிறது. அப்படி மீண்டும் மீண்டும் பிறவியில் புகுத்தும் கருவினையை அழிக்கவல்லவர் கடவுள் ஒருவர்தாம் என்பதைச் சுவாமிகள் பலவிடங்களிற் கூறியுள்ளார்.

“ தவியாமல் பிறப்பையு நாடி
அதுவே யையறுத் தனையோதி
தலமீதில் பிழைத் திடவேநி னருள்தாராய் !”

என்று கூறியிருப்பதைக் காண்க. (௧௬)

தனனதான தனதனந்த தனனதான தனதனந்த
தனனதான தனதனந்த — தனதானா.

முருகுகாள விடமயின்ற இருகண்வேலி னாலமயங்கி
முளரிவேரி முகையடர்ந்த முலைமீதே

முழுகுகாதல் தனைமறந்து பரமஞான வொளிசிறந்து
முகமொராறு மிகவிரும்பி அயராதே

அறுகுதாளி நறையவிழ்ந்த குவளைவாச மலர்கரந்தை
அடையவாரி மிசைபொழிந்து னடிபேணி

அவசமாகி யுருகுதொண்ட ருடனதாகி விளையுமன்பி
னடிமையாகு முறைமையொன்றை அருள்வாயே !

தறுகண்வீரர் தலையரிந்து பொருதசூர னுடல்பிளந்து
தமரவேலை சுவறவென்ற வடிவேலா

தரளமூர லுமைமடந்தை முலையிலாத அமுதமுண்டு
தரணியேழும் வலம்வருந்தின் மயில்வீரா !

மறுவிலாத தினைவிளைந்த புனம்விடாம லிதணிருந்து
வலியகாவல் புனையணங்கின் மணவாளா !

மருவுஞாழ லணிசெருந்தி யடவிசூத வனநெருங்கி
வளர்சுவாமி மலையமர்ந்த பெருமாளே ! (௧௭)

(பதவுரை) தறுகண் வீரர் தலை அரிந்து - எதற்கும் அஞ்சாத தீரர்களான சூரபதுமனைச்சேர்ந்த சிங்கமுகாசுரன் முதலிய வீரர்களுடைய தலைகளை வெட்டி,

பொருத சூரன் உடல் பிளந்து-எதிர்த்துப் போர்செய்த சூரபதுமனது தேகத்தை இரு கூறுகளாகப் பிளந்தும், தமர வேலை சுவர-மிகுந்த ஒலி யுண்டாகுமாறு கோஷிக்கும் கடலிலுள்ள நீர் முற்றிலும் வறண்டு போகும்படி செய்தும், வென்ற வடிவேலா - வெற்றியடைந்த உடித்துக் கூர்மையாகவுள்ள வேலா யுதத்தை யுடையவனே ! தரள மூரல் உமை மடந்தை முலையில் ஆர அமுத முண்டு - முத்துக்களையொத்த பற்களையுடைய உமாதேவியாரது தனபாரங்களி லிருந்து பெருகிய அருமையான அமுதத்தையுண்டு, (வலிமைபெற்று), தரணி ஏழும் வலம்வரும் திண் மயில் வீரா - ஏழு உலகங்களையும் (நொடிப்பொழுதில்) வலமாகச் சுற்றிவந்த வலிமை பொருந்தியதும் மயிலை வாகனமாக உடையவனு மான வீரனே !, மறு இலாத தினை விளைந்த புனம் விடாமல் இதண் இருந்து - குற்றமற்ற தினைப்பயிர் விளைந்துநின்ற புனத்தைவிட்டு அகலாமல் அங்கேயே பரண்மீது இருந்துகொண்டு, வலிய காவல் புனை அணங்கின் மணவாளா - கடுமை யாகக் காக்கும் தொழிலை மேற்கொண்ட பெண்ணான வள்ளிநாயகியை மணந்து கொண்டவனே !, மருவு ஞாழல் அணி செருந்தி யடவி சூத வன(ம்) நெருங்கி வளர் - அடர்ந்து வளரும் கோங்கு மரங்களும் அழகிய செருந்தி மரமும் வளர்ந் துள்ள காட்டுக்கும் மாமரங்கள் நிறைந்த வனத்துக்கும் அருகில் உயர்ந்து வளர்ந் துள்ள, சுவாமிமலை அமர்ந்த பெருமாளே - சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் பெருமாளே !, முறுகு காளவிடம் அயின்ற இருகண் வேலின் - முதிர்ந்த காள கூட விஷத்தை யுண்டாற்போல் கறுத்திருப்பனவைகளும் வேலை யொத்தனவைகளு மான இரண்டு கண்களைக்கண்டு, உள மயங்கி - மனம் மயக்கமடையப்பெற்று, முளரி வேரி முகை அடர்ந்த முலைமீதே - தாமரையின் தேன்பொருந்திய மொட்டுகளைப்போல் உள்ள தனங்களின்மீது, முழுகு காதல் தனை மறந்து - (சதா காலமும்) படிந்து அவைகளை யனுபவிப்பதிலேயே மூழ்கியிருக்க வேண்டு மென்ற ஆசையை யொழித்து, பரம ஞான வொளி சிறந்து - பரம்பொருளை அடைவதற்குரிய ஞானமானது அடியேன் மனத்தில் சிறப்பாய்ப் பிரகாசிக்கப் பெற்று, முகம் ஒரு ஆறு(ம்) மிக விரும்பி-நினது ஆறு திருமுக மலர்கள்மீதும் மிகுந்த ஆசை யுடையவனாகி, அறுகு தாளி நறை அவிழ்ந்த குவளை வாசமலர் கரந்தை - அறுகு என்னும் புல் தாளியென்னும் ஒருகொடி(யின் மலர்)தேன் பெருகப்பெற்று வாசனை பொருந்தியுள்ள குவளை மலர்கள், கரந்தை என்னும் பூண்டு, (இவைகளை), அடைய வாரி - எல்லாம் ஏராளமாய் வாரி, அயராதே- சோர்வடையாமல், உன் அடி மிசைபொழிந்து பேணி - நினது பாதாரவிந்தங் களின்மீது சொரிந்து அருச்சித்து வணங்கி, அவசமாகி உருகு தொண்டர் உடனதாகி - தம்மை மறந்து நினது அன்பின் வசமாகி மனமுருகும் மெய்யடி யார்களுடன் கூடி, விளையும் அன்பின் - (அப்படி அவர்களுடன் கூடுவதனால்) உண்டாகும் அன்பினால், அடிமையாகு(ம்) முறைமை ஒன்றை அருள்வாயே - நினது அடிமையாகும் நன்னெறி ஒன்றை அடியேனுக்குக் காட்டியருள்வாயே !

(வி-ரை) சூரபதுமன் மாயையின் உதவியினால் பலவிதச் சொரூபங்களை எடுத்துக்கொண்டு எம்பெருமானுடன் போர் புரிந்து களைத்துக் கடைசியில் கடலுக்குட் சென்று ஒளிந்துகொண்டான். அகங்காரமானது பலவிதச் சொரூபங்களை எடுத்துக்கொண்டது. பிறகு சமுசாரமான கடலுக்குள் போய் ஒளித்துக்கொண்டது. ஆராய்ந்து பார்த்தால் இது உலக வியல்பு என்பது எளிதில் விளங்கும். ஒருவன் அகங்காரம் மிகுதியாக உடையவனாய், பல விஷயங்களில் அகங்காரத்தைச் செலுத்தி ஜயமடைய முயலுகிறான். அவன் தன் பலத்தைக் கொண்டு காரியத்தைச் சாதித்துக்கொள்ள முயலுவதனால், காரியம் கைகூடுவதில்லை. அப்போது அகங்காரத்தின் உபயோகமின்மையை எடுத்துக்காட்டினால், அவன் முடிவாகத் தனது குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய கடமையை ஈசன் தனக்கு விதித்திருப்பதனால், தான் அகங்காரத்தை முற்றிலும் ஒழித்துவிடமுடியாது என்று கூறுகிறான். அதுபோலவே சூரபதுமனும் சமுத்திரத்தில் மறைந்துகொண்டான். முருகப்பெருமானது வேலாயுதம் சென்று சமுத்திரத்தின் நீர் முற்றிலும் வறண்டுபோகும்படி செய்தது. சமுத்திரம் ஒழிந்தது. சூரபதுமன் தன்னை மறைத்துக்கொள்ள இடமில்லாமல் பல கிளைகளுடன் ஓங்கி வளர்ந்துள்ள மாமரமாகி நின்றான். உடனே ஞானசக்தியாம் வேலாயுதம் அவ்வுருவத்தைப் பிளந்து அழித்தது. பிறகு அவன் தன் சுய வுருவத்துடன் வந்தான். வேலாயுதம் அவனுருவத்தைப் பிளந்து இரு கூறுகளாகச் செய்தது. அவ்விரு கூறுகளும் சேவலும் மயிலுமாக மாற, அவை முதலில் எம்பெருமான்மேல் பாயக் கிளம்பி, எம்பெருமான் கடைக்கண் நோக்கத்தினால் ஞானம் அடைந்து நின்றன.

அப்படிப்பட்ட ஞானதேசிகனது தொண்டர் கூட்டத்தில் சேர்ந்தாலல்லது எம்பெருமானிடத்து அன்பு பாராட்டவும் மனமுருகவும் முடியாதென சுவாமிகள் இப்பாடலில் குறிப்பாய்த் தெரிவிக்கிறார். இதே கருத்தை **கந்தரலங்காரத்தில்**,

"சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் தொண்டர் குழாம்
சாரிற் கதியன்றி வேறிலை காண்!"

என்று வெளிப்படையாய்க் கூறியிருப்பதையும் காண்க. (௧௭)

*தானன தனத்த தாத்த தானன தனத்த தாத்த*
*தானன தனத்த தாத்த—தனதான.*

வார்குழல் விரித்துத் தூக்கி வேல்விழி சுழற்றிப் பார்த்து
வாவென நகைத்துத் தோட்டு குழையாட
வாசக முரைத்துச் சூத்ர பாவையெ னுறுப்பைக் காட்டி
வாசனை முலைக்கச் சாட்டி யழகாகச்

## 1. திருவேரகம் எனும் சுவாமிமலை — சுகூ

சீர்கலை நெகிழ்த்துப் போர்த்து நூலிடை நெளித்துக் காட்டி
தீமைய நடித்துப் பாட்டு குயில்போலச்

சேருற அழைத்துப் பார்த்து சார்வுற மருத்திட் டாட்டி
சீர்பொருள் பறிப்பொய்க் கூத்தர் உறவாமோ?

சூரர்கள் பதைக்கத் தேர்க்க ளானைக ளழித்துத் தாக்கி
சூர்கிரி கொளுத்திக் கூற்று ரிடும்வேலா!

தூமொழி நகைத்துக் கூற்றை மாளிட வுதைத்துக் கோத்த
தோலுடை யெனப்பர்க் கேற்றி கிரிவோனே!

ஏரணி சடைச்சிப் பாற்சொ லாரணி சிறக்கப் போற்று
மேரெழி னிறத்துக் கூர்த்த மகவோனே!

ஏடணி குழைச்சித் தூர்த்த வாடகி குறத்திக் கேற்ற
ஏரக பொருப்பிற் பூத்த பெருமானே! (கரு)

(ப - ரை) சூரர்கள் பதைக்க தேர்க்கள் (தேர்கள்) ஆனைகள் அழித்து - சூரபதுமன் முதலான அசுரர்களது மனம் பதைக்கும்படி அவர்களுடைய தேர்ப் படைகளையும் யானைப்படைகளையும் அழித்து, சூர் கிரி தாக்கி கொளுத்தி - சூரனையும் கிரௌஞ்சத்தையும் தாக்கி அவை தீப்படுமாறு செய்து, கூற்று (று)ர் இடும் வேலா - அவர்கள் எல்லோரையும் நமனுலகத்திற்சேர்த்த வேலாயுதத்தைக் கையிற் பிடித்தவனே, தூமொழி நகைத்து - தூய்மை பொருந்திய திருவாயில் நகைதோன்ற, கூற்றை மாளிட உதைத்து - இயமன் இறந்து விழும்படி அவனை உதைத்து, கோத்த தோல் உடை என் அப்பர்க்கு ஏற்றி - புலியையும் யானையையும் அழித்து அவைகளின் தோல்களையுரித்துத் தரித்துக்கொண்ட எனது தந்தையாகிய சிவபெருமானுக்கு (மெய்ப்பொருளை) உபதேசித்து, கிரிவோனே - குருசிஷ்ய நிலைமையில் மாறுதல் செய்தவனே!, ஏர் அணி சடைச்சி - மிகவும் அழகிய பின்னலை யுடையவரும், பால் சொல் ஆரணி - நன்மை பயக்கும் மொழிகளைப் பேசுபவரும் வேதத்தின் ஞானபாகத்தில் அமர்ந்திருப்பவருமான பார்வதிதேவியார், சிறக்க போற்றும்-சிறப்பாய்ப் புகழும், ஏர் எழில் நிறத்து கூர்த்த மகவோனே - அழகும் காந்தியும் மிகுதியாக உடைய குமாரனே!, ஏடு அணி குழைச்சி - பூவின் இதழ்களைக் காதுகளில் குழைகளைப்போல் அணிந்தவளும், தூர்த்த ஆடகி - முற்றிலும் பொன்னையொத்த தேகத்தை யுடையவளும், குறத்திக்கு - குறவர் குலத்தில் வளர்ந்தவளுமான வள்ளிநாயகிக்கு, ஏற்ற - ஏற்றவனும், ஏரக வெற்பில் பூத்த பெருமானே - சுவாமிமலையில் வந்து தோன்றியவனுமான பெரியோனே!. வார் குழல் விரித்துத் தூக்கி - நீண்ட கூந்தலைப் பரந்து காணப்படுமாறு தூக்கிச் சொருகியும், வேல் விழி சுழற்றி பார்த்து - வேலை

யொத்த கண்களின் விழிகளைச் சுழற்றி (ஆடவர் மனம் கலங்கும்படி) பார்த்து, வா என நகைத்து - வா என்று அழைத்துச் சிரித்து, தோட்டு குழை ஆட வாசகம் உரைத்து - தோடுகளுடன் காதுகளில் அணிந்த குழைகள் ஆடும்படி (தலையை மெல்ல அசைத்துப்) பேசி, சூத்ர பாவை என உறுப்பைக் காட்டி - (பொம்மலாட்டத்தில்) சூத்திரக் கயிற்றினால் கட்டிய பொம்மையானது (தனது அங்கங்களெல்லாம் யாவர்க்கும் தெரியுமாறு அவைகளை ஒளிபெறக்) காட்டுவதுபோல் தங்கள் கைகால் முதலிய உறுப்புக்களை அழகுபெறக் காட்டி, வாசனை முலைக்கச்சு ஆட்டி - வாசனைத் திரவியங்கள் பூசப்பெற்றவைகளும் கச்சு அணிந்தவைகளுமான தனங்களை (ச் சற்று) அசைத்துக் காட்டி, அழகாக சீர் கலை நெகிழ்த்து போர்த்து – அலங்காரமான புடவையை அழகாகத் தளர்த்திப் போர்த்துக் கொண்டு, நூல் இடை நெளித்து காட்டி - நூலைப்போல் மெல்லிய இடையை வளையச்செய்து (அதன் நுண்மையைக்) காட்டியும், தீது எய (எய) நடித்து - (தங்கள்) கெட்டஎண்ணத்துக்குப் பொருத்தமாய்ப் பாசாங்குசெய்து, பாட்டு குயில்போல - இனிமையாகப் பாடும் குயிலின் குரலையொத்த குரலுடன், சேர் உற - (தங்கள்மீது கொள்ளும் ஆசையாகிய) விலங்கைக் காலில் பூட்டிக்கொள்ளும்படி, பார்த்து - (ஆடவர் மனங்கலங்கும்படி அவர்கள் மீது காதல்கொண்டவர்போல்) பார்த்து, சார்வு உற மருந்திட்டு ஆட்டி – அவர்கள் தங்களிடம் வந்து சேர்ந்தவுடன் அவர்களுக்கு மருந்திட்டுத் தங்களிச்சைப்படி அவர்கள் ஆடும்படி செய்து, சீர்பொருள் பறி - அவர்களது நல்ல நிலைமையையும் கைப்பொருளையும் பிடுங்கும், பொய்க்கூத்தர் - வஞ்சகமாக நடிக்கும் விலைமாதர்களது, உறவு ஆமோ - சிநேகம் கொள்ளத்தக்கதோ? (தக்கதன்று என்றபடி.)

(வி - ரை) தாருகவனத்தில் கரும மார்க்கத்தில் நின்று வேள்வி முதலியவைகளைச் செய்துகொண்டு, ஈசன் அருள் இல்லாமலே கருமங்கள் பயனைத் தருமென்றும், அவைகளின் பயனைக் குறைக்கவாவது பெருக்கவாவது தடுக்கவாவது ஈசனுக்குச் சக்தியில்லையென்றும் வாதித்துவந்த முனிவர்களுக்குப் புத்தி புகட்டுமாறு, சிவபெருமான் தாம் அதிசுந்திர வடிவம் வாய்ந்த சந்நியாசியாக உருமாறி, திருமாலை மோகினி வேடம் தரித்துக்கொள்ளச் செய்து அவரையும் அழைத்துக் கொண்டுபோய்த் தாருகவனத்தை யடைந்து, திருமாலை அவர்கள் கருமங்களியற்றிய ஆசிரமத்துக்கு அனுப்பிவிட்டு, தாம் அம்முனிவர்களது வீடுகள் இருந்த தெருவுக்குச் சென்றார். தெருவில் பிச்சை கேட்டு வரும் சந்நியாசியின் உருவத்தைக் கண்டு மோகித்த அம்முனிவர்களின் பெண்டிர்கள் அவரைத் தொடர்ந்து சென்றனர். சிவபெருமான் அவர்கள் பின் தொடர முனிவர்களின் ஆசிரமத்துக்குச் சென்றார். அதற்குள் அங்குசென்ற திருமாலின் மோகினி வடிவத்தைக் கண்ட முனிவர்கள் காமமுற்று, கருமங்கள் செய்வதைவிட்டுத் திருமாலைப் பின் தொடர்ந்தார்கள். இரண்டு கூட்டங்களும் ஆசிரமத்தினருகில் சந்தித்தன. அப்போதுதான் அம்முனிவர்களுக்கு எம்பெருமான் செய்த சூது புலப்பட்டது,

உடனே அவர்கள் மகா கோபங்கொண்டு எம்பெருமானை அழித்துவிடவேண்டு மென்ற நோக்கத்துடன் ஒரு கொடிய ஓமம் செய்தார்கள். அந்த ஓமத்தீயி லிருந்து புலி, மான், மழு, சர்ப்பங்கள் பூதங்கள், வெண்டலை, உடுக்கை முயலகன், ஓமாக்கினி இவைகள் ஒன்றன்பின் ஒன்றாய்க்கிளம்பி எம்பெருமானை அழிக்க அவர்மீது பாய்ந்தன. எம்பெருமான் புலியைக் கொன்று அதன் தோலை யுரித்து அரையிற் கட்டியும், மான், மழு, உடுக்கை இவைகளைத் தமது திருக்கரங்களில் தரித்துக்கொண்டும், சர்ப்பங்களை ஆபரணங்களாகப் பூண்டும், வெண்டலையைச் சடையில் தரித்துக்கொண்டும், பூதங்களைத் தமது படைகளாகச் செய்துகொண்டும், முயலகனைப் பாதத்தினால் கீழேதள்ளி யழுத்திக்கொண்டும், ஓமாக்கினியை ஒரு கையில் ஏந்திக்கொண்டும் நின்றார். அப்போதுதான் அம் முனிவர்கள் ஈசுவரன் சர்வசக்தி வாய்ந்தவனென்றும், அவர் அருளில்லாமல் எவ் விதக் கருமமும் பயன் தராதென்றும் அறிந்துகொண்டார்கள்.

கயாசுரன் என்பவன் பிரமதேவரை நோக்கி அருந்தவமியற்ற, அவர் அவன் முன்னே தோன்றி, "நீ எதை வேண்டித் தவம் செய்கிறாய்?" என்று கேட்ட தற்கு, அவன் அழியாத பேராயுளும், ஆற்றலும், வெற்றியும் வேண்டுமெனக் கூற, அவர், "அவைகளை உனக்குத் தந்தோம்; ஆயினும், நீ சிவபெருமானை எதிர்ப்பாயாகில் அழிந்து போவாய்!" என்று சொல்லிப்போனார். அது முதல் அவ்வசுரன் வானுலகத்துக்குச் சென்று இந்திரனை வென்று துரத்தி, அமராவதி நகரத்தை அழித்து அஷ்டதிக்குப் பாலகர்களையும் துரத்தி, அசுரர்களையும் இராக்ஷதர்களையுங்கூட அழித்தான். பிறகு அவன் பூமிக்குச்சென்று மனிதர்களை வருத்தத் தொடங்கினான். தவமுனிவர்கள் அதுகண்டு காசியை யடைந்து விசுவ நாதருடைய ஆலயத்துக்குட் சென்று எம்பெருமானிடம் முறையிட்டனர். எம் பெருமான் சர்வசங்காரமூர்த்தி யுருவத்தை எடுத்துக்கொண்டு, மதிமயங்கித் தம்மை யெதிர்த்த கயாசுரனை ஒரு காலினால் தள்ளி மற்றொரு காலை அவன் தலைமீது வைத்து அழுத்தி அவன் தோலினை யுரித்தார். அச்சமயத்தில் உல கிலுள்ள உயிர்களனைத்தும் எம்பெருமானது திருமேனியின் பேரொளியைக் கண்ணுற் பார்க்கச் சக்தியற்றவைகளாய்த் தியங்கின. அதுகண்ட எம்பெருமான் கருணையினால் அந்த யானைத்தோலினால் தமது திருமேனியைப் போர்த்தி மறைத்தார். (கஅ)

தனதன தனனா தனனா
தனந் தனத்தம்—தனதானா

தேருநவினில் நடவா படவார்
திரண பொறுக்கும் வசையாலே
தினகர னெனவே லேயிலே
சிவந் துதிக்கும் மதியாலே

பொருசிலை வளையா இளையா
மதன் தொடுக்குங் கணையாலே
புளகித முலையா ளலையா
மனஞ் சலித்தும் விடலாமோ?
ஒருமலை யிருகூ றெழவே
யுரம் புகுத்தும் வடிவேலா!
ஒளிவளர் திருவே ரகமே
யுகந்து நிற்கும் முருகோனே!
அருமறை தமிழ்நூ லடைவே
தெரிந் துரைக்கும் புலவோனே!
அரியரி பிரமா தியர்கால்
விலங் கவிழ்க்கும் பெருமாளே! (கக)

(ப - ரை) ஒருமலை - கிரௌஞ்சமென்னும் மலையானது, இருகூறெழவே - இரண்டு கூறுகளாகப் பிளவுபடுமாறு, உரம் புகுத்தும் வடிவேலா — அதற்குள்ளே செல்லும்படி வடித்துக் கூர்மையாகவுள்ள வேலாயுதத்தைச் செலுத்தியவனே!, ஒளிவளர் திருவேரகம் உகந்து நிற்கும் — மிகுந்த ஒளிபெற்று விளங்கும் திருவேரகத்தின்மீது ஆசையுள்ளவனாய் அத்தலத்தில் எழுந்தருளியிருப்பவனே!, அருமறை தமிழ் நூல் அடைவே தெரிந்து உரைக்கும் புலவோனே - வடமொழியிலுள்ள அரிய வேதங்கள் தமிழ் நூல்கள் எல்லாவற்றையும் அறிந்து போதிக்கும் புலவனே!, அரி அரி பிரமாதியர் கால் விலங்கு - தேவேந்திரன் திருமால் பிரமதேவர் முதலிய தேவர்களுடைய கால்களில் பூட்டப்பெற்ற விலங்குகளை, அவிழ்க்கும் — கழற்றின, பெருமாளே - பெரியோனே!, தெருவினில் நடவா மடவார் திரண்டு ஒறுக்கும் வசையாலே-தெருவினில் உல்லாசமாக நடமாடும் பெண்கள் கூடித் திரண்டு கடிந்துபேசும் வசைச் சொற்களினாலும், தினகரன் என வேலையிலே சிவந்து உதிக்கும் மதியாலே - சூரியன் என்று சொல்லும்படி வெப்பமான கிரணங்களுடன் சமுத்திரத்திலிருந்து சிவந்த நிறத்துடன் உதிக்கும் சந்திரனாலும், பொரு சிலை வளையா இளையா மதன் தொடுக்கும் கணையாலே - போருக்குரிய வில்லை வளைப்பவனும் எவராலும் தோல்வி யடையாதவனுமான மன்மதன் விடும் அம்புகளினாலே, புளகித முலையாள் அலையா மனஞ்சலித்தும் விடலாமோ - விரக தாபத்தினால் புடைத்தெழும் தனபாரங்களையுடைய (நினது நாயகியான) அடியேன், கலக்கமுற்று மனச்சோர்வடைதல் தகுதியோ?

(வி - ரை) தேவேந்திரன், திருமால், பிரமதேவர் முதலிய தேவர்களது காலிலிட்டிருந்த விலங்குகளைக் கழற்றி, அவர்களைச் சிறையினின்றும் மீட்ட

பெரியோனே! வடமொழியிலுள்ள வேதங்கள் தென்மொழியிலுள்ள ஞானநூல்கள் இவைகளை யெல்லாம் உணர்ந்து போதிக்கும் ஞானகுருவே! மாயையின் சொரூபமான கிரௌஞ்ச மலையை இருகூறுகளாகப் பிளந்தெறிந்தவனே! அஞ்ஞானவிருள் நீங்கப்பெற்று ஞானவொளி வீசும் இதயத்தையே உறைவிடமாகக் கொண்டவனே! உன்மீது காதல் கொண்டுள்ள அடியேன் விரகதாபத்தினால் அயர்ந்து வாடுகிறேன். என் கால்களில் மும்மலங்களாகிய விலங்குகள் பூட்டப்பட் டிருக்கின்றன. ஆகையினால் நான் வந்து உன்னைச் சேர முடியவில்லை. அதை யறிந்திருந்தும் நீ அடியேனைக் கலங்கும்படி விட்டுச் சும்மாவிருத்தல் நீதியோ? அடியேன் இஷ்டப்பட்டா வந்து சேர்ந்தேன் மாயை நிறைந்த இவ்வுலக வாழ்க்கையில்? அதில் விழும்படி எனக்கு விதித்தது நீ யல்லவா? விலக்க வொண்ணாத தளைகளை அடியேன் கால்களிற் பூட்டி, பிறகு அத்தளைகளை நீக்கிக் கொள்ள முடியாமல் அடியேன் தியங்குவதைக்கண்டு அடியேனை வெறுத்தல் தகுதியோ? (௧௧)

தான தனதன தான தனதன
தான தனதன—தனதான.

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா!

பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம வருடிய மணவாளா!

காது மொருவிழி காக முற அருள்
மாய னரிதிரு மருகோனே!

கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே!

ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா

ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வரவரு மிளையோனே!

சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனி லுறைவோனே!

சூர னுடலற வாறி சுவறிட
வேலை விடவல பெருமாளே! (௨)

(ப - ரை) ஆதி அயனொடு தேவர் சுரர் உலகு ஆளும் வகையுறு சிறை மீளா - உலக சிருஷ்டிகாலத்தில் முதலில் சிருஷ்டிக்கப்பட்ட பிரமதேவருடன் மற்றுமுள்ள தேவர்கள் அனைவரும் வானுலகத்தில் (மீண்டும்) அரசுபுரியும்படி அவர்கள் அடைபட்ட சிறையினின்றும் அவர்களை விடுவித்து, ஆடு மயிலினில் ஏறி அமரர்கள் சூழவர - நிர்த்தனஞ்செய்யும் மயிலின்மீது ஏறி அமர்ந்து தேவர்கள் புடைசூழ்ந்துவர, வரும் இளையோனே - (பவனி) வரும் சிறுவனே !, சூத(ம்) மிக வளர் சோலை மருவு - மாமரங்கள் மிகுதியாக வளரப்பெற்ற சோலை பொருந்திய, சுவாமிமலைதனில் உறைவோனே - சுவாமி மலையின்மீது அமர்ந்திருப்பவனே, சூரன் உடல் அற வாரி சுவறிட வேலை விட வல பெருமாளே - சூரபதுமனது உடல் அழியும்படியும் சமுத்திரமானது வறண்டு போகும்படியும், வேலை விட வல பெருமாளே - வேலாயுதத்தைப் பிரயோகிக்கும் பராக்கிரமம் பொருந்திய பெரியோனே !, பாதி மதி நதி போதும் அணி சடை நாதர் அருளிய குமரேசா - பிறைச் சந்திரனையும் கங்கா நதியையும் கொன்றை மலரையும் அணிந்துள்ள சடா முடியையுடைய சர்வேசுவரராகிய சிவபெருமான் (உலகத்தோரது அஞ்ஞானத்தை நீக்குவதற்காகத்) தந்தருளிய குமாரக் கடவுளே !, பாகு கனி மொழி மாது குறமகள் பாதம் வருடிய மணவாளா - பாகையும் பழத்தையும்போல் இன்சுவை பொருந்திய சொற்களை மொழியும் குறவர் மகளான வள்ளி நாயகியின் பாதங்களைப் பிடித்து வணங்கிய அவளது நாயகனே !, காதும் ஒரு வழி காகம் உற அருள் மாயன் அரி திரு மருகோனே - ஒருகாதும் ஒரு கண்ணும் காகத்துக்கு உபயோகப்படும்படி அருள்செய்த மாயனாகிய ஹரியின் மருகனே !, காலன் எனை அணுகாமல் உனது இரு காலில் வழிபட அருள்வாயே - உனது இரு பாதார விந்தங்களை அடியேன் வணங்குமாறு அருள்புரிவாயே !

(வி - ரை) ஸ்ரீராமபிரான் ஒருவரைச் சங்காரஞ் செய்ய ஒரு முறையே கணை தொடுப்பதுபோலவே முருகப்பெருமானும் ஒருவரைச் சங்கரிக்க ஒரு முறைதான் வேலாயுதத்தைப் பிரயோகிப்பார். சூரபதுமன் பல வுருவங்களை யெடுத்துக்கொண்டு எம்பெருமானுடன் போர்செய்து தோற்றுக் கடைசியில் அந்தகாரத்தின் சொரூபமாய் நின்றான். அப்போது முருகப்பெருமான் நிகரற்ற ஒளிவீசும் வேலாயுதத்தைப் பிரயோகிக்க, அது சென்று தன் ஒப்பற்ற ஒளியினால் அந்த மாய விருளை ஒழித்து, சூரபதுமன் ஒளிந்துகொண்ட கடலை வறளச்செய்து, பிறகு அவன் எடுத்துக்கொண்ட மாமர உருவத்தை அழித்து, பிறகு அவன் சொந்த உருவத்துடன் தோன்றியபோது அவன் உடலைப் பிளந்து இரு கூறுகளாக்கி, பிறகு மீண்டுசென்று எம்பெருமானது கரத்தில் அமர்ந்தது.

ஜட மாயையிற் சிக்கித் தம்மை யறிந்து அடைய வழியறியாமல் தியங்கும் ஜீவனுக்குத் தம்மை அடையவேண்டுமென்ற இச்சைமட்டும் இருக்குமாயின், முருகப்பெருமான் தமது பெருமைக்குத் தகாத இழிவான காரியங்களையும் செய்யத் தயாராக விருக்கும் உண்மையை உலகத்தோருக்கு விளக்கும்பொருட்டே எம்

பெருமான் தமது மாமன் புத்திரியான சுந்தரவல்லியை அவள் தேவ சொரூபத்துடன் இருக்கையிலேயே மணம்புரியாமல், அவளை இரக்கமில்லாதவர்களும் இழிதொழிலைச் செய்பவர்களும் கொடியவர்களுமான வேடர்கள் குலத்தில் போய் வளரும்படி கட்டளையிட்டு, அத்தேவி ஜட மாயையினால் தனது பூர்வ நிலைமையை மறந்து, அவ்வேடர்கள் செலுத்தும் நெறியிலேயே நின்று ஒழுகி, எம்பெருமானை அடையும் மார்க்கத்தை நாடாது பொழுதை வீணே கழித்து வருகையில், தம்மை அடையவேண்டுமென்ற இச்சையை மட்டும் அவள் மனத்தில் ஊட்டி, தாம் வேற்றுருவம் தாங்கி அவள்முன் சென்று அவள்பாதங்களில் வீழ்ந்து பணிந்து தம்மை ஆதரித்துத் தமக்கு நாயகியாகும்படி பன்முறை வேண்டி, அவள் அதற்கு இசையாததனால், ஞானசொரூபியான தமக்கு மூத்தவரும் புத்தி சொரூபியானவருமான விநாயகக் கடவுளை அவளுக்கு முன்னே மதயானையின் உருவத்துடன் வந்து தோன்றும்படி செய்து, உலக வாழ்க்கை நித்தியமன்று அழியத்தக்கது, உற்றார் பெற்றார் கூற்றுவன் வாயில் அகப்படாமல் தப்புவிக்க முடியாது என்னும் உண்மைகளை அவளுடைய புத்தியிற் புகட்டி, பிறகு அவள் வேறு கதியின்றி மனப்பூர்வமாய்த் தம்மைச் சரணடையச்செய்து, அவளுக்குத் தமது திவ்ய சொரூபத்தைக் காட்டி அவளுடைய பூர்வ வரலாற்றை உரைத்து ஞானத்தைப் புகட்டி, பிறகும் தனது குடும்பத்தை விடமுடியாமல் வருந்திய அவளைத் திருடிச் சென்று பெருவாழ்வு அளித்தருளினார். வள்ளி நாயகியின்பால் எம்பெருமான் காட்டிய அன்பு அப்பெருமானது பாதமலர்களை அடைய விரும்பும் ஒவ்வொரு ஜீவனுக்கும் கிடைக்கும் என்பதே கந்தபுராணத்தின் சாரமாகும். புராணத்தை நம்பி இவ்வுண்மையை உணர்ந்து எம்பெருமானது அருளைப்பெற முயலுவதே ஜீவர்களுக்கு நன்மை பயக்கும் நெறி.

வனவாச ஆரம்பத்தில் சித்திரகூட பர்வதத்தில் ஏகாந்தமான ஓர் இடத்தில் ஸ்ரீராமபிரான் சீதையின் மடியின்மீது தலையை வைத்துப் படுத்துறங்கத் தொடங்கினார். அப்போது ஓர் இராக்ஷதன் ஒரு காக்கையின் வடிவெடுத்து சீதையை அலகினால் கொத்தத் தொடங்கினான். அதனால் ஏற்பட்ட துன்பம் பொறுக்க முடியாததாக இருந்தும் சீதாப்பிராட்டியானவள் தனது நாயகன் தூக்கத்துக்குப் பங்கம் நேரிடக் கூடாதென்று அத்துன்பத்தைப் பொறுத்துக் கொண்டு அசையாமல் உட்கார்ந்திருந்தாள். ஆனால் அவ்வரக்கன் கொத்தினதனால் சீதாப்பிராட்டியின் தேகத்திலிருந்து பெருகிய இரத்தம் ஸ்ரீராமர்மீது வீழ்ந்ததும், அவர் கண்விழித்து, சீதையின் துன்பத்தைக் கண்டு, அப்போதும் ஓயாமல் கொத்திக்கொண்டிருந்த காகத்தின்மீது மிகுந்த கோபங்கொண்டு, அருகேயிருந்த சிறு புல் ஒன்றை எடுத்துப் பிரமாஸ்திர மந்திரத்தை உச்சரித்து அப்புல்லைக் காக்கையின்மீது விட்டார். இராமபாணம் சீறிக்கொண்டு தன்னைக் கொல்ல வந்ததைக்கண்ட அக்காக்கை நடுநடுங்கி, பிரபஞ்ச முழுவதும் ஓடி, பல தேவர்களையும் தன்னைக் காக்கும்படி வேண்டி, அவர்கள் தம்மால் இயலாதென்

றும் ஸ்ரீராமபிரானையே சரண்புகுமாறும் கூறியதைக் கேட்டு, நிர்க்கதியாகத் திரும்பிச்சென்று ஸ்ரீராமரது பாதங்களிலேயே அடைக்கலம் புகுந்தது. அப்போது உலகமாதாவாகிய சீதாபிராட்டியும் தன் துன்பத்தை மறந்து அக்காக்கையைக் காத்தருளும்படி ஸ்ரீராமரை வேண்ட, அவர் அதன் கண்களிலொன்றையும் காதுகளிலொன்றையும் மட்டும் பறித்து உயிரைக் கொடுத்தருளினார். ஆகையினால் காக்கைகளுக்கு இப்போது ஒரு கண்ணும் ஒரு காதுமே உபயோகப் படுகின்றன.

உலகிலுள்ள அஞ்ஞானத்தை அகற்றவே ஞானதேசிகராய் அவதரித்த முருகப்பெருமான் தமது மலர்க்கரத்தில் ஏந்திய ஞானசக்தியாம் வேலாயுதத்தின் மகிமை இப்பாடலிற் குறிப்பாய்க் கூறப்பட்டிருக்கிறது. அகங்கார சொரூபியான சூரபதுமன் பலவுருவங்களை எடுத்துக்கொண்டு, முருகப்பெருமானுடன் போர்புரிய மாட்டாதவனாய், அஞ்ஞானத்தின் உருவமான அந்தகாரச் சொரூபத்தை எடுத்துக்கொள்ள, அப்பெருமான் ஆயிரம் உதயகால சூரியர்களின் ஒளியை வீசும் வேலாயுதத்தைப் பிரயோகிக்க, அது அவ்வந்தகாரவிருளை யகற்றி, பிறகு அவன் எடுத்துக்கொண்ட உருவமான மாமரத்தைப் பிளந்து, பிறகு அவன் தன் சுயவுருவத்துடன் வந்தபோது அதையும் இருகூறுகளாக்கி, எம்பெருமானது கரத்துக்கு மீண்டு, ஓர் அஞ்ஞானத்தைச் சங்கரிப்பதற்கு அறுமுகப்பெருமான் தமது வேலாயுதத்தை ஒரு முறையேயன்றிப் பலமுறை பிரயோகிப்பதில்லை யென்னும் உண்மையை விளக்கிக் காட்டிற்று. (௨௦)

தனத்த னந்தன தனதன தனதன
தனத்த னந்தன தனதன தனதன
தனத்த னந்தன தனதன தனதன — தனதான.

விரித்த பைங்குழ லொளிர்மல ரளிதன
தனத்த னந்தன தனதன வெனவொலி
விரிப்ப வண்கயல் விழியுறை குழையொடு மலைபாய

மிகுத்த வண்சிலை நுதல்மிசை திலதமொ
டசைத்த பொன்குழை யழகெழ முகவொளி
வெயிற்ப ரந்திட நகையிதழ் முருகலர் வரிபோத

தரித்த தந்திரி மறிபுய மிசைபல
பணிக்கி லங்கிய பரிமள குவடிணை
தனக்கொ ழுந்துகள் ததைபட கொடியிடை படுசேலை

தரித்து சுந்தர மெனஅடர் பரிபுர
பதச்சி லம்பொடு நடமிடு கணிகையர்
சழக்கர் விஞ்சையர் மயல்களின் முழுகுவ தொழியாதோ?

# 1. திருவேரகம் எனும் சுவாமிமலை

உரித்த வெங்கய மறியொடு புலிகலை
தரித்த சங்கரர் மதிநதி சடையினர்
ஒருத்தி பங்கின ரவர்பணி குருபர முருகோனே!

உவட்டி வந்திடு மவுணரொ டெழுகடல்
குவட்டை யுட்பொடி படசத முடிவுற
வுழைத்த இந்திரர் பிரமனு மகிழ்வுற விடும்வேலா!

வரித்த ரந்துள வணிதிரு மருவிய
வுரத்த பங்கயர் மரகத மழகிய
வணத்த ரம்பர முறவிடு கணையினர் மருகோனே!

வனத்தில் வந்தொரு பழையவ னெனவொரு
குறத்தி மென்புன மருவிய கிளிதனை
மயக்கி மந்திர குருமலை தனிலமர் பெருமாளே! (உக)

(ப - ரை) உரித்த வெம் கய(ம்) மறியொடு புலிகலை தரித்த சங்கரர் - கொடிய யானையை உரித்த தோலைப் போர்த்துக்கொண்டு மானைக் கையிலேந்திப் புலியாடையை அரையில் அணிந்துகொண் டிருக்கும் சங்கரரும், மதி நதி சடையினர்-சந்திரனையும் கங்காநதியையும் சடாமுடியில் தரித்தவரும், ஒருத்தி பங்கினர் அவர்-உமாதேவியாரைத் தமது வாமபாகத்தில் அமர்த்தியுள்ளவருமான சிவபெருமான், பணி குருபர - வணங்கும் பரகதிக்குரிய குருவே!, முருகோனே - ஞான வாசனை வீசுபவனே!, உவட்டி வந்திடும் அவுணரொடு எழுகடல் குவட்டையும் பொடிபட - திரண்டுவந்து எதிர்த்த அசுரர்களும் ஏழு சமுத்திரங்களும் சிகரமுடைய மலையும் தூளாகுமாறு, சதம் முடிவுற - நூறு அசுவமேத யாகங்கள் முடிவாகுமாறு, உழைத்த இந்திரர் - உழைத்த இந்திரனும், பிரமனும் - பிரமதேவனும், மகிழ்வுற விடும் வேலா - மகிழ்ச்சி யடையுமாறு வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே!, வரி தரம் துளவு அணி - வண்டுகளின் கூட்டங்கள் மொய்க்கப்பெற்ற திருத்துழாய் மாலையை அணிந்தவரும், திரு மருவிய உரத்த பங்கய - இலக்குமியானவள் வீற்றிருக்கும் தாமரையைத் தமது தேகத்தில் (மார்பின் கண்) அணிந்திருப்பவரும், மரகதம் அழகிய வணத்தர் - அழகிய பச்சை மேனியை யுடையவரும், அம்பரம் உறவிடு கணையினர்-சமுத்திரத்தின் மீது அம்பு எய்தவருமான திருமாலின், மருகோனே-சகோதரியின் புத்திரனே!, வனத்தில் ஒரு பழையவன் என வந்து - காட்டில் ஒரு கிழவனது உருவத்துடன் வந்து, ஒரு குறத்தி மென்புன(ம்) மருவிய கிளிதனை - குறக்குலத்தில் வளர்ந்தவளும் அழகிய தினைப்புனத்தில் அமர்ந்தவளுமான கிளியையொத்த வள்ளி நாயகியை, மயக்கி - மிகவும் அழகிய வடிவத்தினால் மனமயங்கச்செய்து, மந்திர

குருமலைதனில் - ஒப்பற்ற மந்திரமான பிரணவத்தின் பொருள் உபதேசிக்கப் பட்ட சுவாமிமலையில், அமர் பெருமாளே-எழுந்தருளிய பெரியோனே!, விரித்த பைங்குழல் ஒளிர் மலர்-பரவித் தொங்கும் மென்மையான கூந்தலில் பிரகாசிக்கும் மலர்களிலுள்ள, அளி - வண்டுகள், தன தனத்த னந்தன தனதன வென ஒலி விரிப்ப - தன தனத்த னந்தன தனதன வெனப் பாடி எங்கும் சப்தம் நிறையும்படி செய்யவும், வண் கயல்விழி யுறை குழையொடும் அலைபாய - நன்றாய் வளர்ந்த கயல்மீனையொத்த விழிகள் காதிலுள்ள குழைகள் வரையில் அலைபோல் பாய்ந்து மீண்டு சஞ்சலமடையவும், மிகுத்த வண்சிலை நுதல் மிசை திலதமொடு - அடர்ந்து வளர்ந்து வில்லைப்போல் வளைந்திருக்கும் புருவங்களை யுடைய நெற்றியின்மீது விளங்கும் திலகத்தோடு, அசைத்த பொன்குழை அழகு எழ - (போட்டியாய்) அணிந்த பொன்னலாகிய குழைகள் அழகாய்த் தோன்றவும், முக வொளி வெயில் பரந்திட - முகத்தின் ஒளியானது எங்கும் பிரகாசம் வீசவும், நகை இதழ் முருகு அலர் வரிபோத - வாசனை பொருந்திய மலர்களை யொத்த புன்னகை விளங்கும் உதடுகளிலிருந்து இன்னிசையான மொழிகள் உதிக்கவும், தரித்த தந்திரி மறி புயமிசை - உடுத்தியுள்ள அழகிய புடவையானது மடங்கும் இடமான தோள்களின்மீது (அணிந்த), பல பணிக்கு இலங்கிய பரிமள குவடிணை - பல ஆபரணங்களினால் விளங்கி வாசனை வீசும் இருமலைகளை யொத்த, தனக்கொழுந்துகள் - இளமை பொருந்திய தனங்கள், தலைபட-தோன்றாமல் மறையும்படி, கொடியிடை படு சேலை தரித்து - கொடியை யொத்த நுண்ணிய இடையிற் கட்டிய ஆடையைத் தரித்து, சுந்தரம் என அடர் பரிபுர பதச் சிலம்பொடு நடமிடு - அழகின் வடிவம் இவள் தானோ என்று மயங்கும்படி தண்டைகளையும் சிலம்புகளையும் அணிந்த பாதங்களோடு அழகாய் நடமாடும், கணிகையர் சழக்கர் விஞ்சையர்-விலைமாதர்களான கபடமும் மாயமும் பொருந்திய பெண்களின் (மீது கொள்ளும்), மயல்களின் முழுகுவது ஒழியாதோ - ஆசைகளில் மூழ்குவது நீங்காதோ?

(வி - ரை) இக்ஷ்வாகு மரபில் திலீபன் புத்திரனாய் உதித்த பகீரதன் தனது பாட்டன்மார்களும் சகரன் புத்திரர்களுமான அறுபதினாயிரம் பேர்கள் கபிலர் சாபத்தினால் நற்கதியடையாமல் பாதாளலோகத்தில் சாம்பராய்க் கிடந்ததை யுணர்ந்து, அவர்களைக் கரையேற்றுவதற்காக ஆகாய கங்கையை நோக்கித் தவஞ்செய்து, கங்கையைக் கீழேயிறங்க மனமிசையச் செய்து, கங்கை ஆகாயத்திலிருந்து நேராகப் பூமியின்மீது பாய்ந்தால் பூலோகத்துக்குப் பெருங்கெடுதி உண்டாகுமேயென்று பயந்து, சிவபெருமானை நோக்கித் தவம்புரிந்தான். அப்பெருமான் அருள்கூர்ந்து ஆகாயத்திலிருந்து வந்த கங்காநதியைத் தமது சடாமுடியில் அடக்கி அவனது வேண்டுகோளின்படி சிறிதளவு பூமியில் பாயும்படி செய்தருளினர். அந்தக் கங்காநதியின் புனித தீர்த்தத்தினால் பகீரதன் தனது மூதாதையர்களின் சாம்பரை நனைத்து அவர்களை நற்கதி அடையச் செய்தான்.

தானதந் தனதனன தனதனு தத்த தந்த—தனதானு.

நாசர்தங் கடையதனில் விரவிநான் மெத்த நொந்து தடுமாறி
ஞானமுங் கெடஅடைய வழுவியா ழத்த ழுந்தி மெலியாதே

மாசகந் தொழுமுனது புகழினோர் சொற்ப கர்ந்து சுகமேவி
மாமணங் கமழுமிரு கமலபா தத்தை நின்று பணிவேனோ?

வாசகம் புகலவொரு பரமர்தா மெச்சு கின்ற குருநாதா!
வாசவன் தருதிருவை யொருதெய்வா னைக்கி ரங்கு மணவாளா!

கீசகஞ் சுரர்தருவு மகிழுமா வத்தி சந்து புடைசூழுங்
கேசவன் பரவுகுரு மலையில்யோ கத்த மர்ந்த பெருமாளே.(உஉ)

(ப - ரை) வாசகம் புகல - பிரணவத்தின் பொருளை நீ கூறியபொழுது, ஒரு பரமர்தாம் மெச்சுகின்ற - ஒப்பற்ற பரம்பொருளாகிய சிவபெருமானே நின்னைப் புகழும்படியான (பெருமைவாய்ந்த), குருநாதா - (ஞானத்தைப் போதிக்க) குருவாக வந்த நாயகனே!, வாசவன் தரு(ம்) திரு (ஐசுவரியை) - இந்திரன் பெற்ற மகளும் இலக்குமியை ஒத்தவளுமான, ஒரு தெய்வானைக்கு இரங்கு மணவாளா - ஒப்பற்ற தெய்வானை யம்மையின்பால் மிகுந்த காதல்கொண்டு அத் தேவியாரை மணந்துகொண்டவனே!, கீசகம் சுரர் தருவும் மகிழும் மா அத்தி சந்து புடைசூழும் - மூங்கிலும் தேவதாரமும் மகிழமரமும் மாமரமும் அத்திமரமும் சந்தன மரமும் சுற்றிலும் வளர்ந்திருக்கப்பெற்றதும், கேசவன் பரவு - திருமாலினால் வலம்வரப் பெற்றதுமான, குருமலையில் யோகத்து அமர்ந்த பெருமாளே - சுவாமிமலையில் சிவயோக நிலைமையில் அமர்ந்திருக்கும் பெரியோனே!, நாசர் தம் கடையதனில் விரவி - அழிந்து போகும் இயல்புள்ள மானிடர்களுடைய வீடுகளின் கடைவாயிலிற்போய் நின்று, நான் மெத்த நொந்து தடுமாறி - நான் மிகவும் வருந்திக் கலக்கமுற்று, ஞானமும் கெட - மெய்யறிவும் அழியப்பெற்று, அடைய வழுவி ஆழத்து அழுந்தி - எல்லா விஷயங்களிலும் சரியான மார்க்கத்தை விட்டுத் தவறி நடந்து பவசாகரத்தில் ஆழ்ந்து மூழ்கி, மெலியாதே - சோர் வடையாமல், மா சகம் தொழும் உனது புகழின் ஓர் சொல் பகர்ந்து - பெரிய உலகமானது வணங்கும் உன்னுடைய புகழை உணர்த்தும் வார்த்தை ஒன்றையாயினும் வாயினால் உரைத்து, சுக(ம்) மேவி - சுகமடைந்து, மா மணம் கமழும் இரு கமல பாதத்தை - சிறந்த (ஞான) வாசனை வீசும் தாமரையை யொத்த நினது இருபாதங்களையும், நின்று பணிவேனோ - நிலையாக (எந்நாளும்) வணங்குவேனோ? (அப்படிப்பட்ட பாக்கியம் அடியேனுக்கும் வாய்க்குமோ?)

(வி - ரை) முருகப்பெருமான் தாம் ஞானகுருவாகக் கோயில் கொண்ட சுவாமிமலையில் ஞானத்துக்குரிய நிலைமையில் அமர்ந்திருக்கிறார். புலன்களை

யடக்கி, மௌனமுற்று, மனத்தை ஒருவழிப்படுத்தி, சர்வேசுவரரான சிவபெருமானது திருவுருவத்தைத் தியானிப்பதில் மனமானது சஞ்சலமற்று அமரும்படி செய்வதே சிவயோகமாகும். அச் சிவயோகமே சிவஞானத்தைத் தரத்தக்கது. ஆதலினால், முருகப்பெருமான் அந்தத் தலத்தில் சிவயோக நிலைமையில் அமர்ந்தருளினார் போலும்! அழிவில்லாதவராய் விளங்கும் எம்பெருமானது திருக்கோயிலுக்குச் சென்று அப்பெருமானது பாதமலர்களை அன்புடன் வணங்கி, இகபர சுகங்களை யெல்லாம் பெறுவதைத் தவிர்த்து, நிலையற்றதும், எந்த நிமிஷத்தில் அழியுமென்று நிச்சமாய்ச் சொல்ல முடியாததுமான தேகத்தையுடைய மானிடர்கள் வீட்டின் கடைவாயிலிற் போய், அவர்களுடைய தயவைப் பெறவேண்டுமென்ற ஆசையினால் வெகுகாலம் ஆங்கே நிலையாக நின்று, வினைப் பயன் ஒழிந்தாலன்றி வறுமையும் துயரமும் நீங்காவென்றும், வினைப்பயனை நீக்க வல்லவர் வேலேந்திய கடவுளாகிய முருகனேயென்றும் அறிவதான மெய்யறிவை யிழந்து, எல்லாக் காரியங்களிலும் சரியான நெறியினின்றும் தவறி நடந்து, மீண்டும் மீண்டும் பிறவியில் சேர்க்கும் நல்வினை தீவினை என்று இருவகைப்படும் பவ வினையை எல்லையில்லாமல் புரிந்து அலைந்து, அவ்வினையைப் புரியுங் காலத்திலேயே ஏற்படும் துயரத்தை அனுபவித்துத் தேகமும் மனமும் சோர்வடையப் பெற்று வருந்தாமல், விசாலமான உலகத்திலுள்ளவர்களெல்லோரும் வணங்கும் தெய்வமாகிய அவரது புகழைக்கூறும் மொழி ஒன்றையேனும் மொழிந்து, அதனால் சுகமடைந்து, ஞானவாசனை எங்கும் பரவச்செய்யும் அவரது பாதமலர்களை என்றும் இடைவிடாமல் வணங்கும் பாக்கியம் அவரது அருளைப்பெறுத லடியேனுக்கும் வாய்க்குமோ? (௨௨

தனதன தானன தனதன தானன
தனதன தானன—தனதான.

பரவரி தாகிய வரையென நீடிய
பணைமுலை மீதினி ஒருமான

பணிகளு லாவிட இழையிடை சாய்தரு
பயிலிகள் வாள்விழி அயிலாலே

நிரவரி யோடியல் குழல்களி ருண்டலர்
நிரைதரு மூரலி னகைமீது

நிலவியல் சேர்முக மதிலுயர் மாமயல்
நிலையெழு வேபல வதுமாயோ ?

அரவணை யார்குழை பரசிவ ஆரண
அரனிட பாகம ஆதிசோதி

# 1. திருவேரகம் எனும் சுவாமிமலை சுக்

அமையுமை டாகினி திரிபுரை நாரணி
அழகிய மாதருள் புதல்வோனே !

குரவணி பூஷண சரவண தேசிக 1204/2
குககரு ணாநிதி (114) அமரேசா !

குறமக ளானைமின் மருவிய பூரண
குருகிரி மேவிய பெருமானே ! (௨௩)

(ப-ரை) அரவு அணை ஆர் குழை - பாம்புடன் சேர்ந்து ஒளி வீசும் குழையையும் (காதில் அணிந்தவரும்), பரசிவ - முத்திவீட்டை யளிக்கும் மங்களமூர்த்தியும், ஆரண - வேதத்தின் நாயகரும், அரன் - பவவினையை அழிப்பவருமான சிவபெருமானுடைய, இடபாகமது உறை சோதி அம்மை - இடது பாகத்தில் அமர்ந்த ஜோதி சொரூபமான தாயும், உமை டாகினி திரிபுரை நாரணி - உமாதேவியும் காளியும் திரிபுரங்களைத் தகனஞ் செய்தவரும் நாராயணன் சகோதரியுமான, அழகிய மாது அருள் புதல்வோனே - அழகின் சொரூபமான பார்வதிதேவியார் தந்தருளிய குமாரனே !, குரவு அணி பூஷண - குரவ மரத்தின் மலர்களால் புனைந்த மாலையை திவ்ய ஆபரணமாக அணிந்து கொண்டவனே!, சரவண தேசிக - நாணல் பூத்த படுகையில் (தாமரை மலர் நிறைந்த வாவியில்) குழந்தை யுருக்கொண்டு தோன்றிய ஞானகுருவே!, குக - மெய்யன்பரது இதயத்தில் வசிப்பவனே!, கருணாநிதி - கருணைக்கடலே!, அமரேசா - தேவர்கள் நாயகனே!, குறமகள் ஆனைமின் மருவிய பூரண - வேடர் குலத்தில் வளர்ந்த வள்ளிநாயகியையும் ஐராவதத்தினால் வளர்க்கப் பெற்ற மின்னற்கொடியை யொத்த இடையுடைய தெய்வயானை யம்மையையும் கலந்துகொண்ட பரிபூரண ஞானவுருவே!, குருகிரி மேவிய பெருமாளே - சுவாமிமலையில் எழுந்தருளி யிருக்கும் பெரியோனே!, பரவ அரிதாகிய வரை என நீடிய - வருணிக்கமுடியாத மலை எனும்படி உயர்ந்துள்ள, பணைமுலை மீதினில் - பருத்த தனபாரங்களின்மீது, பணிகள் உலாவிட - (அணிந்த) ஆபரணங்கள் அசைவுறுமாறு, இழையிடை சாய்தரு - நூலையொத்த இடையை நெளிக்கும் இயல்புடையவர்களும், பயிலிகள் - (காமத்தீயை மூட்டத்தக்க) நடையுடை பாவனைக ளுள்ளவர்களுமான பெண்களது, வாள் விழி அயிலாலே - கத்தியை யொத்த விழிகளின் கூர்மை(யான பார்வை)யினாலே, நிர வரியோடு இயல் குழல்களின் - அடர்த்தியாகவும் நீண்டும் வளர்ந்துள்ள கூந்தல்களின் (மீதும்), நிரைதரு மூரலின் நாண்மலர் நகைமீது - வரிசையாகவுள்ள பற்கள் அன்று பூத்த மலர்களைப்போல் அழகாகத் தோன்றுமாறு சொல்லும் புன்னகைமீதும், நிலவு இயல்சேர் முகம் அதில் - சந்திரனது ஒளியின் தன்மை பொருந்திய முகத்தின் மீதும், உயர் மா மயல் - மிகுந்த காதல், நிலை எழவே - (அகற்றமுடியா வண்

ணம்) உறுதியாக உண்டாக, அலைவது ஆமோ - (அதனால்) அடியேன் சஞ்சல முற்று வருந்துதல் நியாயமோ ?

(வி - ரை) நறுமணமிக்க குரவமலரின்மீது முருகப்பெருமானுக்கு உள்ள பிரியம் அப்பெருமான் பழநியில் குரவமரத்தின் அடியில் வீற்றிருப்பதனாலேயே நன்கு விளங்கும். சரவணம் என்னும் பதத்துக்கு நாணல், தாமரை என்று இரண்டு விதமாகப் பொருள் கூறலாம். சிவபெருமானது நுதற் கண்களினின் றும் உதித்த ஆறு தீப்பொறிகளும் மிகுந்த ஜோதியுடன் உலகமெங்கும் பரவின. அவைகள் ஜீவராசிகளுக்கு எவ்விதத்திலும் தீங்கு செய்யவில்லையே யெனினும், அவைகளின் ஒளியைப் பார்க்க முடியாமலும் வெப்பத்தைத் தாங்க முடியாமலும் உயிர்த்தொகைகள் கலங்கித் தியங்கின. அவைகளைக் கண்டு வெருண்டு எம் பெருமான் சந்நிதியைவிட்டு அகன்று ஓடிய தேவர்கள் அவைகள் பிரபஞ்ச முழுவதும் பரவியதைக்கண்டு அஞ்சி மீண்டும் எம்பெருமான் திருமுன்னர் வந்து சேர்ந்து தங்களைக் காத்தருளும்படி எந்தையை பிரார்த்தித்தனர். அப்போது சிவபெருமான் அக்கினிதேவனையும் வாயுதேவனையும் அப்பொறிகளைச் சுமந்து கொண்டு போய்க் கங்காநதியிற் சேர்க்கும்படி கட்டளையிட்டு, அக்கட்டளையை நிறைவேற்ற வேண்டிய பலத்தையும் அவர்களுக்கு அளித்தருளினார். அக் கட்டளையின்படி அத்தீப்பொறிகளை அக்கினியும் வாயுவும் சுமந்துகொண்டு போய்க் க்ங்காநதியிற் சேர்க்க, கங்கையானவள் அவைகளைத் தன் கரையோரத் தில் நாணல் அடர்ந்து தாமரை பூத்திருந்த வாவியிற் கொண்டுபோய்ச் சேர்த் தனள். அவ்வாவியை அடைந்ததும், அந்த ஆறு தீப்பொறிகளும் ஆறு முகங்களை யுடைய ஒரு குழந்தையாக மாறின.

"அருவமு முருவுமாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறும் கரங்கள்பன் னிரண்டுங்கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலகமுய்ய!"

நாணலும் தாமரையும் மிகுதியாகவுள்ள சரவணப் பொய்கையில் குழந்தை யாக உதித்ததனால் ஷண்முகக்கடவுளுக்கு சரவணபவன், சரவணன் என்னும் திருநாமங்கள் உண்டாயின. அவ்வாறு உதித்த நாதன் உலகத்தில் பரவியிருந்த அஞ்ஞானத்தை யகற்றவந்த ஞானகுரு - ஞானதேசிகன் - வேலாயுதன் - மெய் யடியார்களது இதயமான - அன்பினால் தூய்மையடைந்த அகத்தில் களிப்புடன் வசிக்கிறாராதலால் எம்பெருமானுக்குக் குகன் என்னும் திருநாமம் வாய்த்தது. எம்பெருமான் களிப்புடன் வசிக்கும் இடங்கள் பின் வரும் பாடல்களினால் விளங்கும்.

"கொந்து வார்குர வடியினு மடியவர்
சிந்தை வாரிச நடுவினு நெறிபல
கொண்ட வேதனன் முடியினு மருவிய குருநாதா!"—திருப்புகழ்.

" அருணையு மிலஞ்சியுஞ் செந்தூர்தி ருப்பழநி
யடியர்மன பங்கயந் சைங்கோடி டைக்கழியும்,
அனவரத நீலமலர் மூத்தெரிசு னைப்புனலி,
லருவிகுதி பாய்தருசெ ருத்தணியென் வெற்புமெனும்
அலகிறி ருப்பதி யிற்பயில் கற்பகாடவி-
யனுப வனத்தனிருத்தன ரத்த வாடையன் "—திருவகுப்பு.

எம்பெருமான் உதித்த வாவியில் நாணலும் தாமரை மலர்களும் மிகுதியாக விருந்தன வென்பதைப் பின்வரும் பாடல்கள் விளக்குகின்றன.

" வானலர்பொ ருட்டுமக வானதுபொ ருட்டுமலர்
வாவியிலு தித்தமுக மாயக்காரனும் "—திருவகுப்பு.

" ஞாலமேத்தி வழிபடு மாறுபேர்க்கு மகவென
நாணல்பூத்த படுகையில் வருவோனே ! "—திருப்புகழ்.

சிவபெருமான் தாம் வேறு தமது சக்தி வேறு அல்லவென்பதை நிரூபிப்பதற்காகவே தமது இடப்பாகத்தை உமாதேவியாருக்கு அளித்து அர்த்தநாரீசுவர மூர்த்தியாக விளங்குகிறா ராகையால், திரிபுரத்தை அழித்தது சிவபெருமான் என்றும் சொல்லலாம், உமாதேவியார் என்றும் சொல்லலாம். ஆதலால் உமாதேவியாருக்குச் திரிபுரதகனி, திரிபுராந்தகி, திரிபுரை என்னும் திருநாமங்கள் உண்டாயின. (உ௩)

தானதன தந்தனத்த தானதன தந்தனத்த
தானதன தந்தனத்த—தனதான.

சேலுமயி லுந்தரித்த வாளையட ருங்கடைக்கண்
மாதரைவ சம்படைத்த வசமாகிச்

சீலமறை யும்பணத்தி லாசையிலே யென்றவத்தை
காலமுமு டன்கிடக்கு மவர்போலே

காலமயி ரும்பிடித்து மேவுசிலு கும்பிணக்கு
நாளுமிக நின்றலைத்த விதமாய

காமகல கம்பிணித்த தோதகமெ னுந்துவக்கி
லேயடிமை யுங்கலக்க முறலாமோ ?

ஏலமில வங்கவர்க்க நாகம்வகு ளம்படப்பை
பூகமரு தந்தழைத்த கரவீரம்

யாவும்அலை கொண்டுகைத்த காவிரிபு றம்புசுற்றும்
ஏரகம மர்ந்தபச்சை மயில்வீரா !

சோலைமடல் கொண்டுசக்ர மால்வரைய ரிந்தவஜ்ர
பாணியர்தொ ழுந்திருக்கை வடிவேலா!
சூர்முதிர்க்ர வுஞ்சவெற்பும் வேலைநில மும்பகைத்த
சூரனுட லுந்துணித்த பெருமாளே (உச)!

(ப - ரை) ஏலம் இலவங்க வர்க்க நாகம் - ஏலம், இலவங்கம் இவைகளின் இனத்தைச் சேர்ந்த நாகமரம், வகுளம் படப்பை பூக(ம்) மருதம் தழைத்த கர வீரம் - மகிழமரம் படப்பை பாக்குமாம் மருதமரம் தழைத்து வளரும் அலரிச் செடி, யாவும் அலைகொண்டு உதைத்த காவிரி - (ஆகிய) எல்லாவற்றையும் தனது அலைகளைக் கரைகளில் மோதுவதனால் செழிப்பாய் வளரச் செய்யும் காவிரி நதியானது, புறம்பு சுற்றும் ஏரகம் - பின்புறத்தே சூழ்ந்திருக்கும் சுவாமி மலையில், அமர்ந்த பச்சை மயில் வீரா - எழுந்தருளியிருக்கும் பச்சை மயிலை வாகனமாகக் கொண்டிருக்கும் வீரா!, சோலைமடல் கொண்டு - பூஞ்சோலை களிலுள்ள (மென்மையான) பூவிதழ்களினால் செய்த புஷ்பக விமானத்தின்மேல் ஏறிச்சென்று, சக்ர மால் வரை அரிந்த வஜ்ரபாணியர் - சிறந்த சக்ரவாள மலை யின் சிறகுகளை அறுத்தெறிந்தவனும் வஜ்ரபாணியர் தொழும் - வஜ்ராயுதத்தை விசேஷ ஆயுதமாகக் கொண்டவனுமான தேவேந்திரனால் வணங்கப்படுபவரும்; திருக் கை வடிவேலா - திருக்கையில் வடித்துக் கூர்மையாகவுள்ள வேலாயுதத் தைத் தரித்தவருமான பெருமானே!, சூர் முதிர் க்ரவுஞ்ச வெற்பும் - வெகுகால மாக உலகத்தோருக்குத் துன்ப மிழைத்துவந்த கிரௌஞ்சம் என்னும் மலையை யும், வேலை நிலமும் - சமுத்திரத்தின் நடுவேயிருந்த அவனது நகரத்தையும், சூரன் உடலும் - சூரபதுமனது (அகங்கார சொரூபமான) தேகத்தையும், துணித்த பெருமாளே - அழித்தருளிய பெரியோனே!, சேலும் அயிலும் தரித்த வாளை அடரும் கடைக்கண் - கயல்மீனையும் கைவேலாயுதத்தையும் ஆயுதமாகத் தரிக்கும் சத்தியையும் ஒத்திருப்பவைகளும் கடைமுனையினால் பார்க்கும் இயல் புடையவைகளுமான கண்களையுடைய, மாதரை வசம்படைத்து அவசமாகி - பெண்களைச் சொந்தமாக்கிக்கொண்டு அவர்களுக்கு ஆளாகிச் சுயேச்சையை இழந்து, சீல(ம்) மறையும் பணத்தில் ஆசையிலை என்று - நல்லொழுக்கம் நீங்கும்படி செய்யும் பணத்தில் தங்களுக்கு ஆசையேயில்லை என்று சொல் லிக்கொண்டே, அவத்தை காலமும் உடன் கிடக்கும் அவர்போலே - நித் திரைசெய்யுங் காலத்திலும் அப்பணத்தின் பக்கத்திலேயே படுத்துறங்குபவர் களின் செய்கையைப் போலவே, காலும் மயிரும் பிடித்து மேவு(ம்) சிலுகும் பிணக்கு - காலையும் தலைமயிரையும் பிடித்து ஆசையுடன் போடும் சண்டை யாகிய ஊடல், நாளு(ம்) மிக - தினந்தோறும் அதிகரிக்க, நின்று அலைத்த வித மாய - இடைவிடாமல் சஞ்சலமுற்று வருந்துவதாகிய, காம கலகம் பிணித்த தோதகம் எனும் துவக்கிலே - காமவிகார மயக்கம் (என்னும் பாவியினால்) இறுக்



பழநியாண்டவர்

கிக் கட்டப்பெற்ற துன்பம் என்னும் பந்தத்தில் (சிக்கி), அடிமையும் கலக்கம் உறலாமோ - நினது அடிமையாகிய அடியேன் சஞ்சலமுற்று வருந்தும்படி விட்டுச் சும்மாவிருத்தல் நீதியோ ?

(வி - ரை) முற்காலத்தில் மலைகள் சிறகுகளையுடையவைகளாய் எங்கும் பறந்து சென்று, தங்களுக்கு இஷ்டப்பட்ட விடங்களில் கீழே யிறங்கிப் பூமியில் அமர்ந்து ஊர்களையும் ஜீவராசிகளையும் அழித்து உலகத்துக்கு மிகுந்த கெடுதி செய்துவந்தன ; அப்போது தேவர்களும் மனிதர்களும் தங்கள் துன்பத்தை நீக்கி உதவிபுரியும்படி தேவேந்திரனை வேண்ட, அவன் தனது புஷ்பக விமானத்தி லேறிச்சென்று தன் வஜ்ராயுதத்தினால் அம்மலைகளின் சிறகுகளை அறுத்து, அம்மலைகள் நிலைபெயர்ந்து செல்ல மார்க்க மில்லாமல் ஒரே விடத்தில் நிலையாக விருக்கும்படி செய்தான் ; ஆகலின் இந்திரனை, " சக்ரமால்வரை யரிந்த வஜ்ரபாணியர் " என்றார்.

சக்கரவாள மலை என்பது பூவுலகத்தைச்சுற்றி முற்றிலும் வளைந்திருக்கும் மலை. (உச)

தனனதன தானதந்த தனனதன தானதந்த
தனனதன தானதந்த—தனதான.

திருவரிவ ராகுமென்று பொருணசையி னுடிவண்டு
தனைவிடுசொல் தூதுதண்ட முதலான
சரசகவி மாலைசிந்து கவிதுறைக ளேசலின்ப
தருமுதல தானசெஞ்சொல் வகைபாடி
மருவுகையு மோதிகொந்து அடிகள்முடி யேதெரிந்து
வரினுமிவர் வீதமெங்க ளிடமாக
வருமதுவொ போதுமென்று வொருபணமு தாசினஞ்சொல்
மடையரிட மேநடந்து மனம்வேறாய்
உருகிமிக வாகவெந்து கவிதைசொலி யேதிரிந்து
உழல்வதுவு மேதவிர்ந்து விடவேநல்
உபயபத மால்விளங்கி யிகபரமு மேவஇன்ப
முதவியெனை யாளஅன்பு தருவாயே !
குருகினொடு நாரையன்றில் இரைகளது நாடிடங்கள்
குதிகொளிள வாளைகண்டு பயமாகக்
குரைகடல்க ளேயதிர்ந்து வருவதென வேவிளங்கு
குருமலையின் மேலமர்ந்த பெருமாளே !

(ப - ரை) குருகினொடு நாரை அன்றில் - பலவித நீர்ப்பறவைகளும் நாரையும் அன்றிற் பறவையும், இரைகளது நாடு இடங்கள் குதிகொள் இளவாளை கண்டு பயமாக - இரை தேடும் இடங்களில் தத்திக் குதிக்கும் இளமை பொருந்திய வாளைமீன்கள் (அப்பறவைகளைக் கண்டு) பயமடைந்து, குரை கடல்களே அதிர்ந்து வருவது எனவே விளங்கு - ஒலிக்கும் கடல்கள் அதிர்ச்சியடைந்து புரண்டு வருவதுபோல் (கூட்டங் கூட்டமாய்ப் பாய்ந்து) அப்பாற் செல்லும்படி நீர் வளப்பம் மிகுந்துள்ள, குருமலையின் மேல் அமர்ந்த பெருமாளே - சுவாமி மலையின்மீது எழுந்தருளி யிருக்கும் பெரியோனே!, தருவர் இவர் ஆகும் என்று - இவர் நமக்குப் பொருள்கொடுத்து உதவி செய்யக்கூடியவரென்று நினைத்து, பொருள் நசையின் நாடி - பொருள் பெறவேண்டுமென்ற ஆசையினால் பணக்காரர்களிடம் சென்று, வண்டுதனை விடுசொல் தூது தண்டம் முதலான - வண்டைத் தூதனுப்புவதாகப் பாவித்துப் பாடும் வெண்பாமாலை தண்டகம் முதலிய, சரச கவிமாலை-சிற்றின்ப லீலைகளுக்குரிய கவிமாலை,—சிந்து கலி துறைகள் ஏசல் இன்பதரு முதலான (பிரபந்தங்களால் அப்பணக்காரர்களைப் புகழ்ந்து),—செம்சொல்வகை பாடி - திருத்தமான அழகிய சொற்களைக்கொண்டு பலவகையாகப் பாடி, மருவுகையும் மோதி-கைகளைப் பிணைத்துச் சிரமேற்குவித்து, நொந்து-(வறுமையினால்) மனம்வருந்தி, அடிகள் முடியே தெரிந்து வரினும் - அவர்களுடைய பாதங்களை அடியேன் தலை நன்றாய் அறிந்துகொள்ளும்படி அவைகளை வணங்கி வந்தபோதிலும், இவர் வீதம் (விதம்) எங்களிடமாக வருமதுவொ (வோ) போதும் என்று - இவர் இனமாகிய கவிகள் எங்களிடம் இதுவரையில் வந்ததே போதும் (இனி வரவேண்டாம்) என்று, ஒரு பணம் உதாசினம் சொல்-பணத்தை உடையவர்களா யிருப்பதனால் (அகங்காரங்கொண்டு) அலக்ஷியமாகப் பேசும், மடையரிடமே நடந்து-புத்தியீனர்களிடமே ஓயாமற்சென்று, மனம்வேறாய்-(முதலில் நாடிய காலத்தில் அவர் பொருள்கொடுப்பாரென நினைத்தது தவறென்று கண்டு) மனத்திற்கொண்ட சந்தோஷம் நீங்கி, உருகி மிகவாக வெந்து கவிதை சொலியே திரிந்து - துயரத்தினால் மனம் உருகி வெதும்பி (மீண்டும் மீண்டும் பல தனிகர்களிடம் சென்று) பாமாலைகளைப் பாடி அலைந்து, உழல்வதுமே தவிர்ந்து விடவே - மனங்கலங்குவது ஒழியப் பெற்று, நல் உபயபதமால் விளங்கி-நன்மையைத் தரும் நினது இரு பாதாரவிந்தங்களின் பெருமையை அடியேன் உணரும்படி செய்து, இகபரமும் இன்பம் மேவ உதவி - இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் உண்டாகக்கூடிய சுகங்கள் அடியேனுக்கு வந்து சேரும்படி உதவிபுரிந்து, எனை ஆள அன்பு தருவாயே - அடியேனை நினது அடிமை யாக்கிக்கொள்ள அன்பு கூர்வாயாக !

(வி - ரை) இளமை பொருந்திய வாளைமீன்கள் உலக அனுபவமில்லாத காரணத்தினால், தங்களை இரையாகக் கொள்ளக் காத்திருக்கும் நாரை முதலிய நீர்ப்பறவைகளின் வாயிற் சிக்காமல் தப்புவதற்குத் தண்ணீரில் மூழ்கி

மறைந்து செல்லவேண்டுமென அறியாமல், தத்திக்குதித்து நீர்மட்டத்துக்கு மேல் எழும்பிப் பாய்ந்து செல்கின்றன; அவைகளுடைய உடலின் கீழ்ப்பாகம் தூய்மையான வெண்மை நிறமுடையதாக இருப்பதனாலும், அவைகள் அவ்வாறு கூட்டங் கூட்டமாகப் பாய்ந்து செல்லும்போது அவைகளுடைய உடலின் கீழ்ப் புறமே தெரிவதனாலும், அவைகள் பாய்வது கோஷிக்கும் கடலில் வெண்மை யான அலைகள் வீசுவதுபோல் தோன்றுகிறதாகலின், "குருகினொடு........... விளங்கு" என்று கூறப்பட்டது.

இவ்வுலக சுகங்களை அனுபவிக்கப் பொருள் அவசியமாதலால், மனிதர்கள் பொருள்தேடப் பலவாறு முயற்சிசெய்கிறார்கள். கவிபாடும் திறமையுடையோர் தனமுடையவர்கள்பாற் சென்று அவர்களைப் பலவாறு புகழ்ந்து பலவகைப்பட்ட பிரபந்தங்களைப் பாடி ஓயாது அவர்களுடைய வீடுகளுக்கு நடக்கிறார்கள். ஆனால் அத்தனமுடையவர்கள் பொருள்படைத்த அகங்காரத்தினால், "கவிகளை யார் அழைத்தார்கள்? இவர்கள் எங்களிடம் இதுவரை வந்ததுபோதும். இனி வர வேண்டாம்!" என்று பிறர் மூலமாகத் தெரிவித்து அக்கவிகளை அவமதிப்பார் கள். ஆகையினால், கவிபாடும் திறமையை முருகனருளால்பெற்ற புலவர்கள், நரர்களைப் புகழ்ந்து பாடுவதை விட்டு, அத்திறமையை அவர்களுக்கு அளித்த வரும், முத்தமிழால் தம்மை வைதாரையும் வாழவைக்கும் இயல்புடையவரும், வரையாது கொடுக்கும் வள்ளலும், இவ்வுலக சுகங்களை மாத்திரமேயன்றி இறுதி யில் முக்தியையும் தந்தருள வல்லவருமான முருகப் பெருமானது இருபாதமலர் களின் பெருமையை உணர்ந்து அவைகளைப் புகழ்வதே அவர்கள் நோக்கம் நிறை வேறுவதற்குரிய நெறியாகும். ஆனால் அந்நெறியில் சேர்வதற்கு அவசியமான மெய்யுணர்ச்சியை அடைய அப்பெருமானது திருவருள் அவசியமாதலால், அவ் வுணர்ச்சியைத் தரும்படி சுவாமிகள் அப்பெருமானைப் பிரார்த்திக்கிறார். (உரு)

தானதன தந்த தானன
தானதன தந்த தானன
தானதன தந்த தானன—தனதான.

ஆனனமு கந்து தோளொடு
தோளிணைக லந்து பாலன
ஆரமுது கண்டு தேனென — இதழூறல்
ஆதரவி னுண்டு வேல்விழி
பூசலிட நன்று காணென
ஆணையுர மெங்கு மோதிட — அபிராம
மானனைய மங்கை மார்மடு
நாபியில்வி ழுந்து கீடமில்
மாயமனு வின்ப வாசைய — தறவேயுன்

வாரிஜப தங்கள் நாயடி
யேன்முடிபு னைந்து போதக
வாசகம்வ ழங்கி யாள்வது மொருநாளே?

ஈனவதி பஞ்ச பாதக
தானவர்ப்ர சண்ட சேனைக
ளீடழிய வென்று வானவர் குலசேனை

ஏவல்கொளு மிந்த்ர லோகவ
சீகரவ லங்க்ரு தாகர
ராசதம றிந்த கோமள வடிவோனே!

சோனைசொரி குன்ற வேடுவர்
பேதைபயில் கின்ற ஆறிரு
தோளுடைய கந்த னேவய லியில்வாழ்வே!

சூளிகையு யர்ந்த கோபுர
மாளிகைபொ னிஞ்சி சூழ்தரு
ஸ்வாமிமலை நின்று லாவிய பெருமாளே!

(ப - ரை) ஈன அதி பஞ்ச பாதக தானவர் - இழிவான குணமுடையவர்களும் மிகவும் கொடிய ஐந்து பாதகங்களைச் செய்பவர்களுமான அசுரர்களுடைய, ப்ரசண்ட சேனைகள் ஈடு அழிய வென்று - வலிமை பொருந்திய சேனைகளின் பெருமை அழியுமாறு அவைகளைவென்று, வானவர் குல சேனை ஏவல் கொளும் - தேவகுலத்தவர்களாலாகிய சேனையை நினது கட்டளைப்படி நடக்கச் செய்யும் வண்ணம், இந்த்ர லோக வசீகர - இந்திர லோகத்தை நினது வசமாக்கிக் கொண்டவனே! அலங்க்ருத ஆக(ா)ர - கட்டழகு வாய்ந்த உருவமுடையவனே!, ராசதம் அறிந்த கோமள வடிவோனே - இராஜதகுணத்தையும் மேற்கொண்ட இளமைபொருந்திய வடிவத்தை யுடைய குமரனே!, சோனை சொரி குன்ற வேடுவர் பேதை - இடைவிடாது மழைபெய்யும் குன்றின்மீது வசிக்கும் வேடர்களது குலத்தில் வளர்ந்துவந்த பெண்ணான வள்ளி நாயகியானவள், பயில்கின்ற ஆறு இரு தோள் உடைய கந்தனே - அணைகின்ற பன்னிரண்டு தோள்களையுடைய கந்தனே!, வயலியில் வாழ்வே - வயலூர் என்னும் திருத்தலத்தில் மகிழ்ச்சியுடன் எழுந்தருளியிருப்பவனே!, சூளிகை உயர்ந்த கோபுர மாளிகை பொன் இஞ்சி சூழ்தரு - அரண்மனைகளும் உயர்ந்த கோபுரங்களையுடைய மாளிகைகளும் அழகிய மதிலும் சூழ்ந்திருக்கும், ஸ்வாமிமலை நின்று உலாவிய பெருமாளே - ஸ்வாமிமலையின்மீது நிலையாக எழுந்தருளி அத்தலத்தில் உல்லாசமாக விளையாடிய பெரியோனே!, ஆனனம் உகந்து - (மாதர்களது) முகத்தைக்கண்டு

மனமகிழ்ந்து, தோளொடு தோளிணை கலந்து - அவர்களது தோள்களோடு அடியேனது இருபுயங்களும் பொருந்தும்படி செய்து, பால் அ(ன்)ன ஆர் அமுது கண்டு தேன் என - இது பாலைப்போன்ற அருமையான அமுதம் என்றும் கற்கண்டு என்றும் தேன் என்றும் புகழ்ந்து, இதழ் ஊறல் ஆதரவின் உண்டு - (அவர்கள்) உதடுகளில் ஊறிவரும் எச்சிலை மிகுந்த விருப்பத்துடன் பானஞ் செய்து, வேல் விழி பூசலிட - உருவத்தினாலும் கூர்மையான பார்வையினாலும் வேலாயுதத்தை ஒத்திருக்கும் (அவர்களது) கண்கள் அடியேன் மனத்தில் கலகம் விளைவிக்க, நன்று காண் என - (அதுவே) நலம் (சுகம்) என்று கருதி, ஆனை உரம் எங்கும் மோதிட - யானையின் பலத்தோடு (தேகத்துடன் தேகம்) மோதி முற்றிலும் பொருந்தும்படி (அவர்களுடன்) கலந்து, அபிராம மான் அனைய மங்கைமார் - அழகு வாய்ந்தவர்களும் மானைப்போன்றவர்களுமான மாதர்களது, மடு நாபியில் விழுந்து-விசாலத்தாலும் ஆழத்தாலும் மடுவை ஒத்திருக்கும் நாபியில் ஆசையுடன் வீழ்ந்து, கீடம் இல் மாயும் - புழுவைப்போல் அழிவதற்கு ஏதுவாயிருக்கும், அனு இன்ப ஆசை அது அறவே - அற்பமான இன்பத்தின்மீதுள்ள ஆசையானது அழிந்துபோகும் வண்ணம், உன் வாரிஜ பதங்கள் நாயடியேன்முடி புனைந்து - தாமரை மலரையொத்த உனது பாதங்களை நாயைப்போல் இழிகுணமுள்ள அடியேனது தலைமீது சூட்டி, போதக வாசகம் வழங்கி - ஞானத்தைப் போதிப்பதற்குரிய வார்த்தைகளைச் சொல்லி, ஆள்வதும் ஒரு நாளே - அடியேனை ஆட்கொள்ளப் போகிற நாளும் வரப்போகிறதோ?

(வி - ரை) உலகத்தில் பஞ்சமகா பாதகங்களை மனிதர் செய்வதற்குக் காரணம் அஞ்ஞானமே. அஞ்ஞானத்தினால் உண்டாகும் இழிகுணங்கள் வலிமைபெற்றிருக்கையில் சற்குணங்கள் அவைகளுக்கு அடங்கி, இருந்த விடம் தெரியாமல் மறைந்து கிடக்கும். ஞானத்தைப் புகட்டினால்தான் இழிகுணங்கள் அழியும். அவைகள் அழிந்தால்தான் சற்குணங்கள் வெளிப்பட்டு ஞானத்தின் வசமாகிச் சிறப்புற்று விளங்கும். இதுவே கந்தபுராணத்தில் மறைந்து கிடக்கும் சிறந்த போதகம். இழிகுணங்களின் சொரூபங்களாய் அவதரித்துப் பஞ்ச மகா பாதகங்களைச் செய்துவந்த அசுரர்களது சேனைகளின் வலிமையை ஞான சக்தியாகிய வேலாயுதத்தினால் அழித்து அவைகளை வென்ற ஞான குருவான முருகப் பெருமான், தேவர்களின்சேனைகளான சத்வகுணங்களைத்தம்வச மாக்கிக்கொண்டு, அவைகள் ஞானமார்க்கத்துக்கு அனுகூலமாயிருக்கும்படி விதித்தருளினார். அப்படிப்பட்ட முருகப்பெருமான் ஞானசொரூபி யாகையால், சத்வகுணங்களுக்கெல்லாம் தலைவராக இருந்துகொண்டு, தாம் உதவும் இன்பத்தினால் - ஞானத்துடன் கலக்கும் சுகத்தினால் - மனத்தைக் கவர்கின்றார். அவரது ஞான சொரூபம் மனத்தைக்கவரும் அழகு பொருந்தியிருக்கிறது. **முருகப்பெருமான் யாரேனில், சுத்த ஸத்வ மூர்த்தியாதும் முக்கட் பரன் உலகத்துக்கு ஞானத்தைப்** போதிப்பதான ரஜோ குணத்தை மேற்கொண்டபோது கொண்ட சொரூபமே!

ஞானமானது என்றும் தனது வலிமை குன்றாதாதலால், ஞானசொரூபியான முருகப்பெருமான் வலிமை குறைவதான மூப்பை அடையாமல் என்றும் இளையோனாகவே விளங்குகின்றார். (உசு)

தத்தனத னத்தனத னத்தனத னத்தனன
தத்தனத னத்தனத னத்தனத னத்தனன
தத்தனத னத்தனத னத்தனத னத்தனன—தந்ததான.

சுத்தியந ரப்புடனெ லுப்புறுத சைக்குடலொ
டப்புடனி ணச்சளிவ லிப்புடனி ரத்தகுகை
சுக்கிலம்வி ளைப்புழுவொ டக்கையுமு ழுக்குமயிர் சங்குலாளை

துக்கம்விளை வித்தபிணை யற்கறைமு ளைப்பெருகு
குட்டமொடு விப்புருதி புற்றெழுதல் முட்டுவலி
துச்சிபிள வைப்பொருமல் பித்தமொடு றக்கமிக வங்கமூடே

எத்தனைநி னைப்பையும்வி ளைப்பையும யக்கமுற
லெத்தனைச லிப்பொடுக லிப்பையுமி டற்பெருமை
எத்தனைக சத்தையும லத்தையும டைத்தகுடில் பஞ்சபூதம்

எத்தனைகு லுக்கையுமி னுக்கையும னக்கவலை
யெத்தனைக வட்டையுந டக்கையு முயிர்க்குழுமல்
எத்தனைபி றப்பையுமி றப்பையுமெ டுத்துலகில் மங்குவேனோ?

தத்தனத னத்தனத னத்தனவெ னத்திமிலை
யொத்தமுர சத்துடியி டக்கைமுழ வுப்பறைகள்
சத்தமறை யத்தொகுதி யொத்தசெனி ரத்தவெள மண்டியோடச்

சக்கிரிநெ ளிப்பஅவு ணப்பிணமி தப்பமரர்
கைத்தலம்வி ரித்தரஹ ரச்சிவபி ழைத்தோமென
சக்கிரகி ரிச்சுவர்கள் அக்கணமெ பக்குவிட வென்றவேலா!

சித்தமதி லெத்தனைசெ கத்தலம்வி தித்துடன
ழித்துகம லத்தனைம ணிக்குடுமி பற்றிமலர்
சித்திரக ரத்தலம்வ லிப்பபல குட்டிநட னங்கொள்வேளே!

செட்டிவடி வைக்கொடுதி னைப்புனம திற்சிறுகு
றப்பெணம ளிக்குள்மகிழ் செட்டிகுரு வெற்பிலுறை
சிற்பரம ருக்கொருகு ருக்களென முத்தர்புகழ் தம்பிரானே!

(ப - ரை) தத்தன தனத்தன தனத்தன வென்று—திமிலை ஒத்த முரசம் துடி இடக்கை முழவு பறைகள் சத்தம் அறைய - பம்பை மேளம் அதற் கிசைந்த பேரிகை உடுக்கை தம்பட்டம் மத்தளம் மற்றும் பலவிதமான பறை கள் முழங்கிப் பேரொலி பரப்பவும், தொகுதி ஒத்த செ(ன்)னி ரத்தவெ(ள்) ளம் மண்டி ஓட - கூட்டங் கூட்டமாயுள்ள (அறுபட்ட) தலைகள் (போர்க்களத் தில்) வெள்ளமாய்ப் பெருகும் இரத்தவாற்றில் நெருக்கமாய் மிதந்து ஓடவும், சக்கிரி நெளிப்ப - (அண்ட கோளத்தைச் சுமக்கும்) ஆதிசேஷன் (போரின் வேகத்தைத் தாங்கமாட்டாமல்) தனது தேகத்தை நெளிக்கவும், அவுண பிணம் மிதப்ப - அசுரப் பிணங்கள் (இரத்த வாற்றில்) மிதக்கவும், அமரர் கைத்தலம் விரித்து அரஹர சிவ பிழைத்தோம் என - தேவர்கள் (நினது போர்த்திறத் தைக்கண்டு அதிசயித்து) கைகளை விரித்து ஹரஹரா! சிவமே! அசுரர்கள் செய்து வந்த கொடுமைகளினின்றும் தப்பிப் பிழைத்தோம்! என்று கூறவும், சக்கிரகிரி சுவர்கள் - ஆரல் சுவரைப்போல் உலகத்தை வளைத்திருக்கும் சக்கர வாள பர்வதமானது, அக்கணமெ பக்குவிட - அந்த க்ஷணத்திலேயே பிளவு பட வும், வென்ற வேலா - உன்னை எதிர்த்த அசுரர்களை வென்ற வேலா யுதனே!, சித்தம் அதில் எத்தனை செகத்தலம் விதித்து உடன் அழித்து - நினைத்த மாத்திரத்தில் எண்ணிறந்த உலகங்களைச் சிருஷ்டித்தும் எண்ணிறந்த உலகங்களை (அவைகளின் இறுதி வந்ததனால்) அழித்தும், கமலத்தனை மணிக் குடுமி பற்றி - திருமாலின் நாபித் தாமரையில் அமர்ந்திருக்கும் பிரமதேவரைக் கிரீடம் தரித்த அவரது தலைகளிலுள்ள குடுமியைப் பிடித்து, மலர் சித்திர கரத் தலம் வலிப்ப - நினது அழகிய மலரையொத்த கையானது நோகும்படி, பல குட்டி நடனம் கொள் - பலமுறை குட்டி விளையாடிய, வேளே - கட்டழகு வாய்ந்தவனே!, செட்டி வடிவைக் கொடு - வளைச்செட்டியைப்போல் வேடந் தரித்துக்கொண்டு, தினைப் புனம் அதில் சிறு குறப்பெண் அமளிக்குள் மகிழ் செட்டி - தினைப்புனத்திலிருந்த வேடுவச் சிறுமியான வள்ளிநாயகியுடன் கலவி செய்து மகிழ்வுற்ற குமரனே!, குருவெற்பில் உறை - சுவாமிமலையில் எழுந் தருளி யிருக்கும், சிற்பரமருக்கு ஒரு குருக்கள் என - அறிவு வடிவமான பரம் பொருளுக்கு ஒப்பற்ற குரு என்று, முத்தர் புகழ் தம்பிரானே - முத்தியைப் பெறுவதற்குரிய தகைமை வாய்ந்த பெரியோர்களால் புகழப்படும் நாயகனே!, சுத்திய நரப்புடன் எலுப்பு உறுதசைக் குடல் ஒடு - சுற்றியிருக்கும் நரம்புகளும் எலும்புகளும் மிகுந்த தசையும் குடலும், அப்பு உடன் நிணம் சளி - நீரும் மாமிச மும் சளியும், வலிப்பு உடன் இரத்த குகை - (இரத்தத்தைப் பரவச் செய்து) இழுக்கும் இயல்புள்ள இரத்தாசயமும், சுக்கிலம் விளைப் புழுவு ஒடு - இந்திரிய நீரும் (உடலுக்குள்ளேயே) உண்டாகும் புழுவும், அக்கையும் அழுக்கும் மயிர் சங்குமூளை - எலும்புகளும் அழுக்கும் மயிரும் சங்கைப்போல் வெண்மையான மூளையும், துக்கம் விளைவித்த பிணியல் - துக்கத்தைச் சதாகாலமும் விளைவிக்கும்

தொந்த நோயாகிய, கறைமுளை பெருகு குட்டம் ஒடு - உறுப்புக்களின் முளை களில் இரத்தம் பெருகச் செய்யும் குஷ்ட நோயும், விப்புருதி - விப்புருதி யென் னும் சிலந்தி நோயும், புற்றெழுதல் - மூக்கு முதலியவற்றில் புற்று உண்டாகும் நோயும், முட்டு - முழந்தாள் நோயும், துச்சி பிளவை - மிகுந்த துன்பத்தை அனு பவிக்கச் செய்யும் பிளவையும், பொருமல் - வயிற்றுப் பொருமலும், பித்தம் ஒடு உறக்கம் மிக - பித்தமும் தூக்கமும் மிகுதியாகவுள்ள, அங்கமூடே - தேகத்துக் குள்ளே, எத்தனை நினைப்பையும் விளைப்பையும் மயக்கம் உறல் - எத்தனை யோச னைகளைச் செய்து எத்தனை செய்கைகளைச் செய்து எத்தனை மயக்கங்களை அடைவது ?, எத்தனை சலிப்பு ஒடு கலிப்பையும் மிடல் பெருமை (உறல்)- எத்தனை மனச் சோர்வுகளையும் மனக்கிளர்ச்சிகளையும் வல்லமையுடையோம் என் னும் அகங்காரத்தையும் அடைவது?, எத்தனை கசத்தையும் மலத்தையும் அடைத்த குடில் பஞ்சபூதம் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சபூதங் களினுற் செய்யப்பட்ட குடிசையாகுந் தேகத்தில் எத்தனை வகைப்பட்ட நீர்களை யும் மலங்களையும் அடைக்கப்பட்டிருக்கிறது ? (அப்படி யிருக்க), எத்தனை குலுக் கையும் மினுக்கையும் - (அத்தேகம் அழகாய்த் தோன்றும்படி செய்ய) அதைக் குலுக்குவதும் மினுக்குவதும் எத்தனை விதம்?, மனக்கவலை எத்தனை - மனக்கவலை கள் எத்தனை ?, கவட்டையும் நடக்கையும் எத்தனை - வஞ்சகங்கள் எத்தனை ? நடத்தைகள் எத்தனை விதம் ?; உயிர்க் குழுமல் பிறப்பையும் இறப்பையும் எடுத்து உலகில் மங்குவேனே - எண்ணிறந்த ஜீவராசிகளுள் (ஒவ்வொன்றாகப்) பிறந்தும் இறந்தும் இவ்வுலகத்திலேயே வலிமைகுன்றி அழியலாமோ ? (நான் அவ்வாறு அழியுமாறு பார்த்துக்கொண்டிருத்தல் நினது கருணைக்கு அழகோ ?)

(வி · ரை) **சிவமும் சுப்ரமண்யமும்** வேறுவேறன்று என்னும் மெய்யறி வில்லாமையினுல் ஸுப்ரமண்ய மூர்த்தியைச் சிறு பாலகனுகக் கருதி அவரை வணங்காமல் மனத்தில் அகங்காரத்துடன் பிரமதேவர் செல்ல, உலகத்திலுள்ள அஞ்ஞானத்தை அகற்றுவதற்காகவே ஷண்முகக் கடவுளாய் அவதரித்த ஸுப்ர மண்யமூர்த்தி வேதங்களைப் போதிப்பவரான பிரமதேவரை அழைத்து, வேதங் களின் அடியிலும் நடுவிலும் முடியிலும் விளங்கும் பிரணவத்தின் பொருளை யுரைக்கும்படி கேட்க, பிரமதேவர் அதன் பொருளை உரைக்கமாட்டாமல் விழித்தார் அப்போது ஷண்முகக் கடவுள், அகங்காரத்தினுல் மெய்யறிவு அழி யப்பெற் றிருந்த பிரமதேவரால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவராசிகள் மெய்யறிவு பெறுமல் துயரமுற்றதைக் கண்டு அவைகளின் மீது அனுதாபமுற்று, அகங் காரமுற்றிருந்த பிரமதேவரைத் தலையில் பலமுறை குட்டிப் பிறகு அவரைச் சிறையிலடைத்துத் தாமே சிருஷ்டித் தொழிலை நடத்தி வந்தார். பிறகு முக்க ணைந்தையின் கட்டளைப்படி முருகப்பெருமான் பிரமதேவரைச் சிறையினின் றும் விடுவித்து அவருக்குப் பிரணவத்தின் பொருளைப் போதித்து, அவர் மெய்ஞ்ஞானத்துடன் சிருஷ்டித் தொழிலைக் கைக்கொள்ளும்படி செய்தார்.

அவ்வாறு முருகப் பெருமான் பிரமதேவரைக் குட்டிச் சிறையில் அடைத்தது, அப்பெருமானுக்கு ஜீவராசிகளிடத்திலுள்ள அளவற்ற கருணையையே விளக்கிக் காட்டுகிறது.

இப்பாடலின் கடைசி அடியில், முருகப்பெருமான் வள்ளிநாயகியினிடத்தில் தமக்குள்ள காதலினால், வளை விற்கும் செட்டி பெண்பிள்ளைகள் இருக்குமிடத்துக்குத் தடையின்றிச் சென்று அவர்களுடன் தாராளமாகப் பேசலாமாகையினால், வளைச்செட்டி வேடம் தரித்து, வள்ளிநாயகி காவலாயிருந்த தினைப்புனத்துக்குப் போய், அந்நாயகியோடு தெய்வீகமாகக் கலந்து மகிழ்ந்த விஷயம் கூறப்பட்டிருக்கிறது. அச்செய்கை முருகப்பெருமானுக்கு ஜீவாத்மாவின்மீதுள்ள அளவற்ற ஆசையையே விளக்கிக்காட்டுகிறது. (உஎ)

*தானதன தானதந்த தானதன தானதந்த*
*தானதன தானதந்த—தனதான.*

**வா**தமொடு சூலைகண்ட மாலைகுலை நோவுசந்து
மாவலிவி யாதிகுன்ம மொடுகாசம்

வாயுவுட னேபரந்த தாமரைகள் பீனசம்பின்
மாதர்தரு பூஷணங்க ளெனவாகும்

பாதகவி யாதிபுண்க ளானதுட னேதொடர்ந்து
பாயலைவி டாதுமங்க இவையால்நின்

பாதமல ரானதின்க ணேயமற வேமறந்து
பாவமது பானமுண்டு வெறிமூடி

ஏதமுறு பாசபந்த மானவலை யோடுழன்று
ஈனமிகு சாதியின்க ணதிலேயான்

ஈடழித லானதின்பின் மூடனென வேதுமுன்பு
ஈரஅருள் கூரவந்து எனையாள்வாய் !

சூதமகிழ் பாலைகொன்றை தாதுவளர் சோலைதுன்றி
சூழுமதில் தாவி மஞ்சி னளவாகத்

தோரணநன் மாடமெங்கு நீடுகொடி யேதழைந்த
சுவாமிமலை வாழவந்த பெருமாளே !

(ப - ரை) சூதம் மகிழ் பாலை கொன்றை தாது வளர் சோலை - மாமரங்களும் மகிழமரங்களும் பாலை மரங்களும் கொன்றை மரங்களும் தாதுமாதுளை மரங்களும் வளர்ந்திருக்கும் சோலைகள், துன்றி - நெருங்கி, சூழும் மதில்

தாவி - அவைகளைச் சூழ்ந்திருக்கும் மதில்சுவர்களை விட அதிக உயரமானவை களாய், மஞ்சின் அளவு ஆக - மேகத்தை அளாவியிருக்க, தோரண நன் மாடம் எங்கும் - மகர தோரணங்கள் கட்டப்பெற்ற (திருவிழாப் பொலிவை என்றும் பெற்றிருக்கும்) அழகிய உப்பரிகைகளின்மீது எல்லா விடங்களிலும், நீடு கொடியே தழைந்த - உயரமான கொடிகள் (பறந்து) விளங்கிக்கொண்டிருக்கும், சுவாமிமலை வாழ வந்த பெருமாளே - சுவாமிமலையானது மேன்மை யடையும் வண்ணம் அத்தலத்தில் எழுந்தருளிய பெருமாளே! வாதம் ஒடு சூலை கண்ட மாலை சூலைநோவு சந்துமாவலி வியாதி குன்மம் ஒடு காசம் - வாதரோகங்கள் சூலை கண்டமாலை சூலைநோவு இடுப்பிலுண்டாகும் பெருவலியான வியாதி குன்மம் காசம், வாயு உடனே பரந்த தாமரைகள் பீனசம் - வாயுதோஷத்தினால் உண்டாகும் வியாதிகள் படர் தாமரை என்னும் படை நோய்கள் மூக்குச்சளிநோய், பின் மாதர்தரு பூஷணங்கள் என ஆகும்-பிறகு (விலை) மாதர்களைச் சேர்ந்ததனால் கிடைத்த ஆபரணங்கள் என்று சொல்லத்தக்க, பாதக வியாதி புண்கள் - கர்ம ரோகங்கள் புண்கள், ஆனதுடனே தொடர்ந்து - ஆகிய வியாதிகள் வெகு சீக்கிரத்தில் பீடித்து விலங்கிட்டது போல் (அசையமுடியாமற் செய்ய), பாயலை விடாது மங்க - படுக்கையிலேயே இடைவிடாது கிடந்து பலங்குன்றிப்போக, இவையால் - இந்த வியாதிகளினால், நின் பாதமலரானதின் கண் - நினது பாத மலர்களின் மீது, (இருந்த), நேயம் அறவே மறந்து - அன்பை முற்றிலும் மறந்து, பாவ மதுபானம் உண்டு - பாவச் செய்கைகளைச் செய்வதான கள்ளைக் குடித்து, வெறிமூடி - அறிவிழந்து மயக்கமுற்று, ஏதம் உறு பாச பந்தமான வலையோடு உழன்று - குற்றம் பொருந்திய உலகப்பற்று என்னும் ஆசையான வலையிற்சிக்கி அதிலேயே கலங்கித்திரிந்து, ஈனம் மிகு சாதியின் கண் அதிலே - மிகவும் இழிவான தொழிலையுடைய விலைமாதர்கூட்டத்திற் (கலந்து), யான் ஈடு அழிதலானதின்பின் - அடியேனுடைய பெருமை குறைந்த பிறகு, மூடன் என ஓதும் முன்பு - உலகத்தோர் அடியேனை மூடன் என்று பழிப்பதற்கு முன், உன் ஈர அருள் கூர-உனது குளிர்ச்சி பொருந்திய அருள்பெருக, வந்து எனை ஆள்வாய் - அடியேனை நாடி வந்து காத்தருளவேண்டும். (உஅ)

*தனதான தத்த னந்த தனதான தத்த னந்த*
*தனதான தத்த னந்த—தனதான.*

**வி**ழியால்ம ருட்டி நின்று முலைதூச கற்றி மண்டு
விரகான லத்த ழுந்த நகையாடி
விலையாக மிக்க செம்பொன் வரவேப ரப்பி வஞ்ச
விளையாட லுக்கி சைந்து சிலநாள்மேல்
மொழியாத சொற்கள் வந்து சிலுகாகி விட்ட தொந்த
முழுமாயை யிற்பி ணங்கள் வசமாகி

முடியாது பொற்ச தங்கை தருகித வெட்சி துன்று
முதிராத நற்ப தங்கள் தருவாயே!

பொழிகார்மு கிற்கி ணைந்த யமராஜ னுட்க அன்று
பொருதாளெ டுத்த தந்தை மகிழ்வோனே!

புருகூத னுட்கு ளிர்ந்த கனகாபு ரிப்ர சண்ட
புனிதாம்ரு கக்க ரும்பு புணர்மார்பா!

செழுவாரி சத்தி லொன்று முதுவேதன் வெட்க அன்று
திருவாய்மை செப்பி நின்ற முருகோனே!

திரளாம ணிக்கு லங்கள் அருணோத யத்தை வென்ற
திருவேர கத்த மர்ந்த பெருமாளே!

(ப - ரை) பொழி கார் முகிற்கு இணைந்த - மழையைப் பொழிய வரும் கரிய மேகத்துக்குச் சமானமான (உருவத்தையுடைய), யமராஜன் உட்க - யம ராஜன் அஞ்சும்படி, அன்று - (மார்க்கண்டன் என்னும் சிறுவனைக் காத்தருளிய) அந்நாள், பொரு தாள் எடுத்த தந்தை மகிழ்வோனே - (யமனுடன்) போர் புரிவ தற்காகக் காலைத் தூக்கியருளிய தந்தையான சிவபெருமான் கண்டு மகிழும்படி யான மிக்க பெருமை வாய்ந்தவனே!, புருகூதன் உள் குளிர்ந்த-இந்திரன் மனம் குளிரும்படி செய்தவனும், கனகாபுரி ப்ரசண்ட புனிதா - (அவன் பிரதானநகர மான) கனகாபுரிக்குள் வெற்றிவீரனாய்ப் பிரவேசித்தவனுமான சுத்தனே!, ம்ருகக் கரும்பு புணர் மார்பா - மான் வயிற்றிற் பிறந்த இனிய மகளான வள்ளிநாயகி தழுவும் மார்பை யுடையவனே!, செழு வாரிசத்தில் ஒன்றும் முது வேதன் வெட்க - மாட்சிமை வாய்ந்த நினது பாதமலர்களில் தன் முடிகள் பொருந்த வணங்கிய பழைய பிரமதேவர் (அதுவரை தாம் உண்மைப் பொருளை யறியா மல் பாலனாகிய உன்னிடம் அதைக் கற்றுக்கொள்ளவேண்டியிருந்ததை நினைத்து) வெட்கமுற்று நிற்க, அன்று திருவாய்மை செப்பி நின்ற முருகோனே - அந்நாள் சிறந்த உண்மைப் பொருளை உபதேசித்தருளிய ஞான சொரூபியே!, திரளாம் மணிக்குலங்கள் அருணோதயத்தை வென்ற - தன்னிடத்தே பொருந்தியுள்ள பல வகைப்பட்ட நவரத்தினங்களின் கூட்டங்கள் உதயகாலச் சூரியன் தோல்வி யடையும்படி இனிய பேரொளி வீசும், திருவேரகத்து அமர்ந்த பெருமா ளே - திருவேரகம் என்னும் சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே! விழியால் மருட்டி நின்று - தங்கள் விழிகளினால் (தெருவிற் செல்லும் ஆடவர் மனம்) மயங்கும்படியாக (வாயிலில்) நின்று, முலை தாசு அகற்றி - தனங்களின்

மீதுள்ள புடவையை விலக்கிக்கொண்டு, மண்டு விரக அனலத்து அழுந்த நகையாடி-(ஆடவர்) மிகுந்த விரகதாபமாகிய தீயில் வீழ்ந்து அழுந்தும்படி நகைத்துக் காட்டி, விலையாக மிக்க செம்பொன் வரவே - (தங்களுடைய புணர்ச்சிக்கு விலையாக மிகுந்த செம்பொன் கையில் வந்தவுடன், பரப்பி - பஞ்சணையை விரித்து, வஞ்ச விளையாடலுக்கு இசைந்து - மெய்க்காதலின்றிக் கபடமாகச்செய்யும் மதன லீலைகளுக்கு இணங்கி, சிலநாள் மேல் - சில காலம் சென்ற பிறகு, மொழியாத சொற்கள் வந்து - சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லி, சிலுகாகிவிட்ட - சண்டை போட்டு விலகும், தொந்த முழுமாயை இல் பிணங்கள் வசமாகி - என்னைப் பீடித்து வரும் முழு மாயையை ஒத்த பிணங்களான விலைமாதர்களுக்கு அடிமையாகி, முடியாது - பிறவியைப் பாழாக்கிக் கொள்ளாமல், பொன் சதங்கை தருகீதம் - அணிந்துள்ள பொன்னாலாகிய சதங்கைகளின் இனிய வொலி பொருந்தப் பெற்றவைகளும், வெட்சி தூன்று - வெட்சி மலர் மாலையை அணிந்தவைகளும், முதிராத - என்றும் இளமைமாறும விருப்பவைகளும், நல் - நன்மையைத் தருபவைகளுமான, பதங்கள் தருவாயே - நினது பாத மலர்களை அடியேனுக்குத் தந்தருளவேண்டும்!

(வி - ரை) பகைவர்களின் கூட்டத்தைத் துரத்துவோர் அக்காலத்தில் மார்பில் வெட்சிமலர் மாலை அணிந்து கொள்வது வழக்கம். அடியார்களது பகைமையை ஒழிப்பது முருகப்பெருமானது பாதாரவிந்தங்களே யாதலால், அப்பெருமான் வெட்சிமலர் மாலையைத் தமது பாதங்களில் அணிந்து கொண்டிருக்கிறார். சிவபெருமான் தம்மைச் சரண்புகுந்த பக்தனாகிய மார்க்கண்டனது உயிரைக் காப்பதற்காகத் தமது பாதாரவிந்தங்களில் ஒன்றைத்தூக்கி அவனை வீழ்த்தினார். அவ்வாறு தமது பக்தனது பகைவனைத் துரத்த ஒருமுறை தமது பாதங்களில் ஒன்றைத் தூக்கிய சிவபெருமான், தமது செல்வப் புதல்வராகிய குமாரசுவாமி தமது அடியார்களது பகையை ஒழித்து அவர்களைத் தாம் காப்பது திண்ணமென உணர்த்தும் பொருட்டுச் சதாகாலமும் தமது இரு சரணங்களிலும் வெட்சிமாலையை அணிந்துகொண் டிருப்பதைக் கண்டு, தம்மைவிடத் தமது புதல்வன் கருணையிற் சிறந்தவன் என்று மனமகிழ்ச்சியுற்றார் போலும்! முருகப்பெருமானது பாதமலர்கள் முதிராமல் இருப்பதற்குக் காரணமென்னவெனில், வேறு கதியின்றித் தியங்கி மனந்தளர்ந்து தமது பாதமலர்களில் அடைக்கலம்புக வருபவர்கள், தாம் குழந்தையாக விருந்தால் தம்மிடம் அச்சமின்றி வருவார்களென்று அறிந்து, அப்படி வருபவர்களது கண்கள் ஆவலுடன் நாடும் புகலிடமான தமது சரணங்கள் எப்போதும் இளமை பொருந்தியிருக்க வேண்டுமென்று விதித்தார். அவ்வாறு அவரது பாதங்கள் இளமை பொருந்தியவைகளாக இருந்த போதிலும், அவர் முற்றிய பன்னிரு தோள்களுடன் நம்மை இரக்ஷிக்கும் சக்தியுடையவராக இருக்கிறார். (உக)

*தனதன தனந்த தான தனதன தனந்த தான*
*தனதன தனந்த தான—தனதான.*

இருவினை புனைந்து ஞான விழிமுனை திறந்து நோயி
　　னிருவினை யிடைந்து போக　　மலமூட

இருளற விளங்கி யாறு முகமொடு கலந்து பேத
　　மிலையென இரண்டுபேரு　　மழகான

பரிமள சுகந்த வீத மயமென மகிழ்ந்து தேவர்
　　பணியவிண் மடந்தை பாத　　மலர்தூவப்

பரிவுகொ டநந்தகோடி முநிவர்கள் புகழ்ந்து பாட
　　பருமயி லுடன்கு லாவி　　வரவேணும்!

அரியய னறிந்தி டாத அடியிணை சிவந்த பாதம்
　　அடியென விளங்கி யாடு　　நடராஜன்

அழலுறு மிரும்பின் மேனி மகிழ்மர கதம்பெ ணாகம்
　　அயலணி சிவன்பு ராரி　　யருள்சேயே!

மருவலர் கள்திண்ப ணார முடியுடல் நடுங்க ஆவி
　　மறலியு ணவென்ற வேலை　　யுடையோனே!

வளைகுல மலங்கு காவி ரியின்வட புறஞ்சு வாமி
　　மலைமிசை விளங்கு தேவர்　　பெருமாளே!

(ப - ரை) அரி அயன் அறிந்திடாத - திருமாலும் பிரமதேவரும் வெகு காலம் தேடியும் அறியமுடியாமற் போன, அடி இணை சிவந்த பாதம் - சிவந்த நிறமுள்ள இருபாதங்களே, அடி என விளங்கி ஆடும் நடராஜன் - உலகங்களுக்கெல்லாம் ஆதிகாரணம் என்னும் உண்மையை விளக்கிக் காட்டி நடனஞ் செய்யும் நடராஜனும், அழல் உறும் இரும்பின் மேனி மகிழ் - தீயிலிடப்பட்டுக் காய்ந்து சிவந்துள்ள இரும்பை யொத்த தமது திருமேனியைக் கண்டு மகிழ்ச்சி அடைபவரும், மரகதம் பெண் - மரகதத்தைப் போல் பச்சை மேனி யுடையவருமான பார்வதி தேவியாரை, ஆகம் அயல் அணி சிவன் - தமது தேகத்திலேயே ஒருபுறத்தில் அமர்த்திக் கொண்ட சிவபெருமானும், புராரி - திரிபுரங்களை அழித்தருளியவருமான எந்தை, அருள் சேயே - உலகத்தின் மீது அருள் கூர்ந்து உதவிய செல்வப் புதல்வனே!, மருவலர்கள் - பகைவர்களுடைய, திண் பண் ஆர முடி உடல் நடுங்க - வலிமை பொருந்தப்பெற்று அழகிய மாலைகள் அணிந்துள்ள தலையும் தேகமும் அச்சத்தினால் நடுங்கும் வண்ணமும்,

ஆவிமறலியுண - அவர்களது உயிரை இயமன் உண்ணும்படிக்கும், வென்ற வேலை உடையோனே - அவர்களை வென்ற வேலை ஆயுதமாகக் கொண்டவனே!, வளைகுலம் அலங்கு காவிரியின் - சங்குக் கூட்டங்கள் (புரண்டு புரண்டு) ஒளி வீசும் காவிரி நதியின், வடபுறம் சுவாமிமலை மிசை விளங்கு - வடபுறத்திலுள்ள சுவாமிமலையின்மீது சிறப்பாக எழுந்தருளியிருக்கும், தேவர் பெருமாளே - தேவர்கள் நாயகனே!, இருவினை புனைந்து - (அடியேன்) பெரிய காரியமான சிவயோகத்தைச் செய்து, ஞான விழி முனை திறந்து - ஞானவிழியாகும் லலாட நந்திச்சுழி திறக்கப்பெற்று, நோயின் இருவினை இடைந்து போக - (ஞானம்பெற்றதனால் மீண்டும் மீண்டும் பிறந்திறக்கச் செய்யும்) பவநோய்க்குக் காரணமான நல்வினை தீவினைகள் தோற்று ஓடவும், மலம் ஊட இருள் அற விளங்கி - ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மலங்கள் அகலவும் அஞ்ஞானவிருள் ஒழிந்து ஞானவொளி (மனத்திற்) பரவவும் (பெற்று), ஆறுமுகமொடு பேதம் இலையென கலந்து - (கருணை பொழியும்) நினது ஆறு திருமுகங்களில் ஈடுபட்டு அவைகளுடன் வித்தியாசமில்லை யென்று சொல்லும்படி கலந்து, இரண்டு பேரும் - அடியேனும் (அடியேனது) நாயகனாகிய நீயும், அழகான பரிமள சுகந்த வீதமயம் என மகிழ்ந்து - நல்ல வாசனை பொருந்திய அழகிய மலரும் அதனின்றும் அவிழ்ந்து எங்கும் பரவும் திவ்யமான மணமும் இரண்டறக் கலந்திருப்பதுபோல் கலந்து மகிழ்ச்சியுற்று, தேவர் பணிய - தேவர்கள் நம்மை வணங்கவும், விண் மடந்தை பாத மலர்தூவ - தேவமாதர்கள் நமது பாதங்களில் புஷ்பங்களைச் சொரியவும், பரிவு கொ(ண்)டு அநந்தகோடி முனிவர்கள் புகழ்ந்து பாட - எண்ணிறந்த பலகோடிக் கணக்கான முநிவர்கள் அன்புடன் நம்மைப் புகழ்ந்து பாடவும், பரு மயிலுடன் - மலைபோன்ற மயில்மீது ஏறி, குலாவி வரவேணும்-உல்லாசமாய்ச் சுற்றிவரவேண்டும்.

(வி - ரை) திருமாலும் பிரமதேவரும் அகங்காரத்தினால் தாமே பரம்பொருள் என்று மருட்சியுற்றிருந்ததனால் சர்வேசுவராகிய சிவபெருமானது பாத மலர்களைக் காணமுடியாமற் போயிற்று. ஆணவத்தை யொழித்துத் தான் அடிமை என்பதை உணர்ந்தாலல்லவா ஆண்டவனைக் காண மார்க்கமுண்டு? திருமாலும் பிரமதேவரும் அகங்காரத்தினால் மருட்சியுற்ற மனத்தினராய் அறியமுடியாமற்போன பாதத்தாமரைகளே சகல அண்டங்களுக்கும் ஆதிகாரணமென விளக்கும் பொருட்டு, எம்பெருமான் பொன்னம்பலத்தில் நிர்த்தனஞ்செய்து தமது பாதங்களின்மீது புரளும் சதங்கைகளின் சப்தத்துக்கு இசைய உலகங்களிலுள்ள சராசரங்கள் யாவும் இயங்கி உலவும்படி செய்கிறார். அப்படிப்பட்ட மூலகாரணனை நடராஜமூர்த்தியும், சத்தியைத் தமது வாமபாகத்தில் அமர்த்திக்கொண்ட அர்த்தநாரீசுவர மூர்த்தியுமான முக்கணெந்தை உலகத்தார்மீது கருணை கூர்ந்து அளித்தருளிய சச்சிதானந்த மூர்த்தியை, அஞ்ஞானம் முதலான பகைவர்களைக்

*கணப்பொழுதில் அழிக்கவல்ல ஞானசக்தியாம் வேலாயுதத்தைக் கரத்தில் பிடித்த வேலாயுதனை, சுவாமிமலையின் மீது எழுந்தருளியிருக்கும் தேவாதி தேவனைச் சுவாமிகள் விளித்து, தாம் சிவயோகத்திலமர்ந்து ஞானமுற்றுத் தமது இருவினைகளும் அஞ்ஞானமும் மும்மலங்களும் அகலப்பெற்று ஞானத்துடன் இரண்டறக்கலந்து களித்துத் திரியவேண்டுமென்ற தமது ஆசையைத் தெரிவிக்கிறார்.* (௩௦)

*தானன தனதனத் தான தனதன*
*தானன தனதனத் தான தனதன*
*தானன தனதனத் தான தனதன—தனதான.*

ஆனாதை பிருதிவிப் பாச நிகளமும்
மாமாய விருளுமற் றேகி பவமென
வாகாச பரமசிற் சோதி பரையைய டைந்துளாமே

ஆறாறி னதிகமக் க்ராய மநுதினம்
யோகிச ரெவருமெட் டாத பரதுரி
யாதீத மகளமெய்ப் போத முதயம னந்தமோகம்

வானாதி சகலவிஸ்த் தார விபவரம்
லோகாதி முடிவுமெய்ப் போத மலரயன்
மாலீச ரெனுமவற் கேது விபுலம சங்கையால்நீள்

மாளாத தனிசமுற் றுய தரியநி
ராதார முலைவில்சற் சோதி நிருபமு
மாறாத சுகவெளத் தானு வுடனினி தென்றுசேர்வேன்?

நானாவி தகருவிச் சேனை வகைவகை
சூழ்போது பிரபலச் சூரர் கொடுகெடு
நாவாய்செல் கடலடைத் தேறி நிலைமையி லங்கைசாய

நாலாறு மணிமுடிப் பாவி தனையடு
சீராமன் மருகமைக் காவில் பரிமள
நாவீசு வயலியக் கீசர் குமாரக டம்பவேலா!

கானாறு மெயினர்தற் சாதி வளர்குற
மானோடு மகிழ்கருத் தாகி மருடரு
காதாடு முனதுகட் பாண மெனதுடை நெஞ்சுபாய்தல்

காணாது மமதைவிட் டாவி யுயவருள்
பாராயெ னுரைவெகுப் ப்ரீதி யிளையவ
காவேரி வடகரைச் சுவாமி மலையுறை    தம்பிரானே !

(ப - ரை) நானுவித கருவிச் சேனை வகை வகை சூழ்போது - பலவித மான ஆயுதங்களைத் தரித்த சேனையானது (தேர்ப்படை, யானைப்படை, குதிரைப் படை, காலாட்படை என்னும்) பலவகைகளாகப் பிரிந்து புடைசூழ்ந்தகாலத்தில், பிரபலச் சூரர் கொடு - கீர்த்திபெற்ற (சுக்கிரீவன், அங்கதன், நீலன், ஜாம்பவன், ஹநுமான் முதலிய) வீரர்களைத் தம்முடன் அழைத்துக்கொண்டு சென்று, நெடு நாவாய் செல் கடல் அடைத்து ஏறி - கப்பல்கள் செல்லும் நீண்ட கடலை (மலை களினாலும் குன்றுகளினாலும்) அடைத்துக் கரையேறி, நிலைமை இலங்கை சாய - உறுதியாகவுள்ள இலங்கையானது (அவ்வாறு கரையேறிய சேனையின் பாரத் தைத் தாங்கமுடியாமல்) நிலைகுலையும்படிசெய்து, நாலு ஆறு மணிமுடிப்பாவிதனை அடு சீராமன் மருக - மகுடங்களைத் தரித்த பத்துத் தலைகளையுடைய பாவியான இராவணனைச் சங்கரித்த ஸ்ரீராமபிரானது மருகனே !, மை காவில் பரிமளம் நா வீசு - (அடர்ந்து வளர்ந்து) இருண்ட சோலையின் வாசனை அருகில் வீசப் பெற்ற, வயலி அக்கீசர் குமர - வயலூரில் அக்கீசர் எனும் திருநாமம் பெற்று எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய (செல்வப்) புதல்வனே !, கடம்ப - கடம்பமாலையை அணிந்துகொண்டவனே !, வேலா - (ஞானசக்தியாம்) வேலா யுதத்தைக் கைபிற்பிடித்தவனே !, கான் ஆளும் எயினர்தன் சாதி வளர் - காட்டில் அரசாளும் வேடர்கள் ஜாதியில் வந்து வளர்ந்த, குறமாேடு மகிழ் கருத்தாகி - குறப்பெண்ணான வள்ளிநாயகியுடன் கலந்து களிக்க வேண்டுமென்ற ஆசை மனத்திற் குடிகொள்ளப்பெற்று, (அது காரணத்தி னல்) காதாடும் - காதுகள் வரையில் நீண்டு சஞ்சலிக்கும் இயல்புடையன வும், மருள்தரு - (நினது பாதார விந்தங்களை அடையவேண்டுமென்ற) மயக் கத்தை உண்டுபண்ணும் இயல்புடையனவுமான, உனது கண் பாணம் - உனது கண்களாகிய பாணங்கள், எனதிடை நெஞ்சு பாய்தல்காணாது - அடியே னது மனத்தினுட் செல்லா (வெனினும்), மமதை விட்டு ஆவி உ(ய்)ய அருள் பாராய் என உரை - "அகங்காரத்தை யொழித்து ஜீவன் கடைத்தேறுவதற்கு எனது அருளை நாடுவாய்" என்னும் சிறந்த போதகத்தைப் போதித்தருளிய, வெகு ப்ரீதி இளையவ - அன்பு மிகுதியாகவுள்ள இளையோனே !, காவேரி வட கரை சுவாமிமலை உறை தம்பிரானே - காவிரி நதியின் வடகரையிலுள்ள ஸ்வாமி மலையில் எழுந்தருளி யிருக்கும் நாயகனே !, ஆறாத பிருதிவி பாச நிகளமும் - நீங்காத பூலோகப் பாசமான விலங்கும், மாமாய இருளும் - மகா மாயையான பரம மாயையினல் ஏற்பட்ட அஞ்ஞான விருளும், மற்று (அசை), ஏகி பவம் என - (அடியேனை விட்டு) விலகி அழிந்தோமென (அழியவும்), ஆகாச பரம சித்

சோதி பரையை அடைந்து - ஆகாசத்தில் பரத்துவம் பொருந்தி மகா மாயையின் ஜோதியாக விளங்கும் சிவசக்தியை அறிந்து, உள் ஆம் (ஏ - அசை) - அதனுள்ளே பொருந்தியுள்ள, ஆறு ஆறின் - முப்பத்தாறு சிவதத்துவங்களைக் கடந்து நிற்பதும், அக்ராயம்-யாவற்றிற்கும் தலைமை பூண்டு நிற்பதும், அநுதினம் யோகீசர் எவரும் எட்டாத - தினந்தோறும் (நிஷ்டையில் அமரும்) யோகிகளுள் தலைமை பெற்றவர்கள் எவரும் அறியமுடியாததாக, பர துரிய அதீதம் - துரிய நிலையையும் கடந்து நிற்கும் பரம் பொருளும், அகளம் - விலங்கை யொத்த பாசத்தினால் பாதிக்கப் படாததும், எப்போதும் உதயம் - சதா காலமும் விளங்கிக் கொண்டிருப்பதும், அநந்தம் - எல்லையில்லாததும், ஓகம் - (ஜீவராசிகளுக்கெல்லாம்) புகலிடமானதும், வான் ஆதி சகல விஸ்தார விபவரம் - ஆகாயம் முதலான எல்லா விடங்களிலும் நிறைந்திருக்கும் பெருமை பொருந்தியதும், லோக ஆதி முடிவு - உலகத்தின் மூலகாரணமானதும் உலகம் முடிவில் ஒடுங்கும் இடமானதும், மெய்ப்போத மலர் அயன் - மெய்ப்போதகம் அடங்கிய வேதங்களைப்போதிக்கும் ஆசாரியரும் திருமாலின் திருநாபிக்கமலத்தில் வீற்றிருப்பவருமான பிரமதேவர், மால் ஈசர் - திருமால் உருத்திரர், எனும் அவற்கு எது-என்று சொல்லப்படும் மும்மூர்த்திகளுக்கு மூலகாரணமாய் இருப்பதும், விபுல மசங்கையால் நீள் மாளாதது - பூவுலக மயக்கத்தினால் ஒளி அழியப்பெறாததும், அனிசம் முற்று ஆயுது - எப்போதும் இறுதியிற்போய்ச் சேரும் இடமானதும், அரிய நிராதாரம் - தனக்கு யாதொரு ஆதாரமுமின்றிக் கருதரிய நிலைமையிலிருப்பதும், உலைவு இல் சத் சோதி - அழிவில்லாத உண்மைச் சோதியும், நிருபமும் - உருவமற்றதும், மாறாத சுக வெ(ள்)ள தானு உடன் - மாறுதலடையாமல் நிலைத்திருக்கும் சுக வெள்ளமானதும் புகலிடமானதுமான பரம்பொருளுடன், இனிது என்று சேர்வேன் - எந்நாளில் சந்தோஷமாய்க் கலப்பேனோ?

(வி - ரை) முருகப்பெருமானுடைய கடைக்கணோக்கத்தின் இயல்பு யாதெனில், ஜீவனது மனத்தில் அம்புபோற் பாய்ந்து அவரது பாதமலர்களை யடையவேண்டுமென்ற ஆசையை உதிக்கச்செய்து அகங்காரத்தை யழித்து, அப்பெருமானது அருளை யூட்டுவித்து முத்தியைத் தருவதுவே ஆதலின், அப் பெருமான் ஒவ்வொருவரையும் நோக்கி, "அகங்காரத்தை யொழித்து, முத்தியடைவதற்கு அவசியமான எனது அருளைப்பெறும் மார்க்கத்தைத் தேடுவாய்!" என்று முத்தியடைவதற்குரிய நெறியை உபதேசிக்கிறார். முருகப்பெருமானது கடைக்கணோக்கமானது அப்பெருமானது பாதாரவிந்தங்களை அடையவேண்டுமென்ற மயக்கத்தை விளைவிக்குமாதலால், 'மருள் தரு கட்பாணம்' என்று கூறப்பட்டது. மற்றும் அக்கடைக்கணோக்கத்தின் இயல்பு அகங்காரத்தை யழிப்பது என்பது 'மமதைவிட் டாவியுயவருள் பாராய்' என்ற விடத்துக் குறிப்பாகக் கூறப்பட்டிருப்பதனால், காதாடு கட்பாணம் என்பதற்கு அகங்காரத்தை யழிக்கும் இயல்புடைய கடைக்கணோக்கமாகிய அம்பு என்று பொருள் கூறுவது சிறப்

பாகும். காதுதல் - கொல்லுதல். அகங்காரம் ஒழிந்த பிறகுதான் உலகப் பாசம் நீங்கி, உலகமாயையினுல் ஏற்பட்ட அஞ்ஞானம் ஒழியும்; அதன்பிறகு தான் பரமமாயையின் தன்மைவிளங்கி, உலகத்தில் காணப்படும் பூதபேதங் கள் பொய்யெனும் உணர்ச்சி வந்து, எங்கும் சோதியாகவுள்ள ஆகாசம் காணப் படும். அதன் பிறகு தான் நிராகாசமாகவும், நிஷ்களங்கமாகவும், துரியாதீத மாகவும், எங்கும் நிறைந்ததாகவும், அழியாத புகலிடமாகவும், துக்கம் என்பது சிறிதும் கலப்பில்லாத சுகவெள்ளமாகவும் உள்ள பரம்பொருளுடன் இரண்ட றக் கலப்பதற்கு மார்க்கமுண்டாகும். (௩௧)

தனதான தத்த தனதான தத்த
தனதான தத்த—தனதான.

செகமாயை யுற்றெ னகவாழ்வில் வைத்த
திருமாது கெர்ப்ப — முடலூறித்

தெசமாத முற்றி வடிவாய்நி லத்தில்
திரமாய ளித்த — பொருளாகி

மகவாவி னுச்சி விழியான னத்தில்
மலைநேர்பு யத்தி — லுறவாடி

மடிமீத டுத்து விளையாடி நித்த
மணிவாயின் முத்தி — தரவேணும்!

முகமாய மிட்ட குறமாதி னுக்கு
முலைமேல ணைக்க — வருநீதா!

முதுமாம றைக்கு ளொருமாபொ ருட்குள்
மொழியேயு ரைத்த — குருநாதா!

தகையாதெ னக்கு னடிகாண வைத்த
தனியேர கத்தில் — முருகோனே!

தருகாவி ரிக்கு வடபாரி சத்தில்
சமர்வேலெ டுத்த — பெருமாளே!

(ப - ரை) முக மாயம் இட்ட குறமாதினுக்கு - முகத்தின் அழகினுல் நின்னை மயக்கின குறப்பெண்ணை வள்ளிநாயகிக்கு, முலைமேல் அணைக்க வரு(ம்) நீதா - அத்தேவியார் நாயகனுகிய நின்னை அணைத்துக்கொண்டு களிக்கு

மாறு வந்த நீதிமானே !, முது மா மறைக்குள் ஒரு மா பொருட்கு - பழமையான சிறந்த வேதங்களுக்குள் பொருந்தியுள்ள ஒப்பற்ற சிறந்த பொருள் ஒன்றுக்கு (பிரணவத்துக்கு), உள்மொழியே உரைத்த குருநாதா - அந்தரங்கப் பொருளை உபதேசித்தருள குருவாய் வந்த நாதனே !, தகையாது எனக்கு உன் அடி காண வைத்த - அடியேன் (துயரத்தினால் வருந்தி) இளைக்காமல் உனது பாதார விந்தங்களைக் காணும்படி செய்த (பெருமானாகிய), தனி ஏரகத்தின் முருகோனே - ஒப்பற்ற தலமாகிய ஏரகம் என்னும் ஸ்வாமி மலையில் எழுந்தருளியிருக்கும் ஞானவாசனை வீசும் நாதனே !, தரு காவிரிக்கு வடபாரிசத்தில் - வளப்பத்தைக் கொடுக்கும் காவிரியாற்றின் வடபாகத்தில் (உள்ள அத்தலத்தில்), சமர்வேல் எடுத்த பெருமாளே - போருக்குரிய வேலாயுதத்தைக் கையிலெடுத்த பெரியோனே !, செகமாயை உற்றெ(றே)ன் - உலகமாயையினால் பீடிக்கப்பட்டுள்ள அடியேனது, அக வாழ்வில் வைத்த திருமாது - அகவாழ்க்கையில் (மனத்தினுள் வாழும் வாழ்க்கையில்) நீ அமர்த்திவைத்த (அந்தக்கரணமான) நலமுற்ற பெண்ணினுடைய, கெர்ப்பம் உடலூறி தெசமாதம் முற்றி - கர்ப்பத்தில் சேர்ந்து உடல் பருக்கப்பெற்று பத்துமாத காலம் அதில் தங்கி முதிர்ந்து, வடிவாய் நிலத்தில் திரமாய் அளித்த பொருளாகி - குழந்தையின் உருவத்துடன் பூமியில் அவள் உறுதியாகப் பெற்றெடுத்த பொருளாகி, மக அவாவின் உச்சி விழி ஆனனத்தில் மலைநேர் புயத்தில் உறவாடி - மிகுந்த ஆசையுடன் தலையின் உச்சி கண்கள் முகம் மலைபோல் பருத்த தனபாரங்கள் இவைகளுடன் குலாவி, மடிமீது அடுத்து விளையாடி - மடிமீது அமர்ந்து விளையாடி, நித்தம் மணி வாயில் முத்தி தரவேணும் - தினந்தோறும் நினது அழகிய வாயினால் முத்தம் தரவேண்டும்.

(வி - ரை) வள்ளிநாயகியினுடைய ஆசையைப் பூர்த்திசெய்வதற்குத் தக்க சமயத்தில் வந்து உதவியவரும், சிறந்த வேதங்களில் அடங்கிய பிரணவத்தின் அந்தரங்கப் பொருளை எடுத்துரைத்த ஞானதேசிகருமான முருகப்பெருமானை விளித்துச் சுவாமிகள் பின் வருமாறு பிரார்த்திக்கிறார் :— உலகமாயையினால் பீடிக்கப்பட்டிருக்கும் அடியேன் வருந்தி இளைக்காமலிருக்குமாறு தேவரீர் பாத தரிசனம் தந்தருளியதனால் உண்மையான பொருள் யாதென்று உணர ஆராயத் தொடங்கினேன். அவ்வாறு ஆராயத்தொடங்குவதே ஞானத்தை அடைவதற்குரிய நெறியாதலின், அடியேனுடைய அந்தக்கரணமானது ஆராயும் நெறியிலேயே நின்று மேன்மேலும் அறிவு பெருகப் பெற்றுத் தக்க பருவத்தில் மெய்ஞ்ஞானத்தின் சொரூபமான தேவரீரது பாதார விந்தங்களை யடைந்து, அந்த மெய்ஞ்ஞானத்துடன் கொஞ்சிக்குலாவி, இறுதியில் தமது திருவாய்மலரினால் வாவென்று அழைக்கப்பட்டு முத்திபெறவேண்டும். (௩உ)

தனனதன தானந் தனனதன தானந்
தனனதன தானந்—தனதான.

கடாவினிடை வீரங் கொடாமலினி தேறுங்
கடாவினிக ராகுஞ் சமனாரும்
கடாவிவிடு தூதன் கெடாதவழி போலுங்
கனவில்விளை யாடுங் கதைபோலும்
இடாதுபல தேடுங் கிராதர்பொருள் போலிங்
கிராமலுயிர் கோலிங் கிதமாகும்
இதாமெனிரு போதும் சதாவின்மொழி யாலின்
றியானுமுனை யோதும் படிபாராய்!
விடாதுநட நாளும் பிடாரியுட னாடும்
வியாகரண ஈசன் பெருவாழ்வே!
விகாரமுறு சூரன் பகாரமுயிர் வாழ்வும்
விநாசமுற வேலங் கெறிவோனே!
தொடாதுநெடு தூரந் தடாதுமிக வோடுஞ்
சுவாசமது தானைம் புலனோடும்
சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேருஞ்
சுவாமிமலை வாழும் பெருமாளே!

(ப - ரை) விடாது நடம் நாளும் பிடாரியுடன் ஆடும் - ஓயாமல் தினந் தோறும் காளியுடன் (தில்லையில்) நிர்த்தனம் செய்யும், வியாகரண ஈசன் பெரு வாழ்வே - நிறைந்து எங்கும் நிற்பவரான சிவபெருமானுக்குச் செல்வப் புதல்வனாக அவதரித்து அவரது மனத்தைக் களிப்பித்தவனே!, விகாரம் உற சூரன் - (அகங்காரத்தினால் மருட்சியுற்று) ஒழுக்கம் தவறிய சூரபதுமனுடைய, பகாரம் உயிர் வாழ்வும் - அலங்காரமான உயிரும் வாழ்வும், விநாசம் உற - அழியுமாறு, வேல் அங்கு எறிவோனே - வேலாயுதத்தை அப்போர்க்களத்தில் பிரயோகித்தவனே! தொடாது நெடுதூரம் தடாது மிக ஓடும் - எதன்மீதும் படாமல் வெகுதூரம் தடைப்படாது மிகவும் வேகமாய் ஓடும், சுவாசம் அது தான் ஐம்புலன் ஓடும் - சுவாசமானது ஐந்து புலன்களுக்கும் செல்லப்பெற்று, சுபானம் உற ஞானம் தபோதனர்கள் - ஞானமாகிய அமுதத்தைக் குடித்துள்ள தவச்செல்வர்கள், சேரும் - வந்து தங்கும், சுவாமிமலை வாழும் பெருமாளே - சுவாமிமலை என்னும் திவ்யத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, கடாவினிடை வீரம் கெடாமல் இனிது ஏறும் - எருமைக்கடாவின்மீது தனது வீரத்தன்மைக்குப் பழு

துண்டாகா வண்ணம் சுகமாக ஏறிச் சவாரிசெய்பவரும், கடாவின் நிகராகும் சம ஞர் (உம்-அசை),-பலத்திலும் நிறத்திலும் (தமது வாகனமாகிய) கடாவை யொத் திருப்பவருமாகிய யமராஜன், கடாவிவிடுதூதன் கெடாத வழிபோலும்-செலுத்தி விடும் யமதூதன் வழிதவருதது போலவும், கனவில் விளையாடும் கதைபோலும் - சொற்பனவஸ்தையில் (பொய்யாக) விளையாடிய கதைபோலவும், இடாது பல தேடும் கிராதர் பொருள்போல் - (வறியோர்க்குச்) சிறிதளவும் கொடுத்துத வாமல் பலவகைகளில் தேடிச்சேர்க்கும் பாவிகளின் பொருள் அழிவதுபோல, இங்கு இராமல் - இவ்வுலகத்தில் வாழ்நாளை வீணுகக் கழிக்காமல், உயிர் கோல் இங்கிதமாகும் இதாம் என - அடியேனது உயிரைச்சூழ்ந்து நின்று அதற்கு இனிமையையும் சுகத்தையும் தருபவன் நீயேயென்று, இருபோதும் - ஜாக்கி ரஈவஸ்தையிலுள்ள காலத்திலும் சொற்பனவஸ்தையிலுள்ள காலத்திலும், சதா - இடைவிடாமல் எப்போதும், இன் மொழியால் - இனிய சொற்களினல், (இன்று-அசை), யானும் உனை ஓதும்படி பாராய் - அடியேனும் உன்னைப் புகழு மாறு அடியேன் மீது நினது கடைக்கணேக்கத்தைச் செலுத்துவாயாக!

(வி - ரை) " வைத்தீட்டிஞரிழப்பர் வான்ரேய் மலைநாட, உய்த்தீட்டும் தேனீக் கரி " என்றபடி, தாங்கள் அனுபவிக்காமலும் இரப்பவர்க்கு ஈயாமலும் உலோபிகள் தேடி வைக்கும் பொருளானது அவர்களுடைய நோக்கத்துக்கு மாருக அழிவது நிச்சயம். யமராஜனுல் அனுப்பப்பட்டு ஒருயிரைக் கவர்வதற்கு வரும் யமதூதன் அவ்வுயிர் இருக்குமிடத்துக்குச் செல்லும் வழியறியாது தியங்கா மல் நேரே விரைந்து சென்று அவ்வுயிரைத் தவருமல் கொள்ளை கொள்வான். அது எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயம் உலோபிகளின்பொருள் அழிவது. அவர்கள் மகாமாயையினுல் சிருஷ்டிக்கப்பட்டுத் தோன்றும் பொய்யான வுலகத் தில் நிலையற்ற தன்மையினுலேயே செல்வம் (செல்வோம்) எனப் பெயர் பெற்ற பொய்யான பொருளைத் தேடுவது பொய்யான சொற்பனவஸ்தையில் விளையாடு வதை ஒத்திருக்கிறது. உலோபிகள் செல்வமானது அவர்கள் ஈட்டும்பொழுது கொண்ட நோக்கத்துக்கு விரோதமாக எப்படி அழிந்து போகுமோ அப்படியே ஒரு மனிதன் பொய்யான இவ்வுலகத்தில் ஆசா பாசங்களில் உழன்று இருவினை களை மேன் மேலும் செய்து பொய்யான வாழ்க்கையில் வாணுளைக் கழித்தால், தான் எடுத்த பிறவியின் நோக்கம் நிறைவேருமல் காலன் கைப்பட்டு அழிவது நிச்சயம். மானிடப் பிறவியின் நோக்கம் சர்வேசுவரனது அருளைப் பெற்று, முற்பிறப்புக்களிற் செய்த இருவினைகளின் பயனும் அழியப் பெற்று சர்வே சுவரனது பாதத் தாமரைகளான முத்தி வீட்டை அடைவதேயாகும். அவ்வாறு முத்தி பெறுவதற்கு உறுதியான நெறி என்னவெனில், நம்மைச் சூழ்ந்து நின்று காத்து வரும் அன்புமிக்க முருகப்பெருமானது அருளை நாடி, " இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும், இளமையுமு னழகுபுனை ஈராறு தோள் நிரையும், இருபதமும் அறுமுகமும் " நாம் ஓதுதல்தான். அப்படி ஓதுவதற்

கும் எம்பெருமானிடம் அன்பு பாராட்டுவதற்கும், "**ஆராப்புனை வேணி யன்சே யருள் வேண்டு மவிழ்ந்த வன்பாற் றூராப்புனை தன்னடையந் தாடோழல் வேண்டும்**" என்று கந்தரலங்காரத்திற் கூறியுள்ளபடி, அப்பெருமானது அருள் வேண்டுமாதலின், சுவாமிகள் தாம் எம்பெருமானைப் புகழ்ந்து பாடும்படியான அறிவு தமக்கு உண்டாகுமாறு தம்மைக் கடைக்கண்ணால் ஒரு முறை பார்க்கும்படி வேண்டுகிறார். முருகப்பெருமான் கடைக்கண் நோக்கத்தினால் ஏற்படும் நன்மைகள் கடைக்கணியல் வகுப்பில் வித்தாரமாக எடுத்துக் கூறப்பட்டிருக்கின்றன. திருவேளைக்காரன் வகுப்பிலும், "**ஆணவ வழுக்கடையு மாவியை விளக்கியனு பூதியடை வித்ததொரு பார்வைக்காரனும்**" என்று முருகப்பெருமானது கடைக்கணோக்கத்தின் பெருமை தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. (கூகூ)

*தானான தானதத்த தானான தானதத்த*
*தானான தானதத்த—தனதான.*

**நா**வேறு பாமணத்த பாதார மேகினைத்து
நாலாறு நாலுபற்று வகையான

நாலாரு மாகமத்தி னூலாய ஞானமுத்தி
நாடோறு நானுரைத்த நெறியாக

நீவேறெ னாதிருக்க நான்வேறெ னாதிருக்க
நேராக வாழ்வதற்கு னருள்கூர

நீடார்ச டாதரத்தின் மீதேப ராபரத்தை
நீகாணெ னாவனைச்செ லருள்வாயே!

சேவேறு மீசர்சுற்ற மாஞான போதபுத்தி
சீராக வேயுரைத்த குருநாதா!

தேரார்கள் நாடுசெட்ட சூரார்கள் மாளவெட்டு
தீராகு காகுறத்தி மணவாளா!

காவேரி நேர்வடக்கி லேவாவி பூமணத்த
காவார்சு வாமிவெற்பின் முருகோனே!

கார்போலு மேனிபெற்ற மாகாளி வாலைசத்தி
காமாரி வாமிபெற்ற பெருமாளே!

(ப - ரை) சே ஏறும் ஈசர் சுற்ற - இடபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமான் நின்னை வலம் வந்து வணங்கி நின்ற காலத்தில், மா ஞான போத புத்தி சீராகவே உரைத்த குருநாதா - சிறந்த ஞான போதகத்தை முறைப்படி போதித்தருளிய குருவான நாயகனே !, தேரார்கள் நாடு சுட்ட சூரார்கள் மாள வெட்டு தீரா - உண்மைப் பொருளை யறியாமல் மதியீனராய்த் திரிந்த தேவர்களது நாடான விண்ணுலகத்தை எரித்த அசுரர்களெல்லோரும் இறக்குமாறு அவர்களை வெட்டிய தீரா !, குகா - மெய்யடியாரது தூய்மையுற்ற இதயமான குகையில் வசிப்பவனே !, குறத்தி மணவாளா - குறக் குலத்தில் வளர்ந்த வள்ளி நாயகியை மணந்து கொண்டவனே !, காவேரி நேர் வடக்கிலே - காவிரி நதிக்கு நேரான வடபுறத்திலே, வாவி பூ மணத்த-தடாகங்களில் தாமரைகள் புஷ்பித்து மணம் வீசப்பெற்றதும், கா வார் சுவாமிவெற்பின் முருகோனே - சோலைகள் நிறைந்ததுமான சுவாமிமலையின்மீது எழுந்தருளி உலகமெங்கும் ஞான வாசனை பரவச் செய்பவனே !, கார் போலும் மேனி பெற்ற - மழை பொழிய வரும் மேகத்தைப் போல் கறுத்த மேனியை யுடைய, மா காளி வாலை சத்தி - மகா காளி வாலை சக்தி என்னும் பல திருநாமங்களையுடையவரும், காம அரி வாமி - காமனை அழித்த சிவபெருமானது வாமபாகத்தில் உறைபவருமாகிய உமாதேவியார், பெற்ற பெருமாளே - பெற்றெடுத்த புதல்வனே !, நா ஏறு பா மணத்த பாதார (விந்த) மே நினைத்து - நாவினால் பாடிய பாடல்க (ளான புஷ்ப மாலைகள் சாத்தப்பட்டு அவைக)ளின் மணம் வீசும் நினது பாதத் தாமரைகளைத் தியானித்து, நாலாறு நாலு பற்று வகையான - (சிவபெருமானது பாதமலர்களிற் போய்ச் சேர்வதற்குரிய வழிகளை யுணர்த்துபவைகளும்) இருபத்தெட்டு வகைப் பட்டவைகளும், நாலாரும் ஆகமத்தின் - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களுடையவைகளுமான சிவாகமங்களுக்குரிய, நூலாய ஞான முத்தி நாள்தோறும் நான் உரைத்த நெறியாக - நூல்களிற் பொருந்தி யுள்ள ஞானத்தையும் அதனால் பெறக்கூடிய முத்தியையும் அடியேன் தினந்தோறும் எடுத்துரைக்கும் செயலையே செய்துகொண்டு, நீ வேறு எனாது இருக்க நான் வேறு எனாது இருக்க-நீ வேறு நான் வேறு என்னும் வேற்றுமையுணர்ச்சி யற்று இருக்கவும், நேராக வாழ்வதற்கு - உண்மையான வாழ்க்கையை நான் வாழவும், உன் அருள் கூர - நினது அருள் சுரந்து (அடியேனுக்குக்) கிடைப்பதற்கு, நீடு ஆர் சட ஆதாரத்தின் மீதே-மேன்மை பொருந்திய ஆறு ஆதாரங்களுக்கு மேலே, பராபரத்தை நீ காண் என - பரம்பொருளை நீ காண்பாயாக ! என்பதான, அனை சொல் அருள்வாயே - அவ்வுப தேசத்தைச் செய்தருள்வாயாக !

(வி - ரை) தேவர்கள் யாவர்க்கும் மேலான தேவரான சிவபெருமானது சக்தியினளவை மறந்து, தக்ஷன் தங்களைத் தங்கள் பதவிகளினின்றும் தள்ளிவிடுவானோவென்று பயந்து, பதவிகளின்மீதுள்ள ஆசையினால் தக்ஷன் கட்டளைப்படி

நடக்க இசைந்து, சிவபெருமானை வணங்காமலும், பிரமதேவர் செய்யத்தொடங்கிய யாகத்தில் அவன் சிவபெருமானுக்கு அவிர்ப்பாகமளிக்கக் கூடாதென உரைத்ததற்கு இசைந்து மிருந்த காரணத்தினால், அவர்கள் சூரபதுமன் முதலான அசுரர்களால் பெருந்துன்பமடையவேண்டுமென நந்தியெம்பெருமான் அவர்களுக்குச் சாபங்கொடுத்தார். மதியீனத்தால் தங்கள் நாயகனைப் பணியாதொழிந்த காரணத்தினால், தேவர்களுடைய நாடான விண்ணுலகத்தைச் சூரபதுமனது மகனை பானுகோபன் தீக்கிரையாக்கினான்.

சிவாகமங்களாவன :— காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிசுவாசம், சுவாயம்புவம், அனலம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானசருவோத்தமம், பாரமேச்சுரம் கிரணம், பேதம், வாதுளம் என்பன.

ஆறு ஆதாரங்களாவன :— மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை. இவை மனித தேகத்தில் முறையே குதம், குய்யம், நாபி, இதயம், அடிநா, நெற்றி என்னும் ஸ்தானங்களில் பொருந்தியிருக்கின்றன. (௩௪)

தனதன தனதன தனதான
தனதன தனதன தனதான.

நிறைமதி முகமெனு மொளியாலே
நெறிவிழி கணையெனு நிகராலே
உறவுகொள் மடவர்க ளுறவாமோ ?
உனதிரு வடியினி யருள்வாயே !
மறைபயி லரிதிரு மருகோனே !
மருவல ரசுரர்கள் குலகாலா !
குறமகள் தனைமண மருள்வோனே !
குருமலை மருவிய பெருமாளே !

(ப - ரை) மறைபயில் அரி திருமருகோனே - வேதங்களை ஓதுகின்ற திருமாலின் சிறந்த மருகனே !, மருவலர் அசுரர்கள் குல காலா - பகைவர்களான அசுரர்களுடைய குலத்தையே நாசஞ்செய்தவனே !, குறமகள்தனை மணம் அருள்வோனே - குறக்குலத்தில் வளர்ந்த வள்ளிநாயகியைத் திருமணம் புரிந்தருளியவனே !, குருமலை மருவிய பெருமாளே - சுவாமிமலையில் எழுந்தருளியிருக்கும் பெருமாளே !, நிறைமதி முகம் எனும் ஒளியாலே - முகமானது பூரணசந்திரனே யென்று சொல்லும்படி ஒளி வீசுவதனாலும், நெறி விழி கணை எனும் நிகராலே - புருவத்தை நெறித்து நோக்கும் விழிகள் அம்பு

களுக்குச் சமானமா யிருப்பதனுலும், உறவு கொள் மடவர்கள் - ஆடவரது பிரியத்தைச் சம்பாதிக்கும் பெண்களின், உறவாமோ - சிநேகம் கொள்ளத்தக்கதோ? உன திருவடி இனி அருள்வாயே - உனது திருவடிகளை இனி அடியேனுக்குத் தந்தருள்வாயாக !

(வி - ரை) சுவாமிகள் வேதங்களை ஓதும் திருமாலினுல் கொண்டாடப் படும் மருகனும், பகைவர்களான அசுரர்களை (துர்க்குணங்களை) வேருடன் அழிப்பவனும், வள்ளிநாயகியைத் தடுத்தாட்கொண்டவனும், சுவாமிமலையில் ஞானகுருவாய் எழுந்தருளியிருப்பவனுமான முருகப்பெருமானை விளித்து, தமக்கு வேதப்பொருளை யுபதேசித்து, காமத்துக்குக் காரணமான மும்மலங்களை வேருடன் அழித்து, தம்மைத் தடுத்தாட்கொண்டு, ஞானத்தைப் புகட்டும்படி பிரார்த்திக்கிறுர். (ரு௫)

தான தத்த தந்த தான தத்த தந்த
தான தத்த தந்த—தனதான.

வார முற்ற பண்பின் மாத முற்ற நண்பி
னீடு மெய்த்து யர்ந்து வயதாகி

வாலை யிற்றி ரிந்து கோல மைக்கண் மங்கை
மார்க ளுக்கி சைந்து பொருள்தேடி

ஆர மிக்க பொன்க ளால மைத்த மர்ந்த
மாப ணிக்கள் விந்தை யதுவான

ஆட கொப்ப மைந்த வோலை முத்த முங்கொ
டாவி மெத்த நொந்து திரிவேனே ?

சூர னைத்து ரந்து வேர றப்பி ளந்து
சூழ்சு ரர்க்க ணன்பு செயும்வீரா !

சூக ரத்தொ டம்பு தானெ டுத்து வந்த
சூத னுக்கி சைந்த மருகோனே !

ஏரெ திர்த்து வந்து நீர்கள் கட்டி யன்று
தானி றைக்க வந்த தொருசாலி

யேமி குத்து யர்ந்த மாவ யற்கள் மிஞ்சு
மேர கத்த மர்ந்த பெருமாளே !

(ப - ரை.) சூரனை தாரந்து வேர் அற பிளந்து - சூரபதுமனைப் போர்க் களத்திலிருந்து துரத்தி யோட்டி அவன் எடுத்துக்கொண்ட மாய வுருவமான மாமரமானது வேருடன் விழுமாறு அதைப் பிளந்து, சூழ் சுரர்க்கண் அன்பு செயும் வீரா - நின்னைச் சூழ்ந்து (நினது சேனையாக) நின்ற தேவர்களிடத்தில் அன்பு காட்டிய வீரனே!, சூகரத்தொடு அம்பு(வி)தான் எடுத்துவந்த சூதனுக்கு - பன்றியின் உருவத்தோடு (சென்று) பூலோகத்தை எடுத்து வந்த துஷ்ட சங்கார மூர்த்தியாகிய மகாவிஷ்ணுவுக்கு, இசைந்த-தகுந்த, மருகோனே - மருகோனே!, ஏர் எதிர்த்து வந்து நீர்கள் கட்டி (அன்று தான் - அசை) நிறைக்க வந்தது ஒரு சாலி (ஏ - அசை) - ஏர்களை (பூமியை) எதிர்த்து (பிளக்குமாறு) செலுத்தி தண்ணீர் நிறையக் கட்டியதனால் உண்டான நெல் பயிரானது, மிகுத்து உயர்ந்த மா வயற்கள் மிஞ்சும் - செழித்து ஓங்கி வளர்ந்துள்ள சிறந்த நன்செய் நிலங்கள் மிகுதியாகவுள்ள, ஏரகத்து அமர்ந்த பெருமாளே - சுவாமி மலையின்மீது எழுந்தருளி யிருக்கும் பெரியோனே!, வாரம் உற்ற பண்பின் - உரிமை பாராட்டும் வகையினால், மாதம் உற்ற - சந்தோஷம் அடைந்த, நண்பின் - சிநேகமாகிய (பெண் காதலினால்), ஈடும் எய்த்து உயர்ந்து - மனங்குழைவதையும் அறிந்து இறுமாப்படைந்து, வயதாகி - தக்க வயது அடைந்து, வாலையில் திரிந்து - காளைப் பருவத்தில் அலைந்து திரிந்து, கோல மை கண் மங்கைமார்களுக்கு இசைந்து - மைதீட்டப்பெற்ற அழகிய கண்களையுடைய பெண்களுக்கு இணங்கினவனாய், பொருள் தேடி - (அவர்களது ஆசைகளைப் பூர்த்தி செய்வதற்காகப்) பொருள் தேடி, ஆரம் மிக்க பொன்களால் அமைத்து அமர்ந்த மா பணிகள் - முத்துக்களினாலும் மிகுந்த பொன்னினாலும் செய்யப்பட்டு அணியப்பட்டுள்ள சிறந்த ஆபரணங்கள் (மீதும்), விந்தை அது ஆன - கண்டு அதிசயிக்கத்தக்க பொருள் எனும்படியுள்ள, ஆட (க) கொப்பு அமைந்த ஓலை - பொன்னினாலாகிய கொப்புடன் பொருந்திய ஓலையின் (மீதும்), முத்தமும் கொடு - பிரியமுடையவனாகி, ஆவி மெத்த நொந்து திரிவேனோ - அடியேன் மிகவும் மனம் வருந்தி அலைவது தகுதியோ?

(வி - ரை) **வராகாவதார வரலாறு :**—காசிப முனிவருக்குத் திதி என்னும் மனைவியினிடம் பிறந்த இரணியாக்ஷன் என்னும் அசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டிக்கொண்டு பாதாளலோகத்துக்குப் போய்விட, திருமால் பன்றியினுருவம் எடுத்துக்கொண்டு சென்று அவனைச் சங்கரித்துப் பூமியை மீட்டுவந்து பழைய நிலைமையில் வைத்தார்.

சூதனம் - அழித்தல், சூதனன் - சங்கரிப்பவன், அப்பதம் இடை குறைந்து சூதன் எனவாயிற்று. அம்புவி என்னும் பதம் கடை குறைந்து அம்பு என வாயிற்று.

ஒருவன் தனது சிநேகத்துக்குப் பாத்திரமானவரில் தனது காதலியைத் தவிர மற்றவர்களைத் தனக்கு மட்டும் உரியவராகப் பெற வேண்டுமெனக் கருத

மாட்டான்; ஆனால் தான் காதலிப்பவள் விலைமாதாக இருந்தபோதிலும், அவள் தனக்கு மட்டும் உரியவளாக இருந்தால்தான் அவனுடைய மனம் சந்தோஷம் அடையும். ஆகையினால்தான், "வாரமுற்ற பண்பின் மாதமுற்ற நண்பின்" என்பதற்கு "உரிமை பாராட்டும் வகையினால் சந்தோஷம் அடையும் சிநேகத்தினால்" என்று பொருள்கூறி, அந்தச் சிநேகம் பெண் காதலே என்று உரைக்கத் துணிந்தேன். (௩௯)

தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன—தனதான.

பலகாதல் பெற்றிடவு மொருநாழி கைக்குளொரு
பலனேபெ றப்பரவு கயவாலே
பலபேரை மெச்சிவரு தொழிலேசெ லுத்தியுடல்
பதறாமல் வெட்கமறு வகைகூறி
விலகாத லச்சைதணி மலையாமு லைச்சியர்கள்
வினையேமி குத்தவர்கள் தொழிலாலே
விடமேகொ டுத்துவெகு பொருளேப றித்தருளும்
விலைமாதர் பொய்க்கலவி யினிதாமோ ?
மலையையெ டுத்தருளு மொருவாள ரக்கனுடல்
வடமேரெ னத்தரையில் விழவேதான்
வகையா விடுத்தகணை யுடையான் மகிழ்ச்சிபெறு
மருகாக டப்பமல ரணிமார்பா !
சிலகாவி யத்துறைக ளுணர்வோர்ப டித்ததமிழ்
செவியார வைத்தருளு முருகோனே !
சிவனார்த மக்குரிய வுபதேச வித்தையருள்
திருவேர கத்தில்வரு பெருமாளே !

(ப - ரை) மலையே எடுத்து அருளும் ஒரு வாள் அரக்கன் உடல் - திருக்கைலாயத்தைத் தனது கைகளினால் தூக்கிச் சாமவேதத்தைச் சொன்ன மிகுந்த ஒளிபொருந்திய இராக்ஷதனாகிய இராவணனது உடல், வடமேரு என தரையில் விழவே - தேகமானது வடதிக்கிலுள்ள மேரு மலையைப்போல் கீழே விழுமாறு, (தான்-அசை), வகையா(க) விடுத்த கணை உடையான் - தக்கபடி விடுத்த அம்பை

யுடைய ஸ்ரீ ராமர், மகிழ்ச்சி பெற(ம்) மருகா-கண்டு மனமகிழும் மருகோனே !, கடப்ப மலர் அணிமார்பா - கடப்பமலர் மாலையை அணிந்துள்ள மார்பையுடையவனே! சில காவிய துறைகள் உணர்வோர் - செய்யுள் வகைகள் சிலவற்றையே கற்றுணர்ந்தவர்கள், படித்த தமிழ் - சொல்லிய தமிழ்ப்பாடல்களை, செவி ஆர வைத்தருளும் முருகோனே - செவி நிறையும்படி கேட்டுக் களிக்கும் ஞான சொரூபியே !, சிவனார் தமக்கு உரிய உபதேச வித்தை அருள் - (சர்வேசுவரரான) சிவபெருமானுக்கு முத்திக்குரியதும் உபதேச மூலமாகப் பெற வேண்டியதுமான ஞானத்தை உபதேசித்தருளியவரும், திரு ஏரகத்தில் வரு பெருமாளே - திருவேரகம் எனப்படும் சுவாமிமலையில் வந்து எழுந்தருளிய வருமான பெருமானே !, பலகாதல் பெற்றிடவும் - பல ஆடவர்கள் தங்கள்மீது ஆசை கொள்வதற்காகவும், ஒரு நாழிகைக்குள் ஒரு பலனே பெற - ஒரு நாழிகைக்கு ஒரு பலனாக (சதா காலமும் இலாபம்) அடைவதற்காகவும், பரவு கயவாலே - எல்லோரையும் (பொய்யாக) துதிக்கும் திருட்டுத்தனத்தினால், பல பேரை மெச்சி வருதொழிலே செலுத்தி-பல பேர்களைப் புகழ்ந்து கொண்டிருப்பதையே தொழிலாகப் பூண்டு அத்தொழிலை நடத்தி, உடல் பதறாமல் வெட்கம் அற வகை கூறி - தேகம் கூச்சம் அடையாமலும் மனதில் சிறிதும் வெட்கமில்லாமலும் பேசி, விலகாத - (பலனை அடையும் வரையில்) அகலாமல் தொடர்பவர்களும், லச்சை தணி - இலச்சையென்பது குறையப் பெற்றவர்களும், மலையா(ம்) முலைச்சியர்கள் - மலைபோன்ற தனபாரங்களை யுடையவர்களும், வினையே மிகுத்தவர்கள் - வஞ்சகத்தையே மிகுதியாக வுடையவர்களும், தொழிலாலே விடமே கொடுத்து வெகு பொருளே பறித்து அருளும் - தங்கள் சாமர்த்தியத்தினாலே (தங்கள் கலவியாகிய) விஷத்தைக் கொடுத்து (அதற்குப் பிரதிப் பிரயோஜனமாக) ஏராளமான பொருளைப் பிடுங்கிக் கொள்பவர்களுமான, விலை மாதர் பொய்க்கலவி இனிது ஆமோ - விலைமாதர்களது (உண்மைக் காதலில்லாத) வஞ்சகப் புணர்ச்சியைச் சுகமாகக் கருதுதல் தகுதியோ ?

(வி - ரை) **இராவணன் திருக்கைலாயத்தைத் தூக்க முயன்ற வரலாறு:-** திக்குவிஜயஞ் செய்து வந்த காலத்தில் இராவணன் வடதிசைப் பாலனாகிய குபேரனை எதிர்த்து அவனது புஷ்பகவிமானத்தைப் பறித்துக்கொண்டு அதன் மீதேறி இறுமாப்புடன் திருக்கைலாயத்துக்கு நேராக வந்தபோது, நந்தியெம் பெருமான் புஷ்பகவிமானம் அப்பாற் செல்லமுடியாவண்ணம் தடுத்துவிட்டார். அப்போது இராவணன் மதிமயங்கிக் கோபமுற்று, திருக் கைலாயத்தையே வேரோடு பறித்து அப்பால் எறிவதாக வீரம்பேசி, தனது இருபது கைகளையும் அம்மலையின் அடியில் கொடுத்துத் தூக்க முயல, அம்மலை சிறிது அசைவுற்றது. அப்போது சிவபெருமான் தமது காலின் பெருவிரலை ஊன்ற,

இராவணன் மிகுந்த துன்பமுற்று, தனது துன்பத்தின் கொடுமையைச் சகிக்க மாட்டாதவனாய் எம்பெருமானைச் சாமவேதகானஞ் செய்து நெடுங்காலம் துதிக்க, எம்பெருமான் ஊன்றின விரலை யெடுத்து அவன் துன்பத்தை நீக்கியருளினர். அவன் அவ்வாறு அழுது துதிசெய்ததனால்தான் அவனுக்கு இராவணன் என்னும் காரணப்பெயர் கிடைத்தது. (௩எ)

தானனத் தனந்த —தனதான
தானனத் தனந்த—தனதான.

காமியத் தழுந்தி யிளையாதே
காலர்கைப் படிந்து மடியாதே

ஓமெழுத் திலன்பு மிகவூறி
ஒவியத்தி லந்த மருள்வாயே !

தூமமெய்க் கணிந்த சுகலீலா !
சூரனைக் கடிந்த கதிர்வேலா !

ஏமவெற் புயர்ந்த மயில்வீரா !
ஏரகத் தமர்ந்த பெருமாளே !

(ப - ரை) தூமம் மெய்க்கு அணிந்த - திருமேனியின் மீது நறும்புகை படியும்படி செய்துகொண்டு, சுக லீலா - நன்மையைத் தரும் திருவிளையாடல்களைச் செய்பவனே!, சூரனை கடிந்த கதிர்வேலா - சூரபதுமனைத் தண்டித்தவனும் ஒளிவீசும் வேலாயுதத்தைக் கையிலேந்தியவனுமானவனே !, ஏம வெற்பு உயர்ந்த மயில் வீரா - பொன்போல் ஒளிவீசும் மேருமலையைப் போல உயர்ந்துள்ள மயிலை வாகனமாகக் கொண்ட வீரனே ! ஏரகத்து அமர்ந்த பெருமாளே - திரு ஏரகம் என்னும் சுவாமிமலையில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே ! காமியத்து அழுந்தி இளையாதே - இச்சைகளில் ஆழ்ந்து சோர்வடையாமலும், காலர் கை படிந்து மடியாதே - இயமதூதர்கள் கையிற்சிக்கி இறவாமலும், ஓம் எழுத்தில் அன்பு மிக ஊறி - ஓங்காரமாகிய எழுத்தின்மீது அன்பு மிகுதியாகப் பெருகி, ஓவியத்தில் அந்தம் அருள்வாயே - (செயலற்றுச்) சித்திரம் போலிருக்கும் நிலைமையில் முடிவாகப் போய்ச் சேரும்படி அருள்புரிவாயே !

(வி - ரை) "ஓங்காரத் துள்ளொளிக்குள்ளே முருகனுருவங் கண்டு தூங்கார்" என்று கந்தரலங்காரத்தில் கூறியுள்ளபடி, உலகங்களுக்கெல்லாம் காரணமான நாதத்தின் மூலமாகிய ஓங்காரத்தினுள்ளே சுயஞ் சோதியாக விளங்குகிறார்

முருகப்பெருமான். "ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட தாடு மயிலென்ப தறியேனே" என்று திருப்புகழ் கூறுமாறு ஓங்காரத்தின் அழகிய உருவமே மயிலாகும்; ஆகையினால்தான் ஓம் என்னும் எழுத்தின்மீது அன்பு பெருக அருள்புரியும்படி பிரார்த்திக்கிறார். "சும்மா விருசொல் லறவென் றலுமே, அம்மா பொருளொன் றுமறிந் திலனே" என்றபடி, செயலற்று மவுனமுற்று மனத்தை எம்பெருமானது பாதமலர்களைத் தியானிப்பதிலேயே நிறுத்தினால்தான் ஞானத்தையும் பேரின்பத்தையும் முத்தி வீட்டையும் அடையலாம்; ஆதலினால்தான் சுவாமிகள், செயலற்றுச் சித்திரம்போல் இருக்கும் நிலைமையைத் தாம் முடிவாக அடைய வேண்டுமெனப் பிரார்த்திக்கிறார். (௩௮)

திருவேரகம் எனும் சுவாமிமலை பாட்டுகள் ௩௮.

முற்றிற்று

## 2. திருவாவினன்குடி—பழநி

*தான தந்தன தானு தனுதன*
*தான தந்தன தானு தனுதன*
*தான தந்தன தானு தனுதன—தனதான.*

நாத விந்துக லாதீ நமோநம
வேத மந்த்ரசொ ரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம — வெகுகோடி

நாம சம்புகு மாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்தம யூரா நமோநம — பரசூரர்

சேத தண்டவி நோதா நமோநம
கீத கிண்கிணி பாதா நமோநம
தீர சம்ப்ரம வீரா நமோநம — கிரிராஜ

தீப மங்கள ஜோதீ நமோநம
தூய அம்பல லீலா நமோநம
தேவ குஞ்சரி பாகா நமோநம — அருள்தாராய்!

ஈத லும்பல கோலால பூஜையும்
ஓத லுங்குண ஆசார நீதியும்
ஈர முங்குரு சீர்பாத சேவையு — மறவாத

ஏழ்த லம்புகழ் காவேரி யால்விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கெம்பிர நாடாளு நாயக — வயலூரா!

ஆத ரம்பயி லாரூ ரர்தோழமை
சேர்தல் கொண்டவ ரோடே முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி மாகயி — லையிலேகி

ஆதி யந்தவு லாவாசு பாடிய
சேரர் கொங்குவை காவூர் நனாடதில்
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் — பெருமாளே!

(ப - ரை) ஈதலும் பல கோலால பூஜையும் - இரப்பவர்க்கு ஈவதையும் பல வாறு சம்பிரமமாகப் பூஜை செய்வதையும், ஓதலும் குண ஆசார நீதியும் - ஞான நூல்களைக் கற்பதையும் நற்குணமுடையோராய் ஆசாரத்தை யனுஷ்டித்து நீதி நெறியில் நின்றொழுகுவதையும், ஈரமும் குரு சீர்பாத சேவையும் - கருணையுடைமையையும் குருவின் திருவடிகளைச் சேவிப்பதையும், மறவாத - மறவாத (பெரியோர்கள் வசிக்கப்பெற்றதும்), ஏழ்தலம் புகழ் - மேலுலகங்கள் ஏழினாலும் புகழப்பெற்றதும், காவேரியால் விளை - காவிரி நதியினால் வளப்பம் பெற்றதுமான, சோழமண்டலம் மீது - சோழமண்டலத்தில், (ஏ - அசை), மனோகர - மனதைக் கவரும்படியான வளமை பொருந்திய, ராஜ கெம்பீர நாடு ஆளு(ம்) நாயக - இராஜகம்பீர வளநாடு என்னும் மாகாணத்தை ஆளும் அதிபதியாய், வயலூரா - வயலூர் என்னும் திவ்யதலத்தில் எழுந்தருளியிருப்பவனே! ஆதரம் பயில் ஆரூரர் தோழமை சேர்தல் கொண்டு - தம்மிடத்து அன்பு நிறைந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளது தோழராய் அவரை விட்டுப் பிரியாமல் இருந்து, அவரோடே முனாளினில் ஆடல் வெம்பரி மீது ஏறி மாகயிலையில் ஏகி - அவருடனேயே முன்னொரு நாள் போர்க்குரியதும் உக்கிரமான வேகத்துடன் செல்வதுமான குதிரையின் மீது ஏறித் திருக்கைலாயத்துக்குச் சென்று, ஆதியந்த(ம்) உலா ஆசு பாடிய - அந்தாதி திரு ஆதியுலா இவைகளை ஆசுகவியாகப் பாடிய, சேரர் - சேரமான் பெருமாளுடையனாரது, கொங்கு வை காவூர் நனாடதில் - கொங்கு தேசத்தில் உள்ள காவூர்வளநாட்டில் உள்ள, ஆவினன்குடி வாழ்வான - திரு ஆவினன் குடியில் எழுந்தருளியிருக்கும், தேவர்கள் பெருமாளே - தேவர்கள் நாயகனே! நாத விந்து கலாதி நமோ நம - நாதம் விந்து கலை என்பவைகளுக்குக் காரணமானவனே! நமஸ்காரம், வேத மந்த்ர சொரூபா நமோ நம - வேதமந்திரங்களின் சொரூபமாய் நிற்பவனே! நமஸ்காரம், ஞான பண்டித ஸாமீ நமோ நம - ஞானத்தில் தேர்ந்து முதிர்ந்த கடவுளே! நமஸ்காரம், வெகு கோடி நாம சம்பு குமாரா நமோ நம - அநேக கோடித் திருநாமங்களை யுடையவரும் க்ஷேமத்தைத் தருபவருமான சிவபெருமானுடைய செல்வப் புதல்வனே! நமஸ்காரம், போக அந்தரி பாலா நமோ நம - வினைப்பயன்களை ஊட்டுவிக்கும் சிவசக்தியாம் பார்வதிதேவியார் பெற்றெடுத்த சிறுவனே! நமஸ்காரம், நாக பந்த மயூரா நமோ நம - ஸர்ப்பமானது கால்களில் சுற்றப்பெற்றுள்ள மயிலை வாகனமாக வுடையவனே! நமஸ்காரம், பர சூரர் சேத தண்ட விநோதா நமோ நம - நின்னிடம் பகைமை பாராட்டிய சூரர்களான சூரபதுமன் முதலாயினோரை வெட்டித் தண்டிக்கும் திருவிளையாடலைச் செய்தருளியவனே! நமஸ்காரம், கீத கிண் கிணி பாதா நமோ நம - இனிமையாக ஒலிக்கும் சதங்கைகளை யணிந்த பாத மலர்களை யுடையவனே! நமஸ்காரம், தீர சம்ப்ரம வீரா நமோ நம - தைரியமும் களிப்புமுள்ள வீரனே! நமஸ்காரம், கிரிராஜ தீபமங்கள ஜோதி நமோ நம - மலையரசனாகிய நம்பிராஜனது குலத்தை விளங்க வைத்த வள்ளிநாயகி என்னும்

சுடர் விளக்கின் மங்களகரமான ஜோதியே! நமஸ்காரம், தூய அம்பல லீலா நமோ நம - தூய்மை பொருந்திய வெளியாகிய சபையில் நிர்த்தனஞ் செய்து விளையாடுபவனே! நமஸ்காரம், தேவ குஞ்சரி பாகா நமோ நம - தெய்வயானையம்மையின் மணவாளா! நமஸ்காரம், அருள்தாராய் - அடியேனுக்கு நினது அருளைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) சிவபெருமானது கட்டளையின்படி தேவர்கள் வெள்ளையானையுடன் திருவஞ்சைக்களத்துக் கோயிலுக்குச் சென்று, சுந்தரமூர்த்தி சுவாமிகளை அந்த யானையின்மீது அமர்த்தித் திருக்கயிலாயத்துக்கு அழைத்துச் செல்லுகையில், அவர் தமது இணைபிரியாத தோழராகிய சேரமான்பெருமாணாயனாரை நினைக்க, அவர் சுந்தரர் திருக்கைலாயத்துக்குச் செல்வதை யுணர்ந்து, உடனே தமது குதிரையின்மீது ஏறி அதன் காதில் சிவமந்திரத்தைச்சொல்ல, அது அதி வேகமாய்ச்சென்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏறிச் சென்ற வெள்ளையானையைச் சுற்றி வலம்வந்து, பிறகு அதன் முன்னே சென்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகளது உதவியினால் சிவபெருமான் திருமுன்னரை யடைந்த சேரமான் பெருமாணாயனார் அவருடைய அனுமதியைப் பெற்று, தாம் இயற்றிய திரு ஆதி யுலாவை அவர் திருமுன்னர் நின்று பாடி அவரைக் களிப்பித்தார். சுந்தரமூர்த்தி சுவாமிகளது சரித்திரத்தில் இவ் விஷயம் வித்தாரமாய் எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது.

திரு ஆவினன்குடி என்பது பழநிமலையின் அடிவாரத்திலுள்ள கோயில். (க)

தனதான தந்ததன தனதான தந்ததன
தனதான தந்ததன—தனதான.

சிவனார்ம னங்குளிர உபதேச மந்த்ரமிரு
செவிமீதி லும்பகர்செய் குருநாதா!
சிவகாம சுந்தரிதன் வரபால! கந்த! நின
செயலேவி ரும்பியுளம் நினையாமல்
அவமாயை கொண்டுலகில் விருதாவ லைந்துழலு
மடியேனை அஞ்சலென வரவேணும்!
அறிவாக மும்பெருக இடரான துந்தொலைய
அருள்ஞான இன்பமது புரிவாயே!
நவநீத முந்திருடி உரலோடெ யொன்றுமரி
ரகுராமர் சிந்தைமகிழ் மருகோனே!
நவலோக முங்கைதொழு நிசதேவ லங்கிருத
நலமான விஞ்சைகரு விளைகோவே!

தெவயானை யங்குறமின் மணவாள சம்ப்ரமுறு
திறல்வீர மிஞ்சுகதிர் வடிவேலா!
திருவாவி னன்குடியில் வருவேள்ச வுந்தரிக
செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே!

(ப - ரை) நவநீதமும் திருடி உரலோடெ ஒன்றும் அரி - (தயிர்பால் மாத்திரமன்றி) வெண்ணெயையும் திருடி (யசோதையினால்) உரலுடன் சேர்த்துக் கட்டப்பட்ட கிருஷ்ணனாகவும், ரகுராமர் சிந்தைமகிழ் - ரகுவமிசத்தில் ஸ்ரீராமனாகவும் அவதரித்த மகாவிஷ்ணுவின் மனமானது மகிழும்படியாக வந்த, மருகோனே - மருகோனே!, நவலோகமும் கைதொழு நிசதேவ - நவ கண்டத்தினரும் வணங்கும் நித்தியமான தேவனே! அலங்கிருத - கட்டழகு வாய்ந்த சொரூபத்தையுடையவனே!, நலமான விஞ்சை கருவிளை கோவே - நன்மையைத் தரத்தக்க கல்வியானது கருத்தரித்துப் பெறும் ஞானத்தின் சொரூபமான இறைவனே!, தெவயானை அம் குறமின் மணவாள - தெய்வயானையம்மையையும் மின்னற் கொடியையொத்து மிகுந்த அழகு வாய்ந்த வள்ளிநாயகியையும் மணந்துகொண்டவனே!, சம்ப்ர(ம)ம் உறு - தீவிரமான, திறல் வீரம் மிஞ்சு - வலிமையும் வீரமும் மிகுதியாகப் பெற்றுள்ளவனும், கதிர் வடி வேலா - கூர்மை பொருந்தி ஒளிவீசும் வேலாயுதத்தைக் கரத்தில் பிடித்தவனுமான வீரனே!, திரு ஆவினன் குடியில் வரு வேள் - திருவாவி னன்குடி (பழநி) யென்னும் சிறந்த தலத்தில் எழுந்தருளியிருக்கும் குமாரனே!, சவுந்தரிக - மிகுந்த அழகு வாய்ந்தவனே!, செகமேல் மெய்கண்ட விறல் பெருமாளே - உலகத்தில் உண்மையான ஞானத்தை நிலைநிறுத்திய வலிமை பொருந்திய பெரியோனே!, சிவனார் மனம் குளிர - சிவபெருமானது மனமானது குளிர்ந்த அமுதத்தைப் பருகுமாறு உபதேச மந்திரம் இரு செவி மீதிலும் பகர்செய்குருநாத - உபதேசமாக மட்டுமே கூறத்தக்க மந்த்ரமாகிய பிரணவத்தை அப்பெருமானது இருசெவிகளிலும் கூறியருளிய குருநாதனே!, சிவகாமசுந்தரிதன் வரபால - சிவகாமசுந்தரி என்னும் திருநாமம் பெற்ற பார்வதி தேவியார் சிவபெருமான் தேவர்களுக்கு அளித்த வரத்துக்கிசையப் பெற்றெடுத்த புத்திரனே!, கந்த - கந்தனே, நின செயலே விரும்பி உளம் நினையாமல் - நீ செய்தருளிய திருவிளையாடல்களின் மீது அன்புடையவனாய் அவைகளைப்பற்றி மனத்தில் நினையாமல், அவமாயை கொண்டு உலகில் விருதா அலைந்து உழலும் அடியேனை - வாணாளை வீணாக்கும் உலக மாயையினால் பீடிக்கப் பெற்று உலகத்தில் வீணாக அலைந்து கலங்கும் அடியேனை, அஞ்சல் என வரவேணும் - அஞ்சாதே என்று கூறி அடியேனுக்குத் தைரியமூட்ட வந்தருளவேண்டும்; (அடியேனுக்கு), அறிவு ஆ(க்)கமும் பெருக - அறிவு எனும் செல்வம் அதிகரிக்கவும், இடரானதும் தொலைய - இடையூறுகளெல்லாம் அகன்று போகவும், அருள் ஞான இன்ப

மது புரிவாயே-நினது கிருபையையும் மெய்ஞ் ஞானத்தையும் அதனால் விளை யும் இன்பத்தையும் தந்து அருள்புரிவாயே!

(வி-ரை) முருகப்பெருமான் சிவபெருமானுடைய இரு செவிகளிலும் ஒரே காலத்தில் ஞானத்தை உபதேசித்தது வியக்கத்தக்கதே! அஞ்ஞானம் நிறைந்திருந்த உலகத்தில் ஞானத்தைப் போதித்து மெய்மை நிலைநாட்டுவதற் கர்கத் தாம் வரமாகத் தந்தருளிய பாலகன் முதிர்ந்த ஞானமொழியைக் குரு வாக நின்று உபதேசிக்கும் திறமையுடையவனு யிருந்ததைக் கண்டு சிவபெரு மான் மனமகிழ்ந்தார்போலும்! ஆகா! என்ன கபடநாடகம்! குமரனாக வந்தவர் சிவபெருமானேயன்றோ! எல்லாம் அம்பலத்தாடியின் கூத்து! (உ)

தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத்—தனதான.

புடவிக் கணிதுகி லெனவளை ரந்தக்
கடலிட் டைடயுமற குடிமுநி யெண்கட்
புநிதச் சததள நிலைகொள்ச யம்புச் சதுர்வேதன்

புரமட் டெரியெழ விழிகனல் சிந்திக்
கடினத் தொடுசில சிறுநகை கொண்டற்
புதகர்த் தரகர பரசிவ னிந்தத் தனிமூவ

ரிடசித் தமுநிறை தெளிவுற வும்பொற்
செவியுட் பிரணவ ரகசிய மன்புற்
றிடவுற் பனமொழி யுரைசெய் குழந்தைக் குருநாதா!

எதிருற் றசுரர்கள் படைகொடு சண்டைக்
கிடம்வைத் திடஅவர் குலமுழு தும்பட்
டிடவுக் கிரமொடு வெகுளிகள் பொங்கக் கிரியாவும்

பொடிபட் டுதிரவும் விரிவுறு மண்டச்
சுவர்விட் டதிரவு முகடுகி ழிந்தப்
புறமப் பரவெளி கிடுகிடெ னுஞ்சத் தமுமாக

பொருதுக் கையிலுள அயில்நிண முண்கக்
குருதிப் புனலெழு கடலினு மிஞ்சப்
புரவிக் கனமயில் நடவிடும் விந்தைக் குமரேசா!

படியிற் பெருமித தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வரஅர னங்கைப்
பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனாலே

பரன்வெட் கிடவுள மிசையும்வெ குண்டக்
கனியைத் தரவிலை யெனஅருள் செந்திற்
பழநிச் சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே!

(உ - ரை) புடவிக்கு அணிதுகில் என - பூமாதேவி உடுத்துக்கொண்ட
வஸ்திரமென்று சொல்லும்படி, உளர் அந்தக் கடல் எட்டையும் அற குடி முநி-
எட்டுத் திக்குகளிலும் பரந்திருக்கும் சமுத்திரமானது முற்றிலும் வற்றுமாறு
அதன் நீரைக் குடித்த முனிவராகிய அகத்தியர், எண் கண் புனித சதுதள நிலை
கொள் சயம்பு சதுர்வேதன் - எட்டுக் கண்களையுடையவரும் தூய்மை பொருந்
தியதும் ஆயிரம் இதழ்களையுடையதுமான தாமரை மலரின்மீது வீற்றிருப்பவ
ரும் நான்கு வேதங்களையும் உலகத்துக்கு உதவித்தவருமான பிரமதேவர், புரம்
அட்டு எரி எழ விழிகனல் சிந்தி-திரிபுரங்களை அழித்து அவை தீப்பற்றி எரியு
மாறு தமது நுதல்விழியிலிருந்து தீப்பொறி பறக்க, கடினத்தொடு சில சிறு
நகை கொண்ட அற்புத கர்த்த கோபத்துடன் புன்னகை கொண்ட அதிசயச்
செய்கையைச் செய்து காட்டிய நாதரும், அரகர பரசிவன் - அரகரா என்று
வந்திக்கப்படுபவரும் பரம்பொருளுமாகிய சிவபெருமான், இந்த தனி மூவரிட
சித்தமு(ம்) நிறை தெளிவுற - இந்த ஒப்பற்ற மூவருடைய மனமும் ஞானத்தி
னால் நிறைவுற்று உண்மையைத் தெளிவாய் உணரும் வண்ணம், (உம்-அசை),
பொன் செவியுள் பிரணவ ரகசியம் அன்புற்றிட உற்பன மொழி உரைசெய் -
(அவர்களது) அழகிய செவிக்குள் பிரணவத்தின் அகப்பொருளாகிய சத்திய
மான விஷயத்தை அவர்களுக்கு உன்னிடத்தில் அன்பு உண்டாகுமாறு உபதே
சித்தருளிய, குழந்தைக் குருநாதா - பாலகுருவான நாதனே!, எதிருற்று அசு
ரர்கள் படைகொடு சண்டைக்கு இடம் வைத்திட - (உன்னிடம்) விரோதம்
பாராட்டி அசுரர்கள் சேனைகளுடன் வந்து போர்புரிய வேண்டியதை அவசிய
மாக்கியபோது, அவர் குலமுழுதும் பட்டிட - அவர் குலம் முழுவதும் அழிய
வும், கிரி யாவும் பொடிபட்டு உதிரவும் - மலைகளெல்லாம் பொடியாகி உதிர
வும், விரிவுறும் அண்டச்சுவர் விட்டு அதிரவும் - பரந்துள்ள அண்டத்தின் சுவ
ரானது அதிர்ச்சியுற்றுப் பிளவு படவும், முகடு கிழிந்து அப்புறம் அப்பரவெளி
கிடுகிடெனும் சத்தமுமாக - அண்டமுகடும் கிழிந்து அதற்கப்பாலுள்ள சுத்த
நிராதார வெளியிலும் கிடுகிடென்ற சத்தமுண்டாகவும், உக்கிரமொடு வெருளி
கள் பொங்க பொருது-உக்கிரமாய் மிகுந்த கோபத்துடன் போர் செய்து, கை
யில் உள அயில் நிணம் உண்க - உனது கையிலிருக்கின்ற வேலானது (அசு
ரர்களது தேகத்திலுள்ள) மாமிசத்தை உண்ணவும், குருதிப் புனல் எழு கடலி

னும் மிஞ்ச- (அவர்கள் தேகத்தினின்றும் பெருகி) ஆறாக ஓடிய இரத்தமானது எழு கடல்களிலுமுள்ள நீரைவிட அதிகமாகப் பெருகவும், புரவி என மயில் நடவிடும் விந்தைக் குமரேசா - மகா வேகம் பொருந்திய சிறந்த மயிலின் மீது ஏறி (அதைத் திறத்துடன்) நடத்தி அதிசயச் செய்கைகளைச் செய்தருளிய குமாரஸ்வாமியே!, படியில் பெருமித தக உயர் செம்பொன் கிரியை - பூலோகத்தில் எல்லாவற்றினும் மிகுந்த ஒளி வீசுவதும் உயர்ந்ததும் செம்பொன்னை யொத்ததுமான சக்ரவாள பர்வதத்தை, தனி வலம் வர-நிகரற்ற திறமையுடன் வலமாகச் சுற்றி வந்தபோது, அரன் அந்த பலனை கரிமுகன் வசம் அருளும் பொற்பு அதனாலே - சிவபெருமான் (உலகை முதலில் வலம் வருவோருக்குப் பரிசாக அளிப்பதாகக் கூறிய) அந்தக் கனியை விநாயகக் கடவுளுக்கு அளித்த செய்கையினால், பரன் வெட்கிட - சிவபெருமான் வெட்கமடையுமாறு, உள(ம்) மிகவும் வெகுண்டு - மனத்தில் மிகுந்த கோபமுற்று, அக்கனியைத் தரவிலை யென - அக்கனியை உனக்குத் தராத காரணத்தினால், அருள் செம் தில் (அதை) பழநிச் சிவகிரி தனில் உறை கந்தப் பெருமானே - நினது அருளை யாவரும் எளிதில் பெறச்செய்யும் சிறந்த தலமானதும் (பழம் + நீ) பழநி என்னும் காரணப்பெயர்பெற்றதுமான சிவகிரியில் எழுந்தருளியிருக்கும் கந்தஸ்வாமியே!

(வி - ரை) தமது பாடல்களில், முருகப் பெருமானது திவ்ய கலியாண குணங்களை விசித்திரமாக எடுத்துக்கூறி அப்பெருமானைப் புகழ்ந்து விளித்து, அப்பெருமானை வரவேண்டும் என்றாவது வேறு ஏதாவது உதவி புரியவேண்டும் என்றாவது பிரார்த்திப்பது சுவாமிகளின் வழக்கம். அவ்வழக்கத்துக்கு விரோதமாகச் சுவாமிகள் இப்பாடலில் முருகப்பெருமானைப் புகழ்ந்ததுடன் திருப்தி யடைந்து யாதொரு பிரார்த்தனையும் செய்யாதொழிந்தார். இப்படிப்பட்ட பாடல்கள் சிலவேயுள.

அகத்தியர் கடல் நீரைக் குடித்தது :—தேவேந்திரன் அரம்பையர் ஆடலை ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டிருக்கையில் தேவகுருவான வியாழபகவான் அங்கு செல்ல, இந்திரன் எழுந்து அவரைப் பணியாமல் சும்மாவிருந்தான். அதனால் வியாழபகவான் அவ்விடம்விட்டகன்று எங்கோ மறைந்து கொண்டார். உடனே இந்திரனது செல்வம் குன்றிற்று. அதுகண்ட இந்திரன் குருவை அவமதித்ததினால் தான் அக்கேடு தனக்கு விளைந்ததென வுணர்ந்து, தனது குருவைத் தேடிச்சென்று, எங்கு தேடியும் அவரைக் காணாமல் மனங் கலங்கிக் கடைசியில் பிரமதேவரிடம் சென்றான். பிரமதேவர் பின்னால் நடக்கப்போவதை நினைத்து, தமது மானச புத்திரனான துவஷ்டா என்பவன் பெற்ற விசுவரூபன் என்னும் மூன்று சிரங்களையுடைய அசுரன் அசுரனாயிருந்த போதிலும் அறிவினாலும் செய்கையினாலும் மேலானவனென்றும், வியாழபகவான் வரும் வரையில் அவனைக் குருவாக வைத்துக் கொள்ளலா மென்றும் சொல்ல,

இந்திரன் விசுவரூபனைக் குருவாகக்கொண்டு ஒரு வேள்வியைச் செய்தான். அவ்வேள்வியில் ஆகுதி செய்யுங்கால், விசுவரூபன் தேவர்களுக்குச் செல்வம் அதிகரிக்க வேண்டுமென்று வாயினால் மட்டும் சொல்லி மனத்தினில் அசுரர்கள் வாழ்வடையவேண்டுமென எண்ணங்கொண்டான். இந்திரன் அதை ஞான திருஷ்டியினால் அறிந்து, தன் வஜ்ராயுதத்தினால் அவனைத்தாக்கி அழித்தான். அதுகேட்ட விசுவரூபன் தந்தையான துவஷ்டா ஒரு கொடிய வேள்வியைப் புரிய, அந்த வேள்வியின் ஓமாக்கினியினின்றும் விருத்திராசுரன் என்னும் ஒரு கொடிய அசுரன் தோன்றி, துவஷ்டாவின் கட்டளைப்படி இந்திரனுடன் போருக்குச் சென்றான். இந்திரன் முதலில் தோல்வியடைந்து, பிறகு ததீசி முனிவரது முதுகந் தண்டினாற் செய்யப்பட்ட புதிய வஜ்ராயுதத்தை எடுத்துக் கொண்டு சென்று விருத்திரனை எதிர்த்துப் பன்னாள் போர்செய்தபின் வஜ்ராயுதத்தை அவன்மீது பிரயோகிக்க, விருத்திராசுரன் பயந்து கடலுக்குள் மறைந்தான். அவனைத் தேடிப்பிடிக்க முடியாத இந்திரன் பிரமதேவரிடம் முறையிட்டு, அவர் கட்டளையின்படி அகத்தியமா முனிவரிடம் சென்று தெரிவித்தான். அகத்தியமா முனிவர் சமுத்திர நீரைத் தமது வலது கரத்தில் ஓர் உளுந்தின் அளவினதாகச் செய்து குடித்தருளினார். கடல் வற்றிப்போக, விருத்திராசுரன் ஒரு மலையின்மீது தவ நிஷ்டையில் அமர்ந்தவனாய்க் காணப்பட்டான். இந்திரன் வஜ்ராயுதத்தை அவன்மீது வீச, அது அவன் தலையை வெட்டி அவனை மாய்த்தது. (இச்சரித்திரத்தைத் திருவிளையாடற் புராணத்தில் இந்திரன் பழிதீர்த்த படலத்தில் விரிவாய்க் காணலாம்.

முருகப்பெருமான் சர்வேசுவரரான சிவபெருமானுக்கும், அகத்தியமா முனிவருக்கும் பிரமதேவருக்கும் பிரணவப் பொருளை உபதேசித்தார் என்பது இப்பாடலிற் கூறப்பட்டிருக்கிறது.

**முருகப் பெருமான் திருவாவினன்குடியில் எழுந்தருளிய வரலாறு:—** திருக்கைலாயத்தில் பார்வதி தேவியாருடன் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் தமது புதல்வர்களான விநாயகக் கடவுளையும் சுப்பிரமணியக் கடவுளையும் நோக்கி, "உங்களிருவருள் முதலில் உலகத்தை வலமாகச் சுற்றி வருபவருக்கு இக்கனியைத் தருகிறேன்" என ஒரு மாங்கனியைக் காட்டினார். உடனே ஞானச் சொரூபியாகிய முருகப்பெருமான் மயிலின்மீதேறி உலகத்தைச் சுற்றி ஒரு நொடியில் வலம் வந்து மீண்டார். புத்தி சொரூபியாகிய விநாயகக் கடவுளோ ஈசன் வேறு உலகம் வேறு அல்ல என்ற உண்மையை ஆதாரமாகக் கொண்டு சிவபெருமானை வலம் வந்து நின்றார். ஆகையினால் சிவபெருமான் அக்கனியை விநாயகக் கடவுளுக்குக் கொடுக்க, முருகப் பெருமான் வெகுண்டு திருக்கைலாயத்தை விட்டகன்று, திருவாவினன் குடியை யடைந்து அங்கு தங்கியிருந்தனர். அப்போது சிவபெருமான் உமாதேவியாருடன் அங்கு சென்று

"புத்திக் கிறைவனுகிய விநாயகனுக்கு ஞானத்தை அளிக்கவேண்டுமாதலின், ஞானமாம் அக்கனியை அவனுக்கு அளித்தோம். அவனுக்கு நாம் அளித்தபழம் நீயே யன்றோ?" என்று சொல்லி ஞானகுருவைச் சமாதானஞ் செய்தார். (ரு)

*தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன—தனதான.*

திகர நறுமலர் பொதுளிய குழலியர்
கலக கெருவித விழிவலை படவிதி
தலையி லெழுதியு மனைவயி னுறவிடு வதனாலே
தனயர் அனைதமர் மனைவியர் சினெகிதர்
சுரபி விரவிய வகையென நினைவுறு
தவன சலதியின் முழுகியெ யிடர்படு துயர்தீர
அகர முதலுள பொருளினை யருளிட
இருகை குவிசெய்து ளுருகிட வுருகியெ
அரக ரெனவல னிடமுற எழிலுன திருபாதம்
அருள அருளுடன் மருளற இருளற
கிரண அயில்கொடு குருகணி கொடியொடு
அழகு பெறமர கதமயில் மிசைவர இசைவாயே!
சிகர குடையினி னிரைவர இசைதெரி
சதுரன் விதுரனில் வருபவ னளையது
திருடி யடிபடு சிறியவ னெடியவன் மதுசூதன்
திகிரி வளைகதை வசிதனு வுடையவ
னெழிலி வடிவின னரவுபொன் முடிமிசை
திமித திமிதிமி யெனநட மிடுமரி மருகோனே!
பகர புகர்முக மதகரி யுழைதரு
வனிதை வெருவமுன் வரஅருள் புரிகுக
பரம குருபர இமகிரி தருமயில் புதல்வோனே!
பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய
நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்
பழநி மலைவரு புரவல அமரர்கள் பெருமாளே!

(ப-ரை) சிகர குடையினில் நிரை வர இசை தெரி சதுரன் - கோவர்த்தனகிரியைத் தூக்கித் தாம் குடையாகப் பிடித்தபோது அதன்கீழ்ப் பசுக்கூட்டங்கள் வந்து சேரும்படி வேணுகானஞ் செய்த சாமர்த்தியசாலியும், விதுரன் இல் வருபவன் - (தம்மிடம் பேரன்பு பூண்ட) விதுரன் வீட்டுக்குப போஜனஞ் செய்யச் சென்றவரும், அளையது திருடி அடிபடு - வெண்ணெயைத் திருடி அடிபட்ட, சிறியவன் - பாலகிருஷ்ணனு யிருந்தவரும், நெடியவன் - மகாபலிச் சக்கரவர்த்தியின் அகங்காரத்தைக் குலைப்பதற்காகத் திருவிக்கிரமாவதாரம் எடுத்தவரும், மதுசூதன் - மது என்னும் அசுரனை அழித்தவரும், திகிரி வளை கதை வசி தனு உடையவன் - சக்கரம் சங்கம் கதை வாள் வில் என்னும் ஐந்து ஆயுதங்களைத் தரித்தவரும், எழிலி வடிவினன் - மேகநிறமுள்ள வடிவத்தை யுடையவரும், அரவு பொன்முடி மிசை திமித திமி திமி என நடமிடும் அரி மருகோனே - காளிந்தி எனும் பாம்பின் பிரகாசம் பொருந்திய படத்தின்மீது திமித திமி திமி என நிர்த்தனஞ் செய்த கிருஷ்ணமூர்த்தியாய் அவதரித்தவருமான மகா விஷ்ணுவின் மருகோனே! பகர புகர் முக மத கரி - பிரகாசம் பொருந்தியதும் கபிலநிற முள்ளதுமான முகத்தையுடைய மதயானையானது, உழை தரு வனிதை வெருவ முன்வர - மான்வயிற்றிற் பிறந்த வள்ளிநாயகி பயப்படுமாறு அத்தேவியின் முன்னே வந்தபோது, அருள் புரி குக - அத்தேவியின் பயத்தை யகற்றி அருள் புரிந்த இதயகமல வாசியே!, பரம - பரம்பொருளே!, குருபர - பரம்பொருளை அடையும் மார்க்கத்தைப் போதிக்க வல்ல மேலான குருவே!, இமகிரி தரு மயில் புதல்வோனே - இமயமலையரசனுகிய இமவான் பெற்ற திருமகளான பார்வதி தேவியாரின் (செல்வப்) புதல்வனே!, பலவின் முது பழம் விழைவு செய்து ஒழுகிய நறவு நிறை வயல் - பலாமரத்தின் முதிர்ந்த பழங்களினின்றும் காண்போர் மனத்தில் தின்னவேண்டுமென்ற ஆசையுண்டாகுமாறு பெருகிய தேன் நிரம்பப் பெற்ற வயல்களினுலும், கமுகு அடர் பொழில் திகழ் - பாக்கு மரங்கள் அடர்ந்துள்ள சோலைகளினுலும் விளங்கும், பழநிமலை வரு - பழநி மலையில் எழுந்தருளி யிருக்கும், புரவல - இரக்ஷகனே!, அமரர்கள் பெருமாளே - தேவர்கள் நாயகனே!, தகர நறுமலர் பொதுளிய குழலியர் - தகர மரத்தின் வாசனை பொருந்திய மலர்களைச் சூட்டிய கூந்தலையுடைய மாதர்களது, கலக கெருவித விழிவலை பட விதி தலையில் எழுதி, ஆடவர் மனத்தைக் கலங்கச் செய்பவைகளும் கர்வம் பொருந்தியவைகளுமான கண்களாகிய வலையிற் சிக்கக் கடவதென்று பிரமன் அடியேன் தலையில் எழுதி, (உம்-அசை) அனைவயின் உற விடுவதனுலே தாயாருடைய - வயிற்றிற்போய்ச் சேருமாறு விடுவதனுலே, தனயர் அனை தமர் மனைவியர் சிநேகிதர் - மக்கள் தாய் உறவினர் மனைவிமார்கள் சிநேகிதர்கள் இவர்களை, சுரபி விரவிய வகையென - பசு கன்றைப் பிரிந்தால் அதனை நினைத்துக்கொண் டிருப்பது போல நினைத்துக் கொண்டிருந்து, தவன சலதியின் முழுகியெ இடர்படு துயர் தீர - ஆசையெனும் சமுத்

திரத்தில் மூழ்கி இடைஞ்சற்படுவதனு லுண்டாகும் துயரம் ஒழியுமாறு, அகரம் முதல் உள பொருளினை அருளிட - அகரத்தை முதல் எழுத்தாகவுடைய ஓங் காரத்தின் அகப்பொருளை உபதேசித்தருளுவதற்கும், இரு கை குவிசெய்து உள் உருகிட உருகியெ - அடியேன் இரு கைகளையும் தலைமேற் குவித்து மன முருக ஆர்வங்கொண்டு, அரகர என வலன் இடம் உற - அரகரா என்று கூறி உன்னை வலசாரியாகவும் இடசாரியாகவும் சுற்றி வலம்வர, எழில் உனது இரு பாதம்அருள - அடியேனுக்கு உனது அழகிய இரு பாதமலர்களையும் தந்தரு ளுவதற்காகவும், அருளுடன் மருள் அற இருள் அற - நினது அருளைப் பெறு வதனுல் அடியேனைச் சூழ்ந்திருக்கும் மாயையும் அஞ்ஞானமும் அழியவும், கிரண அயில் கொடு குருகணி கொடியொடு - ஒளி வீசும் கைவேலுடனும் சேவற்கொடியுடனும், அழகு பெற மரகத மயில் மிசை வர இசைவாயே - அழ காகப் பச்சைமயிலின்மீது ஏறிவரச் சம்மதித்தருளவேண்டும்.

(வி - ரை) வடமதுரையின் அருகிலுள்ள இடையர்கள் வெகுகாலமாக வுள்ள வழக்கத்தின்படி தேவேந்திரனுக்குத் திருவிழா நடத்த ஆரம்பித்தபோது கிருஷ்ணமூர்த்தி அதைத் தடுத்ததனுல், இந்திரன் வெகுண்டு தாங்கமுடியாத மழையைப் பொழிய ஆரம்பித்தான். அப்போது கிருஷ்ணமூர்த்தியானவர் **கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து** இடையர்களையும் பசுக்களையும் இரக்ஷித்தார்; மழை பொழிய ஆரம்பித்தபோது வெகுதூரத்தில் மேய்ந்து கொண்டிருந்த பசுக்களும் கன்றுகளும் தாம் ஒரு விரலின் நுனியில் தாங்கி நின்ற அம்மலைக் குடையின் கீழ்வந்து சேரும் வண்ணம் இனிமையாகப் புல் லாங்குழல் வாசித்தார்.

பாண்டவர்களுக்கு நாடு கொடுக்கவேண்டுமென்று தூதாகத் துரியோத னன் சபைக்குச் சென்றபோது கிருஷ்ணமூர்த்தி, சக்கரவர்த்தியான துரியோ தனன் செய்த ஆடம்பரமான உபசாரத்தை மதியாமல் தம்மை உள்ளன்புடன் **விருந்துக்கழைத்த விதுரன் மாளிகைக்குச் சென்றார்.**

பிரகலாதன் மகனுன விரோசனன் மகனுகிய **பலி** என்பவன் மகா சூரனுய் மூவுலகங்களையும் வென்று தேவர்களுக்கும் அதிபதியாக ஏக சக்ராதிபதியாக விருந்தான். அப்போது இந்திரனது வேண்டுகோளுக்கிசைந்து மகா விஷ்ணு வானவர் தம்மைப் புதல்வனுகப் பெறக் கருதி வெகுகாலம் தவஞ்செய்த காசிப முனிவருக்கு அதிதி என்னும் மனைவியினிடத்தில் குட்டையான புத்திரனுகப் பிறந்து **வாமனுவதாரஞ் செய்து, மகாபலிச் சக்கரவர்த்தியினிடம் சென்று மூன்றடி மண் யாசித்து,** அவன் அதற்கிசைந்தபோது, மூவுலகங்களிலும் வியா பித்த விசுவரூப மெடுத்துக்கொண்டு **திரிவிக்கிரமாவதாரஞ் செய்து பூவுல** கத்தை ஒரு அடியாகவும், வானுலகை ஒரு அடியாகவும் அளந்து, மூன்றும் அடிக்கு இடமில்லாமையால் **தமது பாதத்தை மகாபலிச் சக்கரவர்த்தியின் தலையின்மீது வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்திவிட்டார்.**

ஒரு கற்பத்தின் முடிவில் திருமால் யோகநித்திரையி லிருக்கையில், அவரது இரு செவிகளினின்றும் மது கைடவன் என்னும் இரண்டு அசுரர்கள் பிறந்து, அப்போதுதான் திருமாலின் திருநாபிக் கமலத்திலிருந்து உதித்த பிரமதேவரைக் கொல்ல எழுந்தனர். அப்போது திருமால் யோகநித்திரை கலைந்து எழுந்து, அவ்வசுரர்களைச் சமாதானஞ் செய்து அவர்களுக்கு வேண்டிய வரத்தைக் கேட்கும்படி சொல்ல, அவர்கள் தங்களுக்கு அவர் யாதொரு வரமும் அளிக்கவேண்டாமென்றும், வேண்டுமானால் அவர்களே திருமாலுக்கு வரம் கொடுப்பதாகவும் சொன்னார்கள். அப்போது திருமால் அவர்கள் தமது கையினால் மடியும் வரத்தைக் கொடுக்கும்படி கேட்டு, அவர்களைச் சங்கரித்தார். அது காரணத்தினால் திருமால் மதுசூதனன், கைடவாரி என்னும் காரணப் பெயர்களைப் பெற்றார்.

காளிங்கன் என்னும் ஒரு நாகன் யமுனா நதியில் ஒரு மடுவில் இருந்து கொண்டு அந்நீரை விஷநீராக்கி அதிலிறங்குவோரைக் கொன்று வந்தான். கிருஷ்ணமூர்த்தியானவர் அங்குசென்று காளிங்கனது படங்களையுடைய தலைகளின்மீது நிர்த்தனஞ்செய்து அவனைத் தண்டித்து அவனுடைய மனைவியர்களது வேண்டுகோளுக் கிணங்கி அவனைச் சங்கரிக்காமல் விடுத்தார்.

இந்திரனது கோபத்தினின்றும் கோபாலர்களையும் பசுக்களையும் கன்றுகளையும் இரக்ஷித்தவரும், உள்ளன்பையே பெரிதாக மதித்தவரும், ஜீவர்களது இதயமான வெண்ணெயை அபகரிப்பவரும், வாமனாவதாரமும் திரிவிக்கிரமாவதாரமும் செய்து அகங்கரித்த மகாபலியின் பெருமையை அழித்தவரும், மது என்னும் அசுரனால் பிரமதேவர் அழியாது காத்தவரும், பஞ்சாயுதங்களைத் தரித்தவரும், காளிங்கனை அடக்கியவரும், மேக நிறமுள்ள வடிவம் வாய்ந்தவருமான திருமாலின் மருகனாகிய முருகப்பெருமான் பரம்பொருளாகவும் பரம்பொருளையடையும் மார்க்கத்தைப் போதிக்கும் ஞானகுருவாகவும், உலகத்தையீன்ற தாயாகிய பார்வதிதேவியாரின் புதல்வராய் அவதரித்து ஜீவர்களிடத்தில் சகோதரவாஞ்சை யுடையவராகவும், அடியார்களது இதயத்தையே உகந்த உறைவிடமாகக் கொண்டவராகவு மிருப்பதனால், மான்வயிற்றிற்பிறந்த வள்ளி நாயகி உலகத்தையும் சுற்றத்தையும் நிலையான பொருள்களாகக் கருதியிருந்தபடியால், அவைகள் அழியும் பொருள்கள், அன்பத்தினின்றும் காக்குந்திறனற்றவைகள் என்னும் உண்மையைப் போதிப்பதற்காக அந்நாயகியாருக்கு முன்னே தமது தமயனாராகிய விநாயகக்கடவுளை ஒரு மதயானையின் உருவத்துடன் தோன்றும்படி வேண்டி, அம்மத யானையினால் மரணம் சம்பவிக்கும் என்ற பயத்தையும், பலசாலிகளான தந்தையும் சகோதரர்களும் சுற்றத்தார்களும் தனக்கு உபயோகப்படமாட்டார்களென்ற நிச்சயத்தையும் அந்நாயகியின் மனத்திலூட்டி, அந்நாயகி வேறுகதியின்றித் தமது பாதங்களே உற்ற புகலிடமென்ற பூரணநம்பிக்கையுடன் தம்மைச் சரண்புகும்படி செய்து, மரண பயத்தை அகற்றி அந்நாயகியின்மீது பேரருள் புரிந்து ஒப்புயர்வற்ற அழகுடன்

அந்நாயகியுடன் கலந்தருளினுர். அப்படிப்பட்ட கருணைவள்ளலான முருகப் பெருமானை - தடுத்தாட்கொள்ளும் இயல்புள்ள குகப்பெருமானை - விளித்துச் சுவாமிகள் உலகவியல்பாகிய சமுசார வாழ்க்கையில் தாம் உழல்வது நீங்கு மாறு, தமக்குப் பிரணவத்தின் பொருளான ஞானத்தைப் போதிக்கவும், தமது மனத்தை உருக்கித் தம்மைத் தடுத்தாட்கொள்வதற்காகவும், தமது அஞ்ஞா னத்தையும் மாயையையும் அகற்றுவதற்காகவும், ஞானசக்தியாம் வேலாயுதத் தைக் கரத்திலேந்தி, பச்சைமயிலின்மீதேறி திவ்ய சௌந்தரியத்துடன் தம் முன்னே தோன்றிக் காட்சி தருபடி பிரார்த்திக்கிருர். ஞான போதகஞ் செய்ய வல்லவர் முருகப்பெருமான் ஒருவரே. அவருடைய உபதேசத்தைப் பெற்றலல்லது மெய்ஞ்ஞானம் பெறமுடியாது.

"வேலே விளங்குகை யான்செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளவிங்ஙன் காண்பதல் லான்மன வாக்குச்செய
லாலே யடைதற் கரிதா யருவுரு வாயொன்று
போலே யிருக்கும் பொருளையெவ்வாறு புகல்வதுவே?"

என்னும் கந்தரலங்காரப் பாடலினுலும்,

"முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே!"

என்னும் கந்தரனுபூதிப் பாடலினுலும், முருகப்பெருமானைக் குருவாகப் பெற்றாலன்றி மெய்ஞ்ஞானம் பெற மார்க்கமில்லையென்பது விளங்கும். (ச)

தனனதன தனனதன தானன தனனதன
தனனதன தனனதன தானன தனனதன.
தனனதன தனனதன தானன தனனதன—தனதான.

இரவியென வடவையென ஆலால விடம்தென
வுருவுகொடு ககனமிசை மீதேகி மதியும்வர
இரதிபதி கணைகளொரு நாலேவ விருதுகுயி லதுகூவ
எழுகடலின் முரசினிசை வேயோசை விடையின்மணி
யிசைகுறுகி யிருசெவியி னுராச முறுவதென
இகல்புரிய மதனகுரு வோராத அணையர்கொடு வசைபேச
அரஹரென வனிதைபடு பாடோத அரிதரிது
அமுதமயி லதுகருதி யாரோடு மிகல்புரிவள்
அவசமுற அவசமுற ஆரோமல் தரவுமிக மெலிவாளுள்!

அருதியிவள் தலையில்விதி யானாலும் விலகரிது
அடிமைகொள வுனதுபரம் ஆறுத வொருதனிமை
யவளையணை தரஇனிதி னேகார பரியின்மிசை வருவாயே!

நிரைபரவி வரவரையு ளோர்சீத மருதினொடு
பொருசகடு வுதையதுசெய் தாமாய மழைசொரிதல்
நிலைகுலைய மலைகுடைய தாவேகொள் கரகமலன் மருகோனே!

நிருமலிய திரிநயனி வாள்வீச வருகுமரி
கவுரிபயி ரவியரவ பூணரி திரிபுவனி
நிபுடமலை யரசனருள் வாழ்வான புரணவுமை யருள்பாலா!

பரவைகிரி யசுரர்திரள் மாசேனை தவிடுபொடி
படஅமரர் துயரகல வேலேவி யமர்பொருத
பதுமகர தலமுருக நால்வேத காரணிக மயில்வீரா!

பனிதம்ருக மதகளப சேரார வளருமுலை
வனிதைகுற மகள்மகிழும் லீலாவி தரமதுர
பனுவல்தரு பழநிவரு கோலாக லவஅமரர் பெருமாளே!

(ப - ரை) நிரை பரவி வர - பசுவின் கூட்டங்கள் தம்மைச்சூழ்ந்து வருமாறும், வரையுளோர் (பரவி வர) - (கம்ஸனுடைய தூதனாகிய ஓர் அசுரனால்) மலைக்குகைக்குள் அடைபட்டவர்கள் (மீண்டு தம்மைச்சூழ்ந்து வருமாறும்) (திருவிளையாடல்களைச் செய்தும்), சீத மருதினொடு பொரு - குளிர்ந்த காற்றாக வந்து தம்மைத் தூக்கிச்சென்ற அசுரனுடன் போர்புரிந்து (அழித்தும்), சகடு உதையது செய் - சகடாசுரனை உதைத்து (அழித்தும்,) தா மாய மழை சொரிதல் நிலை குலைய - கேடு விளையும் வண்ணம் மாயமாய் (பெரு) மழை சொரிந்ததனால் ஆயர் பாடியானது நிலைகுலைந்தபோது, மலை குடையதாவே கொள்-கோவர்த்தனம் என்னும் மலையைக் குடையாகத் தூக்கிப்பிடித்த, கர கமலன் - செந்தாமரையை யொத்த கையையுடையவரான திருமாலின், மருகோனே - சகோதரி புத்திரனே!, நிருமலிய திரிநயனி - மலத்தினால் பாதிக்கப் படாதவரும் மூன்று கண்களை யுடையவரும், வாள் வீச வருகுமரி - மிகுந்த பிரகாசத்துடன் தோன்றிய கன்னிகையும், கவுரி பயிரவி - கவுரி பயிரவி என்னும் திருநாமங்களை யுடையவரும், அரவ பூணரி - பாம்பையே ஆபரணமாக அணிந்தவரும், திரிபுவனி-மூன்று லோகங்களையும் படைத்தவரும், நிபுட மலை அரசன் அருள் வாழ்வான - நெருங்கிய சிகரங்களையுடைய இமயமலையின் அரசனை இமவான் உலகத்துக்கு உதவிய வாழ்வு ஆனவரும், புரண உமை அருள் பாலா - நிறைந்த அறிவின் சொரூபமானவருமான உமாதேவியார் அருளினால்

உலகத்துக்குத் தந்த பாலகனே!, பரவை - சமுத்திரம், கிரி - (கிரௌஞ்சம் என்னும்) மலை, அசுரர் திரள் மா சேனை - அசுரர்களுடைய திரண்ட பெருஞ் சேனை, (இவைகள்), தவிடு பொடிபட - தவிட்டைப்போல் பொடி யாகுமாறும், அமரர்துயர் அகல - தேவர்களது துயரம் நீங்குமாறும், வேல் ஏவி அமர் பொருத பதும கரதல - வேலாயுதத்தைப் பிரயோகித்துப் போர்செய்த தாமரையை யொத்த கையினை யுடையோனே!, முருக - ஞானவாசனை வீசுபவனே!, நால்வேத கா ரணிக - நான்கு வேதங்களினாலும் தோத்திரஞ் செய்யப் படுபவனே!, மயில்வீரா - மயிலை வாகனமாகக் கொண்ட வீரனே, ப(ா)ளித ம்ருகமதகளப சேறு ஆர வளரு(ம்) முலை வனிதை - சந்தனமும் கஸ்தூரியும் கலந்த குழம்பு பூசப்பெற்று பருத்து வளர்ந்திருக்கும் தனபாரங்களையுடைய பெண்மணியும், குறமகள் - வேடுவர் குலத்தில் வளர்ந்த பெண்ணுமான வள்ளி நாயகி, மகிழும் லீலா விதர - மகிழும் வண்ணம் திருவிளையாடல்களைச் செய்யும் சுந்தர மூர்த்தியே!' மதுர பனுவல் தரு- இனிய ஞானத்தைப் போதிக்கும் (ஐதிகமுடைய), பழநி வருகோலாகலவ - பழநியில் கோலாகலமாய் எழுந்தருளி யிருப்பவனே!, அமரர் பெருமாளே - தேவர்கள் நாயகனே!, இரவி என - சூரியன் என்று சொல்லும்படியாகவும், வடவை என - வடவாமுகாக்கினி என்று சொல்லும்படியாகவும், ஆலால விடம் அது என - ஆலாலம் என்னும் கொடிய விஷம் என்று சொல்லும்படியாகவும், உருவு கொடு - (தாபத்தையுண்டாக்கும்) உருவத்தை எடுத்துக்கொண்டு, ககன(ம்) மிசைமீது ஏகி- ஆகாயத்தின்மீது சென்று, மதியும் வர - சந்திரன் பிரகாசித்து வரவும், இரதிபதி கணைகள் ஒருநாலு ஏவ - இரதியின் கணவனான மன்மதன் தாமரை மலர் மாமலர் அசோகு மலர் முல்லை மலர் என்னும் நான்குவகைப் புஷ்பபாணங்களைப் பிரயோகிக்கவும், விருது குயில் அது கூவ - அவனது விருதான குயில் (இனிய குரலுடன்) கூவவும், எழுகடலின் முரசின் இசை - அவனது பேரிகையான அலைவீசி ஆரவாரிக்கும் கடலின் ஓசையும், வேய் ஓசை - புல்லாங்குழலின் கானமும், விடையின் மணி இசை - காளை மாடுகளின் கழுத்திற் கட்டிய மணியின் சத்தமும், குறுகி - நெருங்கி வந்து, இருசெவியின் நாராசம் உறுவது என - இரண்டு காதுகளிலும் அம்புகள் பாய்ந்தாற்போல(ச் சென்று), இகல் புரிய - போராடவும், மதனகுரு ஓராத அனையர் - காமத்தினால் ஏற்படும் பாரத்தைச் சுமந்து அறியாத பேர்கள், கொடு வசை பேச - கடூரமான நிந்தை வார்த்தைகளைப் பேசவும், அரஹர என வனிதை பட(ம்) பாடு - அரஹரா! தெய்வமே! என்செய்வேன்? என்று கூவி அப்பெண்மணியானவள் படும் துயரத்தை ஓத அரிது அரிது - எடுத்துரைப்பது மிகவும் கஷ்டமான காரியம்; அமுத மயில் அது கருதி - அமுதத்தை யொத்த இனிய குணமுடையவளும் மயிலைப்போல் அழகு வாய்ந்தவளுமான அப்பெண்மணி தனது துயரத்தைப் பற்றி எண்ணி யெண்ணி, யாரோடும் இகல் புரிவள் - எல்லோரிடத்திலும்

பகைமை பாராட்டுகிருள்; அவசம் உற அவசம் உற - (அன்றியும் அவள்) மேன் மேலும் (மோகத்தினல்) மயக்கமடைந்து, ஆர் ஓமல் தர - ஊர் வம்புப் பேச்சு அதிகமாகும் வண்ணம், மிக மெலிவாளுள் - மிகவும் மெலிந்திருக்கிருள்; அகுதி இவள் தலையில் விதி - வேறு திக்கற்ற இவளுடைய தலையில் (பிரமன் எழுதியிருக்கும்) விதியை, ஆனாலும் விலக அரிது - விலக்குவது மிகவும் கஷ்டம்; அடிமை கொள - அவளை நினது அடிமையாக்கிக் கொள்வதற்காகவும், உனது பரம் ஆருத ஒரு தனிமை அவளை - உன்னிடத்திற் கொண்ட காதலாகிய பாரம் குறையப்பெருது பிரிவாற்ருமையினுல் வருந்தும் அவளை, அணை தர - அணைந்து கொண்டு கலப்பதற்காகவும், இனிதின் - சந்தோஷத்துடன், ஒகார பரியின் மிசை வருவாயே - பிரணவத்தின் சொரூபமானதும் வேகமுள்ளதுமான வாகனமாகிய மயிலின்மீது வந்தருளவேண்டும்.

(வி - ரை) புயற்காற்றில் அரக்கன் கிருஷ்ணனைத் தூக்கிச்சென்றது:— ஆயர்பாடியில் வளர்ந்துவந்த கிருஷ்ணனைக் கொல்லக் கம்ஸனுல் அனுப்பப்பட்ட அரக்கன் ஒருவன் புயற்காற்று பலமாய் அடித்து மண்மாரி பெய்த சமயம் பார்த்துத் தானும் புயற்காற்றினுருவங்கொண்டு குழந்தையாகவிருந்த கிருஷ்ணனைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்திற் சென்ருன். ஆனல் குழந்தை மலைபோல் பளுவாயிருந்த படியால், குழந்தையைக் கீழே போடமுயன்ருன்; ஆனல் போடமுடியவில்லை. கடைசியில் அவன் குழந்தையின் பளுவைச் சுமக்க மாட்டாதவனுய்க் கழுத்து நெரிந்து கீழே ஒரு பாறையின்மீது விழுந்து உயிர் துறந்தான். மண்மாரி ஓய்ந்தபின் குழந்தையைக் காணுமல் ஆயர்கள் மனம் தத்தளித்து எங்கும் தேடிக் கடைசியில் இறந்துகிடந்த அரக்கன்மீது கிருஷ்ணன் விளையாடிக்கொண்டிருந்ததைக் கண்டு கவலையை ஒழித்தார்கள்.

சகடாசுர வதம்:—கம்ஸனுல் ஏவப்பட்ட அரக்கன் ஒருவன் ஆயர்பாடிக்குச் சென்று, நந்தகோபர் வீட்டினுள் புகுந்து கிருஷ்ணன் படுத்துறங்கிக் கொண்டிருந்த தொட்டிலின் பக்கத்தில் கிருஷ்ணன் விளையாடுவதற்காக வைக்கப்பட்டிருந்த வண்டியில் மறைந்துகொண்டு கிருஷ்ணனைக் கொல்லச் சமயம் பார்த்திருந்தான். தொட்டிலில் தூங்கிக்கொண்டிருந்த குழந்தையான கிருஷ்ணன் திடீரென்று விழித்துக்கொண்டு பசியினுல் வருந்தியவன்போல் பெருங் கூச்சலிட்டு அழுது, காலினுல் அவ்வண்டியை உதைத்தான். அதனுள் மறைந்திருந்த அரக்கனும் மாய்ந்தான். (௫)

தனதனன தனதனன தத்தத் தனத்தனன
தனதனன தனதனன தத்தத் தனத்தனன
தனதனன தனதனன தத்தத் தனத்தனன—தனதானு.

சிறுபறைபு முரசுதுடி சத்தக் கணப்பறைபு
மொகுமொகென அதிரவுட னெட்டிப் பிடித்துமுடி
சிறுகயிறு நெடிதுகொடு கட்டிட் டிழுக்கஇனி யணுகாதே

சிலதமர்க ளுறவுகிளை கத்திப் பிதற்றியெடு
சுடலைதனி விடுகனலை யிட்டுக் கொளுத்துபுனல்
திரைகடலில் முழுகெனவு ரைக்கப் படிக்குடிலை யொழியாதே

மறைமுறையி னிறுதிநிலை முத்திக் கிசைத்தபடி
உடலுயிர்கள் கரணவெளி பட்டுக் குணத்திரயம்
வழிபடவும் நினதடிமை யிச்சைப் படுத்துவது மொருநாளோ ?

வருதுரக மயில்மணிகள் சத்திக்க நிர்த்தமிட
ஒருபதுட னிருபுயமு மட்டுத் தொடைக்கிசைய
மனமகிழ இனியமொழி செப்பிச் சிவத்தபத மருள்வாயே!

நறையிதழி யறுகுபல புட்பத் திரட்களொடு
சிறுபிறையு மரவுமெழி லப்புத் திருத்தலையி
னளினமுற அணிசடையர் மெச்சிப் ப்ரியப்படவு மயிலேறி

நவநதிகள் குமுகுமென வெற்புத் திரட்சுழல
அகிலமுத லெழுபுவன மெத்தத் திடுக்கிடவும்
நவமணிகள் உரகனுடல் கக்கத் துரத்திவரு முருகோனே!

குறவர்முனை கெடமனது வெட்கப் படக்குடிலில்
மலையிலெழு தினையிதணில் வைத்துச் சிறுக்கியிரு
குவிமுலையு மணியிடையு மெச்சிப் புணர்ச்சிசெயு மணவாளா!

குறுமுநிவ னிருபொழுதும் அர்ச்சித்து முத்திபெற
அறிவுநெறி தவநிலைகள் செப்புந் தமிழ்க்கினிய
குருகுமர பழநிவளர் வெற்புத் தனிற்றிகழு பெருமாளே!

(ப - ரை) நறை இதழி - வாசனை பொருந்திய கொன்றை மலர்களையும், அறுகு - அறுகு எனும் புல்லையும், பல புட்பத்திரட்களொடு - பல வகைப்பட்ட ஏராளமான மலர்களையும், சிறு பிறையும் - (ஒரே கலையுள்ள) பிறைச்சந்திரனையும், அரவும் - பாம்பையும், எழில் அப்புத் திருத்தலையில் - அழகிய கங்காநதி பொருந்திய திவ்யமான திருத்தலையில், நளினம் உற - அவைகள் நன்மையடையுமாறு, அணி சடையர் - அணிந்துகொண்டிருக்கும் சடாமுடியையுடைய சிவபெருமான், மெச்சி ப்ரியப்படவும் - நின்னைப் புகழ்ந்து நின்னை அத்திருக்கோலத்தில் (எப்போதும் காண) விரும்புமாறு, மயில் ஏறி - மயிலின்மீது ஏறி, நவநதிகள் குமுகுமு என - கங்கை, யமுனை, நருமதை, சரசுவதி, கோதாவரி, காவிரி, பயோஷ்ணி, ஸரயு, குமரி என்னும் ஒன்பது சிறந்த நதிகளும் பொங்கிச் சத்திக்கும்படிக்கும், வெற்பு திரள் சுழல - மலைக்கூட்டங்கள் சுழலும்படிக்

கும், அகில(ம்) முதல் எழுபுவன(ம்) மெத்த திடுக்கிடவும் - பூமி முதலான ஏழு உலகங்களும் மிகவும் பயந்து நடுங்கும்படிக்கும், நவமணிகள் உரகன் உடல் சக்க - ஆதிசேஷனது உடல் பிதுங்கி அதிலிருந்து நவரத்தினங்கள் வெளிப் படும்படிக்கும், துரத்திவரு(ம்) முருகோனே - (வாகனமான மயிலை) வெகு வேகமாய்ச் செலுத்தி உலகத்தை வலம் வரும் ஞானவாசனை வீசுபவனே!, குறவர் முனை கெட மனது வெட்கப்பட - வேடர்கள் நின்னை எதிர்த்த போரில் தோல்வியடையச் செய்து அவர்கள் மனம் வெட்கமடையும்படி, குடிலில்-சிறு குடிசையிலும், மலையில் எழு தினை இதணில் - மலைமீது உயரமானதாகப் போடப்பட்ட தினைக் கொல்லைப் பரணிலும், சிறுக்கி இரு குவிமுலையும் மணி இடையும் மெச்சி - சிறுமியான வள்ளியின் குவிந்துள்ள இரு தனபாரங்களை யும் அழகிய இடையையும் புகழ்ந்து, புணர்ச்சி செயும் மணவாளா - அத்தேவி யாருடன் கலந்த நாயகனே!, இருபொழுதும் அர்ச்சித்து முத்திப்பெற- சதாகாலமும் நின்னை மலர்களினால் அருச்சித்து முத்தியடைவதற்குரிய, அறிவு நெறி தவநிலைகள் - ஞானமார்க்கத்தையும் தவஞ்செய்யும் முறைமைகளையும், குறுமுநிவன் - சிறு தேகத்தையுடைய அகத்தியமாமுனிவர் செப்பு தமிழ்க்கு - போதித்த பாஷையான தமிழுக்கு, இனிய - இனிமையைத் தரும், குருகுமர ஞான குருவாக வந்த குமாரசுவாமியே!, பழநி வளர் வெற்புத்தனில் - பழநி யில் வளர்ந்துள்ள மலையின்மீது, திகழும் பெருமாளே - விளங்கும் பெரு மானே!, சிறு பறையும் முரசு துடி சத்தக் கணப் பறையும்மொகு மொகு என அதிர உடன் - சிறுபறை பேரிகை உடுக்கை சத்திக்கும் கணப்பறை இவைகள் உடனே மிகுந்த சத்தத்துடன் முழங்குமாறு, எட்டி பிடித்து - தூரத்திலிருந்த வண்ணமே (பாசக்கயிற்றை எறிந்து) பிடித்து, முடி சிறு கயிறு நெடிது கொடு கட்டிட்டு - தலையை மெல்லியதாகவும் நீண்டதாகவுமுள்ள கயிற்றினால் கட்டி, இழுக்க - (யமதூதர்கள் ஆவியை) இழுத்துச் சென்ற மாத்திரத்தில், இனி அணுகாதே - அதன்பிறகு உயிர்நீங்கின சடலத்தின் சமீபத்திலும் வாராமல், சில தமர்கள் உறவு கிளை கத்தி பிதற்றி - சில பந்துக்களும் உறவினர்களும் வம்சத்தவர்களும் துக்கத்தினால் அலறி ஏதேதோ சொல்லிப் புலம்பி, எடு - தூக்கு!, சுடலைதனில் இடு - (கொண்டுபோய்ச்) சுடுகாட்டில் வை!, கனலை இட்டு கொளுத்து நெருப்பைப் போட்டுக் கொளுத்து!, புனல் திரைகடலில் முழுகு - நீர் நிறைந்து அலைமோதும் கடலில் நீராடு!, என உரைக்க - என்று சொல்லும் வண்ணம், படிக் குடிலை - இப்பூவுலகத்தில் நான் குடியிருந்த குடி சையாகிய தேகத்தை, ஒழியாதே - தொலைத்துவிடாமல், மறை முறையின்- வேதங்களிற் கூறிய முறைப்படி, இறுதி நிலை முத்திக்கு — முடிவில் அடைய வேண்டிய நிலைமையான முத்தி வீட்டுக்கு, இசைத்தபடி - பொருந்திய தெனக் கூறிய வண்ணம், உடல் உயிர்கள் காண(ம்) வெளிபட்டு - தேகம் பஞ்சபூதங்கள் ஐம்பொறிகள் இவைகளினின்றும் பிரிந்து வெளியேறி, குணத்திரயம் வழிபடவும் - முக்குணங்களையும் வசமாக்கிக் கொள்ள

வும், நினது அடிமை இச்சைப்படுத்துவதும் ஒருநாளே-நினது அடிமையாகிய அடியேனுக்கு இச்சையுண்டாக்கும் நாளும் வரப்போகிறதோ?, வரு துரக மயில் - நின்னை வேகமாய்த் தூக்கிவரும் மயிலானது, மணிகள் சத்திக்க நிர்த்த மிட - தனது காலிற் கட்டிய சதங்கைகள் ஒலிக்குமாறு நிர்த்தனஞ் செய்யவும், ஒருபதுடன் இரு புயமும் மட்டுத் தொடைக்கு இசைய - பன்னிரு புயங்களும் வாசனை வீசும் மலர்மாலைகள் பொருந்தப் பெற்றிருக்கவும், மனமகிழ இனிய மொழி செப்பி - அடியேன் மனம் மகிழ்ச்சியடையுமாறு (அமுதத்தைப்போல் அழியாத வாழ்வைத் தரும்) இனிமையான வார்த்தையைச் சொல்லி, சிவத்த பதம் அருள்வாயே - சிவந்த பாதாரவிந்தங்களைத் தந்தருள்வாயே!

(வி - ரை) வேதங்களிற் கூறியுள்ள முறைப்படி ஜீவன் கடைசியில் அடையவேண்டிய நிலைமையான முத்தியை ஜீவன் அடையவேண்டுமானால், ஜீவன் தான் தேகமுமல்ல, ஐம்பொறிகளுமல்ல, பஞ்சபூதங்களுமல்ல வென்றும், தேகமானது தானுறையும் அகமே யென்றும், மரணகாலத்தில் அவைகளை விட்டுப் பிரியவேண்டுமென்றும், அவைகள் வேறு தான் வேறு என்றும் உணர்ந்து, அவைகளுறும் இன்ப துன்பங்களைத் தன்னுடையவைகளாகப் பாவித்துக் களித்து வருந்தாமல் பற்றற்றிருந்து, சத்துவம் இராஜதம் தாமதம் என்னும் மூன்று குணங்கள் தனக்குள் பொருந்தி யிருப்பவைகளை அடக்கித் தன் வசப்படுத்திக் கொள்ள வேண்டும். ஆனால் அப்படித் தேகத்தையும் பஞ்ச பூதங்களையும் ஐம்பொறிகளையும் வேறாகக் கருதி அவைகளைவிட்டுப் பிரிந்து நிற்கவேண்டு மென்றும் முக்குணங்களைத் தன் வசமாக்கிக்கொள்ள வேண்டுமென்றும் மனத்தினில் ஆசை யுண்டானாலன்றி அந்நிலைமையை அடைய முயற்சி செய்யவும் எது வுண்டாகா தாகையினாலும், அந்நிலைமையை அடையவேண்டுமென்ற இச்சையுண்டாவதற்கும் ஓரளவு அறிவு அவசியமாத லாலும், ஞானச் சொரூபியாகவும் ஞானதேசிகனாகவுமுள்ள முருகப் பெருமானது அருள் சுரந்தாலன்றி அவ்வித அறிவைப் பெறுவதும் சாத்தியமல்லவாதலாலும், சுவாமிகள் அப்படிப்பட்ட இச்சை தமக்கு உண்டாகச் செய்யும்படி முருகப் பெருமானைப் பிரார்த்திக்கிறார். மயிலின் விசேஷ குணங்களான பல பராக்கிரமமும் அதிவேகமும் இப்பாடலில் "நவசதிகள் குமுகுமெனா......... முருகோனே" என்னும் அடியில் தெளிவாக விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. அவ்வளவு பெருமை வாய்ந்த மயிலை அடக்கிச் சவாரி செய்ய வல்லவர் முருகப்பெருமான் ஒருவர்தாம்! (௬)

தனதன தனத்தான தானன தானதன
தனதன தனத்தான தானன தானதன
தனதன தனத்தான தானன தானதன—தனதான.

தலைவலி மருத்தீடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி யணுகாதே

தலமிசை யதற்கான பேரோடு கூறியிது
பரிகரி யெனக்காது கேளாது போலுமவர்
சரியும்வ யதுக்கேகு தாரீர்செ லீரெனவும் விதியாதே

உலைவற விருப்பாக நீள்காவின் வாசமலர்
வகைவகை யெடுத்தேதொ டாமாலி காபரண
முனதடி யினிற்சூட வோடு மாதவர்க ளிருபாதம்

உளமது தரித்தேதி னோவோடு பாடியருள்
வழிபட எனக்கேத யாவோடு தாளுதவ
உரகம தெடுத்தாடு மேகார மீதின்மிசை வரவேணும்!

அலைகட லடைத்தேதம காகோர ராவணனை
மணிமுடி துணித்தாவி யேயான சானகியை
அடலுட னழைத்தேகொள் மாயோனை மாமனெனு மருகோனே!

அறுகினை முடித்தோனை யாதார மானவனை
மழுவுழை பிடித்தோனை மாகாளி நாணமுனம்
அவைதனில் நடித்தோனை மாதாதை யேஎனவும் வருவோனே!

பலகலை படித்தோது பாவாணர் நாவிலுறை
யிருசர ணவித்தார வேலாயு தாவுயர்செய்
பரண்மிசை குறப்பாவை தோள்மேவ மோகமுறு மணவாளா!

பதுமவ யலிற்பூக மீதேவ ரால்கள்துயில்
வருபுனல் பெருக்காறு காவேரி சூழவளர்
பழநிவ ருகற்பூர கோலாக லாவமரர் பெருமானே!

(ப-ரை) அலை. கடல் அடைத்தே - அலை வீசும் கடலை அடைத்து (அணை வழியே இலங்கைக்குச் சென்று), (ஏ-அசை), மகா கோர ராவணனை- மிகவும் கொடிய இராவணனை, மணிமுடி துணித்து - இரத்தினங்க ளிழைத்த மகுடத்தைத் தரித்த அவன் தலையை வெட்டிச் சங்கரித்து, ஆவியே ஆன சானகியை-தமதுயிரைப் போல் அருமையான சீதாப்பிராட்டியை, அடலுடன் அழைத்தே கொள் மாயோனை - வெற்றியுடன் மீட்டுக்கொண்ட திருமாலை, மாமன் எனும் மருகோனே - மாமன் என்று அழைக்கும் மருகோனே!, அறுகினை முடித்தோனே - அறுகு என்னும் புல்லைத் தமது சடாமுடியில் அணிந்தவரும், ஆதாரமானவனை - சகல வுலகங்களுக்கும் ஆதாரமாக விருந்து காப்பவரும், மழு உழை பிடித்தோனை-மழுவையும் மானையும் கைகளில் தாங்கியவரும் மா காளி நாண முனம் அவைதனில் நடித்தோனை-(பொன்னம்பலத்தில்) நிர்த்

தனத்தில் திறமையுள்ள காளி மனம் வெட்கமடையுமாறு முன்னொரு நாள் (அற்புத) நிர்த்தனம் செய்தவருமான சிவபெருமானை, மா தாதையே எனவும் வருவோனே - சிறந்த தந்தாய் எனுமாறு அப்பெருமானது செல்வப்புதல்வனாக அவதரித்தவனே !, பல கலை படித்து ஓது பாவாணர் நாவில் உறை - பலவகைப் பட்ட சாஸ்திரங்களைக்கற்று நின்னைப் புகழ்ந்துபாடும் புலவர் நாவில் அமர்ந்திருக் கும், இரு சரண விஸ்தார - (சகல உலகங்களிலுமுள்ள ஜீவராசிகளனைத்தும் வந்து அடைக்கலம் புகுமாறு) இரண்டு பாதங்களும் விசாலமாக இருக்கப் பெற்ற வனே! வேலாயுதா-(ஞான சக்தியாம்) வேலாயுதத்தைக் கையிற்பிடித்தவனே!, உயர் செய் பரண்மிசை குற பாவை தோள் மேவ - உயரமாக அமைக்கப்பட் டிருந்த பரண்மீது நின்ற வேடப் பெண்ணான வள்ளி நாயகியின் தனபாரங்களை அணைய வேண்டுமென, மோகம் உறு மணவாளா - ஆசைப்பட்டு அந்நாயகியை மணந்து கொண்டவனே !, பதும வயலில் பூகமீதே வரால்கள் துயில்வரு - கோடிக்கணக்கான நெல்வயல்களில் (வரப்புகளிலுள்ள) பாக்குமரங்களின்மீது வரால் மீன்கள் பாய்ந்து அமர்ந்து தூங்கும்வண்ணம், புனல் பெருக்கு ஆறு காவேரி - நீர் மிகுதியாகப் பெருகி வரும் ஆறான காவிரி நதியானது, சூழ வளர் பழநி வரு-தன்னைச் சூழ்ந்திருக்க உயர்ந்து வளர்ந்திருக்கும் பழநிமலையின் மீது வந்து அமர்ந்துள்ளவனும், கற்பூர கோலாகலா - (அத்தலத்தில்) சதாகால மும் கற்பூர தீபாராதனை செய்யப்பெற்றவனுமான, அமரர் பெருமாளே-தேவர் கள் நாயகனே !, தலைவலி மருத்தீடு காமாலை சோகை சுரம் விழிவலி,—வறள் சூலை - வறட்சியினால் உண்டாகும் சூலைநோய், காயா சுவாசம் - சுவாச காசம், வெகு சலம்-சளி, மிகு விஷப்பாகம்-கொடிய விஷம் சேர்ந்த தோஷம் என்னும், மாயா விகார பிணி அணுகாதே - மாயமாகப்பீடிக்கும் கொடிய நோய்கள் அடியே னைப் பீடிக்காமல் இருக்குமாறும், தலம் மிசை அதற்கான பேரோடு கூறி-உலகத் தில் அந்த நோய்க்குள்ள பெயரையும் சொல்லி, இது பரிகாரி என-இந்நோயைத் தீர்க்கவேண்டுமென்று அடியேன் கேட்டுக் கொள்ளும்போது, அவர் காது கேளாது போலும் - வைத்தியர் அடியேன் கூறியது அவர் காதிற் படாதது போல் பாசாங்கு செய்து, சரியும் வயதுக்கு ஏது தாரீர் சொலீர் எனவும் - நழு விக்கொண்டே வரும் உமது ஆயுளை உமக்கு மீட்டுக் கொடுப்பதற்கு எவ்வளவு பொருள் கொடுப்பீர் என்று சொல்லும் ! என என்னைக் கேட்கும் வண்ணம், விதியாதே-அடியேனுக்குத் தலைவிதி ஏற்படாமலிருக்குமாறும் (அருள்புரிந்து), உலைவு அற - சஞ்சலம் நீங்கப்பெற்று, விருப்பாக - அன்புடன், நீள் காவின் வாச மலர் - விசாலமான சோலையிலுள்ள வாசனை பொருந்திய புஷ்பங்களை, வகை வகை எடுத்தே - வகை வகையாக எடுத்து, தொடா மாலிகை ஆபரணம் - தொடுத்த மாலையாகிய ஆபரணத்தை, உனது அடியினில் சூடவே நாடும் - நினது பாதங்களில் சாத்துவதையே பிரதான நோக்கமாகக் கொண்ட, மாதவர்கள் இருபாதம் - சிறந்த தவசிகளது இரண்டு பாதங்களையும், உளமது தரித்தே - அடி

யேன் எனது மனத்தினில் அமர்த்தி, விஞேவோடு பாடி - ஆராய்ந்து (அதுவே தக்கநெறி யென அறிந்து) அவர்களது பாதங்களைப் புகழ்ந்து பாடி, அருள்வழி பட - நினது அருளைப்பெறும் நெறியில் அடியேன் நிற்க, (அடியேன் அந்நெறியில் நிற்பதைப் பெரிதாகக்கருதி), எனக்கே தயாவோடு தான் உதவு-தயை புரிந்து அடியேனுக்கு நினது பாதாரவிந்தங்களைத் தந்தருளுவதற்கு, உரகம் அது எடுத்து ஆடும் - நாகப்பாம்பைத் தனது கால்களினுல் தூக்கிக்கொண்டு நிர்த்தனஞ் செய்யும், மேகாரம் மீதின் மிசை-மயிலின் மீது, வரவேணும் - நீ வந்தருளவேண்டும்!

(வி - ரை) இப்பாடலில் சுவாமிகள் முருகப்பெருமானை விளித்து, தமக்கு நோயற்ற வாழ்வைத் தந்தருளி, மனவமைதியுடனும் ஆர்வத்துடனும் நறுமண மிக்க பல புஷ்பங்களைக் கொய்து தொடுத்து அப்புஷ்பமாலையை அப்பெருமானது பாதாரவிந்தங்களிற் சூட்டுவதையே தங்கள் வாழ்க்கையின் ஒரு நோக்கமாகக் கொண்ட தவசிகளுடைய இரு பாதங்களையும் தாம் தியானித்துப் புகழும் படியான அறிவைத் தந்தருள வேண்டும் என்றும், அப்படிச் செய்வதே உய்யு நெறி யென அறிந்து தாம் அந்நெறியில் நிற்பதைக்கண்டு மனமுவந்து தமக்கு அப்பெருமான் அவரது பாதமலர்களைத் தந்தருள வேண்டுமென்றும் பிரார்த்திக்கிருர். இப்பாடலில் முருகப்பெருமானுக்குப் புஷ்பமாலை சாத்துவதான தொண்டின் பெருமை குறிப்பாய்க் கூறப்பட்டிருக்கிறது. (எ)

தனன தனன தனன தனன
தனன தனன—தனதானு.

திமிர வுததி யனைய நரக
செனன மதனில் விடுவாயேல்

செவிடு குருடு வடிவு குறைவு
சிறிது மிடியு மணுகாதே

அமரர் வடிவு மதிக குலமு
மறிவு நிறையும் வரவேநின்

அருள தருளி யெனையு மனதொ
டடிமை கொளவும் வரவேணும்!

சமர முகவெ லசுரர் தமது
தலைக ளுருள மிகவேநீள்

சலதி யலற நெடிய பதலை
தகர அயிலை விடுவோனே!

வெமர வணையி வினிது துயிலும்
விழிகள் நளினன் மருகோனே!
மிடறு கரியர் குமர பழநி
விரவு மமரர் பெருமாளே!

(ப - ரை) *சமர முகம் வெல் அசுரர் தமது* - போர்க்களத்தில் வெற்றியை யடையும் அசுரர்களுடைய, *தலைகள் உருள* - தலைகள் (அறுபட்டுத்) தரையில் வீழ்ந்து புரளும்படிக்கும், *மிகவே நீள் சலதி அலற* - மிகவும் நீண்டு பரவி யுள்ள சமுத்திரமானது பயந்து கதறும்படிக்கும், *நெடிய பதலை தகர* - உயர்ந்த (கிரௌஞ்சம் என்னும்) மலையானது உடையும்படிக்கும், *அயிலை விடுவோனே* - கையிலுள்ள கை வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே!, *வெம் அரவு அணையில் இனிது துயிலும்* - கொடிய பாம்பையே படுக்கையாகக்கொண்டு சுகமாய் (யோக) நித்திரையில் அமர்ந்திருப்பவரும், *விழிகள் நளினன்* - தாமரையை ஒத்திருக் கும் கண்களையுடையவருமான திருமாலின், *மருகோனே* - சகோதரியின் புத் திரனே!, *மிடறு கரியர் குமர* - கறுத்த தொண்டையையுடைய நீலகண்டரா கிய சிவபெருமானுடைய குமாரனே!, *பழநி விரவும்* - பழநி என்னும் திருத்த லத்தில் அமர்ந்திருக்கும், *அமரர் பெருமாளே* - தேவர்கள் நாயகனே!, *திமிர உததி அனைய நரக செனனம் அதனில்* - இருள் நிறைந்த சமுத்திரத்தை யொத்ததும் நரகத்தில் படும் துன்பங்களெல்லாவற்றையும் இவ்வுலகத்தி லேயே அநுபவிக்கச்செய்வதுமான பிறவியில், *விடுவாயேல்* - அடியேனைப் புகுத்து விடுவதாயிருந்தால், *செவிடு குருடு வடிவு குறைவு சிறிது மிடியும் அணுகாதே* - செவிட்டுத்தனம் குருட்டுத்தனம் ஏனைய அங்கங்களில் குறைவு இவை களும் தரித்திரம் என்பதும் சிறிதளவும் அடியேனை அணுகாவண்ணம் அருள் புரிந்து, *அமரர் வடிவும் அதிக குலமும் அறிவு நிறையும் வரவே* - தேவர்களு டைய உருவத்தை யொத்த உருவமும் உயர்ந்த குலமும் பூரணமான அறிவும் அடியேனுக்குக கிடைக்கும்படி, *நின் அருளது அருளி* - நினது அருளைச் சுரந்து அளித்து, *எனையும் மனதொடு அடிமை கொளவும் வரவேணும்* - அடி யேனையும் தடுத்தாட்கொள்வதற்காகச் சந்தோஷத்துடன் வந்தருளவேண்டும்.

(வி - ரை) காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சரியம் முதலிய துர்க்குணங்களின் சொரூபிகளான அசுரர்களையும் மாயையிலாழ்த்தும் சமுசார சொரூபமான சமுத்திரத்தையும் மேற்கூறியவைக ளெல்லாவற்றிற்கும் காரண மாகவுள்ள மாயையின் சொரூபமான கிரௌஞ்ச மலையையும் ஞானசக்தியாம் வேலாயுதத்தினால் அழித்தருளியவரும், திருப்பாற்கடலைக்கடைந்த காலத்தில் அதனின்றும் கிளம்பி உலகங்களையெல்லாம் எரிக்கத் தொடங்கிய ஆலாலம் என்னும் கொடிய விஷத்தைத் தேவர்களின் வேண்டுகோளுக்கிசைந்து தமது திருக்கரத்தில் வரவழைத்துத் தமது திருவாயினில் போட்டுக்கொண்டு உலகங்

களை இரக்ஷித்தருளி, தம்மைச் சரண்புகுந்தவரைத் தாம் காப்பது திண்ணம் என்பதை உலகங்களெல்லாம் எப்போதும் அறியும்வண்ணம் தேவர்களது வேண்டுகோளின்படி அவ்விஷத்தை விழுங்காமல் தமது கண்டத்திலேயே நிறுத்திக் கொண்ட கருணைசாகர மூர்த்தியான சிவபெருமானது செல்வப்புதல்வருமான முருகப்பெருமானை விளித்து, சுவாமிகள், நம்மைப் பிறவியென்னும் சமுத்திரத்தில் புகுத்துவதாயிருந்தால், கூன், குருடு, செவிடு, பேடு முதலிய குறைகளும் அங்கக் குறைவுகளும் இல்லாமல் திவ்ய சரீரத்தை அளித்து, உயர்குலத்தில் பிறக்கும்படி செய்து நிறைந்த அறிவையும் நிறைந்த செல்வத்தையும் கொடுக்கும்படிக்கும் தம்மைத் தடுத்தாட்கொள்ளும்படிக்கும் பிரார்த்திக்கிருர். (அ)

தனன தனன தனன தனன
தனன தனன—தனதான.

தமரு மமரு மனைபு; மினிய
தனமு மரசும் அயலாகத்
தறுகண் மறலி முறுகு கயிறு
தலையை வளைய எறியாதே
கமல விமல மரக தமணி
கனக மருவு மிருபாதங்
கருத அருளி யெனது தனிமை
கழிய அறிவு தரவேணும்!
குமர சமர முருக பரம
குலவு பழநி மலையோனே!
கொடிய பகடு முடிய முடுகு
குறவர் சிறுமி மணவாளா!
அமர ரிடரு மவுண ருடலு
மழிய அமர்செய் தருள்வோனே!
அறமு நிறமு மயிலு மயிலு
மழகு முடைய பெருமாளே!

(ப - ரை) குமர - என்றும் இளமை மாருத குமார சுவாமியே!, சமர முருக-(துர்க்குணங்களின் சொரூபிகளான அசுரர்களுடன்) போர்புரியும்ஞானச் சொரூபியே!, பரம-பரம்பொருளே! குலவு பழநி மலையோனே - சகல வளங்களும் பொருந்தி விளங்கும் பழநி மலையில் எழுந்தருளியிருப்பவனே!, கொடிய

பகடு முடிய முடுகு-கொடிய மதயானையானது இறக்கும்படி அதை எதிர்க்கும், குறவர் சிறுமி மணவாளா - வேடர்கள் குலத்தில் வளர்ந்த சிறு பெண்ணாகிய வள்ளிநாயகியை மணந்து கொண்டவனே! அமரர் இடரும் அவுணர் உடலும் அழிய - தேவர்களுடைய துன்பங்களும் அசுரர்களுடைய தேகங்களும் அழியும் வண்ணம், அமர்செய்து அருள்வோனே - போர்செய்து அருள் புரிந்தவனே!, அறமும் நிறமும் மயிலும் அயிலும் அழகும் உடைய பெருமாளே - நீதி நற்குணம் மயில்வாகனம் கைவேலாயுதம் அழகு இவைகளையுடைய பெரி யோனே!, தமரும் - உறவினர்களும், அமரும் மனையும்-வசிக்கும் வீடும், இனிய தனமும் அரசும் - மனத்தில் சந்தோஷத்தை யுண்டுபண்ணும் செல்வமும் உயர் பதவியும், அயலாக - சம்பந்தமற்று அகலும் வண்ணம், தறுகண் மறலி - குரூர முள்ள நமன், முறுகு கயிறு தலையை வளைய எறியாதே - முறுக்கிய பாசக் கயிற்றை அடியேன் தலையைச்சுற்றி வளைக்குமாறு வீசாமலிருக்கும்படி, கமல- தாமரையை யொத்தவைகளும், விமல - நிர்மலமானவைகளும், மாகத(ம்) மணி கனகம் மருவும் இருபாதம் - பச்சைகள் இரத்தினங்கள் பொன் இவைகளாற் செய்யப்பட்ட ஆபரணங்களை அணிந்திருக்கும் நினது இரு பாதங்களையும், கருத அருளி - (அடையவேண்டு மென) அடியேன் இச்சை கொள்ளும்படி அருள்புரிந்து, எனது தனிமை கழிய-அடியேன் தனியாக விருக்கிறேனென்ற எண்ணம் நீங்கும் வண்ணம், அறிவு தரவேணும் - மெய்ஞ்ஞானத்தை அடியே னுக்குத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) அமரர் இடரும் அவுணர் உடலும் அழியுமாறு முருகப்பெரு மான் போர்செய்தபடியால், அப்பெருமானைச் சமரமுருக - போர்புரியும் ஞான தேசிகனே - என்று சுவாமிகள் விளித்தார். முருகப்பெருமான் ஜீவர்களுடைய துர்க்குணங்களை அழிப்பதற்கும் சற்குணங்களை விளங்கச் செய்வதற்கும் வேலா யுதமான ஞான சக்தியையே பிரயோகிக்கிறார். அப்பெருமான் பரம்பொருளாக இருப்பதனாலும், ஜீவர்களிடத்திலுள்ள காதல் குறையாவண்ணம் எப்போதும் காளைக்குமரனாக இருப்பதனாலும், ஞானச் சொரூபியாக விருப்பதனாலும், ஜீவர்களை இரக்ஷிக்க வருவதற்கு நொடிப்பொழுதில் உலகத்தை வலம் வரும் உக்கிரமான வேகத்தையுடைய மயில் வாகனத்தையும், ஞானசக்தியாம் வேலா யுதத்தையும் உடையவரா யிருப்பதனாலும், சுவாமிகள் "குமர! பரம! பழநிமலை யோனே! மயிலும் அயிலும் உடைய பெருமாளே!" என்று விளித்தார்.

"தவர்வாட் டோமரசூலந் தரியாக் காதியசூரும்
தணியாச் சாகரமேழும் கிரியேழும்
சருகாக் காய்கதிர்வேலும் பொருகாற் சேவலுநீலந்
தரிகூத் தாடியமாவுந் தினைகாவல்
துவர்வாய்க் கானவர்மானுஞ் சுரநாட் டாளொருதேனும்
துணையாய்த் தாழ்வறவாழும் பெரியோனே!

துணையாய்க் காவல் செய்வாயென் றுணராப் பாவிகள் பாலும்
தொலையாப் பாடலையானும் புகல்வேனே?"

என்று கூறியுள்ளபடி எம்பெருமான் தமது அடியார்களுக்குத் துணையாக நின்று அவர்களைக் காத்தருளுவார். அப்பெருமானது சிறந்த பாதமலர்களின் சிறப்பு நமது சுவாமிகள் அருளிச்செய்திருக்கும் சீர்பாத வகுப்பில் வித்தாரமாயும் விசித்திரமாயும் கூறப்பட்டிருக்கிறது. அத்திருவகுப்பிலுள்ள "உறவுமுறை மனைவி மகவெனுமலையி லெனதிதய வுருவுடைய மலினபவ சலராசி யேற விடும், உறுபுணையும் அறிமுகமு முயரமரர் மணிமுடியி லுறைவதுவு முலைவி லதுமடியேன் மனோரதமும் * * * முதல்வினை முடிவிலிரு பிறையெயிறு கயிறுகொடு முதுவடவை விழிசுழல வருகால தூதர்கெட, முடுகுவது மருணெறியி லுதவுவதும் வினையுமவை முடியவரு வதுமடியர் பகைகோடி சாடுவதும், * * * மதலைமலை கிழவனனு பவனபய னுபயசதுர் மறையின்முத னடுமுடிவின் மணநாறு சீறடியே!" என்னும் அடிகள் இப்பாடலின் பொருளை விளக்கும்.

தனன தனன தனன தனன
தனன தனன—தனதான.

கரிய பெரிய எருமை கடவு
கடிய கொடிய திரிசூலன்
கறுவி யிறுகு கயிறொ டுயிர்கள்
கழிய முடுகி யெழுகாலம்
திரியு நரியு மெரியு முரிமை
தெரிய விரவி யணுகாதே
செறிவு மறிவு முறவு மனைய
திகழு மடிகள் தரவேணும்!
பரிய வரையி னரிவை மருவு
பரம ரருளு முருகோனே!
பழன முழவர் கொழுவி லெழுது
பழைய பழநி யமர்வோனே!
அரியு மயனும் வெருவ வுருவ
அரிய கிரியை யெறிவோனே!
அயிலு மயிலு மறமு நிறமு
மழகு முடைய பெருமானே!

(ப - ரை) ப(ா)ரிய வரையின் அரிவை மருவு(ம்) - மிகவும் பெரிய இமய மலையின் (அரசனாகிய இமவானுடைய) புதல்வியான பார்வதி தேவியார் அணைந்து கொள்ளும், பரமர் அருளும் முருகோனே - பரமேசுவரரான சிவ பெருமானால் உலகத்தோருக்கு உதவியருளப்பட்டு எங்கும் ஞான வாசனை வீசி நிற்பவனே!, பழனம் உழவர்கொழுவில் எழுது(ம்)-உழவர்கள் கலப்பையின் கொழுவினால் வயல்களில் எழுதும், பழயபழநி அமர்வோனே - புராதன ஸ்தல மாகிய பழநியில் எழுந்தருளியிருப்பவனே!, அரியும் அயனும் வெருவ உருவ - திருமாலும் பிரமதேவரும் பயந்து ஓடி யொளிக்கும் வண்ணம், அரிய கிரியை எறிவோனே-வெல்லுதற்கரிய கிரௌஞ்சம் என்னும் மலையை வேலை எறிந்து பிளந்தவனே!, அயிலு(ம்) மயிலு(ம்) நிறமும் அழகும் உடைய பெருமாளே - கைவேலாயுதத்தையும் மயிலையும் குணத்தையும் அழகையும் உடைய பெரியோனே!, கரிய பெரிய எருமை கடவு(ம்) - கறுத்ததும் பெரியதுமான எருமைக்கடாவை (வாகனமாகக்கொண்டு) செலுத்தும், கடிய கொடிய திரிசூலன் - கோபமுள்ளவனும் கொடியவனும் திரிசூலத்தைக் கையிலேந்தியவனுமான இயமன், கறுவி - "உனதுயிரை எப்படியும் கவர்வேன்" என்று கறுவி, இறுகு கயிறொடு-இறுக்கிச் சுருக்கிட்டிழுக்கும் பாசக்கயிற்றோடு, உயிர்கள் கழிய-பஞ்ச பூதங்கள் நீங்குமாறு, முடுகி எழுகாலம்-எதிர்த்துக்கிளம்பி வரும்பொழுது, திரியு(ம்) நரியும் எரியும் உரிமை தெரிய-இரைதேடித் திரியும் நரியும் (சுடுகாட்டிலிடும்) தீயும் தங்களுக்கு என்மீதுள்ள பாத்தியத்தை யாவரும் அறியும்படி, விரவி அணுகாதே - சேர்ந்து என்னிடம் நெருங்கி வாராவண்ணம், செறிவும் அறிவும் உறவும் அனைய-பரிபூரண ஆநந்தமும் மெய்யறிவும் சிநேகமும் மற்றும் அதைப்போன்ற சிறந்த நன்மைகளும்,திகழும் அடிகள்தரவேணும்-(பொருந்தி) விளங்கும் நினது பாதமலர்களைத் தந்தருளவேண்டும்.

(வி-ரை) முருகப்பெருமானது சிறந்த பாதமலர்களின் பெருமை சீர்பாத வகுப்பில் கூறப்பட்டிருக்கிறது. அவைகள் செறிவும் அறிவும் உறவும் பொருந்தியவை என்பது அவ்வகுப்பில், "உடலுமுடனுயிருநிலை பெறுதல் பொருளெனவுலக மொருவிவரு மனுபவன சிவயோகசாதனையில், ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி யுணர்வுவிழி கொடுநியதி தமதூடு நாடுவதும்,** *உரையவிழ உணர்வவிழ வுளமவிழ உயிரவிழ வுளபடியை யுணருமவ ரநுபூதி யானதுவும், உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய வுருவுடைய மலினபவ சலராசியேறவிடும், உறுபுணையு மறிமுகமும்**" என்னும் அடிகளினால் விளங்கும்.(௧௦)

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன—தனதான.

முருகு செறிகுழல் முகிலென நகில்நறு
முளரி முகையென இயலென மயிலென
முறுவல் தளவென நடைமட வனமென இருபார்வை

முளரி மடலென இடைதுடி யதுவென
அதர மிலவென அடியிணை மலரென
மொழியு மமுதென முகமெழில் மதியென மடமாதர்

உருவ மிணையன எனவரு முருவக
வுரைசெய் தவர்கரு கலவியி னிலவிய
வுலையின் மெழுகென வுருகிய கசடனை யொழியாமல்

உவகை தருகலை பலவுணர் பிறவியி
னுவரி தனிலுழு மவலனை யசடனை
உனது பரிபுர கழலிணை பெறஅருள் புரிவாயே!

அரவ மலிகடல் விடமமு துடனெழ
அரிய யனுநரை யிபன்முத லனைவரும்
அபய மிகவென அதையயி லிமையவ னருள்பாலா!

அமர்செய் நிசிசர ருடலவை துணிபட
அவனி யிடிபட அலைகடல் பொடிபட
அமரர் சிறைவிட அடலயில் நொடியினில் விடுவோனே!

பரவு புனமிசை யுறைதரு குறமகள்
பணைகொ ளணிமுலை முழுகுப னிருபுய
பணில சரவணை தனில்முள ரியின்வரு முருகோனே!

பரம குருபர எனுமுரை பரசொடு
பரவி யடியவர் துதிசெய மதிதவழ்
பழநி மலைதனி லினிதுறை யமரர்கள் பெருமானே!

(ப-ரை) அரவம் மலி கடல் - (தேவர்களாலும் அசுரர்களாலும் கடைபட்ட காலத்தில்) பேரொலி நிறைந்திருந்த கடலில், விடம் அமுதுடன் எழ - விஷமானது அமுதத்துடன் கிளம்பியதனால், அரி அயனும் நரை இபன் முதல் அனைவரும் அபயம் (இக-அசை) என-திருமால் பிரமதேவர் வெள்ளையானையையுடைய இந்திரன் முதலிய எல்லோரும் "தேவாதிதேவா! தாமே புகலிடம்!" என்று கூற, அதை அயில் இமையவன் அருள்பாலா - அவ்விஷத்தை உண்டருளிய (தேவாதி) தேவன் (வானவர் துயர் தீர்க்க) அருளிய பாலகனே!, அமர் செய் நிசிசரர் உடல் அவை துணிபட (நின்னை எதிர்த்துப்) போர் செய்தவர்களான அஞ்ஞான விருளில் சஞ்சரிக்கும் அசுரர்களுடைய தேகங்கள் வெட்டுப்

படுமாறும், அவனி இடிபட அலைகடல் பொடிபட - பூமி இடிபடவும் அலை வீசும் கடல் வற்றித் தூளாகவும், அமரர் சிறைவிட-தேவர்கள் சிறையைவிட்டு வெளிவரவும், அடல் அயில் நொடியினில் விடுவோனே - வெற்றியைத் தரும் வேலாயுதத்தைப் பிரயோகித்து நொடிப்பொழுதில் வெற்றி யடைந்தவனே!, பரவு புனம் மிசை உறைதரு குறமகள் - விசாலமான தினைப்புனத்தில் பரண் மீது அமர்ந்திருந்த வேடர்மகளான வள்ளிநாயகியின், பணை கொள் அணிமுலை முழுகு ப(ன்)னிரு புய-பருத்து அழகுவாய்ந்துள்ள தனபாரங்களைச் சதாகால மும் அணைந்துகொள்ளும் பன்னிருபுயங்களை யுடையவனே!, பணில சரவணை தனில் முளரியின் வரு முருகோனே - சங்குகள் வசிக்கும் சரவணப் பொய்கை யில் தாமரையின்மீது வந்து அவதரித்தருளியவனும் ஞானவாசனை வீசுபவனு மாகிய ஞானச்சொரூபியே!, பரம குருபர எனும் பரசு உரை ஒடு பரவி - பரம் பொருளே! பரம்பொருளை அடையும் நெறியைப் போதிக்கும் ஞானகுருவே! என்னும் தோத்திர வார்த்தைகளைச்சொல்லி வணங்கி, அடியவர் துதிசெயம் நினது அடியவர்கள் நின்னைத் துதிசெய்ய, மதி தவழ் பழநி மலைதனில் இனிது உறை அமரர்கள் பெருமாளே - சந்திரன்வந்து தவழும்வண்ணம் உயர்ந்துள்ள பழநிமலையின்மீது களிப்புடன் எழுந்தருளியிருக்கும் தேவர்கள் நாயகனே!, முருகு செறி குழல் முகில் என - வாசனை மிகுந்த கூந்தல் மேகம் என்றும், நகில் நறு முளரி முகை என - தனபாரங்கள் வாசனை பொருந்திய தாமரையின் மொட்டு என்றும், இயல் எ(ன்)ன மயில் என - சாயல் எப்படிப்பட்டதோ வெனில் மயிலையொத்தது என்றும், முறுவல் தளவு என-பற்கள் முல்லை அரும்புகள் என்றும், நடை மட அ(ன்)னம் என - நடை மடமை பொருந்திய அன்னத்தின் நடையே யென்றும், இரு பார்வை முளரி மடல் என-இரு கண் களும் தாமரையின் இதழ்கள் என்றும், இடை துடி அது என-இடையானது உடுக்கை என்றும், அதரம் இலவு என-உதடுகள் கோங்கிலவின் சிவந்த மலர் கள் என்றும், அடி இணை மலர் என-இருபாதங்களும் மலர்கள் என்றும், மொழி (உம்-அசை) அமுது என - வார்த்தைகள் அமுதம் என்றும், முகம் எழில் மதி என-முகம் அழகிய சந்திரன் என்றும், மடமாதர்-மடமை பொருந்திய பெண் களது, உருவம் இனையன - உடலிலுள்ள உருப்புக்கள் இப்படிப்பட்டவை யென்று, என வரும் உருவக உரை செய்து-சொல்வதான அலங்காரப்படுத்திக பேசும் மொழிகளை யுரைத்து, அவர் தரு கலவியில்-அவர்கள் தரும் புணர்ச்சி யில், நிலவிய உலையின் மெழுகு என உருகிய - விசாலமான உலையில் இட்ட மெழுகு நெகிழ்ந்து உருகுவதைப்போல் (ஆசைகொண்டு) மனமுருகும், கச டனை - கீழானவனும், ஒழியாமல்-உலக வாசைகளை ஒழித்துவிடாமல், உவகை தரு கலைபல உணர் - குதூகலத்தை யுண்டாக்கும் அநேக சாஸ்திரங்களைக் கற்றறிகின்றவனும், பிறவியின் உவரி தனில் உறும் அவலனை-பிறவியென்னும் சமுத்திரத்தில் வந்து சேரும் (பவநோயுற்ற) நோயாளியும், அசடனை-களங்க-

முள்ளவனுமாகிய அடியேன் உனது பரிபுர கழலிணை பெற - தண்டைகள் அணிந்துள்ள உனது இருபாதத்தாமரைகளையும் அடையும்படி, அருள்புரிவாயே - அருள் புரியவேண்டும்! (கக)

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த—தனதான.

அவனிதனி லேபி றந்து மதலையென வேத வழ்ந்து
அழகுபெற வேந டந்து இளைஞோனாய்

அருமழலை யேமி குந்து குதலைமொழி யேபு கன்று
அதிவிதம தாய்வ ளர்ந்து பதினாறாய்

சிவகலைக ளாக மங்கள் மிகவுமறை யோது மன்பர்
திருவடிக ளேநி னைந்து துதியாமல்

தெரிவையர்க ளாசை மிஞ்சி வெகுகவலை யாயு ழன்று
திரிபுமடி யேனை யுன்ற னடிசேராய்!

மவுனவுப தேச சம்பு மதியறுகு வேணி தும்பை
மணிமுடியின் மீத ணிந்த மகதேவர்

மனமகிழ வேய ணைந்து வொருபுறம தாக வந்த
மலைமகள்கு மார துங்க வடிவேலா!

பவனிவர வேயு கந்து மயிலின்மிசை யேதி கழ்ந்து
படியதிர வேந டந்த கழல்வீரா!

பரமபத மேசெ றிந்த முருகனென வேயு கந்து
பழநிமலை மேல மர்ந்த பெருமானே!

(ப-ரை) மவுன உபதேச சம்பு - மௌனமாகவே யிருந்து ஞானோபதேசம் செய்து நன்மை புரிந்தவரும், மதி அறுகு வேணி தும்பை - சந்திரனையும் அறுகு எனும் புல்லையும் (கங்கை எனும்) ஆற்றையும் தும்பையையும், மணி முடியின் மீது அணிந்த மகதேவர் - அழகிய சடாமுடியின் மீது அணிந்துள்ள தேவாதி தேவராகிய சிவபெருமான், மனமகிழவே-மனமகிழ்ச்சி யடையுமாறு, அணைந்து ஒரு புறமதாக வந்த மலைமகள்-அப்பெருமானுடன் கலந்து அப்பெருமானது வாமபாகமாக ஆகின மலையரசன் புத்திரியான பார்வதி தேவியாரது, குமார - புதல்வனே!, துங்க வடிவேலா - வெற்றியைத் தருவதும் வடித்துக்

கூர்மையாக வுள்ளதுமான வேலாயுதத்தைக் கையிற் பிடித்தவனே! பவனி வரவே உகந்து - உலாவி வர இச்சைகொண்டு, மயிலின் மிசையே திகழ்ந்து - மயிலின்மீது ஒளி வீசி அமர்ந்து, படி அதிரவே நடந்த கழல் வீரா - பூமியானது அதிர்ச்சி யடையும்படி மயிலை நடத்தினவனும் (ஒப்பற்ற வீரத்தை யுணர்த்தும்) கழல்களை அணிந்துள்ள வனுமான வீரனே!, பரமபதமே செறிந்த முருகன் எனவே - முத்தியே பொருந்தியுள்ள ஞானச் சொரூபியாகி ஞானவாசனை வீசு பவனாக, உகந்து - விருப்பத்துடன், பழநிமலைமேல் அமர்ந்த பெருமாளே - பழநி மலையின்மீது எழுந்தருளிய பெரியோனே!, அவனி தனிலே பிறந்து-பூமியில் (சிசுவாகப்) பிறந்து, மதலை எனவே தவழ்ந்து - சிறு குழந்தைப்பருவமடைந்து தவழ்ந்து, அழகுபெறவே நடந்து-அழகாக நடந்து, இளைஞனாய்-சிறு பிள்ளையாகி, அரு மழலையே மிகுந்து - இனிமைதரும் நிரம்பாத மென்சொற்கள் பேசுவது அதிகரித்து, குதலைமொழியே புகன்று-திருந்தாத குதலைச்சொற்களையே பேசி, அதி விதமாய் வளர்ந்து - நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து, பதினாறாய் - பதினாறு வயதாகப் பெற்று, சிவகலைகள் ஆகமங்கள் மறை மிகவும் ஓதும் அன்பர் - சைவ சமய நூல்களையும் சிவாகமங்களை யுரைக்கும் நூல்களையும் வேதங்களையும் வெகுவாகக் கற்கும் மெய்யடியார்களுடைய, திருவடிகளை நினைந்து துதியாமல் - பாதங்களையே தியானஞ் செய்து தோத்திரஞ் செய்யாமல், தெரிவையர்கள் ஆசை மிஞ்சி - பெண்களின்மீது ஆசை மிகுதியாக வுடையவனாய், வெகு கவலையாய் உழன்று - மிகுந்த கவலையடைந்து (உலக வாழ்க்கையில்) சுழன்று, திரியும் அடியேனை, - (விஷய சுகங்களை யனுபவிப்பதற்காகத் தேடித்) திரியும் அடியேனை, உன் தன் அடி சேராய் - நினது பாதாரவிந்தங்களிற் சேர்த்துக் கொண்டருளவேண்டும்.

(வி - ரை) பிரமதேவருடைய மானஸீக புத்திரர்களான சனகர் முதலான நால்வர் தங்களுக்கு ஞானோபதேசம் செய்தருளவேண்டுமெனச் சிவபெருமானைப் பிரார்த்தித்தபோது, எம்பெருமான் சகல அண்ட சராசரங்களையும் இயக்குவதைக் கணநேரம் நிறுத்தி மௌனமாக வீற்றிருந்தார். சனகாதியர், எம்பெருமான் இயக்குவதை நிறுத்தியதனால் செயலற்று மனமொடுங்கி, எம்பெருமான் அருளினால் எம்பெருமானுடைய திவ்ய மங்களச் சொரூபத்தையே கண்ணாரக்கண்டு களித்தனர். கணநேரத்துக்கெல்லாம் எம்பெருமான் மோன நிலையை ஒழித்து அவர்களுக்கு விடை கொடுத்தார். உண்மையை யுணராத சனகாதியர் திரும்பவும் ஞானோபதேசத்துக்கு எப்போது வரலாமென்றுகேட்க, எம்பெருமான் புன்முறுவல் செய்து ஞானோபதேசம் செய்தாயிற்றென்றும், செயலற்று மவுனமுற்று மனத்தை யடக்கித் தமது சொரூபத்தைத்தியானித்து மனத்திலிருத்துவதே ஞானம் என்றும் ஞானத்தினால் பெறும் இன்பமென்றும் முத்தி யென்றும் அவர்களுக்குப் போதித்தருளினார்.

சத்து சித்து இரண்டும் கலந்து ஒன்றாக நிற்கும் காலத்தில் பிறக்கும் ஆனந்தம் சச்சிதானந்தம் எனப்படும். அதாவது, சிவமும் சத்தியும் கலந்து ஒன்றாக நிற்கும் காலத்தில் சச்சிதானந்த மூர்த்தியான முருகன் தோன்றுகிறான். சிவபெருமான் தமது வாமபாகத்தை உமாதேவியாருக்கு அளித்து, அப்பெருமானும் உமாதேவியாரும் கலந்து அர்த்த நாரீசுவர மூர்த்தியாக விளங்குமிடத்தில்தான் முருகப்பெருமான் சச்சிதானந்த மூர்த்தியாக விளங்குகிறார். அதுகாரணத்தினால்தான் சுவாமிகள் முக்கணைந்தை அர்த்த நாரீசுவர மூர்த்தியாக விளங்கும் சிறந்த தலமான திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானைத் தரிசிக்கப் பிரமதேவர் தமக்கு நாலாயிரம் கண்கள் படைக்காததைப்பற்றிப் பின்வரும் பாடலில் வருந்துகிறார்.

"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ
நாலாயிரங்கண் படைத்திலனேயந்த நான்முகனே!"—கந்தரலங்காரம்.

இப்பாடலில் சுவாமிகள், திருப்பாற் கடலைக் கடைந்தகாலத்தில் மோகினி உருவங்கொண்ட மகாவிஷ்ணுவின் தங்கையான பார்வதி தேவியாரின் புதல்வனும், பொன்னம்பலத்தில் காண்போர் கண்களையும் மனத்தையும் ஒருங்கே கவரும் திவ்ய மங்கள மூர்த்தியான நடராஜனது புதல்வனுமான முருகப்பெருமான் ஒப்புயர்வற்ற அழகு வாய்ந்தவராயும், தேவாதி தேவராயும், மெய்ஞ்ஞானத்தின் சொரூபமாயும் இருக்கிறாரென்றும், பூவுலகத்திலுள்ள தமது அடியவர்கள் தமது திருமேனியைக் கண்டு உய்யுமாறு திருச்செங்கோட்டில் எழுந்தருளியிருக்கிறார் என்றுந் தெரிவிக்கிறார். முருகப்பெருமானது சொரூபம் ஆனந்த சொரூபம் என்பது பின்வரும் மற்றொரு கந்தரலங்காரப் பாடலினால் விளங்குகிறது.

"பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுது கண்டேன் செயன் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவன மெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மானந்த சாகரத்தே!"

இப்பாடலில், மெய்யடியார்களைப் பூசிப்பதே உய்யு நெறியென்றும், உலக சுகங்களின் மேல் ஆசைகொண்டு உழல்வது கவலைகளை யுண்டாக்கி மனத்தைப் பதைக்கச் செய்யுமாதலால், கவலைகள் நீங்கப்பெற்று அமைதியுற்று மாறாத ஆனந்தமடைவதற்கு மெய்யன்பர்களைப் பூசித்துச் சச்சிதானந்தமூர்த்தியான முருகப்பெருமானது பாதாரவிந்தங்களை அடைய முயலவேண்டும் என்றும் குறிப்பாய்க் கூறப்பட்டிருக்கிறது. (கஉ)

*தனனதன தனன தந்த தனனதன தனன தந்த*
*தனனதன தனன தந்த—தனதான.*

விரைமருவு மலரணிந்த கரியபுரி குழல்சரிந்து
விழவதன மதிவிளங்க அதிமோக

விழிபுரள முலைகுலுங்க மொழிகுழற அணைபுகுந்து
விரகமயல் புரியுமின்ப மடவார்பால்

இரவுபக லணுகி நெஞ்ச மறிவழிய வுருகுமந்த
இருளகல வுனது தண்டை யணிபாதம்

எனதுதலை மிசையணிந்து அழுதழுது னருள்விரும்பி
யினியபுகழ் தனைவிளம்ப அருள்தாராய்!

அரவில்விழி துயில்முகுந்த னலர்கமல மலர்மடந்தை
அழகினொடு தழுவுகொண்டல் மருகோனே!

அடலசுர ருடல்பிளந்து நிணமதனில் முழுகியண்ட
அமரர்சிறை விடுப்ரசண்ட வடிவேலா!

பரவைவரு விடமருந்து மிடறுடைய கடவுள் கங்கை
படர்சடையர் விடையரன்ப ருளமேவும்!

பரமரரு ளியகடம்ப முருகஅறு முகவகந்த
பழநிமலை தனிலமர்ந்த பெருமாளே!

(ப-ரை) அரவில் விழிதுயில் முகுந்தன் - பாம்பின் மீது படுத்துக் கண்ணுறங்கும் முகுந்தனும், அலர் கமல மலர் மடந்தை-மலர்ந்த தாமரை மலரின் மீது அமர்ந்திருக்கும் தேவியான இலக்குமியை, அழகினொடு தழுவு கொண்டல் மருகோனே - மிகவும் அழகிய வடிவத்துடன் அணைந்து கொண்டவரும் மேக நிறமுள்ளவருமான திருமாலின் மருகனே!, அடல் அசுரர் உடல் பிளந்து - வலிமை பொருந்திய அசுரர்களது தேகங்களைப் பிளந்து, நிணம் அதனில் முழுகி-அவர்களது மாமிசத்தில் முழுகி, அண்ட அமரர் சிறை விடு-வானுலகத் தவரான அமரர்களை (சூரபதுமன் அவர்களை அடைத்த) சிறைச்சாலையினின்றும் விடுவித்ததும், ப்ரசண்ட வடிவேலா-வலிமை பொருந்தியதும் கூர்மையானதுமான வேலாயுதத்தை யுடையவனே!, பரவை வரு விடம் அருந்தும் மிடறு உடைய கடவுள்-(திருப்பாற்) கடலிலிருந்து கிளம்பிய விஷத்தை யுண்டு அதை நிறுத்திக் கொண்ட கண்டத்தையுடைய நீலகண்டரும், கங்கை படர் சடையர்-கங்கை பரவி நிற்கும் சடாமுடியை யுடையவரும், விடையர்-இடப வாகனத்தை

யுடையவரும், அன்பர் உளம் மேவும் பரமர் - மெய்யன்பரது மனத்தில் அமர்ந் திருக்கும் பரம்பொருளுமான சிவபெருமான், அருளிய-(வானவர் துயர் தீர்க்கத் தந்தருளிய, (புதல்வனே !), கடம்ப-கடம்ப மலர் மாலையை அணிந்து கொண் டிருப்பவனே !, முருக-ஞான வாசனை வீசுபவனே !, அறுமுகவ - ஆறு முக னே !, கந்த - சந்தனே, பழநிமலைதனில் அமர்ந்த பெருமாளே - பழநிமலைமீது எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, விரை மருவு மலர் அணிந்த - வாசனை பொருந்திய புஷ்பங்களைச் சூட்டி யுள்ளதும், கரிய புரி குழல் சரிந்து விழ-கறுத் துச் சுருண்டுள்ளதுமான கூந்தல் அவிழ்ந்து விழவும், வதனமதி விளங்க - முக மான சந்திரன் பிரகாசிக்கவும், அதிமோக விழி புரள-மிகுந்த மோகத்தைக் காட்டுபவைகளும் விளைவிப்பவைகளுமான விழிகள் சஞ்சலித்துப் பார்க்கவும், முலை குலுங்க - தாபத்தினால் தனபாரங்கள் குலுங்கவும், மொழி குழற - நாக் குழறப் பேசியும், அணை புகுந்து-பஞ்சணையை அடைந்து, விரக மயல் புரியும் இன்ப மடவார்பால் - விரகதாபமாகிய மயக்கத்தை யுண்டு பண்ணுபவரும் சிற் றின்பத்தைத் தருபவருமான பெண்களிடத்தில், (அடியேன்), இரவு பகல் அணுகி - (இடைவிடாமல்) இரவும் பகலும் சென்று, நெஞ்சம் அறிவு அழிய - மனத்திலிருந்த அறிவு முற்றிலும் நீங்கப்பெற்று, உருகும்-மனமுருகி வருந்து வதான, இருள் அகல-(அஞ்ஞானமும் துக்கமுமான) இருள் நீங்கும் வண்ணம், துஉனத ண்டை அணி பாதம்-தண்டைகளை யணிந்துள்ள உனது பாதங்களை, எனது தலைமிசை அணிந்து - அடியேன் தலையின்மீது வைத்து, (அடியேன்), அழுது அழுது - கண்ணார நீர் சொரிந்து மனமுருகி அழுது, உனது அருள் விரும்பி-நினது அருளைப் பெறவேண்டுமென்ற ஆசையுற்று, இனிய புகழ்தனை விளம்ப - மனத்தில் இன்பத்தை யூட்டும் நினது புகழை வாயினால் உரைக்கு மாறு, அருள் தாராய் - அருள்புரிவாயாக !

(வி - ரை) வானவரைக் காப்பதற்காக ஆலால விஷத்தையுண்டவரும், பகீ ரதன்பிரார்த்தனைக் கிசைந்து கங்கையைச் சடாமுடியில் தரித்தவரும், தருமத் தையே வாகனமாகக் கொண்டவரும், மெய்யன்பரது இதயத்தையே தமக்கு கந்த கோயிலாக்க் கொள்பவரும், கருணைக்கடலுமான சிவபெருமான் அளித்த புத்திரனாதலால், முருகப்பெருமானை விளித்துத் தம் குறைகளைத் தீர்க்கும்படி சுவாமிகள் பிரார்த்திக்கிறார். முருகப்பெருமான் பாதமலர்கள் தமது தலையின் மீது அமர்ந்தால் தான் தாம் பெண்காதல் கொண்டு உலகவாழ்க்கையில் துயரு றும்படி பிரமதேவர் தமது தலையில் எழுதிய விதி அகலும் என்று அறிந்து சுவாமிகள் இவ்வண்ணம் பிரார்த்திக்கிறார். இவ்வுண்மையைச் சுவாமிகள்,

" சேல்பட் டழிந்தது செந்தூர் வயபொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மன மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே "

என்னும் கந்தரலங்காரப் பாடலில் விசித்திரமாக எடுத்துரைத்திருக்கிறார்.

*தனன தானன தானு தானு*
*தனன தானன தானு தானு*
*தனன தானன தானு தானு—தனதான.*

கலக வாள்விழி வேலோ சேலோ
மதுர வாய்மொழி தேனோ பாலோ
கரிய வார்குழல் காரோ கானோ துவரோவாய்

களமு நீள்கமு கோதோள் வேயோ
வுதர மானது மாலேர் பாயோ
களப வார்முலை மேரோ கோடோ இடைதானும்

இழைய தோமலர் வேதா வானோ
னெழுதி னனிலை யோவாய் பேசீ
ரிதென மோனமி னரே பாரீ ரெனமாதர்

இருகண் மாயையி லேமூழ் காதே
யுனது காவிய நூலா ராய்வே
னிடர்ப டாதருள் வாழ்வே நீயே தரவேணும்!

அலைவி லாதுயர் வானோ ரானோர்
நிலைமை யேகுறி வேலா சீலா
அடியர் பாலரு ளீவாய் நீபார் மணிமார்பா!

அழகு லாவுவி சாகா வாகா
ரிபமி னள்மகிழ் கேள்வா தாழ்வா
ரயனு லாவிய சீலா கோலா கலவீரா!

வலைபை கேள்வர்பி னனய் கானூர்
குறவர் மாதும ணளா நாளார்
வனச மேல்வரு தேவா மூவா மயில்வாழ்வே!

மதுர ஞானவி னோதா நாதா
பழநி மேவுகு மாரா தீரா
மயுர வாகன தேவா வானோர் பெருமாளே!

(ப - ரை) உயர் வானோர் ஆனோர் - சிறந்த வானவர்கள், அலைவு இலாது - (தங்கள் நாட்டையிழந்து) அலைந்து வருந்துவது ஒழிந்து, நிலைமையே குறி வேலா - அவர்கள் (தங்கள் நாட்டில்) நிலைமையாக வாழவேண்டுமென்பதையே நோக்கமாகக் கொண்ட வேலாயுதனே!, சீலா - நற்குணம் வாய்ந்தவனே!, அடி

யர்பால் அருள் ஈவாய் - அடியவர்களுக்கு அருள் புரிபவனே !, நீப ஆர் மணி மார்பா - கடம்ப மாலையை அணிந்ததும் மிகுந்த அழகு வாய்ந்ததுமான மார்பை யுடையவனே !, அழகு உலாவு விசாகா - அழகு என்பது இனிமையுடன் பொருந்தியிருக்கும் திருமேனியையுடைய விசாகா !, வாகு ஆர் இப மின்ஞள் மகிழ் கேள்வா - அழகு நிறைந்தவரும் (ஐராவதம் என்னும்) யானையினால் வளர்க்கப் பட்டவரும் மின்னற்கொடியைப் போன்றவருமான தெய்வயானை என்னும் தேவியார் மனத்தில் மகிழ்ச்சியை விளைவிக்கும் தலைவனே!, தாழ்வார் அயல் உலாவிய சீலா - உன்னை வணங்குவோருக்குச் சமீபத்திலேயே எப்போதும் சஞ் சரித்துக்கொண் டிருக்கும் தருமசாலியே !, கோலாகல வீரா - இடம்பமுள்ள வீரனே !, வ(ல்)லபை கேள்வர் பின் ஆஞய் - வல்லபையின் தலைவஞகிய விநாயகருக்குப் பின்னே அவதரித்தவனே !, காஞர் குறவர் மாது மணளா - காட்டில் வசிக்கும் வேடர்கள் குலத்தில் வளர்ந்த வள்ளிநாயகியை மணந்து கொண்டவனே !, நாள(ம்) ஆர் வனசம் மேல் - பூந்தண்டுகளை மிகுதியாக வுடைய தாமரைகளின் மீது, வரு தேவா - அமர்ந்திருந்த தேவா !, மூவா மயில் வாழ்வே - அண்டங்களை யெல்லாம் பெற்றெடுத்தும் கன்னியாகவே யிருக்கும் பெண்கள் நாயகமான பார்வதிதேவியார் உலகத்தோருக்கு வாழ்வுண்டாகு மாறு அளித்த புதல்வனே !, மதுர ஞான விநோதா - இனிமையான ஞானத் தையே இலக்ஷணமாக வுடையவனே !, நாதா - இறைவனே !, பழநி மேவு குமாரா தீரா - பழநியில் எழுந்தருளியிருக்கும் குமாரஸ்வாமியே! தீரனே !, மயுர வாகன தேவா - மயிலை வாகனமாகவுடைய தேவா !, வாஞேர் பெரு மாளே - தேவர்கள் தலைவனே !, சலக வாள்விழி - (ஆடவர் மனத்தில்) சஞ் சலத்தை விளைவிக்கும் இயல்புடையனவாய் ஒளிவீசும் கண்கள் வேலோ சேலோ - வேலாயுதத்தின் இலையோ அல்லது கயல் மீஞே ? மதுர வாய் மொழி - வாயினின்றும் உதிக்கும் இனிய சொற்கள், தேஞே பாலோ - தேன் என்று சொல்லலாமா அல்லது பால் என்று சொல்லலாமா ?, கரிய வார் குழல் காரோ காஞே - கறுத்து நீண்டுள்ள கூந்தல் மேகம் என்னலாமோ அல் லது முல்லை நிலத்து ஆறு என்னலாமோ ?, பவளோ வாய் - வாய் பவளந் தாஞே ?, களமும் நீள் கமுகோ - கழுத்தும் நீண்ட பாக்குமரமோ ?, தோள் வேயோ - புயங்கள் மூங்கில்களோ ?, உதரமானது மால் ஏர் பாயோ - அடி வயிறு (ஆடவர் மனத்தில்) ஆசையை உதிக்கச் செய்யும் அழகிய பாயல் என்னலாமோ ?, களப வார் முலை மேரோ கோடோ - கலவைச் சாந்து பூசப் பெற்றுக் கச்சணிந்துள்ள தனபாரங்கள் மேரு மலைகளோ ? அல்லது மலையின் சிகரங்களோ ?, இடை தானும் இழை அதோ - இடையும் நூல்தானே ?, மலர் வேதா ஆஞேன் எழுதிஞன் இலேயோ - மலரின்மீது வீற்றிருக்கும் பிரமதேவ ரானவர் அதைப் படைக்கவேயில்லையோ ?, வாய் பேசீர் - வாய்திறந்து சொல்ல வேண்டும் ; இது எ(ன்)ன மோனம் - இப்படி மௌனமுற்றுப் பேசாதிருப்பதற்

குக் காரணம் என்ன?;மி(ன்)னரே பாரீர்-மின்னற்கொடியை ஒத்த மாதர்களே! அடியேனைக் கடைக்கண்ணால் பார்த்தருளவேண்டும்; என - என்று கூறி, மாதர் இருகண் மாயையிலே மூழ்காதே - பெண்களது இருகண்கள் உண்டுபண்ணும் மயக்கத்திலே அகப்பட்டு அதில் ஆழ்ந்து திரியாமல், உனது காவிய நூல் ஆராய்வேன்-உன்னை நாயகனாகக்கொண்டு உனது திருவிளையாடல்களை யுரைக்கும் காவிய நூல்களை ஆராய்வதில் அடியேன் ஈடுபட்டுள்ளேன்; (ஆதலின் அடியேன்) இடர்படாது - துன்பப்பட்டு வருந்தாமல், அருள் வாழ்வே - நினது அருளினால் மட்டுமே பெறக்கூடிய மேலான வாழ்வை, நீயே தரவேணும் - நீ தான் தந்தருளவேண்டும்.

(வி-ரை) "சற்குணங்களின் சொரூபிகளான தேவர்கள் அஞ்ஞானத்தினால் மூடப்பெற்று வலிமையிழந்து துர்க்குணங்களின் சொரூபிகளான அசுரர்களால் தங்கள் நாடான வானுலகத்தினின்றும் துரத்தப்பட்டு, இருக்க இடமில்லாமலும் அசுரர்கள் இழைத்த கொடுமைகளுக்குப் பயந்தும் ஓடி யொளிந்து திரிந்ததைக் கண்டு மனமிரங்கி, அத்தேவர்களை வாருங்களென் றழைத்து அவர்களுடைய துன்பத்தைத் தவிர்த்து ஞானத்தைப் புகட்டி, நிலையான வாழ்வையும் தந்த விஞ்சையோனே! அடியார்க்கு இன்னருள் புரிபவனே! நின்னை வணங்குபவர்களைக் காத்து இரக்ஷிப்பதற்காகச் சதாகாலமும் அவர்கள் பக்கத்திலேயே சஞ்சரித்துக்கொண்டிருக்கும் கருணைக்கடலே! வல்லமையின் தலைவரும் புத்திக்கு நாயகருமான விநாயகக்கடவுளுக்குப் பின் ஞானத்துக்கு நாயகனாய்ப் பிறந்தவனே! வள்ளிநாயகியைத் தடுத்தாட்கொண்டு நின்னை யடையவேண்டுமென்ற இச்சை கொள்பவர்களை யெல்லாம்அவ்வாறே தடுத்தாட்கொள்ளும் இயல்புடையவன் நீ என்பதை உலகத்தோருக்கு அறிவித்தவனே! நீர்மையும் தூய்மையும் பெற்றவர் இதயமான தாமரைமலரில் தோன்றுபவனே!;மாறாத சுகத்தைத்தரும் ஞானத்தையே விசேஷலக்ஷணமாக உடையவனே!, தீரனே! மயில்வாகனனே! பெண்களின் அங்கங்க ளெல்லாவற்றிற்கும் சிறந்த உவமைகளைக்கூறி அவைகளைப் புகழ்ந்து பெண்களின் கண்பார்வையினால் மதிமயங்கி உழலாமல் நினது திருவிளையாடல்களையும் எண்ணிறந்த கலியாண குணங்களையும் கருணையையும் எடுத்துரைக்கும் பிரபந்தங்களை ஆராய்ந்து அவைகளில் அடங்கியுள்ள ஞான போதகங்களை அறிந்துகொள்ள முயலும் நெறியில் அடியேன் நிற்கும்படி அருள் புரிந்தாய். அங்ஙனம் ஆராயும்புத்தியைக் கொடுத்தபின், புத்திக்குரிய ஞான பலனைக்கொடுத்து இனி அடியேன் துன்பங்களுக்காளாகி வருந்தாமல், நினது அருளினால் மட்டுமே பெறக்கூடியதும், எக்காலத்தும் துன்பக் கலப்புச் சிறிது மில்லாத இன்பம் பொருந்தியதுமான உயர்வாழ்வைத் தந்தருளவேண்டும்" என்று சுவாமிகள் பிரார்த்திக்கிறார். "யாமோதிய கல்வியும் எம்மறிவும் தாமே பெற வேலவர் தந்ததனால்" என்றபடி முருகப்பெருமானருளால் கவிபாடுந் திறமையைப்பெற்ற சுவாமிகள் அத்திறமையால் பெண்களை வருணித்துப் புகழ்

வதும் பொருளாசையால் குகப்பெருமானிடத்து அன்பில்லா மூடர்களைப் புகழ்வதும் குற்றமாகலின் "உனது காவிய நூலாராய்வேன்" என்றார். ஆதலின், ஒருவன் தனது புத்தியையும் திறமையையும் இறைவனைப்பற்றி யுரைக்கும் ஞான நூல்களை ஆராய்வதிலும் அவரைப் புகழ்வதிலும் உபயோகிக்கவேண்டும். அப்படி ஆராய்ச்சி செய்வதனாலுண்டாகும் பயன் பின்வரும் திருப்புகழ்ப் பாடலின் அடிகளினால் விளங்கும்.

"ஆனாத ஞான புத்தி யைக்கொ டுத்ததும்
ஆராயு நூல்க ளிற்க ருத்த ளித்ததும்
ஆதேச வாழ்வி னிற்ப்ர மித்தி ளைத்துயி ரழியாதே
ஆசாப யோதி யைக்க டக்க விட்டதும்
வாசாம கோச ரத்தி ருத்து வித்ததும்
ஆபாத னேன்மி கப்ர சித்தி பெற்றினி துலகேழும்
யானாக நாம அற்பு தத்தி ருப்புகழ்
தேனூற வோதி யெத்தி சைப்பு றத்தினும்
ஏடேவு ராஜ தத்தி னைப்ப ணித்ததும் இடராழி
ஏறாத மாம லத்ர யக்கு ணத்ரய
நானாவி கார புற்ப தப்பி றப்பற
ஏதேம மாயெ னக்க நுக்ர கித்ததும் மறவேனே!" (கசு)

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன—தந்ததான.

ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி
ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடுமடி
யார்கள்பத மேதுணைய தென்றுநாளும்
ஏறுமயில் வாகனகு காசரவ ணாஎனது
ஈசஎன மானமுன தென்றுமோதும்
ஏழைகள் வியாகுலமி தேதெனவி னாவிலுனை
யேவர்புகழ் வார்மறையு மென்சொலாதோ?
நீறுபடு மாழைபொரு மேனியவ வேலஅணி
நீலமயில் வாகவுமை தந்தவேளே!
நீசர்கட மோடெனது தீவினையெ லாமடிய
நீடுதனி வேல்விடும டங்கல்வேலா

சீறிவரு மாறவுண னுவியுணு மானைமுக
தேவர்துணை வாசிகரி அண்டகூடஞ்
சேருமழ கார்பழநி வாழ்குமர னேபிரம
தேவர்வர தாமுருக தம்பிரானே!

(ப - ரை) நீறு படு மாழை பொரு - (உலையிலிட்டுப் பழுக்கக் காய்ந்து) சாம்பர் பூத்த பொன்னை யொத்த, மேனியவ - திருமேனியை யுடையவனே !, வேல - வேலாயுதனே !, அணி நீல மயில் வாக - அழகிய நீல நிறமுள்ள மயிலை வாகனமாக வுடையவனே !, உமை தந்த வேளே - உமாதேவியாரால் உலகத்தின் நன்மைக்காக அளிக்கப்பட்ட குமரனே !, நீசர்கள் த(ம்)மோடு எனது தீவினை எ(ல்)லாம் மடிய - அசுரர்களுடன் அடியேனது எல்லாக் கொடிய வினைகளின் பயனும் அழியுமாறு, நீடு தனி வேல் விடும் மடங்கல் வேலா - நீண்டதும் ஒப்பற்றதுமான வேலாயுதத்தைப் பிரயோகஞ் செய்யும் சிங்கமான வேற் படையை யுடையவனே !, சீறி வரும் மாறு அவுணன் ஆவி உ(ண்)ணும் ஆனை முக தேவர் துணைவா - கோபித்து வந்து பகைமை பாராட்டிய (கயமுகன் என்னும்) அசுரனுடைய உயிரை மாய்த்த விநாயகக் கடவுளுடைய சகோதரனே !, சிகரி அண்டகூடம் சேரும் அழகு ஆர் பழநி வாழ் குமரனே - வானுலகத்தை யளாவி நிற்கும் சிகரங்களை யுடையதாய் அழகு நிறைந்துள்ள பழநிமலையில் அமர்ந்திருக்கும் குமார சுவாமியே !, பிரமதேவர் வரதா - பிரமதேவர் அடைய விரும்பிய ஞானத்தை அவருக்கு அளித்தருளியவனே !, முருக - ஞானவாசனை வீசுபவனே !, தம்பிரானே - தலைவனே !, - ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் - என்று - என்று உனது திருநாமத்தை யுச்சரித்து, பூதி ஆகம் அணி மாதவர்கள் - திருநீற்றைத் தமது உடம்பில் பூசிக்கொள்ளும் சிறந்த தவசிகளின், பாதமலர் சூடும் அடியார்கள் பதமே துணை அது என்று - பாதமலர்களைத் தங்கள் தலைமீது அமர்த்திக்கொள்ளும் அடியவர்களின் பாதங்களே (அடியேன் முத்தி பெறுவதற்குற்ற) துணையெனக் கருதி, நாளும் - தினந்தோறும், ஏறு(ம்) மயில் வாகன - ஏறிச் சவாரி செய்வதற்குத் தக்க மயிலை வாகனமாக உடையவனே !, குகா - அடியவர்கள் இதய கமலத்தில் வசிப்பவனே !, சரவண - தாமரை மலர்ந்துள்ள வாவியான சரவணப் பொய்கையில் அவதரித்தவனே !, எனது ஈச - அடியேனது தெய்வமே !, என மானம் உனது - அடியேனுடைய மானம் உன்னடைக்கலம், என்றும் ஓதும் - என்றும் கூறுகிற, ஏழைகள் வியாகுலம் இது ஏது என - ஏழைகளுடைய துக்கத்தைக் கண்டு இத் துக்கத்துக்குக் காரணமென்னவென்று, வினவில் - (ஏதுமறியாதவன் போல்) கேட்பாயேயாகில், உனை எவர் புகழ்வார் - (பிறகு) உன்னை யார்தாம் புகழ்வார்கள் ?, மறையும் என் சொ(ல்)லாதோ - (இதுவரையில் உன்னைத் துதிக்கும்) வேதங்களும் என்னதான் சொல்லாவோ ?

(வி - ரை) "நீசர்கள் தம்மோடு எனது தீவினை எல்லாம் மடிய நீடுதனி வேல் விடும் மடங்கல் வேலா!" என்பது கந்தபுராணத்தின் அகப்பொருளை உணர்த்துகிறது. சூரனும் கிரௌஞ்சமும் சூரர்களும் ஆணவம் மாயை காமம் குரோதம் முதலியவைகளை உணர்த்துகின்றனவென்பதும், அவைகளெல்லாம் அழியுமாறு ஞான சொரூபியான முருகப்பெருமான் ஞான சக்தியாம் வேலாயுதத்தைப் பிரயோகித்தார் என்பதும் நமது சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருஞான வேழ வகுப்பில் விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. அவ்வகுப்பு கந்த புராணத்தின் அகப்பொருள் முழுவதையும் கூறுகிறது. முருகப் பெருமானுடைய நாமங்களை யுச்சரித்து விபூதியை மெய்யிற் பூசிக்கொள்வதே தவம் என்றும், அப்படிச் செய்யும் தவசிகளின் பாதங்களில் வீழ்ந்து பணியும் அடியார்களது பாதங்களைத் துணையாகக் கொள்வதனாலேயே முந்தியடைவது சாத்தியமென்றும் இப்பாடலினால் தெரியவருகிறது. அடியார்க்கடியராய் இருந்துகொண்டு முருகப்பெருமானது திருநாமங்களைக் கூறித் தங்கள் மானத்தை அப்பெருமானிடத்தில் ஒப்புவிப்பார்கள் பெருவாழ்வு பெறுவது நிச்சயம் என்றும் இப்பாடலிலிருந்து குறிப்பாக உணரலாம். ஏனெனில் அப்படிப்பட்டவர்களுக்கு அப்பெருமான் பெருவாழ்வு அளிக்காவிடில், அப்பெருமானை ஒருவரும் துதிக்கமாட்டாரென்றும், இதுவரை துதித்துவரும் வேதங்களும் அவரை இகழத் தொடங்குமென்றும் கூறிச் சுவாமிகள் அப்பெருமானைப் பயமுறுத்துகிறார். (கரு)

*தான தந்தன தான தனதன*
*தான தந்தன தான தனதன*
*தான தந்தன தான தனதன—தனதான.*

போத கந்தரு கோவே நமோநம
நீதி தங்கிய தேவா நமோநம
பூதலந்தனை யாள்வாய் நமோநம பணியாவும்

பூணு கின்றபி ரானே நமோநம
வேடர் தங்கொடி மாலா நமோநம
போத வன்புகழ் ஸாமீ நமோநம அரிதான

வேத மந்திர ரூபா நமோநம
ஞான பண்டித நாதா நமோநம
வீர கண்டைகொள் தாளா நமோநம அழகான

மேனி தங்கிய வேளே நமோநம
வான பைங்கொடி வாழ்வே நமோநம
வீறு கொண்டவி சாகா நமோநம அருள்தாராய்

பாத கஞ்செறி சூராதி மாளவெ
கூர்மை கொண்டயி லாலே பொராடியெ
பார அண்டர்கள் வானடு சேர்தர அருள்வோனே !

பாதி சந்திர னேசூடும் வேணியர்
சூல சங்கர ஞர்கீத நாயகர்
பார திண்புய மேசேரு சோதியர் கயிலாயர்

ஆதி சங்கர ஞர்பாக மாதுமை
கோல அம்பிகை மாதா மனேமணி
ஆயி சுந்தரி தாயான நாரணி அபிராமி

ஆவல் கொண்டுவி ருலே சிராடவெ
கோம ளம்பல சூழ்கோ யில்மீறிய
ஆவி னன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே !

(ப-ரை) பாதகம் செறி சூர் ஆதி (யர்) மாளவெ - கொடிய பாவச்செய்கைகளை மிகுதியாகச் செய்துவந்த சூரபதுமன் முதலாயினேர் மடியுமாறு, கூர்மை கொண்ட அயிலாலே - கூர்மை பொருந்திய கைவேலினல், பொர் ஆடியெ - போர்செய்து, பார அண்டர்கள் வான் நாடு சேர்தர அருள்வோனே - (அசுரரது கொடுமைகளைப்) பொறுத்துவந்த தேவர்கள் மீண்டும் தேவலோகத்துக்குச் சென்று வசிக்குமாறு அருள்புரிந்தவனே !, பாதி சந்திரனே சூடும் வேணியர் - பிறைச்சந்திரனைச் சடாமுடியில் தரித்துள்ளவரும், சூல சங்கரனூர் - சூலத்தைக் கையிலேந்திய சங்காரமூர்த்தியும், கீத நாயகர் - சாம வேதத்தில் துதிக்கப்படும் இறைவரும், பார திண் புயமே சேரு(ம்) சோதியர் - பருத்து வலிமை பொருந்திய தோள்களை யுடையவராய்ப் பேரொளி வீசி நிற்பவரும், கயிலாயர் - திருக்கைலாயத்தில் எழுந்தருளியிருப்பவரும், ஆதிசங்கரனூர் - உலகங்களுக்கெல்லாம் ஆதி காரணராய் நிற்பவருமான சங்கரரது, பாக மாது உமை - (வாம) பாகத்தில் உறையும் பெண்மணியான உமாதேவியார், கோல அம்பிகை-அழகிய சிவசக்தி, மாதா - உலகங்க ளெல்லாவற்றையும் ஈன்றருளிய தாயார், மனேமணி - மனத்தினில் (ஞான) வொளி வீசச்செய்யும் இரத்தினம், ஆயி-பேரன்பு காட்டும் தாய், சுந்தரி - பேரழகு வாய்ந்தவள், தாயான நாரணி - தாயாரான நாராயணி (நாராயணன் தங்கை), அபிராமி - அழகு வாய்ந்தவள், - (இப்படிப்பட்ட உமாதேவியார்) - ஆவல்கொண்டு - ஆவலுடன், வி (வீ)ருலே - உன்னைச் செல்வப் புதல்வனகப்பெற்ற பெருமையினல், சிராடவெ -உன்னைச் சீராட்டி நிற்க, கோமளம் பல சூழ் கோயில் மீறிய - நீர்ப்பறவைகள் பல சூழ்ந்திருக்கும்படி அமைந்து மிகவும் சிறப்புடையதாயிருக்கும் கோயிலான, ஆவினன்குடி வாழ்வான தேவர்கள் பெருமாளே - திருவாவினன்குடி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்

கும் தேவர்கள் நாயகனே ! போதகம் தரு கோவே நமோநம - ஞானத்தை உப தேசிக்கும் இறைவனே ! நமஸ்காரம், நீதி தங்கிய தேவா நமோநம - தருமத் துக்கு உறைவிடமான தேவனே! நமஸ்காரம், பூதலம்தனை ஆள்வாய் நமோ நம - பூவுலகத்தைக் காத்தருளுபவனே! நமஸ்காரம், பணியாவும் பூணுகின்ற பிரானே நமோ நம - ஆக்கல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலையும் பூண்டு நடத் தும் நாயகனே ! நமஸ்காரம், வேடர்தம் கொடி மாலா நமோ நம - வேடர்களு டைய பெண்ணின்மீது ஆசைகொண்டவனே ! நமஸ்காரம், போதவன் புகழ் ஸாமீ நமோ நம - வேதங்களைப் போதிக்கும் பிரமதேவர் புகழும் இறைவனே ! நமஸ்காரம், அரிதான வேத மந்திர ரூபா நமோ நம - அருமையான வேதங்களில் அடங்கியுள்ள மந்திரங்களின் சொரூபா ! நமஸ்காரம், ஞான பண்டித நாதா நமோ நம - ஞானத்தில் தேர்ச்சிபெற்று முதிர்ந்த இறைவனே! நமஸ்காரம், வீர கண்டை கொள் தாளா நமோநம - வீரக்கழல்களை அணிந்த கால்களையுடைய வனே! நமஸ்காரம், அழகான மேனி தங்கிய வேளே நமோநம-அழகிய உருவத் தைத் தரித்துள்ள குமாரசுவாமியே ! நமஸ்காரம், வான பைந்தொடி வாழ்வே நமோநம - தேவர்குலத்தில் உதித்த பெண்மணியான தெய்வயானை யம்மையா ருக்கு வாழ்வை யளித்தவனே ! நமஸ்காரம், வீறு கொண்ட விசாகா நமோ நம-பெருமைபொருந்தியவிசாகனே! நமஸ்காரம், அருள்தாராய்-(அடியேனுக்கு) நினது அருளைத் தரவேண்டும்

(வி - ரை) சகல ஜகங்களுக்கும் ஆதிகாரணரும், வேறு கதியின்றித் தமது பாதமலர்களே உற்ற புகலிடமென்ற உணர்ச்சியுடன் தம்மைச் சரண்புகுந்த பிறைச்சந்திரனைக் காத்துத் தமது சடாமுடியில் தரித்துக்கொண்டருளிய ஸ்திதி கர்த்தாவும், இறுதியில் பிரளயகாலத்தில் எண்ணிலாப் பிறவிகளெடுத்து மெலிந் துள்ள ஜீவர்களது தொல்லையை முடிக்க வேண்டுமென்ற கருணை நோக்கத் துடன் சர்வ சங்காரத் தொழிலைச் செய்யச் சூலத்தைத் கையிலேந்தும் சங்கரரு மான சிவபெருமானது செல்வப்புதல்வராக அவதரித்து, சிருஷ்டிஸ்திதி சங்காரம் என்னும் முத்தொழிலையும் நடத்தும் முருகப்பெருமான். சிவபெருமான், சனகா தியருக்கு ஞானத்தை உபதேசித்ததுபோலவே ஞானோபதேசம் செய்பவல்லவர்; தருமத்தின் உருவமான இடபத்தை வாகனமாகக்கொண் டிருக்கும் சிவபெரு மானைப்போலவே தருமத்துக்கு உறைவிடமாயிருப்பவர்; கயாசுரனை வதைத்து பூமியைக் காத்த சிவபெருமானைப் போலவே பூவுலகத்தைக் காப்பவர்; ஞானத் தில் முதிர்ந்தவர் ; வேதங்களில் அடங்கிய ஞானத்தின் உருவம் ; பாபங்களைச் செய்துவந்த துர்க்குண சொரூபிகளான சூரபதுமன் முதலாயினோரை ஞான சக்தியினால் அழித்து, வெகுகாலம் அவர்களிழைத்த கொடுமைகளைப் பொறுத்து வந்த தேவர்கள் தங்கள் பழைய நிலைமையை அடையும்படி செய்தருளிய கருணா மூர்த்தி; ஐம்புலன்களின் கைகளிற் சிக்கிய ஜீவர்களிடத்து மிகுந்த ஆசையுள்ள வர். அப்பெருமானை - சிவபெருமானது பழைய வடிவமாகிய ஷண்முக

மூர்த்தியை - விளித்துச் சுவாமிகள்: ஐம்புலன்களின் கையிற் சிக்கி துர்க்குணங்கள் மிகுதியாகப் பெற்றுப் பாவங்களையே செய்துவரும் ஜீவனாய்ப் பூவுலகத்தில் வசிக்கும் தமக்கு ஞானத்தைப் போதித்தருளித் தம்மை ஆட்கொள்ளும்படி பிரார்த்திக்கிறார்.

"பணி யாவும் பூணுகின்ற பிரானே" என்பதற்கு அடியவர்கள் இடும் கட்டளைகளையெல்லாம் ஏற்று அருள்செய்யும் பெருமான் என்று பொருள் கூறினும் பொருந்தும். ஏனெனில், அப்பெருமான் ஜீவர்களிடத்து மிகுந்த காதல் கொண்ட காளைக் குமரேசனாகவும், "பணியா வெனவள்ளி பதம் பணியும் தணியா வதிமோக தயா பர" னாகவுமிருக்கிறார்.

இப்பாடலில், சுவாமிகள் உமாதேவியார் யாரென உரைக்குங்கால், மாதா, ஆயி, தாயான நாரணி எனக்கூறி அத்தேவியார் உலகங்களையீன்ற தாயாரென்பதை அறிவுறுத்தியிருப்பது கவனிக்கத்தக்கது. (கசு)

தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன—தனதான.

வார ணந்தனை நேரான மாமுலை
மீத ணிந்திடு பூணார மாரொளி
வால சந்திர னோராக மாமுக மெழில்கூர

வார ணங்கிடு சேலான நீள்விழி
யோலை தங்கிய வார்காது வாவிட
வான இன்சுவை மேலான வாயித ழமுதூறத்

தோர ணஞ்செறி தார்வாழை யேய்தொடை
மீதில் நின்றிடை நூல்போலு லாவியெ
தோகை யென்றிட வாகாக வூரன நடைமாதர்

தோத கந்தனை மாமாயை யேவடி
வாக நின்றெதெ னாஆய வோர்வது
தோணி டும்படி நாயேனுள் நீயருள் தருவாயே!

கார ணந்தனை யோராதி சாசரர்
தாம டங்கலு மீறுக வானவர்
காவ லிந்திர னாடாள வேயயில் விடும்வீரா!

கார்வி டந்தனை யூணுக வானவர்
வாழ்த ரும்படி மேனாளி லேமிசை
காள கண்டம காதேவ னார்தரு முருகோனே!

ஆர ணன்றனை வாதாடி யோருரை
ஓது கின்றென வாராதெ னாவவ
னாண வங்கெட வேகாவ லாமதி லிடும்வேலா!

ஆத வன்கதி ரோவாது லாவிய
கோபு ரங்கிளர் மாமாது மேவிய
ஆவி னன்குடி யோனேசு ராதிபர் பெருமாளே!

(ப - ரை) காரணம்தனை ஓரா நிசாசரர் தாம் - உலகமானது நடைபெறுவதற்குத் தருமமே காரணம் என்பதை ஆய்ந்தறியாது அஞ்ஞானவிருளில் சஞ்சரித்துவந்த அசுரர்கள், அடங்கலும் ஈருக - அனைவரும் அழியும்படிக்கும், வானவர் காவல் இந்திரன் நாடு ஆளவே - தேவர்களுடைய அரசனாகிய இந்திரன் தனது நாடான வானுலகத்தை ஆளும்படிக்கும், அயில் விடும் வீரா - கைவேலாயுதத்தைப் பிரயோகித்த வீரா !, மேல்நாளிலே - முன்னொரு காலத்தில், வானவர் வாழ்தரும்படி - தேவர்கள் வாழும்பொருட்டு, கார் விடம் தனை - கறுத்த விஷத்தை, ஊணுக - உண்ணத்தக்க பொருளாக ஏற்று, மிசை - உண்டருளிய காளகண்ட மகாதேவனார் தரு(ம்) முருகோனே - நீலகண்டராகிய தேவாதி தேவரால் தந்தருளப்பட்டு ஞானவாசனை வீசி நிற்பவனே!, ஆரணன் தனை வாதாடி ஓர் உரை ஓதுக இன்று என - பிரமதேவருடன் வாதாடி ஒப்பற்ற சொல்லுக்குப் பொருள் இப்போதே கூறவேண்டும் என்று சொல்லி, வாராது என அவன்-தமக்குத் தெரியாது என்று அவர் சொன்னபோது, (அவன்) ஆணவம் கெடவே - அவர் மனத்திலிருந்த அகங்காரம் அழியுமாறு, காவலாம் அதில் இடும் வேலா - (அவரைச்) சிறையிலிட்ட ஞானசக்தி தரனே ! ஆதவன் கதிர் ஓவாது உலாவிய - சூரியனுடைய ஒளியானது ஓயாமல் (பகல் முழுவதும் தன் மீது) வீசப்பெறும், கோபுரம் கிளர் - கோபுரம் உயர்ந்தெழுந்து பிரகாசிக்கப் பெற்றதும், மா மாது மேவிய - பெண்கள் நாயகமாகிய உமாதேவியார் வந்து அமர்ந்திருக்கப் பெற்றதுமான, ஆவினன் குடியோனே - ஆவினன் குடி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி யிருப்பவனே !, சுர அதிபர் பெருமாளே - தேவர்களுக்குத் தலைவரான இந்திரன் குபேரன் முதலானோருக்குத் தலைவனே! வாரணம் தனை நேரான மாமுலைமீது - சங்கை (யொத்துக் கடைந்தெடுத்தாற்) போலுள்ள சிறந்த தனபாரங்களின்மீது, அணிந்திடு பூண் ஆரம் - அணிந்திருக்கும் ஆபரணங்கள் மாலைகள், (இவைகளின்), ஆர் ஒளி வால சந்திரன் நேராக - அழகிய பிரகாசமானது பிறைச்சந்திரனது ஒளியை ஒத்திருக்கவும், மாமுகம்

எழில் கூர - சிறந்த முகம் மிகுந்த அழகு வாய்ந்திருக்கவும், வார் அணங்கிடு சேல் ஆன நீள்விழி - நீரை விரும்பும் கயல்மீனை யொத்தவைகளாய் நீண்டுள்ள விழிகள், ஓலை தங்கிய வார் காது வாவிட - ஓலையை அணிந்துள்ள நீண்ட காதுகள் வரையில் பாய்ந்து சஞ்சரிக்கவும், வான இன் சுதை மேலான வாய் இதழ் அமுது ஊற - இனிய தேவாமுதத்தினும் சிறந்த அதராமுதம் ஊறவும், தோரணம் செறி தார் வாழை எய் - தோரணங்களுடன் கலந்து நிற்கும் குலையுடன் கூடிய வாழை மரத்தை யொத்திருக்கும், துடைமீதில் நின்று இடை நூல்போல் உலாவியெ - துடைகளின்மீது பொருந்தி இடையானது நூலைப்போல் அசையவும், தோகை என்றிட வாகாக ஊர் அ(ன்)ன நடை மாதர் - தோகையுள்ள மயிலே எனும்படி அழகிய உருவத்தை யுடையவராய் அன்னப் பறவையைப்போல் அழகாக மெல்ல நடக்கும் பெண்களின், தோதகம்தனை - வஞ்சகத்தை, மாமாயையே வடிவாக நின்றது என - மகா மாயையே எடுத்துக்கொண்ட வடிவமென்று, ஆய ஓர்வது நாயேனுள் தோணிடும்படி - ஆராய்ச்சியினால் உதிக்கும் உணர்ச்சியானது கீழானவனாகிய அடியேன் மனத்தினுள் தோன்றும்படி, நீ அருள் தருவாயே - நீ அருள் புரியவேண்டும்.

(வி - ரை) வெகுகாலம் தம்மை நோக்கிக் கடுந்தவம் புரிந்த சூரபதுமன் இச்சித்த வரங்களை அவனுக்கு அளித்தபோது, தருமதேவதையையே இடபவாகனமாகக்கொண்ட சிவபெருமான், "நீ தருமநெறி வழுவாமல் நடக்கும் வரையில் இச்செல்வங்கள் நிலைத்திருக்கும்" என்று கூறி, உலகமானது நிலை நிற்பதற்குக் காரணம் தருமமேயென்றும், உலகினில் தருமம் நிலைகுலையும்போது சர்வேசுவரரான தாமே தருமத்தை நிலைநாட்டுவார் என்றும் குறிப்பாக வுணர்த்தியருளினார். ஆனால் மாயையின் புத்திரனாய்ப் பிறந்து, அகங்கார சொரூபியாய், மாயையின் உபதேசத்தினால் விஷய சுகங்களை அனுபவிப்பதையே வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்ட சூரபதுமன் அவ்வுண்மையை அறிந்துகொள்ளமாட்டாமல், தனக்கு யாதொரு தீங்கும்செய்யாத தேவர்களைப்பலவிதமாகத் துன்புறுத்தியும் சிறையிலடைத்தும், வேதங்களிற் கூறிய நெறியில் நிற்பவர்களுக்கு இடைஞ்சல்களைச் செய்தும், தரும நெறியினின்றும் வழுவி நடந்தான். ஆதலால்தான் சிவபெருமான், தாம் சூரபதுமனிடம் சிவசக்தியே அவனை யழிக்குமென்று கூறியதற்கியைய, தம்மிடத்திலேயே ஷண்முகக்கடவுள் தோன்றும்படி செய்து, அக்கடவுளின் வேலாயுதத்தினால் அவன் மடியுமாறு விதித்தருளினார். ஆகையினால் முருகப்பெருமான் தருமத்தை உலகினில் நிலைநிறுத்திய ஞானமூர்த்தியாவர். தம்மைச் சரண்புகுந்தவரைக் காக்க விஷத்தையுமுண்ட தயாபரமூர்த்தியான நீலகண்டப்பெருமானது புதல்வரான முருகப்பெருமான் ஜீவர்களிடத்துத் தமக்குள்ள காதல் குறையாவண்ணம், என்றும் இளமை மாறாத முருகனாகவுமிருக்கிறார். அப்பெருமான் பாலனா யிருக்கும்போதே பிரமதேவரது ஆணவம் அழியும்படி அவரைத் தண்டித்துத் தாமே சிருஷ்டித் தொழிலைக் கைக்கொண்டு

நடத்தினர். ஞானமாகிய பழம் நீயே என்று சிவபெருமான் கூறியபடி முருகப் பெருமான் ஞானத்தின் உருவமாய்த் திருவாவினன்குடியில் எழுந்தருளியிருக் கிறார். அப்பெருமானை நாம் பிரார்த்திப்போமேயாகில் ஆடவர்கள் மனத்தை வஞ்சித்து இழுக்கும் பெண்களின் சுந்தரவடிவமானது நாம் நன்னெறியில் நின் றொழுகாதபடி நம்மைத் தடுக்குமாறு மகா மாயை எடுத்துக்கொண்ட வடிவமே யென்னும் உண்மை புணர்ச்சி அப்பெருமானது அருளினால் உதிக்கும் என்பது திண்ணம். விலைமாதர்களை யிழித்துக் கூறுவது நியாயமே யெனினும், நல் லொழுக்கமுள்ள குலமகளிரையும் வஞ்சகர் என்று கூறுவது தகுதியாமோ வென்ற கேள்வி பிறக்கக்கூடும். சுவாமிகள் அப்படிப்பட்டவர்களை வஞ்சக மனத்தர்கள் என்று கூறியதாகக் கொள்ளக்கூடாது. இவ்வுண்மையைப் பின் வரும் பாடல்களிற் காணலாம்.

“ பாரகதி பெறுவதோ ழிந்திடரர்வன
பரிசன தெரிசன கந்த வோசைகள்
பலநல விதமுள துன்ப மாகிம — யங்கிடாதே

பரிபுர பதமுள வஞ்ச மாதர்கள்
பலபல விதமுள துன்ப சாகர
படுகுழி யிடைவிழு பஞ்ச பாதக — மென்றுதீர்வேன்? ”

“ விடமு மமுதமு மிளிர்வன இணைவிழி
வனச மலதழல் முழுகிய சரமென
விரைசெய் ம்ருகமத அளகமு முகிலல — வொருஞான

விழியின் வழிகெட இருள்வதொ ரிருளென
மொழியு மமுதல வுயிர்கவர் வலையென
விழையு மிளநகை தளவல களவென — வியனுபித்

தடமு மடுவல படுகுழி யெனஇடை
துடியு மலமத னுருவென வனமுலை
சயில மலகொலை யமனென முலைமிசை — புரள்கோவை

தரள மணியல யமன்விடு கயிறென
மகளிர் மகளிரு மலபல வினைகொடு
சமையு முருவென வுணர்வொடு புணர்வது — மொருநாளே ? ”

குலமாதர்கள் ஆடவர் மனத்தைக் கவரவேண்டுமென்ற வஞ்சக எண்ண முடையவர்க ளல்லவெனினும், அவர்களது வடிவமும் நடையுடை பாவனைகளும் ஆடவர் மனத்திலுள்ள உண்மையறிவை அழித்து அவர்கள் மனத்தைக் கவர்ந்து தங்கள் வசமாக்கிக் கொள்ளுகின்றன வென்க.

'வார் அணங்கு இடு சேலான நீள்விழி' என்பதற்கு புயல்போன்ற ஆசையை உண்டுபண்ணுவதும் கயல்மீனை யொத்த வடிவ முடையதுமான நீண்ட கண் என்று பொருள் கூறுவதும் பொருந்தும். (கஎ)

தான தனதனன தான தனதனன
தான தனதனன தான தனதனன
தான தனதனன தான தனதனன—தனதான.

கோல மதிவதனம் வேர்வு தரஅளக
பாரம் நெகிழவிழி வேல்கள் சுழலநுவல்
கோவை யிதழ்வெளிற வாய்மை பதறியிள முகையான

கோக னகவுபய மேரு முலையசைய
நூலி னிடைதுவள வீறு பறவைவகை
கூற இனியகள மோல மிடவளைகள் கரமீதே

காலி னணிகனக நூபு ரமுமொலிக
ளோல மிடஅதிக போக மதுமருவு
காலை வெகுசரச லீலை யளவுசெயு மடமானார்

காதல் புரியுமது போக நதியினிடை
வீழு கினுமடிமை மோச மறவுனது
காமர் கழலிணைக ளான தொருசிறிது மறவேனே!

ஞால முழுதுமம ரோர்கள் புரியுமிக
லாக வருமவுணர் சேர வுததியிடை
நாச முறஅமர்செய் வீர தரகுமர முருகோனே!

நாடி யொருகுறமின் மேவு திணைசெய்புன
மீதி லியலகல்கல் நீழ லிடைநிலவி
நாணம் வரவிரக மோது மொருசதுர புரிவேலா!

மேலை யமரர்தொழு மானை முகரனை
யோடி வலம் வருமுன் மோது திரைமகர
வேலை யுலகைவல மாக வருதுரக மயில்வீரா!

வீறு கலிசைவரு சேவ கனதிதய
மேவு முதல்வவயல் வாவி புடைமருவு
வீறை வருபழநி ஞான மலையில்வளர் பெருமாளே!

(ப - ரை) ஞால முழுதும் அமரோர்கள் புரியும்-பூலோகம் முழுவதுமன்றி தேவர்களது தலைமை நகரமான அமராவதியும், இகலாக வரு(ம்) அவுணர் - தங்கள் பகைமைக்குப் பாத்திரமானவைகளாகக் கருதிவந்த அசுரர்கள், சேர - ஒருங்கே, உததியிடை நாசம் உற - சமுத்திரத்தின் நடுவே(யுள்ள வீரமகேந்திரபுரியில்) அழியுமாறு, அமர் செய் வீரதர - போர்செய்த வீரம் பொருந்தியவனே !, குமர - என்றும் இளமை மாறாதவனே !, முருகோனே - கட்டழகுடையானே !, நாடி ஒரு குறமின் மேவு தினை செய் புனமீதில் - (ஆசையுடன்) நாடிச்சென்று ஒப்பற்ற குறமகளான வள்ளிநாயகி (காவலாக) இருந்த தினைப்புனத்தில், இயல் அகல் கல் நீழலிடை நிலவி - மாட்சிமை மிகுந்த பாறையின் நிழலில் திருவிளையாடல் செய்து, நாணம் வர விரகம் ஓதும் - அத்தேவியார் வெட்கமடையும்படி நினது தீவிரமான காதலை எடுத்துரைத்ததான, ஒரு சதுர(ம்) புரி வேலா - ஒரு சாமர்த்தியமான திருவிளையாடலைச் செய்தருளியவனே !, மேலை அமரர் தொழும் ஆனைமுகர் - மேன்மை பொருந்திய தேவர்கள் வணங்கும் யானைமுக தேவராகிய விநாயகக் கடவுள், ஓடி அரனை வலம் வருமுன் - ஓடிச் சிவபெருமானை வலம் வருவதற்குள், மோது திரை மகர வேலை உலகை - கரையில் மோதும் அலைகளை வீசுவதும் மீன்களுக்கு உறைவிடமானதுமான சமுத்திரத்தினாற் சூழப்பட்டுள்ள உலகத்தை, வலமாக வரு துரக மயில்வீரா - வலமாக வந்ததும் மகா வேகம் பொருந்தியதுமான மயில்வாகனத்தின்மீ தேறிச் சவாரி செய்ய வல்ல வீரனே ! வீறு கலிசை வரு சேவகனது இதயம் மேவும் முதல்வ - பெருமை பொருந்திய கலிசை என்னும் பதியில் வசிக்கும் கலிசைச் சேவகனார் என்னும் அடியவரது இதயத்தில் அமர்ந்திருக்கும் இறைவனே !, வயல் வாவி புடை மருவு வீரை வரு - வயல்களும் தடாகங்களும் பக்கங்களில் பொருந்தப் பெற்றிருக்கும் வீரையென்னும் நகரத்திலும், பழநி ஞானமலையில் வளர் பெருமாளே - பழநி யென்னும் ஞானமலையில் புகழ்பெருக எழுந்தருளியிருக்கும் வடிவத்துடன் அமர்ந்திருக்கும் பெரியோனே !, கோல மதிவதனம் - அழகு வாய்ந்து சந்திரனை யொத்திருக்கும் முகமானது, வேர்வு தர - வியர்க்கவும், அளகபாரம் நெகிழ - மிகுதியாகவுள்ள கூந்தல் அவிழ்ந்து விழவும், விழி வேல்கள் சுழல - வேலையொத்த கண்களின் மணிகள் மருட்டக் கருதிச் சுழலவும், நுவல் கோவை இதழ் வெளிற - புகழப்படுவனவும் கோவைக் கனியைப்போல் சிவந்தவைகளுமான உதடுகள் வெண்ணிறமுள்ளவைகளாக மாறவும், வாய்மை பதறி - வாயினின்றும் மொழிகள் பதைப்புடன் உதித்து, இள முகையான கோகனக - இளமையான தாமரை மொட்டை யொத்தவைகளும், மேரு உபய முலை அசைய - மகா மேருவைப்போல் உயர்ந்து பருத்தவைகளுமான இரு தனபாரங்களும் (தாபத்தினால்) குலுங்கவும், நூலின் இடை துவள - நூலைப்போல் மெல்லிய இடையானது வளைந்து சாயவும், இனிய களம் வீறு பறவை வகைகூற - இனிய குரலுடைய தொண்டையானது (குரலின் இனிமை

யினூற்) சிறந்த பலவகைப் பறவைகளின் குரல்களுடன் பேசவும், கரம் மீதே வளைகள் ஓலம் இட - கைகளின் மீது அணிந்துள்ள வளையல்கள் சத்தித்து அபயங் கொடுக்கும்படி வேண்டவும், காலின் அணி கனக நூபுரமும் ஒலிகள் ஓலமிட - கால்களில் அணிந்துள்ள பொன்னூற் செய்த சிலம்புகளும் சத்தித்து அபயங்கொடுத்து இரக்ஷிக்கும்படி வேண்டவும், அதிக போகமது மருவுகாலை - மிகுந்த இன்பத்தை அனுபவிக்குங் காலத்தில், வெகு சரச லீலை அளவு செயும் மடமானூர் - அநேக விதமான இன்ப லீலைகளைச் செய்து தழுவும் அழகிய பெண்கள், காதல் புரியும் அநுபோக நதியினிடை வீழுகினும் - தங்கள் காதலை யுணர்த்துவதான கலவியினூல் உண்டாகும் சுகத்தை அநுபவிப்பது என்னும் ஆற்றில் அடியேன் மூழ்கினூலும், அடிமை - நினது அடிமையாகிய அடியேன், மோசம் அற - தவறுமல், உனது காமர் கழலிணைகளானது ஒரு சிறிதும் மறவேனே - உனது பேரழகு வாய்ந்த பாதங்கள் இரண்டையும் சிறிதளவும் மறவாம விருப்பேன்.

(வி - ரை) பழநித் திருத்தலத்துக்குரிய பாடல்களில் காவிரிச் சேவகன் என்றும், கலிசைச் சேவகன் என்றும் அழைக்கப்பட்ட ஒரு அன்பரைச் சுவாமிகள் பெரிதும் புகழ்ந்திருக்கிறூர். அதனூல் சுவாமிகள் பழநித் திருத்தலத்திலேயே அவ்வன்பரது நட்பைப் பெற்றிருக்கவேண்டுமென்று ஊகிக்கவேண்டியிருக்கிறது. கலிசைச் சேவகனூர் என்னும் அவ்வன்பர் ஒரு சிற்றரசரென்றும், பெரிய மதில்களையுடைய வீரைமாநகரமே அவரது இராஜதானி நகரமென்றும் அந்நகரம் காவிரிநதிக்கு அருகி லிருந்ததென்றும், அதனூல் அவருக்குக் காவிரிச் சேவகனூர் என்ற மற்றொரு காரணப்பெயரும் ஏற்பட்டதென்றும், அவ்வன்பர் பெரிய வள்ளலென்றும் முருகப்பெருமானிடத்தில் மிகுந்த அன்புபாராட்டி அப்பெருமானது அருளைப் பெற்றவரென்றும், அவ்வரசர் கருடக்கொடியை யுடையவரென்றும் பழநித்தலப் பாடல்களினூல் தெரியவருகிறது.

[அவ்வன்பருடைய சரித்திரத்தை வித்தாரமாக அறிந்த அன்பர்கள் அதை அடியேனுக்குத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.] (கஅ)

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தானதன தந்த—தனதான.

சீயுதிர மெங்கு மேய்ப்புழுநி ரம்பு
மாயமல பிண்ட நோயிடுகு ரம்பை
தீநரிகள் கங்கு காகமிவை தின்ப தொழியாதே
தீதுளகு ணங்க ளேபெருகு தொந்த
மாயையில்வ ளர்ந்த தோல்தசையெ லும்பு
சேரிடந ரம்பு தானிவைபொ திந்து நிலைகாணு

ஆயதுந மங்கை போகவுயி ரந்த
நாழிகையில் விஞ்ச ஊசிநிமி டும்பை
யாகியவு டம்பு பேணிநிலை யென்று மடவார்பால்

ஆசையைவி ரும்பி யேவிரக சிங்கி
தானுமிக வந்து மேவிடம யங்கு
மாழ்துயர்வி ழுந்து மாளுமெனை யன்பு புரிவாயே!

மாயைவல கஞ்ச னால்விடவெ குண்டு
பார்முழுது மண்ட கோளமுந டுங்க
வாய்பிளிறி நின்று மேகநிகர் தன்கை யதனாலே

வாரியுற அண்டி வீறுடுமு ழங்கு
நீரைநுகர் கின்ற கோபமொடெ திர்ந்த
வாரண இரண்டு கோடொடிய வென்ற நெடியோனும்

வேயினிசை கொண்டு கோநிரைபு ரந்து
மேயல்புரி செங்கண் மால்மருக துங்க
வேலகிர வுஞ்ச மால்வரையி டிந்து பொடியாக

வேலைவிடு கந்த காவிரிவி ளங்கு
கார்கலிசை வந்த சேவகன்வ ணங்க
வீரைநகர் வந்து வாழ்பழநி யண்டர் பெருமாளே!

(ப - ரை) மாயை வல கஞ்சனால் விட - மாயச்செயல்களில் வல்லவனான கம்சனால் ஏவப்பட்டு, வெகுண்டு - கோபமுற்று, பார்முழுதும் அண்டகோளமும் நடுங்க - பூவுலக முழுவதும் கோளவடிவமுள்ள அண்டம் முழுவதும் நடுங்குமாறு, வாய் பிளிறி நின்று - உரக்கக் கத்தி நின்று, மேக(ம்) நிகர் தன் கை அதனாலே - மேகத்தையொத்த தனது துதிக்கையினால், வாரி உற அண்டி - அத்துதிக்கை சமுத்திரத்தை யடையும்படி நீட்டி, வீறுடு - வேகத்துடன், முழங்கு நீரை நுகர்கின்ற கோபமொடு - கோஷிக்கும் கடல்நீரைக் குடிக்கும் கோபத்துடன், எதிர்ந்த-தம்மை எதிர்த்த, வாரண இரண்டு கோடு ஒடியவென்ற நெடியோனும் - குவலயாபீடம் என்னும் யானையின் இரண்டு தந்தங்களையும் ஒடித்து அதனை வென்ற கிருஷ்ணமூர்த்தியும் (மகாபலிச் சக்கரவர்த்தியை யடக்கிய) திரிவிக்கிரமரும், வேயின் இசைகொண்டு கோ நிரை புரந்து மேயல் புரி - தமது புல்லாங்குழலின் இனிய கானத்தினால் பசுக்கூட்டங்களைக் காத்து அவைகளை மேய்த்துவந்தவரும், செங்கண் மால் மருக-செந்தாமரையை யொத்த கண்களை யுடையவருமான திருமாலின் சகோதரி புத்திரனே!, துங்கவேல -

சிறந்த வேலாயுதத்தை யுடையவனே!, கிரவுஞ்ச மால் வரை இடிந்து பொடியாக வேலை விடு கந்த - கிரௌஞ்சம் என்னும் மாயை சொரூபமான மலையானது இடிந்து பொடியாகும்வண்ணம் வேலாயுதத்தைப் பிரயோகித்த கந்தனே!, காவிரி விளங்கு கார் கலிசை வந்த சேவகன் வணங்க - காவிரி நதிபாயப் பெற்று விளங்குவதும், அழகு வாய்ந்ததுமான கலிசையென்னும் பதியிலுள்ள சேவகனார் வணங்கும்பொருட்டு, வீரை நகர் வந்து வாழ் - வீரை நகரந்தனில் வந்து அமர்ந்திருப்பவரும், பழநி - பழம் நீ என்று சிவபெருமானால் புகழப்பட்டவருமான, அண்டர்பெருமாளே - தேவர்கள் நாயகனே!, சீ உதிரம் எங்கும் எய்-விந்துவும் இரத்தமும் எங்கும் பொருந்தியிருக்கப் பெற்றதும், புழு நிரம்பும் - புழுவினால் நிரம்பப்பெற்றதும், மாய மல பிண்டம் - அழியத்தக்க அசுத்த பதார்த்தங்களினாற் செய்யப்பட்டதுமான உடல், நோய் இடு குரம்பை - வியாதிகளை வைத்து வைக்கும் சிறு குடிசை, தீ நரிகள் கங்கு காகம் இவை தின்பது - நெருப்பு, நரிகள், கழுகுகள், காக்கைகள் இவைகளுக்கு உணவாயிருப்பது, தீதுள குணங்களே ஒழியாதே பெருகு - கெட்ட குணங்களே நீங்காமல் அதிகரிக்கும்படி செய்யும், தொந்த மாயையில் வளர்ந்த - விடாது பற்றும் மாயையில் வளர்ந்ததாய், தோல் தசை எலும்பு சேரிடு நரம்புதான் இவை பொதிந்து-தோல் மாமிசம் எலும்பு அவைகளுடன் சேர்ந்த நரம்பு இவைகளை அடைத்துவைத்து, நிலை காணொ ஆயது - உண்மை நிலைமையை உணர முடியாவண்ணம் செய்யப் பெற்றது; உயிர் நமன் கை போக - உயிரானது யமனது கையிற்போய்ச் சேர்ந்த, அந்த நாழிகையில் விஞ்ச ஊசிடும் இடும்பையாகிய உடம்பு - அந்த நாழிகைக்குள்ளாகவே மிகவும் நாறிப்போகும் விகாரமான உடம்பு; (அவ்வுடம்பை), நிலை என்று பேணி - அழிவற்ற பொருளாகக்கருதி ஆதரவுடன் காத்து, மடவார் பால் ஆசையை விரும்பியே - பெண்ளிகன் ஆசையைப்பெற விருப்பங்கொண்டு, விரக சிங்கி தானும் மிக வந்துமேவிட - காமநோயினால் அதிகமாய்ப் பீடிக்கப் பட்டு, மயங்கும் ஆழ் துயர் விழுந்து-காம மயக்கமாகிய ஆழமான துன்ப (சாகரத்) தில்விழுந்து, மாளும் எனை அன்பு புரிவாயே - தாழ்வடையும் அடியேனிடத்து அன்பு காட்டியருளவேண்டும்.

(வி - ரை) தன்னைக் கொல்லப்பிறந்த கிருஷ்ணன் ஆயர்பாடியில் வளர்ந்து வந்த செய்தியை நாரத மாமுனிவரால் அறிந்துகொண்ட கம்ஸன், கேசி என்பவனையும் மற்றொரு அரக்கனையும் அழைத்து, கிருஷ்ணனைக் கொன்று மீளும்படி ஆயர்பாடிக்கு அனுப்பி, அவர்களே கிருஷ்ணன் கையினால் மாண்டு போனதை அறிந்து, தனது நகரமான மதுரையில் தனுஸ் பூஜை, மல்யுத்தம் இரண்டையும் நடத்தி, அவைகளுக்குக் கிருஷ்ணனை வரவழைத்து, மல்லர்களைக் கொண்டாவது குவலயாபீடம் என்னும் கொடிய யானையைக் கொண்டாவது கிருஷ்ணனை அழித்துவிட வேண்டுமெனத் தீர்மானித்தான். அத்தீர்மானத் துக்கிசைய அவன் யாதவ சிரேஷ்டரான அக்ரூரரை ஆயர்பாடிக்கு அனுப்

பிக் கிருஷ்ணனை வரவழைத்து, தன் சபைக்குள் மல்ல யுத்தத்துக்காகக் கிருஷ்ணன் நுழையும் சமயத்தில் கிருஷ்ணனைக் கொல்லும்படி குவலயாபீடம் என்னும் யானையை ஏவும்படி திட்டஞ் செய்தான். அவ்வாறே அந்த யானை கிருஷ்ணனைத் தாக்க, கிருஷ்ணன் அதனோடு விளையாட்டாக யுத்தஞ் செய்து, பிறகு அதனைக் கீழே வீழ்த்திக் காலினால் உதைத்துக் கொன்று அதன் இரண்டு கொம்புகளையும் ஒடித்தான்.

"கருவிலுரு வேதங்கு சுக்கிலசி தானவளி
பொருமதி வேகொண்ட முக்குணவி பாகநிலை
கருதஅறி யாவஞ்ச கக்கபட முடியுடல்"

என்ற விடத்திற் கூறியவாறு, இப்பாடலிலும் சுவாமிகள் மனித வுடலானது,

"நீதுளகு ணங்களைபெருகு தொந்த
மாயையில் வளர்ந்த தோல்தசையெ லும்பு
சேரிடு ரம்பு தானிவைபொ திந்து நிலைகாணு
ஆயது" என்று கூறியருளியிருக்கிறார்.

சீயும் உதிரமும் தசையும் எலும்பும் நரம்பும் சேர்ந்து ஆகிய இவ்வுடல் அழியும் இயல்புடையது.

"தினமணி சார்ங்கபாணி யெனமதிள் நீண்டு சால
தினகர னேய்ந்தமாளி கையிலாரஞ்
செழுமணி சேர்ந்தபீடி கையிலிசை வாய்ந்தபாடல்
வயிரியர் சேர்ந்துபாட இருபாலும்
இனவளை பூண்கையார்க வரியிட வேய்ந்துமாலை
புழுககில் சாந்துபூசி யரசாகி
இனிதிறு மாந்துவாழு மிருவினை நீண்டகாய
மொருபிடி சாம்பலாகி விடலாமோ?"

என்றபடி, எவ்வளவு செல்வமுடையரா யிருந்த போதிலும், எத்தனை போகங்களை அனுபவிப்பவரா யிருந்தபோதிலும், எவ்வளவு உயர்ந்த பதவியை யுடையவரா யிருந்த போதிலும், உலகிற் பிறந்த ஒவ்வொருவரும் இறந்தே தீரவேண்டும். அழியும் இயல்புடைய உடலை நிலைமையானதாகக் கருதுவதனால்தான் அதை ஆதரவுடன் காக்கவேண்டு மென்ற ஆசையும், அதன் இச்சைகளைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்ற ஆசையும் உண்டாகின்றன. நமன் கையில் உயிர் சிக்கும் நாளில் இவ்வுடல் அழியும் என்ற உண்மையை அறிந்தவர் உயிரானது உய்வதற்குரிய நெறியைத் தேடுவார்கள்; அவ்வுண்மையை அறியாதவரே விஷய சுகங்களைத் தேடுவார்களென்க. (கக)

*தானதன தான்தன தாஞன் தான்தன்*
*தானதன தான்தன தாஞன தானதன்*
*தானதன தானதன தாஞன தானதன—தன்தான்.*

தோகை மயிலைகமல மானையு லாசமிகு
காமதுரை யானமத வேள்பூவை யேயினிமை
தோயுமநு போகசுக லீலாவி நோதமுழு துணர்தேனே

சூதனைய சீதஇள நீரான பாரமுலை
மீதணைய வாருமிதழ் தாரே ஞணைமொழி
சோர்வதிலை யானடிமை யாவேனு மாணைமிக மயலானேன்

ஆகமுற வேநகம தாலைவி டாதஅடை
யாளமிட வாருமென வேமாத ரார்களுட
ஞைசொலி யேயுழலு மாபாத னீதியிலி யுனையோதேன்

ஆமுனது நேயஅடி யாரோடு கூடுகில
னீறுநுதல் மீதிடவி லாமூட னேதுமிலி
யாயினுமி யானடிமை யீடேற வேகழல்கள் தருவாயே!

மாகமுக டோடகில பாதாள மேருவுட
னேசுழல வாரியது வேதாழி யாவமரர்
வாலிமுத லானவர்க ளேஞேர்க ளாலமுது கடைநாளில்

வாருமென வேயொருவர் நோகாம லாலவிட
மீசர்பெற மாறுதவி யேதேவர் யாவர்களும்
வாழஅமு தேபகிரு மாமாய ஞரினிய மருகோனே!

மேகநிக ரானகொடை மாஞய காதிபதி
வாரிகலி மாருதக ரோபாரி மாமதன
வேள்கவிசை வாழவரு காவேரி சேவகன துளமேவும்

வீரஅதி சூரர்கிளை வேர்மாள வேபொருத
தீரகும ராகுவளை சேரோடை சூழ்கழனி
வீரைநகர் வாழ்பழநி வேலாயு தாவமரர் பெருமாளே!

(ப - ரை) மாக முகடோடு அகில(ம்) பாதாள மேருவுடனே சுழல - ஆகாயத்தின் உச்சியோடு சகல மேலுலங்களும் பாதாள லோகமும் மேருமலையுடன் சுழலுமாறு, வாரியதுவே தாழியா(க)-சமுத்திரத்தையே பானையாகக்கொண்டு, அமரர் வாலி முதலானவர்கள் ஏஞேர்களால் - தேவர்களையும் பலி முதலான

அசுரர்களையும் உதவியாகக்கொண்டு, அமுது கடை நாளில் - அமுதத்துக்காகத் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில், வாரும் எனவே யாவரையும் அழைத்து, ஒருவர் நோகாமல் - எவரும் துன்பமடையாத வண்ணம், ஆல விடம் ஈசர் பெறுமாறு உதவியே - (கடலிலிருந்து எழுந்த) ஆலால விஷத்தைச் சிவபெருமான் தமது பங்குக்கு அடையுமாறு அதை அவருக்கு அளித்துவிட்டு, தேவர் யாவர்களும் வாழ அமுதே பகிரும் - தேவர்களெல்லோரும் நிலைபெற்ற நல்வாழ்வு அடையுமாறு அமுதத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்த, மா மாயனார் இனிய மருகோனே - மிகுந்த மாயக்காரரான திருமாலின் மனத்தினில் மகிழ்ச்சியை யுண்டுபண்ணும் மருகனே!, மேக நிகரான கொடை மா நாயக அதிபதி - (கைம்மாறு எதையும் இச்சிக்காமல் மழையைப் பொழிந்து உலகத்தைக் காக்கும்) மேகத்தைப் போலவே இரப்பவர்க்கு அளிப்பவராய் அவ்வாறு அளிப்பவருள் தலைமை பூண்டிருப்பவரும், வாரி கலி மாருத கரோ பாரி - சமுத்திரத்திலிருந்து எழுந்துவரும் காற்றானது தனது குளிர்ச்சியினால் வெப்பத்தைத் தணித்துச் சுகத்தை யளிப்பதுபோல் இரப்பவரது வெந்துயரத்தை யொழித்து அவர்களுக்கு வாழ்வை யளித்த வள்ளலான பாரிக்குச் சமானமானவரும், மா மதனவேள் - சிறந்த அழகு வாய்ந்த மன்மதனைப்போல் அழகு வாய்ந்தவரும், கவிசை வாழ வரும் - கவிசைப்பதி நல்வாழ்வடையுமாறு அவ்வூரில் அவதரித்தவருமான, காவேரி சேவகனது உளம் மேவும் வீர - காவிரிச்சேவகனார் என்னும் அன்பருடைய இதயத்தில் பொருந்தியுள்ள வீரனே !, அதிசூரர் கிளை வேர் மாளவே பொருத தீர - மிகுந்த சூரர்களான சூரபதுமன் முதலாயினோர் குலமானது வேருடன் அழியுமாறு போர்புரிந்த தீரனே !, குமரா - என்றும் இளமைப் பருவத்தி விருப்பவனே!, குவளை சேர் ஓடை சூழ் கழனி - குவளை மலர்கள் மலர்ந்துள்ள நீரோடைகளால் சூழப்பெற்ற வயல்களையுடைய, வீரை நகர் வாழ் - வீரை நகரத்தில் அமர்ந்து, பழநி வேலாயுதா - பழநியிலுள்ள வடிவத்தையே தாங்கிய வேலாயுதனே !, அமரர் பெருமாளே-தேவர்கள் நாயகனே !, தோகை மயிலே கமலமானே - அழகிய தோகையை யுடைய மயிலே! தாமரை மலரின் மீது வசிக்கும் இலக்குமியே !, உல்லாசம் மிகு காம துரையான மத வேள் பூவையே - மிகுந்த உள்ளக் களிப்புள்ளவனும் காமத்துக்கு அதிகாரியுமான மன்மதனது அன்புக்குப் பாத்திரமான இரதி தேவியே !, இனிமை தோயும் அநுபோக சுக லீலா விநோதம் முழுது(ம்) - இனிமை பொருந்திய கலவியில் சுகத்தைத் தரும் விளையாடல்களைச் செய்வதை முற்றிலும் அறிந்த தேனே !. சூது அனைய சீத இளநீரான பார முலைமீது அணைய வாரும் - (கடைந்தெடுத்த) சூது டுங் கருவியைப் போலவும் குளிர்ச்சியைத் தரும் இளநீரைப் போலவுமுள்ள பருத்த உனது தனபாரங்களின்மீது என்னை அணைத்துக்கொள்ள வரவேணும், இதழ் தாரீர் - நான் அதராமுதத்தைப் பருகுவதற்கு மலரிதழ்களை யொத்த உனது உதடுகளைத் தரவேண்டும், என் ஆணை மொழி சோர்வதிலை - நான் இப்

போது ஆணையிட்டுக் கூறும் வார்த்தையினின்றும் தவறி நடக்கமாட்டேன், யான் அடிமை ஆவேன் நும் ஆணை - நான் உனது அடிமையாக இருப்பேன் ! உன் மீது ஆணை !, மிக மயலானேன் - உன்மீது மிகுந்த காதல் கொண்டேன், ஆகம் உறவே நகமதாலே விடாத அடையாளம் இட வாரும் - கலவி செய்ததற்கு அழியாத அடையாளமிருக்கும்படி தேகத்தில் நகங்களினுல் அயைாளமிட வாவேணும், என - என்று, (ஏ அசை), மாதரார்களுடன் ஆசை சொலியே உழலும் - பெண்களினிடத்தில் என் காதலைக் கூறித்திரியும், (அடியேன்), மா பாதன் - மகா பாதகன், நீதியிலி - தரும நெறியில் நில்லாதவன், உனை ஓதேன் - உன்னைத் துதிக்காதவன், ஆ(கு)ம் உனது நேய அடியாரோடு கூடுகிலன் - உனது கருணைக்குப் பாத்திரராகி உன்னிடம் அன்பு பூண்ட அடியவர்களோடு சேராதவன், நீறு நுதல் மீது இடல் இ(ல்)லா மூடன் - வெண்ணீற்றை நெற்றியின்மீது அணிந்துகொள்ளாத மூடன், எதுமிலி - நினது கருணையைப் பெறுவதற்குரிய செயல் எதுமில்லாதவன்; ஆயினும் யான் அடிமை - ஆயினும் அடியேன் நினது அடிமையானவன்; (ஆதலின்), ஈடேற கழல்கள் தருவாயே - அடியேன் நற்கதி பெறுமாறு நினது பாதாரவிந்தங்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அதனின்றும் அமுதமும் விடமும் உதிக்க, திருமால் அவைகளைச் சிவபெருமானுக்கும் அமரர்களுக்கும் அவரவர்கள் தகைமைக்குத் தக்க விதமாகவும் எவருக்கும் தீங்கு நேரிடாத விதமாகவும் பங்கிட்டார். அவ் விடத்தையுண்டு பிழைக்கவல்லவர் சிவபெருமான் ஒருவரேயாதலாலும், அது வெளியில் சஞ்சரித்தவரையில் எவரும் அங்கு இருக்கவும் முடியாமற் போனபடியாலும், திருமால் முதலில் அவ்விடத்தைச் சிவபெருமானுக்கு அவர் பாகமாக அளித்து, பிறகு தேவர்களுக்கு அமுதத்தைப் பகிர்ந்து கொடுத்தார். அப்படித் தகைமைக்குத் தக்கபடி பகிர்ந்த தருமசாலியாகிய திருமாலுக்கு மருகனும், வரையாது கொடுக்கும் வள்ளலான காவிரிச்சேவகனுர் மகிழ்ச்சியுடன் தமது இதயத்தில் அமர்த்திக்கொண்ட ஒப்புயர்வற்ற வள்ளலும், அகங்காரம் முதலிய துர்க்குணங்களின் சொரூபிகளான அசுரர்களை வேருடன் அழித்தருளிய வீரரும், முதிர்ந்த ஞானப்பழம் நீயேயென்று சிவபெருமான் புகழுமாறு ஞானத்தின் சொரூபியாகவும் ஞானத்தைப் போதிக்க வல்லவராய் ஞானசக்தியைக் கரத்தில் எந்தியவராகவுமுள்ள முருகப்பெருமானை விளித்து, சுவாமிகள் தாம் பெண் காதலில் சிக்கி யுழலு மகாபாதகனுகவும், தருமநெறியில் நில்லாதவனுகவும், அப்பெருமானைப் புகழாதவனுகவும், நீறு இடாதவனுகவும், அடியார் கூட்டத்தில் சேராதவனுகவும் இருந்தபோதிலும், தம்மால் விஷத்தை யொத்த துயரத்தை அநுபவிக்கமுடியா தாகையினுல் தமக்குப் பேரின்பமான அமுதத்தை யளிக்கவேண்டுமென்றும், வள்ளலாகிய காவிரிச் சேவகனுரால் அப்பெருமான் கொண்டாடப் படுவதற்கிசைய தாம் இரப்பதை வரையாது கொடுத்தருள வேண்டுமென்றும், பெண் காதலுக்குக் காரணமான அகங்காரம் முதலிய துர்க்

குணங்களை யழித்துத் தமக்கு அப்பெருமனது பாதாரவிந்தங்களைத் தந்தருள வேண்டுமென்றும் பிரார்த்திக்கிருர்.

'மாதரார்களுடன் ஆசை சொலியே யுழலும் மாபாதன்' என்றதற்கு காரணம் பெண்காதலே கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குருநிந்தை என்னும் பஞ்ச மாபாதகங்களுக்கும் காரணமாயிருத்தலேயாம். இக்கருத்தை,

" பரிபுர பதமுள வஞ்ச மாதர்கள்
பலபல விதமுள துன்ப சாகர
படுகுழி யிடைவிழு பஞ்சபாதக - மென்று தீர்வேன்?"

என்னும் திருப்புகழ் அடியிலும் காண்க.

இனி, "சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் ருெண்டர் குழாஞ் சாரிற் கதியன்றி, வேறிலைகாண்" என்று சுவாமிகள் கந்தரலங்காரத்தில் அருளிச்செய்தபடி, மெய்யடியாருடைய கூட்டத்தில் போய்ச் சேர்ந்தாலல்லது நற்கதிபெற மார்க்கமில்லை. நீதியுட னிருப்பதும், எம்பெருமானைத் துதிப்பதும், அடியார்களுடன் கூடுவதும்,வெண்ணீறிடுவதும் எம்பெருமானுடைய கருணையைப்பெறச் செய்யுமாதலால், "ஏதுமிலி" என்பதற்கு எம்பெருமானது கருணைக்குப் பாத்திரமாவதற்குரிய செயல் ஏதுமில்லாதவன் என்று பொருள் கூறப்பட்டது. அப்படிப்பட்ட செயல்கள் இன்னவென்பது பின்வரும் அடிகளினுல் விளங்கும்.

' பகிர நினைவொரு தினையள வினுமிலி
கருணை யிலியுன தருணையொ டணியல்
பழநி மலைகுரு மலைபணி மலைபல மலைபாடிப்
பரவு மிடறிலி படிறுகொ டிடறுசொல்
பழகி யழகிலி குலமிலி நலமிலி
பதிமை யிலிபவு ஷுதுமிலி மகிமையி லிகுலாலன்
திகிரி வருமொரு செலவினி லெழுபது
செலவு வருமன பவுரிகொ டலமரு
திருக னுருகுத லழுகுதல் தொழுகுதல் நினையாத
திமிர னியல்பிலி யருளிலி பொருளிலி
திருடன் மதியிலி கதியிலி விதியிலி
செயலி லுணர்விலி சிவபத மடைவது மொருநாளே?"

**பாரி (வேள்பாரி):**—இவன் கடையெழு வள்ளல்களில் ஒருவன். முந்நூறு ஊர்கள் அடங்கிய மலைநாட்டுக்கும் மலைக்கும் அதிபதி. இவன் தன்னுடைய முந்நூறு ஊர்களையும் மற்றைப் பொருள்களெல்லாவற்றையும் தன்னிடம் வந்து இரந்தவர்களுக்குக் கொடையாகக் கொடுத்துவிட்டான். இவன் மிகுந்த பராக்கிரமமுடையவனுக இருந்தபடியால் இவனை வெல்லக் கருதிய சேரசோழ

பாண்டியர்கள் மூவரும் இவனைப் போரில் வெல்ல வல்லமையற்றவர்களாய், வஞ்சித்துக் கொன்றனர். இவனது ஈகைத்தன்மை சமயாசாரியர்களாலும் புகழப்பட்டிருக்கிறது.

" கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு "

என்று திருக்குறளில் மழையின் ஈகைத்தன்மை புகழப்பட்டுள்ளபடியே பாரியின் ஈகைத்தன்மையும் புகழப்படத்தக்கதென்றும், மாரிக்குச் சமானமான கொடையாளி பாரியே என்றும் பின்வரும் புறநானூற்றுப் பாடலினால் விளங்குகிறது.

" பாரி பாரி யென்றுபல வேத்தி
யொருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி யொருவனு மல்லன்
மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே. "

திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் பலிச்சக்கரவர்த்தி அசுரர்களுக்குத் தலைவனாக விருந்தான் ஆகையினால்தான் அசுரர்களை எனோர்கள் என்று கூறுங்கால் வாலி முதலானோர்கள் என்றார். 'பலி - வலி என்னும் பதம் சந்தத்துக்காக வாலி என முதல் நீண்டது' செய்யுள் விகாரம். (உ௦)

தான தானதனத் தந்த தானன
தான தானதனத் தந்த தானன
தான தானதனத் தந்த தானன—தனதான.

**பாரி** யானகொடைக் கொண்ட லேதிரு
வாழ்வி சாலதொடைத் திண்பு யாஎழு
பாரு மேறுபுகழ்க் கொண்ட நாயக அபிராம

பாவ லோர்கள்கிளைக் கென்றும் வாழ்வருள்
சீல ஞாலவிளக் கின்ப சீவக
பாக சாதனவுத் துங்க மானத எனவோதிச்

சீர தாகஎடுத் தொன்று மாகவி
பாடி னாலுமிரக் கஞ்செ யாதுரை
சீறு வார்கடையிற் சென்று தாமபர் வுறவீணே

சேய பாவகையைக் கொண்டு போயறி
யாம லேகமரிற் சிந்து வார்சிலர்
சேய னார்மனதிற் சிந்தி யாரரு குறலாமோ?

ஆரு நீர்மைமடுக் கண்க ராநெடு
வாயி னேற்படவுற் றன்று மூலமெ
னார வாரமதத் தந்தி தானுய — அருள்மாயன்

ஆதி நாரணனற் சங்க பாணிய
னோது வார்களுளத் தன்பன் மாதவ
னான நான்முகனற் றந்தை சீதரன் — மருகோனே!

வீர சேவகவுத் தண்ட தேவகு
மார ஆறிருபொற் செங்கை நாயக
வீசு தோகைமயிற் றுங்க வாகன — முடையோனே!

வீறு காவிரியுட் கொண்ட சேகர
னான சேவகனற் சிந்தை மேவிய
வீரைவாழ் பழநித் துங்க வானவர் — பெருமாளே!

(ப - ரை) ஆரு(ம்) நீர்மை மடுக்கண் - நீர் நிறைந்ததும் இருண்டதுமான மடுவினில், கரா நெடு வாயின் நேர்பட உற்று - முதலையின் விசாலமான வாய்க்கு நேராக எதிர்ப்பட்டு இடையூறுற்று, அன்று - ஒரு நாள், மூலம் என ஆரவார மத தந்தி தான் உ(ய்)ய அருள் மாயன் - ஆதிமூலமே என்று கூவி வருந்திய மத யானை தப்பிப் பிழைக்கும்படி அருள் புரிந்த திருமாலும், ஆதி நாரணன் - (சிவ பெருமான் உலகங்களைச் சிருஷ்டித்தபோது) முதன்முதலில் சிருஷ்டிக்கப்பட்ட வரான ஸ்ரீமந் நாராயணரும், நல் சங்க பாணியன் - நல்ல சங்கத்தைக் கையிலேந்தியவரும், ஓதுவார்கள் உளத்து அன்பன் - தம்மைப் புகழ்பவர்களது இதயத்தில் அன்புடன் அமர்ந்திருப்பவரும், மாதவன் ஆன - இலக்குமியின் நாயகரான வரும், நான்முகன் நல் தந்தை - நான்கு முகங்களையுடைய பிரமதேவருடைய நல்ல தந்தையானவரும், சீதரன் - இலக்குமியை மார்பில் தரித்தவருமான மகா விஷ்ணுவின், மருகோனே - சகோதரியின் புத்திரனே!, வீர - வீரனே! சேவக- ஐயனே !, உத்தண்ட தேவ குமார - மகாதேவரது குமாரனே !, ஆறு இரு பொன் செம் கை நாயக - அழகாகவும் சிவப்பாகவுமுள்ள பன்னிரண்டு கைகளை யுடைய நாயகனே !, வீசு தோகை மயில் துங்க வாகனம் உடையோனே - விரிக்கும் கலாபத்தையுடைய மயிலான சிறந்த வாகனத்தை யுடையவனே!, வீறு காவிரி உட்கொண்ட சேகரனான சேவகன்-சிறந்த காவிரிநதியானது ஓடப்பெற்ற நாட்டினரும் வீரருமான கவிசைச் சேவகனுருடைய, நல் சிந்தை மேவிய - நல்ல மனத்தில் அமர்ந்துள்ள, வீரை வாழ் பழநித் துங்க - வீரை என்னும் நகரத்தில் எழுந்தருளியிருக்கும் பழநிப்பெருமானே !, வானவர் பெருமாளே - தேவர்கள் நாயகனே !, பாரி ஆன கொடைக்கொண்டலே - (கடை எழு வள்ளல்களில் ஒருவரான) பாரி என்று கூறத்தகும்படி வரையாது கொடுத்து இரக்ஷிக்கும்

மேகமே!, திரு வாழ் விசால தொடைத் திண் புயா - வீரலக்ஷ்மி வசிக்கப் பெற்று மலர் மாலைகளை யணிந்து வலிமை பொருந்தப்பெற்று விசாலமாகவுள்ள புயங்களையுடையவனே!, எழு பாரும் ஏறு புகழ் கொண்ட நாயக - மேலுலகங்கள் எழிலும் கிளம்பிச் செல்லும் கீர்த்தியைப் பெற்ற தலைவனே!, அபிராம - சுந்தர புருஷனே!, பாவலோர்கள் கிளைத்கு என்றும் வாழ்வு அருள் சீலா - கவிகளின் இனத்தவருக்கு எந்நாளும் நல்வாழ்வைக் கொடுத்தருளும் நற்குண சாலியே!, ஞால விளக்கு - உலக முழுவதிலும் ஒளி வீசும் விளக்கே!, இன்ப - யாவர்க்கும் இன்பத்தைக் கொடுப்பவனே!, சீவக - ஜீவன் முக்தனே!, பாக சாதன - இந்திரனே!, உத்துங்க மானத - மிருதுவான நெஞ்சினையுடையவனே!, என ஓதி - என்று கூறி, சீரதாக எடுத்து ஒன்று மா கவி பாடினும் - பெருமையாக உயர்த்திப் பொருத்தமாகச் சிறந்த பாடல்களை (அவர் மீது) பாடினும், இரக்கம் செ(ய்)யாது - மனமிரங்காமல், உரை சீறுவார் - மிகுந்த கோபத்துடன் பதிலுரைப்பவர்களுடைய, கடையில் சென்று - தலை வாயிலுக்குச்சென்று, தாம் அயர்வுற - தாம் மனச்சோர்வடையும்படி, வீணாக - யாதொரு பலனையும் அடைய மார்க்கமின்றி) வீணாக, சேய பா வகையை கொண்டுபோய் - பலவகைப்பட்ட செவ்வையான பாடல்களைக் கொண்டுபோய், அறியாமலே - அறியாமையினால், கமரில் சிந்துவார் சிலர்-நிலம் பிளவுபட்டிருக்கும் வெடிப்பில் சொரிவார்கள் சிலர்; சேயனார் - சிவபெருமான் செல்வப் புதல்வரான முருகப் பெருமானை, மனதில் சிந்தியார் அருகு உறல் ஆமோ - மனத்தினில் அன்புடன் தியானிக்காதவர்களுக்குச் சமீபத்தில் செல்வது தகுதியோ?

(வி - ரை) மகாவிஷ்ணுவினிடம் மிகுந்த பக்தியுள்ள இந்திரத்யும்னன் என்னும் ஓர் அரசன் வானப்பிரஸ்தாசிரமம் பூண்டு, காட்டுக்குச் சென்று தவம் புரிந்தான். அவன் தவநிஷ்டையில் அமர்ந்திருக்கையில், அகத்திய மாமுனிவர் அங்கு வந்து, அவன் தம்மை மதியாமல் நிஷ்டையிலேயே யிருப்பதைக் கண்டு அவனைக் காட்டானை யாகும்படி சபித்தார். இந்திரத்யும்னன் பயந்து அவரைப் பணிந்து, தனக்கு யானையின் ஜன்மம் வந்தபொழுதும் மகா விஷ்ணுவைத் தான் மறவாமலிருக்கும்படி அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்க, அம் முனிவர் அவ்வாறே அநுக்கிரகஞ்செய்தார். பிறகு அவ்வரசன் யானை ஜன்மமடைந்து யானைகளுக்கெல்லாம் அரசனாகி கஜேந்திரன் என்னும் பெயர் பெற்றான். கஜேந்திரன் என்னும் யானை பல பெண்யானைகளுடன் ஒரு மடுவில் இறங்கிக் கிரீடைகளை செய்துகொண் டிருக்கையில், முன்னம் தண்ணீரில் மறைந்து ஒரு முனிவரது காலைப்பற்றி யிழுத்ததனால் முதலையாகும்படி அம் முனிவரால் சபிக்கப் பெற்ற ஹூஹூ என்னும் கந்தருவன், அச்சாபத்தினால் முதலை யுருக்கொண்டு அம்மடுவில் நெடுங்காலமாக வசித்துவந்தவன், கஜேந்திரனது காலைப்பற்றி அதனை நீருக்குள் இழுக்க முயல, கஜேந்திரன் நீரை விட்டு வெளியே செல்ல முயன்றது. அவ்வாறே வெகுகாலம் ஒன்றையொன்று இழுக்க

முயன்றதனுல் இறுதியில் பலங்குன்றி, தான் தப்புவதரிது என்று கண்டு மிகவும் வருந்திய கஜேந்திரன் மகாவிஷ்ணுவைத் தியானித்து ஆதிமூலமே யென்று கூவ, பேரருள்புரிய நிர்க்கதியாய்த் தம்மைச் சரண்புகும் தருணத்தையே எதிர் பார்த்துக்கொண்டிருந்த திருமால் தக்ஷணத்திலேயே அம்மடுவுக்குச் சென்று தமது சக்கராயுதத்தினுல் முதலையைச் சங்கரித்துக் கஜேந்திரனை விடுவித்தார். ஹூஹூ என்னும் கந்தருவன் தன் சுபவுருவத்துடன் திருமாலைத் துதித்துக் கொண்டே தன்னுலகத்துக்குச் சென்றான், கஜேந்திரனும் பகவானுடைய தரிசன விசேஷத்தினுல் சாபம் நீங்கப்பெற்று, பகவானுடைய சாருப்பிய பதவி யை அடைந்தான்.

"மிடுக்கிலாதானை வீமனே விறல் விஜயனே வில்லுக் கிவனென்று, கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினுங் கொடுப்பாரிலை" என்று சுந்தர மூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்தபடி, பகிரவேண்டும் என்ற நினைவு ஒரு தினையளவு மில்லாதவரைப் புகழ்ந்து பாடினுல் உதாசின மொழியும் கோபவுரை யும் கிடைக்குமேயன்றி ஒரு சிறிதும் பொருள் கிடைக்காது. எம்பெருமானி டத்து அன்புடையவர்கள்,

"வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க வுதவா வுடம்பின் வெறுநிழல்போற்
கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே!"

"நீர்க்கு மிழிக்கு நிகரென்பர் யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு மென்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட வென்னினெ ங்கேனு மெழுந்திருப்பார்
வேற்கு மரற்கன் பிலாதவர் ஞானமிகவு நன்றே!"

என்னும் கந்தரலங்காரப் பாடல்களில் அடங்கிய உண்மையை அறிவார்களாத லின், அவ்வன்பர்களைப் புகழ்ந்து பாடினுல் பொருளுங் கிடைக்கும், எம்பெரு மான் அருளும் சுரக்கும். அன்றியும், "யாமோ தியகல் வியுமெம் மறிவுந் தாமே பெறவே லவர்தந் ததனுல்", ஒருவர் தமது அறிவையும் கவித்திறமையையும் அவைகளைத் தமக்கு அளித்தருளிய கருணை வள்ளலாகிய வேலாயுதனைப் புகழ் வதற்கே உபயோகிக்கவேண்டும். (உக)

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத்—தனதான.

கரிபிணைக் கோடெனத் தனமசைத் தாடிநற்
கயல்விழிப் பார்வையிற் பொருள்பேசிக்
கலையிழுத் தேகுலுக் கெனநகைத் தேமயற்
கலதியிட் டேயழைத் தணையூடே

செருமிவித் தாரசிற் றிடைதுடித் தாடமற்
றிறமளித் தேபொருட் பறிமாதர்
செயலிழுக் காமலிக் கலியுகத் தேபுகழ்ச்
சிவபதத் தேபதித் தருள்வாயே!
திரிபுரக் கோலவெற் பழல்கொளச் சீர்நகைச்
சிறிதருட் டேவருட் புதல்வோனே!
திரைகடற் கோவெனக் குவடுகட் டூள்படத்
திருடர்கெட் டோடவிட் டிடும்வேலா!
பரிமளப் பாகலிற் கனிகளைப் பீறிநற்
படியினிட் டேகுரக் கினமாடும்
பழநியிற் சீருறப் புகழ்குறப் பாவையைப்
பரிவுறச் சேர்மணப் பெருமாளே!

(ப - ரை) திரிபுர கோல வெற்பு அழல்கொள - அலங்காரமானவைகளாய் மலைகளை யொத்திருந்த திரிபுரங்கள் தீப்பற்றி யெரியுமாறு, சீர் நகை சிறிது அருள் தேவு-அழகிய புன்னகை கொண்டருளிய கடவுளாகிய சிவபெருமான், அருள் புதல்வோனே - (தேவர்கள் துயரத்தைத் தீர்ப்பதற்காக) தந்தருளிய புத்திரனே, திரை கடல் கோ என - அலைமோதும் சமுத்திரமானது முறையோ வென்று அலறுமாறும், குவடுகள் தூள்பட - மலைகள் பொடிபடுமாறும், திருடர் கெட்டு ஓட - வஞ்சகர்களாகிய அசுரர்கள் தோல்வியடைந்து ஓடுமாறும், விட்டிடும் வேலா - வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே, பரிமள பாகலின் கனிகளை பீறி - நல்ல வாசனை பொருந்திய பலாப்பழங்களைக் கைகளினால் கிழித்துப் பிளந்து, (அவைகளின் சுளைகளை), நல் படியின் இட்டு (ஏ - அசை) - (மலையின்) நல்ல படிகளின்மீது போட்டு, குரக்(ங்)கு இனம் ஆடும் - குரங்குகளின் கூட்டம் விளையாடும், (தலமான), பழநியில் - பழநியில், புகழ் குற பாவையை - கீர்த்திபெற்ற வேடப்பெண்ணான வள்ளி நாயகியை, சீர் உற - அந்நாயகி மேன்மையான பதவியை அடையும்வண்ணம், பரிவு உற சேர் - மிகுந்த அன்பு பெருகிக் கலந்துகொண்ட, மண பெருமாளே - மணமகனாகிய பெரியோனே!, கரி இணை கோடு என - யானையின் இரண்டு கொம்புகளை யொத்திருக்கும், தனம் அசைத்து ஆடி-தனபாரங்களை (விரகதாப முற்றவர்களைப்போல்) அசைத்து நடித்துக்காட்டி, நல் கயல் விழி பார்வையில் பொருள் பேசி - அழகிய கயல் மீனை யொத்த கண்களின் பார்வையினாலேயே கருத்தைத் தெரிவித்து, கலை இழுத்து (ஏ - அசை) - அதுவரை நெகிழ்ந்திருந்த புடவையை இழுத்து (தேகத்தை மூடிக்கொண்டு), குலுக்கு என நகைத்து (ஏ அசை) உடல் குலுங்

கச் சிரித்து, மயல் கல(ா)தி இட்டு (ஏ அசை) - மனத்தில் காமமான கலகத்தை விளைவித்து, அழைத்து அணை ஊடு (ஏ அசை) செருமி – அழைத்துச் சென்று பஞ்சணையில் இறுகவணைத்து, வித்தார - மரக்கொம்பை யொத்த; சிறு இடை – மெல்லிய இடையானது, துடித்து ஆட - (விரகதாப மிகுதியினால்) துடிப்பது போல் நடித்து, மல் - மிகுதியான, திறம் - சாமர்த்தியத்தை, அளித்து (ஏ - அசை) - காட்டி, பொருள் பறி மாதர் செயல் - கைப்பொருளைப் பிடுங்கிக் கொள்ளும் பெண்களுடைய (நடையுடை பாவனை முதலான) செய்கைகள், இழுக்காமல் (அடியேனது மனத்தைக் கவர்ந்து) இழுக்காமல் (தடுத்து), இ கலி யுகத்தே புகழ் சிவபதத்தே - இந்தக் கலியுகத்தில் (யாவரும் அடைவதற்கரிய தென) புகழும் சிவபதமாகிய முத்திவீட்டில், பதித்து அருள்வாயே - அடியேனை யிருத்தி அருள்புரிய வேண்டும்.

(வி-ரை) மாயையின் சொரூபியான தாரகாசுரனுடைய (சூரபதுமன் தம்பி யுடைய) புதல்வர்களான தாரகாக்ஷன் கமலாக்ஷன் வித்யுன்மாலி எனும் மூவரும் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து, பொன் வெள்ளி இரும்பினாலாகிய மலை போற் பெரிய மூன்று கோட்டைகளைப் பெற்று, எம்பெருமானருளிய வரத்தினால் அக்கோட்டைகளுடன் ஆகாயத்தில் பறந்து செல்லும் வலிமை பெற்று, நினைத்த விடங்களுக்குச் சென்று பெரிய நகரங்களின்மீது இறங்கி யமர்ந்து அவைகளை யழித்து அக்கிரமங்கள் செய்துவந்தனர். அவர்களை யழிக்கவல்லவர் சிவபெருமானே யாதலால், ஸ்திதிகர்த்தாவான மகாவிஷ்ணுவானவர் ஒரு சூழ்ச்சி செய்து நாரத மாமுனிவரைக்கொண்டு அம்மூன்று அசுரர்களுக்கும் பௌத்த மதக்கோட்பாடுகளை உபதேசம் செய்வித்துப் பிறகு அவர்கள் செய்த அக்கிரமங் களைப்பற்றிச் சிவபெருமானிடம் தெரிவித்தார். மாயையின் வமிசத்திலேயே உதித்த ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மலங்களும் தேவர்களின் மனத் திலும் பொருந்தியிருந்ததை யுணர்ந்த சிவபெருமான், மும்மலங்களின் சொரூ பங்களான அத்திரிபுரங்களை யெரிக்குங் காலத்திலேயே தேவர்களின்மனத்தில் குடிகொண்டிருந்த மும்மலங்களையும் அழித்துவிடவேண்டுமெனத் தீர்மானித்து அத்தேவர்களின் உதவியைக் கொண்டே தாம் திரிபுரங்களை யழிக்க முடியும் போல் நடித்துபூமியைத்தேராகவும், சந்திர சூரியர்களை இரு சக்கரங்களாகவும், நான்கு வேதங்களையும் நான்கு குதிரைகளாகவும், பிரமதேவரைச் சாரதி யாகவும், மந்திரங்களைக் கடிவாளமாகவும், பிரணவத்தைச் சாட்டையாகவும், மேருமலையை வில்லாகவும், ஆதிசேஷனை வில்லின் நாணாகவும், திருமாலைப் பாணமாகவும், வாயுவை அம்பிற்கட்டிய சிறகாகவும் கொண்டு திரிபுரங்களை யழிக்கச்சென்றார். அப்போது திருமால் பிரமன் முதலிய ஒவ்வொருவரும் தங்கள் உதவியினாலேயே திரிபுரங்கள் அழிபடுமென்று கர்வங்கொண்டனர். எங்கும் நிறைந்துள்ள சிவபெருமான் அதை யுணர்ந்து தாம் ஒருவரே பதி என்பதை மாயையினால் மறந்து ஆணவங்கொண்ட அத்தேவர்களது அறியாமையை

யுன்னிப் புன்னகை கொண்டார். உடனே தேவர்கள் மனத்திலுள்ள மும்மலங்களும் மும்மலங்களின் சொரூபங்களான திரிபுரங்களும் ஒருங்கே எரிந்து சாம்பராயின. அகங்காரமானது தனது கோரமான சொரூபம் வெளிப்படையாய்த் தெரியாமலிருக்குமாறு சமுசாரம் என்னும் சாகரத்தில் ஒளித்துக் கொண்டதனால், அதன் சுய உருவத்தை வெளிப்படுத்துமாறு முருகப்பெருமான் ஞானசக்தியாம் வேலாயுதத்தைப் பிரயோகித்து அந்தக் கடலை வற்றச்செய்தார். மாயையின் சொரூபமான கிரௌஞ்ச மலையை யழித்ததும் ஞானவேலே. அஞ்ஞான விருள் நிறைந்திருக்குமட்டுமே தங்களிச்சைப்படி அக்கிரமஞ் செய்ய வல்ல திருடர்களான காமம் குரோதம் முதலான அசுரர்கள் தோல்வியடைந்து அகன்று ஓடும்படி செய்ததும் ஞானசக்தியாம் வேலாயுதமே. பாகல் -பலாமரம், மாதர் கலவியை விரும்புவதற்குக் காரணம் மும்மலங்களையுடைத்தா யிருப்பதே யாதலாலும், அவைகளை யழிக்கவல்லது ஞானமே யாதலாலும் சுவாமிகள் அஞ்ஞான மிகுந்த இக் கலியுகத்தில் தாமும் காம வாழ்க்கையிற் கிடந்து உழலாமல் சிவபதமாகிய முத்தி வீட்டினை அடையும்வண்ணம் அருள்புரியும்படி சிவபெருமானாலேயே ஞானக்கனி நீயேயெனப் புகழ்ப்பெற்றுப் பழநியில் அமர்ந்துள்ள முருகப்பெருமானைப் பிரார்த்திக்கிறார். (உஉ)

*தனன தனதனன தனன தனதனன*
*தனன தனதனன—தனதான.*

கடலை பொரியவரை பலக னிகழைநுகர்
கடின குடவுதர விபரீத
கரட தடமுமத நளின சிறுநயன
கரிணி முகவரது துணைவோனே !
வடவ ரையின்முகடு அதிர வொருநொடியில்
வலம்வ ருமரகத மயில்வீரா !
மகப திதருசுதை குறமி னொடிருவரு
மருவு சரசவித மணவாளா !
அடல சுரர்கள்குல முழுது மடியவுய
ரமரர் சிறையைவிட எழில்மீறும்
அருண கிரணவொளி யொளிரு மயிலைவிடு
மரக ரசரவண பவலோலா !
படல வுடுபதியை யிதழி யணிசடில
பசுப திவரநதி அழகான
பழநி மலையருள்செய் மழலை மொழிமதலை
பழநி மலையில்வரு பெருமாளே !

(ப - ரை) கடலை பொரி அவரை பல கனி கழை நுகர் - கடலை நெல் முதலியவற்றின் பொரி அவரை முதலியவைகளின் கொட்டை பலவகைப் பழங்கள் கரும்பு இவைகளைத் தின்னும், கடின குட உதர - (நிரம்பியதனுல்) இறுகிக் குடத்தை யொத்திருக்கும் வயிற்றையும், விபரீத கரட தடம் உ(கு) மத - மிகவும் அதிகமாக மதநீரைப் பொழியும் மத்தகங்களிலிருந்து பெருகும் மதநீரையும், நளின சிறு நயன - அழகிய சிறு கண்களையுமுடைய, கரிணி முக வரது - யானையினிடம் உதித்து அந்த யானையின் முகத்தையே பெற்றவரான விநாயகக் கடவுளின், துணைவோனே - சகோதரனே, வட வரையின் முகடு அதிர - மேருமலையின் உச்சியானது அதிரும்படி, ஒரு நொடியில் வலம் வரும் - (உலகத்தை) ஒரு நொடிப்பொழுதில் பிரதக்ஷிணமாக வந்த, மரகத மயில் வீரா - பச்சைமயிலை வாகனமாகக் கொள்ளும் பராக்கிரமமுடைய வீரனே, மகபதி தரு சுதை குறமிஞெடு இருவரும் - (நூறு அசுவமேத) யாகங்களைச் செய்து (தேவர் களுக்குத்) தலைவனுகவுள்ள தேவேந்திரன் பெற்ற புதல்வியான தெய்வயானை யம்மை குறக்குலத்தில் வளர்ந்த வள்ளிநாயகி என்னும் இரு தேவிமார்களும், மருவு சரசவித மணவாளா - கலந்து சரசலீலைகளைச்செய்ய இசைந்த நாயகனே! அடல் அசுரர்கள் குலம் முழுதும் மடிய - வலிமையுடைய அசுரர்களுடைய குலம் முழுவதும் அழியுமாறும், உயர் அமரர் சிறையை விட - சிறந்த தேவர்கள் சிறையை விட்டு வெளிவருமாறும், எழில் மீறும் அருண கிரண ஒளி ஒளிரும் அயிலை விடும் - மிகவும் அழகிய உதயகாலத்துச் சூரியனது கிரணங்களையொத்த ஒளியை வீசும் வேலாயுதத்தைப் பிரயோகித்த, அரகர - பரமசிவமே, சரவண பவ - சரவணப் பொய்கையில் அவதரித்தவனே, லோலா - (ஜீவர்களிடத்து) மோகமுள்ளவனே, படல் உடு பதியை - கூட்டமாயுள்ள நக்ஷத்திரங்களின் தலைவனுகிய சந்திரனையும், இதழி - கொன்றையையும், அணி சடில பசுபதி - அணிந்துள்ள சடாமுடியை யுடையவரும் ஜீவர்களுக்கு நாயகருமாகிய சிவபெருமான், வர நதி - (பகீரதன் தவஞ்செய்து) வரமாகப்பெற்ற கங்காநதி, அழகான பழநி மலை - அழகுவாய்ந்தவடும் (உலகத்தையே தோன்றச்செய்து பழமையாயுள்ள) புராதனியானவரும் மலத்திஞல் பீடிக்கப்படாதவருமான உமாதேவியார், அருள் செய் - (இம்மூவர்களால் உலகத்துக்கு) அளித்தருளப்பட்டு, மழலைமொழி மதலை - திருந்தாத குதலைச் சொற்களைப் பேசும் சிறுபாலனும், பழநி மலையில் வரு பெருமாளே - பழநி மலையில் வந்து அமர்ந்த பெரியோனே!

(வி - ரை) கஜமுகாசுரனுல் பெரிதும் வருத்தப்பெற்ற தேவர்கள் சிவபெருமானிடம் சென்று தங்கள் துன்பத்தை நீக்கியருள வேண்டுமென்று பிரார்த்திக்க, சர்வலோக நாயகராகிய அவர் அவர்களுக்குத் தைரியஞ்சொல்லி யனுப்பிவிட்டு, பார்வதி தேவியாருடன் விசித்திரமான கேளி விலாசத் தோட்டத்துக்குச் சென்று, அங்குள்ள சித்திர மண்டபத்தில் ஒரு சிங்காதனத்தில் அத்தேவியாருடனமர்ந்து, பல சித்திரங்களினடுவே யிருந்த பிரணவத்தின் உருவத்தை உற்று

நோக்கி யருளினர். உடனே அப்பிரணவத்தினின்றும் ஓர் ஆண் யானையும் ஒரு பெண் யானையும் தோன்றி ஒன்றோடொன்று விளையாடத் தொடங்கின. அவைகள் அவ்வாறு தோன்றியது உலகத்தின் நன்மைக்காகவே யென அறிந்த பார்வதிதேவியாரும் சிவபெருமானும் அவ்விரண்டு யானைகளையும் நேசத்தோடு பார்த்தருளினார்கள். அப்போது அவைகளிரண்டும் கலக்க, கோடி சூரியப் பிரகாசம் பொருந்திய யானைமுகத்தவரான விநாயகமூர்த்தி அவதரித்தார். அப்பெருமானே எந்தையின் மூத்தகுமாரர். முருகப்பெருமான் உலகப் பிரதக்ஷணம் செய்ததின் காரணத்தையும் சிறப்பையும் 3-வது பாடலின்விருத்தி உரையில் காண்க. சிவபெருமான் தேவர்களது வேண்டுகோளின்படி தம்மையே நிகர்த்த அருமைப் புதல்வனைத் தம்மிடத்தேயே தந்தருளினரெனினும், அவ்வாறு அப்புதல்வனைத் தோன்றச்செய்யுமுன் பார்வதி தேவியாரை அன்புடன் நோக்கி, அத்தேவியாருடன் அந்நோக்கத்தினாலேயே கலந்துகொண்டாராதலின் அத்தேவியாரையும், முக்கணெந்தை நெற்றிக் கண்களிலிருந்து உதித்த ஆறு தீப்பொறிகளும் ஞானதேசிகனாகிய ஷண்முகநாதனைப் ஆறுமுகன் அவைகளைக் கங்கையே சுமந்து சென்று சரவணப்பொய்கையில் சேர்த்தாளாதலின் கங்கையையும் ஷண்முகக்கடவுளது தாய்மார்களாகக் கூறப்பட்டிருக்கிறது. (உங)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத்—தனதான

இருசெப் பெனவெற் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் — திடுமாதர்
இடையைச் சுமைபைப் பெறுதற் குறவுற்
றிறுகக் குறுகிக் — குழல்சோரத்
தருமெய்ச் சுவையுற் றிதழைப் பருகித்
தழுவிக் கடிசுற் — றணைமீதே
சருவிச் சருவிக் குனகித் தனகித்
தவமற் றுழலக் — கடவேனோ?
அரிபுத் திரசித் தஜனுக் கருமைக்
குரியத் திருமைத் — துனவேளே!
அடல்குக் குடநற் கொடிபெற் றெதிருற்
றசுரக் கிளையைப் — பொருவோனே!
பரிவுற் றரனுக் கருணற் பொருளைப்
பயனுற் றறியப் — பகர்வோனே!
பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் — பெருமாளே!

(ப - ரை) அரி புத்திர சித்தஜனுக்கு-திருமாலின் புத்திரனுகிய மன்மதனுக்கு, அருமைக்கு உரிய-அவனது அன்புக்குப் பாத்திரனுயுள்ள, திரு மைத்துன வேளே-மகிமை தங்கிய மைத்துனனுகிய குமாரசுவாமியே, அடல் குக்குட நல் கொடிபெற்று - வலிமைபொருந்திய சேவலை நல்ல கொடியாகப் பெற்று, எதிர் உற்ற அசுரர் கிளையை பொருவோனே - போரில் எதிர்த்த அசுரர்களது குலத்துடன் போர் செய்தவனே, பரிவு உற்று அரனுக்கு அருள் நல் பொருளை - அன்புபூண்டு சிவபெருமானுக்கு அருளைப் பெறும் சாதனமான பிரணவத்தின் மேலான பொருளை, பயன் உற்று அறிய பகர்வோனே - உன்னைப் புதல்வனுக அவதரிக்கச் செய்ததின் பயனை அடைந்து அறியும்படி உரைத்தருளியவனே, பவன புவனம் செறிவு உற்று-உயர்ந்த வாயுமண்டலத்தை அளாவி வளர்ந்திருக்கும், மெய் பழநி குமர பெருமாளே - மெய்யறிவைத் தரவல்ல பழநித்தலத்தில் குமரக்கடவுளாய் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, இரு செப்பு என வெற்பு என - இரண்டு சிமிழ்கள் என்றும் மலைகள் என்றும் சொல்லுமாறு உள்ளவைகளும், வட்டமும் ஒத்து - வட்டவடிவ முள்ளவைகளாய், இளகி புளகித்திடும் - மிருதுவானவைகளாய்ப் புடைப்பவைகளும், மாதர் இடை ஐ சுமையை - பெண்களது இடைக்கு அழகிய சுமையாக உள்ளவைகளுமான தனபாரங்களை, பெறுதற்கு உறவு உற்று-அடைவதற்காக அன்புபாராட்டி, இறுக குறுகி - அவைகளை அணைவதற்கு நெருங்கி, குழல்சோர தரும் மெய் சுவை உற்று - கூந்தல் அவிழ்ந்துபோகும் வண்ணம் (மாதர்கள்) தரும் தேக இன்பத்தை அனுபவித்து, இதழை பருகி - அதராமுதத்தை உண்டு, தழுவி - அவர்களைத் தழுவி, கடிசுற்று அணை மீது (ஏ - அசை) - வாசனைவீசும் பஞ்சணையின்மீது, சருவி சருவி - சரசலீலைகளைப் பலமுறை செய்து, குனகி - மனங்குழைந்து, தனகி - உள்ளக் களிப்படைந்து, தவம் அற்று - தவம் என்பதைச் சிறிதளவும் செய்யாமல், உழல கடவேனே - கலங்கித் திரியும்படி அடியேனுக்கு விதிப்பது தகுதியோ ?

(வி - ரை) மன்மதன் மகா விஷ்ணுவின் மானஸ புத்திரனுகையினுலும், தெய்வானையம்மையும் வள்ளிநாயகியாரும் மகாவிஷ்ணுவின் புத்திரிகளாகையினுலும், மன்மதனுடைய மைத்துனனே யென்று முருகப்பெருமான் விளிக்கப் பட்டிருக்கிருர். குகப்பெருமானது வெற்றிக்கொடியா யிருக்கும் சேவலின் வலிமையைச் சுவாமிகள் பல பாடல்களில் புகழ்ந்திருக்கிருர். அவைகளிற் சில பின்வருமாறு :—

"படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடைல
மிடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே!"

"வாளகிரி யைத்தனது தாளிலிடி யப்பொருது
வாகைபுனை குக்குடப - தாகை"

" பருப்பதச் செருக்கறத் துகைக்குழூட் பதத்தினைப்
படைத்தருக் குடக்கொடி * * * "

" இகற்செருக் கரக்கரைத் தகர்த்தொலித் தூரத்தபச்
சிறைச்சியைப் பசித்திரைக் — கிசை கூவும்
பெடைத்திரட் களித்தருக் குடக்கொடி * * * "

மந்திரங்களுக்குள்ளே பிரணவமே சிறந்ததும் மோக்ஷசாதனமாயுள்ளது மாதலாலும், முண்டகோபநிஷத்தில் " ஓம் என்பது வில்லு, ஆன்மாவே பாணம், பிரமமே குறி, இடையறாத் தியானத்தினாலேயே குறியை எய்தல் கூடும் " என்று கூறப்பட்டிருப்பதனாலும், அருள் நல் பொருளை என்பதற்கு அருளைப் பெறும் சாதனமான பிரணவத்தின் மேலான பொருளை என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது.

" மகன் தந்தைக்காற்று முதவி யிவன் தந்தை
என்னோற்றான் கொல் லெனுஞ் சொல் "

என்றபடி உலகத்துக்கு ஞானத்தைப் போதிப்பதற்காகவே தம்மிடத்துத் தாம் அவதரிக்கச்செய்த தமது செல்வப் புதல்வனாகிய முருகப்பெருமானுடைய பெருமையைத் தேவரும் மற்றியாவரும் அறியுமாறே, ஞானத்தின் உறைவிடமான பிரணவத்தின் பொருளைத் தமக்கே உபதேசிக்கச் செய்தபோதுதான், சிவபெருமான் அப்பெருமானை யவதரிக்கச் செய்ததன் பயனை யடைந்தாராதலின், " அரனுக்கு * * பயனுற்றறிய" என்று கூறப்பட்டிருக்கிறதுபோலும். (உச)

தனன தனந்தனத் தனன தனந்தனத்
தனன தனந்தனத் தனதான.

கனமா யெழுந்துவெற் பெனவே யுயர்ந்துகற்
புரமா ரணந்துளுத் திடுமானர்

கனிவா யுகந்துசிக் கெனவே யணைந்துகைப்
பொருளே யிழந்துவிட் டயர்வாயே

மனமே தளர்ந்துவிக் கலுமே யெழுந்துமட்
டறவே யுலர்ந்துசுக் கதுபோலே-

வசமே யழிந்துவுக் கிடுநோய் துறந்துவைப்
பெனவே நினைந்துனைப் புகழ்வேனோ ?

புனவேடர் தந்தபொற் குறமாது இன்புறப்
புணர்காதல் கொண்டஅக் கிழவோனே !

புனலேழு மங்கவெற் பொடுசூர் சிரங்கள்பொட்
டெழுவே லெறிந்தவுக் கிரவீரா !
தினமேவு குங்குமப் புயவாச கிண்கிணிச்
சிறுகீத செம்பதத் தருளாளா !
சிவலோக சங்கரிக் கிறைபால பைங்கயத்
திருவா வினன்குடிப் பெருமாளே !

(ப - ரை) புன வேடர் தந்த பொன் குறமாது - காட்டில் வசிக்கும் வேடர்கள் வளர்த்த அழகிய குறப் பெண்ணாகிய வள்ளி நாயகி, இன்பு உற புணர் - சுகமடையுமாறு அத்தேவியுடன் கலக்கும்படி, காதல் கொண்ட - அத்தேவியினிடத்தில் ஆசைகொண்ட, அக் கிழவோனே - அன்று கிழ உருவம் பூண்டவனே, புனல் ஏழும் மங்க - ஏழு சமுத்திரங்களும் வற்றுமாறும், வெற்பொடு-(கிரௌஞ்சம் என்னும்) மலையினுடன், சூர் சிரங்கள் பொட்டெழ - சூரர்களுடைய தலைகள் துளைபடுமாறும், வேல் எறிந்த உக்கிர வீரா - வேலாயுதத்தைப் பிரயோகித்த பராக்கிரம வீரனே, தினம் மேவும் குங்கும புயவாச - தினந்தோறும் ஆசையுடன் அணைந்துகொள்ளும் சிவந்த பரிமளக்கலவைஅணிந்த குறப்பெண்ணின் தோளை விட்டுப் பிரியாமல் இருப்பவனே, கிண்கிணி சிறு கீத செம் பதத்து-சதங்கைகள் மெல்லிய இன்னிசையைத் தரும் சிவந்த பாதாரவிந்தங்களையுடைய, அருளாளா அருள் வள்ளலே!, சிவலோக சங்கரிக்கு இறை பால - சிவலோக நாதனும் சங்கரிக்கு நாயகனுமாகிய சிவபெருமானது பாலகனே, பைம் கய திரு ஆவினன் குடி பெருமாளே - குளிர்ந்த தடாகம் பொருந்தியுள்ள ஆவினன்குடி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே, கனமாய் எழுந்து வெற்பு எனவே உயர்ந்து - அடியிற் பருத்து மலைபோல் உயர்ந்து வளர்ந்துள்ளதும்,கற்புர - பரிமள கர்ப்பூரத்தை அணிந்ததும், மாரணம் தொடுத்திடும் மாணுர்-மந்திர வித்தையால் கொல்ல எழும் கொலைக் கருவிபோன்றதும் இளமை பொருந்தியதுமான தனபாரங்களை உடைய அழகிய பெண்களது, கனி வாய் உகந்து-கனியையொத்த வாயின்மீது விருப்பமுற்று, சிக்கெனவே அணைந்து - அவர்களை இறுக அணைத்துக்கொண்டு, கைப்பொருள் இழந்துவிட்டு - கையிலுள்ள பொருளை (அவர்களுக்கு அளித்து) இழந்தபின், அயர்வாய்-சோர்வடைந்து,மனம் தளர்ந்து-மனவருத்தமுற்று,விக்கலும் எழுந்து -(அதிக தாபத்தினால்)விக்கல்நோயடைந்து மட்டு அறவே-உலர்ந்து சுக்கு அது போலே-மிகவும் அதிகமாக உலர்ந்து சுக்குப் போலாகி,வசம் அழிந்து-தன் வசமழிந்து (உறுப்புக்களை உபயோகிக்கும் திறமை இழந்து), உக்கிடு நோய் துறந்து-கெட்டு அழியும்படி செய்யும் பிறவிநோய் நீங்கப் பெற்று, வைப்பு எனவே நினைந்து உனை புகழ்வேனோ - ஆபத்துக் காலத்தில் உதவுவதற்காகப் புதைத்து வைத்த பொருளை நினைப்பதுபோல் உன்னுடைய ஞாபகம் வரப்பெற்று உன்னைத் துதிப்பேனோ ?

(வி - ரை) முருகப்பெருமான் குறமாது இன்புறப் புணர்காதல் கொண்டதாகக் கூறப்பட்டிருப்பதனால், பரம்பொருளாகிய அப்பெருமான் அந்நாயகியை நாடியது தமது இன்பத்துக்காகவன்று என்பது விளங்குகிறது; பரம்பொருள் ஜீவனைத் தடுத்தாட்கொண்டு அதனுடன் கலந்துகொள்ள இச்சிப்பது ஜீவனுக்கு நன்மையுண்டாக வேண்டுமென்றே யென்பதும் தெரியவருகிறது. அன்றியும், முருகப்பெருமான் வள்ளிநாயகியினிடத்துக் கொண்ட காதலானது சாதாரணமாக உலகத்தில் ஆடவர்கள் பெண்களின்மீது கொள்ளும் காதலின் தன்மையுடையதன் றென்பதும் தெளிவாய் விளங்குகிறது. அப்பெருமான் அத்தேவியாரிடம் கொண்ட காதலுக்கும் மானிடர் காதலுக்குமுள்ள வித்தியாசத்தைக் காட்டுவதற்காகவே இவ்வாறு பல பாடல்களில் அப்பெருமானைக் காமுகனேயென்று அழைத்து, சுவாமிகள் பெண்காதல் கொண்ட தமக்கு அருள்புரியும்படி வேண்டுகிறார். பெண்களின் காமவலையிற் சிக்கிக் கைப்பொருளை இழந்து தேகம் இளைத்துப் பிணி மூடப்பெற்று யாவராலும் நிந்திக்கப்படுபவனையும் முருகப்பெருமான் நிந்திக்கமாட்டார். அப்படிபட்டவனும் தான் வறுமையுற்றகாலத்தில் அதன் கொடுமையைத் தீர்த்துக்கொள்வதற்காகப் புதைத்து வைத்திருக்கும் பொருளை அவ்வாறு வறுமையுற்ற காலத்தில் எடுத்துக்கொண்டு சுகமடைவது போல் அப்பெருமானைத் துதித்து அவரது அருளைப்பெற்றுத் துக்கத்தையே விளைவிக்கும் பிறவி நோயை அகற்றிக்கொள்ளலாம்.

தான தனத்னன தான தனதன்ன
தான தனதனன—தனதான.

சீற லசடன்வினை காரன் முறைமையிலி
தீமை புரிகபடி பவநோயே

தேடு பரிசிகன நீதி நெறிமுறைமை
சீர்மை சிறிதுமிலி எவரோடுங்

கூறு மொழியதுபொய் யான கொடுமையுள
கோள னறிவிலியு னடிபேணக்

கூள னெனினுமெனை நீயு னடியரொடு
கூடும் வகைமையருள் புரிவாயே!

மாறு படுமவுணர் மாள அமர்பொருது
வાகை புனைவோனே!

மாக முகடதிர வீசு சிறைமயிலை
வாசி யெனவுடைய முருகோனே!

வீறு கலிசைவரு சேவ கனதிதய
மேவு மொருபெருமை யுடையோனே!
வீரை யுறைகுமர தீர தரபழநி
வேல இமையவர்கள் பெருமாளே!

(ப - ரை) மாறு படும் அவுணர் மாள - பகைமை பாராட்டிய அசுரர்கள் அழியுமாறு, அமர் பொருது - போர்செய்து, வாகை உள மவுலி புனைவோனே - (வெற்றியைக் குறிக்கும்) வாகைமாலை பொருந்திய கிரீடத்தைத் தரித்தவனே, மாகம் முகடு அதிர - ஆகாயத்தின் உச்சியான்து அதிரும் வண்ணம், வீசு சிறை மயிலை - விரிக்கும் கலாபத்தையுடைய மயிலை, வாசி என உடைய முருகோனே - குதிரையைப் போன்ற வாகனமாக வுடைய ஞான சொரூபியே, வீறு கலிசை வரு(ம்) சேவகனது இதயம் மேவும் - பெருமை பொருந்திய கலிசை என்னும் நகரத்தில்அவதரித்த காவிரிச் சேவகனுடையஅன்புள்ள மனத்தில் அமர்ந்திருப்பதான, ஒரு பெருமை உடையோனே - ஒப்பற்ற பெருமையை யுடையவனே, வீரை உறை குமர - (காவிரிச் சேவகனது பிரதான பட்டினமாகிய) வீரைமாநக ரில் எழுந்தருளியிருக்கும் குமாரசுவாமியே, தீர தர - தீரம் பொருந்தியவனே, பழநி வேல - பழநிமலையில் எழுந்தருளியிருக்கும் வேலாயுதக் கடவுளே, இமையவர்கள் பெருமாளே - தேவர்கள் நாயகனே, சீறல் அசடன் - (அடியேன்) பெருங் கோபமுள்ள கீழ்மகன், வினைகாரன் - வஞ்சகமுள்ளவன், முறைமை இலி - முறைமைப்படி நடவாதவன், தீமை புரி கபடி - தீய செயல்களையே புரியும் கபடகுண முள்ளவன், பவ நோயே தேடு பரிசி - (மீண்டும் மீண்டும் பிறவித் துயரில் ஆழ்த்தும்) பிறவியென்னும் நோயையே தேடிப் பரிசாகப் பெறுபவன், கன நீதி நெறி முறைமை சீர்மை சிறிதும் இலி - உயர்வான நன்னெறியில் நிற்பதும் சிறப்பும் சிறிதும் இல்லாதவன், எவரோடும் கூறும் மொழி அது பொய் யான கொடுமை உள - எவரோடும் பொய்யான வார்த்தைகளையே சொல்லும் பொல்லாங்குள்ள(வன்), கோளன் - கோளுரைப்பவன், அறிவிலி - அறிவில் லாதவன், உன் அடிபேணு கூளன் - உன்னுடைய திருவடிகளை நினையாதவன் குப்பையைப்போல் அகற்றப்படத் தக்கவன், எனினும் - அடியேன் அப்படிப் பட்டவனாய் இருந்தபோதிலும், எனை நீ உன் அடியரொடு கூடும் வகைமை அருள் புரிவாயே - நீ என்னை உனது அடியார்களோடு சேரும்படி செய்து அருள் புரியவேண்டும்.

(வி - ரை) அண்டமுகடு அதிரும்படி தனது கலாபத்தை விரிக்கும் வல்லமையுள்ள மயிலின் மீதேறி அதை அடக்கிச் செலுத்த வல்லவர் முருகப்பெருமானே யென்று இப்பாடலில் கூறப்பட்டிருப்பதனாலும், அன்று போர்க்களத்தில் ஞானசத்தியாம் வேலாயுதத்தினால் இருகூறுகளாகப் பிளவுபட்ட சூரபதுமனது தேகத்திலிருந்து தோன்றிய சேவல் மயில் இரண்டும் அப்பெருமானைத் தாக்க வந்து அப்போதே அப்பெருமானது கடைக்கண் நோக்கத்தினால் ஞானம்

பெற்று அவருக்கு வாகனமாகவும் கொடியாகவும் அமைந்ததனுலும், முருகப் பெருமான் " ஆணவ முக்கடையு மாவியை விளக்கியனு பூதியடை வித்த தொரு - பார்வைக் காரனும் " ஆகையினுலும், அகங்காரத்தின் சொரூபமான சூரபதுமனது தேகத்தின் இருகூறுகளும் ஆணவத்தை அழிக்கும் முருகப்பெரு மானது கடைக்கணேக்கத்திஞல் ஞானமுற்று அப்பெருமானைச் சுமப்பேன், அப்பெருமானது புகழைக் கூறுவேன் என்னும் முத்திநெறிக்குரிய அகக்காரங் களாக மாறினவென்றும், அகங்காரத்தை யடக்கி முத்தி நெறியில் செலுத்த வல்லது ஞானமேயென்றும்.அவ்வாறு ஞானத்திஞல்முத்திநெறியில் செலுத்தப் பட்ட அகங்காரமானது பெரும் பேற்றை யடையச்செய்யும் என்றும் கொள்ள வேண்டியிருக்கிறது. முருகப்பெருமானது வாகனமாகிய மயிலானது தனது கலாபத்தை வீசுவதனுல் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பின்வரும் கந்தரலங்காரப் பாடலிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

" குசைநெகி ழாவெற்றி வேலோ னவுணர் குடம் குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின் கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு வடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட வத்தூளின் வாரி திடர்பட்டதே. "

அவ்வளவு வலிமைபொருந்திய மயிலையே குதிரையாக முருகப்பெருமான் கொண்டதற்குக் காரணம் அம்மயிலின் உக்கிரமான வேகமேயாகும். சுவாமிகள் அதன் வேகத்தைப்பற்றிப் பல பாடல்களில் விசித்திரமாகக் கூறியிருக்கிருர். அவைகளிற் சில பின்வருமாறு :—

" * * * * இருதிசை இருநாலும்
படியு நெடியன எழுபுண ரியுமுது
திகிரி திகிரியும் வருகென வருதகு
பவுரி வருமொரு மரகத துரகதம் * * "

" அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்த மோகர மயில் * * * * "

" நெடிய வடகுவ டிடியவு மெழுகிரி
நெறுநெ றெனநெரி யவுமுது பணிபதி
நிபிட முடிகிழி யவுநில மதிரவும் விளையாடும
நிகரில் கலபி * * * * "

முருகப்பெருமானிடத்துப் பேரன்புபாராட்டிவந்த கவிசைச்சேவகனுரால் புகழப்பெற்ற வள்ளலாய் இருந்தபடியினுலும், அவருடைய உள்ளத்தில் விரும்பி யமரும் பெருமையை உடையவனே யென்று முருகப்பெருமானைப் புகழ்வத னுலும், முருகப்பெருமானும் தம்மைச் சரண்புகுந்தவர்கள் வேண்டியவற்றை

வரையாது கொடுக்கும் வள்ளலாக இருக்கவேண்டுமென்று அப்பெருமானுக்குச் சுவாமிகள் இப்பாடலில் குறிப்பாகத் தெரிவிக்கின்றார்போலும்.

"பத்தித் துறையிழிந் தானந்த வாரி படிவதினன் புத்தித்தரங்கந் தெளிவ தென்றோ" என்று கந்தரலங்காரத்தில் கூறியுள்ளபடி, பத்தி மார்க்கத்தில் நின்று எம்பெருமானது கருணையையும் அனந்தகலியாண குணங்களையும் பேரழகையும் புகழ்ந்து மனமுருகுவதனால்தான் புத்தியானது தெளிவடையுமாதலாலும், ஒருவர் தமது தற்கால நிலைமையின் கெடுதிகளை அறிந்தாலன்றி மேலான நிலையை அடைவது அசாத்தியமாதலாலும், அவ்வாறு அறிவதற்குப் புத்தியானது தெளிவுற வேண்டுமாதலாலும் மேற்கூறியவாறு பத்திமார்க்கத்தில் நின்று ஆனந்த முற்றுக் களிப்பதற்கு முருகப்பெருமானிடத்து மெய்யன்பு பூண்ட அடியார்களின் கூட்டத்தைச் சேர்வதே மார்க்கம் என்று,

"சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் றொண்டர் குழாஞ்
சாரிற் கதியன்றி வேறிலை காண்"

என்னும் பாடலினால் விளங்குவதனாலும், சுவாமிகள் கசடனாகிய தம்மை அடியார் கூட்டத்தில் சேரச் செய்யும்படி பிரார்த்தித்தன ரென்க

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத்—தனதான.

அணிபட் டணுகித் திணிபட் டமனத்
தவர்விட் டவிழிக் கணையாலும்
அரிசுற் றுகழைத் தவர்பெற் றவளத்
தவன்விட் டமலர்க் கணையாலும்
பிணிபட் டுணர்வற் றவமுற் றியமற்
பெறுமக் குணமுற் றுயிர்மாளும்
பிறவிக் கடல்விட் டுயர்நற் கதியைப்
பெறுதற் கருளைத் தரவேணும்!
கணிநற் சொருபத் தையெடுத் துமலைக்
கனியைக் கணியுற் றிடுவோனே!
கமலத் தயனைப் ப்ரணவத் துரையைக்
கருதிச் சிறைவைத் திடுவோனே!
பணியப் பணியப் பரமர்ப் பரவப்
பரிவுற் றொருசொற் பகர்வோனே!
பவளத் தவளக் கனகப் புரிசைப்
பழநிக் குமரப் பெருமாளே!

(ப - ரை) கனி நல் சொருபத்தை எடுத்து - வேங்கை மரத்தின் நல்ல வடிவத்தைப் பூண்டு, மலை கனியை (க)ன்னி-மலையிற் பிறந்து கனியைப்போல் இனிமையாகவுள்ள வள்ளிநாயகியை விரும்பி, உற்றிடுவோனே - சேர்ந்தவனே, கமலத்து அயனை ப்ரணவத்து உரையை கருதி சிறைவைத்திடுவோனே - பிரணவத்தின் பொருளைப் பெரிதாக மதித்ததனால் (திருமாலின் திருநாபித்) தாமரையில் பிறந்த பிரமதேவரைச் சிறையிலடைத்தவனே, பணி அப்பு அணி அப் பரமர் - பாம்பையும் (கங்கா) நதியையும் (சடாமுடியில்) அணிந்துள்ள பரம்பொருளாகிய சிவபெருமான், பரவ - (உன்னை) வணங்கி நிற்க, பரிவு உற்று ஒரு சொல் பகர்வோனே - அவர்மீது அன்புற்று ஒப்பற்ற பொருளை உரைத்தருளியவனே, பவள தவள கனக புரிசை - பவளம் வெண்மையான முத்து பொன் இவைகளினால் எழுதப்பட்ட மதில்களையுடைய, பழநி குமர பெருமாளே - பழநியென்னும் தலத்தில்குமாரசுவாமியாய் எழுந்தருளியிருக்கும் பெரியோனே, திணிபட்ட மனத்தவர் - கடினமுற்ற மனத்தையுடைய பெண்கள், அணிபட்டு- (மன்மதனது) படை வகுப்புகளாக வகுக்கப்பட்டு, அணுகி - நெருங்கிவந்து, விட்ட - எய்த, விழி கணையாலும்-கண்பார்வையாகிய அம்பினாலும், அரி சுற்று கழைத்தவர் - துளைகளையுடைய புல்லாங்குழலை ஊதிய திருமால், பெற்ற வளத்தவன் - பெற்றெடுத்த கட்டழகு வாய்ந்த மன்மதன், விட்டமலர் கணையாலும் - எய்த புஷ்ப பாணத்தினாலும், பிணிபட்டு - (காம) நோயுற்று, உணர்வற்று - நல்லுணர்ச்சியை யிழந்து, அவம் உற்று - கேடடைந்து, இயமன் பெறும் அக்குணம் உற்று - இயமன் உயிரைக் கைக்கொள்ளும் நிலைமையை அடைந்து, உயிர் மாளும் பிறவி கடல் விட்டு - உயிரை இழக்கச் செய்யும் பிறவியென்னும் சமுத்திரத்தைவிட் டகன்று, உயர் நல்கதியை பெறுதற்கு - மேலான நல்ல கதியாகிய முத்தியை அடியேன் அடையுமாறு, அருளை தரவேணும் - நினது கருணையை அடியேனுக்கு அளிக்கவேண்டும்.

(வி - ரை) முருகப்பெருமான் வள்ளிநாயகியை நாடித் தினைப்புனத்துக்குச்சென்று அத்தேவியாரிடத்தில் தாம் கொண்ட அளவிலாக் காதலைக் கூறிக்கொண்டு இருந்தபோது நம்பி ராஜன் பல வேடர்களோடு அங்கு வந்துகொண்டிருந்ததை வாத்திய முழக்கத்தினால் அறிந்து வேங்கை மரமாக உருமாறி நின்றார் என்பது புராண வரலாறு. அவ்வேங்கை மரமானது அழகு வாய்ந்ததாய்க் குளிர்ச்சியைத் தந்து நின்றதுமன்றி ஜீவனைத் தடுத்தாட்கொள்ள வரும் பரம்பொருள் ஜீவனால் நிந்திக்கப்பட்ட போதிலும் அதற்கு நன்மை புரியும்பொருட்டு அதைவிட்டுப் பிரியாமல் அருகிலேயே யிருந்து சமயம்பார்த்து அதை யாட்கொள்ளுவாரென்னும் உண்மையை உணர்த்திநின்றதனால், முருகப்பெருமான் பூண்டவேங்கைமர வுருவத்தைநல்சொரூபமென்றுகூறப்பட்டிருக்கிறது.பிரணவத்தின்பொருளைப் பிரமதேவர் சொல்லமுடியாமல் தியங்கியபோது அவரைக் குட்டிச்சிறையிலடைத்த முருகப்பெருமான்உலகங்களிலுள்ள சகலஜீவராசிகளை

யும் ஞானம் பொருந்தியவைகளாகப் படைக்கவேண்டி பிரமதேவர் மெய்ஞ்ஞானத்தின் உறைவிடமான பிரணவத்தின் பொருளை அறியவேண்டுவது அத்தியாவசியமெனக் கருதியே அவ்வாறு தண்டித்தாராதலின், "ப்ரணவத் துரையைக் கருதி" என்னும் மொழித்தொடர்ச்சியில், கருதி என்னும் பதத்துக்குப் பெரிதாக மதித்து என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது. விசேஷமான ஞானபோதகமாகிய பிரணவப்பொருளை ஒரு குருவானவர் தமது அன்புக்குப் பாத்திரனை சிஷ்யனுக்கே போதிக்க இசைவாராதலின், "பரிவுற் றெருசொற் பகர்வோனே" எனப்பட்டது. தவளம் என்னும் பதம் வெண்மை என்னும் பொருளையே தருமாயினும், மதில் எழும்புவதற்குப் பவளத்துடனும் பொன்னுடனும் இசைத்துப் பொருத்தத்தக்கது முத்தேயாதலின் அப்பதத்துக்கு முத்து எனப் பொருள் கூறப்பட்டது. மன்மதனது படைமகளிரால் ஆயது. காமவலையிற் சிக்கி விஷய சுகங்களை யனுபவித்து இருவினைகளைப்புரியும் உலகவாழ்க்கை மீண்டும் மீண்டும் ஜீவனைப் பிறவிக்கடலில் ஆழ்த்துமாதலாலும், நற்கதி பெறுவதற்குரிய நெறி முருகப்பெருமானிடத்து அன்பு பாராட்டி அப்பெருமானது அருளைப் பெறுவதாதலாலும், இங்கே சுவாமிகள் அப்பெருமானது அருளை வேண்டுகிறார்.

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன—தனதான.

ஆல காலமெ னக்கொலை முற்றிய
வேல தாமென மிக்கவி ழிக்கடை
யாலு மோகம்வி ளைத்துவி தத்துட — னிளைஞோரை

ஆர வாணைமெ யிட்டும றித்துவி
கார மோகமெ ழுப்பிய தற்குற
வான பேரைய கப்படு வித்ததி — விதமாகச்

சால மாலைய ளித்தவர் கைப்பொருள்
மாள வேசிலு கிட்டும ருட்டியெ
சாதி பேதம றத்தழு வித்திரி — மடமாதர்

தாக போகமொ ழித்துஉ னக்கடி
யானென் வேள்விமு கத்தவ முற்றிரு
தாளை நாளும்வ ழுத்திநி னைத்திட — அருள்வாயே!

வால மாமதி மத்தமெ ருக்கறு
காறு பூளைத ரித்தச டைத்திரு
வால வாயன ளித்தரு ளற்புத — முருகோனே!

மாய மானொடு ரக்கரை வெற்றிகொள்
வாலி மார்புதொ ளைத்திட விற்கொடு
வாளி யேவிய மற்புய னச்சுதன் மருகோனே !

நாலு வேதந விற்றுமு றைப்பயில்
வீணை நாதனு ரைத்தவ னத்திடை
நாடி யோடிகு றத்தித னைக்கொடு வருவோனே !

நாளி கேரம்வ ருக்கைப ழுத்துதிர்
சோலை சூழ்பழ நிப்பதி யிற்றிரு
ஞான பூரண சத்தித ரித்தருள் பெருமாளே !

(ப - ரை) வால மா மதி - சிறந்த பிறைச்சந்திரன், மத்தம் எருக்கு அறுகு ஆறு பூளை தரித்த - ஊமத்தையின் மலர் எருக்கின்பூ அறுகம்புல் கங்காநதி பூளைப்பூ இவைகளை அணிந்த, சடை திரு ஆலவாயன் - சடாமுடியை யுடைய வரும் திரு ஆலவாய் எனும் பெயர் பெற்ற மதுரையில் எழுந்தருளியவருமான சிவபெருமான், அளித்த - தேவர்களுக்கு வரமாக அளித்தருளிய, அற்புத முரு கோனே - ஞானத்தின் உருவமாய் ஞானவாசனை யெங்கும் கமழச்செய்து நிற் பவனே, மாய மானொடு அரக்கரை வெற்றி கொள் - வஞ்சனையாகப் பொன் மானைப்போல் தோன்றிய மாரீசனையும் இராக்கதர்களையும் வென்றவரும், வாலி மார்பு தொளைத்திட வில் கொடு வாளி ஏவிய- வாலியின் மார்பைப் பிளக்குமாறு வில்லில் நாணேற்றி அம்பைப் பிரயோகித்த, மல் புயன் - வலிமையான புயங் களை உடையவரும், அச்சுதன்-அழிவில்லாதவருமான மகாவிஷ்ணுவின், மரு கோனே - மருகனே, நாலு வேதம் நவிற்று முறை பயில் - நான்கு வேதங்களை யும் சொல்லவேண்டிய முறைப்படி சொல்லி இசையோடு பாராயணஞ் செய்பவ ரும், வீணை நாதன்- வீணை வாசிப்பதில் இணையற்றவருமான நாரதமாமுனிவர், உரைத்த வனத்திடை நாடி ஓடி குறத்திதனை கொடு வருவோனே - சொல்லிய வனத்துக்கு விருப்பத்துடன் ஓடிச்சென்று குறவர் மகளாகிய வள்ளிநாயகியைக் கொண்டுவந்தவனே, நாளிகேரம் வருக்கை பழுத்து உதிர் சோலை சூழ் - தேங் காயும் பலாப்பழமும் முதிர்ந்து பழுத்து உதிரப்பெற்ற சோலைகள் சூழ்ந்த, பழநி பதியில் திருஞான பூரண சக்தி தரித்து அருள் பெருமாளே - பழநி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி சிறந்த பரிபூரணமான ஞான சக்தியா கும் வேலாயுதத்தைக் கையில் ஏந்திக் கொண்டிருக்கும் பெரியோனே, ஆல காலம் என - ஆலகாலவிஷம் என்றும், கொலை முற்றிய வேல் அதாம் என- கொலைத் தொழிலில் வல்ல வேலாயுதம் என்றும் சொல்லும்படியுள்ள, மிக்க விழி கடையால் (உ - சாரியை) - நீண்ட கடைக்கண்ணினால், மோகம் விளைத்து - தங்களிடத்தில் மோகம் உண்டாகும்படி செய்து, ஆர ஆணை

மெய் இட்டு - பொருத்தமாக ஆணையிட்டுச் சத்தியம்செய்து, விதத்துடன் இளைஞோரை மறித்து -தெருவில் செல்லும் இளமை பொருந்திய ஆடவர்களைப் பல விதமாகப் பேசி மறித்து, விகார மோகம் எழுப்பி-அவர்கள் மனத்தினில் காமக் கவலை உண்டாகுமாறு மயக்கத்தை விளைவித்து, அதற்கு உறவான பேரை அகப் படுவித்து-அம்மயக்கத்துக்கு இசைந்த குணமுடையவரை அம்மயக்கத்திற் சிக்கும்படி செய்து, அதி விதமாக சால மாலை அளித்து - பலவிதமாக மாயவித்தை களினால் பொய்க்காதல் காட்டி, அவர் கைப்பொருள் மாளவே சிலுகிட்டு மருட்டி (ஏ - அசை)- அவர்கள் கையிலுள்ள பொருள் அழியுமாறு அவர்களுடன் ஊடல் செய்து விளையாடி மயக்கி, சாதி பேதம் அற தழுவி திரிமட மாதர் - ஜாதி பேதமில்லாமல் எவரையும் அணைந்துதிரியும் புத்தியில்லாத விலைமாதர்களுடைய, தாகபோகம்ஒழித்து-கலவியை நாடும் ஆசையையும் கலவி இன்பத்தையும் தகாதவைகளாக நீக்கி.உனக்கு அடியான் என் (என)-உனக்கு அடியவன் என்ற பதவியை அடைந்து, வேள்வி முக தவம் உற்று - ஆராதனை என்னும் ஒருவித தவத்தைப் பூண்டு, இருதாளை நாளும் வழுத்தி நினைத்திட அருள்வாயே-உனது இருபாதங்களையும் அடியேன் தினந்தோறும் புகழ்ந்து தியானிக்குமாறு அருள் புரியவேண்டும்.

(வி-ரை) முருகப்பெருமான், அன்று சரவணப் பொய்கையின் கரையில் தம்மை நோக்கிஅருந்தவம் புரிந்துகொண்டிருந்த சுந்தரவல்லிக்குத்தோற்றமாய், "நீ நிலவுலகத்தில் சாந்த குணத்தினை யுடைய சிவமுனிவரது புத்திரியாகப் பிறந்து வேடர்மகளாக வளர்ந்துகொண்டிரு!யாம் வந்து உன்னை மணந்துகொள் வோம்" என்று கூறியதை நாரதமாமுனிவரால் ஞாபக மூட்டப்பெற்று,வள்ளி நாயகி தினைகாத்துக்கொண்டிருந்த வனத்துக்குச் சென்ற விநோதத்தைச் சுவாமிகள் பின்வருமாறு விசித்திரமாகக் கூறியருளியிருக்கிறார்.

" நாரத னன்றுசு காயமொ ழிந்திட
நாயகி பைம்புன          மதுதேடி
நாணம ழிந்துரு மாறிய வஞ்சக
நாடியெ பங்கய          பதநோவ
மாரச ரம்பட மோகமு டன்குற
வாணர்கு றிஞ்சியின்          மிசையேபோய்
மாமுனி வன்புணர் மானுத வுந்தனி
மானைம ணஞ்செய்த          பெருமாளே ! "

இப்பாடலில் சுவாமிகள் முருகப்பெருமானை 'ஞானபூரண சத்திதரித்தருள் பெருமாளே' என விளித்திருப்பதனால், அப்பெருமான் கையில் தரித்துள்ள வேலாயுதமே ஞானசக்தியென்பது தெளிவாய் விளங்குகிறது. முருகப்பெருமானுடைய மெய்யடியானாகி அப்பெருமானைத் தினந்தோறும் துதித்துத் தியா

னித்து ஆராதிப்பதே சிறந்த தவம் என்பது சுவாமிகள் கருத்து என்று இப்பாடலினால் தெரியவருகிறது.

" இளமகளிர் கலவிதனி லேமூழ்கி யாழுகினு-மிமையாதே
இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும்
இளமையுமு னழகுபுனை யீராறு தோள்நிரையும்
இருபதமு மறுமுகமும் யானோதஞ் ஞானமதை - யருள்வாயே"

என்றபடி, எந்த நிலைமையில் இருந்தபோதிலும் அப்பெருமானைத் துதிக்கும்படியான ஞானத்தைத் தந்தருளவேண்டு மென்று பிரார்த்தித்த சுவாமிகள்,

" உரியதவ நெறியில்நம நாராய ணயவென
ஒருமதலை மொழியளவில் "

என்று பாடி அருளைப்பெறுவதற்குரிய தவநெறி அப்பெருமானது திருநாமங்களை அன்புடன் மொழிந்து துதித்து அப்பெருமானை மனத்திலிருத்துவதே யென்று 'உரியதவநெறி' என்னும் பதங்களினாலும் பிற்பாகத்தில் வரும் பிரகலாதாழ்வாரது சரித்திரத்தினாலும் குறிப்பாக உணர்த்துகிறார். இப்பாடலில் சுவாமிகள் முருகப்பெருமானுடைய அடியவன் என்னும் பதவியை அடையும்படியான பாக்கியத்தைத் தந்தருள வேண்டுமெனப் பிரார்த்திக்கிறார். அப்படிப்பட்ட பதவி எளிதிற் கிடைக்கத்தக்கதன்று என்றும், சாந்தத்தினால் வரும் ஞானத்தினால் அகங்காரத்தை அழித்தால்தான் அப்பதவி கிடைக்குமென்றும் பின்வரும் பாடலில் தெளிவாய்த் தெரிவிக்கிறார்.

" கிரிவாய் விடுவிக் ரமவே லிறையோன்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனமே பொறையா மறிவால்
அரிவா யடியோ டுமகந் தையையே !"

வேள்வி—ஆராதனை. தவம் பலவகைப்பட்டது; அவைகளுள் ஆராதனை ஒருவகை. (உஅ)

தனனதன தானன தானதன தந்த
தனனதன தானன தானதன தந்த
தனனதன தானன தானதன தந்த—தனதான.

இருகனக மாமேரு வோகளப துங்க
கடகடின பாடீர வாரமுத கும்ப
மிணைசொலிள நீரோக ராசலஇ ரண்டு குவடேயோ
இலகுமல ரேவாளி யாகியஅ நங்க
னணிமகுட மோதானெ னமிகவ ளர்ந்த
இளமுலைமி னார்மோக மாயையில்வி ழுந்து தணியாமல்

பெருகியொரு காசேகொ டாதவரை யைந்து
தருவைநிக ரேயாக வேயெதிர்பு கழ்ந்து
பெரியதமி ழேபாடி நாடொறுமி ரந்து நிலைகாணுப்

பிணியினக மேயான பாழுடலை நம்பி
உயிரையவ மாய்நாடி யேபவ நிரம்பு
பிறவிதனி லேபோக மீளவுமு ழன்று திரிவேனோ ?

கருணையுமை மாதேவி காரணிய நந்த
சயனகளி கூராரி சோதரிபு ரந்த
கடவுளுடன் வாதாடு காளிமலை மங்கை யருள்பாலா !

கருடனுடன் வீறான கேதனம்வி ளங்கு
மதிலினொடு மாமாட மேடைகள்து லங்கு
கலிசைவரு காவேரி சேவகனொ டன்பு புரிவோனே !

பரவையிடை யேபாத காசுரர்வி ழுந்து
கதறியிட வேபாக சாதனனு நெஞ்சு
பலிதமென வேயேக வேமயிலில் வந்த குமரேசா !

பலமலர்க ளேதூவி யாரணந வின்று
பரவியிமை யோர்சூழ நாடொறுமி சைந்து
பழநிமலை மீதோர்ப ராபரனி றைஞ்சு பெருமாளே !

(ப - ரை) கருணை உமை - அருளின் வடிவமான உமாதேவியாரும், மா தேவி-மகாதேவியும்,காரணி-உலகங்களுக்கெல்லாம் காரணபூதையாக இருப்பவரும், அநந்த சயன களிகூர் அரி சோதரி-ஆதிசேஷன்மீது பள்ளிகொள்வதனால் மிகுந்த சந்தோஷத்தை யடையும் திருமாலின் சகோதரியும்,புரந்தகடவுளுடன் வாதாடு(ம்) காளி - (திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் உலகங்களெல்லாம் ஆலால விடத்தினால் அழிந்து போகும்படி இருந்தபொழுது அவ்விஷத்தை உண்டுஉலகங்களைக்)காப்பாற்றிய கடவுளாகியசிவபெருமானுடன் வாதுசெய்து நிர்த்தனஞ் செய்த காளியும், மலை மங்கை-பருவதராஜன் புத்திரியுமான பார்வதி தேவியார்,அருள்பாலா-உலகத்துக்குத்தந்தருளியபாலனே!,கருடனுடன்வீறான கேதனம் விளங்கு மதிலினொடு-கருடனது உருவம் பொருந்தியதும் பெருமை பெற்றதுமான கொடியானது ஒளியுடன் பறந்துகொண்டிருக்கும் மதில்களுடன் மா மாடமேடைகள் துலங்கு-சிறந்த மாளிகைகளும் உப்பரிகைகளும் அழகாய்த் தோன்றும், கலிசை வரு காவேரி சேவகனொடு - கலிசை என்னும் நகரத்தில் பிறந்த காவேரிச் சேவகனுற்பால், அன்பு புரிவோனே - அன்பு காட்டியவனே!

பரவை இடையே பாதகஅசுரர் விழுந்து கதறியிடவே - (வீரமகேந்திரபுரியைச் சூழ்ந்திருந்த) சமுத்திரத்தில் பாதகங்களைச் செய்துவந்த அசுரர்கள் விழுந்து கதறுமாறும்,பாகசாதனனும்நெஞ்சுபலிதம்எனவே ஏகவே-தேவேந்திரன் தான் மனத்தில் கருதியது நிறைவேறிற்று என்று கண்டு செல்லுமாறும், மயிலில் வந்த குமரேசா-மயிலின் மீதேறி (போருக்கு) வந்த குமாரசுவாமியே!, பல மலர்களே தூவி ஆரணம் நவின்று பரவி - பலவகைப்பட்ட புஷ்பங்களினால் அருச்சித்து வேத மந்திரங்களை உச்சரித்து வணங்கி, இமையோர் சூழ-தேவர்கள் நின்னைச் சுற்றி நிற்குமாறு, நாள்தொறும் இசைந்து-தினந்தோறும் மனமிசைந்து, பழநி மலை மீது ஓர் பராபரன் இறைஞ்சும் பெருமாளே - பழநிமலையின்மீது ஒப்பற்ற பரம்பொருளான சிவபெருமானால்வணங்கப்பெற்று நிற்கும் பெரியோனே!, இரு கனக மா மேருவோ -பொன்னிறமுள்ள இரண்டு சிறந்த மேரு மலைகளோ, களப துங்க கட கடின பாடீர வார் அமுத கும்பம் இணை - கலவைச் சாந்தை அணிந்து சிறந்த குடத்தை யொத்தவைகளாய் இறுகியவைகளாய்ச் சந்தனம் பூசப்பெற்று கச்சணிந்துள்ள அமுதம் நிரம்பிய கலசங்கள் இரண்டும், சொல் இளநீரோ - உயர்ந்ததாகப் புகழப்படும் இளந்தேங்காய்களோ, கராசல இரண்டு குவடேயோ- யானையின் இரண்டு மத்தகங்களோ, இலகு மலரே வாளியாகிய அநங்கன் அணி மகுடமோ தான் - பிரகாசிக்கும் மலர்களையே அம்புகளாகவுடைய மன்மதன் அணிந்திருக்கும் மகுடங்கள் தாமோ, என மிக வளர்ந்த - என்று வியக்கும்படி பருத்து வளர்ந்துள்ள, இளமுலை மினார் - இளமைபொருந்திய தனபாரங்களை உடையவர்களும் மின்னலைப் போன்றவர்களுமான மாதர்களின்பால், மோகமா யையில் விழுந்து-உண்டாகும் மோகமாகிய மாயையில் சிக்கி, தணியாமல்-மனம் சாந்தம் அடையப் பெறாமல், பெருகி - ஆசை அதிகரிக்கப் பெற்று, ஒரு காசே கொடாதவரை - (இரப்பவர்க்கு) ஒருகாசுங் கொடாதவர்களை, ஐந்து தருவை நிகரே ஆகவே எதிர்புகழ்ந்து,பெரிய தமிழேபாடி நாள்தொறும் இரந்து-பெருமை எதிர்சென்று புகழ்ந்து, பெரிய தமிழே பாடி நாள் தொறும் இரந்து-பெருமை மிகுந்த தமிழ்ப் பாஷையில் கவிபாடித் தினந்தோறும் பிச்சையெடுத்து, நிலை காணா பிணியின் அகமே ஆன பாழ் உடலை நம்பி - தீராத நோய்களுக்கு உறை விடமா யிருப்பதும் அழியக்கூடியதுமான தேகத்தை நிலைத்திருக்கும் பொருளென்று நம்பி, நாடியே உயிரை அவமாய் பவம் நிரம்பும் பிறவிதனிலே போக மீளவும் - மன விருப்பத்துடன் ஜீவனானது வீணகப் பாவம் நிறைந்த பிறவியில் மீண்டும் மீண்டும் சேருமாறு, உழன்று திரிவேனோ-மயக்கமுற்றுத் திரிதல் தகுதியோ ?

(வி - ரை) உமாதேவியார் சிவபெருமானது அருளின் வடிவமேயாதலால் அத்தேவியாரைக் கருணையுமையென்றும், தில்லையில் எம்பெருமானுடன் வாது செய்து நடனம்புரிந்த தில்லைக் காளியானவள் உமாதேவியாரது அம்சமேயாத லால் கடவுளுடன் வாதாடு காளியென்றும் சுவாமிகள் கூறியிருக்கிறார். முரு

கப்பெருமானிடத்து அன்பு பாராட்டி அவரது அருளைப்பெற்ற காவேரிச் சேவகனர் என்னும் மெய்யடியாரது பிரதான நகரமான கலிசை பெரிய நகரமென்றும், அவர் கருடக்கொடியை உடையவரென்றும் இப்பாடலினல் தெரியவருகிறது. 'பராபரனிறைஞ்சு பெருமாளே' என்றதனல், சிவபெருமான் முருகப்பெருமானது மனவருத்தத்தை நீக்கும் பொருட்டுப் பழநி மலைக்குச் சென்று விநாயகருக்குத் தாம் அளித்த மாங்கனியான ஞானக்கனி முருகப்பெருமானே என்று அப்பெருமானிடம் கூறியபொழுது அப்பெருமானை வணங்கினர் என்று கொள்ளலாம். இளமை பொருந்திய பெண்களிடத்துக் கொள்ளும் காதலுக்கு உலக மாயையே காரணமாகும். அம்மாயையின் சக்தியினல் மோகத்தினலுண்டாகும் துன்பங்களெல்லாம் இன்பங்களாகத் தோன்றுமாதலின், காதலானது சிறிதும் குறையாமல் மேன்மேலும் பெருகியே வரும். தான் காதல்கொண்ட பெண்ணின் ஆசைகளைப் பூர்த்தி செய்வதற்காக உலோபிகள்பாற் சென்று,எம்பெருமான் தம்மை யாவரும் புகழ்ந்து உய்வதற்காகவே யளித்த உயர்ந்த தமிழ்ப் பாஷையினல் அவர்களைப் புகழ்ந்து பாடி, பொருள் தரும்படி இரப்பதற்குக் காரணம் யாதெனில், உள்ளவரையில் தீராத பிணிகளினல் பீடிக்கப்பெற்று இறுதியில் அழிந்து போகக்கூடிய தேகத்தை நித்தியமான பொருளாகக் கருதுவதேயா மென்பது புலனகின்றது. (உகூ)

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன—தனதான.

கரிய மேகம தோஇரு ளோகுழல்
அரிய பூரண மாமதி யோமுகம்
கணைகொ லோஅயில் வேலது வோவிழி யிதழ்பாகோ

கமுகு தானிக ரோவளை யோகளம்
அரிய மாமல போதுளி ரோகரம்
கனக மேரது வோகுட மோமுலை மொழிதேனே

கருணை மால்துயி லாலிலை யோவயி
றிடைய தீரொரு நூலது வோவென
கனக மாமயில் போல்மட வாருடன் மிகநாடி

கசட னுய்வய தாயொரு நூறுசெல்
வதனின் மேலென தாவியை நீயிரு
கமல மீதினி லேவர வேயருள் புரிவாயே!

திரிபு ராதிகள் நீறெழ வேமிக
மதனை யேவிழி யால்விழ வேசெயும்
சிவசொ ரூபம கேசுர னீடிய தனயோனே !

சினம தாய்வரு சூரர்கள் வேரற
அமரர் வானவர் வாடிடு தேவர்கள்
சிறைகள் மீளவு மேவடி வேல்விடு முருகோனே !

பரிவு சேர்கம லாலய சீதன
மருவு வார்திரு மாலரி நாரணர்
பழைய மாயவர் மாதவ னார்திரு மருகோனே !

பனக மாமணி தேவிக்ரு பாகரி
குமர னேபதி னாலுல கோர்புகழ்
பழநி மாமலை மீதினி லேயுறை பெருமாளே !

(ப - ரை) திரிபுராதிகள் நீறு எழவே - திரிபுரங்கள் வெந்து சாம்பலாகுமாறும், மிக மதனை (ஏ - அசை) விழியால் விழவே -மிகுந்த திறமையுள்ள மன்மதன் கண்பார்வையினால் அழியுமாறும், செயும் சிவ சொரூப மகேசுரன்-செய்தருளிய மங்கள சொரூபமான பரமேசுவரனுடைய, நீடிய தனயோனே -பெருமைமிக்க புதல்வனே, சினமதாய் வரு சூரர்கள் வேர் அற-கோபமே உருவெடுத்தாற்போல் வந்து எதிர்த்த சூரபதுமன் முதலியோர்கள் வேருடன் அழியுமாறும், அமரர் வானவர் வாடிடு தேவர்கள் சிறைகள் மீளவும் (ஏ - அசை) - அழிவில்லாதவரும் வானுலகத்தில் வசிப்பவரும் (அசுரர்களால் துன்புறுத்தப்பட்டு) சோர்வடைந்தவர்களுமான தேவர்கள் சிறைச்சாலைகளிலிருந்து தப்பி மீண்டு வருமாறும், வடிவேல் விடு முருகோனே - கூர்மை பொருந்திய வேலாயுதத்தைப் பிரயோகித்த ஞான சொரூபியே!, பரிவு சேர் கமல ஆலய சீ (ஸ்ரீ) தனம் மருவுவார் - அன்பு பொருந்திய மனத்தை உடையவளும் தாமரையின் மீது அமர்ந்து இருப்பவளுமான இலக்குமியினுடைய தனபாரங்களை அணைந்துகொள்பவரும், திருமால் அரி நாரணர்-திருமால் ஹரி நாராயணன் என்னும் திருநாமங்களை யுடையவரும், பழய மாயவர் - முன்னொரு காலத்தில் மோஹனாவதாரமெடுத்து மாயஞ் செய்தவரும், மாதவனார் - மாதவருமாகிய மகாவிஷ்ணுவின், திரு மருகோனே -மகிமை மிக்க மருகனே, ப(ன்)னக மாமணி தேவி க்ருபாகரி குமரனே - சிறந்த நாகரத்தினத்தின் திவ்விய ஒளி வீசும் தேவியும் கருணைக்கு உறைவிடமானவருமான உமாதேவியாரின் புத்திரனே, பதினாலு உலகோர் புகழ்-பதினான்கு உலகங்களில் உள்ளவர்களாலும் புகழப்படும், பழநி மாமலை மீதினில் (ஏ - அசை) - பழநியென்னும் சிறந்த மலையின்மேல், உறை பெருமாளே-எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, கரிய மேகமதோ இருளோ குழல் - கூந்தல்

கருநிறமுள்ள (கார்காலத்து) மேகமோ அல்லது அந்தகார இருளோ, அரிய பூரண மா மதியோ முகம் - முகமானது அருமையான ஒளி வீசும் சிறந்த பூரண சந்திரனே, கணை கொலோ அயில் வேலதுவோ விழி-விழியானது அம்புதானே அல்லது கூரிய வேலாயுதமோ, இதழ் பாகோ - உதடுகள் இனிய பாகுதானே, கமுகு தான் நிகரோ வளையோ களம் - கழுத்துக்குப் பாக்குமரம் தான் உவமையாகுமோ அல்லது அது மூங்கிலோ, அரிய மா மலரோ துளிரோ கரம் - கையானது கிடைப்பதற்கரிய சிறந்த புஷ்பமோ அல்லது இலையின் தளிரோ, கனக மேரு அதுவோ குடமோ முலை-தனபாரங்கள் பொன்மயமான மேரு மலைகளோ அல்லது குடங்களோ, மொழி தேனோ - வாயினின்று வரும் சொற்கள் தேனோ, கருணை மால் துயில் ஆல் இலையோ வயிறு - வயிறானது கருணை பொருந்திய மகாவிஷ்ணுவானவர் படுத்துறங்கும் ஆலிலையோ, இடை அது ஈர் ஒரு நூல் அதுவோ-இடையானது ஒரு நூலின் பிளவோ, என - என்று வியந்து கொண்டாடி, கனக மா மயில் போல் மடவாருடன் மிக நாடி - பொன்னிறமுள்ள சிறந்த மயிலையொத்த இளம் பெண்களுடன் மிகுந்த விருப்பத்தோடு சேர்ந்து, கசடனாய் வயதாய் ஒரு நூறு செல்வதனின் மேல் - கீழ் மகனாககாலத்தைக் கழித்து வயது முதிர்ந்து நூறு வயதானதின்மேல், எனது ஆவியை நீ இரு கமல மீதினிலே வரவே அருள்புரிவாயே - எனது ஜீவனானது உனது இருபாத மலர்களிலே வந்துசேரும்படி நீ அருள் புரியவேண்டும்.

(வி-ரை) ஜீவனானது மீண்டும் மீண்டும் பிறவிக்கடலில் வீழ்ந்து உழன்று வருந்துவதற்கு ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மலங்களுமே காரணமாகையினாலும், அவைகள் முற்றிலும் அழிந்தாலன்றி ஜீவன் உண்மையான நன்மையாகிய முத்தியை யடையமுடியா தாகையினாலும், மும்மலங்களின் சொரூபங்களான திரிபுரங்களையும் மன்மதனையும் சிரித்தும் விழித்தும் எரித்து நீறாக்கிய பரமேசுவரனைச் சிவசொரூப மகேசுரன் என்று கூறப்பட்டிருக்கிறது. சிவம் என்னும் பதத்துக்குமங்களம், நன்மைஎன்னும்இருள் பொருள்களுமுண்டு. ஒரு ஜீவன் பெண்களின் காம வலையிற் சிக்கி சிற்றின்ப நுகர்ச்சியிலேயே காலத்தைக் கழித்துக் கடைசியில் மரண தசையை அடையுங்கால் சர்வேசுரராகிய முருகப்பெருமான் வந்து காத்திடாவிடில், அஜ்ஜீவன் இயமனது தூதர்களின் கையிற் சிக்கி இயமலோகத்துக்குக் கொண்டுபோகப்பட்டு அந்த ஜன்மத்தில் அது செய்த பாபங்களுக்காகத் தண்டிக்கப்படும். தனது இறைவனைப் பணிந்து தினந்தோறும் துதித்துப் பூஜிக்காமல் விஷய சுகங்களை யனுபவிப்பதிலேயே வாணாளைக் கழித்த அஜ்ஜீவனுக்கு இயமராஜன் விதிக்கும் தண்டனை மிகவும் கொடுமையானதாகவே யிருக்குமாதலின், அப்படிப்பட்ட ஜீவனாகத் தம்மைப் பாவிக்கும் சுவாமிகள் அத்தண்டனையினின்றும் தம்மைக் காத்தருளும்படி வேண்டுகிறார்.

“ கருவியத னூலெ றிந்து
சதை கள்தனை யேய ரிந்து
கரியபுன லேசொ ரிந்து விடவேதான்

கழு முனையி லேயி ரென்று
விடுமெனும வேளை கண்டு
கடுகிவர வேணு மெந்தன் முனமேதான்”

என்னும் பிரார்த்தனை சுவாமிகளது கருத்தை நன்கு விளக்குகிறது. (௯௦)

தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா
தந்தத் தனதன தனனா தனனா—தனதான.

கொந்துத் தருகுழ லிருளோ புயலோ
விந்தைத் தருநுதல் சிலையோ பிறையோ
கொஞ்சிப் பயில்மொழி அமுதோ கனியோ விழிவேலோ

கொங்கைக் குடமிரு கரியோ கிரியோ
வஞ்சிக் கொடியிடை துடியோ பிடியோ
கொங்குற் றுயரல்கு லரவோ ரதமோ எனுமாதர்

திந்தித் திமிதிமி திமிதா திமிதோ
தந்தித் திரிகிட கிடதா எனவே
சிந்திப் படிபயில் நடமா டியபா விகள்பாலே

சிந்தைத் தயவுகள் புரிவே னுனையே
வந்தித் தருள்தரு மிருசே வடியே
சிந்தித் திடமிகு மறையா கியசீ ரருள்வாயே!

வெந்திப் புடன்வரு மவுணே சனையே
துண்டித் திடுமொரு கதிர்வே லுடையாய்
வென்றிக் கொருமலை யெனவாழ் மலையே தவவாழ்வே!

விஞ்சைக் குடையவர் தொழுமே வருவாய்
கஞ்சத் தயனுட னமரே சனுமே
விந்தைப் பணிவிடை புரிபோ தவர்மே லருள்கூர்வாய்!

தொந்திக் கணபதி மகிழ்சோ தரனே
செங்கட் கருமுகில் மருகா குகனே
கொந்தக் குறமகள் கணவா திறல்சேர் கதிர்காமா!

சொம்பிற் பலவள முதிர்சோ லைகள்சூழ்
இஞ்சித் திருமதிள் புடைசூ ழருள்சேர்
துங்கப் பழநியில் முருகா இமையோர் பெருமாளே!

(ப-ரை) வெந்திப்புடன் வரும் அவுணேசனை - கோபத்துடன் எதிர்த்து வந்த அசுர அதிபதியான சூரபதுமனை, துண்டித்திடும் ஒரு கதிர் வேல் உடையாய் - இரு கூறுகளாகப் பிளந்த ஒப்பற்றதும் பேரொளி வீசுவதுமான வேலாயுதத்தை உடையவனே, வென்றிக்கு ஒரு மலை என வாழ் மலையே - வெற்றிக்கு ஒரு உதாரணமாக எடுத்துக் காட்டும்படி உள்ள பெரியவனே, தவ வாழ்வே - தவத்தினால் அடையும் பெரிய சுகமே, விஞ்சைக்கு உடையவர் தொழவே வருவாய் - ஞானத்துக்குக் கர்த்தாவான சிவபெருமானால் வணங்கப் பெற்றவனே, கஞ்சத்து அயனுடன் - தாமரையில் பிறந்த பிரமதேவரும், அமரேசனும் - தேவர்களுக்கு இறைவனான இந்திரனும், விந்தை பணிவிடை புரிபோது - கண்டோர் வியக்கும்படி உனது குற்றேவல்களைச் செய்தபொழுது, அவர் மேல் அருள் கூர்வாய் - அவர்கள்பால் பெருங்கருணை காட்டியவனே, தொந்தி கணபதி மகிழ் சோதரனே - பெரிய வயிறுடைய விநாயகக் கடவுள் நின்னைக் கண்டு களிப்படையும்படி அவருக்குச் சகோதரனாய் அவதரித்தவனே, செம் கண் கருமுகில் மருகா - (செந்தாமரையைப் போல்) சிவந்த கண்களையும் மேகத்தைப் போல் கருத்த மேனியையும் உடைய திருமாலின் சகோதரியின் புத்திரனே, குகனே - மெய்யடியார்களுடைய இதயமான குகையில் வசிப்பவனே, சொந்தகுறமகள் கணவா - (மாமன் மகளாய்) உனக்குச் சொந்தமானவரும் குறக்குலத்தில் வளர்ந்தவருமான வள்ளிநாயகியாரது நாயகனே, திறல் சேர் கதிர் காமா - வலிமை பொருந்தியவனாய்க் கதிர்காமம் என்னும் சிறந்த தலத்தில் எழுந்தருளியிருப்பவனே, சொ(சோ)ம்பு இல் பல வளம் முதிர் சோலைகள் சூழ் - கொஞ்சமும் குறைவடையாமல் அனேக வளப்பங்கள் மிகுந்துள்ள சோலைகளினால் சூழப்பெற்றதும், இஞ்சி திருமதிள் புடை சூழ் - வாவிகளினாலும் அழகிய மதில்களினாலும் நாற்புறங்களிலும் சூழப்பெற்றதும், அருள்சேர் - நினது அருள் எளிதிற் கிடைக்கக் கூடியதாய்ப் பொருந்தியிருப்பதும், துங்க - மிகவும் சிறந்ததுமான, பழநியில் முருகா - பழநியென்னும் திருத்தலத்தில் ஞான வாசனை வீசி நிற்பவனே, இமையோர் பெருமாளே - தேவர்களுடைய நாயகனே, கொந்து தரு குழல் இருளோ புயலோ - அடர்த்தியாய் வளர்ந்துள்ள கூந்தலானது அந்தகாரமோ அல்லது பெருமழையைப் பொழியவரும் மேகமோ, விந்தை தரு நுதல் சிலையோ பிறையோ - (காண்போர் மனத்தில்) ஆச்சரியத்தை விளைவிக்கும் புருவமானது வில்லோ அல்லது பிறைச்சந்திரனோ, கொஞ்சி பயில் மொழி அமுதோ கனியோ - கொஞ்சிப் பேசும் வார்த்தை அமுதமோ அல்லது பழமோ, விழி வேலோ - விழியானது வேல்தானோ, கொங்கை குடம் இருகரியோ கிரியோ -

குடத்தை ஒத்த தனபாரங்கள் இரண்டும் மர வயிரங்களோ அல்லது மலைகளோ, வஞ்சிக் கொடி இடை துடியோ பிடியோ-வஞ்சிக் கொடியைப்போல் மெல்லிய தான இடையானது உடுக்கையோ அல்லது கைப்பிடி தானோ, கொங்கு உற்று உயர் அல்குல் அரவோ ரதமோ-மதநீரினால் நிரம்பப்பெற்று உயர்ந்துள்ள அல்குலானது பாம்பின் படமோ அல்லது தேரின் தட்டோ, எனும் மாதர் - என்று எண்ணி அதிசயிக்கும்படியான அங்கங்களையுடைய மாதர்கள், திந்தித் திமிதிமி திமிதா திமிதோ தந்தித் திரிகிட கிடதா எனவே சிந்திப்பு அடி பயில் நடம் ஆடிய பாவிகள்பால் - திந்தித் திமிதிமி என்னும் தாளங்களைக் கருதி அவற்றிற்குப் பொருத்தமாக அடிவைத்து நடனஞ் செய்கின்ற பெண்களிடத்தில், சிந்தை தயவுகள் புரிவேன்-எண்ணத்தையும் தயவையும் காட்டும் அடியேன், உனையே வந்தித்து - உன்னையே வழிபட்டு, அருள் தரும் இரு சேவடியே சிந்தித்திட - நினது அருளை அடியேனுக்கு ஊட்டத்தக்க நினது அழகிய பாதாரவிந்தங்கள் இரண்டையும் தியானிக்குமாறு, மிகு மறையாகிய சீர் அருள்வாயே - மிகவும் இரகசியமான சொல்லாகிய பிரணவப் பொருளை அடியேனுக்கு உரைத்தருள வேண்டும்.

(வி - ரை) அகங்கார சொரூபியான சூரபதுமன், தேவர்களையும் வைதிக மார்க்கத்தில் நிற்பவர்களையும் தன்னிச்சைப்படி துன்புறுத்தி வந்ததைத் தடுக்க முருகப்பெருமான் வந்ததைக் கண்டு கோபங்கொண்டு, தான் தருமநெறி தவறிய தனால் முன்னம் சிவபெருமான் தனக்கு வரமளித்தபொழுது கூறியருளிய சத்தியவாக்கின்படியே சிவசத்தியானது தன்னை அழிக்க வந்ததென்பதை உணராமற் போனான். கோபத்தை எழுப்பிய அகங்காரத்துக்கு அஞ்ஞானமே காரணமாதலாலும், "கோபமானவை அவிய நற்பொறை யெனுந திப்பிர ளயமிறைப்பன *** மவுன நிர்க்குண சிவம யத்திரு ஞான வேழமே" என்று திருஞான வேழ வகுப்பில் கூறியுள்ளபடி கோபமான தீயை அவிப்பதற்கு வேண்டிய சாந்தமென்னும் ஆற்றின் பெருக்கான நீரைக் கொண்டுவந்து இறைக்க வல்லது ஞானமேயாதலாலும், முருகப்பெருமான் அவனது அஞ்ஞான இருளை அகற்ற வல்ல ஒளி வீசும் ஞானசத்தியாம் வேலாயுதத்தைச் சூரபதுமன்மீது பிரயோகித்தார். பிரகிருதி சம்பந்தத்தினால் வரும் சகலவிதமான மலங்களையும் மயக்கங்களையும் என்றும் தவறாமல் ஞானம் வென்று அகற்றிவிடுமாதலால், ஞானசொரூபியாகிய முருகப்பெருமானை வெற்றிக்கு ஓர் உபமானமாகக் கூறப்பட்டிருக்கிறது.

"உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளெனவுலக
மொருவிவரு மனுபவநல் - சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசெருகி
யுணர்வுவிழி கொடுநியதி - தமதாடு நாடுவதும்,
உருவெனவு மருவெனவு முளதெனவு மிலதெனவு

முழலுவன பரசமய - கலையார வாரமற
உரையவிழ வுணர்வவிழ வுளமவிழ வுயிரவிழ
வுளபடியை யுணருமவ - ரநுபூதி யானதுவும்
* * *
முருகமழ் வதுமகில முதன்மைதரு வதும்விரத
முனிவர்க்கு தரியதவ - முயல்வார்த போபலமும் ”

என்று சொல்லப்பட்ட இவையாவும் முருகப்பெருமானது பாதாரவிந்தங்களே யாதலால், அப்பெருமானைக் சுவாமிகள் தவவாழ்வே என்று அழைத்தார் போலும். (நக)

தனனத் தனதன தானன தானன
தனனத் தனதன தானன தானன
தனனத் தனதன தானன தானன—தனதான.

கலகக் கயல்விழி போர்செய வேள்படை
நடுவிற் புடைவரு பாபிகள் கோபிகள்
கனியக் கனியவு மேமொழி பேசிய விலைமாதர்

கலவித் தொழிலவை மேயினி தாமென
மனமிப் படிதின மேயுழ லாவகை
கருணைப் படியெனை யாளவு மேயருள் தரவேணும் !

இலவுக் கிளையெனும் வாய்வளி நாயகி
குழையத் தழுவிய மேன்மையி னுயர்
இசைபெற் றருளிய காமுக னாகிய வடிவோனே !

இதமிக் கருமறை வேதிய ரானவர்
புகலத் தயவுட னேயருள் மேன்மைகள்
இசையத்தருமறு கூலவ சீகர முதல்வோனே !

நிலவைச் சடைமிசை யேபுனை காரணர்
செவியிற் பிரணவ மோதிய தேசிக
நிருதர்க் கொருபகை யாளியு மாகிய சுடர்வேலா !

நிமலக் குருபர ஆறிரு பார்வையும்
அருளைத் தரஅடி யார்தமை நாடொறும்
நிகரற் றவரென வேமகிழ் கூர்தரு முரியோனே !

பலவிற் கனிபணை மீறிய மாமர
முருகிற் கனியுட னேநெடு வாளைகள்
பரவித் தனியுதிர் சோலைகள் மேவிய வகையாலே

பழனத் துழவர்க ளேரிட வேவிளை
கழனிப் புரவுகள் போதவு மீறிய
பழநிச் சிவகிரி மீதினி லேவளர் பெருமாளே!

(ப - ரை) இலவு கிளை எனும் வாய் வ(ள்)ளி நாயகி குழைய - கோங்கு இலவமரத்தின் மலருக்கு உறவு என்று சொல்லுமாறு அதை ஒத்திருக்கும் சிவந்த வாயினையுடைய வள்ளிநாயகியார் மனமுருகுமாறு, தழுவிய மேன்மையினால்-அந்நாயகியை அணைந்துகொண்ட மேன்மை பொருந்திய செய்கையினால், உயர் இசைபெற்று அருளிய - மேன்மையான கவிகள் உன்மீது பாடப்பெற்று (அப்பாடல்களின் உதவியினால் உலகத்தோர் உய்யுமாறு) அருள் புரிந்தவனும், காமுகனாகிய வடிவோனே - காமம் மிகுந்த விடனுடைய உருவத்தைப் பூண்டவனுமானவனே, இதம் மிக்க அரு மறை வேதியரானவர் புகல-மிகவும் இனிமை பொருந்திய வேதத்தை வேத மோதிய பிராமணர்கள் ஓதி உன்னைப் புகழும் போது, தயவுடனே அருள் மேன்மைகள் இசைய தரும் அனுகூல-தயைபுரிந்து நினது கிருபையையும் பலமேலான நன்மைகளையும்பொருத்தமாகத் தந்தருளும் உபகாரியே, வசீகர - மனத்தைக் கவர்ந்து கொள்பவனே.முதல்வோனே-சகல ஜகங்களுக்கும் ஆதிகாரணனே, நிலவை சடைமிசை (ஏ - அசை) புனை-சந்திரனைச் சடாமுடியின்மீது அணிந்துகொண்டிருப்பவரும், காரணர் - சகல வுலகங்களுக்கும் ஆதிகாரணராய் இருப்பவருமான சிவபெருமானது,செவியில் பிரணவம் ஓதிய தேசிக - செவிக்குள் பிரணவத்தின் பொருளை உபதேசித்தருளிய குருவே, நிருதர்க்கு ஒரு பகையாளி (உம் - அசை) ஆகிய -அசுரர்களை எதிர்க்க வல்ல ஓரே சத்துருவாய், சுடர் வேலா - ஒளிவீசும் ஞானசக்தியாம் வேலாயுதத்தைப் படையாகக்கொண்ட கடவுளே, நிமல குருபர - மலங்களினால் பீடிக்கப் படாதவனாகவும் பரம்பொருளை அடையும் மார்க்கத்தைப் போதிக்கவல்லவனாகவுமிருக்கும் குருவே, ஆறு இரு பார்வையும் அருளை தர-பன்னிரண்டு கண்களும் கருணை பொழியுமாறு பார்த்து, நாள் தொறும் அடியார் தமை நிகர் அற்றவர் எனவே மகிழ் கூர் தரும் உரியோனே-தினந்தோறும் நினது மெய்யடியார்களை இணையற்றவர்களாகக் கருதி மிகவும் மனமகிழும் ஆப்த சிநேகிதனே, பலவின் கனி - பலாமரத்தின் பழம், பணை மீறிய மாமரம் முருகு இன் கனி உடனே - மிகவும் உயர்ந்த மாமரத்தினுடைய வாசனையும் இன்சுவையும் பொருந்திய பழம் இவைகளுடனே, நெடு வாளைகள் பரவி தனி உதிர் - நீண்ட வாளை மீன்கள் கலந்து (ஒவ்வொன்றும் தன்னுடைய பலத்தினாலேயே) தனித்தனியாக (அக்கனிகளை) உதிர்க்கும், சோலைகள் மேவிய வகையாலே - சோலைகள் பொருந்தி

யிருக்கும் தன்மையினுலே, பழனத்து உழவர்கள் ஏர் இடவே - வயலில் உழவர் கள் ஏர்களைப்பூட்டி உழுவதனுல், விளை கழனி புரவுகள்-விளையும் நஞ்சைவயல் புரவுகள், போதவும் மீறிய - மிகவும் நீண்டு அதிகமாயுள்ள, பழநி சிவகிரி மீதி னில் (ஏ - அசை) வளர் பெருமாளே - (பழம் + நீ) பழநி என்று காரணப் பெயர்பெற்ற சிவகிரியின் மீதில் எழுந்தருளியிருக்கும் பெருமானே, கலக கயல் விழிபோர் செய - (ஆடவர் மனத்தில்) குழப்பத்தை உண்டுபண்ணத்தக்கவை களும் கயல்மீனை ஒத்தவைகளுமான விழிகள்(ஆடவர் மனத்தைத்தாக்கிப்) போர் செய்ய, வேள்படைநடுவின் புடை வரு-மன்மதனது சேனைகளான பெண்களின் கூட்டத்தின் நடுவே வரும், பாபிகள் கோபிகள் கனியக் கனியவும் (ஏ - அசை) மொழி பேசிய விலைமாதர் - பாபத்தைச் செய்பவர்களும் (பொருளில்லாதா ரிடத்து) கோபத்தைக் காட்டுபவர்களும் (பொருள் உள்ளவரிடத்து) மனங்கனி யும் வண்ணம் இனிய மொழிகளைப் பேசுபவர்களுமான விலைமாதர்களுடைய; கலவி தொழில் நலமே இனிது ஆம் என-புணர்ச்சியான செய்கையில் அடையும் இன்பமே இனிய சுகமென்று எண்ணி, மனம் இப்படி தினமே உழலா வகை - அடியேன் மனமானது அவ் வெண்ணத்துடனேயே தினந்தோறும் அலைந்து கலங்கா வண்ணம், கருணைப்படி - நினது கருணையின் இயல்புக்கு ஏற்க, எனை ஆளவும் (ஏ - அசை) அருள் தரவேணும் - அடியேனை நினது அடிமையாக்கி ஆண்டுகொள்ள அருள் புரியவேண்டும்.

(வி-ரை)முருகப்பெருமான் வேடர்குலத்தில் வளர்ந்து தினைப்புனத்தைக் காத்துத் தனிமையுற்றிருந்த வள்ளிநாயகியை நாடிச்சென்று அத்தேவியாரைத் தடுத்தாட் கொண்டதனுல், அப்பெருமானிடத்து அன்பு பூண்டு அவரை அடைய வேண்டுமென்ற ஆசையை மிகுதியாக உடையவரா யிருக்கும் ஒவ் வொருவரையும் அப்பெருமான் அவ்வாறே தடுத்தாட்கொள்வார் என்னும் உண்மை யாவரும் அறியப் பகிரங்கமாயிற்று. (இதையே சுவாமிகள்,

"கின்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்றுகல் யாணமுயன்றவனே"-கந்தரலங்காரம்

உலகமெங்கும் நிறைந்திருந்த அஞ்ஞானத்தை அகற்றுவதற்காகவே அவதரித்த ஞானசொரூபியாகிய முருகப்பெருமான் தமது கருணையானது எல்லையற்றதென் பதை உலகெலாம் அறியும்படி உணர்த்தும் பொருட்டுத் தமது மாமன் மகளாகிய சுந்தரவல்லியை வேடர்குலத்தில் வளரச்செய்து அத்தேவியாரின்மீது காமமுற் றுத் தியங்கி அத்தேவியாரைக் கலந்துகொண்டது போல் ஒரு திருவிளையாட லைச் செய்தருளினர். இரக்கமற்றுக் கொடிய தொழிலையே புரிந்துவரும் வேடர் களையொத்த ஐம்புலன்களின் கையிற்சிக்கித் தியங்கும் ஒவ்வொரு ஜீவனையும் அந்த எல்லையற்ற கருணையே உய்யுநெறியிற் சேர்க்கக்கூடுமாதலால், எம்பெரு

மானைச் சிறந்த கவிகளினால் புகழ்ந்துள்ள நாவலர்கள் எல்லோரும் வள்ளிநாயகியைத் தடுத்தாட்கொண்ட அக்கருணையையே புகழ்ந்து பாடியிருக்கிறார்கள். உதாரணமாக :—



“ வேடர்செ ழுந்தினை காத்திதண்
மீதிலி ருந்தபி ராட்டிவி
லோசன அம்புக ளாற்செயல்—தடுமாறி

மேனித ளர்ந்துரு காப்பரி
தாபமு டன்புன மேற்றிரு
வேளைபு குந்தப ராக்ரம—மதுபாடி

நாடறி யும்படி கூப்பிடு
நாவலர் தங்களை யார்ப்பதி
ஞாலுல கங்களு மேத்திய—இருதாளில்”—; திருப்புகழ்

“பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பி னான்மெல்ல மெல்ல வுள்ள
அரும்புந் தனிப்பர மானந்தம்”—கந்தரலங்காரம்

உலகத்தில் புலன்களை வெல்லமுடியாமல் தத்தளிக்கும் ஒவ்வொரு ஜீவனும் தன்மீது அளவிலாக் காதலுடையவராய்த் தன்னைக் காப்பதற்குச் சித்தமாயிருக்கும் நாயகன் முருகப்பெருமானே என்னும் உண்மையை அறிந்து அப்பெருமானது பாதாரவிந்தங்க ளிரண்டையும் வணங்கினால்தான் நற்கதி பெறமுடியும் என்பதைச் சுவாமிகள் பின்வரும் பாடலில் உணர்த்துகிறார்.

“ இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவற
இதய முருகியெ யொருகுள பதமுற மடலூடே

யெழுத அரியவள் குறமக ளிருதன
கிரியில் முழுகின இளையவ னெனுமுரை
யினிமை பெறுவது மிருபத மடைவது மொருநாளே !”;

இப்பாடலில் வேதியர் வேதங்களை யோதிய காலத்து அவர்களுக்கு முருகப்பெருமான் களிப்புடன் தமது அருளையும் மேன்மையையும் அளிக்கிறார் என்று கூறப்பட்டிருப்பதனால், வேதநாயகராகியஅப்பெருமானுக்குவேதகீதம் மகிழ்ச்சியைத் தருமென்பது தெளிவாய் விளங்குகிறது. அறிவை யறிந்த ஞானிகளே ஞான சொரூபியாகிய முருகப்பெருமானது மெய்யடியார்களாதலால், அப்பெருமான் தமது அடியார்களை நிகரற்றவர்களெனக் கருதி மகிழ்ச்சியுற்றார் போலும். வயல்களிலுள்ள வாளைமீன்கள் அருகிலுள்ள பலாமரங்களின்மீதும் மாமரங்க

ளின்மீதும் பாய்ந்துசென்று ஒவ்வொன்றும் அவைகளிலுள்ளபழங்களைத் தனித் தனியாக உதிரச்செய்யும் வலிமையுடையவைகளாயிருந்தன என்பதனால், நாடுநீர் வளப்பமிக்கது என்பது தெரியவருகிறது. நீர்வளமிகுதியாக விருந்ததனால்தான் நன்செய் வயல்கள் அத்தலத்தில் மிகவும் அதிகமாய்இருக்கின்றன. கருணை வள்ள லாகிய முருகப்பெருமான் தம்மைச் சரண் புகுபவர் எவ்வளவு பாபிகளா யிருந்த போதிலும், அவர்கள் செய்த பாபங்களைக் கருதாமல், அவர்கள் நிர்க்கதியாகத் தம்மைச் சரண்புகுந்ததையே பெரிதாகமதிக்கு அவர்களை ஆட்கொள்ளுவா ராதலால், "கருணைப்படி யெனை யாளவுமே யருள் தரவேணும்" என்று கூறப் பட்டிருக்கிறது. (கூஉ)

தனனதன தந்த தத்த தானன
தனனதன தந்த தத்த தானன
தனனதன தந்த தத்த தானன—தனதான.

நிகமமெனி லொன்று மற்று நாடொறு
நெருடுகவி கொண்டு வித்தை பேசிய
நிழலர்சிறு புன்சொல் கற்று வீறுள பெயர்கூறு

நெளியமுது தண்டு சத்ர சாமர
நிபிடமிட வந்து கைக்கு மோதிர
நெடுகியதி குண்டலப்ர தாபமு முடையோராய்

முகமுமொரு சம்பு மிக்க நூல்களு
முதுமொழியும் வந்தி ருக்கு மோவெனில்
முடிவிலவை யொன்று மற்று வேறொரு திறமாகி ;

முறியுமவர் தங்கள் வித்தை தானிது
முடியவுனை நின்று பத்தி யால்மிக
மொழியும்வளர் செஞ்சொல் வர்க்க மேவர அருள்வாயே !

திருதிகென மண்ட விட்ட தீயொரு
செழியனுடல் சென்று பற்றி யாருகர்
திகையினமண் வந்து விட்ட போதினு மமையாது

சிறியகர பங்க யத்து நீறொரு
தினையளவு சென்று பட்ட போதினில்
தெளியஇனி வென்றி விட்ட மோழைகள் கழுவேற

மகிதலம ணைந்த அத்த யோனியை
வரைவறம ணந்து நித்த நீடருள்
வகைதனைய கன்றி ருக்கு மூடனை மலரூபம்

வரவரம னந்தி கைத்த பாவியை
வழியடிமை கொண்டு மிக்க மாதவர்
வளர்பழநி வந்த கொற்ற வேலவ பெருமாளே !

(ப - ரை) திகு திகு என மண்ட விட்ட தீ - உக்கிரமாகப் பற்றி எரிக்கும் படி ஏவிவிட்ட தீயானது, ஒரு செழியன் உடல் சென்று பற்றி - சென்று பாண்டியனுடைய தேகத்தைப்பற்றி (எரிக்கத் தொடங்கி), ஆருகர் திகையின் - ஆருகத மதத்தினராகிய சமணர்கள் பாண்டியன் தேகத்தின் எப்பாரிசத்திலுள்ள சுரத்தைத் தீர்க்க வேண்டுமென நியமிக்கப்பட்டதோ அப்பாரிசத்தில், அமண் வந்து விட்ட போதினும் அமையாது - சமண மதத் தலைவர்கள் வந்து தங்கள் மந்திரங்களைப் பிரயோகித்த போதிலும் (எரிக்கும்)சுரநோய் அடங்காமல், சிறிய கர பங்கயத்து நீறு ஒரு தினை அளவு சென்று பட்ட போதினில் - (நினது) தாமரையையொத்த சிறிய கையிலிருந்த திருநீறு ஒரு தினை யளவு போய் (அப் பாண்டியனுடைய தேகத்தில்) பட்ட மாத்திரத்தில், தெளிய - (சுரநோயானது) நீங்கிவிட்டதனால், இனி - அதன் பிறகு, வென்றி விட்ட மோழைகள் கழு ஏற - ஜயத்தினால் கைவிடப்பட்ட மொட்டைத் தலையர்களான சமணர்கள் கழுவில் ஏறும் வண்ணம், மகிதலம் அணைந்த அத்த - பூமியில் வந்து அவதரித்த கடவுளே, யோனியை வரைவு அற மணந்து - அளவில்லாமல் பெண்களோடு சேர்ந்து, நித்தம் - எப்போதும், நீடு அருள் வகைதனை அகன்று இருக்கும் மூடனை - அழிவில்லாத அருள் மார்க்கத்தை அணுகாமல் விலகியிருக்கும் புத்தியீனனும், மல ரூபம் வரவர - இருவினையான மலங்களின் வடிவமான தேகமானது மீண்டும் மீண்டும் வரப்பெற்று (ஓயாமற் பிறப்பதனால்) மனம் திகைத்த பாவியை - (பிழைக்க வழியறியாமல்) மனம் கலங்கித் தியக்கமுற்ற பாவியுமான அடியேனை, வழி அடிமை கொண்டு - முறைமைப்படி உனக்குரிய அடிமையாகச் செய்துகொண்டு, மிக்க மாதவர் வளர் - மகிமை மிகுந்த சிறந்த தவசிகள் மேன்மையுறுமாறு அமர்ந்துள்ள (தலமாகிய), பழநி வந்த கொற்ற வேலவ பெருமாளே - பழநியில் வந்து எழுந்தருளியிருக்கும் வெற்றி வேலாயுதக் கடவுளாகிய பெரியோனே!, நிகமம் எனில் ஒன்றும் அற்று-வேதம் (ஓதுவது)என்பது ஒன்றுமில்லாமல், நாள் தொறும் - தினந்தோறும், நெருடு கவி கொண்டு - கஷ்டப்பட்டுச் சொற்களைப் பொருத்திய பாடல்களை இயற்றிக் காட்டி, வித்தை பேசிய - தாங்கள் வித்துவான்களென்று பெருமை பேசிய, நிழலர் - (உண்மையாகவே கல்வியில்லாதவர்களாய், கல்வியுடையவர்களின்) சாயை போன்றவர்களாய், சிறு புல் சொல் கற்று - சிறியவைகளும் அற்பமானவைகளுமான சில

சொற்களை மட்டும் கற்றுக்கொண்டு, வீறு உள பெயர் கூறு-பெருமை பொருந்திய பட்டங்களை (தாமே வைத்துக்கொண்டு) எல்லோரிடமும் கூறி- நெளிஅ முதுதண்டு- முன்னமே வளைக்கப்பட்ட பழைய மூங்கிலினால் செய்யப்பட்ட பல்லக்கு, சத்ரம் சாமரம் நிபிடமிட வந்து -குடை கவரி இவைகள் பல கூட்டமாய் நெருங்கிவர விஜயம்செய்து, கைக்கு மோதிரம் நெடுகி - கைவிரல்களில் மோதிரங்களை அடுக்கடுக்காய் அணிந்து, அதி குண்டலப்ரதாபம் உடையோராய்-அநேககுண்டலங்களைக் காதுகளில் அடையும்படியான பெருங்கீர்த்தியுடையவர்களாய், முகமும் ஒரு சம்பு மிக்க நூல்களும் முது மொழியும் - வடமொழியின் ஒருவகையான சம்பு முதலிய மேலான நூல்களும் பெரியோர்கள் கூறியுள்ள பழைய வசனங்களும், வந்திருக்குமோ எனில்-அவர்கள் அறிவார்களோ என்று கேட்கும்பொழுது, முடிவில் அவை ஒன்றும் அற்று - கடைசியில் அவைகளில் ஒன்றும் அறியாதவர்களென வெளியாகி, வேறு ஒரு நிறமாகி-(பகட்டு ஒழிந்து) சாயம் வெளுத்து, முறியும் அவர் தங்கள் வித்தைதான் இது முடிய -தோற்றுப் பின்னிடையும் (புன்மையான) கவிகளின் கபட வித்தையானது ஒழிய, உனை நின்று பத்தியால் மிகமொழியும் - நிலைமைபெற்ற மனத்துடன் நின்னிடத்துள்ள பக்தியினால் உன்னை மிகவும் புகழ்வதற்குரிய, வளர் செம்சொல் வர்க்கமே, மேன்மேலும் பெருகும் தக்க மொழிகளின் வகையே, வர அருள்வாயே - அடியேனது நாவில் உதிக்கும்படி அருள் புரியவேண்டும்.

(வி-ரை) பாண்டிய நாட்டிலே கூன் பாண்டியன் என்னும் மன்னன் சமணர்களுடைய சொற்களால் மயங்கிச் சைவசமயத்தைவிட்டு விலகி சமண சமயத்தைத் தழுவ,குடிகளெல்லோரும் அரசனைப்போலவே சமணசமயத்திற் சேர்ந்து கொண்டார்கள். அம் மன்னவனது பத்தினியான மங்கையர்க்கரசியாரும் மந்திரியான குலச்சிறையாரும் மட்டும் அரசனுக்குத் தெரியாமல் சிவபெருமானது பாத மலர்களில் உள்ள அன்பு குறையாமல் பாண்டியனைச் சைவசமயத்துக்கு மீட்டுத் தரும்படி இறைவனைப் பிரார்த்தித்து வந்தனர். பிறகு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருமறைக்காட்டுக்கு எழுந்தருளியபோது, அவருக்குப் பாண்டிய நாட்டு நிலைமையைத் தெரிவித்து, பாண்டியனை மீட்டுத் தரும்படி வேண்டி, ஒரு திருமுகம் எழுதி அனுப்பினார்கள். சம்பந்தமூர்த்தி சுவாமிகள் அவர்களது வேண்டுகோளுக்கிசைந்து மீனாக்ஷிசுந்தரேசுவரர்களைத் தரிசித்து பாண்டியனது பத்தினியாலும் மந்திரியாலும் வரவேற்கப்பட்டு, மந்திரியினால் காட்டப்பட்ட ஒரு திருமடத்திலே அடியார் கூட்டத்துடன் எழுந்தருளினர். அது கண்ட சமணர்கள் அன்றிரவே அவருக்குத் தீங்கிழைக்கக் கருதி, தங்கள் மந்திரங்களையுச்சரித்து மடத்தில் தீயிட முயன்று, அம்மந்திரங்கள் பயன்படாமற் போகவே தங்கள் மதத்துக்குக் கேடு நேரிடாம லிருக்கும்பொருட்டுத் திருமடத்திலே தீ வைத்துவிட்டார்கள். அடியார்களினால் அதையறிந்த சுவாமிகள் பாண்டிய

னுடைய ஏவலினாலேயே தீ வைக்கப்பட்டிருக்க வேண்டுமென நினைத்து, அத் தீ பாண்டியனைப் பற்றும்பொருட்டு,

“ செய்யனே திருவாலவாய் மேவிய
ஐயனே அஞ்சலென்றருள் செய்யெனைப்
பொய்யரா மமணர்கொளு வுஞ்சுடர்
பையவே சென்று பாண்டியற்காகவே ”

என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளினார். உடனே மடத்தில் பற்றிய தீயானது சென்று கூன்பாண்டியனைச் சுரநோயாகப் பற்றிக்கொண்டது. அந்நோயை யகற்றச் சமணர்கள் பல தந்திரங்களைச் செய்தும், அவைகளிலொன்றும் பயன்படாமற் போயிற்று. சுரத்தினால் பெரிதும் வருந்திய பாண்டியன் அவர்களை அகலும்படி சொல்ல, அதுவே சமயமென உணர்ந்த அவனது தேவியாரும் மந்திரியும் திருமடத்துக்குச் சென்று சுவாமிகளை அரண்மனைக்கு வந்து பாண்டியனது நோயைத் தீர்க்கும்படி வேண்டினார்கள். சுவாமிகள் அவர்களது வேண்டுகோளுக்கிசைந்து அரண்மனைக்குச் சென்றார். அப்போது பாண்டியன் தனது தேகத்தின் ஒரு பக்கத்திலுள்ள நோயைச் சமணரும் மற்றொரு பக்கத்திலுள்ள நோயைச் சுவாமிகளும் தீர்க்க முயல வேண்டுமென்றும், தனது நோயை விரைவாகத் தீர்ப்பவரே தமது மதத்தின் உண்மையை விளக்கி வெற்றி பெற்றவர் என்றுங் கூறினான். உடனே சமணர்கள் அரசனுடைய தேகத்தின் இடப்பாகத்தை மயிற்பீலிகளினால் தடவி மந்திரங்களை உச்சரித்தார்கள். நோய் சற்றேனும் அடங்காமல் முன்னிலும் அதிகரித்தது. அப்போது பாண்டியன் சுவாமிகளைநோக்க அவர் சுந்தரேசுவரரைத் தியானித்து, “ மந்திரமாவது நீறு” என்று தொடங்கும் பாசுரத்தை முதலாகவுடைய பதிகத்தைப் பாடித் தமது திருக்கரத்தினால் திருவெண்ணீற்றை மன்னனுடைய தேகத்தின் வலப்புறத்தில் பூச, அப்பக்கத்தில் இருந்த நோய் தீர்ந்தது. பிறகு பாண்டியனுடைய வேண்டுகோளின்படி சுவாமிகள் இடப்புறத்திலுள்ள நோயையும் திருநீற்றினால் தீர்த்தருளினார். அதுவரையில் சமணர்கள் பக்கலிருந்த வெற்றியும் அவர்களை விட்டு விலகி அகன்றது. இறுதியில் அவர்கள் முற்றிலும் தோல்வியடைந்து தங்கள் வாக்குறுதியின்படியே கழுவேறினர்.

சமணரது மதம் ஆருகதமதம்; அதாவது, அருகனை அதிஷ்டான தேவதையாக வுடைய மதம். அவர்களுடைய குருமார்களில் சிரேஷ்டர்கள் நிர்வாணமாக இருப்பவராதலின், அவர்கள் அமணர் என்று அழைக்கப்படுவர். முருகப்பெருமானே திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகளென ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் பல பாடல்களில் அருளியுள்ளார். அவைகளில் சில பின்வருமாறு:—

“ கருது மாறிரு தோள்மயில் வேலிவை
கருதொ ணாவகை யோரர சாய்வரு
கவுணி யோர்குல வேதிய னுபமை கனபாரக்

களப பூண்முலை யூறிய பாலுணு
மதலை யாய்மிகு பாடலின் மீறிய
கவிஞ ரூய்விளை யாடிடம் வாதிகள் கழுவேறக்

குருதி யாறெழ வீதியெ லாமலர்
நிறைவ தாய்விட நீறிட வேசெய்து
கொடிய மாறன்மெய் கூனிமி ராமுனே குலையாவான்

குடிபு கீரென மாமது ராபுரி
யியலை யாரண ஆமரன நேர்செய்து
குடசை மானகர் வாழ்வுற மேவிய பெருமாளே."

பஞ்சவ னீடு கூனு மொன்றிடு தாப மோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்

பண்பறு பீலியோடு வெங்கழு வேறவோது
பண்டித ஞான நீறு தருவோனே

குஞ்சரம் யாளி மேவு பைம்புன மீது லாவு
குன்றவர் சாதி கூடி வெறியாடிக்

கும்பிட நாடி வாழ்வு தந்தவ ரோடு வீறு
குன்றுதொ ருடல் மேவு பெருமாளே."

"சீட்டை யெழுதிவை யாற்றி லெதிருற
ஓட்டி யழல்பசை காட்டி சமணரை
சீற்ற மொடுகழு வேற்ற அருளிய குருநாதா"

"அமண ரடங்கலுங் கூட விற்றி ரண்டு
கழுவி லுதைந்துதைந் தேற விட்டு நின்ற
அபிநவ துங்ககங் காந திக்கு மைந்த அடியவர்க் கெளியோனே"

சமண சந்நியாசிகள் தலைமயிரில் பூச்சிகள் உண்டாகுமாயின் அவைகள் தற்செயலாய் அழிந்து அதனால் பாபம் உண்டாகுமேயென்று அஞ்சி மயிர் மீண்டும் முளைக்காமலிருக்குமாறு மயிரைப் பறித்துவிடுவார்களாதலின், அவர்களைச் சுவாமிகள் மோழையென்று கூறினர். நம்முடைய தேகமானது பூர்வ ஜன்மங்களிற் செய்த நல்வினை தீவினைகளின் பயனை அனுபவிப்பதற்குத் தக்கபடி பிரமதேவரால் அமைக்கப்படுகிறதென்று பின்வரும் பாடலினால் தெரிகிறது.

"சலமலம் விட்டத் தடம்பெ ருங்குடில்
சகல வினைக்கொத் திருந்தி டும்படி
சதிர வுறுப்புச் சமைந்து வந்தொரு - தந்தை தாயும்
தரவரு பொய்க்குட் கிடந்து கந்தல் * * *".

மேற்கூறியவாறு இருவினைகளின் பயனை அனுபவிப்பதற்காகவே ஜட தேகம் ஜீவனுக்கு மீண்டும் மீண்டும் வருவதனாலும், இருவினைப் பயனான நோயை, இருநோய் மலத்தை சிவவொளியால் மிரட்டி'' என்ற விடத்து மலம் என்று கூறியிருப்பதனாலும், மலரூபம் என்பதற்கு இருவினையான மலங்களின் வடிவமான தேகம் என்று பொருள் கூறப்பட்டது. (கக)

தானா தனதன தானா தனதன
தானா தனதன—தனதான

ஆதா ளிகள்புரி கோலா கலவிழி
யாலே யமுதெனு மொழியாலே

ஆழ்சீ ரிளநகை யாலே துடியிடை
யாலே மணமலி குழலாலே

சூதா ரிளமுலை யாலே யழகிய
தோடா ரிருகுழை யதனாலே

சோரா மயல்தரு மாஞா ருறவிடர்
சூழா வகையருள் புரிவாயே!

போதா ரிருகழல் சூழா ததுதொழில்
பூணா தெதிருற மதியாதே

போரா டியஅதி சூரா பொறுபொறு
போகா தெனஅடு திறலோனே!

வேதா வுடனெடு மாலா னவனறி
யாதா ரருளிய குமரேசா!

வீரா புரிவரு கோவே பழநியுள்
வேலா இமயவர் பெருமாளே!

(ப-ரை): போது ஆர் இரு கழல் சூழாது-மலர்களை ஒத்த எனது இருபாதங்களையும் வணங்காமலும், அது தொழில் பூணாது - அப்படி வணங்குவதையே தொழிலாகக் கொள்ளாமலும், எதிர் உற மதியாதே - நான் எதிரே தோன்றிய போதும் என்னை மதியாமலும், போராடிய அதி சூரா-போர்புரிந்த அதி சூரனே, பொறு பொறு போகாதே என - சற்றுப்பொறு! போர்க்களத்தை விட்டுப் போகாதே! என்று சொல்லி, அடு திறலோனே- அவனைச் சங்கரித்த பராக்கிரம சாலியே, வேதா உடன் நெடு மால் ஆனவன் அறியாதார் - பிரமதேவரும் திரிவிக்கிரம அவதாரங்கொண்ட திருமாலும் அறிய முடியா வண்ணம் நின்ற சிவபெருமான், அருளிய குமரேசா - உலகத்தோருக்கு அளித்தருளிய குமார

சுவாமியே, வீராபுரி வரும் கோவே-(கலிசைச் சேவகனூராது பட்டினமான) வீரை மாநகரில் எழுந்தருளியிருக்கும் இறைவனே, பழநியுள் வேலா-பழநி மலையில் எழுந்தருளியிருக்கும் வேலாயுதனே, இமையவர் பெருமாளே-தேவர்கள் நாயகனே, ஆதாளிகள் புரி கோலாகல விழியாலே - மனத்தில் கலகங்களை விளைவிக்கும் அழகிய விழிகளினாலும், அமுது எனும் மொழியாலே-அமுதம் என்று சொல்லத்தக்க இனிய மொழிகளினாலும், ஆழ்சிர் இள நகையாலே - ஆழ்ந்த எண்ணத்திறல் கொள்ளும் அழகிய புன்னகையினாலும், துடி இடையாலே - உடுக்கையை யொத்த இடையினாலும், மணம் மலி குழலாலே - நல்ல வாசனை நிறைந்த கூந்தலினாலும், சூது ஆர் இள முலையாலே - சூதாட்டக் கருவியைப் போன்றவைகளாய் இளமை பொருந்தியுள்ள தனபாரங்களினாலும், அழகிய தோடு ஆர் இரு குழை அதனாலே - அழகிய தோடுகளுடன் பொருந்தியுள்ள இரண்டு குழைகளினாலும், சோரா (சோர) மயல் தரு மானார் - வஞ்சகமான காமத்தை உண்டுபண்ணும் அழகிய பெண்களுடைய, உறவு இடர்-சிநேகமான துன்பமானது, சூழாவகை அருள்புரிவாயே - அடியேனைச் சூழாதிருக்குமாறு அருள் புரியவேண்டும். (௩௪)

தனன தனத்த தானன தனன தனத்த தானன
தனன தனத்த தானன—தனதான.

கதியை விலக்கு மாதர்கள் புதிய இரத்ன பூஷண
கனதன வெற்பு மேல்மிகு மயலான

கவலை மனத்த னாகிலும் உனது ப்ரசித்த மாகிய
கனதன மொத்த மேனியு முகமாறும்!

அதிபல வஜ்ர வாகுவும் அயில்நுனை வெற்றி வேலதும்
அரவு பிடித்த தோகையு முலகேழும்

அதிர வரற்று கோழியும் அடியர் வழுத்தி வாழ்வுறும்
அபிநவ பத்ம பாதமு மறவேனே!

இரவி குலத்தி ராசத மருவி யெதிர்த்து வீழ்கடு
ரணமுக சுத்த வீரிய குணமான

இளையவ னுக்கு நீண்முடி அரசது பெற்று வாழ்வுற
இதமொ டளித்த ராகவன் மருகோனே!

பதினொரு ருத்தி ராதிகள் தபனம் விளக்கு மாளிகை
பரிவொடு நிற்கு மீசுர சுரலோக

பரிமள கற்ப காடவி அரியளி சுற்று பூவுதிர்
பழநி மலைக்குள் மேவிய பெருமாளே!

(ப - ரை) இரவி குலத்து இராசதம் மருவி - சூரிய குலத்தில் அரசனாய் அவதரித்து, எதிர்த்து வீழ் கடி ரணமுக-(சேனைகள் ஒன்றோடொன்று) எதிர்த்துப்போர்செய்து மடியும் உக்கிரமான போர்க்களத்தில், சுத்த வீரிய குணமான-சுத்த வீரனுக்குரிய குணத்தைக்காட்டும், இளையவனுக்கு-(இராவணன்) தம்பியான விபீஷணனுக்கு, நீள் முடி அரசு அது - ஒளிபெற்ற மகுடத்தையும் அரசப் பதவியையும், பெற்று வாழ்வுற-அவன் அவைகளை அடைந்து பெருவாழ்வு பெறுமாறு, இதமொடு அளித்த ராகவன் மருகோனே - அன்புடன் கொடுத்தருளிய இரகுவம்ச திலகராகிய ஸ்ரீ ராமபிரானுடைய சகோதரியின் புத்திரனே, பதினொரு ருத்திராதிகள் தபனம் விளக்கு மாளிகை - பதினொரு உருத்திரர் முதலியவர்களின் ஜோதியினால் ஒளி பெற்று விளங்கும் திருக்கோயிலில், பரிவொடு நிற்கும் ஈசுர- அன்புடன் அமர்ந்திருக்கும் கடவுளே, சுர லோக பரிமள கற்பக அடவி - தெய்வலோகத்திலுள்ள கற்பகம் முதலிய பஞ்ச தருக்கள் அடர்ந்து வளர்ந்த வனத்திலிருந்து, அரி அளி சுற்று பூ உதிர்-தேனை விரும்பி வண்டுகள் சூழும் மலர்கள் உதிரப்பெற்ற,பழநி மலைக்குள் மேவிய பெருமாளே-பழநி மலையில் அமர்ந்திருக்கும் பெரியோனே, கதியை விலக்கு மாதர்கள் - நற்கதியானது கிட்டாமல் விலகும்படி செய்யும் பெண்களுடைய, புதிய இரத்ன பூஷண -இளமை பொருந்தியவைகளாய் இரத்தினங்கள் இழைத்த ஆபரணங்களை அணிந்து, கன தன வெற்பு மேல் - பருத்து வளர்ந்து மலைகளை யொத்திருக்கும் தனபாரங்களின்மீது, மிகு மயலான கவலை மனத்தன் ஆகிலும்-மிகுந்த ஆசை கொண்டு (அவைகளை அடைய வேண்டுமென்ற) கவலை பொருந்திய மனத்தை யுடையவனே யாயினும்,(அடியேன்) உனது பிரசித்தமாகிய கன தனம் ஒத்த மேனியும்-பெரும்புகழ் பெற்றதும் மேலான தங்கத்தை யொத்ததுமான உனது திருமேனியும்,முகம்ஆறும்-ஆறுமுகங்களையும், அதி பல வஜ்ர வாகுவும்-மிகுந்த வலிமை பொருந்தியவைகளாய் வயிரத்தை யொத்திருக்கும் தோள்களையும், அயில் நுனைவெற்றி வேல் அதும் - கூர்மையான முனையையுடையதாய் எப்போதும் வெற்றியேயடையும் வேலாயுதத்தையும், அரவுபிடித்த தோகையும்-நாகத்தைப் பிடித்துக்கொண் டிருக்கும் மயிலையும், உலகு எழும் அதிர அறு கோழியும்-எழு உலகங்களும் அதிர்ச்சி யடையும்படி கூவும் சேவலையும், அடியார் வழுத்தி வாழ்வு உறும் அபிநவ பத்ம பாதமும் - மெய்யடியார்கள் எவைகளைத் துதிப்பதனால்மாறாத சுகவாழ்வாகிய முத்தியை அடைகிறார்களோ அந்த அற்புத அழகு வாழ்ந்தவைகளும் தாமரை மலரை யொத்தவைகளுமான நினது பாதங்களையும், மறவேனே - மறக்கமாட்டேன்.

“ எரியனுகு மெழுகுபத மாய்மேவி மேவியிணை
யிருவருடல் ஒருவரென நாணுந்து பாயல்மிசை
யிளமகளிர் கலவிதனி லேழுழ்கி யாழுகினு மிமையாதே

இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும்
இளமையுமு னழகுபுனை யீராறு தோள்நிரையும்
இருபதமு மறுமுகமும் யானோத ஞானமதை அருள்வாயே!"

என்றபடி, எம்பெருமானது அருளைப் பெறுவதற்குரிய தவநெறி அவரையும் அவரது பராக்கிரமத்தையும் கருணையையும் வேலையும்மயிலையும் சேவலையும் மறவாது புகழ்வதே யாகும். சேவலானது ஞான சூரியன் வருகிறானென் பதை உணர்த்துமாறு அவருடைய புகழைஏழுலகங்களும் அதிர்ச்சியடையும் படி கூவி உணர்த்துகிறது. (௩௫)

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன—தனதான.

மூல மந்திர மோத லிங்கிலை
யீவ திங்கிலை நேய மிங்கிலை
மோன மிங்கிலை ஞான மிங்கிலை மடவார்கள்

மோக முண்டதி தாக முண்டப
சார முண்டப ராத முண்டிடு
மூக னென்றொரு பேரு முண்டருள் பயிலாத

கோல முங்குண வீன துன்பர்கள்
வார்மை யும்பல வாகி வெந்தெழு
கோர கும்பியி லேவி ழுந்திட நினைவாகிக்

கூடு கொண்டுழல் வேனை யன்பொடு
ஞான நெஞ்சினர் பாலி ணங்கிடு
கூர்வை தந்தினி யாள வந்தருள் புரிவாயே!

பீலி வெந்துய ராவி வெந்தவ
சோகு வெந்தமண் மூகர் நெஞ்சிடை
பீதி கொண்டிட வாது கொண்டரு ளெழுதேடு

பேணி யங்கெதி ராறு சென்றிட
மாற னும்பினி தீர வஞ்சகர்
பீறு வெங்கழு வேற வென்றிடு முருகோனே!

ஆல முண்டவர் சோதி யங்கணர்
பாக மொன்றிய வாலை யந்தரி
ஆதி யந்தமு மான சங்கரி குமரேசா!
ஆர ணம்பயில் ஞான புங்கவ
சேவ லங்கொடி யான பைங்கர
ஆவி னன்குடி வாழ்வு கொண்டருள் பெருமாளே!

(ப - ரை) பீலி வெந்து - (பாண்டியனது சுரநோயைத் தீர்க்க அவன் உடம்பைத் தடவிய) மயிற்பீலி வெந்து சாம்பலாகவும், உயர் ஆவி வெந்து - பாவற்றினும் மேலாகக் கருதப்படும் உயிர் வேகவும், அவ் அசோகு வெந்து - அவர்கள் கையிற்பிடித்த அசோகமரத்தின் கிளை வேகவும், (பெற்று), அமண் மூகர் - சமணர் தலைவர்களாகிய மெய்ப்பொருளை யடையாத தரித்திரர்கள், நெஞ்சிடை பீதி கொண்டிட - மனத்தினில் மிகுந்த பயமடையுமாறு, வாது கொண்டு - அவர்களுடன் சமயவாதம் செய்து, அருள் எழுது ஏடு - (சிவபெருமானது) அருளையுணர்த்தும் வண்ணம் எழுதி (வைகையாற்றிலிட்ட) ஏடானது, பேணி அங்கு எதிர் ஆறு சென்றிட - கருத்துக்கிசைந்தபடி அவ்விடத்தில் ஆற்றில் நீரோட்டத்தை எதிர்த்துச் செல்லவும், மாறனும் பிணி தீர - பாண்டியனும் (தன்னைப் பீடித்த) சுரநோயும் கூனும் பிறவிநோயும் தீரப்பெறவும், வஞ்சகர் - (பொய்யான சமணமதத்தை மெய்யென்று சொல்லிப் பாண்டியனை) வஞ்சித்த சமணர்கள், பீறு வெம் கழு ஏற - தேகத்தைப் பீறும் கொடிய கழுவில் ஏறவும், (செய்து), வென்றிடு முருகோனே - (சமணர்களை) வென்ற ஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளாக அவதரித்த முருகனே!, ஆலம் உண்டவர்-(சகல வுலகங்களையும் காப்பதற்காக) கொடிய ஆலால விஷத்தையுண்டவரும், சோதி அம் கணர் - ஒளி வீசுவதுடன் கருணைபொழிவதனால் அழகு வாய்ந்துள்ள கண்களையுடையவருமான சிவபெருமானது, பாகம் ஒன்றிய வாலை - வாமபாகத்தில் அமர்ந்தவரும் என்றும் கன்னிப்பருவம் மாறாதவரும், அந்தரி - எங்கும் நிறைந்திருப்பவரும், ஆதி அந்தமும் ஆன சங்கரி - உலகங்களைத் தோன்றச்செய்து இறுதியில் அவைகளைத் தமக்குள் அடக்கிக்கொண்டு (ஜீவர்களெல்லோருக்கும்) நன்மை செய்பவருமான பார்வதிதேவியாரது, குமரேசா - குமாரனாக வந்து தோன்றிய இளையோனே!, ஆரணம் பயில் ஞான புங்கவ - வேதங்கள் எடுத்துச்சொல்லும் ஞானத்தைப் போதிக்கவல்ல குருவே!, சேவல் அம் கொடி ஆன பைம் கர - அழகிய சேவற்கொடியை ஏந்திய அழகிய கரத்தையுடையவனே, ஆவினன்குடி வாழ்வுகொண்டு அருள் பெருமாளே - திருவாவினன்குடி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, மூலமந்திரம் ஓதல் இங்கு இ(ல்)லை-(முத்தி பெறுவதற்குரிய) மூலமந்திரமான ஷடாக்ஷரத்தை ஓதுதல் இங்கே கிடையாது, ஈவது இங்கு இலை - (வறிஞர்க்குப்) பிச்சையிடுவது இங்கே கிடையாது, நேயம் இங்கு இலை - அன்பு என்பது இங்கே கிடையாது, மோனம் இங்கு இலை-மௌன

முற்றிருப்பது இங்கே கிடையாது, ஞானம் இங்கு இலை - (நினது நாமங்களை யுச்சரிப்பதனாலும் இரப்பவர்க்கு ஈவதனாலும் மௌனமுற்றிருப்பதனாலும் பெறக்கூடிய) ஞானம் இங்கே கிடையாது, மடவார்கள் மோகம் உண்டு - பெண்களிடத்தில் காதல் கொள்வது (இங்கே) உண்டு, அதி தாகம் உண்டு - மிகுந்த ஆசை உண்டு, அபசாரம் உண்டு - (தெய்வத்தினிடத்தும் பெரியோர்களிடத்தும்) நடந்துகொள்ள வேண்டிய நெறி தவறி நடத்தல் உண்டு, அபராதம் உண்டிடு மூகன் என்று ஒரு பேரும் உண்டு - தகாத காரியங்களைச்செய்யும் (அருளில்லா) ஏழை என்று ஒரு பெயரும் உண்டு, அருள் பயிலாத கோலமும் - இறைவனது அருளைப்பெறும் நெறியில் நின்று ஒழுகாத தன்மையும், குண ஈன துன்பர்கள் வார்மையும் - கீழான குணமுள்ளவர்களாய்ப் பிறவித்துன்பத்திலேயே உழலுபவர்களது (தீய) ஒழுக்கமும், பல ஆகி வெந்து எழு கோர கும்பியிலே - பல வகைப்பட்டு வெப்பத்துடன் எழும்பும் பயங்கரமான கும்பியாகும் உலக வாழ்க்கையிலே, விழுந்திட நினைவாகி - விழவேண்டுமென்ற எண்ணமுடையவனாய், கூடு கொண்டு உழல்வேனை - தேகத்தை (மீண்டும் மீண்டும் பெற்று) சுமந்து உழலும் அடியேனை, ஞான நெஞ்சினர்பால் இணங்கிடு - ஞானம் நிரம்பிய மனத்தையுடையவர்களுடன் சேர்ந்து பழகுவதற்குரிய, கூர்மை தந்து இனி ஆள வந்து - புத்தி கூர்மையை அடியேனுக்குத் தந்து இனிமேல் ஆட்கொள்வதற்காக வந்து, அருள் புரிவாயே - அருள் புரியவேண்டும்.

(வி - ரை) பாண்டியனது சுரநோயைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தீர்த்த வரலாற்றை—33-ம் பழநித்தலப் பாடலின் விருத்தியுரையிற்காண்க. பாண்டியனது சுரநோய் தீர்ந்தபின் சமணர்கள் தங்கள் சமயக்கொள்கையை ஏடுகளில் எழுதித் தீயிலிட்டுப் பரீட்சைசெய்து தோற்று, பிறகு அப்படிப்பட்ட ஏடுகளை ஆற்றிலிட்டு அவை நீரோட்டத்தை எதிர்த்துச் செல்லுகிறதா வென்ற பரீட்சைசெய்ய, அவர்கள் ஆற்றிலிட்ட ஏடுகள் நீரோட்டத்துடன் கடலை நோக்கிச் சென்றன. சுவாமிகள்,

“வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே!”

என்று தொடங்கும் திருப்பதிகத்தை ஏட்டில் எழுதி, இறைவனைத்துதித்து, அவ்வேட்டை ஆற்றிலிட, அது சைவசமயமே மெய்ச்சமயமெனக் காட்டுமாறு நீரைக் கிழித்துக் கொண்டு ஆற்றில் எதிர்நோக்கிச் சென்றது. மும்முறை தோல்வியடைந்த சமணர்கள் தங்கள் சபதப்படியே கழுவேறி அழிந்தார்கள்.

எம்பெருமானது திருநாமங்களை யுச்சரிப்பதும், மெலிந்து வந்து இரப்பவர்க்கு ஈவதும், மௌனமுற்றிருப்பதுமே ஞானமடைவதற்குரிய நெறி என்பது இப்பாடலிற் குறிப்பாகக் கூறப்பட்டிருக்கிறது. (௩௬)

தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன—தனதான.

கார ணிந்தவரைப் பார டர்ந்துவினைக்
காதல் நெஞ்சயரத் தடுமாறிக்
கான ரம்புதிரத் தோல்வ ழும்புறுபொய்க்
காய மொன்றுபொறுத் தடியேனும்
தாரி ணங்குகுழற் கூர ணிந்தவிழிச்
சாப மொன்றுநுதற் கொடியார்தம்
தாள்ப ணிந்தவர்பொற் றோள்வி ரும்பிமிகத்
தாழ்வ டைந்துலையத் தகுமோதான்?
சூர னங்கம்விழத் தேவர் நின்றுதொழத்
தோய முஞ்சுவறப் பொரும்வேலா!
தூய்மை கொண்டகுறத் தோகை நின்றபுனச்
சூழ்பெ ருங்கிரியிற் றிரிவோனே!
ஆர ணன்கருடக் கேத னன்தொழமுற்
றால முண்டவருக் குரியோனே!
ஆலை யும்பழனச் சோலை யும்புடைசுற்
றாவி னன்குடியிற் பெருமாளே!

(ப - ரை) சூரன் அங்கம் விழ - சூரபதுமனது தேகமானது (பிளவுபட்டுக்) கீழே விழுமாறும், தேவர் நின்று தொழ - தேவர்கள் நினது திருமுன்னர் வணங்கி நிற்குமாறும், தோயமும் சுவற - கடல் நீர் வற்றுமாறும், பொரும் வேலா - (அசுரர்களுடன்) போர்செய்த வேலாயுதனே!, தூய்மை கொண்ட - (மலங்களினால் பீடிக்கப்படாமல்) பரிசுத்தமாயிருந்த, குற தோகை - குறக்குலத்தில் வளர்ந்த அழகிய பெண்ணான வள்ளிநாயகியார், நின்ற புனம் சூழ் - காவலாய் நின்ற தினைப்புனத்தைச் சுற்றியிருந்த, பெரும் கிரியில் திரிவோனே - விசாலமான (வள்ளி) மலையின்மீது அலைந்து திரிந்தவனே!, ஆரணன் - பிரமதேவரும், கருட கேதனன் - கருடக்கொடியையுடைய திருமாலும், தொழ - (உலகங்களைக் காத்தருளும்படி பிரார்த்தித்து) வணங்கி நிற்க, (அப்போது), முற்று ஆலம் - (உலகங்களுக்கெல்லாம்) முடிவைத் தரவல்ல ஆலகாலம் என்னும் விஷத்தை, உண்டவருக்கு உரியோனே - உண்டருளிய நீலகண்டருக்குப் புதல்வனாய்த் தோன்றியவனே!, ஆலையும் - கரும்பாலையும், பழனம் - வயல்களும்,

சோலையும்-சோலைகளும், புடை சுற்று - நாற்புறங்களிலும் சூழ்ந்திருக்கப்பெற்ற ஆவினன் குடியில் பெருமாளே - திரு ஆவினன் குடி யென்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, அடியேனும் - நினது அடிமையாகிய யானும், கார் அணிந்த வரை பார் - கரியமேகங்கள் வந்து பொருந்தப்பெற்ற (உயர்ந்த) மலைகளையுடைய பூவுலகத்தை, அடர்ந்து - அணுகி, (அதில் வந்து பிறந்து), வினை காதல் நெஞ்சு - (இடைவிடாமல்) இருவினைகளைச் செய்யத் தூண்டுவதும் ஆசை மிகுதியாக வுடையதுமான மனம், அயர தடுமாறி - சோர் வடையும்படி நெறிதவறி அலைந்து, கால் நரம்பு உதிரம் - காற்று நரம்பு இரத்தம், தோல் வழும்பு - தோல் மாமிசம் (இவை), உறு பொய் காயம் ஒன்று - பொருந்தி யுள்ள பொய்யான உடல் ஒன்றை, பொறுத்து - சுமந்து, தார் இணங்கு குழல் - மலர்மாலை சூட்டப்பெற்றுள்ள கூந்தலையும், கூர் அணிந்த விழி - கூர்மையான பார்வையுள்ள கண்களையும், சாபம் ஒன்று நுதல் - வில்லையொத்த புருவங்களையும் (உடைய), கொடியார் தம் - கொடியையொத்த பெண்களின், தாள் பணிந்து - கால்களில் வீழ்ந்து பணிந்து, அவர் பொன் தோள் விரும்பி - அவர்களுடைய அழகிய தோள்களின்மீது ஆசைகொண்டு, மிக தாழ்வு அடைந்து - மிகவும் தாழ் வான நிலைமையை யடைந்து, உலைய தகுமோதான்-வருந்தித் திரிதல் தகுதியோ?

(வி - ரை) அகங்காரத்தைத் தொலைப்பதும், சற்குணமுற்றுத் தெய்வத் தைத் தொழச்செய்வதும், பொய்யான இல்லற வாழ்க்கையின் உண்மையான நிலைமையை உணர்த்துவதும் பரமஞானமேயாதலால், "சூரனங்கம் விழ......... பொரும் வேலா" என்றும், வேடர்களாகிய ஐம்புலன்களுடன் கலந்து இன்ப துன் பங்களை யனுபவிக்காமல் அவைகளைவிட்டுப் பிரிந்து நின்று தூய்மையடைந்த பின்னரே ஜீவனைப் பரமன் நாடித்தேடித் தடுத்தாட்கொள்வாராதலால், "தூய்மை கொண்ட.........திரிவோனே" என்றும் கூறப்பட்டிருக்கிறது. "ஆரணன்...... உரியோனே" என்று கூறிச் சுவாமிகள் முருகப்பெருமான் கருணையும் வலிமையு முள்ள மரபில் உதித்தவரென்பதைக் குறிப்பாக உணர்த்துகிறார். (௯௭)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத்—தனதான.

திகைமைத் தனியிற் பகைகற் றுறுகைத்
தறுமுட் டவளைப் பவனாலே

தாளத் திரளிற் புரளக் கரளத்
தமரத் திமிரக் கடலாலே

உகைமுத் தமிகுத் தமெனப் பகல்புக்
கொளிமட் குமிகைப் பொழுதாலே

உரையற் றுணர்வற் றுயிரெய்த் தகொடிக்
குனநற் பிணையற் றரவேணும் !
திகைபத் துமுகக் கமலத் தனைமுற்
சிறையிட் டபகைத் திறல்வீரா !
திகழ்கற் பகமிட் டவனக் கனகத்
திருவுக் குருகிக் குழைமார்பா !
பகலக் கிரணப் பரணச் சடிலப்
பரமற் கொருசொற் பகர்வோனே !
பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்
பழநிக் குமரப் பெருமாளே !

(ப - ரை) திகை பத்தும் உக - பத்துத் திக்குகளும் நிலைகுலையுமாறு, கமலத்தனை - திருமாலின் திருநாபிக் கமலத்தில் உதித்த பிரமதேவரை, முன் சிறை இட்ட - முன்பு சிறையிலடைத்த, பகை - (அஞ்ஞானத்தின்) பகைவனுகிய, திறல் வீரா - வலிமையுள்ள வீரனே!, திகழ் கற்பகம் இட்ட வன - விளங்கும் கற்பக விருட்சம் அமைந்துள்ள உபவனத்தில், (வசிக்கும்), கனக திருவுக்கு உருகி-பொன்னையொத்த திருமேனியையுடைய அழகிய தெய்வயானையம்மையை அடைய விரும்பி மனமுருகி, குழை மார்பா - (அத்தேவியாரை) அணைந்து கொண்ட மார்பையுடையவனே, பகல கிரண - சூரியனுடைய ஒளியைவீசுவதும், பரண - பாரமாயுள்ளதுமான, சடில - சடாமுடியையுடைய, பரமற்கு - பரம் பொருளாகிய சிவபெருமானுக்கு, ஒரு சொல் பகர் வோனே - ஒப்பற்ற தனிப் பொருளான பிரணவப் பொருளை உபதேசித்தவனே, பவன புவனம் செறிவு உற்று உயர் - வாயுமண்டலத்தை அளாவும்படி உயர்ந்திருக்கும், மெய் பழநி - மெய்ஞ்ஞானத்தைத் தரத்தக்க பழநிமலையில், குமர பெருமாளே-குமாரசுவாமியாய் எழுந்தருளியிருக்கும் பெரியோனே, தனி தகைமையின் - ஒப்பற்ற அழகுபெற்றுள்ள காரணத்தினுல், பகை கற்று - (எல்லோரிடத்திலும்) பகைமை பூண்டு, உறு கை தநு - (தனது) கையிற்பொருந்தியுள்ள வில்லை, முட்ட வளைப்பவனுலே - வளைக்கக்கூடிய மட்டிலும் வளைக்கும் மன்மதனுலும், தரள திரள் (இன் - சாரியை) புரள் - முத்துக்கூட்டங்கள் (அலைகளினுல் வீசப்பட்டுப்) புரளும், அ கரள தமர திமிர கடலாலே - அந்த ஆலாலவிடம் தோன்றப்பெற்றதும் கோஷிப்பதும் இருள் நிறைந்ததுமான சமுத்திரத்தினுலும், உ(ற்)கை முத்தம் மிகுத்தது என-நக்ஷத்திரங்களாகிய முத்துக்கள் (தன்னைவிட) அதிக வலிமையுள்ளன என்பதுபோல, பகல் புக்கு-சூரியன் (வானினின்றும் மறைந்து) கடலிற்புகுந்ததனுல், ஒளி மட்கும் - வெளிச்சம் மங்கும், மிகை பொழுதாலே - துன்பத்தைத்

தரும் மாலைப்பொழுதினுலும், உரை அற்று - பேசும் திறமையை இழந்து, உணர்வு அற்று - உணர்ச்சியையும் இழந்து, உயிர் எய்த்த - பலம் குன்றி மெலிந்துள்ள, கொடிக்கு - கொடியை யொத்த பெண்ணை எனக்கு, உன நல் பிணையல் - உனது நல்ல மாலையை, தரவேணும் - தந்தருளவேண்டும்.

(வி - ரை) தனது நாயகனுகிய பரமனைப் பிரிந்திருக்கும் நாயகியான ஜீவன் தனது நாயகன்மீது கொண்ட காதல் மிகுதியினல் பிரிவாற்ருது வருந்தி, தன்னைச் சீக்கிரத்தில் மணந்துகொள்ள வேண்டிக்கொள்ளுகிற முறை இப்பாடலில் அமைக்கப்பட்டிருக்கிறது. காதலனைப்பிரிந்த பூவையர்கள் மாலைப்பொழுதில் மன்மத பாணங்களினுலும் கடலின் ஓசையினுலும் பெரிதும் வருந்தி மெலிவுறுவது இயற்கையாதலின், நாயகனுகிய பரமனைப்பிரிந்த ஜீவனும் அவ்வேளையில் அக்காரணங்களினுலேயே வருந்துவதாகக் கூறுவது கவித்திறம். இதே கருத்தைப் பின்வரும் பாடல்களில் தெளிவாகக்காண்க.

" விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர
குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ?"

கOஎ-ம் பக்கத்தில் " இரவியென வடவை யென" என்று தொடங்கும் பழநித்தலப் பாடல் ௫-வது எண்ணிக்கையுள்ளதின் முற்பகுதியையுங் கவனிக்க.

"கமலத் தனைமுற் சிறையிட் டபகைத் திறல்வீரா!" என்னும் அடியில் பகை என்னும் பதத்தை உபயோகித்ததற்குக் காரணம் என்ன வெனில்:—முருகப்பெருமான் பிரமதேவரைப் பிரணவத்தின் பொருளை உரைக்கும்படி கேட்டு அவர் அதைக் கூறமாட்டாமல் தியங்கி நின்றபோது அவரைக் குட்டித் தண்டித்தது இளமைப்பருவத்துக்குரிய குறும்பினுலன்று; ஜீவர்களிடத்து அளவற்ற கருணையும் அருதாபமுமுள்ள முருகப்பெருமான் ஜீவர்கள் அஞ்ஞானத்தினல் புவியில் வருந்தி மெலிவதற்குக்காரணம் அவர்களைப்படைத்த பிரமதேவரது அஞ்ஞானமே என்று கண்டு, அப்பிரமதேவரைக் குட்டித் தண்டித்து, அவர் பின்னும் சிருஷ்டிசெய்யா வண்ணம் அவரைச் சிறையிட்டார். முருகப்பெருமான் ஞான மூர்த்தியாதலால் அஞ்ஞானத்தை அகற்றுவதையே எப்போதும் தொழிலாகக் கொள்வர். ஆகையினுல் தான் "பகை" என்பதற்கு "அஞ்ஞானத்தின் மீது பகைமை பூண்ட" என்று பொருள் கூறப்பட்டது. குழைதல்-மனம் தளர்தல், அணைதல்; "குழை மார்பா" என்றதனுல் அணைந்து கொள்ளும் மார்பையுடைய

வனே என்று பொருள் கூறப்பட்டது. மிசை - துன்பம்; மிசைப்பொழுது - துன்பத்தைத் தருங்காலம்.

இப்பாடலின் கடைசி அடியின் பாடபேதம் :—

"பவளச் சடிலப் பரமற் கொருசொற் பகர்வோனே!
பழனப் பொழில்சுற் றுறுபொற் றணிகைப்
பதியிற் குமரப் பெருமாளே !"

(உ - ரை) பவளத்தைப்போற் சிவந்துள்ள சடாமுடியையுடைய பரம் பொருளாகிய சிவபெருமானுக்கு ஒப்பற்ற சொல்லான பிரணவத்தின் பொருளை உபதேசித்தவனே!, வயல்களும் சோலைகளும் சூழ்ந்துள்ள அழகிய திருத்தணிகை யென்னும் திருத்தலத்தில் குமாரசுவாமியாக எழுந்தளியிருக்கும் பெரியோனே!()

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த—தனதான.

**வ**னிதையுடல் காய நின்ற வுதிரமதி லேயு ருண்டு
வயிறில்நெடு நாள லைந்து புவிமீதே
மனிதருரு வாகி வந்து அநுதினமு மேவ ளர்ந்து
வயதுபதி னாறு சென்று வடிவாகிக்
கனகமுலை மாதர் தங்கள் வலையில்மிக வேயு ழன்று
கனிவதுட னேய ணைந்து பொருள்தேடிக்
கனபொருளெ லாமி ழந்து மயலில்மிக வேய லைந்த
கசடனெனை யாள வுன்ற னருள்தாராய் !
புனமதனில் வாழு கின்ற வனிதைரகு நாதர் தந்த
புதல்வியித ழூற லுண்ட புலவோனே !
பொருமதனை நீறு கண்ட அரியசிவ னாரு கந்த
புதியமயி லேறு கந்த வடிவேலா !
பனகமணி மாம தங்கி குமரிவெகு நீலி சண்டி
பரமகலி யாணி தந்த பெருவாழ்வே!
பகையசுரர் மாள வென்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதி னின்ற பெருமாளே !

(ப - ரை) புனம் அதனில் வாழுகின்ற வனிதை - தினைப்புனத்தில் (காவலாக) இருந்த பெண்ணும், ரகுநாதர் தந்த புதல்வி-இரகுவம்ச திலகராய் அவதரித்த திருமாலின் மகளுமான வள்ளிநாயகியின், இதழ் ஊறல் உண்ட புலவோனே -

அதராமுதத்தைப் பருகிய முருகனே !, பொரு மதனை நீறு கண்ட - தம்முடன் போர்செய்த மன்மதனை (நெற்றிக்கண்ணைத் திறந்து நோக்கி) சாம்பலாக்கியவரும், அரிய - (அவரது அருளைப் பெறாதவரால்) அடைவதற்கரிய பொருளாய் நிற்ப வருமான, சிவனார் - சிவபெருமான், உகந்த - கண்டு மகிழ்ச்சியடையும் (வண்ணம் மேலோனுயிருப்பவனும்), புதிய மயில் ஏறும் - அற்புத (அழகு வாய்ந்த) மயிலின்மீது ஏறிவருபவனுமான, கந்த - கந்தனே! வடிவேலா - வடித்துக்கூராக் கப்பட்ட வேலாயுதத்தை யுடையவனே !, ப(ன்)னகம் அணி - நாகத்தை மாலை யாக அணிகின்ற, மா மதங்கி - மகா காளி, குமரி - கன்னிப்பருவம் மாறாதவள், வெகு நீலி - மிகுந்த நீலித்தனமுடையவள், சண்டி - துர்க்கை, பரம கலியாணி - மிகுந்த நற்குணம் வாய்ந்து நிற்கும் பரம்பொருளாகிய உமை, (என்னும் திருநாமங்களையுடைய பார்வதி தேவியார்), தந்த - உலகத்துக்கு உதவியருளிய, பெருவாழ்வே - மேலான வாழ்வே, பகை அசுரர் மாள வென்று - நின்னிடத்துப் பகைமைபூண்ட அசுரர்கள் அழியும்படி அவர்களை வென்றும், அமரர் சிறை மீள வென்று - தேவர்கள் சிறையினின்றும் மீண்டு வெளியே வரும்படி (அசுரர்களை) வென்றும், பழநி மலை மீதில் நின்ற பெருமாளே - பழநி மலை மேல் எழுந்தருளிய பெரியோனே, வனிதை உடல் காய நின்று - ஒரு பெண்ணின் தேகமானது இளைக்கும்படி அதில் பொருந்தி நின்று, அ உதிரம் அதிலே உருண்டு - அத் தேகத்திலுள்ள இரத்தத்திலே புரண்டு, வயிறில் நெடு நாள் அலைந்து - (அப்பெண்ணின்) வயிற்றினில் வெகுகாலம் சஞ்சரித்து, புவி மீதே மனிதர் உருவாகி வந்து - பூவுலகத்தில் மனிதர் உருவத்துடன் வந்து பிறந்து, அநுதினமும் (ஏ - அசை) வளர்ந்து - நாளுக்கு நாள் உடல் பெரிதாகி வளரப் பெற்று, வயது பதினாறு சென்று - பதினாறு வயது ஆனபின், வடிவாகி - அழகிய வடிவத்தை யுடையவனாகி, கனக முலை மாதர் தங்கள் வலையில் - அழகிய தனபாரங்களையுடைய பெண்களின் (மீது உறும் ஆசையாகிய) வலையில், மிகவே உழன்று - அதிகமாக அலைந்து வருந்தி, கனிவு அதுடனே அணைந்து - அன்புடனே அவர்களை யணைந்து, பொருள்தேடி (அவர்கள் மனத்தைக் களிப்பிக்குமாறு) பொருளைச் சம்பாதித்து, கன பொருள் எலாம் இழந்து - ஏராளமான பொருள் முழுவதையும் இழந்து, மயலில் மிகவே அலைந்த - (பெண் காதலாகிய) மயக்கத்தில் அதிகமாகச் சிக்கித் திரிந்த, கசடன் எனை-கீழ்மகனாகிய அடியேனை, ஆள - நினது அடிமையாக்கிக்கொள்ள, உன் தன் அருள் தாராய் - உன்னுடைய அருளைத் தரவேண்டும் (நீ அருள் புரியவேண்டும்).

(வி - ரை) புலவன் - முருகன். புதுமை - அற்புதம்.

**மாதங்கி**:—மதங்கன் என்னும் ஒரு ரிஷி கடுந்தவமியற்றிப் பராசக்தியைப் புத்திரியாகப் பெற்றார். மதங்க ரிஷியின் புத்திரியாகப் பிறந்ததனுல், உமாதேவியாருக்கு மாதங்கி என்னும் திருநாமம் உண்டாயிற்று.

துன்பக் கலப்பில்லாமல் இன்பமே என்றும் நிறைந்துள்ள வாழ்வே மேலான வாழ்வாதலாலும், அத் தகைய வாழ்வைத் தரவல்லது மெய்ஞ்ஞானமே யாதலாலும், அத்தகைய மெய்ஞ்ஞானத்தை உலகத்தோருக்குப் போதிப்பதற் காகவே உமாதேவியார் ஞான சொரூபியான முருகப்பெருமானைத் தந்தருளின ராதலாலும், சுவாமிகள் அப்பெருமானை "பரம கலியாணி தந்த பெருவாழ்வே" என விளித்தருளினர்.

**மன்மத தகனம்:**—சூரர்கள் இழைத்து வந்த கொடுமைகளினின்றும் தேவர் கள் தப்பிப் பிழைக்குமாறு இந்திரன் சிவபெருமானை நோக்கிக் கடுந்தவமியற்ற, எம்பெருமான் அவன் முன்னே தோன்றி, சூரபதுமனைக் கொன்று தேவர்களைக் காக்கவல்ல புத்திரன் ஒருவனைத் தம்மிடத்தே அவதரிக்கச் செய்வதாகக் கூறி மறைந்தருளினர். ஆனல் அப்பெருமான் உமாதேவியாரைப் பருவதராஜனது மகளாகப் பிறக்கும்படி பணித்து அத்தேவியாரை விட்டுப் பிரிந்து, சனகாதியர் களுக்கு ஞானேபதேசம் செய்ய மோன நிலைமையில் அமர்ந்ததனல், அப்பெரு மான் இந்திரனுக்கு அளித்த வரம் நிறைவேறுவதற்கு வழியில்லாமலிருந்தது. இந்திரன் மனங் கலங்கிப் பிரமதேவரிடம் முறையிட, பிரமதேவர் சிவபெருமா னுக்குக் காமம் உண்டாகும்படி செய்து பார்வதி தேவியாரை அவர் மணந்து கொள்ளும்படி செய்வதே உய்யும் நெறியெனத் துணிந்து, மன்மதனை வர வழைத்து, சிவபெருமான்மீது போர்தொடுத்துப் புஷ்ப பாணங்களைப் பொழியும் படி கட்டளையிட்டார். மன்மதன் நடுங்கி அப் பாபச் செயலைத் தன்னல் செய்ய முடியாதென்று கூறி மறுத்தபோது, பிரமதேவர் அவனைச் சபிப்பதாகப் பய முறுத்தினர். மன்மதன் வேறு கதியில்லாமல் சிவபெருமான்மீது போர் தொடுக் கச் சென்று மோன நிலையில் அமர்ந்திருந்த அப்பெருமான்மீது புஷ்ப பாணங் களை யெய்தான். சிவபெருமான் உடனே நெற்றிவிழியைத் திறந்து மன்மதனை நோக்கினர். மன்மதன் அப்போதே எரிந்து சாம்பராயினன். (௩௧)

தனன தனனதன தந்தத்த தந்ததன
தனன தனனதன தந்தத்த தந்ததன
தனன தனனதன தந்தத்த தந்ததன—தந்ததான.

அதல விதலமுத லந்தத்த லங்களென
அவனி யெனஅமரர் அண்டத்த கண்டமென
அகில சலதியென எண்டிக்குள் விண்டுவென அங்கிபாநு
அமுத கதிர்களென அந்தித்த மந்த்ரமென
அறையு மறையெனஅ ருந்தத்து வங்களென
அணுவி லணுவெனநி றைந்திட்டு நின்றதொரு சம்ப்ரதாயம்

உதய மெழுஇருள்வி டிந்தக்க ணந்தனிலி
ருதய கமலமுகி ழுங்கட்ட விழ்ந்துணர்வி
லுணரும நுபவம னம்பெற் றிடும்படியை வந்துநீமுன்

உதவ இயலினியல் செஞ்சொற்ப்ர பந்தமென
மதுர கவிகளில்ம னம்பற்றி ருந்துபுகழ்
உரிய அடிமையுனை யன்றிப்ப்ர பஞ்சமதை நம்புவேனோ ?

தகுத தததகுத தந்தத்த தந்ததத
திதிதி திதிதிதிதி திந்தித்தி திந்திதிதி
தகுகு தகுதகுகு தந்தத்த தந்தகுகு திந்திதோதி

சகக சகமெகணக தந்தத்த குங்கெணக
டிடிடி டிடிடிடிடி டிண்டிட்டி டிண்டிடிடி
தகக தககதகக தந்தத்த தந்தகக என்றுதாளம்

பதலை திமிலைதுடி தம்பட்ட மும்பெருக
அகில நிசிசரர்ந டுங்கக்கொ டுங்கழுகு
பரிய குடர்பழுவெ லும்பைப் பிடுங்கரண துங்ககாளி

பவுரி யிடநரிபு லம்பப்ப ருந்திறகு
கவரி யிடஇகலை வென்றுச்சி கண்டிதனில்
பழநி மலையின்மிசை வந்துற்ற இந்திரர்கள் தம்பிரானே!

(ப - ரை) தகத.........தந்தகக, என்று - என்று, தாளம் - தாளங்களும், பதலை - மத்தளங்களும், திமிலை - பறைகளும், துடி - உடுக்கைகளும், தம்பட்டமும் - தம்பட்டங்களும், பெருக - மிகுதியாக முழங்கவும், அகில நிசிசரர் - எல்லா அசுரர்களும், நடுங்க - பயந்து நடுங்கவும், கொடும் கழுகு - கொடிய கழுகுகள், பரிய - பருத்த, குடர் பழுவெலும்பை பிடுங்க - குடல்களையும் விலாவெலும்புகளையும் பிணங்களினின்றும் பிடுங்கி இழுக்கவும், ரண துங்க காளி - போர்க்களத்திலாடும் உக்கிரமான காளி, பவுரி யிட - கூத்தாடவும், நரி புலம்ப - நரிகள் ஊளையிடவும், பருந்து இறகு கவரி இட - பருந்துகள் தங்கள் இறக்கைகளை அடித்துக்கொண்டு கவரிகளைப்போல் வீசவும், இகலை வென்று - பகைவர்களை வென்று, சிகண்டி தனில் - மயிலின்மீது (ஏறி), பழநி மலையின் மிசை - பழநி மலையின் மீது, வந்து உற்ற - வந்து எழுந்தருளிய, இந்திரர்கள் தம்பிரானே - இந்திரன் முதலிய தேவர்களின் நாயகனே !, அதல விதல முதல் அந்த தலங்கள் என - அதலம் விதலம் முதலான கீழுலகங்களாகவும், அவனி

என - பூமியாகவும், அமரர் அண்டத்து அகண்டம் என - தேவர்களுடைய உலகங்கள் எல்லாமாகவும், அகில சலதி என - எல்லாச் சமுத்திரங்களாகவும், எண் திக்கு உள் விண்டு என - எட்டுத் திக்குகளிலும் உள்ள (குல) பருவதங்களாகவும், அங்கி பாநு அமுத கதிர்கள் என - அக்கினி சூரியன் சந்திரன் இவர்களாகவும், அந்தித்த மந்த்ரம் என - (முத்தியை அடைவதற்கு உரியதென்று) நியமிக்கப்பட்ட மந்திரமாகவும், அறையும் மறை என - உண்மை எடுத்துரைக்கும் வேதங்களாகவும், அரும் தத்துவங்களென - அருமையான சிவ தத்துவங்களாகவும், அணுவில் அணு என - அணுவுக்குள் அணுவாகவும், நிறைந்திட்டு நின்றது ஒரு சம்ப்ரதாயம் - எங்கும் நிறைந்து நிற்பதாகிய ஒப்பற்ற சாமர்த்தியமானது, உதயம் எழ - விளங்கப்பெற்று, (அது காரணத்தினால்), இருள் விடிந்து - அஞ்ஞானவிருள் அகலப்பெற்று, அ கணம் தனில் - அந்த நிமிஷத்திலேயே, இருதய கமல முகிழும் - இதயமாகிய மலரும்பருவத் தாமரை மொட்டு, கட்டவிழ்ந்து-மலரப்பெற்று, உணர்வில் உணரும் அநுபவ மனம் - அறிவினால் நின்னை அறிவதாகிய அநுபவத்தைப் பெறவல்ல மனோசக்தியை, பெற்றிடும்படி (ஐ சாரியை) - அடியேன் பெறும்படி, வந்து நீ முன் உதவ - நீ அடியேன் முன்னே தோன்றி அடியேனுக்கு அருள்புரிந்திருக்க, இயலின் இயல் செம் சொல் - இசை பொருந்திய தமிழின் திருத்தமான சொற்களைக்கொண்டு (இயற்றப்பட்ட), ப்ரபந்தம் என மதுர கவிகளில் - பிரபந்தம் என்று சொல்லப்படும் இனிய பாமாலைகளில், மனம் பற்று இருந்து - மனமானது நிலையான ஆசை யுற்றிருக்கப் பெற்று, புகழ் - நின்னைப்புகழும், உரிய அடிமை - நினது சொந்த அடிமையாகிய அடியேன், உனையன்றி - நின்னையல்லாமல், ப்ரபஞ்சம் அதை நம்புவேனோ - உலகத்தை (அழிவற்ற பொருளென்று) நம்புவேனோ?

(வி - ரை) உலகத்தில் தோன்றும் பொருள்களெல்லாம் ஜடபேதங்களேயென்றும், எங்கும் யாவற்றினும் நிறைந்திருப்பது பரம்பொருள் ஒன்றேயென்றும் அறிந்து கொள்வதே ஞானோதயமென்று சொல்லலாம். அவ்வித அறிவு உதித்தவுடன், பூத பேதங்களினால் மருண்டு காமக்குரோதம் முதலியவைகளினால் நிரம்பியிருக்கும் மனமானது அவைகள் நீங்கப்பெறும்; புலன்களுக்குப் புலப்படும் பூதபேதங்கள் பொய்யென்பது விளங்கும். பிறகு இதயமானது, சூரிய கிரணங்கள் பட்டமாத்திரத்தில் தாமரை மலர்வதுபோல், விரிந்து அன்பு நிறையப்பெறும். அம் மெய்யன்பானது அடியார் மனத்திலுறையும் மெய்ப்பொருளான ஞானதேசிகனை - ஞானசொரூபியை - கருணைக்கடலை முருகப்பெருமானை - தன்னகத்துள்ளேயே அறிவினால் அறியச்செய்யும். அதுவே உண்மையான அநுபவம் என்றும், பேரின்பம் என்றும் ஞானம் என்றும், பலவாறாகக் கூறப்படும். அவ்வாறு அறிவினால் அறிந்து முருகப்பெருமானை அநுபவித்தவர் மீண்டும் மாயத்தோற்றமான பிரபஞ்சத்தைச் சத்தியமென நம்பவேமாட்டார்கள். அவ்வித அநுபவத்தைச் சுவாமிகள் தாம்பெற்றதாக இப்பாடலில் தெளிவாகக் கூறுகிறார்

பரிய - பாரிய=பருத்த. கீழுலகங்கள் ஏழு ; அவையாவன:—அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம்.

சிவதத்துவங்கள் ஐந்து ; அவையாவன:—சுத்த வித்தை (ஞானம் அதிகரித்துக் கிரியை குறைந்தது), ஈச்சுரம் (ஞானம் குறைந்து கிரியை அதிகரித்தது), சாதாக்கியம் (ஞானமும் கிரியையும் சமமாயிருப்பது), சத்தி (கிரியை நாடல்), சிவம் (ஞானம் ஒன்றல்). இயல்=இசை, தமிழ். அமுத கதிர் - சந்திரன். எட்டுக் குலபருவதங்க ளாவன:—இமயம், ஏமகூடம், கைலை, நிடதம், நீலம், மந்தரம், விந்தம், கந்தமாதநம் (௯0)

தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத்
தனதன தானத் தான தனத்தத்—தனதான.

அரிசன வாடைச் சேர்வை குளித்துப்
பலவித கோலச் சேலை யுடுத்திட்
டலர்குழ லோதிக் கோதி முடித்துச் சுருளோடே
அமர்பொரு காதுக் கோலை திருத்தித்
திருநுதல் நீவிப் பாளித பொட்டிட்
டகில்புழு காரச் சேறு தனத்திட் டலர்வேளின்
சுரதவி நோதப் பார்வை மையிட்டுத்
தருணக லாரத் தோடை தரித்துத்
தொழிலிடு தோளுக் கேற வரித்திட் டிளைஞோர்மார்
துறவினர் சோரச் சோர நகைத்துப்
பொருள்கவர் மாதர்க் காசை யளித்தற்
றயரற வேபொற் பாத மெனக்குத் தருவாயே !
கிரியலை வாரிச் சூர ரிரத்தப்
புணரியின் மூழ்கிக் கூளி களிக்கக்
கிரணவை வேல்புத் தேளிர் பிழைக்கத் தொடுவோனே !
கெருவித கோலப் பார தனத்துக்
குறமகள் பாதச் சேக ரசொர்க்கக்
கிளிதெய்வ யானைக் கேபு யவெற்பைத் தருவோனே !
பரிமள நீபத் தாரொ டுவெட்சித்
தொடைபுனை சேவற் கேத னதுத்திப்
பணியகல் பீடத் தோகை மயிற்பொற் பரியோனே!

பனிமல ரோடைச் சேலு களித்துக்
ககனம ளாவிப் போய்வரு வெற்றிப்
பழநியில் வாழ்பொற் கோம ளசத்திப் பெருமாளே!

(ப - ரை) கிரி அலை வாரி - கிரௌஞ்சம் என்னும் மலைக்குள்ளும் அலைவீசும் சமுத்திரத்துக்குள்ளும், சூரர் இரத்த புணரியில் - சூரபதுமன் முதலாயினோர்களுடைய உடலினின்றும் இரத்தம் பெருகியதனால் உண் டான இரத்தக்கடலில், கூளி மூழ்கி களிக்க - ஆண்பேய்கள் முழுகிக் களிப்புடன் விளையாடுமாறும், புத்தேளிர் பிழைக்க - தேவர்கள் (அசுரர்கள் இழைத்த கொடுமைகளினின்றும்) தப்பிப் பிழைக்குமாறும், கிரண வை வேல் தொடுவோனே - ஒளிவீசுவதும் கூர்மை பொருந்தியதுமான வேலாயுதத்தைப் பிரயோகம் செய்தவனே!, கெருவித கோல பார தனத்து குறமகள் - செருக்கும் அழகும் பருத்த தனபாரங்களும் வாய்ந்த வேடர்மகளான வள்ளி நாயகியின், பாத சேகர - பாதங்களை முடிமீது சூட்டிக் கொள்பவனே, சொர்க்க கிளி - தேவ லோகத்தில் பிறந்து கிளியைப்போல் கொஞ்சும் மொழியுடைய, தெய்வ யானைக்கு (ஏ அசை) - தெய்வயானை யம்மைக்கு, புய வெற்பை தருவோனே - மலையையொத்த புயங்களை அத்தேவியார் அணைந்து கொள்ளும்படி தருபவனே!, பரிமள நீப தாரொடு - நறுமணம் வீசும் கடம்ப மாலையுடன், வெட்சி தொடை புனை - வெட்சிமலர் மாலையையும் அணிந்துகொண்டு, சேவல் கேதன - சேவ லைக் கொடியாகக் கொண்டு, துத்தி பணி அகல் பீட - பொறியையுடைய பாம் பின் படமான அகன்ற பீடத்தின்மீது, (நிர்த்தனம் செய்யும்), தோகை மயில் - தோகையையுடைய மயிலாகிய, பொன் பரியோனே - குதிரையைப்போல் வேக மாய்ச் செல்லும் அழகிய வாகனத்தையுடையவனே, பனி மலர் ஓடை சேல் (உ-அசை) - குளிர்ந்த நீர் நிரம்பப் பெற்றதும் தாமரை முதலிய மலர்கள் மலரப் பெற்றதுமான நீரோடைகளிலுள்ள கயல்மீன்கள், களித்து ககனம் அளாவி போய்வரு - குதூகலத்துடன் ஆகாயத்தை அளாவிச் சென்று மீளும் (தலமான), வெற்றி பழநியில் - தன்னையடைந்தார்க்கு வெற்றியைத் தரத்தக்க பழநியில், வாழ் - எழுந்தருளியிருக்கும், பொன் கோமள சத்தி பெருமாளே - அழகும் இளமையும் பராக்கிரமும் உடைய பெரியோனே!, அரிசன வாடை சேர்வை குளித்து - மஞ்சள் சேர்ந்ததும் வாசனையுள்ளதுமான கலவைப் பொடியை உப யோகித்து நீராடி, பலவித கோல சேலை உடுத்திட்டு - பலவிதமான அழகிய சேலை களை யுடுத்திக்கொண்டு, அலர் குழல் ஓதி கோதி முடித்து - விரிந்த கூந்தலை வகிர்ந்து முடித்துக்கொண்டு, சுருளோடு (ஏ - அசை) - தாமரையின் உட்சுருளு டன், அமர் பொரு - (எது அதிக மென்மையுடையது என்று) போர் செய்யும், காதுக்கு - காதுக்கு, ஓலை திருத்தி - ஓலை செவ்வையாக அணிந்து, திரு நுதல் நீவி - அழகிய நெற்றியைத் துடைத்துத் துலக்கி, பாளித பொட்டு இட்டு -

பச்சைக் கர்ப்பூரம் கலந்த கலவையினுல் பொட்டிட்டு, அகில் புழுகு ஆரம் சேற- அகில் புனுகு இவை சேர்ந்த சந்தனக் குழம்பை, தனத்து இட்டு - தனபாரங் களின்மீது பூசிக்கொண்டு, அலர் வேளின் சுரத விநோத பார்வை - புஷ்ப பாணங்களேயுடைய மன்மதனுக்குரிய அன்பையும் ஆசையையும் உதிக்கச் செய் யும் பார்வையையுடைய கண்களுக்கு, மை இட்டு - மை இட்டு, தருண கல் ஆர தோடை தரித்து - புதிய இரத்தினங்களும் முத்துக்களும் கோத்த மாலையை யணிந்து, தொழில் இடு - (யாவரையும் ஆளாக்கிக்கொண்டு) பணிவிக்கும், தோளுக்கு ஏற வரித்திட்டு - (அழகிய) புயங்களுக்கு (அம்மாலேகளேயே) அதிக மாகக் கட்டி அணிந்துகொண்டு, இளேஞோர்மார் துறவினர் சோர சோர - வாலிபர்களும் துறவிகளும் மேன்மேலும் மனச் சோர்வு அடையும்படி, நகைத்து - புன்னகை செய்து, பொருள் கவர் மாதர்க்கு - அவர்களுடைய கைப் பொருளேப் பறித்துக்கொள்ளும் விலேமாதர்களுக்கு, ஆசை அளித்தல் - அவர்கள் இச்சித்ததைக் கொடுப்பதான, துயர் அறவே - மனத்துன்பம் முற்றிலும் அழியு மாறு, பொன் பாதம் எனக்கு தருவாயே - நினது அழகிய பாதங்களே அடியே னுக்குத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) ''இமையவர்க ணகரிலிறை குடிபுகுத நிருதர்வயி றெரிபுகுத * இளேயதளர் நடைபழகி விளேயாடல் கூருவதும்'' என்று சீர்பாதவகுப் பில் கூறியவாறே சுவாமிகள் இப்பாடலிலும் எம்பெருமான் வேலாயுதத்தைப் பிரயோகித்த காரணத்தை ''கிரியலே வாரி * * புத்தேளிர் பிழைக்கத் தொடு வோனே'' என்று விசித்திரமாகக் கூறியுள்ளார். ஜீவர்களிடத்துத் தமக்குள்ள பேரன்பை நன்கு விளக்கிக்காட்டுவதற்காகவே தமது மாமன் மகளான சுந்தரவல் லியை மான் மகளாகப் பிறந்து வேடர்குலத்தில் வளரும்படி பணித்தருளிய முரு கப்பெருமான் அவ்வாறு வேடர்குலத்தில் வள்ளிநாயகி என்னும் திருநாமத்துடன் வளர்ந்துவந்த அத்தேவியினிடத்துக் காட்டிய அளவற்ற காதலும் சரசலீலேகளும் அடியவர் மனத்தில் அளவற்ற ஆனந்தத்தை விளேவிக்கின்றன. அவ்வாறு அப் பெருமான் காட்டிய பெருங்காதலேயும் விநோத சரசலீலேகளேயும் சுவாமிகள் விசித்திரமாகப் பல பாடல்களில் கூறியுள்ளார். அவைகளிற் சில பின்வரு மாறு:—

''பணியா வெனவள் ளிபதம் பணியுந்
தணியா வதிமோ கதயா பரனே!''

''காலேக் குமரே சனெனக் கருதித்
தாளேப் பணியத் தவமெய் தியவா
பாலேக் குழல்வள் ளிபதம் பணியும்
வேலேச் சுரபூ பதிமே ருவையே!''

''வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே!''

பகைவர் சேனைகளைத் துரத்தும்போது வேந்தர் வெட்சிமலர் மாலை அணிவது வழக்கம். ஞான சொரூபியான முருகப்பெருமான் செந்தாமரையை யொத்த தமது பாதங்களில் அடைக்கலம் புகுந்தவர்களுடைய மும்மலங்கள் காமக்குரோதம் முதலான துர்க்குணங்கள் ஆகிய பகைவர்களை வென்று துரத்துவாராதலால், அஞ்ஞான விருளினால் பிறக்கும் அவைகளை அகற்றவல்ல ஞானவொளி வீசும் தமது பாதமலர்களில் வெட்சிமலர் மாலையை அணிந்துகொண் டிருக்கிறார் இக் கருத்தைப் பின்வரும் **கந்தரலங்காரப்**பாடலில் தெளிவாய்க்காண்க.

"வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணாக வல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்துச்சும் மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே."

"பனிமல ரோடை * * * * போய்வரு" என்றதனால் பழநித் தலமானது நீர் வளப்பம் மிக்கது எனத் தெரியவருகிறது. (சக)

தனதன தனதத்த தனதன தனதத்த
தனதன தனதத்த—தனதான.

அறமிலா நிலைகற்று கொடியவேல் விழிவிட்டு
எறிவுதா னறவைத்து விலைபேசி
அமளிமீ தினில்வைத்து பவளவா யமுதத்தை
யதிகமா யுதவிக்கை வளையாலே
உறவினா லுடலத்தை யிறுகவே தழுவிக்கொ
ளுலையிலே மெழுகொத்த மடவாரோ
டுருகியே வருபெற்றி மதனநா டகபித்து
வொழியுமா றொருமுத்தி தரவேணும்!
மறவர்மா தொருரத்ந விமலகோ கநகத்தி
மயிலனாள் புணர்செச்சை மணிமார்பா!
மருள்நிசா சரன்வெற்பி லுருகிவீழ் வுறமிக்க
மயிலிலே றியவுக்ர வடிவேலா!
பறைகள்பே ணியருத்ரி கரியகா ளகத்தி
பரமர்பா லுறைசத்தி யெமதாயி
பழையபார் வதிகொற்றி பெரியநா யகிபெற்ற
பழநிமா மலையுற்ற பெருமாளே!

(ப - ரை) மறவர் மாது - வேடர் மகளான, ஒரு - ஒப்பற்ற, ரத்ந - சிறந்த, விமல - அழகு வாய்ந்த, கோகநகத்தி - செந்தாமரையில் வசிக்கும் இலக்குமியை யொத்தவள், மயில் அ(ன்)னாள் - மயிலையொத்தவள், (ஆகிய வள்ளிநாயகி), புணர் - தழுவும், செச்சை - வெட்சிமலர் மாலை யணிந்த, மணி மார்பா - அழகிய மார்பையுடையவனே!, மருள் நிசாசரன் - (மாயையின் உபதேசத்தினால்) மயக்கமுற்றிருந்த அசுரனாகிய தாரகன், வெற்பில் உருகி வீழ்வுற - (தனக்கு உதவியாயிருந்த மாயையின் சொரூபமான) கிரௌஞ்ச மலையின்மீது சோர்வுற்று விழுமாறு, மிக்க மயிலில் ஏறிய - சிறந்த மயிலின்மீது ஏறிய, உக்ர வடிவேலா - உக்கிரமான வடிவேலை யுடையவனே!, மறைகள் பேணிய ருத்ரி - வாத்தியங்களை விரும்பிய உருத்திரியும், கரிய கார் அளகத்தி - கருத்த மேகத்தையொத்த கூந்தலையுடையவரும், பரமர் பால் உறை சத்தி - பரம்பொருளாகிய சிவபெருமானது (இடப்) பாகத்தில் அமர்ந்திருக்கும் சிவசக்தியும், எமது ஆயி - உலகிலுள்ள ஜீவர்களாகிய நம்மை ஈன்ற தாயும், பழைய பார்வதி - (உலகம் தோன்று முன்பே தோன்றிய) புராதனியான பார்வதியும், கொற்றி - துர்க்கையும், பெரிய நாயகி - மகாதேவியுமான உமாதேவியார், பெற்ற - உதவியருளிய(வனும்), பழநி மா மலை உற்ற பெருமாளே - பழநி என்னும் சிறந்த மலையில் எழுந்தருளியிருப்பவனுமான பெரியோனே!, அறம் இலா - தருமம் இல்லாத, நிலை கற்று - நிலைமையிலிருக்கக் கற்றுக்கொண்டு, கொடிய வேல்விழி விட்டு - கொடுங்குணமுள்ளதும் வேல்போல் கூர்மையானதுமான கண்களின் பார்வையைச்செலுத்தி, உள் அறிவு தான் அறவைத்து - (ஆடவர்) மனத்தினுள்ளிருக்கும் உண்மையறிவானது முற்றிலும் அழிந்துபோன நிலைமையில் (ஆடவர்களைச்) சேர்த்து, விலை பேசி - தங்களை அணைவதற்குரிய விலையைப்பேசித் தீர்த்துக்கொண்டு, அமளி மீதினில் வைத்து-(அவ் வாடவர்களை) படுக்கையின்மீது இருத்தி, பவள வாய் அமுதத்தை அதிகமாய் உதவி - (தங்கள்) பவளத்தையொத்த சிவந்த வாயினில் ஊறும் அதராமுதத்தை அதிகமாக அளித்து, கை வளையாலே - வளைகளை யணிந்த கைகளினாலே, உறவினால் உடலத்தை இறுகவே தழுவிக்கொள் - நேசம் பாராட்டி (அவ் வாடவர்கள்) தேகத்தை இறுக அணைந்துகொள்ளும், உலையிலே மெழுகு ஒத்த மடவாரோடு - உலையிலிட்ட(தனால் துவளும்) மெழுகைப்போன்ற பெண்களோடு, உருகியே வரு(ம்) பெற்றி - (அவர்கள்மீது ஆசையுற்று) மனமுருகி வரும் குணமும், மதன நாடக பித்து - (அவர்களுடன்) மன்மத லீலைகளைச் செய்யவேண்டுமென்ற பைத்தியமும், ஒழியுமாறு - ஒழியும் வண்ணம், ஒரு முத்தி தரவேணும் - ஒப்பற்ற முத்தியைத் தந்தருளவேண்டும்

(வி - ரை) சூரபதுமனும் அவன் தம்பிமார்களான சிங்கமுகனும், தாரகனும் தங்கள் தந்தையான காசிபமுனிவரைப் பணிந்து தாங்கள் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய நெறியைப் போதிக்கும்படி பிரார்த்தித்தபோது, காசிபமுனிவர் அவர்களை நோக்கி, "தருமம் என்று ஒரு பொருள் உண்டு. அவிரோத புத்தியுடன்

யாவற்றையும் சமமாகக் கருதுபவர்க்கல்லாமல் மற்றெவருக்கும் அது இன்ன தென்றுணர்வது சாத்தியமன்று. அத் தருமத்தைச் செய்பவன் சர்வேசுவரருடைய அருளைப்பெற்று அவருடைய பாதாரவிந்தங்களை யடைவான். அவனுடைய பிறவி நோயும், முத்தி நெறியிற் சேரவொட்டாமல் அவனைத் தடுத்து வந்த ஆணவம் காமியம் மாயை என்னும் மூன்று பாசங்களும் நீங்கும். ஆதலால் நீங்கள் தருமத்தைச் செய்யுங்கள்; தீயகுணங்களை யகற்றுங்கள்; சிவபெருமானை நோக்கித் தவம் புரியுங்கள்'' என்று உபதேசஞ் செய்தார். அது கேட்ட அவர்கள் தாயான மாயை நகைத்து, அம்முனிவர் கூறிய மார்க்கம் முத்தியடைய விரும்பும் முனிவர்களுக்குத் தகுந்ததேயன்றி, பெருஞ்செல்வத்தையும் வெற்றியையும் சுகத்தையும் முடிவில்லாத ஆயுளையும் பெருங் கீர்த்தியையும் அடையவேண்டிய தனது புதல்வர்களுக்குத் தக்கதல்லவென்று கூறித் தனது புதல்வர்களை அழைத்து, "எனது அருமை மக்களே! ஜீவர்கள் பிறவியினால் அடையத் தக்க சிறந்த பலன்கள் சாஸ்திர ஞானமும் குறைவில்லாத செல்வமுமாகும். அவ்விரண்டினில் செல்வமே சிறந்தது. ஆதலால் அதைப்பெற நீங்கள் மூவரும் சிவபெருமானைத் துதித்துக் கொடிய யாகத்தைச் செய்யுங்கள்! அப்பெருமான் நீங்கள் விரும்பும் பொருள்கள் யாவும் உங்களுக்கு இம்மையிலேயே கிடைக்கும்படி அருள் புரிவார்'' என்றாள். இப்படி மாயை உபதேசஞ் செய்ததனால், தாரகாசுரன் உண்மையான தருமநெறி யாதென வுணராது மருட்சியுற்று மாயையின் சொரூபமான கிரௌஞ்சத்தைத் துணையாகக்கொண்டு யாவர்க்கும் கொடுமைகளை இழைத்துவந்தான். முருகப்பெருமான் அசுரர்களின் மீது படையெடுத்துச் சென்று, தாரகனையும் கிரௌஞ்சத்தையும் அழித்து வரும்படி வீரவாகுதேவருக்குக் கட்டளையிட, அவர் தருமப்போர் செய்து தாரகனைவென்று அவுணசேனைகளை யழித்தருளினர். தாரகன் போரில் புறங்காட்டியோடிக் கிரௌஞ்சமலைக்குள் ஒளித்துக் கொண்டான். அவனைத் துரத்திச்சென்ற வீரவாகுதேவரும் இலக்ஷத்தெட்டு வீரர்களும் பூதத்தலைவர்களும் அம்மலைக்குள் அகப்பட்டு அதன் மாயையினால் மயங்கிச் சோர்வுற்றனர். பிறகு தாரகன் முருகப்பெருமானுடன் மாயப்போர் செய்யத்தொடங்க, அவர் வேலாயுதத்தைப் பிரயோகித்தார். அது சென்று தாரகனைக் கொன்று கிரௌஞ்சமலையைப் பிளந்தழித்து அதனுள் சிறைப்பட்டிருந்த வீரவாகு தேவர் முதலாயினோரை மீட்டுக்கொண்டு கணப்பொழுதில் திரும்பிவந்தது. இவ் வரலாற்றையே சுவாமிகள் " மருள் நிசாசரன் * * * * வடிவேலா '' என்ற அடியில் கூறியுள்ளார். உருத்திரன் = ஆன்மாக்களின் துயரத்தை யகற்றுவோன்; உருத்திரனது தேவியான உமாதேவியாரை ருத்ரி என்று இங்கு கூறப்பட்டது. பெண்காதலினால் சோர்வுற்று மன்மத லீலைகளைச்செய்வது மாயையின் உறைவிடமான ஜடசரீரம் ஒழிந்தால்தான் முற்றிலும் ஒழியுமாதலால், சுவாமிகள் அது ஒழியும் வண்ணம் விடுதலையாகிய - பிறவி யொழிதலாகிய - முத்தியைத் தந்தருளும்படி வேண்டுகிறார். (சஉ)

தனந்த தனதன தனதன தனதன
தனந்த தனதன தனதன தனதன
தனந்த தனதன தனதன தனதன—தனதான

குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமால

குடின்பு குதுமவ ரவர்கடு கொடுமைய
ரிடும்ப ரொருவழி யிணையிலர் கசடர்கள்
குரங்க ரறிவிலர் நெறியிலர் மிருகனை விறலான

சரம்ப ருறவனை நரகனை துரகனை
யிரங்கு கலியனை பரிவுறு சடலனை
சவுந்த ரிகமுக சரவண பதமொடு மயிலேறித்

தழைந்த சிவசுடர் தனையென மனதினி
லழுந்த வுரைசெய வருமுக நகையொளி
தழைந்த நயனமு மிருமலர் சரணமு மறவேனே!

இரும்பை வகுளமொ டியைபல முகில்பொழி
லுறைந்த குயிலளி யொலிபர விடமயி
லிசைந்து நடமிடு மிணையிலி புலிநகர் வளநாடா!

இருண்ட குவடிடி பொடிபட வெகுமுக
டெரிந்து மகரமொ டிசைகரி குமுறுக
இரைந்த வசுரரொ டிபபரி யமபுரம் விடும்வேளே!

சிரம்பொ னயனெடு முநிவர்க ளமரர்க
ளரம்பை மகளிரொ டரகர சிவசிவ
செயம்பு வெனநட மிடுபத மழகியர் குருநாதா!

செழும்ப வளவொளி நகைமுக மதிநகு
சிறந்த குறமக ளிணைமுலை புதைபட
செயங்கொ டணைகுக சிவமலை மருவிய பெருமாளே!

(ப - ரை) இரும்பை வகுளமொடு இயை-இலுப்பை மரங்கள் மகிழ மரங்களுடன் கலந்து வளர்ந்திருக்கும், பல முகில் பொழில் - மேகங்களை அளாவிநிற்கும் அநேக சோலைகளில், உறைந்த குயில் அளி ஒலி பரவிட - வசிக்கும்

குயில்களும் வண்டுகளும் இனிய கீத நாதம் பரவும்படி செய்ய, மயில் இசைந்து நடமிடும் – மயில்கள் அந்த கீதத்துக்கு இசைய நிர்த்தனம் செய்யப்பெறும், இணையிலி புலிநகர் - இணையற்ற புலிநகர் என்னும் திருநாமம் பெற்ற சிதம்பரத்தைப் பிரதான நகரமாகவுடைய, வளநாடா - வளப்பமான நாட்டுக்கு அதிபனே !, இருண்ட குவடு இடி பொடி பட – அந்தகாரம் நிறைந்துள்ள (மாயையின் சொரூபமான) கிரௌஞ்சமலை இடிந்து பொடியாகவும், வெகு முகடு எரிந்து – பல மலைகளின் சிகரங்கள் தீப்பற்றி எரியவும், மகரம் – சுறுமீன்களின் இருப்பிடமான சமுத்திரமும், ஒள் திசை கரி குமுறுக – ஒழுங்காகவுள்ள திக்குகளில் நிற்கும் திக்கு யானைகளும் பேரொலி செய்யவும், இரைந்த அசுரரொடு - சீறிவந்த அசுரர்களுடன், இப பரி – அவர்களது யானைப்படைகளையும் குதிரைப்படைகளையும், யமபுரம் விடும் வேளே – நமனுலகத்துக்கனுப்பிய முருகனே!, சிரம் பொன் அயனொடு – மேன்மை பொருந்தியவரும் அழகு வாய்ந்தவருமான பிரமதேவரோடு, முனிவர்கள் – முனிவர்களும், அமரர்கள் – தேவர்கள், அரம்பை மகளிரொடு – தேவமாதர்களோடும், ஹர ஹர சிவ சிவ செ(சு)யம்பு என-ஹரா ஹரா ! சிவ சிவா! சுயம்புவே! என்னும் திரு நாமங்களை உரைத்து நிற்க, நடம் இடு பதம் அழகியர் – நிர்த்தனஞ் செய்யும் அழகிய பாதங்களையுடைய சிவபெருமானது, குரு நாதா – குருவாக அமர்ந்த நாதனே! செழும் பவள – நல்ல பவளத்தைப்போல் சிவந்த நிறமுள்ள வாயும், ஒளி நகை – பிரகாசமான பற்களும், (பொருந்திய), நகு மதி முக –ஒளி வீசும் சந்திரனை யொத்த முகத்தையுடைய,சிறந்த குறமகள் இணை முலை - சிறந்த வேடர்மகளான வள்ளிநாயகியின் இருதனபாரங்களும், புதைபட – நினது மார்பின் மீது அழுந்துமாறு, செயம் கொடு - வெற்றியுடன், அணை குக - அணைந்துகொண்ட குகனே!, சிவமலை மருவிய – சிவகிரி என்னும் திருநாமம் பெற்ற பழநிமலையில் எழுந்தருளியிருக்கும், பெருமாளே – பெரியோனே, குரம்பை – உடலானது, மல சலம் வழுவளு நிணமொடு – மலம் மூத்திரம் வழுவழுப்பாயுள்ள மாமிசம் இவைகளுடன், எலும்பு அணி சரி தசை இ(ஈ)ரல் குடல்- எலும்புகளும் அவைகளுக்குச் சமீபத்தில் சாய்ந்து பொருந்தியுள்ள தசை ஈரல் குடல், நெதி குலைந்த செயிர் மயிர் குருதியொடு – முறைமை தவறிப் பொருந்தியிருக்கும் குற்றமுள்ள மயிர் இரத்தம் இவைகளோடு, இவை பல கசுமால குடில் – இவைபோன்ற மற்றும் பல அழுக்குகள் பொருந்தியுள்ள சிறு வீடு ; புகுதும் அவர் – அதில் குடியாக வருகிறவர்களோ வெனில், அவர் கடு கொடுமையர் - அவர்கள் மூர்க்கத்தனமும் கொடிய குணமும் உள்ளவர்கள், இடும்பர் – பிறர் துயரமுறும்படி செய்வதையே தொழிலாக வுடையவர்கள், ஒரு வழி இணை இலர் – ஒரு வழியிலும் ஒத்து வராதவர்கள், கசடர்கள் – குற்றம் பொருந்தியவர்கள், குரங்கர் - குரங்கைப் போல் சஞ்சல புத்தியை யுடையவர்கள், அறிவிலர் – அறிவில்லாதவர்கள், நெறியிலர்-நன்னெறியில் நில்லாதவர்கள், மிருகணை விறலான சரம்பர் – (விஷய சுகங்களைத்) தேடுவதில் திறமை வாய்ந்தவராய்ச் சதா காலமும் சஞ்சரிப்பவர்கள்; (அடியேனுவெனில் அப்படிப்பட்டவர்களது), உறவன் (ஐ -சாரியை)-

சிநேகிதன், நரகன் (ஐ - சாரியை) - நரகவாசின். துரக, (ஐ - சாரியை)-மனம் இழுத்த வழியே செல்லுபவன், இரங்கு கலியன் (ஐ - சாரியை) - துன்பமுற்றுப் பரிதவிப்பவன், பரிவு உறு சடலன் (ஐ - சாரியை) - துன்பத்துக்கு உறைவிடமான தேகத்தையுடையவன்; (அப்படிப்பட்ட), என மனதினில் - அடியேனுடைய மனத்தினில், தழைந்த சிவ சுடர் தனை - எங்கும் பரந்திருக்கும் சிவ ஞானத்தை, அழுந்த உரை செய - நன்றாய்ப் பதியுமாறு உபதேசிக்க, சவுந்தரிக முக சரவண பதமொடு - கட்டழகு வாய்ந்த முகமும் தாமரை மலரை யொத்த பாதங்களும் தோன்ற, மயில் ஏறி வரு(ம்) - மயிலின்மீது எழுந்தருளி வந்த போது, முக நகை ஒளி - நினது முகத்தில் தோன்றிய புன்னகையின் பிரகாசத்தையும், தழைந்த நயனமும் - கருணையுடன் குனிந்து அடியேனைப் பார்த்த நினது கண்களையும், இரு மலர் சரணமும் மறவேனே - நினது இரண்டு பாதாரவிந்தங்களையும் அடியேன் மறக்கமாட்டேன்.

(வி - ரை) **புலிநகர்:**—மத்தியந்தி நவ முனிவரது குமாரராய் அவதரித்து மழமுனிவர் என்னும் திருநாமம் பெற்ற முனிவர், சிவபெருமானிடத்துப் பூண்ட பேரன்பினால், பொழுது விடிந்த பின் மலர்கள் வண்டுகள் மொய்க்கப்பெற்று எச்சிலாவதனால் அம்மலர்களினால் எம்பெருமானை அருச்சிக்க மனமில்லாதவராய் வண்டுகள் மொய்க்கவருமுன் இருளிலேயே மலர்களைக் கொய்ய வேண்டுமென நிச்சயித்து, சிற்றுயிர்களுக்குத் துன்பம் நேராவண்ணம் புலிக்கால்களையும் இருளில் நல்ல பார்வைபெறும் வண்ணம் புலிக்கண்களையும் சிவபெருமானை வேண்டிப் பெற்று, தில்லை வனத்துக்கு இருளிற் சென்று பழுதுபடாத மலர்களைப் பறித்துப் பகல் முழுதும் பூசை செய்து வந்தார். அதனால் அவர் **வியாக்கிரபாதர்** என்னும் காரணப்பெயர் பெற்றார். அவர் சிதம்பரத்தில் கனகசபையில் சிவபெருமான் செய்யும் ஆனந்தத் தாண்டவத்தைப் பிரத்தியக்ஷமாகக் கண்டவர். மேற்கூறிய காரணங்களினால் சிதம்பரத்துக்குப் **புலியூர்** என்னும் பெயர் வழங்கலாயிற்று. "செழும்பவள * * * * * * * குக" என்று சுவாமிகள் கூறியதற்குக் காரணம் என்னவெனில், பலவிதமாகத் தமது காதலை யெடுத்து உணர்த்தியும் தம்மை மணந்துகொள்ள வள்ளிநாயகி இசையாததைக் கண்ட முருகப்பெருமான் மதயானையை அத்தேவியாரின் முன்னே தோன்றச்செய்து அத்தேவியார் தம்மை மணந்து கொள்ள இசையும்படி செய்ததுதான். முருகப்பெருமான் தமது நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டதனால் "செயங்கொடணைகுக" என்று கூறப்பட்டிருக்கிறது. ஜீவர்களை ஆட்கொண்டு தமது பாதமலர்களை அடையும் நெறியில் நிற்கச் செய்வதையே தமது தனி நோக்கமாகக் கொண்டுள்ள முருகப் பெருமான் ஒரு ஜீவனைத் தடுத்தாட்கொள்ள முயலுகையில் தமக்கு அந்த ஜீவன் மீதுள்ள அளவற்ற காதலைப் பலவிதமாகக் காட்டியும் அந்த ஜீவன் தன்னையடையும் நெறியில் நில்லாவிடில், யாக்கை நிலையாமையையும், இயமன் வருங்கால் உறவினர் காக்கும் சக்தியற்றவர் என்பதையும், நிர்க்கதியாய்த் தம்மைச் சரண்புகு

வோர்களைத் தாம் காத்து அருள்புரிவது திண்ணம் என்பதையும், தாம் எக்காலத்திலும் ஜீவனுக்குத் துணையாய் அதனருகில் நின்று தக்க வேளையில் உதவக் காத்திருப்பதையும், சோர்வுற்றுத் தம்மை நினைப்பவர் மனத்தில் உறையும் குகன் தாமே யென்பதையும் இத்திருவிளையாடலினுல் உலகத்தோருக்கு உணர்த்தியருளினுர். இக்கருத்தை,

"பகர புகர்முக மதகரி யுழைதரு
வனிதை வெருவமுன் வர அருள் புரிகுக"

என வரும் மற்ருெரு பாடலிலுங்காண்க.

இவ்விஷயம் இவ்வுரையின் 54 - 55 பக்கங்களிலுள்ள விருத்தியுரையில் விளக்கப்பட்டிருப்பதையும் காண்க.

சுவாமிகள் மனித தேகத்தைப்பற்றிக் கூறுங்கால் அது மல மூத்திராதிகள் நிறைந்த "குற்றம் பொருந்திய சிறுவீடு; அதில் குடிபுகுந்து இருப்பவர்களோ கொடியவர்களான ஐம்புலன்கள். அடியேனுே அம் மூர்க்கர்களின் சிநேகிதனுய் அவர்கள் இழுக்கும் வழிகளிலெல்லாம் சென்று பெருந்துன்ப மடைகிறேன். ஐம்புலன்களின் கைகளிற் சிக்கித் தப்ப வழியறியாது தியங்கும் அடியேனைக் காத்தருளுவதற்காக நீ கருணைபுரிந்து மயிலின்மீ தேறி அடியேனுக்குச் சிவ ஞானத்தைப் போதிக்க வந்தாய். "குப்பாச வாழ்க்கையிற் கூத்தாடுமைவரிற் கொட்படைந்த இப்பாச நெஞ்சனை"யும் ஒரு பொருட்டாக மதித்து ஈடேற்ற நீ வந்தருளியபோது, அன்பினுல் நினது முகத்தில் தோன்றிய புன்னகையையும், மிகுந்த கருணையுடன் சிறியேனை நோக்கிய கண்களையும், - எனது பிறவித் துன்பத்தையகற்றிப் பேரானந்தத்தை யளிக்கும் முத்தி வீடான நினது பாதமலர்களிரண்டையும் கண்டு களித்தேன். அவைகளை நான் ஒருநாளும் மறக்க முடியாது" என்று முருகப்பெருமானிடத்தில் தெரிவித்துக்கொள்ளுகிருர். (சஙு)

தனதனு தனதன தந்த தானன
தனதனு தனதன தந்த தானன
தனதனு தனதன தந்த தானன—தனதான.

பெரியதோர் கரியிரு கொம்பு போலவெ
வடிவமார் புளகித கும்ப மாமுலை
பெருகியே யொளிசெறி தங்க வாரமு மணியான

பிறையதோ வெனுநுதல் துங்க மீறுவை
அயிலதோ வெனுமிரு கண்க ளாரவெ
பிறகெலாம் விழுகுழல் கங்கு லாரவெ வருமானுர்

உரியதோர் பொருள்கொடு வந்த பேர்களை
மனையிலே வினவியெ கொண்டு போகியெ
யுளவிலே மருவிய வஞ்ச மாதர்கள் மயலாலே

உருகியே யுடலற வெம்பி வாடியெ
வினையிலே மறுகியெ நொந்த பாதக
னுனதுதாள் தொழுதிட இன்ப ஞானம தருள்வாயே!

அரியதோ ரமரர்க ளண்ட மேறவெ
கொடியதோ ரசுரர்க ளங்க மாளவெ
அடலதோ டமர்புரி கின்றகூரிய வடிவேலா!

அரகரா வெனமிக அன்பர் சூழவெ
கடியதோர் மயில்மிசை யன்றை யேறியெ
அவனியோர் நொடிவரு கின்ற காரண முருகோனே!

பரியதோர் கயிறனை கொண்டு வீசவெ
உறியதோய் தயிர்தனை யுண்டு நாடியெ
பசியதோ கெடவருள் கொண்ட மாயவன் மருகோனே!

பரமமா நதிபுடை கொண்ட ணுவவெ
வனசமா மலரினில் வண்டு லாவவெ
பழநிமா மலைதனி லென்று மேவிய பெருமாளே!

(ப - ரை) அரியது ஓர் அமரர்கள் - அருமையான உண்மைப் பொருளை ஆராய்ந்து அறியும் தேவர்கள், அண்டம் ஏற (எ - அசை) - தேவலோகத்துக்கு மீண்டு செல்லுமாறும், கொடியது ஓர் அசுரர்கள் அங்கம் மாள (எ - அசை) - பிறருக்குத் துன்பங்களைச் செய்வதையே நோக்கமாகவுடைய அசுரர்களது தேகங்கள் அழியுமாறும், அடல் அதோடு-வலிமையுடன், அமர் புரிகின்ற - போர் செய்யும், கூரிய வடிவேலா - வடித்துக் கூர்மையாகவுள்ள வேலாயுதத்தை யுடையவனே!, அரகரா என மிக அன்பர் சூழ (எ - அசை) - ஹர ஹரா என்று அன்புடன் கூவி அநேக மெய்யடியவர்கள் சூழ்ந்து நிற்க, கடியது ஓர் மயில் மிசை - மிகுந்த வேகமுள்ள ஒப்பற்ற மயிலின்மீது, அன்று (ஐ - சாரியை) ஏறி (எ - அசை) - அந்நாளில் ஆரோகணித்து, அவனி ஓர் நொடி வருகின்ற - பூவுலகத்தை ஒரு நொடிப் பொழுதில் வலம் வந்தவனும், காரண - மூலகாரணனுமான, முருகோனே -ஞானவாசனை வீசும் ஞான சொரூபியே!, பரியது ஓர் கயிறு அனை கொண்டு வீச(எ - அசை) -(கட்டுவதற்காக) பெரிய கயிறு ஒன்றைத் தாயாகிய யசோதை கொண்டுவந்து வீசும் வண்ணம், உறிய தோய் தயிர் தனை - உறி

களில் தோய்ந்திருந்த தயிரை, நாடி (எ - அசை) - நாடிச்சென்று, உண்டு - குடித்து, பசியது (ஓ - அசை) கெட அருள் கொண்ட - தமது பசியைத் தீர்த்துக்கொள்ள அருள்புரிந்த, மாயவன் - மாயக்காரராகிய திருமாலின், மருகோனே - சகோதரியின் புத்திரனே, பரம மா நதி - திவ்வியமான சிறந்த ஷண்முக நதியானது, புடைகொண்டு அணுவ (எ - அசை) - ஒருபுறத்தில் சமீபத்தில் ஓடவும், வனச மா மலரினில் வண்டு உலாவ (எ - அசை) - சிறந்த தாமரை மலர்களில் வண்டுகள் மொய்த்துச் சஞ்சரிக்கவும், (பெற்றுள்ள), பழநி மா மலை தனில் - பழநி என்னும் சிறந்த மலையில், என்றும் மேவிய பெருமாளே - எந்நாளும் எழுந்தருளியிருக்கும் பெரியோனே, பெரியது ஓர் கரி - பெரிய யானை ஒன்றின், இரு கொம்பு போல (எ - அசை) - இரண்டு கொம்புகளைப்போல, வடிவம் ஆர் - அழகிய வடிவத்தைப் பெற்று, புளகித - அன்பினால் விம்மிப் புடைக்கும் இயல்புற்று, கும்ப மா முலை - கும்பத்தை யொத்திருக்கும் சிறந்த தனபாரங்களும், பெருகி (எ - அசை) ஒளி செறி - மிகுந்த பிரகாசம் பொருந்தியுள்ள, தங்க ஆரமும் - தங்கத்தினால் செய்த மாலையும், அணியான பிறை அதோ எனும் நுதல் - அழகிய பிறைச்சந்திரன் தானோ' என்று சொல்லத்தக்க புருவங்களும், துங்கம் மீறு - வெற்றியடைவதிற் சிறந்த, வை அயில் அதோ எனும் இருகண்கள் - கூர்மையான வேலாயுதமோ என்று சொல்லத்தக்க இரண்டு கண்களும், ஆர (எ - அசை) - பொருந்தப்பெற்று, பிறகு எ(ல்)லாம் விழு குழல் - பின்புறமெல்லாம் (மறையுமாறு) அவிழ்ந்து தொங்கும் கூந்தல், கங்குல் ஆர (எ - அசை) - இரவை யொத்திருக்கப் பெற்றும், வரு மானார் - உள்ளவர்களாய் மானை யொத்திருக்கும் பெண்கள், உரியது ஓர் பொருள் கொடு - தக்க பொருளைக் கையி லெடுத்துக்கொண்டு, வந்த பேர்களை - தங்களை நாடிவந்த ஆடவர்களை, வினவி (எ - அசை) மனையிலே கொண்டுபோகி (எ அசை) - க்ஷேமம் விசாரித்து வீட்டினுள்ளே அழைத்துச் சென்று, உளவில் (ஏ - அசை) மருவிய - கபடமாகப் புணர்(வார்கள் ; அப்படிப்பட்ட), வஞ்ச மாதர்கள் மயலாலே - வஞ்சக சுபாவமுள்ள பெண்களின்மீது உறும் மோகமாகிய மயக்கத்தினால், உருகி (ஏ-அசை) - மனமுருகி, உடல் அற வெம்பி வாடி (எ - அசை) - தேகமானது அழிவுறும்படி விரகதாபத்தினால் வாடப்பெற்று, வினையில் (எ - அசை) மறுகி (எ - அசை) - வஞ்சகத்தில் உழன்று வருந்தி, நொந்த பாதகன் - மெலிவுற்ற பாதகனாகிய அடியேன், உனது தாள் தொழுதிட - உனது பாதாரவிந்தங்களை வணங்கும் வண்ணம், இன்ப ஞானம் அது அருள்வாயே - (துன்பக் கலப்பில்லாத) இன்பத்தைத் தரத்தக்க மெய்ஞ்ஞானத்தைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) உலகத்தில் அஞ்ஞானமே நிறைந்திருந்தது. பிரமன் முதலிய தேவர்களும் ஆதியந்தமற்ற பரம்பொருள் யாரென வுணரும் ஆற்றலில்லாதவராய் இருந்தனர். தங்கள் பதவிகளின் மீதுள்ள ஆசையினால் அவர்கள் சிவபெருமானை நிந்தித்த தக்ஷனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அப்பெருமானை

வணங்காதிருந்ததுமன்றி, அவன் சிவபெருமானுக்கு மட்டும் அவிர்ப்பாக மளிக்காமல் ஏனைய தேவர்களுக்கு அவிர்ப்பாகமளித்துச் செய்த யாகத்தில் மனமொப்பி அவிர்ப்பாகமும் ஏற்றுக்கொண்டனர். தேவர்களே அவ்வாறு மருட்சி யுற்றிருந்த காலத்தில் மனிதருடைய நிலைமை எப்படிப்பட்டதா யிருந்ததென உரைக்க வேண்டிய அவசியமில்லை. உலகில் பாபம் அதிகரித்து வந்தது. அப்போது அந்த அஞ்ஞானத்தை யகற்றி ஜீவர்களை உய்யும் நெறியிற் சேர்க்கவேண்டியது அவசியமாயிற்று. அது காரணத்தினால் முருகப்பெருமான் ஞானகுருவாய் வந்தார். ஞானம்பெற சுவாமிகள் அப்பெருமானையே வேண்டுகின்றார். முருகப் பெருமான் உலகத்தை வலம்வந்த வரலாற்றை இவ்வுரையின் 102-ம் பக்கத்திற் காண்க. (சச)

தனதனன தனதனன தனதனன தனதனன

தனதனன தனதனன—தனதான.

முருகுசெறி குழலவிழ முலைபுளக மெழநிலவு
  முறுவல்தர விரகமெழ — அநுராகம்
முதிரவச மறவிதரி யெழுகைவளை கலகலென
  முகநிலவு குறுவெயர்வு — துளிவீச
அருமதுர மொழிபதற இதழமுது பருகிமிக
  அகமகிழ இருகயல்கள் — குழையேற
அமளிபடு மமளிமல ரணையின்மிசை துயிலுகினும்
  அலர்கமல மலரடியை — மறவேனே!
நிருதனொடு வருபரியு மடுகரியும் ரதநிரையும்
  நெறுநெறென முறியவிடும் — வடிவேலா!
நிகழகள சகளகுரு நிருபகுரு பரகுமர
  நெடியநெடு ககனமுக — டுறைவோனே!
வருமருவி நவமணிகள் மலர்கமுகின் மிசைசிதற
  மதுவினிரை பெருகுவளி — மலைமீதே
வளர்குறவர் சிறுமியிரு வளர்தனமு மிருபுயமு
  மருவிமகிழ் பழநிவரு — பெருமாளே!

(ப - ரை) நிருதனொடு வரு - அசுரனாகிய சூரபதுமனொடுவந்த, பரியும் - குதிரைப்படையும், அடு கரியும் - கொல்லும் சுபாவமுள்ள யானைப்படையும், ரத நிரையும் - வரிசையாக நிறுத்தப்பட்டுள்ள தேர்ப்படையும், நெறு நெறு என

முறிய - நெறு நெறு வென்று முறிந்து தோல்வியடையும் வண்ணம், விடும் வடி வேலா - கூர்மையான வேலைப் பிரயோகித்தவனே !, நிகழ் அகள சகள குரு நிருப - சகலவுலகங்களையும் நடத்திக்கொண்டு அருவமாகியும் உருவமாகியும் நிற் கும் குரு சிகாமணியே !, குருபரா - பரமகுருவே!, குமர - என்றும் இளமை மாறுதவனே !, நெடிய நெடு ககன முகடு உறைவோனே - உயர்ந்து விசாலமா யுள்ள ஆகாயத்தின் உச்சியில் அமர்ந்திருப்பவனே !, வரும் அருவி நவமணிகள் - அருவியானது புரட்டிக்கொண்டு வரும் நவரத்தினங்கள், மலர் கமுகின் மிசை சிதற-மலர்ந்த பாளைகளையுடைய பாக்குமரங்களின்மீது சிதறவும், மதுவின் இரை பெருகு - நீரின் இரைச்சல் பெரிதாகவும், (இருக்கப்பெற்ற), வளி மலை மீது (ஏ - அசை) வளர் - வள்ளி மலையின்மீது வளர்ந்துவந்த, குறவர் சிறுமி - வேடர் களின் சிறுமியான வள்ளிநாயகியின், இரு வளர் தனமும் - பருத்துவளர்ந்த இரண்டு தனபாரங்களையும், இரு புயமும் - இரண்டு தோள்களையும், மருவி மகிழ் - அணைந்து மகிழ்ச்சியுற்றவனும், பழநி வரு - பழநியில் எழுந்தருளிய வனுமான, பெருமாளே - பெரியோனே!, முருகு செறி குழல் அவிழ - வாசனை மிகுந்த கூந்தல் அவிழ்ந்து விழவும், முலை புளகம் எழ - தனபாரங்கள் விம்மிப் புடைக்கவும், முறுவல் நிலவு தர - புன்னகையில் தோன்றும் பற்கள் நிலவின் ஒளியை வீசவும், விரகம் எழ - விரக தாபம் உண்டாகவும், அநுராகம் முதிர - சிற்றின்பத்திலுள்ள ஆசை அதிகரிக்கவும், வசம் அற - தன்னை மறக்கவும், விதரி எழு கை வளை கலகல என - மதனலீலைப் போர் செய்யத் தூக்கும் கைகளில் அணிந்துள் ள வளைகள் கலகல வென்று ஒலிக்கவும், முக(ம்) நிலவு குறுவெயர்வு துளி வீச - முகமெங்கும் பரவித்தோன்றும் சிறு வியர்வைத் துளிகள் எங்கும் பறக்கவும், அரு மதுர மொழி பதற - மிகவும் இனிய மொழிகள் (தாபத்தினால்) அவசரமாய் வரவும், இதழ் அமுது பருகி - அதராமுதத்தைப் பானஞ்செய்து, மிக அகமகிழ - மிகவும் மனங்களிக்கவும், இரு கயல்கள் குழை ஏற - கயல்மீனை யொத்த இரு கண்களும் காதுகளில் அணிந்துள்ள குழைகள் வரையில் செல்ல வும், அமளி படும் - ஆரவாரத்துடன் கலவி செய்வதற்குரிய, அமளி மலர் அணை யின் மிசை - படுக்கையான புஷ்ப மெத்தையின்மீது, துயிலுகினும் - அடியேன் உறங்கினபோதிலும், அலர் கமல மலர் அடியை மறவேனே - மலர்ந்த தாமரை மலர்களை யொத்த நினது பாதங்களை மறக்கமாட்டேன்.

(வி - ரை) தம்மடியவர்களுக்குத் தோன்றுத் துணையாய் நின்று அவர்களைக் காத்துவரும் முருகப்பெருமான்,

“ அருவமு முருவுமாகி யநாதியாய்ப் பலவா யொன்றுய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறும் கரங்கள்பன் னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலகமுய்ய !”

என்றபடி, அஞ்ஞானத்தினால் துயருற்றுத் தியங்கிய ஆன்மாக்களுக்கு ஞானத்தைப் போதித்து அவர்களை உய்விப்பதற்காகவே அவதரித்தாராதலின், அகமும் புறமும் நின்று எப்போதும் அவர்களுக்கு ஞானத்தை யூட்டுவதையே தொழிலாகப் பூண்டுள்ளார். அப்பெருமான் தகுந்த வேளையில் ஜீவனைக் காக்கக் குருவாக வந்து தோன்றுவார். "நாதா குமரா நமவென் றரனு ரோதா யெனவோதிய" முருகப்பெருமானைக் குருவாகக் கொண்டாலன்றி மெய்ப்பொருளை யறிவதரிதென்று,

"முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே"

என்னும் கந்தரனுபூதிப் பாடலிற் கூறியுள்ளபடி, முருகப்பெருமானே ஒப்புயர்வற்ற ஞான குருவாக இருக்கிறார். (சடு)

தனதனன தனதான தனதனன தனதான
தனதனன தனதான—தனதான.

முகைமுளரி ப்ரபைவீசு மெழில்கனக மலைபோலு
முதிர்விளை தனபார மடவார்தோள்
முழுகியமி ழுறுபோக விழலனென வுலகோர்கள்
மொழியுமது மதியாமல் தலைகீழ்வீழ்ந்
தகமகிழ விதமான நகையமுத மெனவூற
லசடாக மெழுவாகி மிகவேயுண்
டழியுமொரு தமியேனு மொழியுமுன திருதாளி
னமுதுபரு கிடஞான மருளாயோ?
மகரமெறி திரைமோது பகரகடல் தடவாரி
மறுகுபுனல் கெடவேலை விடுவோனே!
வரிசையவுண் மகசேனை யுகமுடிய மயிலேறி
வருபனிரு கரதீர முருகோனே!
பகர்வரிய ரெனலாகு முமைகொழுந ருளமேவு
பரமகுரு வெனநாடு மிளையோனே!
பணிலமணி வெயில்வீசு மணிசிகர மதிசூடு
பழநிமலை தனில்மேவு பெருமாளே!

(ப - ரை) மகரம் எறி திரை மோது - மீன்களைத் தூக்கி எறியும் அலைகள் வீசுவதும், பகர கடல் - (அம்மீன்களது உடலின் பிரகாசத்தினால்) பிரகாசமடைவதுமான சமுத்திரம் என்னும், தடவாரி - விசாலமானதும் நிறைந்ததுமான நீர் நிலையின், மறுகு புனல் கெட - புரளும் நீரானது வறண்டு போகும்படி, வேலை விடுவோனே - வேலாயுதத்தைப் பிரயோகிப்பவனே!, வரிசை அவுண் மக சேனை - (போர்க்களத்தில்) வரிசை வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த பெரிய அசுர சேனையானது, உக முடிய - நிலை குலைந்து அழியும் வண்ணம், மயில் ஏறி வரு - மயிலின்மீது ஏறிப் போருக்கு வந்த, ப(ன்)னிரு கர தீர முருகோனே - பன்னிரண்டு கைகளையுடைய தீரனாகிய ஞான தேசிகனே!, பகர்வு அரியர் எனலாகும் - இப்படிப்பட்டவர் என்று சொல்ல முடியாத தன்மையுடையவர் என்று கூறப்படும், உமை கொழுநர் - உமாதேவியாரின் நாயகரான சிவபெருமான், உளம் மேவு பரம குரு - தமது இதயத்தில் அமர்ந்து பரம்பொருளை அடைவதற்குரிய ஞானத்தைப் போதிக்கவல்ல குரு, என நாடும் இளையோனே - என்று நாடும்படியான தகைமை வாய்ந்த குமாரசுவாமியே!, பணிலம் அணி வெயில் வீசும் - வெண் சங்கத்தின் அழகிய ஒளியை வீசும், அணி சிகர - அழகிய முடியையுடையதும், மதி சூடு - சந்திரன் தன் மீது உறையப் பெறுவதுமான, பழநி மலைதனில் மேவு பெருமாளே - பழநிமலையின் மீது எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, முளரி முகை ப்ரபை வீசும் - தாமரை மொட்டின் காந்தியையுடையவைகளாயும், எழில் கனக மலை போலும் - அழகிய பொன்மலைகளைப் போலப் பருத்து வளர்ந்தவைகளாயும், முதிர்வு இல் - மூப்புற்றுத் தளர்ச்சி யடையாதவைகளாயும், இள - இளமைப் பருவத்துக்குரிய தன்மையுடையவைகளாயும் உள்ள தனபார மடவார் தோள் - தனபாரங்களையுடைய பெண்களின் புயங்களின் மீது, முழுகி அமிழ் - ஆசையுற்று மூழ்கிக்கிடக்கும், அநுபோக விழலன் என - சிற்றின்பத்தையே அநுபவிக்கும் வீணன் என்று, உலகோர்கள் மொழியும் அது மதியாமல் - உலகத்தவர்கள் (நிந்தித்துப்) பேசுவதை இலக்ஷியம் செய்யாமல், தலைகீழ் வீழ்ந்து - தலைகீழாக வீழ்ந்து, (நெறி தவறி யொழுகி), அக மகிழ - மனம் களிப்புறுமாறு, அசடர் அகம் எழவு ஆகி - கீழ்மக்கள் பெரிதென மதிக்கும் கலவியின்பம் உண்டாகப்பெற்று, விதமான நகை அமுதம் என - (அம்மாதர்கள்) பலவிதமாகப் புன்னகை கொள்ளும் காலங்களில் தோன்றும் பற்களாகிய முல்லை மலர்களினின்றும் பெருகும் தேனென்று கூறி, ஊறல் மிக (ஏ - அசை) உண்டு - அதராமுதத்தை (எச்சிலை) ஏராளமாகப் பருகி, அழியும் - வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்ளும், ஒரு தமியேனும் - (உனது அருளைப் பெறாத) ஒரு ஏழையாகிய அடியேனும், மொழியும் உனது இரு தாளின் அமுது - வேதங்களினால் முத்திவீடு என்று கூறப்படும் உனது இரண்டு பாத மலர்களினின்றும் பெருகும் பேரின்பமாம் அமுதத்தை, பருகிட - உண்பதற்கு அவசியமான, ஞானம் அருளாயோ - மெய்ஞ்ஞானத்தைத் தந்தருளமாட்டாயோ?

(வி - ரை) 65-67 பக்கங்களில் 25 இலக்கமிட்ட சுவாமிமலைப்பாடலில்,

"குருகினொடு நாரையன்றில் இரைகளது நாடிடங்கள்
குதிகொளிள வாளைகண்டு—பயமாகக்
குரைகடல்க ளேயதிர்ந்து வருவதென வேவிளங்கு"

என்று வருணித்துள்ளபடி, அலைகளினால் வீசி எறியப்படும் மீன்களது உடல்களின் கீழ்ப்புறத்தின் வெண்மையான ஒளியைப் பிரதிபலித்துக் கடலும் ஒளி பெறுகின்றது என்று இப்பாடலினும் "மகர மெறி திரைமோது பகரகடல்" என்று வருணிக்கப்பட்டிருக்கிறது. நிர்க்குணராயும், சகல குணங்களுக்கும் உறைவிடமானவராயும், உருவமுடையவராயும், உருவமே இல்லாதவராயும், எங்கும் நிறைந்திருப்பவராயும், சகல அண்டங்களையும் கடந்து நிற்பவராயுமுள்ள சிவபெருமானது தன்மையை இன்னதென்று உரைக்கவல்லவர் யாருமிலர். அப்பெருந்தகை தமது இதயத்தில் குகனாய் அமர்ந்து முத்திக்குரிய ஞானத்தைப் போதிக்கவல்ல குருவாய் நிற்பவர் ஞான சொரூபியாகவும், ஞான தேசிகராகவும் விளங்கும் முருகப்பெருமானே என்று கொண்டாடுகிறார். அவ்வாறு யாவர்க்கும் மேலானவராய், மெய்ஞ்ஞான தெய்வமாய் விளங்கும் முருகப்பெருமான் தமக்கு ஆன்மாக்களிடத்துள்ள அன்பும் ஆர்வமும் காதலும் என்றும் சிறிதளவேனும் குன்றாவண்ணம் காளைக்குமரேசனாக - என்றும் மாறாத இளமையுடையவனாக-நின்று தக்கவேளையில் அருள்புரியச் சித்தமாயிருக்கிறார். பழநி மலையானது சந்திரனை யளாவும்படி உயர்ந்து வளர்ந்திருப்பதனால் பனியினால் மூடப்பெற்று வெண்மையான ஒளி வீசுகிறது என்பது "பணிலமணி * * பழநிமலை" என்னும் மொழித்தொடர்ச்சியின் கருத்து. எழவு-எழுதல்; உ-தொழிற்பெயர் விகுதி. பெண்களின் அதராமுதத்தைப் பருகவேண்டுமென்ற ஆசை உண்டாவதற்குக் காரணமான அஞ்ஞானம் ஒழியப்பெற்று,

"பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
விரும்புங் குமரனை மெய்யன் பினான் மெல்ல மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மானந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே"

என்று **கந்தரலங்காரப்** பாடலிற் கூறப்பட்டுள்ள சிறந்த அமுதத்தை - முருகப்பெருமானது பாதாரவிந்தங்களை அநுபவிக்கும் இன்பமான அமுதத்தை - பருக வேண்டுமென்ற ஆசை உதிக்கப்பெற மெய்ஞ்ஞானம் அவசிய மாதலாலும், அப்படிப்பட்ட ஞானத்தை அப் பெருமானது அருளினால் மட்டுமே யடையலாமாகையினாலும், சுவாமிகள் அவ்விதமான ஞானத்தைத் தந்தருளும்படி வேண்டுகிறார்.

(௬௬)

தந்ததன தனதான தந்த
தந்ததன தனதான தந்த
தந்ததன தனதான தந்த—தனதான.

மந்தரம தெனவேசி றந்த
கும்பமுலை தனிலேபு னைந்த
மஞ்சள்மண மதுவேது லங்க வகைபேசி

மன்றுகமழ் தெருவீதி வந்து
நின்றவரை விழியால்வ ளைந்து
வந்தவரை யருகேய ணைந்து தொழில்கூறி

எந்தளவு மினிதாக நம்பு
தந்துபொருள் தனையேபி டுங்கி
யின்பமருள் விலைமாதர் தங்கள் மனைதேடி

எஞ்சிமன முழலாம லுன்றன்
அன்புடைமை மிகவேவ ழங்கி
என்றனையு மினிதாள இன்று வரவேணும் !

விந்தையெனு முமைமாது தந்த
கந்தகுரு பரதேவ வங்க
மென்றவரை தனில்மேவு மெந்தை புதல்வோனே !

மிஞ்சுமழ கினிலேசி றந்த
மங்கைகுற மடமாது கொங்கை
மென்கிரியி விதமாய ணைந்த முருகோனே !

சிந்தைமகிழ் புலவோர்கள் வந்து
வந்தனைசெய் சரணார விந்த
செந்தமிழி லுனையேவ ணங்கு குருநாதர்

தென்றல்வரை முநிநாத ரன்று
கும்பிடந லருளேபொ ழிந்த
தென்பழநி மலைமேலு கந்த பெருமாளே !

(ப - ரை) விந்தை எனும் உமை மாது - விந்தை யென்ற திருநாமமுடைய உமாதேவியாராகிய பெண்கள் நாயகம், தந்த - உதவியருளிய, கந்த-சத்துரு சங்கார மூர்த்தியே !, குருபர - பரம்பொருளையடையும் நெறியைப் போதிக்கவல்ல குருவே!, தேவ - யாவர்க்கும் மேலான தேவனே!, வங்கம் என்ற வரை தனில் -

வெள்ளியென்று சொல்லுமாறு பனியினால் மூடப்பெற்றிருக்கும் திருக்கைலாய மலையின்மீது, மேவும் எந்தை புதல்வோனே - எழுந்தருளியிருக்கும் எமது தந்தையாகிய சிவபெருமானது திருமகனே!, மிஞ்சும் அழகினிலே சிறந்த மங்கை - மிகுந்த அழகினால் சிறப்புற்று விளங்கும் பெண்மணியான, குற மடமாது - வேடர் குலத்தில் வளர்ந்த பேதையான வள்ளிநாயகியின், கொங்கை மென் கிரியில்-தனபாரங்களான மென்மை பொருந்திய குன்றுகளை, இதமாய் அணைந்த முருகோனே - இன்பத்துடன் அணைந்துகொண்ட ஞானசொரூபியே!, சிந்தை மகிழ் புலவோர்கள் வந்து - நினது கருணையை நினைத்து மனமகிழும் புலவர்கள் உன் திருமுன்னர் அடைந்து, வந்தனை செய் - வணங்கிப் பூசிக்கும், சரண அரவிந்த - பாதத்தாமரைகளையுடையவனே, செந்தமிழில் உனை (ஏ - அசை) வணங்கு - இனிய தமிழ்மொழியினால் உன்னைத் துதித்து வழிபடுபவரும், குருநாதர் - தமிழ் மொழியை உலகத்தோருக்குப் போதித்த ஆசிரியரும், தென்றல் வரை முநிநாதர் - தென்றற் காற்றின் உற்பத்தித்தலமான பொதியமலையில் வசிக்கும் முநிசிரேஷ்டருமான அகத்தியமாமுனிவர், அன்று கும்பிட நல் அருள் (ஏ - அசை) பொழிந்த-அந்நாளில் உன்னை வணங்கித்துதித்தபோது நினது கருணையை மழைபோல் பொழிந்த(வனே)!, தென் பழநி மலை மேல் உகந்த பெருமாளே - தென் திசையிலுள்ள பழநி மலையின்மீது விருப்பத்துடன் எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, மந்தரம் அது என (ஏ - அசை) - மந்தர பருவதம் என்று சொல்லுமாறு பருத்து உயர்ந்து, சிறந்த கும்ப முலை தனிலே - சிறப்புற்றுக் கும்பத்தையொத்திருக்கும் தனபாரங்களின்மீது, புனைந்த மஞ்சள் மணம் அது (ஏ - அசை) துலங்க - அணிந்துள்ள மஞ்சளின் வாசனையானது வீச, வகை பேசி - முறைவைத்து அழைத்து, மன்று கமழ் தெரு வீதி வந்து - தாம் அணிந்துள்ள வாசனை பரவியுள்ள தெருவுக்குவந்து, நின்றவரை - (தாம் முறைவைத்து அழைத்ததைக் கேட்டு மயங்கி) நின்றவர்களை, விழியால் வளைந்து - தங்கள் கண் பார்வையாகிய பாசக்கயிற்றை அவர்களைச்சுற்றி வீசி, வந்தவரை - (அந்தப் பாசத்தினால் கட்டுண்டு) உள்ளே வந்தவர்களை, அருகே அணைந்து - அருகில் அமர்த்தி யணைத்துக் கொண்டு, தொழில் கூறி - சாமர்த்தியமான வார்த்தைகளைப் பேசி, எந்து அளவும் - என்ன அளவு வேண்டுமானாலும் அந்த அளவு, இனிதாக நம்பு தந்து-இனிமையாக ஆசையை யுண்டாக்கி, பொருள் தனை (ஏ - அசை) பிடுங்கி - (வந்தவர்கள் கையிலுள்ள) பொருளைப் பறித்துக்கொண்டு, இன்பம் அருள் விலைமாதர் தங்கள் - கலவியின்பத்தைக் கொடுக்கும் விலைமாதர்களுடைய, மனை தேடி - வீடுகளைத் தேடிச்சென்று, எஞ்சி - (நெறி தவறி) கேடடைந்து, மனம் உழலாமல் - மனங்கலங்காமல், உன் தன் அன்புடைமை மிக (ஏ - அசை) வழங்கி - உன்னிடத்தில் அன்பு பாராட்டும் தன்மையை அதிகமாக அளித்து, என் தனையும் இனிது ஆள - அடியேனையும் மகிழ்ச்சியுடன் ஆட்கொள்வதற்கு, இன்று வரவேணும் - இப்பொழுதே வந்தருளவேண்டும்.

(வி - ரை) ஒன்றுமில்லாத வெட்டவெளியில் எண்ணிறந்த சராசரங்களைச் சொல்லரிய பேதங்களுடன் ஆச்சரியத்தை விளைவிக்கும்படி தோன்றச் செய்த தனால் சித் சொரூபியான - பரம மாயையான - உமாதேவியாருக்கு விந்தையென்னும் திருநாமம் ஏற்பட்டது போலும். இப்பாடலில் முருகப் பெருமானை 'தேவ' என்று விளித்திருப்பதில், தேவர்கள் பலர் இருப்பதனாலும், அவர்களில் எவரையும் அச்சொல்லினால் விளிக்கலாமாகையினாலும், அவ்வாறு எத்தேவருக்கும் பொருந்தக்கூடிய அச்சொல்லை "மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை **வானவர்க்கு மேலான** தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை" என்றபடி தேவாதி தேவராகிய முருகப்பெருமானுக்கு இட்டு அழைக்க இடமில்லை யாதலினாலும், தேவ என்னும் பதத்துக்கு தேவாதி தேவ என்று விசேஷப் பொருள் கூறப் பட்டது.

"மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால், வைதா ரையுமங்கு வாழவைப் போன்" என்றபடி, முருகப்பெருமான் தமிழ் மொழியின்மீது மிகுந்த அன்புடையவர் என்பதையறிந்த தமிழ்ப்புலவர்கள் மனக்களிப்புற்று, வேடர் செழுந்தினையைக் காத்த வள்ளிநாயகியின் கண்களாகிய அம்புகள் தமது மனத்தில் பாயப்பெற்றுக் காமுகனாய் வள்ளி மலையில் திரிந்த அப்பெருமானது பராக்கிரமத்தை யாவரும் அறியும்படி பாடி அப்பெருமானது பாதாரவிந்தங்களைத் தமது நாவில் அமர்த்திக் கொள்ளுகிறார்கள். "குறமுநிவ னிருபொழுதும் அர்ச்சித்து முத்திபெற அறிவுநெறி தவநிலைகள் செப்புத் தமிழ்க்கினிய குருகுமார பழநிவளர் வெற்புத் தனிற்றிகழு பெருமாளே" என்றபடி முருகப்பெருமானது பாதமலர்களை வணங்கி முத்தியடைவதற்குரிய நெறியை இனிய தமிழ் மொழியில் கூறியருளிய அகத்திய மாமுனிவருக்கு முருகப்பெருமான், "சித்தமு நிறை தெளிவுறவும் பொற் செவியுட் பிரணவ ரகசிய மன்புற் றிடவுற் பனமொழி யுரைசெய் குழந்தைக் குருநாதா!" என்று 99-ம் பக்கத்திலுள்ள 3-வது பழநித் தலப் பாடலிற் கூறியவாறு, அருமையான பிரணவப் பொருளை யுபதேசித்து நல்லருள் புரிந்தார். (௭௭)

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன—தனதான.

குருதி மலசல மொழுகு நரகுட
லரிய புழுவது நெளியு முடல்மத
குருபி நிணசதை விளையு முளைசளி யுடனூடே

குடிக ளெனபல குடிகை வலிகொடு
குமர வலிதலை வயிறு வலியென
கொடுமை யெனபிணி கலக மிடுமிதை யடல்பேணி

மருவி மதனனுள் கரிய புளகித
மணிய சலபல கவடு மலர்புனை
மதன கலைகொடு குவடு மலைதனில் மயலாகா

மனது துயரற வினைகள் சிதறிட
மதன பிணியொடு கலைகள் சிதறிட
மனது பதமுற வெனது தலைபத மருள்வாயே!

நிருதர் பொடிபட அமரர் பதிபெற
நிசித அரவளை முடிகள் சிதறிட
நெரிய கிரிகட லெரிய வுருவிய கதிர்வேலா!

நிறைய மலர்பொழி யமரர் முநிவரும்
நிருப குருபர குமர சரணென
நெடிய முகிலுடல் கிழிய வருபரி மயிலோனே!

பருதி மதிகனல் விழிய சிவனிட
மருவு மொருமலை யரையர் திருமகள்
படிவ முகிலன அரியி னிளையவ ளருள்பாலா!

பரம கணபதி யயலின் மதகரி
வடிவு கொடுவர விரவு குறமக
ளபய மெனவணை பழநி மருவிய பெருமாளே!

(ப - ரை) நிருதர் பொடி பட - அசுரர்கள் பொடிப்பொடியாகி யழியவும், அமரர் பதி பெற- தேவர்கள் தங்கள் நாட்டை மீண்டும் அடையவும், நிசித அரவ அளை - அசுரர்களது ஆரவாரம் நிறைந்திருந்த குகை, (பொருந்தியுள்ள கிரௌஞ்ச மலையின்), முடிகள் சிதறிட - சிகரங்கள் சிதறிப்போகவும், கிரி நெரிய - (அந்தக் கிரௌஞ்ச) மலையானது நொறுங்கிப் போகவும், கடல் எரிய - சமுத்திரமானது காய்ந்து வற்றிப்போகவும், உருவிய கதிர் வேலா - (அம்மலையையும் சமுத்திரத்தையும்) ஊடுருவிச் சென்றதும் ஒப்பற்ற ஒளி வீசுவதுமான வேலாயுதத்தை யுடையவனே, நிறைய மலர் பொழி - ஏராளமான மலர்களை (நினது பாதாரவிந்தங்களிற்) சொரியும், அமரர் முனிவரும் - தேவர்களும் இருடிகளும், நிருப - இறைவனே, குருபர - பரம்பொருளை யடையும் நெறியைப் போதிக்கவல்ல குருவே, குமர - என்றும் இளமை மாறுதவனே, சரண் என - நினது பாதங்களை எங்களுக்குப் புகலிடம் என்று சொல்லி, (புடை சூழ்ந்துவர), நெடிய முகில் உடல் கிழிய - உயரமான மேகத்தின் உருவம் கிழியும்படி, வரு பரி மயிலோனே - குதிரையைப்போல் மிகுந்த வேகத்துடன் வரும் மயிலை வாகனமாக

வுடையவனே!, பருதி மதி கனல் விழிய - சூரியன் சந்திரன் அக்கினி யென்னும் முச்சுடர்களேயும் நயனங்களாக வுடைய, சிவன் இடம் மருவும் - சிவபெருமானது இடப்பாகத்தில் பொருந்தியிருப்பவரும், ஒரு மலே அரையர் திரு மகள் - ஒப்பற்ற இமயமலேயின் அரசனுகிய பருவதராஜனது செல்வப் புதல்வியாக அவதரித்தவரும், படிவம் முகில் அ(ன்)ன அரியின் இளேயவள் - திருமேனியானது மேகத்தைப்போல் இருக்கப்பெற்ற விஷ்ணுவின் தங்கையான நாராயணியுமான (உமாதேவியார்), அருள் பாலா - உதவியருளிய சிறுவனே !, பரம கணபதி - மிகுந்த மேன்மை பொருந்திய விநாயக மூர்த்தி, மத கரி வடிவு கொடு - மத யானேயின் உருவத்தை யெடுத்துக்கொண்டு, அயலின் வர - அருகில் வந்த போது, விரவு குறமகள் - உன்னே யணுகி வந்த வேடுவர் சிறுமியான வள்ளி நாயகி, அபயம் என - (நீயே கதியென) அடைக்கலம் புக, அணே - அவளே யணேந்து கொண்டவனே !, பழநி மருவிய பெருமாளே - பழநி யென்னும் திருத்தலத்தில் அமர்ந்திருக்கும் பெரியோனே!, குருதி மல சலம் ஒழுகு நரக உடல் - இரத்தமும் மல சலங்களும் பெருகி வெளிப்படும் அசுத்தமான தேகம், அரிய புழு அது நெளியும் உடல் - கணக்கிட முடியாத புழுக்கள் நெளியப் பெற்ற தேகம், மத குருபி நிண சதை விளேயும் - மத நீரும் உருவமில்லாத மாமிசமும் தசையும் மேன் மேலும் விளேயப் பெறுவதும், மூளே சளி உடல் ஊடே - மூளேயும் சளியும் நிரம்பப் பெற்றுள்ளதுமான தேகத்துக்குள்ளே, குடிகள் என பல குடி - குடியாக வசிப்பவைகள் என்று சொல்லப்படும் பல குடிகள் உள; (அவையாவன) ; கைவலி - கைகளிலுண்டாகும் நோய், கொடு குமர வலி - கொடிய குமரகண்டம் என்னும் நோய், தலே வயிறு வலி - தலேவலி வயிற்றுவலி, என கொடுமை என பிணி - என்ற பெயர்களுடையவைகளும் கொடியவை யென்று சொல்லப்படுபவைகளுமான நோய்கள் ; (இந்தக் குடிகள்), கலகம் இடும் இதை - கலக்கத்தை உண்டு பண்ணிவரும் இடமான இத்தேகத்தை, மதனன் - மன்மதன், அடல் பேணி - கொல்லவேண்டுமென்பதைக் குறியாகக் கொண்டு, மருவி-அணுகிவந்து, உள் கரிய-(காமநோயை யெழுப்பி அதன் தாபத்தினுல்) மனம் வெந்து போகும்படி செய்ய, புளகிதம் அணிய - இன்பத்தினுல் உரோமஞ் சிலிர்க்கப் பெற்று, சல பல கவடு மலர் புனே - குளிர்ச்சி பொருந்திய பல மரக்கொம்புகளில் மலர்ந்த மலர்களினுல் தன்னே யலங்கரித்துக் கொண்டுள்ள, மதன - மன்மதனுடைய, கலே கொடு - சாஸ்திரத்தையே (உய்வதற்குரிய சாஸ்திரமாகக்) கொண்டு, குவடு மலே தனில் - சிகரங்களேயுடைய மலேகளே யொத்த தனபாரங்களில், மயல் ஆகா - மயங்கி ஆசைகொள்ளும், மனது துயர் அற - மனத்தினில் (அவ்வாசையினுல்) உண்டாகும் துயரம் நீங்குமாறும், விளேகள் சிதறிட - முற்பிறப்புக்களிற் செய்த இருவினேகளின் பயன் சிதறித் தொலேயுமாறும், மதன பிணியொடு - காம நோயுடன், கலேகள் சிதறிட - (விஷய சுக வாசையைப் பெருக்கும்) ஜட வுலக சாஸ்திரங்கள் அகன்று தொலேயுமாறும்,

மனது பதம் உற - மனமானது சரியான பக்குவத்தை யடையுமாறும், எனது தலை பதம் அருள்வாயே - அடியேனது தலையின் மீது நினது பாதங்களைச் சூட்டி அருள்புரிய வேண்டும்.

(வி - ரை) முருகப்பெருமானுக்கும் தாரகனுக்கும் நடந்த போரில் அசுரர்கள் தாங்கள் மெலிவுற்ற காலங்களில் கிரௌஞ்ச மலைக்குள்ளிருந்த குகையிற் போய் ஒளிந்துகொண்டு களைப்பாறி மீண்டும் போருக்குச்செல்ல ஆரவாரம் செய்தபடியால், "நிசித அரவளை" என்று கூறப்பட்டது. தாரகனது மாயைகளுக்கு அனுசரணையாக விருந்து நல்லோர்களைத் துன்புறுத்திவந்த மாயாசொரூபியானவனும் அகத்தியமாமுனிவரது சாபத்தினுல் மலையினுருவத்தை நிலையாகப் பெற்றவனுமான கிரௌஞ்சனது மாயங்களெல்லாம் யாவருமறியப் பொய்யென விளங்குமாறும், அப்பெருமானுக்கும் சூரபதுமனுக்கும் நடந்தபோரில் அகங்கார சொரூபியான சூரபதுமன் தனது அகங்கார வடிவத்தை மறைத்துக்கொள்ள ஒளிந்துகொண்ட விடமான சமுசார சாகரத்தின் பொய்யான தன்மை விளங்குமாறும், அப்பெருமானது கரத்தில் பொருந்தியதும் அஞ்ஞான விருளையும் மாய விருளையும் அகற்றவல்ல ஒப்பற்ற ஒளி வீசுவதுமான வேலாயுதமானது அம்மலைக்குள்ளும் சமுத்திரத்துக்குள்ளும் பாய்ந்து ஊடுருவிச் சென்றது. பரம்பொருளை யறியச்செய்து முத்தியைத் தரத்தக்க ஞானமானது உலக வாழ்க்கையின் நிலையாமையையும் மனித சரீரத்தின் நிலையாமையையும் அறிந்த பின்பே உதிக்க வழியுண்டாகு மாகையினுலும், அவ்வுண்மைகளை அறிவதற்குப் புத்தியினுல் ஆழ்ந்த ஆராய்ச்சி செய்யவேண்டியது அவசியமாகையினுலும், புத்திக்கிறைவராகிய விநாயக மூர்த்தியைப் பரம கணபதி யென்று கூறப்பட்டிருக்கிறது. மதயானையினுல் துரத்தப்பட்டு முருகப்பெருமானைச் சரண்புகுந்த வள்ளிநாயகியை அப்பெருமான் அணைந்துகொண்டு ஆட் கொண்டதன் மேன்மையை 4-வது பழநித் தலப் பாடலின் விருத்தியுரையில் 106-வது பக்கத்தில் காண்க. மனித தேகமானது அசுத்தங்கள் நிரம்பப்பெற்றது. அத்தேகத்துக்குள் அனேக கொடிய நோய்கள் நிலையாகக் குடிகொண்டு எந்நாளும் மனக்கலக்கத்தை யுண்டுபண்ணுகின்றன. இவ்வளவு கேவலமான தேகத்தை மானிடர் பெற்றிருந்தும், அதனுல் அவர்கள் படும் துயரம் போதாதென நினைத்து மன்மதன் அதை அழித்துவிட வேண்டுமென்பதைத் தன் நோக்கமாகக் கொண்டு மனிதர் மனத்தில் காமத்தைவிளைவிக்கிறுன். அதனுல் அவர்கள் மனமானது பலவிதமாக வருந்துகிறது. அத்துயரமும் முந்தைவினைப் பயனும் காமநோயும் ஜடவுலகசாஸ்திரப்பற்றும் ஒழிந்து மனமானது முத்திபெறும் பக்குவத்தையடைய மருந்து ஒன்றுதான் உண்டு. அது ஞானசொரூபியான முருகப் பெருமானது அருளைப்பெறுவதே யாகும்.

குருபி கிணம் - மாமிசம் உருவமற்றது; உருவத்தைத் தரும் எலும்புக் கூட்டினுள் அடைக்கப்படுவது.

(சஅ)

*தனத்தனன தனத்தனன*
*தனத்தனன தனத்தனன*
*தனத்தனன தனத்தனன*
*தனத்தன தனதன—தனதான.*

கருப்புவிலில் மருப்பகழி
தொடுத்துமதன் விடுத்தனைய
கடைக்கணொடு சிரித்தணுகு
கருத்தினால் விரகுசெய் மடமாதர்

சுதக்களிறு திடுக்கமுற
மதர்த்துமிக வெதிர்த்துமலை
கனத்தவிரு தனத்தின்மிசை
கலக்குமோ கனமதில் மருளாமே

ஒருப்படுதல் விருப்புடைமை
மனத்தில்வர நினைத்தருளி
யுனைப்புகழு மெனைப்புவியில்
ஒருத்தனும் வகைதிரு அருளாலே

உருத்திரனும் விருத்திபெற
வநுக்கிரகி யெனக்குறுகி
யுரைக்கமறை யடுத்துபொருள்
உணர்த்துநா ளடிமையும் உடையேனோ?

பருப்பதமு முருப்பெரிய
வரக்கர்களு மிரைக்குமெழு
படிக்கடலு மலைக்கவல
பருத்ததோ கையில்வரு முருகோனே!

பதித்தமர கதத்தினுட
னிரத்னமணி நிரைத்தபல
பணிப்பனிரு புயச்சயில
பரக்கவே யியல்தெரி வயலூரா!

திருப்புகழை யுரைப்பவர்கள்
படிப்பவர்கள் மிடிப்பகைமை

செயித்தருளு மிசைப்பிரிய
திருத்தமா தவர்புகழ் குருநாதா!

சிலைக்குறவ ரிலைக்குடிலில்
புகைக்களக முகிற்புடைசெல்
திருப்பழநி மலைக்குளுறை
திருக்கைவே லழகிய பெருமாளே!

(ப - ரை) பருப்பதமும் உரு பெரிய அரக்கர்களும் - கிரௌஞ்ச மலையையும் பெரிய தேகங்களையுடைய அசுரர்களையும், இரைக்கும் எழு படி கடலும் - பேரொலி செய்யும் நீர் நிலைகளான ஏழு சமுத்திரங்களையும், அலைக்க வல - கலங்கச் செய்து வருத்தக் கூடிய வல்லமை பொருந்திய, பருத்த தோகையில் - பருத்த தேகத்தையும் விரிந்த தோகையையு முடைய மயிலின்மீது, வரு முருகோனே - ஏறி வரும் ஞான சொரூபியே!, பதித்த மரகதத்தினுடன் இரத்ன மணி நிரைத்த - பதித்திழைத்த பச்சைகளுடன் இரத்தினங்களும் வரிசையாக அமைக்கப்பெற்ற, பல பணி - பல ஆபரணங்களை (அணிந்து இருக்கும்), ப(ன்)னிரு புய சயில - மலைகளையொத்த பன்னிரண்டு புயங்களையுடையவனே!, பரக்கவே இயல்தெரி - எங்கும் வியாபித்து விசுவரூபமெடுத்துக் கொள்ளும் தன்மை பொருந்திய(வனே)!, வயலூரா - வயலூர் என்னும் திருத்தலத்தில் (அன்புடன்) அமர்ந்திருப்பவனே!, திருப்புகழை உரைப்பவர்கள் படிப்பவர்கள் - நினது புகழைப் பாடல்களினால் எடுத்துரைப்பவர்கள் அப்பாடல்களைப் படிப்பவர்கள், (இவர்களுடைய), மிடி பகைமை செயித்து அருளும் - வறுமையையும் பகைவர்களையும் தோல்வியடையச் செய்து அருள்புரி(பவனே), இசை பிரிய - இன்னிசையில் பிரியமுள்ளவனே!, திருத்த மா தவர் புகழ் குருநாதா - குற்றமற்றவரும் சிறந்த தவத்தைப் புரிபவர்களுமான பெரியோர்கள் புகழும் ஒப்புயர்வற்ற ஞான போதகாசிரியனே!, சிலை குறவர் இலை குடிலில் - மலையில் வசிக்கும் வேடர்களுடையதும் இலைகளினால் கூரை போடப்பெற்றதுமான சிறுவீடுகளிலிருந்து எழும், புகை கள(ங்)க முகில் புடை செல் - புகையானது நீல நிறமுள்ள மேகங்களினருகே செல்லப் பெற்ற, திரு பழநி மலைக்குள் உறை - சிறந்த பழநி மலைக்குள் எழுந்தருளியிருப்பவனும், திரு கை வேல் அழகிய பெருமாளே - கையில் தரித்தவேல் அழகாயிருக்கப் பெற்றவனுமான பெரியோனே, மதன் கருப்பு வி(ல்)லில் தொடுத்து விடுத்த - மன்மதன் கரும்பினாலாகிய வில்லில் தொடுத்து எய்த, மரு பகழி அனைய - வாசனை பொருந்திய மலர்களாகிய பாணங்களை யொத்த, கடைக்கணொடு - கடைக்கண் பார்வையை யுடையவராய், சிரித்து அணுகு - புன்சிரிப்புடன் நெருங்குபவர்களும், கருத்தினால் - (ஆடவரது கைப்பொருளைப் பறிக்க வேண்டுமென்னும்) நோக்கத்துடன், விரகு செய் - (ஆடவர் மனத்தில்) விரகதாபத்தை யெழுப்பும், மட மாதர் - பேதையர்களான விலைமாதர்களுடைய, கத களிறு திடுக்கம் உற -

வலிமை பொருந்திய ஆண்யானையும் அஞ்சுமாறு, மதர்த்து - வலிமை பெற்று, மிக எதிர்த்து மலே - வேகத்துடன் எதிர்த்துப் போர் செய்யும் இயல்புடைய, கனத்த இரு தனத்தின் மிசை - பருத்த இரு தனபாரங்களின் மீது, கலக்கும் மோகனம் அதில் - அணேவதான புணர்ச்சியில், மருளாமே - ஆசையுற்று மயக்க மடையாமல், ஒருப்படுதல் விருப்புடைமை - (உன்னுடன் இரண்டறக் கலந்து) ஒன்றுயிருக்க வேண்டுமென்னும் விருப்பம், மனத்தில் வர - அடியேன் மனத்தில் உண்டாகும் வண்ணம், நினேத்து அருளி-நீ நினேத்து அருள்புரிந்து, உனே புகழும் எனே புவியில் ஒருத்தன் ஆ(கு)ம் வகை - உன்னேப் புகழ்ந்து பாடும் அடியேனேப் பூவுலகத்தில் நிகரற்றவனுய் இருக்கும்படிச் செய்யும் வண்ணம், உருத்திரனும் விருத்தி பெற அனுக்கிரகி என-ஆன்மாக்களினது துயரை யகற்றும் சிவபெருமானும் தாம் மேன்மையடையுமாறு தமக்கு அருள்புரிய வேண்டுமென்று, குறுகி உரைக்க-நின்னேயணுகிக் கூறியபொழுது, திருவருளாலே மறை அடுத்து பொருள் உணர்த்து நாள் அடிமையும் உடையேனே - கருணையினுலே வேதத்தில் சொல்லியுள்ள பிரணவப் பொருளே உணர்த்தியதுபோல் அடிமைக்கும் உணர்த்தும் நாள் உண்டோ?

(வி - ரை) "திருப்புகழை யுரைப்பவர்கள் * * * இசைப்பிரிய" என்று கூறப்பட்டிருப்பதனுல், முருகப்பெருமானது கருணையையும் பெருமையையும் எடுத்துரைக்கும் பாடல்களே இன்னிசையுடன் பாடுவதனுல் அவரது அருளே நிச்சயமாய்ப் பெறலாம் என்பது வெளியாகிறது. "ஒருப்படுதல் * * * நினேத்தருளி" என்றதனுல், முருகப்பெருமானுடன் இரண்டறக் கலந்து ஒன்றுதலே பெறற்கரிய பேறு என்பதும், அப்பேற்றை யடையவேண்டு மென்ற விருப்பமுண்டாவதற்கும் அப்பெருமானது அருள் வேண்டுமென்பதும் விளங்குகின்றன. ஒருவன் தனது நிலேமையினும் மேலான நிலேமை யொன்று உண்டென்றும், தனது நிலேமையைவிட்டொழிந்து அம் மேலான நிலேமையை யடைவதனுல் தான் மிகுந்த இன்பத்தை யனுபவிக்கலாமென்றும் அறிந்தாலன்றி அவன் தன் நிலேமையைவிட்டகல இச்சிக்கவே மாட்டான். அவ்வித இச்சையுண்டாவதற்கு அவசியமான அறிவையும் ஞான தேசிகனுகிய முருகப்பெருமானது அருளினுலேயே பெறமுடியும். இக்கருத்து இவ்வுரையின் 113-ம் பக்கத்தில் விரிவாக விளக்கப்பட்டிருப்பதைக் காண்க.

கருத்தினுல் விரகுசெய் மடமாதர்
கலக்குமோ கனமதில் மருளாமே
ஒருத்தனும் வகைதிரு வருளாலே
உணர்த்துநா ளடிமையு முடையேனே?
பருத்ததோ கையில்வரு முருகோனே!
பரக்கவே யியல்தெரி வயலூரா!
திருத்தமா தவர்புகழ் குருநாதா!
திருக்கைவே லழகிய பெருமாளே!(௪௧)

*தனதன தந்த தனதன தந்த*
*தனதன தந்த—தனதான.*

கருகிய கன்று வரிசெறி கண்கள்
கயல்நிக ரென்று துதிபேசிக்
கலைசுரு ளொன்று மிடைபடு கின்ற
கடிவிட முண்டு பலநாளும்
விரகுறு சண்ட வினையுடல் கொண்டு
விதிவழி நின்று தளராதே
விரைகமழ் தொங்கல் மருவிய துங்க
விதபத மென்று பெறுவேனோ?
முருகக டம்ப குறமகள் பங்க
முறையென அண்டர் முறைபேச
முதுதிரை யொன்ற வருதிறல் வஞ்ச
முரணசுர் வென்ற வடிவேலா!
பரிமள இன்ப மரகத துங்க
பகடித வென்றி மயில்வீரா!
பறிதலை குண்டர் கழுநிரை கண்டு
பழநி யமர்ந்த பெருமாளே!

(ப - ரை) முருக - அழகும் ஞானமும் இளமையும் பொருந்தியவனே!, கடம்ப - கடம்ப மாலையை யணிபவனே!, குற மகள் பங்க - வேடர் குலத்தில் வளர்ந்த பெண்ணை வள்ளிநாயகியைத் தேவியாகப் பக்கத்தில் அமர்த்திக் கொண்டவனே!. முறை என அண்டர் முறை பேச - தகுதியோவெனத் தேவர்கள் தங்கள் குறைகளைக்கூறி முறையிட்டபோது, முது திரை ஒன்ற - பழைமையான சமுத்திரம் ஒடுங்குமாறு, வரு - படையெடுத்து வந்த, திறல் வஞ்ச - வலிமையும் வஞ்சகமும் பொருந்தியுள்ளவர்களாய், முரண் அசு(ர)ர் - உன்னிடம் விரோதம் பாராட்டிய அசுரர்களை, வென்ற வடி வேலா - வென்ற வடிவேலா!, பரிமள இன்ப மரகத துங்க - சந்தோஷத்தையும் இன்பத்தையும் தருவதும் பச்சை நிறமுடையதும் சிறந்ததும், பகடித-பிரகாசம் பொருந்தியதும், வென்றி - எப்போதும் வெற்றியடைவதுமான, மயில் வீரா - மயிலை வாகனமாகவுடைய வீரனே, பறி தலை - மயிர்கள் பறிக்கப்பெற்ற தலையை யுடையவர்களும், குண்டர்-(சைவசமயத்தைச் சேர்ந்தவரைப்பற்றி) கோள் சொல்பவருமான சமணர்கள், கழு

நிரை கண்டு - வரிசையாக நடப்பட்டிருந்த கழுமரங்களில் ஏறுவதைப்பார்த்து, பழநி அமர்ந்த பெருமாளே - பழநிமலையில் எழுந்தருளிய பெரியோனே !, கருகி அகன்று வரி செறி கண்கள் - கருநிறமுடையவைகளாயும் விசாலமானவைகளாயும் (சிவந்த) கோடுகள் பொருந்தப் பெற்றவைகளாயுமுள்ள (மங்கையர்) கண்கள், கயல் நிகர் என்று துதி பேசி - கயல்மீனை யொத்தவைகளென்று அவைகளைப் புகழ்ந்து, கலை சுருள் ஒன்றும் - ஆடை சுற்றி யுடுக்கப்பெற்றுள்ள, இடைபடுகின்ற கடி விடம் உண்டு - (அப்பெண்களின்) இடையில் உண்டாகும் இன்பமாகிய விஷத்தை உண்டு அநுபவித்து, பலநாளும் விரகு உறு - (சோர்வடையாமல்) வெகுகாலம் விரகதாபமடைவதும், சண்ட வினை - வலிமையுள்ள முந்தை வினையின் பயனாக வந்த, உடல் கொண்டு - தேகத்தைச் சுமந்து, விதி வழி நின்று தளராதே - பிரம தேவர் விதித்த வழியில் நின்றொழுகிச் சோர்வடையாமல், விரை கமழ் தொங்கல் மருவிய - வாசனை வீசும் மலர்மாலை யணியப்பெற்றுள்ள, துங்க வித பதம் - சிறந்த தன்மை பொருந்திய (நினது) பாதமலர்களை, என்று பெறுவேனோ - என்று அடைவேனோ?

(வி - ரை) முருகப்பெருமானுடன் போர்செய்ய வந்த அசுரர்களது ஆரவாரத்தைக்கேட்டுக் கோஷிக்கும் கடலும் அஞ்சி ஒடுங்கிற்று என்க. முருகப் பெருமானே ஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளாய்த் திருவவதாரம் செய்தாரென்பதைச் சுவாமிகள் இப்பாடலில் "பறிதலை குண்டர் கழுநிரை கண்டு" என்னும் மொழிகளால் தெரிவிக்கிறார். திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளாக அவதரித்தபோது முருகப்பெருமான் சிவபாத விருதயருடைய மனைவியான பகவதியாரது கருவில் தங்கிப் பிறக்கவில்லையென்றும், அத் தம்பதிகளிருவரும் புத்திரனைப் பெறவேண்டிப் பிரமதீர்த்தக்கரையில் தவம் செய்யுங்கால், சிவபெருமானால் ஏவப்பட்டுக் குமாரக்கடவுள் ஓர் இளங்குழந்தையின் திருவுருவம் கொண்டு அங்கு எழுந்தருளினார் என்றும், சிவபாதவிருதயர் அக்குழந்தையை மகிழ்வுடன் எடுத்துத் தம் மனைவியினிடம் அளிக்க அவர் எடுத்து உச்சிமோந்து தம் மனைக்குக் கொண்டுவந்து புத்திரராக வளர்த்துக்கொண்டார் என்றும் சீகாழிப் புராணத்திலுள்ள பின்வரும் பாடலினால் தெரியவருகிறது.

"ஆதியங் கடவு ளருள் வழிப்பதினு றுயிர வீறுசீர் சூழ்ந்த
மேதினித் தலங்க டொறுமவ தரித்து மேவுமென்றேவி வெண்கயிலைப்
பூதல மதனிற் காழிமாநகரிற் புண்டரீ கன்றடத் தொருசார்
மாதவம் புரிவோன் முன்னிளங் கதிர்போன் மதலையாய் வந்தனன் கந்தன்!"

"கருகி யகன்று" என்பதற்கு, "கருமுகில் கொண்டை" என்றும் பாடபேதமுண்டு. கருமுகில் கொண்டை - கரிய மேகத்தையொத்த கூந்தல். "விதி வழி நின்று தளராதே * * * பதமென்று பெறுவேனோ" என்றதனால், விதியை அருளினால் மட்டுமே வெல்ல முடியுமென்பது தெளிவாய் விளங்குகிறது. (௬௦)

தனதன தனன தான தனதன தனன தான
தனதன தனன தான—தனதான.

ஒருவரை யொருவர் தேறி யறிகிலர் மதவி சாரர்
ஒருகுண வழியு றாத பொறியாளர்
உடலது சதமெ னாடி களவுபொய் கொலைக ளாடி
உறநம னரகில் வீழ்வ ரதுபோய்பின்
வருமொரு வடிவமேவி யிருவினை கடலு ளாடி.
மறைவரி னனைய கோல மதுவாக
மருவிய பரமஞான சிவகதி பெறுக நீறு
வடிவுற அருளி பாத மருள்வாயே!
திரிபுர மெரிய வேழ சிலைமத னெரிய மூரல்
திருவிழி யருள்மெய்ஞ் ஞான குருநாதன்
திருசரஸ் வதிம யேசு வரியிவர் தலைவ ரோத
திருநட மருளு நாத னருள்பாலா!
சுரர்பதி யயனு மாலு முறையிட அசுரர் கோடி
துகளெழ விடுமெய்ஞ் ஞான அயிலோனே!
சுககுற மகள்ம ணாள னெனமறை பலவு மோதி
தொழுமுது பழநி மேவு பெருமாளே!

(ப - ரை) திரிபுரம் எரிய - திரிபுரங்கள் வெந்து அழியுமாறும், வேழ சிலை மதன் எரிய - கரும்பினால் செய்த வில்லையுடைய மன்மதன் வெந்து அழியுமாறும், மூரல் திருவிழி அருள் - (புன்னகையில் தோன்றும்) பற்களையும் நெற்றி விழியையும் முறையே திறந்து காட்டியருளிய, மெய்ஞ்ஞான குருநாதன் - மெய்ஞ்ஞான சொரூபியான இறைவனும், திரு சரஸ்வதி மயேசுவரி - இலக்குமி சரஸ்வதி உருத்திரி, இவர் தலைவர் ஓத - இவர்களுடைய நாயகர்களாகிய திருமால் பிரமதேவர் உருத்திரர் இவர்கள் புகழை ஓதி நிற்க, திரு நடம் அருளும் நாதன் - (சகல அண்ட சராசரங்களையும் ஆட்டுவிக்கும்) திருநடனம் புரிந்தருளும் சர்வேசுவரரான சிவபெருமான், அருள் பாலா - கருணையினால் (தேவர்களுக்கு) அளித்தருளிய பாலனே! சுரர் பதி அயனும் மாலும் முறையிட - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனும் பிரமதேவரும் திருமாலும் (அசுரர்கள் இழைத்து வந்த கொடுமைகளை யெடுத்துச் சொல்லித் தேவரீரிடம்) தங்கள் குறைகளைக் கூறியபொழுது, அசுரர் கோடி துகள் எழ-எண்ணிறந்த அசுர சேனைகள் அழிந்து பொடியாகுமாறு, விடு மெய்ஞ்ஞான அயிலோனே - பிரயோகித்த

மெய்ஞ்ஞான சொரூபமான ஞான சக்தியாம் வேலாயுதத்தை யுடையவனே !, சுக குற மகள் மணாளன் என - பேரின்பத்தை யடைந்தவரும் வேடர் குலத்தில் வளர்ந்தவருமான வள்ளி நாயகியை மணந்து கொண்டவன் என்று, மறை பலவும் ஓதி தொழ - வேதங்களெல்லாம் தேவரீரைப் புகழ்ந்து வணங்கி நிற்க, முது பழநி மேவு பெருமாளே - தொன்மையான பழநி யென்னும் மலையின் மீது எழுந் தருளியிருக்கும் பெரியோனே !, ஒருவரை ஒருவர் தேறி அறிகிலர் - ஒருவரை யொருவர் தெளிந்து அறியமாட்டாதவர்களாகிய, மத விசாரர் - மத விஷயங்களை ஆராய்ச்சி செய்பவர்கள், ஒரு குண வழி உறாத - ஒப்பற்றதும் உண்மையான சுகத்திற் சேர்ப்பதுமான நல்ல நெறியில் ஒழுகாத, பொறியாளர் - புலன்களை உடையவர்களாய், உடல் அது சதம் என நாடி - தேகம் அழியாதது என்று எண்ணி அதன் இச்சைகளைப் பூர்த்தி செய்யக் கருதி, களவு பொய் கொலைகள் ஆடி - திருட்டு பொய்பேசுதல் கொலைபுரிதல் என்னும் பாதகங்களைச் செய்து, நமன் உற - யமன் வந்து உயிரைப்பற்றும் பொழுது, நரகில் வீழ்வர் - நரகத்திற் போய்ச் சேர்வார்கள் ; அது போய் - நரக அனுபவம் முடிந்த பின் , பின் வரும் ஒரு வடிவம் மேவி - அதற்குப் பிறகு (முந்தைவினைப் பயனுக்கு ஏற்றதாகக்) கிடைக்கும் ஒரு வடிவத்தில் பொருந்தி (உலகத்தில் பிறந்து), இருவினை கடலுள் ஆடி - நல்வினை தீவினைகள் நிறைந்த உலக வாழ்க்கையான சமுத்திரத்தில் வினைகளைப் புரிந்து, மறைவர் - அவ் வுடல் அழியப்பெறுவார்கள் ; (இன் - சாரியை), அனைய கோலம் அதுவாக - அந்த வாழ்க்கையின் இலக்ஷணம் அப்படி யிருப்பதனால், மருவிய பரம ஞான சிவ கதி பெறுக - பரம்பொருளை அடைவதற் குரிய மெய்ஞ்ஞானத்தை நிலைமையாகப் பெற்று சிவலோகத்தில் இருக்கும்படி யான பதவியைப் பெறும் வண்ணம், நீறு வடிவுற - அடியேன் திருநீற்றின் வடி வத்தைப் பெறும்படி, அருளி - அருள்புரிந்து, பாதம் அருள்வாயே - நினது பாதலமரைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) ஆணவம் காமியம் மாயை யென்னும் மும்மலங்களைத் தமது புன் னகையினாலும், மீண்டும் மீண்டும் ஆன்மாக்களைப் பிறவிக் கடலிற் சேர்க்கும் மன் மதனுடைய தேகத்தை நெற்றி விழியின் நோக்கத்தினாலும் எரித்து நீறாக்கியரு ளிய சிவபெருமானது குமாரராகிய முருகப்பெருமான் - மெய்ஞ்ஞான சொரூபி யான சிவபெருமானது நெற்றி விழிகளிலிருந்து தோன்றிய முருகப் பெருமான் - அகங்காரம் மாயை காமக்குரோதம் முதலிய துர்க்குணங்களின் சொரூபிகளான சூரபதுமன் முதலிய அசுரர்களை அஞ்ஞானத்தை யகற்றவல்ல ஞான சக்தியாம் வேலாயுதத்தைப் பிரயோகித்து எரித்துப் பொடியாக்கினார். மும்மலங்களையும் கருவினையையும் அகங்காரம் முதலான துர்க்குணங்களையும் எரித்து நீறாக்கிய பின்னரே ஒரு ஜீவன் பரமஞானத்தை நிலைமையாகப் பெற்று சிவலோகத்தி லிருக்கும்படியான பாக்கியத்தைப் பெறமுடியு மாதலால், சுவாமிகள் மும்மலம் முதலியவைகள் நீறாகப் பெறுவதனால் தாம் நீறு வடிவத்தைப் பெற அருள்புரியு

மாறு மும்மலங்கள் முதலியவைகளை அகற்றவல்ல ஞானத்தின் சொரூபியான முருகப் பெருமானைப் பிரார்த்திக்கிறார். இப்பாடலில் பின்வரும் மொழித் தொடர்களைச் சேர்த்து அமைத்து மேற் கூறிய கருத்தை உணரவும்.

"திரிபுர மெரிய வேழ சிலை மத னெரிய மூரல்
திருவிழி யருள் மெய்ஞ் ஞான—குருநாதன் * * அருள்பாலா
சுரர்பதி யயனு மாலு முறையிட அசுரர் கோடி
துகளெழ விடு மெய்ஞ் ஞான—அயிலோனே
மருவிய பரம ஞான சிவகதி பெறுக நீறு
வடிவுற அருளி பாத—மருள்வாயே!"

மதங்களை ஆராய்ச்சி செய்பவர் ஒவ்வொரு மதத்திலும் பிரதானக் கோட்பாடாயுள்ள உண்மையை அறிய மாட்டாதவராய்த் தங்கள் மதமே பெரிது என அகங்காரங் கொண்டு கலகம் செய்கிறார்களே யல்லாமல், மெய் வாய் கண் மூக்கு செவி யென்னும் ஐம்புலன்கள் இழுக்கும் வழியே செல்லாமல் அவைகளை யடக்கிப் பரம்பொருளை யடைவதற்குரிய சன்மார்க்கத்தில் அவைகளை நிறுத்தச் சக்தியற்றவராய் இருவினைகளைப் புரிந்து மீண்டும் மீண்டும் பிறந்து இறந்து துன்ப மடைகிறார்கள். மும்மலங்களையும் காமக்குரோதாதிகளையும் அழித்து அன்பினால் கருவினையை யொழிப்பதே சிவகதி அடைவதற்குரிய ஒரு வழி யாகும் என்பதைச் சுவாமிகள் இப்பாடலினால் தெரிவிக்கிறார். இக்கருத்து இவ்வுரையின் 25-ம் பக்கத்தில் விரிவாக விளக்கப்பட் டிருப்பதையும் காண்க. (௫௧)

தானந்த தனன தான தானந்த தனன தான
தானந்த தனன தான—தனதான.

ஞானங்கொள் பொறிகள் கூடி வானிந்து கதிரி லாத
நாடண்டி நமசி வாய வரையேறி
நாவின்ப ரசமு தான ஆநந்த அருவி பாய
நாதங்க ளொடுகு லாவி விளையாடி
ஊனங்க ளுயிர்கள் மோக நானென்ப தறிவி லாமல்
லோமங்கி யுருவ மாகி யிருவோரும்
ஓரந்த மருவி ஞான மாவிஞ்சை முதுகி னேறி
லோகங்கள் வலம தாட அருள்தாராய்!
தேனங்கொ ளிதழி தாகி தாரிந்து சலில வேணி
சீரங்க னெனது தாதை ஒருமாது

சேர்பஞ்ச வடிவி மோகி யோகங்கொள் மவுன ஜோதி
சேர்பங்கி னமல நாத னருள்பாலா!
கானங்கள் வரைகள் தீவு ஓதங்கள் பொடிய நீல
காடந்த மயிலிலேறு முருகோனே!
காமன்கை மலர்கள் நாண வேடம்பெ ணமளி சேர்வை
காணெங்கள் பழநி மேவு பெருமாளே!

(ப - ரை) தேன் அ(க)ம் கொள் இதழி - தேனைத் தன்னகத்தேவுடைய கொன்றைமலர், தா(த)கி - ஆத்திமலர், (இவைகளினால் தொடுத்த), தார் - மாலையையும், இந்து - சந்திரனையும், சலிலம் - கங்கையையும், (அணிந்துள்ள), வேணி - சடாமுடியையும், சீர் அங்கன் - அழகிய திருமேனியை உடையவரும், எனது தாதை - என்னுடைய தந்தையும், ஒரு மாது - ஒப்பற்ற பெண்கள் நாயகரும், சேர் பஞ்ச வடிவி - அருளின் உறைவிடமான ஐந்து வடிவங்களாக அமர்ந்தவரும், மோகி - உலக மாயையை யுண்டுபண்ணுபவரும், யோகம் கொள் மவுன ஜோதி - யோகநிஷ்டையிலமர்ந்து மௌனமுற்றவர் (அகக் கண்ணினால்) காணும் ஜோதியுமான உமாதேவியார், சேர் பங்கின் - அமர்ந்திருக்கும் (வாம) பாகத்தையுடைய, அமல நாதன்-நின்மலராகிய இறைவன், அருள் பாலா - உதவியருளிய பாலனே, கானங்கள் - காடுகளும், வரைகள்- மலைகளும், தீவு ஓதங்கள் - தீவுகளும் சமுத்திரங்களும், பொடிய - பொடியாகுமாறு, நீல காடந்த மயிலில் - மிகவும் நீலமாயுள்ள மயிலின்மீது, ஏறு முருகோனே - ஏறும் ஞானசொரூபியே!, காமன் கை மலர்கள் நாண - மன்மதனது கையிலுள்ள புஷ்ப பாணங்கள் வெட்கமடையுமாறு, வேட பெண் அமளி - குறவர் மகளான வள்ளிநாயகியின் படுக்கையில், சேர்வை காண் - சேர்ந்து இருக்கும், எங்கள் பழநி மேவு பெருமாளே - எங்கள் (நாயகனே) பழநியில் அமர்ந்திருக்கும் பெரியோனே!, ஞானம் கொள் பொறிகள் கூடி - ஞானமுற்ற பொறிகள் வாய்க்கப்பெற்று, வான் இந்து கதிர் இலாத நாடு - ஆகாயம் சந்திரன் சூரியன் இவைகள் இல்லாத தேசத்தில், அண்டி - போய்ச் சேர்ந்து, நமசிவாய வரை ஏறி - பஞ்சாக்ஷரமாகிய மலையின் மீது ஏறி, நா இன்ப ரசம் அது ஆன - நாவினால் இனிமையாகப் பாடுவதனால் உண்டாகும் சுகத்தின் அறிகுறியான, ஆநந்த அருவி பாய - ஆநந்த பாஷ்பம் (கண்களினின்றும்) ஆறாய்ப்பெருக, நாதங்களொடு குலாவி விளையாடி - (சப்த சுரங்களான) இனிய நாதங்களோடு மகிழ்ச்சியுடன் சிநேகம் பாராட்டி விளையாடி, ஊனங்கள் - தசைகளினால் ஏற்படும் சஞ்சலங்கள், உயிர்கள் மோகம் - (ஜடவுலகத்திலுள்ள) ஜீவர்களெல்லோரையும் சூழ்ந்திருக்கும் மாயை, நான் - அகங்காரம், என்பது அறிவு இலாமல் - என்பவைகளை அநுபவியா வண்ணம் அவை நீங்கப்பெற்று, ஓம் அங்கி உருவம் ஆகி - ஓம் என்னும் பிரணவத்தின்

ஜோதி சொரூபத்தை யடைந்து, இருவோரும் - நீயும் நானும், ஓர் அந்தம் மருவி - ஒப்பற்ற இறுதி நிலையிற் போய்ச் சேர்ந்து, ஞான மா விஞ்சை முதுகின் ஏறி - ஞானம் என்று சொல்லப்படும் சிறந்த வித்தையின்மீது ஏறிக்கொண்டு, லோகங்கள் வலம் அது ஆட - லோகங்களை யெல்லாம் வலமாகச்சுற்றி ஆடி வரும் வண்ணம், அருள்தாராய் - அருள் புரிய வேண்டும்.

(வி - ரை) ஆதியில் உருவம் குணம் செயல் இவை யொன்றுமில்லாமல் நிர்மலராய் எங்கும் நிறைந்து நின்ற சிவபெருமான் கருணை மிகுதியினால் ஜீவ கோடிகளின் பந்தங்களை யொழிக்கவேண்டுமென நினைத்து இயற்கைச் சக்திகளாகிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களினால் பஞ்ச லிங்கங்கள் உண்டாக்கி அவைகளில் தாம் பிரசன்னராய் நின்றார். அவ்வுருவங்களனைத்தும் எம்பெருமானது அருளின் உருவங்களாகும். உமாதேவியாரே எம் பெருமானது திருவருளின் சொரூபம். ஆகையினால் இப்பாடலில் "சேர் பஞ்ச வடிவி" என்பதற்குச் சிவபெருமானது கருணை பொருந்தியிருக்கும் பிருதிவி லிங்கம், அப்பு லிங்கம், தேயு லிங்கம், வாயு லிங்கம், ஆகாச லிங்கம் என்னும் உருவங்கள் எவருடைய திருவுருவங்களோ அந்த உமாதேவியார் என்பது பொருள். மற்றும், சுழுமுனை நாடியினூடே அநேக காந்திகளுடனே பாம்பின் வடிவாயிருந்து உடலை வளைத்து மூலாதாரத்தின் மேலே படத்தை வைத்துக்கொண்டு யோக நித்திரை செய்வதும், யோகநிஷ்டையிலமர்ந்து மோன நிலையையடைந்தவர் தமதூடே காண்பதுவுமான ஜோதிமயமான சுத்தமாயை யெனப்படும் குண்டலினி சக்தி சிவசக்தியாம் உமாதேவியாரே என்பதை "யோகங்கொள் மவுன ஜோதி" என்று கூறிச் சுவாமிகள் உணர்த்தியருளியிருக்கிறார். வெட்டவெளியில் எண்ணிறந்த சராசரங்களை மாயமாய்த் தோன்றச் செய்தது பரம மாயையான உமாதேவியாரே யாதலின், அவரை "மோகி" என்று கூறப்பட்டிருக்கிறது. காடுகள் மலைகள் இவைகள் தூளாகவும் சமுத்திரங்கள் வற்றித் துகளெழவும் மிகுந்த வேகத்துடன் செல்லும் மயிலின் வேகத்தினளவைப் பின் வரும் பாடல்களிற் காண்க.

"குசைநெகி ழாவெற்றி வேலோ னவுணர் குடர் குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின் கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு வடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட வத்தூளின் வாரி திடர்ப்பட்டதே."

"சேலிற் றிகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தனந்தன் பணாமுடி தாக்க வதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியுங் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்கரா யுதமும் பணிலமுமே."—**கந்தரலங்காரம்.**

மயிலின் வேகத்தைப்பற்றி இவ்வுரையின் 165-ம் பக்கத்தில் கூறப்பட்டிருப்பதையும் காண்க.

முருகப்பெருமான் வள்ளிநாயகியின்மீது அளவற்ற காதல்கொண்டு செய்த சரசலீலைகளைக்கண்டு அவ்வித லீலைகளைச் செய்யத் தூண்டுவதில் திறமையுள்ள மன்மதபாணங்களும் வெட்கமடையும் என்று கூறப்பட்டிருக்கிறது. மெய் வாய் கண் மூக்கு செவி இவைகள் ஒருவருக்கு முக்தி வீட்டின் கதவை அடைக்கும் சத்துருக்களாகவும் எளிதில் முக்தியடைய உதவி செய்யும் மித்துருக்களாகவும் இருக்கும் அவை விஷய சுகங்களை யனுபவிக்க நாடாமல் எம்பெருமானை வணங்கவும் துதிக்கவும் தரிசிக்கவும் முகரவும் அவரது புகழைக் கேட்கவும் நாடி அவ்வாறு செய்வதனுல் உண்டாகும் சுகங்களை அடையும் முக்தி நெறியில் மனத்தை நிறுத்துமேயாகில், அவைகளே ஒருவருக்கு முக்தியைக் கூட்டுவிக்கும் பரம மித்துருக்களாகும். அப்படிச் செய்வதற்குரிய ஞானமுற்ற ஐம்பொறிகள் வாய்க்கப்பெற்ற ஒருவர் சந்திர சூரியர்கள் ஒளிவீசப் பெருததும் நிராகாசமான தும் சத்தின் சொரூபமானதுமான ஜோதி மயமான வெட்டவெளியை யடைவார். அங்குபோய்ச் சேர்ந்த பின்னர் அவர் அவ்வெளியின் காரணரும் பஞ்சாக்ஷரத்தின் நாயகருமான சிவபெருமானது ஒப்புயர்வற்ற பெருமையை அறிவார். அதன்பின் அவர் அப்பெருமானது பெருமையை நாவினுல் பாடி அதனுல் தாம் இன்பமுற்றதற்கு அறிகுறியாகக் கண்களினின்றும் ஆனந்தக்கண்ணீர் ஆருய்ப் பெருகப்பெற்று, எம்பெருமானது புகழைச் சப்தசுரங்களுடன்கலந்து இன்னிசையாகப் பாடி மகிழ்வார். எம்பெருமானது புகழைப் பாடுவதில் மனம் இலயிக்கப் பெற்றுல் ஜடதேகத்தினுல் உண்டாகும் சஞ்சலங்களும், துன்பத்தை இன்பமாகவும் சிற்றின்பத்தைப் பேரின்பமாகவும், பொய்வாழ்க்கையை மெய்யாகவும் கருதச்செய்யும் ஜகமாயையும், நான் என்று மார்தட்டுவதும் எனதுடைமை எனதடிமையென்று கூறுவதுமான அகங்காரமும் அடியோடழிந்துபோகும். பிறகு அவர் ஓங்காரத்துக்குள்ளே தோன்றும் ஜோதி உருவத்தைப் பெற்று, ஓங்காரத்துள் ஒளியாக விளங்கும் முருகப்பெருமானுடன் இரண்டறக் கலந்து, வேதத்தில் ஜீவர்கள் இறுதியில் அடையவேண்டிய சிறந்த நிலைமை யாதென்று கூறப்பட்டுள்ளதோ அந்த நிலைமையான - பரம்பொருளுடன் இரண்டறக்கலக்கும் நிலைமையை அடைவர். அவ்வாறு பரம்பொருளுடன் கலந்து அதன் தன்மையை அறிந்துகொண்ட பெரியார் பரமமாயையின் தன்மையை அறிந்து கொள்வாராதலின், சகல லோகங்களிலும் நிறைந்து நிற்பது ஒரே பொருளென்பதை யுணர்ந்து களித்துத்திரிவர். அப்படிப்பட்ட மேலான நிலைமையைத் தமக்குத் தந்தருளும்படி சுவாமிகள் ஞானசொரூபியும் பரம்பொருளுமான முருகப் பெருமானைப் பிரார்த்திக்கிருர்.

> " ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மே
> லளியில் விளைந்ததோ ரானந்தத் தேனை யநாதியிலே
> வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
> தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே ! "

" ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார்தினைப் போதளவு
மோங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங் கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம தூதருக்கே ! "

என்னுங் கந்தரலங்காரப் பாடல்களும்,

" இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசிடார்களோ பாச நாசனே
இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்
இறுகும் வகை பரமசுக மதனையரு ளிடைமருதில்
ஏக நாயகா லோக நாயகா—இமையவர் பெருமாளே !"

என்னும் திருவிடைமருதூர்ப் பாடலின் இறுதி அடியும் இப்பாடலை விளக்கும்.

இப்பாடலில் " நாவின்ப ரசமதான * * * * விளையாடி" என்று வரும் மொழித் தொடருக்கு யோகமார்க்கத்தை யொட்டியும் பொருள் கூறலாம். அப்படிப்பட்ட பொருள் பின்வருமாறு:— ' நாவுக்கு இன்பத்தைத் தருவதும் ஆநந்தத்தை விளைவிப்பதுமான அமுதமானது ஆறு போல் பெருகிப் பாயப்பெற்று, தேகத்தினுள்ளே சகல விதமான நாதங்களும் ஒலிப்பதைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்து.' ஏனைய அடிகளுக்குக் கூறியுள்ள உரை யோகமார்க்கம் ஞானமார்க்கம் என்றும் இரண்டு மார்க்கங்களுக்கும் பொருந்தும். (௫௨)

தனத்தான தனதனன தனத்தான தனதனன
தனத்தான தனதனன—தனதான

உயிர்க்கூடு விடுமளவும் உமைக்கூடி மருவுதொழில்
ஒருக்காலு நெகிழ்வதிலை யெனவேகூள்
உரைத்தேமுன் மருவினரை வெறுத்தேம திரவியம
துடைத்தாய்பின் வருகுமவ ரெதிரேபோய்ப்
பயிற்பேசி யிரவுபகல் அவர்க்கான பதமைபல
படப்பேசி யுறுபொருள் கொள் விலைமாதர்
படப்பார வலைபடுதல் தவிர்த்தாள மணிபொருவு
பதத்தாள மயிலின் மிசை வரவேணும் !
தயிர்ச்சோர னெனுமவுரை வசைக்கோவ வனிதையர்கள்
தரத்தாடல் புரியுமரி மருகோனே !

தமிழ்க்காழி மருதவன மறைக்காடு திருமருகல்
தநுக்கோடி வருகுழகர் தருவாழ்வே !
செயிற்சேல்வி ணுடுவினொடு பொரப்போய்வி மமர்பொருது
செயித்தோடி வருபழநி யமர்வோனே !
தினைக்காவல் புரியவல குறப்பாவை முலைதழுவி
திருத்தோள அமரர்ப்பணி பெருமாளே !

(ப - ரை) தயிர் சோரன் எனும் அ உரை வசை - தயிர் திருடி என்னும் சொல்லை நிந்தையாகக் கூறும், கோவ வனிதையர்கள் தாத்து - கோபிகா ஸ்திரீ களின் கூட்டத்தில், ஆடல் புரியும் - லீலைகளைச் செய்த, அரி மருகோனே - கண்ணபிரானது சகோதரியின் புத்திரனே !, தமிழ் காழி மருதவனம் மறைக்காடு திருமருகல் தநுக்கோடி - தமிழ் மொழியானது சிறப்புறுவதற்குக் காரணரான திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளது அவதாரஸ்தலமான சீகாழி, மருதவனம் வேதாரணியம் திருமருகல் தநுக்கோடி என்னும் திருத்தலங்களில், வரு - எழுந் தருளியிருக்கும், குழகர் - சிவ பெருமான், தரு வாழ்வே - உலகிலுள்ளோர் வாழ்வுறுமாறு தந்தருளிய புதல்வனே !, செ(ய்)யில் சேல் - வயல்களிலுள்ள கயல் மீன்கள், விண் உடுவினொடு - (விண்மீனென்று சொல்லப்படும்) ஆகாயத் திலுள்ள நட்சத் திரங்களோடு, பொர போய் - போர்புரியச் சென்று, விம்(மு) அமர் பொருது - மிகுந்த ஓசை யுண்டாகும்படி போர்புரிந்து, செயித்து ஓடி வரு- வெற்றியடைந்து வேகமாய் மீண்டுவரப் பெற்ற, பழநி அமர்வோனே - பழநித் தலத்தில் எழுந்தருளி யிருப்பவனே !, தினை காவல் புரிய வல - தினைப் பயிரைக் காக்கும் திறமை பெற்றிருந்த, குற பாவை முலை தழுவு - வேடர் மகளான வள்ளி நாயகியின் தனபாரங்களை அணைந்து கொள்ளும், திரு தோள - அழகிய தோள்களை யுடையவனே, அமரர் பணி பெருமாளே - தேவர்கள் வணங்கும் பெரியோனே !, உயிர் கூடு விடும் அளவும் - ஆவியானது உடலை விட்டுப் பிரிந்து செல்லும் வரையில், உமை கூடி மருவு தொழில் - உம்முடன் கலந்து புணர்ச்சி செய்யும் செயலை, ஒருக்காலும் நெகிழ்வதிலை - ஒருபொழுதும் விட்டு நீங்கு வதில்லை, என (ஏ - அசை) சூள் உரைத்து (ஏ - அசை) - என்று சபதம் கூறி, முன் மருவினரை - தாங்கள் முன்பு யாருடன் கலந்தார்களோ அவர்களை, வெறுத்து (ஏ - அசை) - வேண்டாமென்று அகற்றி, ஏம திரவியம் அது உடைத்தாய் - பொன்னாகிய பொருளை யுடையவராய், பின்வருகும் அவர் எதிரே போய் - பிற்பாடு வருபவர்களை எதிர்கொண்டு சென்று, பயில் பேசி - சைகையினால் பேசி, இரவு பகல் அவர்க்கு ஆன பதமை - இரவும்பகலும் ஓயாமல் அவர்கள் மனத்தினில் இன்பத்தை யூட்டத்தக்க வார்த்தைகளை, பல பட பேசி - பலவிதமான அர்த்தங்கள் தோன்றும்படி பேசி, உறு பொருள் கொள் -

அவர்கள் கையிலுள்ள பொருளைப் பறித்துக்கொள்ளும், விலை மாதர் - விலைமாதர் களுடைய, பட பார வலை படுதல் தவிர்த்து-பாம்பின் படத்தை யொத்த அல்குல் தேர்த்தட்டை யொத்த அடிவயிறு இவைகளான வலையிற் சிக்குவதை யொழித்து, ஆள - அடியேனை ஆட்கொள்வதற்கு, மணி பொருவு பத தாள - நவமணிகளை யொத்தவைகளும் தாளமிட்டு ஒலிப்பவைகளுமான சதங்கைகளை யணிந்த பாதங் களையுடைய, மயிலின் மிசை வரவேணும் - மயிலின் மீது ஏறிவந்தருள வேண்டும்.

(வி - ரை) "செயிற் சேல் * * * பழநி" என்று கூறப்பட்டிருப்பதனுல் பழநித்தலம் நீர்வளம் மிக்கது என்பது விளங்குகிறது; ஏனெனில்,நீர்வளப்ப மிகுதி யாகவுள்ள பிரதேசத்திலுள்ள மீன்கள் தாம் ஆகாயத்திற் பாய்ந்து நட்சத்திரங்க ளுடன் போர் புரிந்து வெற்றியுடன் மீளும் சக்தியுடையவைகளாக விருக்கும். "தமிழ்க்காழி * * * * வருகுழகர் தருவாழ்வே" என்பதில் சிவபெருமானது அருளினுல் முருகப் பெருமான் சீகாழியில் திருஞானசம்பந்த மூர்த்திகளாக அவ தரித்தருளினுரென்னும் பொருள் அடங்கியுள்ளதெனக் கொள்ளலாம். (௬௩)

தனதனன தனதனன தானத் தானத்—தனதான

ஒருபொழுது மிருசரண நேசத் தேவைத் துணரேனே
உனதுபழ நிமலையெனு மூரைச் சேவித் தறியேனே
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனெ னாசைப்பாடைத் தவிரேனோ?
துரிதமிடு நிருதர்புர சூறைக் காரப் பெருமாளே!
தொழுதுவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே!
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே!
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே!

(ப - ரை) துரிதம் இடு நிருதர் புரம் - துன்பத்தைச்செய்துவந்த அசுரர் களது பட்டணத்தை, சூறைக்கார பெருமாளே - கொள்ளையடித்த பெரி யோனே!, தொழுது வழிபடும் - (நின்னை) ஆராதித்து வணங்கும், அடியர் காவற்கார பெருமாளே - அடியவர்களைக்காத்து இரட்சிக்கும் பெரியோனே!, விருது கவி - (பல கவிகளை வென்றதற்கு அடையாளமாக) துவசம் முதலிய விருதுகளையுடைய கவிஞனுய் அவதரித்து, விதரண விநோதக்கார பெருமாளே - விவேகத்திற் சிறந்த திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளாய் விளங்கிய பெரி யோனே!, விறல மறவர் சிறுமி - வலிமைபொருந்திய குறவர்களது பெண்ணை வள்ளிநாயகிக்கு, திரு வேளைக்கார பெருமாளே - தக்க சமயத்தில் வந்து உதவி புரிந்தருளிய பெரியோனே! ஒரு பொழுதும் இருசரணம் நேசத்து (எ அசை)

வைத்து உணரேன் (ஏ - அசை) - ஒருபொழுதும் நினது இருபாதமலர்களையும் எனது அன்பி லமர்த்தி அவைகளின் பெருமையை உணரமாட்டேன் ; உனது பழநி மலை எனும் ஊரை சேவித்து அறியேன் (ஏ - அசை) - உனக்கு விருப்ப முள்ள திருத்தலமான பழநிமலை யென்னும் திருத்தலத்தைத் தரிசித்து அறிய மாட்டேன் ; பெரு(ம்) புவியில் உயர்வு அரிய வாழ்வை - விசாலமான பூவுலகில் சொல்வதற்கரிதாயிருக்கும்படி உயர்ந்துள்ள சம்பிரமமான உலக வாழ்க்கையை, தீர குறியேன் (ஏ - அசை) - ஒழித்து விடுவதை நோக்கமாகக் கொள்ளமாட் டேன் ; பிறவி அற நினைகுவன் - மீண்டும் மீண்டும் உலகில் பிறப்பதாகிய துய ரத்தை ஒழித்துக்கொள்ள வேண்டுமென்று நினைப்பேன் ; என் ஆசைப்பாடை தவிரேனே - உலக சுகங்களை யனுபவிக்க வேண்டுமென்று ஆசைப்படுவதை யொழிக்க மாட்டேனே?

(வி - ரை) எப்போதும் துன்பத்தையே விளைவிக்கும் இயல்புடைய மும் மலங்களும் காமக்குரோதம் முதலிய துர்க்குணங்களும் எவ்வளவு வலிமையுடன் தங்களைக் காத்துக்கொண்டபோதிலும், ஞான சொரூபியான முருகப்பெருமான், பலமான கோட்டையாக விருந்து அவைகளை இரக்ஷிக்கும் மாயையை அகற்றி அதில் சேர்த்து வைக்கப்பட்டிருக்கும் மயக்கங்கள் எல்லாவற்றையும் கொள்ளை யடித்துச் செல்வார். அப்பெருமான் தம்மை அன்புடன் வணங்கும் அடியார்களை விட்டுப் பிரியாது அருகில் நின்று அவர்களைக் காத்தருளுவார். வேடர்கள் கையிற் சிக்கியிருந்த வள்ளிநாயகியைத் தக்க சமயத்தில் தடுத்தாட்கொண்டு ஒப் புயர்வற்ற பதவியில் வைத்தருளிய வள்ளலை விளித்துச் சுவாமிகள், "அடியேன் நினது பாதாரவிந்தங்களின்மீது அன்பு பாராட்டி அவைகளே அடியேன் துன் பங்களை யறுத்துப் பேரின்பத்தை யளிக்கவல்லவை என்று உணரமாட்டேன் ; நீ பரிபூரண ஞானசொரூபியாய் விளங்கும் பழநிமலையைத் தரிசித்ததே கிடை யாது ; சகல வைபவங்களும் பொருந்திய உலக வாழ்க்கையை அகற்றினாலன்றி பேரின்ப வீட்டை அடையமுடியாது என்று அறியாததனாலும், அவைகளின் பொய்யான தன்மையையும் நிலையாமையையும் அறியாததனாலும், அவ்வாழ்க் கையை விட்டுவிட வேண்டுமென்று நிச்சயித்து அதற்குரிய முயற்சியைச் செய்ய மாட்டேன். இப்படிப்பட்ட தன்மையையுடைய அடியேன் பிறவித் துன்பத்தை மட்டும் நீக்கிக்கொள்ள இச்சைப்படுவேன். ஆயின் அவ்விச்சையைப் பூர்த்திசெய்து கொள்ள அவசியமான துறவை - ஆசையொழியப் பெறுவதை - அடைய முயல மாட்டேன். என் மதி என்னே?" எனக் கூறுகிறார். (௩௪)

*தத்தா தனத்ததன தத்தா தனத்ததன*
*தாதத் தனந்ததன தானத் தனந்ததன*
*தத்தா தனத்ததன தத்தா தனத்ததன*
*தாதத் தனந்ததன தானத் தனந்ததன*
*தத்தா தனத்ததன தத்தா தனத்ததன*
*தாதத் தனந்ததன தானத் தனந்ததன—தனதனதான.*

இத்தா ரணிக்குள்மனு வித்தாய் முளைத்தழுது
கேவிக் கிடந்துமடி மீதிற் றவழ்ந்தடிகள்
தத்தா தனத்ததன இட்டே தெருத்தலையில்
ஓடித் திரிந்துநவ கோடிப் ப்ரபந்தகலை
யிச்சீர் பயிற்றவய தெட்டோடு மெட்டுவர
வாலக் குணங்கள்பயில் கோலப் பெதும்பையர்க ளுடனுறவாகி

இக்கார் சரத்துமத னுக்கே யிளைத்துவெகு
வாகக் கலம்பவகை பாடிப் புகழ்ந்துபல
திக்கோடு திக்குவரை மட்டோடி மிக்கபொருள்
தேடிச் சுகந்தஅணை மீதிற் றுயின்றுசுக
மிட்டா தரத்துருகி வட்டார் முலைக்குளிடை
மூழ்கிக் கிடந்துமய லாகித் துளைந்துசில பிணியதுமூடிச்

சத்தான புத்தியது கெட்டே கிடக்கநம
னோடித் தொடர்ந்துகயி றாடிக் கொளும்பொழுது
பெற்றார்கள் சுற்றியழ வுற்றார்கள் மெத்தஅழ
ஊருக் கடங்கலிலர் காலற் கடங்கவுயிர்
தக்கா திவர்க்குமய னிட்டான் விதிப்படியி
னாலைப் பழம்படியி னாலிற் றிறந்ததென எடுமெனவோடிச்

சட்டா நவப்பறைகள் கொட்டா வரிச்சுடலை
யேகிச் சடம்பெரிது வேகப் புடஞ்சமைய
இட்டே யனற்குளெரி பட்டா ரெனத்தழுவி
நீரிற் படிந்துவிடு பாசத் தகன்றுனது
சற்போ தகப்பதும முற்றே தமிழ்க்கவிதை
பேசிப் பணிந்துருகு நேசத்தை யின்றுதர இனிவரவேணும்!

## 2. திருவாவினன்குடி—பழநி 

தித்தா திரித்திகுட தத்தா தனத்தகுத
தாதத் தனந்ததன தானத் தனந்ததன
செச்சே செகுச்செகுகு தித்தா திமித்ததிகு
தாதத்த செந்திகுத தீதத்த செந்தரிக
தித்தா கிடக்கணக டக்கா குகுக்குகுகு
தோதக் கணங்கணக கூகுக் கிணங்கிணென ஒருமயிலேறித்

திட்டோ ரதத்தசுரர் பட்டே விழப்பொருது
வேலைத் துளைந்துவரை யேழைப் பிளந்துவரு
சித்தா பரத்தமரர் கத்தா குறத்திமுலை
மீதிற் புணர்ந்துசுக லீலைக் கதம்பமணி
சுத்தா வுமைக்குமொரு முத்தாய் முளைத்தகுரு
நாதக் குழந்தையென வோடிக் கடம்பமலர் அணிதிருமார்பா!

மத்தா மதக்களிறு பிற்றா னுதித்தகுக
னேதத் திலங்கையினி லாதிக்க முண்டதொரு
முட்டா ளரக்கர்தலை யிற்றே விழக்கணைக
ளேதொட்ட கொண்டலுரு வாகிச் சுமந்ததிக
மட்டார் மலர்க்கமல முற்றா சனத்திருவை
மார்பிற் புணர்ந்தரகு ராமற்கு மன்புடைய மருமகனாகி

வற்றா மதுக்கருணை யுற்றே மறைக்கலைக
ளோதித் தெரிந்துதமிழ் சோதித் தலங்கலணி
யத்தா பரத்தையறி வித்தாவி சுற்றுமொளி
யாகிப் ப்ரபந்தமணி வேல்தொட்ட மைந்தபுய
வர்க்கா மருப்புழுகு முட்டா திருப்பழநி
வாழ்வுக் குகந்தடிய ராவிக்குள் நின்றுலவி வருபெருமாளே!

(ப - ரை) தித்தா திரித்திகுட * * * கூகுக் கிணங்கிண், என - என்று பல வாத்தியங்கள் முழங்க, ஒரு மயில் ஏறி - ஒப்பற்ற மயிலின்மீது ஏறிச் சென்று, திண் தேர் ரதத்து அசுரர் - வலிமை பொருந்திய தேர்ப்படையையும் இரதங்களையும் உடைய அசுரர்கள், பட்டு (ஏ - அசை) விழ பொருது - இறந்து விழும்படி போர் செய்து, வேலை துளைந்து - சமுத்திரத்தினுள்ளே ஊடுருவிப் பாய்ந்து, வரை ஏழை பிளந்து வரு(ம்) - ஏழு குல பருவதங்களைப் பிளந்து மீண்ட, சித்தா - தந்திரசாலியே!, பரத்து அமரர் கத்தா - வானுலகத்தில் வசிக்கும் தேவர்களின் தலைவனே!, குறத்தி முலைமீதில் புணர்ந்து - வேடர் மகளா

கிய வள்ளிநாயகியின் தனபாரங்களை அணைந்து கலவிசெய்து, சுக லீலை - இன்ப லீலைகளைச் செய்து, கதம்பம் அணி - பரிமளப் பொடியை யணிந்து கொள்ளும், சுத்தா - நிர்மலராகிய உண்மைப்பொருளே !, உமைக்கும் ஒரு முத்தாய் முளைத்த குருநாத - (சகல உலகங்களுக்கும் காரணியும் பராபரையுமான) உமாதேவியா ருக்கும் பெறாதற்கரிய பேறாய் அவதரித்த ஞான போதக சிகாமணியே !, குழந் தை என ஓடி - குழந்தை உருவத்தைப் பூண்டு அங்குமிங்கும் ஓடி விளையாடி, கடம்ப மலர் அணி திரு மார்பா - கடம்ப மலர்மாலையை அணிந்துகொண்ட அழ கிய மார்பையுடையவனே !, மத்த மத களிறு பிற்றான் உதித்த குகன் - வலிமை யுடையதும் மதம் பிடித்ததுமான யானையின் உருவத்துடன் வந்த கயாசுரனது தோலை யுரித்த சிவபெருமான் அவதரிப்பித்தவனும் ஆன்மாக்களின் இதய கமலத் துள் வசிப்பவனுமான நாதனாகவும், எதத்து இலங்கையினில்-குற்றம் பொருந்திய இலங்கையில், ஆதிக்கம் உண்டது ஒரு முட்டாள் அரக்கர் தலை - அதற்குரிய அரசனாயிருந்த மூடனாகிய இராக்கதனது (இராவணனது) தலைகள், இற்று (ஏ - அசை) விழ - அறுந்து விழும் வண்ணம், கணைகள் (ஏ - அசை) தொட்ட - அம்புகளைப் பிரயோகித்தவரும், கொண்டல் உருவாகி சுமந்து-மேகத்தையொத்த திருமேனியைத் தாங்கி, அதிக மட்டு ஆர் மலர் கமலம் - மிகுந்த வாசனை பொருந்திய தாமரை மலரை, முற்று ஆசன திருவை - எப்போதும் தனது இருப் பிடமாகக் கொண்ட இலக்குமியை, மார்பில் புணர்ந்த - தமது மார்பில் அமர்த்திக் கொண்ட விஷ்ணுவுமான, ரகுராமற்கும் அன்புடைய மருமகன் ஆகி - ரகு வமி சத்தில் அவதரித்த ஸ்ரீராமரும் அன்பு பாராட்டுமாறு தகைமை வாய்ந்துள்ள மரு மகனாகவும் தோன்றி, வற்றா மது கருணை உற்று (ஏ - அசை) - வற்றாமல் என் றும் பெருகும் தேனை யொத்த கருணையுடையவனாய், மறை கலைகள் ஓதி தெரி ந்து - வேத சாஸ்திரங்களைக் கற்றறிந்து, தமிழ் சோதித்து - தமிழ் மொழியை ஆராய்ந்து, அலங்கல் அணி - தேவாரமாகிய பாமாலையைச் சிவபெருமானுக்கு அணிவித்த, அத்தா - மேலோனே!, பரத்தை அறிவித்து-பரம் பொருள் இன்ன தென்று உணர்த்தி, ஆவி சுற்றும் ஒளியாகி - ஜீவனைச் சூழ்ந்து காத்து நிற்கும் ஞான வொளியாக நின்று, ப்ரபந்தம் அணி - நின்னை நாயகனாகக் கொண்டு புனை யும் பாமாலையை யணிந்து கொள்பவனும், வேல் தொட்ட - வேலாயுதத்தைத் தாங்கியவனுமான, மைந்த - பராக்கிரமசாலியே !, புய வர்க்கா - பல தோள்களை யுடையவனே !, மரு புழுகு முட்டா - வாசனை பொருந்திய புனுகு (உனக்குச் சாத்துவதற்கு) குறைவில்லாமல் என்றும் கிடைக்கும், திரு பழநி வாழ்வுக்கு உகந்து - பழநி என்னும் திருத்தலத்தில் அமர்ந்திருக்கும் நிலைமையில் விருப்ப முள்ளவனாய், அடியர் ஆவிக்குள் நின்று - மெய்யடியார்களது உயிருக்குள் கலந்து நின்று, உலவி வரு(ம்)-களித்து உலாவும், பெருமாளே - பெரியோனே!, இ தார ணிக்குள் - இந்தப் பூவுலகில், மனு வித்தாய் முளைத்து - மனிதனாவதற்கு வித் தான குழந்தையாகப் பிறந்து, அழுது கேவி கிடந்து மடிமீதில் - தாய் முத

லானவர்களுடைய மடியில் விம்மி விம்மி யழுதுகொண்டு கிடந்து, தவழ்ந்து - தவழும் சக்தியுற்று, (பிறகு), அடிகள் தத்தா தனத்ததன இட்டே - கால்களைத் தாறுமாருய் வைத்துத் தளர்நடை நடந்து, தெரு தலையில் ஓடித் திரிந்து-தெருவி னிடத்தே ஓடியலைந்து, நவகோடி ப்ரபந்த கலை - கோடிக்கணக்காயுள்ள புதுமை யான பிரபந்தங்களையும் சாஸ்திரங்களையும், இ சீர் பயிற்ற - இவ்வுலக முறை மைப்படி போதிக்கப்பெற்று, வயது எட்டோடும் எட்டு வர - பதினறு வய தடைந்து, வால குணங்கள் பயில் - காளைப் பருவத்துக்குரிய குணங்களைக் காட்டி யொழுகும், கோல பெதும்பையர்களுடன் உறவாகி - அழகிய இள மகளி ரிடம் நேசம் பாராட்டி, இக்கு ஆர் சரத்து மதனுக்கு (ஏ - அசை)இளைத்து-கரும்பு வில்லில் பொருந்திய பாணங்களையுடைய மன்மதனுக்குத் தோற்று, வெகுவாக கலம்ப வகை பாடி - பலவகைப்பட்ட கலம்பகம் என்னும் பிரபந்தத்தை இயற்றி, புகழ்ந்து - மனிதர்களைப் புகழ்ந்து, பல திக்கோடு திக்கு வரை மட்டு(ம்) ஓடி - பல திக்குகளிலும் சென்று அத்திக்குகளின் முடிவு வரையில் ஓடித் திரிந்து, மிக்க பொருள் தேடி - ஏராளமான பொருளைச் சம்பாதித்து, சுகந்த அணை மீதில் - நறுமணம் வீசும் படுக்கையின் மீது, துயின்று - உறங்கி, சுகம் இட்ட ஆதரத்து உருகி - இன்பத்தைத் தந்த பெண்களினிடத்து ஆசையுற்று மன முருகி, வட்ட ஆர் முலைக்குள் இடை - வட்ட வடிவமுடையதும் அழகியதுமான தனபாரங்களினிடையே, மூழ்கி கிடந்து - அமர்ந்து சுகத்தை யனுபவிப்பதி லேயே காலத்தைக் கழித்து, மயலாகி - மயக்கமுற்று, துளைந்து - (கலவி யின் பத்தை) அனுபவித்து, சில பிணி அது மூடி - சில நோய்களினல் பீடிக்கப் பெற்று, சத்து ஆன புத்தி அது கெட்டு (ஏ - அசை) கிடக்க - உண்மை யறிவு அழியப்பெற்று இருக்கும் நாளில், நமன் ஓடி தொடர்ந்து - யமன் வேகமாய் ஓடி வந்து (அடியேன் எங்கு சென்ருலும்) எங்கும் அடியேனைத் தொடர்ந்து வந்து, கயிறு ஆடி கொளும் பொழுது - பாசக்கயிற்றை வீசி ஆவியைக் கொள்ளை கொள்ளும்பொழுது, பெற்ருர்கள் சுற்றி அழ - பெற்ற தாய் தந்தையர்கள் (அடி யேனது தேகத்தைச்) சுற்றி நின்று அழவும், உற்ருர்கள் மெத்த அழ - உற வினர்கள் அதிகமாக அழவும், (ஊரார் சிலர்), ஊருக்கு அடங்கல் இலர் - ஊரா ருக்கு அடங்காத இவர், காலற்கு அடங்க - யமனுக்கு அடங்கும் வண்ணம், உயிர் தக்காது இவர்க்கும் அயன் இட்டான் - உயிர் நிலைத்திராதபடி இவருக்கும் பிர மன் தலையில் எழுதினன், விதிப்படியின் - பிரமன் விதித்தபடி, ஓலை பழம் படி யினல் - நமன் ஓலை நெடுநாளாக வரும் வழக்கப்படி வந்ததனல், இற்று இறந்தது என - இன்றைக்கு இறந்தார் என்று கூறி, எடும் என ஓடி - உயிர் நீங்கிய சட லத்தை வீட்டைவிட்டு எடுக்கவேண்டும் என்று சொல்லி (அதற்குரிய ஏற்பாடு களைச் செய்ய) விரைந்து சென்று, சட்டா நவ பறைகள் கொட்டா - திட்டப்படி ஒன்றுக்கொன்று இசைவான பறைகள் முழங்க, வரி சுடலை ஏகி - உடலைக் கொளுத்தும் இடமான மயானத்துக்குச் சென்று, சடம் பெரிது வேக புடம்

சமைய - பெருத்த சடலமானது வெந்து நீறுரும் வண்ணம், அனற்குள் இட்டு (ஏ அசை) - தீயினுள் வைத்து, எரிபட்டார் - எரிந்து போனரே, என தழுவி - என்று கூறி ஒருவரையொருவர் கட்டியழுது, நீரில் படிந்து விடு(ம்) பாசத்து - தண்ணீரில் மூழ்கித் துக்கம் நீங்கப்பெறும் மானிடர்பால் கொள்ளும் அன்பான தளையைவிட்டு, அகன்று - நீங்கி, உனது சத் போதக பதுமம் உற்று (ஏ-அசை)- உனது நல்ல உபதேசமாகிய பதுமநிதியை யொத்த செல்வத்தைப் பெற்று, தமிழ் கவிதை பேசி - தமிழ் மொழியில் பாமாலைகளைப்பாடி, பணிந்து - உன்னை வணங்கி, உருகு - மனமுருகுவதற்குரிய, நேசத்தை - அன்பை, இன்று தர - இப்பொழுதே தருவதற்கு, இனி வரவேணும் - இனித் தாமதியாமல் வந்தருள வேண்டும்.

(வி - ரை) காமக்குரோதம் முதலிய துர்க்குணங்களின் சொரூபிகளான அசுரர்களை அழிப்பதற்கு முருகப்பெருமான் வேறு படைகளை யுபயோகிக்காமல் ஞானசக்தியையே உபயோகித்தார்; ஏனெனில், கோபத்தைக் கோபத்தினுல் அழிக்க முயலுவது அக்கினியை அக்கினியினுல் தணிக்க முயலுவது போலாகும். ஆதலின் முருகப்பெருமான், "கருவி னைத்தரு மிருவி னைத்தொடர் கழல்ப தத்தன * * * காம ராசனை அடல்கெ டுப்பன வகில கற்பனை யரண ழிப்பன கோப மானவை, அவிய நற்பொறை யெனுந திப்பிர ளயமி றைப்பன * * * * திகழு மற்புத மவுன நிர்க்குண சிவம யத்திரு ஞான வேழமே" என்று **திருஞான வேழ வகுப்பிற்** கூறியுள்ளபடி, துர்க்குணங்களைத் தந்திரமாக ஞான சக்தியினுல் வென்ருர். ஆதலால் "சித்தா" என்னும் பதத்துக்கு தந்திரசாலியே என்று பொருள் கூறப்பட்டிருக்கிறது. முருகப்பெருமான் குறமகளான வள்ளி நாயகியைச் சதாகாலமும் கலக்க விரும்புவது அத்தேவியாரை மேலான பதவியில் இருத்துவதற்கேயன்றி காம வெறியினுல் அல்ல என்பது "சுகலீலைக் கதம்பமணி சுத்தா" என்றதனுல் விளங்குகிறது. சுத்தம் என்ற பதத்துக்கு உண்மை என்றும் நிர்மலம் என்றும் பொருள் கூறலாமாகையினுல், சுத்தா என்னும் பதத்துக்கு நிர்மலனுகிய உண்மைப் பொருளே என்று பொருள் கூறப்பட்டது. சகலவுலகங்களையும் தோன்றச்செய்த உமாதேவியாருக்கும் கிடைத்தற்கரிய பேறுன முருகப் பெருமான்,

"தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான

சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந்தொழுஞ் சரவணப் பெருமாளே!"

என்றபடி, உமாதேவியார் மனமகிழ வேண்டுமென்றே குழந்தையின் வடிவம் பூண்டு தளர்நடை பயின்றார். பழநி என்னும் திருத்தலமானது சிவபெருமான் முருகப்பெருமானை முதிர்ந்த ஞானமான பழம் நீயே என்று கூறிப் புகழ்ந்த தலமாகையினால், பரிபூரண ஞானசக்தியைக் கையிலேந்தி சுத்தஞான சொரூபியாய் அத்தலத்தில் விளங்கும் முருகப்பெருமான் தமது மெய்ஞ்ஞான சொரூபத்தை அறிந்த மெய்யடியார்களது உயிரிற்கலந்து உலாவ விரும்புகிறார். இப்பாடலில் முதல் நான்கு அடிகளில் சுவாமிகள் ஒரு மனிதன் உலகத்தில்தோன்றி உலகவாழ்க்கையில் உழன்று மரிக்கும் பழைய கதையை விசித்திரமாகக் கூறி, அவ்வித வாழ்க்கையில் உழன்று துயரமடையாமல் தம்மைக் காத்தருளும்படி முருகப்பெருமானைப் பிரார்த்திக்கிறார். ஒரு மனிதனுக்குப் பெண்காதல் உண்டாவதனால்தான் அவன் பெண்களின் மனத்தைத் திருப்திசெய்யப் பொருள் தேடுகிறான். அவ்வாறு பொருள் தேடப்புகுபவன் கவித்திறமை வாய்ந்தவனாயிருந்தால், அத்திறமையைத் தனக்கு அளித்த பரம்பொருளைப் புகழ்ந்துபாட அதை உபயோகிக்காமல் மனிதரைப் புகழ்ந்துபாடிப் பொருள் தேட அதை உபயோகிக்கிறான். அப்படிக் கஷ்டப்பட்டுத்தேடும் பொருளோ வெகு சீக்கிரம் விலைமாதருக்கு அளிக்கப்பட்டு அவன் கையைவிட்டு அகலுகிறது. அவன் தனது கவித்திறமையை ஆதியந்தமற்ற பரம்பொருளான முருகப்பெருமானைப் புகழ்ந்துபாட உபயோகித்திருப்பானேயாகில், அவன் இகபர சாம்பிராச்சியங்களை எளிதில் அடைந்திருப்பான். மனிதர் தமது கவித்திறமையைத் தீயநெறியில் உபயோகிப்பதைச் சுவாமிகள் இப்பாடலிற் போலவே மற்றும் பல பாடல்களிற் கண்டித்திருக்கிறார். அவைகளில் ஒன்று பின் வருமாறு :—

" அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்டவஞ்சர்
அசடர்பேய்க் கத்தர் நன்றி யறியாத
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்புகழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடி
சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்திரிந்து
தெரிவைமார்க் குச்சொ ரிந்து அவமேயான்
திரியுமார்க் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளியமோ க்ஷத்தை யென்று அருள்வாயே !"

ஒருவர் உயிருடனிருந்த வரையில் அவரிடத்தில் மிருந்த அன்பு பாராட்டி வந்த உற்றார் பெற்றார்களும், அவரைக்கண்டு அஞ்சியிருந்த ஊரார்களும், அவர் உயிர் துறந்தவுடன் அன்பையும் அச்சத்தையும் துறந்து கணப்பொழுதும் தாமதிக்காமல் விரைந்து ஓடி அவரது சடலத்தைக் கொளுத்துவது வியக்கத்தக்கதே. ஒருவர் உயிர் துறந்தவுடன், அவரது உற்றார் பெற்றார்கள் அவரது சடலத்தைக்

கொளுத்திவிட்டு நீராடி உடனே தமது துக்கத்தை யொழித்து விடுவது உலக வியல்பாகவிருக்க, அவர்களுடைய அன்பைப் பெரிதாக நினைத்து மயங்கி என்றும் புகலிடமான பரம்பொருளை மறந்திருத்தல் புத்தியீனமே. அம்மயக்கம் நீங்கி உண்மையறிவு பெறுவதற்கு ஞான சொரூபியான முருகப்பெருமானது அருளையே நாடவேண்டும். இக்கருத்தைப் பின் வரும் அடிகள் நன்கு விளக்கும்:—

" சிறுபறையு முரசுதுடி சத்தக் கணப்பறையு
மொகுமொகென அதிரவுட னெட்டிப் பிடித்துமுடி
சிறுகயிறு நெடிதுகொடு கட்டிட் டிழுக்கஇனி யணுகாதே

சிலதமர்க ளுறவுகிளை கத்திப் பிதற்றி பெடு
சுடலைதனி லிடுகனலை யிட்டுக் கொளுத்துபுனல்
திரைகடலில் முழுகெனவு ரைக்கப் படிக்குடிலை யொழியாதே "

" கருகியறி வகலவுயிர் விட்டுக் கிக்கிளைஞர்
கதறியழ விரவுபறை முட்டக் கொட்டியிட
கனகமணி சிவிகையில மர்த்திக் கட்டையினி விடையோடாக்

கரமலர்கொ டரிசியினை யிட்டுச் சித்ரமிகு
கலையையுரி செய்துமறைகள் பற்றப் பற்றுகனல்
கணகணென எரியவுடல் சுட்டுக் கஷியவர் வழியேபோய்

மருவுபுனல் முழுகிமனை புக்குத் துக்கமற
மனிதர்தமை யுறவுநிலை சுட்டிச் சுட்டியுற
மகிழ்வுசெய்து அழுதுபட வைத் தத்துட்டன் மதன் " (ருரு)

தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன
தான தந்தன தான தந்தன—தனதான.

**வேயி** சைந்தெழு தோள்கள் தங்கிய
மாதர் கொங்கையி லேமு யங்கிட
வீணி துஞ்சில பாத கஞ்செய அவமேதான்

வீறு கொண்டட னேவ ருந்தியு
மேயு லைந்தவ மேதி ரிந்துள
மேக வன்றறி வேக லங்கிட வெகுதூரம்

போய லைந்துழ லாகி நொந்துபின்
வாடி நைந்தென தாவி வெம்பியெ
பூத லந்தனி லேமை யங்கிய மதிபோகப்

போது கங்கையி னீர்சொ ரிந்திரு
பாத பங்கய மேவ ணங்கியெ
பூசை யுஞ்சில வேபுரிந்திட அருள்வாயே

தீயி சைந்தெழ வேயி லங்கையில்
ராவ ணன்சிர மேய ரிந்தவர்
சேனை யுஞ்செல மாள வென்றவன் மருகோனே !

தேச மெங்கணு மேபு ரந்திடு
சூர்ம டிந்திட வேலின் வென்றவ
தேவர் தம்பதி யாள அன்புசெய் திடுவோனே !

ஆயி சுந்தரி நீலி பிங்கலை
போக அந்தரி சூலி குண்டலி
ஆதி யம்பிகை வேத தந்திரி யிடமாகும்

ஆல முண்டா ரனி றைஞ்சவோர்
போத கந்தனை யேயு கந்தருள்
ஆவி னன்குடி மீதி லங்கிய பெருமாளே !

(ப - ரை) இலங்கையில் தீ இசைந்து எழ (ஏ - அசை) - இலங்காபுரியில் தீப்பற்றி எரியச்செய்து, ராவணன் சிரம் (ஏ - அசை) அரிந்து - இராவணனது தலைகளை அறுத்து, அவர் சேனையும் செல மாள வென்றவன் - அவனுடைய சேனையும் கெட்டு அழியும்படி வெற்றியடைந்த ஸ்ரீ ராமபிரானது, மருகோனே- சகோதரியின் புத்திரனே !, தேசம் எங்கணும் (ஏ - அசை) புரந்திடு(ம்) - உலகங்களையெல்லாம் அரசாண்டு வந்த, சூர் மடிந்திட வேலின் வென்றவ - அசுரர்கள் உயிரிழக்கும் வண்ணம் அவர்களை வேலாயுதத்தினால் வென்றவனே, தேவர் தம்பதி ஆள - தேவர்கள் தங்கள் வானுலகத்தின் ஆட்சியை (மீண்டும்) பெறும்படி, அன்பு செய்திடுவோனே - அன்பினால் அருள் புரிந்தவனே !, ஆயி சுந்தரி நீலி பிங்கலை - உலகெலாம் ஈன்ற தாயாராகவும் ஒப்புயர்வற்ற அழகு வாய்ந்தவராகவும் துர்க்கையாகவும் (தசநாடிகளில் ஒன்றான) பிங்கலையின் சொரூபியாகவும், போக அந்தரி - முந்தைவினைப் பயன்களை யூட்டுவிக்கும் சக்தியாகவும், சூலி - காளியாகவும், குண்டலி - சுத்தமாயையாகவும், ஆதி அம்பிகை-உலகம் தோன்று முன் ஆதியில் தோன்றிய உமாதேவியாராகவும், வேத தந்திரி - வேதங்களை இன்னிசையுடன் ஓதுவதற்குரிய யாழைக் கையிலேந்தியவராகவுமுள்ள பார்வதி தேவியார், இடம் ஆகும் - வாமபாகத்தில் அமர்ந்திருக்கப் பெற்றவரும், ஆலம் உண்ட - ஆலகால விடத்தை உண்டவருமான, அரனார் இறைஞ்ச - சிவபெருமான் வணங்கி நின்றபோது, ஓர் போதகம் தனை (ஏ - அசை) உகந்து அருள் -

ஒப்பற்ற உபதேசத்தை அன்புடன் செய்தருளியவனும், ஆவினன்குடி மீது இலங்கிய - திருவாவினன்குடி என்னும் திருத்தலத்தில் (ஞானமூர்த்தியாக) விளங்குபவனுமான, பெருமாளே - பெரியவனே !, வேய் இசைந்து எழு தோள்கள் தங்கிய - மூங்கிலை யொத்து வளர்ந்துள்ள தோள்கள் பொருந்தியுள்ள, மாதர் கொங்கையிலே முயங்கிட - பெண்களது தனபாரங்களை அணைந்துகொள்ள இச்சித்து, வீணில் (உம் - அசை) சில பாதகம் செய - அவசியமில்லாமலே சில கொடிய பாவங்களைச்செய்ய, அவமே தான் வீறு கொண்டு - வீணாக மனத்தீவிரம் கொண்டு, உடனே வருந்தியும் (ஏ - அசை) - (அவ்வாறு பாதகம் செய்தும் எனது இச்சை நிறைவேறாததனால்) உடனே மனவருத்தமுற்றும், உலைந்து அவமே திரிந்து - மனங்கலங்கி அலைந்து திரிந்து, உளம் (ஏ - அசை) கவன்று - மனம் கவலையுற்று, அறிவு (ஏ - அசை) கலங்கிட - அறிவு கலங்கப்பெற்று, வெகு தூரம் போய் அலைந்து உழ(ல)ல் ஆகி - (என் இச்சையைப் பூர்த்தி செய்துகொள்ள) வெகு தூரம் சென்று அலைந்து திரிந்து, நொந்து - மனம் நோகப்பெற்று, பின் வாடி - பிறகு மனம் சோர்வடையப் பெற்று, நைந்து - துக்கமுற்று, எனது ஆவி வெம்பி (ஏ - அசை) - எனது உயிரே பலங்குன்றப் பெற்று, பூதலம் தனில் (ஏ - அசை) மயங்கிய - பூவுலகத்தில் (விஷய சுகங்களிலுள்ள ஆசையினால்) மயக்கமுற்ற, மதி போக - மனோநிலைமை நீங்கப் பெற்று, போது கங்கையின் நீர் சொரிந்து - மலர்களையும் கங்கையின் தீர்த்தத்தையும் (நினது சரணங்களில்) சொரிந்து, இரு பாத பங்கயம் (ஏ - அசை) - வணங்கி (ஏ - அசை) - உனது இருபாதத்தாமரைகளையும் வணங்கி, பூசையும் சில (ஏ - அசை) புரிந்திட அருள்வாயே - பூசையும் சற்று அடியேன் செய்திடும் வண்ணம் அருள் புரியவேண்டும்.

(வி - ரை) "தேச மெங்கணு மேபு ரந்திடு, சூர்ம டிந்திட வேலின் வென்றவ," என்ற விடத்து, உலகங்களிலெல்லாம் தலைதூக்கி நின்று வருத்தி வந்த துன்பமானது அழியும்படி ஞான சக்தியை உபயோகித்து வெற்றிபெற்றவனே என்றும் பொருள் கூறுதல் பொருந்தும். துன்பத்துக்குக் காரணம் அஞ்ஞானமே ; அதை அகற்றவல்லது ஞானம் ஒன்றே. சூர் - துன்பம், அசுரன். பெண்ணாசையே பஞ்ச மகா பாதகங்களைச் செய்யும்படி ஆடவரைத் தூண்டுகிறது என்னும் கருத்தை வேறொரு விடத்தில் சுவாமிகள் பின்வருமாறு கூறுகிறார் :—

"பரிபுர பதமுள வஞ்ச மாதர்கள்
பலபல விதமுள துன்ப சாகர
படுகுழி யிடைவிழு பஞ்ச பாதக—மென்று தீர்வேன்"

இக்கருத்து இவ்வுரையின் 140-ம் பக்கத்தில் விளக்கப்பட்டிருப்பதையும் காண்க. திருவாவினன்குடி - திரு ஆ இனன் குடி - இலக்குமி பசு சூரியன் இவர்கள் முருகப்பெருமானைப் பூசித்த தலம். மற்றும் குடி என்பதை, கு - பூமி, டி - அக்கினி என்று பிரித்துப் பொருள் கூறுவாருமுளர். (௫௬)

*தனதத்தன தான தந்தன தனதத்தன தான தந்தன*
*தனதத்தன தான தந்தன—தனதான.*

**ப**கர்தற்கரி தான செந்தமி ழிசையிற்சில பாட லன்பொடு
பயிலப்பல காவி யங்களை யுணராதே
பவளத்திணை வீழி யின்கனி யதனைப்பொரு வாய்ம டந்தையர்
பசலைத்தன மேபெ றும்படி விரகாலே
சகரக்கடல் சூழு மம்புவி மிசையிப்படி யேதி ரிந்துழல்
சருகொத்துள மேய யர்ந்துடல் மெலியாமுன்
தகதித்திமி தாகி ணங்கிண எனவுற்றெழு தோகை யம்பரி
தனிலற்புத மாக வந்தருள் புரிவாயே!
நுகர்வித்தக மாகு மென்றுமை மொழியிற்பொழி பாலை யுண்டிடு
நுவல்மெய்ப்புள பால னென்றிடு மிளையோனே!
நுதிவைத்தக ராம லைந்திடு களிறுக்கரு ளேபு ரிந்திட
நொடியிற்பரி வாக வந்தவன் மருகோனே!
அகரப்பொரு ளாதி யொன்றிடு முதலக்கர மான தின்பொருள்
அரனுக்கினி தாமொ ழிந்திடு குருநாதா!
அமரர்க்கிறை யேவ ணங்கிய பழநித்திரு வாவி னன்குடி
அதனிற்குடி யாயி ருந்தருள் பெருமாளே!

(ப - ரை) நுகர் வித்தகம் ஆகும் என்று உமை மொழி-இதை உண்பாயாக! ஞானம் இதுவேயாகும் என்று உமாதேவியார் கூறி, பொழி இன் பாலை - தமது தனபாரங்களினின்றும் கறந்து தந்தருளிய இனிய பாலமுதத்தை, உண்டிடு - உண்டவரும், நுவல் மெய்ப்பு உள பாலன் என்றிடும் - (யாவரும் பெற முயல வேண்டுவது என்று) சொல்லப்படும் மெய்ஞ்ஞானத்தை யடைந்த சிறுவன் என்று சொல்லப்பட்டவருமான திருஞான சம்பந்த மூர்த்திகளாய் அவதரித்த, இளையோனே - காளைக் குமரனே!, நுதி வைத்த கரா மலைந்திடு - போரைத் தொடங்கிய முதலையானது எதிர்த்த, களிறுக்கு அருளே புரிந்திட - கஜேந்திரன் என்னும் யானைக்கு அருள்புரிவதற்காக, நொடியில் பரிவாக வந்தவன் - நொடிப் பொழுதில் ஆதரவுடன் வந்த திருமாலின், மருகோனே - சகோதரியின் புத்திரனே!, அகரம் ஆதி பொருள் ஒன்றிடு - அகரத்தை முதலாகவுள்ள ஐம்பத்தொரு அக்ஷரங்களினாலாய சகல கலைகளிலும் அடங்கிய பொருள் தன்னிடத்தே பொருந்தப் பெற்றதும், முதல் அக்கரம் ஆன தின் பொருள் - வேதத்தின் முத

வில் தலைமை பெற்ற எழுத்தானதுமான பிரணவத்தின் பொருளை, அரனுக்கு இனிதா மொழிந்திடு குருநாதா - சிவபெருமானுக்கு அவர் மனம் களிப்படையும் படி உரைத்தருளிய போதக சிகாமணியே !, அமரர்க்கு இறையே வணங்கிய - தேவர்களுக்கு அரசனான இந்திரனும் வணங்கிய தலமான, பழநி திருவாவினன் குடி அதனில் - பழநிமலையின் அடிவாரத்திலுள்ள திருவாவினன்குடி என்னும் தலத்தில், குடியாய் இருந்து அருள் பெருமாளே-நிலைமையாக அமர்ந்து அருளும் பெரியோனே !, பகர்தற்கு அரிதான செம் தமிழ் இசையில் - அதன் பெருமை யையும் இனிமையையும் எடுத்துரைக்க முடியாததாகவுள்ள திருத்தமான தமிழ் மொழியின் இன்னிசை பொருந்திய, சில பாடல் - சில பாடல்களை, அன்பொடு பயில - நின்னிடத்து மெய்யன்பு பூண்டு இயற்றுவதற்கு, பல காவியங்களை உணராதே - பல காப்பியங்களை ஓதி அவைகளிலுள்ள பொருளை உணராமல், பவளத் திரள் வீழியின் கனி அதனை பொரு வாய் - பவளத்தையும் வீழி யென்னும் செடியின் பழத்தையும் ஒத்திருக்கும் வாயையுடைய, மடந்தையர் - பெண்களின், பசலைத்தனம் (ஏ - அசை) பெறும்படி விரகாலே - காமம் மூட்டும் குணத்தை அனுபவிக்க வேண்டுமென்ற ஆசையினால் அதனைப் பெற வேண்டுமென்று விரக தாப முற்று, சகர கடல் சூழும் - சகர புத்திரர்களால் தோண்டப்பட்ட சமுத் திரத்தினால் சூழப்பெற்ற, அம்புவி மிசை இப்படி (ஏ - அசை) - பூமியின்மீது இவ்வாறு, உழல் சருகு ஒத்து - சுழல் காற்றில் அகப்பட்டு அலையும் சருகைப் போல, திரிந்து - அலைந்து திரிந்து, உளம் (ஏ - அசை) அயர்ந்து - மனம் சோர் வுற்று, உடல் மெலியா முன் - தேகம் இளைக்கு முன்பு, தகதித்திமி தாகி ணங் கிண—, என உற்று எழு தோகை அம் பரி தனில் - என்ற தாளத்துக்கிசைய நிர்த்தனம் செய்வதும் தோகையையுடையதும் அழகும் வேகமும் வாய்ந்ததுமான மயிலாகிய வாகனத்தின்மீது, அற்புதமாக வந்து அருள் புரிவாயே - அழகாக எழுந்தருளி வந்து அருள்புரிய வேண்டும்.

(வி - ரை) திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் மூன்றாம் வயதில் ஒரு நாள் காலையில் பொய்கைக்கு நீராடச் சென்ற தமது தந்தையாரைப் பின் தொடர்ந்து சென்றார். சிவபாத இருதயர் தமது குழந்தையைக் குளக்கரையில் விட்டுத் தாம் அகமருஷண ஸ்நானம் செய்துகொண் டிருந்தார். அவர் நீரில் மூழ்கவும் அவரைக் காணமல் துயரமுற்ற குழந்தையாகிய சுவாமிகள் அழத் தொடங்கினர். அவ்வாறு அவர் அழுதது அவருக்குச் சிவபெருமானிடத்து முன் பிருந்த சம்பந்தத்தைக் கருதியோ? அல்லது தாம் குழந்தையாக அவதரித்தத னாலோ ? யார் சொல்ல வல்லவர் ? அவர் திருத்தோணி யென்னும் ஆலயத்தின் சிகரத்தைப் பார்த்து 'அம்மே, அப்பா' எனப் பலமுறை அழைத்து அழுதார். அவரது அழுகைக் குரலைக்கேட்ட கருணைக்கடலாகிய சிவபெருமான் உமா தேவியாரை நோக்கி அவரது தனபாரங்களிலுள்ள பாலமுதத்தை ஒரு பொற்

கிண்ணியில் கறந்து அக்குழந்தைக்கு ஊட்டும்படி கூறியருளினர். வேதங்களை யும் ஏழு உலகங்களையும் படைத்தருளி அவையனைத்துக்கும் காரணியாய் எம் பெருமானது கருணையின் திருவுருவமாக நிற்கும் உமாதேவியார் தமது திரு முலைப்பாலைக் கறந்து,

"எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி
யுண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர் நோக்குங்
கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித்
தண்ணலையங் கழுகைதீர்த் தங்கணரு ளருள்புரிந்தார்"

என்றபடி அப்பாலமுதத்துடன் சிவஞானத்தைக் கலந்து, திருஞானசம்பந்தப் பிள்ளையாரது கண்களிலிருந்து பெருகிய கண்ணீரைத் துடைத்து, அப்பொற் கிண்ணத்தை அவருடைய திருக்கரத்திற் கொடுத்து, அப்பாலமுதத்தை உண் ணும்படி கூறி அதை யூட்டியருளினர்.

கஜேந்திரனுக்குத் திருமால் அருள்புரிந்த சரித்திரத்தை இவ்வுரையின் 153-154-ம் பக்கங்களில் காண்க

**சகர புத்திரர் வரலாறு:**—இக்ஷ்வாகு வமிசத்தில் சக்கரவர்த்தியாய் விளங் கிய சகரன் என்பான் இந்திரப் பட்டத்தை விரும்பித் தொண்ணூற்றொன்பது அசுவமேதயாகங்களைச் செய்து முடித்து நூறாவது யாகம் செய்யத் தொடங்கக் கண்ட இந்திரன் யாகத்துக்குரிய குதிரையைக் கவர்ந்து சென்று, பாதலத்தில் தவம் செய்துகொண் டிருந்த கபிலர் ஆச்சிரமத்தில் கட்டிவிட்டு அகன்றான். சகரனது புத்திரர் அறுபதினாயிரம் பேர்களும் பூவுலகமெங்கும் தேடிக் குதி ரையைக் காணமல், பூமியைத் தோண்டிச் சென்று பாதலத்தில் புகுந்து குதி ரையைக் கண்டுபிடித்து, அது கட்டியிருந்த விடத்தினருகே தவநிஷ்டையி லமர்ந்திருந்த கபிலரே அதைக் கவர்ந்து வந்திருக்க வேண்டுமென நினைத்து, அவரைத் துன்புறுத்தத் தொடங்கி அவருடைய கோபாக்கினியினல் வெந்து சாம்பராயினர் அவர்கள் பூமியைத் தோண்டிச் சென்றவிடமே சமுத்திரமாக ஆயிற்று. அதனல் சமுத்திரத்துக்குச் சாகரம் என்று பெயர் உண்டாயிற்று. (ருள)

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த—தனதான.

கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து -
கலைகள்பல வேதெ ரிந்து மதனூலை

கரியகுழல் மாதர்தங்க ளடிசுவடு மார்பு தைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி

அரகரசி வாய வென்று தினமுநினை யாமல் நின்று
அறுசமய நீதி யொன்று மறியாமல்

அசனமிடு வார்கள் தங்கள் மனைகள்தலை வாசல் நின்று
அநுதினமு நாண மின்றி யழிவேனோ ?

உரகபட மேல்வ ளர்ந்த பெரியபெரு மாள ரங்க
ருலகளவு மால்ம கிழ்ந்த மருகோனே !

உபயகுல தீப துங்க விருதுகவி ராஜ சிங்க
உறைபுகலி யூரி லன்று வருவோனே !

பரவைமனை மீதி லன்று ஒருபொழுது தூது சென்ற
பரமனரு ளால்வ ளர்ந்த குமரேசா !

பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீள வென்று
பழநிமலை மீதில் நின்ற பெருமாளே !

(ப - ரை) உரக படம் மேல் வளர்ந்த - ஆதி சேஷனாகிய பாம்பின் படத்தின்மீது கண்வளரும் (யோகநித்திரை செய்யும்), பெரிய பெருமாள் அரங்கர் - ஆஜாநுபாகுவான ஸ்ரீ ரங்கநாதரும், உலகு அளவு மால் - மூவுலகங்களையும் மூன்றடிகளாக அளந்த திரிவிக்கிரமருமான திருமால், மகிழ்ந்த மருகோனே - கண்டு மனமகிழும்படி செய்த மருகனே, உபயகுல தீப துங்க - தாயின் குலம் தந்தையின் குலம் இரண்டையும் ஒளி (கீர்த்தி) பெறச்செய்த தூய்மையுடையவனே !, விருது கவிராஜ சிங்க - கொடிமுதலிய விருதுகளைப் பெறும்படி நிகரற்ற கவித்திறமை வாய்ந்து கவிகளுக்குள் சிங்கத்தைப்போல் தலைவனாய் விளங்கியவனே!, உறை புகலியூரில் அன்று வருவோனே - சிவபெருமானது உறைவிடமான சீகாழி என்னும் திருத்தலத்தில் அந்நாளில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளாய் அவதரித்தவனே !, பரவை மனை மீதில் அன்று ஒரு பொழுது தூது சென்ற - பரவை நாச்சியார் வீட்டுக்கு அந்நாச்சியார் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் ஊடல் கொண்ட நாளில் ஒருசமயம் (அவ்வூடலை நீக்குவதற்காக) தூது சென்ற, பரமன் அருளால் வளர்ந்த குமரேசா - சிவபெருமானது திருவருளினால் அவதரித்த குமார சுவாமியே !, பகை அசுரர் சேனை கொன்று - தேவர்களிடத்தில் பகைமை பாராட்டிய அசுரர்களது சேனையை யழித்து, அமரர் சிறை மீள வென்று - தேவர்கள் சிறையினின்றும் மீண்டு வெளியே வரும்படி (அசுரர்களை) வென்று, பழநி மலை மீதில் நின்ற பெருமாளே - பழநி மலையின் மீது எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, கருவின் உரு ஆகி வந்து - தாயாரது கர்ப்பத்தில் ஒரு வடிவத்தைப் பெற்றுப் பிறந்து, வயது அளவில் (ஏ - அசை) வளர்ந்து - வயது ஆக ஆக மேன் மேலும் வளர்ந்து, கலைகள் பல (ஏ -

அசை) தெரிந்து - சாஸ்திரங்கள் பலவற்றைக் கற்றறிந்து, மதனாலே கரிய குழல் மாதர் தங்கள் - மன்மதனது செய்கையினால் கருத்த கூந்தலை யுடைய பெண்களது, அடி சுவடு மார் புதைந்து - (பாதங்களில் வீழ்ந்து அவைகளை இறுகக் கட்டிக்கொள்வதனால் அவர்களது) பாதங்களின் குறிகள் அடியேனது மார்பில் அழுந்தப்பெற்று, கவலை பெரிதாகி - பெருங்கவலையுற்று, நொந்து - மனம் வருந்தி, மிக வாடி - மிகுந்த சோர்வடைந்து, அரகர சிவாய என்று தினமும் நினையாமல் நின்று - ஹரஹரா ! நமசிவாய ! என்று முக்க ணெந்தையின் திருநாமங்களை யுச்சரித்துத் தினந்தோறும் அவரைத் தியானிக்கா மல் (மூடனாய்) இருந்து, அறு சமய நீதி ஒன்றும் அறியாமல் - (சைவசமயத் தின் உட்சமயங்களான) சைவம் பாசுபதம் மகாவிரதம் காளாமுகம் வாமம் வைர வம் என்னும் ஆறு சமயங்களிலும் முக்கியமானவை யென்று கூறப்பட்டுள்ள நீதி களில் ஒன்றையும் தெரிந்துகொள்ளாமல், அசனம் இடுவார்கள் தங்கள் மனைகள் தலைவாசல் நின்று - (சோற்றுத் துருத்தியை நிரப்புவதையே முக்கியமாகக்கருதி வயிற்றை நிரப்பிக்கொள்ளச்) சோறு போடுகிறவர்களுடைய (வீடுகளை நாடிச் சென்று அவ்)வீடுகளின் தலைவாசலை விட்டுப் பெயராமல் நிலையாக நின்று, அநுதினமும் நாணம் இன்றி அழிவேனோ - தினந்தோறும் வெட்கமில்லாமல் காலங் கழித்து என் வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்வது தகுதியோ.?

(வி - ரை) **பரமன் பரவை நாச்சியார் வீட்டுக்குத் தூது சென்றது :—** சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவொற்றியூரில் சங்கிலியாரை மணந்து கொண்டு வாழ்ந்துவந்த சங்கதியைக் கேட்டதும் பரவை நாச்சியாருக்கு மிகுந்த மனவருத் தம் உண்டாயிற்று. சுவாமிகள் திருவாரூருக்குத் திரும்பி வந்தபோது பரவை யாரது மனோ நிலைமையை யறிந்து அவருடைய மாளிகைக்குச் செல்ல அஞ்சிச் சிலரைப் பரவையாரிடத்துக்கு அனுப்பினார். அவர்கள் அவரது ஊடலை நீக்க முயன்றபோது, பரவையார், "குற்றமுள்ள ஆரூரரைக் குறித்துப் பேசும் பேச்சு அடியேனது உயிரைப் போக்கும்" என்று கூற, அவர்கள் அச்சமுற்றுத் திரும்பினார்கள். அதன் பிறகு சுவாமிகள் சிவபெருமானைத் தியானிக்க, கண் ணுதல் அவர் முன்னே தோன்ற அப்பெருமானைப் பரவையாரது ஊடலைத் தீர்த்தருளும்படி பிரார்த்தித்தார். ஆரூர் அண்ணலும் அதற்கிசைந்து நள்ளிரவில் ஆலயத்தைச் சேர்ந்த ஆதிசைவர் வேடம் தாங்கிப் பரவையாரது அகத்துக்குச் சென்று நம்பியாரூரர் செய்த பிழைகளைப் பொறுத்து அவரை மன்னிக்கும்படி வேண்ட, பரவையார் அதற்கிசையாது அவரைப் போகலாமென்று கோபத் துடன் கூறினார். பிறகு சிவபெருமான் சுந்தரரிடம் மீண்டு சென்று நடந்ததைத் தெரிவிக்க, சுவாமிகள் எம்பெருமான் மீண்டும் பரவையாரிடம் சென்று அவரது ஊடலை நீக்காவிடில் தாம் உயிர் துறப்பது நிச்சயமெனக் கூறித் துக்கித்தார்; உடனே சிவபெருமான் அவருக்குத் தைரியம் கூறிப் பரவையார் இல்லத்துக்குத் தமது சுயவுருவத்துடன் மீண்டும் சென்று பரவையாரை நோக்கி, " அன்பால்

ஆரூரன் வவ யாம் மீண்டும் வந்தோம்; முன்போல் மறுக்காதே, நின்னைப்பிரிந்து வருந்தும் சுந்தரன் இங்கு வர நீ இசையவேண்டும்" என்று கூறியருளினர். பரவையார் எம்பெருமானைப் பணிந்து, "சுவாமி! தேவரீர் இங்கு வரப் பெற்ற அடிமை செய்த தவம் என்னே! தேவரீர் அன்பருக்காக இரவு முழுவதும் அங்குமிங்கும் உழல்வீராளுல் அடியேன் இசையாமல் என் செய்வேன்?" என்ருர். எம்பெருமான் பரவையாரைப் புகழ்ந்து சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் சென்று, "யாம் பரவையாருடைய கோபத்தைத் தணித்தோம். நீ இனிச் செல்லலாம்" என்று கூறி மறைந்தருளினர். இப்பாடலில் "உலகளவு மால் மகிழ்ந்த மருகோனே" என்று சுவாமிகள் முருகப்பெருமானை விளிப்பதற்குக் காரணமென்னவெனில், மகாபலிச் சக்கரவர்த்தியின் ஆட்சிக்குள் அடங்கிய மூவுலகங்களையும் கால் அடியினல் அளப்பதற்காக விசுவரூபமெடுத்த திருமால், சூரபதுமனது சிறமையையும் தமது பெருமையையும் சூரபதுமனுக்கு விளக்குவதற்காக, முருகப்பெருமான் தவமுடைய அச்சூரன் முன் விசுவரூபமெடுத்து சகல அண்டங்களும் தம்மிடத்தே தோன்றும்படிச்செய்து சூரபதுமன் ஆட்சிக்கடங்கிய ஆயிரத்தெட்டு அண்டங்களும் தமது திருமேனியிலுள்ள ஒரு உரோமத்தில் தொங்குவதாகக் காட்டியதைக்கண்டு தமது மருமகனை முருகப்பெருமானது திறமை தமது திறமையைக் காட்டிலும் சொல்லமுடியா வளவு அதிகமாயிருந்ததை யுன்னி வியப்புற்று மனமகிழ்ந்தார்.

பரம ஞானத்தை ஒருவருக்குத் தரவல்லது பரம்பொருளின் அருளேயன்றி கலைஞானம் அல்லவென்டதையும், 'பழுதற வோதிக்கடந்து பகை வினை தீரத் துறந்து பலபல யோகத்திருந்த' பேர்களும் மன்மதனது பாணத்தினல் சோர்வடைவார்கள் என்பதையும், 'கலவியின் நலம் அற்ப சுகமாயினும் மா அநுபவம் அது சற்றும் விட' இயலாது என்பதையும், "கலைகள் பலவே தெரிந்து மதனாலே" என்னும் மொழிகளினல் குறிப்பாகச் சுவாமிகள் உணர்த்தியருளியிருக்கிருர். (௫அ)

தனத்தனனத் தனத்தனனத்
தனத்தனனத் தனத்தனனத்
தனத்தனனத் தனத்தனனத்—தனதான.

குறித்தமணிப் பணித்துகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச்சுருளைப் பிளவோடே

குதட்டியதுப் புதட்டைமடித்
தயிற்பயிலிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வைக் கெடுத்துநகக் குறியாலே




முருகப்பெருமான் உலகத்தை வலம்வந்தது.

பொறித்ததனத் தணைத்துமனச்
செருக்கினர்கைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனிற் பிணிப்படுவித் திடுமாதர்

புலத்தலையிற் செலுத்துமனப்
ப்ரமத்தையறப் ப்ரசித்தமுறப்
புரித்தருளித் திருக்கழலைத் தருவாயே !

பறித்ததலைத் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள்புகத் திருநீறு

பரப்பியதத் திருப்பதிபுக்
கனற்புனலிற் கனத்தசொலைப்
பதித்தெழுதிப் புகட்டதிறற் கவிராசா !

செறித்தசடைச் சசித்தரியத்
தகப்பன்மதித் துகப்பனெனச்
சிறக்கவெடுத் தருட்கருணைப் பெருவாழ்வே !

திகழ்ப்படுசெய்ப் பதிக்குளனைத்
தடுத்தடிமைப் படுத்தஅருட்
டிருப்பழநிக் கிரிக்குமரப் பெருமாளே!

(ப - ரை) பறித்த தலை - மயிர் பறிக்கப்பெற்ற தலையை யுடையவர்களும், திருட்டு - வஞ்சகசுபாவ முள்ளவர்களுமான, அமண குருக்கள்-சமண மதப்போதகர்களுடைய, அசட்டு உருக்கள் இடை - மலம் நிறைந்த தேகங்களிலுள்ள, பழுக்கள் உக - விலா வெலும்புகள் நழுவி விழவும், கழுக்கள் புக - (அவ்வெலும்புகள் விழுந்ததனால் உண்டான துவாரத்தின் வழியாக) கழுகுகள் (அவர்களுடைய தேகங்களுக்குள்ளே) நுழையவும், (செய்து), திருநீறு பரப்பிய - வெண்ணீறு யாவரும் தரித்துக்கொள்ளும்படி செய்த, தத் திரு பதி புக்கு - அந்தத் திருத்தலமான மதுரைமாநகருக்குள் சென்று, கனத்த சொ(ல்)லை பதித்து எழுதி-(சிவபெருமானது பெருமையை எடுத்துக் கூறும்) சிறந்த பதிகங்களை ஏடுகளில் அழுந்தவெழுதி, அனல் புனலில் புக(வி)ட்ட - தீயிலும் ஆற்றிலும் புகும்படி அவைகளிவிட்ட, திறல் கவிராசா - திறமை வாய்ந்த கவிகள் சிகாமணியே !, செறித்த சடை சசி தரி - அடர்ந்த சடாமுடியின் மீது சந்திரனை யணிந்துள்ள, அ தகப்

பன் - அந்தத் தந்தையான சிவபெருமான், மதித்து உகப்பன் என - உன்னைக் குருவாகப் பாவித்து நீ சொல்வதைக் கேட்டு மகிழ வேண்டுமென்று கூறிய பொழுது, சிறக்க எடுத்து அருள் - சிறப்பாகப் பிரணவத்தின் பொருளை யுபதேசித்தருளிய(வனே!), கருணை பெருவாழ்வே - கருணையின் சொரூபியாய் நின்னை வணங்குபவர்க்கு (முத்தி வீடாம்) பெருவாழ்வை யளிப்பவனே!, திகழ் படுசெய் பதிக்குள்-(உனக்கு உகந்த இருப்பிடமாய்) விளங்கும் வயலூரில், எனை தடுத்து அடிமைப்படுத்த அருள் - அடியேன் உலக விஷயங்களில் உழலாமல் தடுத்து அடியேனை நினது அடிமையாக்கிக் கொள்ள அருள் சுரந்தவனும், திரு பழநிக்கிரி குமர-பழநிமலையென்னும் சிறந்த தலத்தில் குமார சுவாமியாய் எழுந்தருளி யிருப்பவனுமான, பெருமாளே - பெரியோனே!, குறித்த மணி பணி துகிலை - இச்சித்த இரத்தினாபரணங்களையும் ஆடையையும், திருத்தி யுடுத்து - செவ்வையாக அணிந்துகொண்டு, இருள் குழலை குலைத்து முடித்து - இருளைப் போல் கறுத்துள்ள கூந்தலை அவிழ்த்துச் (செவ்வையாக) முடித்துக் கொண்டும், இலை சுருளை பிளவோடு (ஏ-அசை) குதட்டிய - சுருட்டிய வெற்றிலையைப் பாக்குடன் மென்ற, துப்பு உதட்டை மடித்து-பவளத்தை யொத்திருக்கும் உதட்டை மடித்து, அயில் பயில் இட்டு அழைத்து - வேலாயுதத்தை யொத்த கண்களினால் சைகை செய்து அழைத்து, மருள் கொடுத்து - (ஆடவர் மனத்தில்) மயக்கத்தை' யுண்டுபண்ணி, உணர்வை கெடுத்து - மெய்யறிவை யழித்து, நக குறியால் (ஏ - அசை) பொறித்த தனத்து அணைத்து - (முன்பு பிறருடன் செய்த கலவியில் ஏற்பட்ட) நகக்குறிகள் தோன்றும் தனபாரங்களின் மீது அணைத்துக்கொண்டு, மன செருக்கினர் கைப்பொருள் - மனத்தில் தாம் செல்வரென்று அகங்காரங்கொண் டுள்ளவர்களுடைய கையிலுள்ள பொருளை, கவர - வஞ்சகமாய்ப் பறித்துக்கொள்ள, புணர்ச்சி தனில் பிணிப்படுவித்திடும் மாதர்-தங்களுடன் கலவிசெய்யவேண்டுமென்ற ஆசையில் சிக்கிக் கட்டுண்டிருக்கும்படிச் செய்யும் விலைமாதர்கள், புலத்தலையில் செலுத்தும் - கலவிக்கு இணங்காதது போல் பாசாங்கு செய்யும் லீலையில் ஆசையுறும்படி செய்யும், மன ப்ரமத்தை அற - மனக்கலக்கத்தை யகற்றவும், ப்ரசித்தம் உற - அடியேனைப் பெருங்கீர்த்திபெறச் செய்யவும், புரிந்து அருளி - அருள் புரிந்து, திரு கழலை தருவாயே - கழல்களை யணிந்த நினது பாதமலர்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) முருகப்பெருமான் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளாய் அவதரித்துச் சமணர்களைக் கழுவிலேற்றி ஏட்டிற் பதிகங்களெழுதி தீயிலும் ஆற்றிலும் இட்டுச் சைவசமயத்தைப் பாண்டியநாட்டில் நிலைநிறுத்திய வரலாற்றை இவ்வுரையின் 186 - 188, 194 - 195 இப் பக்கங்களில் காண்க. முருகப் பெருமான் நமது சுவாமிகளைத் தடுத்தாட்கொண்ட விடம் வயலூர் என்பது இப் பாடலின் கடைசி அடியிலிருந்து விளங்குகிறது. (௫௬)

41300+01
A363
12042
(114)

## 2. திருவாவினன்குடி—பழநி உ௫௬

*தனத்த தானன தனதன தனதன - தனதான*

அருத்தி வாழ்வொடு தனகிய மனைவியு முறவோரும்
அடுத்த பேர்களு மிதமுறு மகவொடு வளநாடும்
தரித்த வூருமெ யெனமன நினைவது நினையாதுன்
தனைப்ப ராவியும் வழிபடு தொழிலது தருவாயே !
எருத்தி லேறிய இறையவர் செவிபுக வுபதேசம்
இசைத்த நாவின இதணுறு குறமக ளிருபாதம்
பரித்த சேகர மகபதி தரவரு தெய்வயானை
பதிக்கொ ளாறிரு புயபழ நியிலுறை பெருமாளே !

(ப - ரை) எருத்தில் ஏறிய இறையவர் - இடபத்தின்மீது ஏறி வரும் இறைவரான சிவபெருமானுடைய,' செவி புக உபதேசம் இசைத்த நாவின - செவியுட் புகுமாறு உபதேசம் செய்தருளிய நாவினை யுடையவனே !, இதண் உறு குற மகள் இருபாதம் - (தினைப்புனத்தில் போட்டிருந்த) பரண்மீது தங்கிருயிந்த வேடர் மகளான வள்ளிநாயகியின் இருபாதங்களையும், பரித்த சேகர - தரித்துள்ள முடியை யுடையவனே !, மகபதி தர வரு தெய்வயானை பதிக்கொள் ஆறு இரு புய - இந்திரன் மகளாக அவதரித்த தெய்வயானையம்மை இறுக வணைத்துக்கொள்ளும் பன்னிரண்டு புயங்களையுடையவனே !, பழநியில் உறை பெருமாளே - பழநியில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, அருத்தி வாழ்வொடு - ஆசைகள் நிறைந்த உலக வாழ்க்கையும், தனகிய மனைவியும் உறவோரும் - நெருங்கிப் பழகும் மனைவியும் சுற்றத்தார்களும், அடுத்த பேர்களும் - தன்னை அண்டி யுள்ளவர்களும், இதம் உறு மகவொடு - தான் இன்பமடைவதற்குக் காரணமாயுள்ள மக்களும், வள நாடும் - வளப்பம் பொருந்திய தேசமும், தரித்த ஊரும் - வசிக்கும் ஊரும், மெ(ய்)யென மன நினைவது நினையாது - உண்மையென்று அடியேன் மனம் நினைத்து வருவதை யொழித்து அவ்வாறு நினையாமல், உன் தனை பராவி (உம்-ஆசை) - உன்னைத் துதித்து, வழிபடு தொழில் அது தருவாயே - வணங்கும் செயலைத் தந்தருள்வாயே.

(வி - ரை) முருகப் பெருமானுக்கு வள்ளிநாயகியினிடத் துள்ள அன்பு அளவற்றது என்பதை, " இதணுறு குறமக ளிருபாதம் பரித்த சேகர" என்று இப்பாடலில் வரும் மொழிகளும்,

" நாதா குமரா நமவென் றரனு
ரோதா யெனவோ தியதெப் பொருடான்
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே !"

" திணியா னமனோ சிலைமீ தனதா
ளணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா வெனவள் ளிபதம் பணியுந்
தணியா வதிமோ கதயா பரனே !"

என்னும் கந்தரனுபூதிப் பாடல்களும் நன்கு விளக்குகின்றன. சுவாமிகள்,

" வளைபட் டகைமா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ ?"

" ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய் !"

என்று கந்தரனுபூதியிற் கூறியுள்ளபடி, இப்பாடலிலும் உலகவாழ்க்கையை மெய்யென வெண்ணும் இயல்பை மாற்றிப் பரம்பொருளைத்துதித்து வணங்கு வதையே தமக்குத் தொழிலாக விதிக்கும்படி பிரார்த்திக்கிறார். (௬0)

தனதனனத் தனதனனத் தனதனனத்—தனதான.

திடமிலிசற் குணமிலிநற் றிறமிலியற் புதமான
செயலிலிமெய்த் தவமிலிநற் செபமிலிசொர்க் கமுமீதே
இடமிலிகைக் கொடையிலிசொற் கியல்பிலிநற் றமிழ்பாட
இருபதமுற் றிருவினையற் றியல்கதியைப் பெறவேணும் !
கெடுமதியுற் றிடுமசுரக் கிளைமடியப் பொரும்வேலா !
கிரணகுறைப் பிறையறுகக் கிதழ்மலர்கொக் கிறகோடே
படர்சடையிற் புனைநடனப் பரமர்தமக் கொருபாலா !
பலவயலிற் றரளநிரைப் பழநிமலைப் பெருமாளே! ()

(ப - ரை) கெடு மதி உற்றிடும் - தங்களுக்குக் கேட்டை விளைக் கத் தக்க மனோ நிலைமையை யடைந்த, அசுர கிளை மடிய - அசுர குல மானது அழியும் வண்ணம், பொரும் வேலா - போர்செய்த வேலாயுதனே !, கிரண குறை பிறை - ஒளிவீசும் பிறைச்சந்திரனையும், அறுகு - அறுகம் புல்லையும், அக்கு - உருத்திராட்சத்தையும், இதழ் மலர் - கொன்றை மலரையும், கொக்கு இறகோடு (ஏ - அசை) - அழகு செய்யும் பக்ஷியின் இறகு களோடு, படர் சடையில் புனை - விரிந்த சடாமுடியில் அணிந்துகொண்டு, நடன பரமர் தமக்கு - (உலகங்களை எல்லாம் ஆட்டுவிக்குமாறு தில்லையில்) நிர்த் தனம் செய்யும் பரமேசுவரருக்கு, ஒரு பாலா - ஒப்புயர்வற்ற பாலனுகத் தோன் றியவனே !, பல வயலில் தரள நிரை - அனேக வயல்களில் முத்துக்கள் கூட்

டங் கூட்டமாய்க் காணப்படும், பழநிமலை பெருமாளே - பழநிமலை என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் பெரியோனே !, (அடியேன்), திடம் இலி-மனவுறுதியில்லாதவன், சற்குணம் இலி - நற்குணம் வாய்க்கப் பெறாதவன், நல் திறம் இலி - நல்ல கருமங்களைச் செய்யும் திறமையற்றவன், அற்புதமான செயல் இலி - ஞானத்தோடு ஒரு செய்கையும் செய்தறியாதவன், மெய் தவம் இலி - உண்மையான தவத்தைச் செய்தறியாதவன், நல் செபம் இலி - நல்ல மந்திரங்களைச் செபித்தறியாதவன், சொர்க்கம் (உம் - அசை) மீது (ஏ - அசை) இடம் இலி - முத்தி வீட்டில் இடம்பெறத் தகைமையில்லாதவன், கை கொடை இலி - கையினால் எவர்க்கும் தானங்கொடுத்து அறியாதவன், நல் தமிழ் பாட - நல்ல தமிழ் மொழியினால் உன்னைப் பாடுவதற்கு, சொற்கு இயல்பு இலி - சொல் திறமை இல்லாதவன்; (இப்படிப்பட்ட அடியேன்), இரு பதம் உற்று - நினது இரு பாதமலர்களை வந்தடைந்து, இரு வினை யற்று - நல்வினை தீவினையென்று சொல்லப்படும் இருவினைகளையும் ஒழித்து, இயல் கதியை பெற வேணும் - சிவ ஆகமங்களில் கூறப்பட்டுள்ள நற்கதியான சிவஞான முத்தியைப் பெறவேண்டும்.

(வி - ரை) திடம் - உறுதி; உலக வாழ்க்கைத் துயரத்தை யகற்றிக் கொள்ளும் வழி யாதென்று நிச்சயிப்பது. அற்புதம் - ஞானம்; அற்புதமான செயல் - ஞானத்துடன் செய்யும் கருமம். முருகப்பெருமான் "யார் வேண்டினாலுங் கேட்ட பொருளீயும் த்யாகாங்க சீலம்" உடையவராதலாலும், "வேண்டிய போதடியர் வேண்டிய போகமது வேண்டவெ றாதுதவு"ம் பெருமாளாதலாலும், சுவாமிகள் முத்தியடையும் தகைமை தமக்குச் சிறிதளவும் இல்லையேயாயினும், தமக்கு முத்தி வீட்டைத் தந்தருளும்படி முருகப்பெருமானை இப்பாடலில் பிரார்த்திக்கிறார். (கூக)

தான தந்தன தத்தன தத்தந்
தான தந்தன தத்தன தத்தந்
தான தந்தன தத்தன தத்தந்—தனதான.

கோல குங்கும கற்புர மெட்டோன்
றான சந்தன வித்துரு மத்தின்
கோவை செண்பக தட்பம கிழ்ச்செங் கழுநீரின்

கோதை சங்கிலி யுற்றக முத்தும்
பூஷ ணம்பல வொப்பனை மெச்சுங்
கூறு கொண்டப ணைத்தனம் விற்கும் பொதுமாதர்

பாலு டன்கனி சர்க்கரை சுத்தந்
தேனெ னும்படி மெத்தரு சிக்கும்
பாத கம்பகர் சொற்களி லிட்டம் பயிலாமே

பாத பங்கய முற்றிட வுட்கொண்
டோது கின்றதி ருப்புகழ் நித்தம்
பாடு மன்பது செய்ப்பதி யிற்றந் தவனீயே !

தால முன்பு படைத்தப்ர புச்சந்
தேக மின்றிம திக்கவ திர்க்குஞ்
சாக ரஞ்சுவ றக்கிரி யெட்டுந் தலைசாயச்

சாடு குன்றது பொட்டெழ மற்றுஞ்
சூர னும்பொடி பட்டிட யுத்தஞ்
சாத கஞ்செய்தி ருக்கைவி திர்க்குந் தனிவேலா !

ஆல முண்டக ழுத்தினி லக்குந்
தேவ ரென்புநி ரைத்தெரி யிற்சென்
றாடு கின்றத கப்பனு கக்குங் குருநாதா !

ஆட கம்புனை பொற்குடம் வைக்குங்
கோபு ரங்களி னுச்சியு டுத்தங்
காவி னன்குடி வெற்பினி னிற்கும் பெருமாளே !

(ப - ரை) தால(ம்) முன்பு படைத்த ப்ரபு சந்தேகம் இன்றி - உலகத்தை ஆதியில் தோன்றுவித்த பெருந்தகை யார் என்பதைப் பற்றிச் சந்தேகமில்லாமல், மதிக்க - கடைந்த காலத்தில், அதிர்க்கும் சாகரம் - கோஷித்த கடல், சுவற- நீர் வற்றவும், கிரி எட்டும் தலை சாய - எட்டுக் குலபருவதங்களும் தலை சாயவும், சாடு குன்று அது பொட்டு எழ - நீ தண்டிக்கப் புகுந்த கிரௌஞ்ச மலையானது துளைபடவும், மற்றும் - அன்றியும், சூரனும் பொடிபட்டிட - சூரபதுமனும் அழிந்து பொடியாகவும், யுத்தம் சாதகம் செய் - போர் செய்து முடிக்கும் வல்லமை பொருந்தியதும், திரு கை விதிர்க்கும் தனி வேலா - நினது அழகிய கையினில் வீராவேசத்துடன் அடித்துக்கொண்டிருப்பதுமான ஒப்பற்ற வேலாயுதத்தை யுடையவனே,! ஆலம் உண்ட கழுத்தினில் - (திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் தோன்றிய) ஆலகால விஷத்தைத் திருவாயிற் போட்டுக்கொண்டு (பிறகு நிறுத்திக்கொண்ட இடமான) கழுத்தில், அக்கும் தேவர் என்பு நிரைத்து- உருத்திராக்ஷத்தையும் பிரம விஷ்ணுக்களுடைய எலும்புகளையும் ஏராளமாக அணிந்துகொண்டு, எரியில் சென்று ஆடுகின்ற தகப்பன் - சுடுகாட்டில் போய் நிர்த்தனம் செய்யும் தகப்பனாகிய சிவபெருமான், உகக்கும் குரு நாதா-மகிழ்ச்சியுடன் குருவாக அமர்த்திக்கொண்ட நாதனே!, ஆடகம் புனை பொன் குடம் வைக்கும் - ஆடகம் என்னும் பொன்னினால் செய்யப்பட்ட அழகிய கலசம் வைக்கப்பெற்ற, கோபுரங்களின் உச்சி உடு தங்கு - கோபுரங்களின் உச்சியில்

நக்ஷத்திரங்கள் தங்கப்பெற்றிருக்கும், ஆவினன் குடி வெற்பினில் நிற்கும் பெருமாளே - ஆவினன்குடி என்னும் திருத்தலத்துக்கு அருகிலுள்ள மலையான பழநிமலையின்மீது எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, கோல குங்குமம் கற்புரம் - அழகிய குங்குமம் பச்சைக்கர்ப்பூரம், எட்டு ஒன்றான சந்தனம் - அஷ்ட போகங்களுள் ஒன்றான சந்தனம், வித்துருமத்தின் கோவை - பவளங்கள் கோத்த மாலை, செண்பகம் தட்ப மகிழ் செங்கழு நீரின் கோதை - செண்பகமலர் குளிர்ந்த மகிழம்பூ செங்கழுநீர் மலர் இவைகளால்தொடுத்த பூமாலை, சங்கிலி - (பொன்னினாலாய) சங்கிலி, (இவைகள்), உற்ற கழுத்தும் - பொருந்திய கழுத்தையும், மெச்சும் கூறு - பார்ப்பவர் மெச்சும் வண்ணம், பூஷணம் பல ஒப்பனை கொண்ட - பல ஆபரணங்களினால் அலங்கரிக்கப்பெற்றுள்ள, பணை தனம் - பருத்த தனபாரங்களையும், விற்கும் பொது மாதர் - விலைக்கு விற்கும் வேசையர்களுடைய, பால் உடன் கனி சர்க்கரை சுத்தம் தேன் எனும்படி - பாலென்றும் பழமென்றும் சர்க்கரையென்றும் கலப்பில்லாத தேன் என்றும் சொல்லும்படி, மெத்த ருசிக்கும் - மிகவும் இனிமை தருபவைகளும், (ஆனால்), பாதகம் பகர் - மகா பாபங்களையே சொல்பவைகளுமான, சொற்களில் இட்டம் பயிலாமே - வார்த்தைகளில் விருப்பங் கொள்ளாமல், பாத பங்கயம் உற்றிட உட்கொண்டு - நினது பாததாமரைகளில் வந்து சேரவேண்டுமென்று கருத்துக்கொண்டு, ஓதுகின்ற திருப்புகழ் - நினது கருணையை எடுத்துக்கூறும் திருப்புகழை, நித்தம் பாடும் அன்பு அது - தினந்தோறும் பாடுமாறு நின்னிடத்து அன்பு பாராட்டும் தன்மையை, செய்ப்பதியில் தந்தவன் நீயே - வயலூரில் அடியேனுக்குத் தந்தருளியவன் நீ தான் !

(வி - ரை) திருப்பாற் கடலைத் தேவாசுரர்களைக் கொண்டு திருமால் கடைவித்த காலத்தில் ஆலகால விஷம் தோன்றி உலகங்களெல்லாம் அழியுமாறு அனல்வீசத் தொடங்கிற்று. அப்போது தேவர்களும் அசுரர்களும் அவ் வனலின் தாபத்தைச் சகிக்கமாட்டாதவர்களாய் உலகமெங்கும் ஓடியொளிக்க, அவ் வனல் எங்கும் தொடர்ந்து வந்து தங்களை வருத்துவதைக்கண்டு இறுதியில் சிவபெருமானது திருச்சந்நிதானத்தை யடைந்து தங்களைக் காக்கும்படி பிரார்த்தித்தனர். அப்போது ஜகத்காரணரான சிவபெருமான் அவ்விஷத்தை யழைத்து, அதைத் தமது திருக்கரத்தில் வாங்கித் தமது திருவாயில் போட்டுக் கொண்டார். அது கண்ட உமாதேவியார் எம்பெருமானது அகத்தே பொருந்தியுள்ள பல அண்டங்களும் அவ் விஷத்தின் அனலினால் அழிந்துவிடுமே என்று அஞ்சி அவ்விஷத்தை உள்ளே செல்லாமல் தடுக்கும்படி அப்பெருமானைப் பிரார்த்திக்க, அவர் அதைத் தமது திருக்கழுத்தினில் இருத்திக்கொண்டார். அப்போது தான் தேவர்கள் உலகங்களுக்கு ஆதிகாரணர் யார் என்பதைக் குறித்த சந்தேகம் முற்றிலும் நீங்கப் பெற்றனர். இக்கருத்தே 'தால முன்பு * * சந்தேகமின்றி' என்னும் மொழித் தொடரில் அமைந்துள்ளது. இம் மொழித் தொடருக்கு இவ்வுரை

கூறியதற்கு இப்பாடலில் காணப்படும் 'ஆலமுண்ட * * * தகப்பன்' என்னும் மொழித் தொடர் ஆதாரமாயிருப்பதைக் காண்க. அஷ்டகுல பருவதங்களாவன:—மாலியவான், கந்தமாதனம், நிசதம், ஏமகூடம், இமயம், நீலம், சுவேதம், சிருங்கம். கற்பங்கள் தோறும் அழியும் பிரம விஷ்ணுக்களுடைய எலும்புகளை, ஆதியந்த மற்றவராயும் சகல புவனங்களையும் படைத்துக் காத்து அழிக்கும் தலைவராயுமுள்ள சிவபெருமான், அந்தப் பிரம விஷ்ணுக்கள் தம்மிடத்துப் பாராட்டிய பேரன்பைத் திருவுளங் கொண்டு அருள் சுரந்து மாலையாகத் தொடுத்து அணிந்து கொள்கிறார். சிவபெருமான் சுடுகாட்டில் நிர்த்தனம் செய்கிறார் என்பதற்குப் பொருள் யாதெனில், ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும், மீண்டும் மீண்டும் பிறவிக் கடலில் சேர்க்கும் கருவினையையும், காமக்குரோதம் முதலிய துர்க்குணங்களையும் சிவபெருமானிடத்து அன்பு பாராட்டியதனால் அவர் அருள் சுரந்து அளித்த மெய்ஞ்ஞானமாகிய தீயினால் எரித்து நீறு வடிவமுற்ற மெய்யடியவர் இதயத்தில் மகிழ்ந்து ஆடுகிறார் என்பதேயாம். இதற்கு ஆதாரம் இவ்வுரையின் 232-234-ம் பக்கங்களிற் காண்க. ஆடகம் என்பது நால்வகைப் பொன்னினுள் ஒன்று. அந்த நான்கு வகைகளாவன:—சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம். கோபுரங்களின் உச்சியில் நக்ஷத்திரங்கள் தங்குவதாகக் கூறப்பட்டிருப்பதனால் அவை மிகவும் உயர்ந்தவை எனக் கொள்ளவேண்டும். ஆவினன்குடி என்னும் பதத்துக்குப் பரம்பொருளின் அருளைப் பெற்ற அடியவர்களின் உயிராகிய நல்ல வாசஸ்தலம் என்று பொருள் கூறினும் பொருந்தும். இக்கருத்து இவ்வுரையின் 242-ம் பக்கத்தில் உள்ள 'இத்தாரணிக்குள்' என்று தொடங்கும் பாடலின் இறுதி அடியில் 'திருப்பழநி வாழ்வுக்குகந்தடியராவிக்குள்நின்றுலவி வரு பெருமாளே' என்னும் மொழித் தொடரில் அமைந்திருப்பதைக் காண்க. அஷ்ட போகங்களாவன:—அணிகலம், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கீதம், பூவமளி, பெண், போசனம். முருகப் பெருமானிடத்து அன்பு பாராட்டுவதும் அவரது அருளைப் பெற்றவருக்கே சாத்தியம் என்பது இப்பாடலில் 'திருப்புகழ் நித்தம் பாடு மன்பது செய்ப்பதி யிற்றந் தவனீயே' என்னும் மொழிகளினால் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. **அன்புக்கு அருளே காரணம்!**

*தனதான தந்ததத்—தனதானா.*

அபகார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநானி னைந்தருட் பெறுவேனோ?
இபமாமு கன்தனக் கிளையோனே!
இமவான்ம டந்தையுத் தமிபாலா!

ஜெபமாலை தந்தசற் குருநாதா !
திருவாவி னன்குடிப் பெருமாளே !

(ப - ரை) இப மா முகன் தனக்கு இளையோனே - சிறந்த யானைமுகக் கடவுளான விநாயகருக்குத் தம்பியாகத் தோன்றியவனே!, இமவான் மடந்தை உத்தமி பாலா - இமயமலையின் அரசனுடைய புதல்வியாகப் பிறந்தவரும் உத்தம குணம் வாய்ந்தவருமான பார்வதி தேவியாரது பாலனே!, ஜெபமாலை தந்த சத் குருநாதா - அடியேனுக்கு ஜெபமாலை தந்தருளிய நல்ல குருசிகாமணியே !, திரு ஆவினன்குடி பெருமாளே - ஆவினன்குடி என்னும் திருத்தலத்தில் எழுந் தருளியிருக்கும் பெரியோனே !, அபகார நிந்தை பட்டு உழலாது (ஏ - அசை) - உனக்கு அபகாரம் செய்து உன்னை நிந்திப்பதாகிய செய்கையை மேற்கொண்டு அலைந்து திரியாமலும், அறியாத வஞ்சரைக் குறியாது (ஏ - அசை) - (நினது கருணையையும் பெருமையையும்) அறியாத வஞ்சகர்களை இலக்ஷியம் செய்யாம லும், உபதேச மந்திர பொருளால் (ஏ - அசை) - நீ அடியேனுக்கு உபதேசித் தருளிய மந்திரத்தில் அடங்கியுள்ள போதகத்தைக்கொண்டு, உனை நான் நினைந்து அருள் பெறவேனே - உன்னை அடியேன் தியானஞ்செய்து உன் அருளைப் பெறவேனோ ?

(வி - ரை) நமது சுவாமிகளுக்கு முருகப்பெருமான் மூலமந்திரத்தை உப தேசித்து ஜெபமாலையையும் கொடுத்தருளினர் என்பது இப்பாடலினால் விளங்கு கிறது. கரணங்களையும் அறிவையும் நமக்குத் தந்தருளிய முருகப்பெருமானை வணங்கி வாழ்த்துவதில் அவைகளைச் செலுத்தாமல் விஷயசுகங்களைத் தேடி யனுபவிப்பதில் அவைகளைச் செலுத்துவது அப்பெருமானை நிந்தித்து அவ ருக்கு அபகாரம் செய்வதாகும். 'அறியாத வஞ்சரை' என்பதற்கு 'முருகப் பெருமானே பரம்பொருள் என்பதை அறியாத வஞ்சகர்கள்' என்று பொருள் கூறினும் பொருந்தும். (கூ)

தனத்த தனதன தனதன தந்தத்
தனத்த தனதன தனதன தந்தத்
தனத்த தனதன தனதன தந்தத் — தனதான.

கறுத்த குழலணி மலரணி பொங்கப்
பதித்த சிலைநுத லணிதில தம்பொற்
கணைக்கு நிகர்விழி சுழலெழு கஞ்சச் சிரமான
கழுத்தி லுறுமணி வளைகுழை மின்கக்
குவட்டு முலையசை படவிடை யண்பைக்
கமைத்த கலையிறு குறுதுவள் வஞ்சிக் கொடிபோலச்

சிறுத்த களமிகு மதமொழு கின்சொற்
குயிற்க ளெனமட மயிலெகி னங்கட்
டிருக்கு நடைபழ கிகள்கள பங்கச் சடைமாதர்

திகைத்த தனமொடு பொருள்பறி யொண்கட்
குவட்டி யவர்வலை யழலுறு பங்கத்
திடக்கு தலைபுலை யவர்வழி யின்பைத் தவிர்வேனோ?

பறித்த விழிதலை மழுவுழை செங்கைச்
செழித்த சிவபர னிதழிநல் தும்பைப்
படித்த மதியற லரவணி சம்புக் குருநாதா!

பருத்த அசுரர்க ளுடன்மலை துஞ்சக்
கொதித்த அலைகட லெரிபட செம்பொற்
படைக்கை மணியயில் விடுநட னங்கொட் கதிர்வேலா!

தெறித்து விழியர வுடல்நிமி ரம்பொற்
குவட்டொ டிகைகிரி பொடிபட சண்டச்
சிறப்பு மயில்மிசை பவுரிகொ ளும்பொற் றிருபாதா!

சிறக்கு மழகிய திருமகள் வஞ்சிக்
குறத்தி மகளுமை மருமகள் கொங்கைச்
சிலைக்கு ளணைருக சிவமலை கந்தப் பெருமாளே!

(ப - ரை) பறித்த விழி தலை - கிள்ளி யெடுத்ததும் விழிகளுடன் கூடியதுமான பிரமகபாலத்தையும், மழு உழை - மழுவையும் மானையும், செம் கை செழித்த - அழகிய திருக்கைகளில் சிறப்பாய்த் தாங்கியவரும், சிவ பரன் - யாவருக்கும் மங்களத்தையே புரியும் பரம்பொருளும், இதழி நல் தும்பை - கொன்றை மலர்களையும் நல்ல தும்பை மலர்களையும், படித்த மதி - (யாவர்க்கும் மேலான பரம்பொருள் யாரென்று) கற்றறிந்துகொண்ட சந்திரனையும், அறல் - கங்கையையும், அரவு - பாம்பையும் அணி - அணிந்துகொண் டுள்ளவரும், சம்பு - (சகல ஜீவராசிகளுக்கும்) சுகத்தைக்கொடுப்பவருமான சிவபெருமானுக்கு, குருநாதா - குருவாக அமர்ந்த நாதனே!, பருத்த அசுரர்களுடன் மலை துஞ்ச - பெரிய தேகங்களையுடைய அசுரர்களோடு கிரௌஞ்சம் என்னும் மலை அழியுமாறும், கொதித்த அலை கடல் எரிபட - (சூரபதுமன் சென்று ஒளிந்துகொண்டபொழுது) கொந்தளித்து அலைவீசிய கடலானது வற்றிப்போகுமாறும், செம் பொன் படை - சிவந்த பொன்னின் ஒளிவீசும் ஆயுதமான, கை மணி அயில் - நின்து திருக்கையிலுள்ள அழகிய வேலாயுதத்தை,

விடு நடனம் கொள்-பிரயோகித்துத் திருவிளையாடல் புரிந்தருளிய, கதிர் வேலா-ஒளிவீசும் வேலாயுதத்தைக் கையிலேந்தியவனே !, அரவு உடல் விழி தெறித்து-ஆதிசேடன் என்னும் பாம்பின் சரீரத்திலுள்ள விழிகள் வெளிப்பட்டுத் தெறித்து விழுமாறும், நிமிர் அம் பொன் குவட்டு-உயர்ந்த அழகிய பொற்சிகரங்களையுடையனவாய், ஒள் திகை கிரி - எட்டுத் திக்குகளிலும் ஒளிவீசி நிற்கும் மலைகள், பொடி பட - பொடியாகுமாறும், சண்ட சிறப்பு மயில் மிசை பவுரி கொளும் - வலிமை பொருந்திய சிறந்த மயிலின் மீது நிர்த்தனம் செய்யும், பொன் திருபாதா - அழகிய பாதமலர்களை யுடையவனே !, சிறக்கும் அழகிய திருமகள் வஞ்சி - சிறந்த அழகு வாய்ந்த இலக்குமியின் மகளும் கொடியை யொத்த தேகத்தையுடையவளும், குறத்தி மகள் - நம்பிராஜனது மனைவியான குறத்தியின் மகளாய் வளர்ந்தவளும், உமை மருமகள் - உமாதேவியாரது மருமகளுமான வள்ளி நாயகியின், கொங்கை சிலைக்குள் - தனபாரங்களாகிய மலைகளினிடையே, அணை குக - அணைந்து பொருந்தும் இதய கமல வாசியே !, சிவமலை கந்த பெருமாளே - சிவமலை என்னும் பெயர் பெற்ற பழநிமலையின் மீது சத்துரு சங்கார மூர்த்தியாய் விளங்கும் பெரியோனே !, கறுத்த குழல் அணி மலர் - கறுத்த கூந்தலில் அணிந்துள்ள மலர்களின், அணி பொங்க - அழகு சிறப்பாய்த் தோன்றவும், பதித்த சிலை நுதல் - பொருத்தி யமைத்த விற்களைப் போல் தோன்றும் புருவங்களையுடைய நெற்றியில், அணி திலதம் - அணிந்துள்ள சுட்டியும், பொன் கணைக்கு நிகர் விழி - அழகிய அம்பை யொத்திருக்கும் கண்களாகிய, சுழல் எழு கஞ்சம் - சுழலும் தன்மை பொருந்தியுள்ள தாமரைகளும், சிரம் ஆன கழுத்தில் - நீண்ட (கமுகை யொத்த) கழுத்தில், உறு மணி - பொருந்தியுள்ள இரத்தினாபரணங்களும், குழை வளை - காதுகளிலும் கைகளிலும் அணிந்துள்ள பூஷணங்களும், மின்க - ஒளி வீசவும், குவட்டு மூலை அசைபட - மலைச் சிகரங்களை யொத்த தனபாரங்கள் அசையவும், இடை அண் பைக்கு அமைத்த கலை - இடைக்கு அருகே யுள்ள அல்குலை மறைக்கத் தரித்துள்ள ஆடையானது, இறுகுறு - இறுகக் கட்டி யிருப்பதனால், அவள் வஞ்சி கொடி போல - வளையும் கொடியைப் போன்ற சாயலை யுடையவர்களாய், சிறுத்த களம் - சிறிய தொண்டையானது, மிகு மதம் ஒழுகு இன் சொல் - மிகுந்த காதலை யுணர்த்தும் இனிய மொழிகளை, குயிற்கள் என - குயில்களைப் போல இனிமையாகப் பேச, மட மயில் எகினங்கள் - அறிவில்லாத மயில் அன்னம் இவைகளின், திருக்கு நடை பழகிகள் - செருக்குற்ற நடையைக் கற்றுக் கொண்டவர்களாய், களபம் கச்சு உடை(ய) மாதர் - கலவைச் சாந்து அணிந்த (தனபாரங்களைப் போர்த்தும்) கச்சை யணிந்துள்ள (விலை) மாதர்கள், திகைத்த தனமொடு - (ஆடவர் மனத்தில்) மயக்கத்தை யுண்டுபண்ணும் தனபாரங்களைக் காட்டி, பொருள் பறி - (ஆடவர்) கைப்பொருளைப் பிடுங்கிக்கொள்(பவர்கள்) ; ஒண் கண் குவட்டியவர் - ஒளி வீசும் கண்களினால் வளைத்து இழுப்பவர்கள் ; (அவர்களுடைய), வலை -

காம வலையாகிய, அழல் உறு பங்க திடக்குதலை - அனலைப் போல் தாபத்தை யுண்டு பண்ணுவதும் விகாரமானதுமான இந்திரிய சஞ்சலத்தை, புலையவர் வழி இன்பை - சண்டாளர்களாகிய அவர்களால் அடையும் சிற்றின்பத்தை, தவிர் வேனோ - விலக்கிவிடுவேனோ ?

(வி - ரை) **பிரம கபால வரலாறு** :—முன்னொரு காலத்தில் பரம் பொருள் யார் என்ற சந்தேகமுற்ற தேவர்களாலும் முனிவர்களாலும் வினவப் பெற்ற பிரம விஷ்ணுக்கள் ஒவ்வொருவரும் தாமே பரம்பொருளென மயக்க முற்று, வேதங்களே நேரில் வந்து பரம்பொருள் சிவபெருமானே யென்று உணர்த்தியும் அம்மயக்கம் நீங்கப் பெறாமல், நெடுங்காலம் ஒருவரோடொரு வர் வாதாடி நின்றனர். அது கண்ட சிவபெருமான் பார்வதி தேவியாரு டன் அவர்கள் முன்னே தோன்ற, விஷ்ணுவானவர் அவரை வணங்கிவிட் டுத் திருப்பாற்கடலுக்குச் சென்றார். பிரமனோவெனில், அப்பெருமானை வணங்காமல் தனது **அதோ முகத்தினால்** அப்பெருமானை நிந்தித்து நின்றார். உடனே சிவபெருமான் பயிரவமூர்த்தியை நினைக்க, அவர் அப்போதே தோன்றி னார். சிவபெருமான் அவரை நோக்கி, அந்தப் பிரமதேவரது அதோமுகம் பொருந்திய தலையைக் கிள்ளி யெறிந்து, பிச்சை யெடுப்பது போல் பாவனை செய்து விஷ்ணு முதலிய தேவர்கள் இருடிகள் இவர்களுடைய இரத்தத்தைப் பானஞ் செய்து, அதனால் இறப்பவர்களை உயிர்ப்பித்து விட்டு அவரது இருப் பிடத்துக்கு மீளும்படி கட்டளையிட்டுப் பிறகு மறைந்தருளினார். உடனே பயிரவ மூர்த்தியானவர் பிரமதேவருடைய ஒரு முகத்தைக் கிள்ளி யெறிந்து, இரத்தம் சொரிந்து வற்றியதனால் மரித்த பிரமதேவரை மீண்டும் உயிர்ப்பிக்க, பிரமதேவர் நடுங்கி அவரை வணங்கி, தமது அஞ்ஞானம் நீங்கும் வண்ணம் கிள்ளப்பட்ட தமது தலையையே இரக்கும் பாத்திரமாகக் கொண்டு, தேவர்கள் இருடிகளுடைய இரத்தத்தை அதில் பிச்சைவாங்கி யுண்ணும்படி பிரார்த்தித்தார். பயிரவரும் கருணை கூர்ந்து அந்தப் பிரம கபாலத்தையே பிச்சை வாங்கும் பாத்திரமாகக் கொண்டருளினார்.

தக்ஷனால் சபிக்கப் பெற்று நாளுக்கொன்றாகத் தனது கலைகளையிழந்து வந்த சந்திரன், ஒரு கலையே எஞ்சிய நாளில், முதலில் இந்திரனிடம் சென்று தன்னைக் காக்கும்படி அவனை வேண்டியும், பிறகு அவன் கூறிய புத்திமதியினால் பிரமதேவரை யடைந்து தன்னைக் காக்கும்படி அவரை வேண்டியும், பிறகு தன் னைக் காக்கவல்லவர் தக்ஷனுக்கு நிகரில்லாத பதவியை யளித்த சிவபெருமானே யன்றி வேறு எவருமிலர் என்னும் உண்மையைப் பிரமதேவரால் அறிந்து கொண்டு, அதன் பிறகே எல்லாம் வல்ல இறைவனும் கருணைக் கடலுமான சிவ பெருமானை யடைந்தானதலால், ' படித்த மதி ' என்றதற்கு யாவருக்கும் மேலான பரம்பொருள் யார் என்று கற்றறிந்துகொண்ட சந்திரன் என்று பொருள் கூறப்

பட்டது. கந்தன் - அடியவர்களது சத்துருக்களைச் சங்கரிப்பவன். குவட்டி - கோட்டி என்பதன் மரூஉ ; கோட்டி - வளைத்து. திடக்கு - ஊன் ; திடக்குதல் ஊனினால் ஏற்படும் சஞ்சலங்கள்; அதாவது, ஜட தேகத்தில் இந்திரியங்களினால் ஏற்படும் சஞ்சலங்கள். திகைத்த தனமொடு - திகைப்பித்த (மயக்கமுறச் செய்த) தனங்களினால் (சுசு)

தனதனன தந்த தந்த தனதனன தந்த தந்த
தனதனன தந்த தந்த—தனதான.

மருமலரி னன்று ரந்து விடவினைய ருந்த அந்தி
மதியொடுபி றந்து முன்பெய் வதையாலே
வகைதனைம றந்தெ ழுந்து முலைதனைய ருந்தி யந்த
மதலையென வந்து குன்றின் வடிவாகி
இருமயல்கொ டுந்து வண்டு பொதுவையர கம்பு குந்து
இரவுபகல் கொண்டொ டுங்கி யசடாகும்
இருவினைபொ திந்த இந்த ஜனனமர ணந்து றந்து
னிணையடிவ ணங்க என்று பெறுவேனோ ?
திருவொடுபெ யர்ந்தி ருண்ட வனமிசைந டந்தி லங்கை
திகழெரியி டுங்கு ரங்கை நெகிழாத
திடமுளமு குந்தர் கஞ்சன் வரவிடுமெல் வஞ்ச கங்கள்
செறிவுடன றிந்து வென்ற பொறியாளர்
பரிவொடும கிழ்ந்தி றைஞ்சு மருதிடைத வழ்ந்து நின்ற
பரமபத நண்ப ரன்பின் மருகோனே !
பதுமமிசை வண்ட லம்பு சுனைபலவி ளங்கு துங்க
பழநிமலை வந்த மர்ந்த பெருமாளே !

(ப - ரை) திருவொடு பெயர்ந்து இருண்ட! வனம் மிசை நடந்து - இலக்குமியான சீதா தேவியுடன் புறப்பட்டு அடர்ந்து இருள் சூழ்ந்த தண்டகாரணியத்தில் வனவாசத்துக்குச் சென்று, இலங்கை திகழ் எரி இடு குரங்கை - இலங்காபுரியைப் பிரகாசித்து எரிந்த தீயினுக்கு இரையாக்கிய அநுமானை, நெகிழாத - விட்டுப் பிரியாத, திடம் உள - மனவுறுதியைக் கொண்டிருந்த, முகுந்தர் - முத்தியைத் தரவல்ல ஸ்ரீராமரும், கஞ்சன் மெல் வர விடு வஞ்சகங்கள் - கம்ஸன் மேன்மேலும் செலுத்திவிட்ட வஞ்சகங்களை, செறிவுடன் அறிந்து வென்ற - (தாம் இன்னதென்று வெளியிடாமல்) அடக்கமாயிருந்து கொண்டே அவைகளை

யறிந்து அகற்றி வெற்றி பெற்ற, பொறியாளர் - அறிவாளரும், இறைஞ்சு மருது இடை - தம்மை வணங்கிய மருதமரங்களி னிடையே, பரிவொடு மகிழ்ந்து தவழ்ந்து நின்ற - ஆதரவுடனும் மகிழ்ச்சியுடனும் (உரலை இழுத்துக் கொண்டு) தவழ்ந்து அருள் புரிந்தவரும், பரம பத நண்பர் - பரமபதமாகிய வைகுண்டத்தில் ஆன்மாக்களுக்கு நண்பராய் நிற்பவருமான மகா விஷ்ணுவின், அன்பின் மருகோனே - அன்புக்குப் பாத்திரனுன மருகனே!, பதுமம் மிசை வண்டு அலம்பு - தாமரை மலர்களின்மீது வண்டுகள் ஆரவாரிக் கப்பெற்ற, சுனை பல விளங்கு-சுனைகள் பல அழகாய்ப் பொருந்தப் பெற்றுள்ள, அங்க பழநி மலை வந்து அமர்ந்த பெருமாளே - சிறந்த தலமான பழநிமலைக்கு வந்து அதன்மீது எழுந்தருளிய பெரியோனே!, மரு மலரினன் துரந்து விட - வாசனை பொருந்திய மலர்களை அம்புகளாக வுடைய மன்மதன் செலுத்திவிட, வினை அருந்த - முந்தைவினைப் பயனை அநுபவிப்பதற்கு, அந்தி மதியொடு பிறந்து-அவ்வாறு அநுபவிப்பதற்குப் பொருத்தமான அறிவுடன் வந்து பிறந்து, முன்பு எய் வ(ா)தையாலே - பிறக்குமுன் கருவில் அநுபவித்த துன்பத்தினுல், வகை தனை மறந்து எழுந்து - தான் உலகத்தில் பிறந்த வகை இன்னதென்பதை மறந்து ஆர்வத்துடன் எழுந்து, முலை தனை அருந்தி - தாயின் முலைப்பாலையுண்டு, அந்த மதலை என வந்து - அருமையாகப் பாராட்டப்படும் குழந்தையாகி வளர்ந்து, குன்றின் வடிவாகி-மலையை யொத்த திடதேகத்தைப்பெற்று, இரு மயல் கொடு (உம்-அசை) துவண்டு-பெரிய மயக்கமாகிய பெண்காதல்கொண்டு வாடி,பொது வையர் அகம் புகுந்து - விலைமாதர்களது வீடுகளுக்குள் நுழைந்து, இரவு பகல் கொண்டு - இரவும் பகலும் சிற்றின்பத்தை நுகர்ந்து, ஒடுங்கி அசடாகும் - மனமும் தேகமும் ஒடுங்கப்பெற்றுச் சீர்கெடுவதானதும், இருவினை பொதிந்த - நல்வினை தீவினைகள் நிறைந்துள்ளதும், இந்த ஜனன மரணம் துறந்து - மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதுமான இந்த வாழ்க்கையை யொழித்து, உன் இணை அடிவணங்க என்று பெறுவேனே - உனது இரு பாதமலர்களையும் வணங்கும் பாக்கியத்தை என்றைக்கு அடைவேனே ?

(வி - ரை) தம்மிடத்தில் நிலைத்ததும் அளவில்லாததுமான அன்புகொண்டிருந்த ஹனுமாரின் உதவியைக் கொண்டே சீதாப்பிராட்டியை மீட்கவேண்டுமென்று ஸ்ரீ ராமபிரான் நிச்சயித்தபடியால், 'குரங்கை நெகிழாத திடமுள முகுந்தர்' என்று இங்கு கூறப்பட்டது. ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமது மாமனுன கம்ஸன் தம்மைக் கொல்வதற்காகச் செய்த வஞ்சகங்களை யெல்லாம் முன்னதாகவே அறிந்து அகற்றிக்கொண்ட போதிலும், தாம் மகாவிஷ்ணுவின் அவதாரமென்பதை எவரும் அறிந்துகொள்ளா வண்ணம் அடக்கமாயிருந்ததனுல், 'வஞ்ச கங்கள் செறிவுடன றிந்து வென்ற' என்று கூறப்பட்டது. பொறியாளர் என்னும் பதத்துக்கு இலக்குமியின் நாதன் என்று பொருள் கூறினும் பொருந்தும். பொறி - இலக்குமி, அறிவு. இவ்வுரையின் 107-ம் பக்கத்திலுள்ள -'இரவியென

என்று தொடங்கும் பாடலில் ‘ ஓர் சீத மருதிஜெடு பொரு ’ என்னும் மொழித் தொடருக்கு ‘ குளிர்ச்சியைத் தரும் மருதமரங்களோடு போர் செய்த ’ என்று பொருள் கூறுவது பொருந்தாதென்பதை இப்பாடலில் வரும் ‘ பரிவொடு * * நண்பர்’ என்னும் மொழித்தொடர் நன்கு விளக்குகிறது. அலம்பு—அலப்பு என்பதன் மெலித்தல் விகாரம். அந்தித்தல் - பொருந்துதல், அந்திமதி - பொருத்தமான அறிவு. இருவினைகளை ஒருவர் செய்வதனுலேயே அவைகளின் பயனை அநுபவிக்க மீண்டும் மீண்டும் பிறக்கும்படி ஏற்படுகிறதாகையினுல், ‘ இருவினை பொதிந்த இந்த ஜனன மரணம் ’ என்று கூறப்பட்டது. பிறவித்துன்பம் நீங்கப் பெறுவதற்கு ஞானசொரூபியான முருகப்பெருமானது பாதமலர்களை வணங்குவதே இணையற்ற வழியாகும். கூ0)

தந்தந் தந்தந் தந்தந் தந்தந்
தனதன தனதன தனதன தனதன
தந்தந் தந்தந் தந்தந் தந்தந்
தனதன தனதன தனதன தனதன
தந்தந் தந்தந் தந்தந் தந்தந்
தனதன தனதன தனதன தனதன—தனதான.

குன்றுங் குன்றுஞ் செண்டுங் கன்றும்
படிவளர் முலையினில் ம்ருகமத மெழுகியர்
இந்துஞ் சந்தந் தங்குந் தண்செங்
கமலமு மெனவொளிர் தருமுக வநிதையர்
கொஞ்சுங் கெஞ்சுஞ் செஞ்சும் வஞ்சஞ்
சமரச முறவொரு தொழில்வினை புரிபவர் விரகாலும்
கும்பும் பம்புஞ் சொம்புந் தெம்புங்
குடியென வளர்தரு கொடியவர் கடியவர்
எங்கெங் கெம்பங் கென்றென் றென்றுந்
தமதுரி மையதென நலமுட னணைபவர்
கொஞ்சந் தங்கின் பந்தந் தெந்தன்
பொருளுள தெவைகளு நயமொடு கவர்பவர் மயலாலும்
என்றென் றுங்கன் றுந்துன் புங்கொண்
டுனதிரு மலரடி பரவிட மனதினில்
நன்றென் றுங்கொண் டென்றுஞ் சென்றுந்
தொழுமகி மையினிலை யுணர்வினி னருள்பெற
இன்பும் பண்புந் தெம்புஞ் சம்பந்
தமுமிக வருள்பெற விடைதரு விதமுன மருள்வாயே!

எங்குங் கஞ்சன் வஞ்சன் கொஞ்சன்
அவன்விடு மதிசய வினையுறு மலகையை
வென்றுங் கொன்றுந் துண்டந் துண்டஞ்
செயுமரி யொருமுறை யிரணிய வலனுயிர்
நுங்குஞ் சிங்கம் வங்கந் தன்கண்
துயில்பவ னெனினனை யுதவிய கருமுகில் மருகோனே!

ஒன்றென் றென்றுந் துன்றுங் குன்றுந்
தொளைபட மதகரி முகனுடல் நெரிபட
டுண்டுண் டுண்டுண் டிண்டிண் டிண்டிண்
டிடியென விழுமெழு படிகளு மதிர்பட
ஒண்சங் கஞ்சஞ் சஞ்சஞ் சஞ்சென்
றொலிசெய மகபதி துதிசெய அசுரரை யடுவோனே!

உந்தன் தஞ்சந் தஞ்சந் தஞ்சஞ்
சிவனருள் குருபர வெனமுநி வரர்பணி
யுந்தொந் தந்தொந் தந்தொந் தந்தென்
றொலிபட நடமிடு பரனரு ளறுமுக
உண்கண் வண்டுங் கொண்டுந் தங்கும்
விரைபடு குரவல ரலர்தரு மெழில்புனை புயவீரா!

அன்றென் றொன்றுங் கொண்டன் பின்றங்
கடியவர் தமையிகழ் சமணர்கள் கழுவினில்
அங்கஞ் சிந்தும் பங்கந் துஞ்சும்
படியொரு தொகுதியி னுரைநதி யெதிர்பட
அன்பின் பண்பெங் குங்கண் டென்பின்
அரிவையை யெதிர்வர விடுகவி புகல்தரு திறலோனே!

அண்டங் கண்டும் பண்டுண் டும்பொங்
கமர்தனில் விஜயவ னிரதமை நடவிய
துங்கன் வஞ்சன் சங்கன் மைந்தன்
தருமகன் முநிதழல் வருதக ரிவர்வல
அங்கங் கஞ்சஞ் சங்கம் பொங்குங்
கயனிறை வளமுறு சிவகிரி மருவிய பெருமாளே!

(ப - ரை) எங்கும் கஞ்சன் வஞ்சன் கொஞ்சன் அவன் விடும் - தன்னைக் காத்துக்கொள்வ தெப்படி யென்று ஏக்கமுற்ற கம்சன் வஞ்சகமும் அற்ப குணமும் வாய்ந்தவ னாகையால் அவன் செலுத்திவிட்ட, அதிசய வினை உறும் அலகையை - அதிசயத்தை விளைவிக்கும்படியான செயலை மேற்கொண்டு வந்த பேயான பூதனையை, வென்றும் கொன்றும் துண்டம் துண்டம் செயும் அரி - வென்று அவளைக் கொன்று கண்ட துண்டமாகச் செய்த கிருஷ்ண மூர்த்தியும், ஒரு முறை இரணியவலன் உயிர் நுங்கும் சிங்கம் - ஒரு சமயத்தில் இரணியன் என்னும் அரக்கனது உயிரைக் குடிக்கும் நரசிங்கமாகத் தோன்றிய வரும், வங்கம் தன் கண் துயில்பவன் - வெள்ளிய ஒளி வீசும் திருப்பாற்கடலில் யோக நித்திரை செய்பவரும், எகினனை உதவிய கரு முகில் - அன்னப் பறவையை வாகனமாக வுடைய பிரமதேவரைப் பெற்றருளிய கறுத்த திரு மேனியையுடைய விஷ்ணுவுமான திருமாலின், மருகோனே - சகோதரியின் புத்திரனே !, ஒன்று என்று - (உனது அசுர சரீரம் ஒழியப்பெற்று மலையினுருவத்திலேயே) ஒடுங்குவாயாக என்று அகத்திய மாமுனிவர் கூறியதனால், என்றும் துன்றும் குன்றும் - நிலைமையாக அவ்வுருவம் பொருந்தி நின்ற கிரௌஞ்சனாகிய மலையும், தொளைபட - தொளைக்கப் படுமாறும், கரி முகன் உடல் நெரி பட - மதயானையின் முகத்தையுடைய தாரகா சுரனது தேகம் நெரிந்து போகுமாறும், டிண் டிண் * * டிடி, என - என்று பேரிகைகள் முழங்கவும், விழும் எழு படிகளும் அதிர்பட - சிறந்த (மேல்) உலகங்கள் ஏழும் அதிர்ச்சியடையுமாறு, ஒண் சங்கம் சஞ் சஞ் சஞ் சஞ் என்று ஒலி செய - வெண்மையான ஒளி வீசும் சங்கங்கள் சஞ் சஞ் சஞ் சஞ் என்று ஒலி பரப்பவும், மகபதி துதி செய - இந்திரன் உன்னைத் துதித்து நிற்கவும், அசுரரை அடு வோனே - அசுரர்களை யழித்தவனே !, சிவன் அருள் குருபர உந்தன் தஞ்சம் தஞ்சம் என - சிவபெருமானால் அளித்தருளப்பட்டுப் பரம்பொருளை யடையும் நெறியைப் போதிக்கவந்த குருவே! உன் அடைக்கலம் என்று, முனிவரர் பணியும் - முனி சிரேஷ்டர்கள் வணங்கும் (மூர்த்தியே !), தொந்தம் தொந்தம் தொந்தம், என்று ஒலிபட - என்னும் ஒலி பரவுமாறு, நடமிடு பரன் - நிர்த்தனஞ் செய்யும் பரம்பொருளான சிவபெருமான், அருள் அறு முக - உதவியருளிய ஆறுமுகனே !, உண் கண் வண்டு (உம் - அசை) - மைதீட்டிய கண்களை யொத்தவண்டுகள், கொண்டு (உம் - அசை) தங்கும் - (தம்மகத்தேயுள்ள) தேனை உட்கொண்டு (மதுமயக்கத்தினால் தம் அகத்திலேயே) தங்கியிருக்கப் பெற்றவைகளும், விரை படு - வாசனை வீசி மலர்ந்துள்ளவைகளுமான, குரவு அலர் அலர் தரும் எழில் - குரவ மரத்தின் மலர்கள் தொடுத்த மாலையின் அழகு, புனை புய வீரா - பொருந்தப் பெற்றுள்ள புயங்களையுடைய வீரனே !, அன்று என்ற ஒன்றும் கொண்டு - உலகத்தில் தோன்றும் எல்லாப் பொருள்களுமாய் அவைகளில் ஒன்றாகவும் இல்லாத ஒரு பொருளையே அடைவதைக்

குறியாகக் கொண்டு, அன்பின் - அதனிடத்துக் கொண்ட அன்பினால், தங்கு - அதனைப் பெறும் நெறியிலேயே நீங்காது நின்ற, அடியவர் தமை - மெய்யடியார்களை, இகழ் சமணர்கள் - இகழ்ந்த சமணர்களது, அங்கம் - தேகமானது, கழுவினில் சிந்தும்படி - கழுவினில் ஏற்றப்பட்டு (அதிலுள்ள தசைகள்) கீழே சிந்துமாறும், பங்கம் - பழுதான அவர்களது மதம், துஞ்சும்படி - அழியுமாறும், ஒரு தொகுதியின் நுரை நதி எதிர்பட - ஒரு அடியவர் கூட்டம் சென்றபோது நுரையுடன் பெருகிவந்த ஆறு ஒன்று எதிர்ப்பட்டதைக் கண்டு, அன்பின் பண்பு எங்கும் கண்டு - எம்பெருமானிடத்துக் கொள்ளும் அன்பின் திறமையை எங்கும் காணலாம் என்பது வெளியாகுமாறு, (அதனைக் கடந்தும்) என்பின் அரிவை (ஐ - சாரியை) எதிர் வரவிடு - எலும்பாக விருந்த பூம்பாவை என்னும் பெண் மீண்டும் உயிர் பெற்றுத் தம் முன்னே தோன்றுமாறும், கவிபுகல் தரு திறலோனே - கவிபாடும் திறமை வாய்ந்திருந்தவனே !, பண்டு உண்டு (உம் - அசை) பொங்கு அமர்தனில் -முன்னொரு காலத்தில் உண்டாகி மும்முரமாய் நடத்த பாரத யுத்தத்தில், அண்டம் கண்டு (உம் - அசை)- உலகமெல்லாம் காணுமாறு, விஜயவன் இரதமை நடவிய - அர்ச்சுனனது தேரை நடத்திய, துங்கன் வஞ்சன் சங்கன் - பெரியோனும் கபடநாடகம் புரிவோனும் சங்கத்தைக் கையிலேந்தியவனுமான திருமாலின், மைந்தன் - புதல்வனாகிய பிரமதேவர், தரு மகன் முநி - பெற்றருளிய மானசபுத்திரராகிய நாரத மாமுனிவர், தழல் வரு தகர்-(வளர்த்த) ஓமாக்கினியினின்றும் கிளம்பி வந்த ஆட்டுக்கடாவை, இவர் வல - ஏறிச்சவாரி செய்யும் வல்லமை பொருந்தியவனும், அங்கம் கஞ்சம் - அலங்காரமாயுள்ள தாமரைமலர்களும், சங்கம் - சங்கங்களும், பொங்கும் - அழகாகத் தோன்றப்பெற்றதும், கயல் நிறை வளம் உறு - கயல்மீன்கள் பூரணமான வளர்ச்சியுறப் பெற்றதுமான, சிவகிரி மருவிய - சிவகிரி என்னும் பெயர்பெற்ற பழநி மலையின் மீது எழுந்தருளியிருப்பவனுமான, பெருமாளே - பெரியோனே ! குன்றும் குன்றும்(படி) - மலையும் வளர்ச்சியில் குறைவானதாய்த் தோன்றுமாறு பருத்து உயர்ந்தும், செண்டும் கன்றும்படி - புஷ்பச் செண்டும் வாடியதாகத் தோன்றும்படி புதிய தோற்றம் பொருந்தியும், வளர் முலையினில் - வளர்ந்துள்ள தனபாரங்களின்மீது, ம்ருக மதம் மெழுகியர் - கஸ்தூரியைப் பூசிக்கொள்பவர்களும், இந்தும் - சந்திரனேயென்றும், சந்தம் தங்கும் தண் செம் கமலமும் என - வாசனை பொருந்தியதும் குளிர்ச்சியுற்றதுமான சிவந்த தாமரை மலரே யென்றும் கூறும் வண்ணம், ஒளிர் தரு முக வநிதையர் - ஒளிவீசும் முகத்தையுடையவர்களும், கொஞ்சும் கெஞ்சும் செஞ்சும் - கொஞ்சிப்பேசுவதும் கெஞ்சுவதுமான (தந்திரங்களைச்) செய்தும், வஞ்சம் சமரசம் உற - தாங்கள் செய்யும் வஞ்சகங்கள் ஒற்றுமைப்படுமாறு, ஒரு தொழில் வினை புரிபவர் விரகாலும் - ஒப்பற்ற சாமர்த்தியம் பொருந்திய செயலைப் புரிபவர்களுமான விலைமாதர் மீது கொள்ளும் ஆசையினாலும், கும்பும் பம்பும் சொம்பும் தெம்பும் குடி என வளர்தரு கொடிய

வர் - வணங்கும் பாசாங்கும் கிளர்ச்சியும் சோம்பலும் மனோதிடமும் நிலைமையாகப் பொருந்தப் பெற்றுள்ள கொடியவர்களும், கடியவர் - வன்மை பொருந்திய மனத்தையுடையவர்களும், எங்கு எங்கு எம் பங்கு என்று - எங்களுக்குரிய பங்கு எங்கே எங்கே என்று கூறி, என்றென்றும் தமது உரிமையது என - எப்போதும் தமது சுதந்திரம் என்று கூறி, நலமுடன் அணைபவர் - விருப்பத்துடன் அணைந்துகொண்டு கலவிசெய்பவர்களும், கொஞ்சம் தங்கு இன்பம் தந்து-சிறிதுபொழுதே உருசித்து நிற்கும் இன்பமாகிய சிற்றின்பத்தை யளித்து, எந்தன் பொருள் உளது எவைகளும் - என்னுடையதாகவுள்ள பொருள்களெல்லாவற்றையும், நயமொடு கவர்பவர் - இனிமையாகப்பேசிப் பறித்துக் கொள்பவர்களுமான விலைமாதர்களின் (மீதுறும்), மயலால் (உம் - அசை) - காதலினால், என்றென்றும் கன்றும் துன்பு (உம் - அசை) கொண்டு - நிலைமையாக எந்நாளும் சோர்வடையும் துன்பத்தைப்பற்றிச் சிந்தித்து, உனது இரு மலர் அடி பரவிட - உனது இருபாதமலர்களையும் வணங்கவேண்டு மென்று, மனதினில் நன்று என்றும் கொண்டு - மனத்தினில் நல்ல எண்ணத்தை எந்நாளும் இருத்திக்கொண்டு, என்றும் சென்று (உம் - அசை) தொழு(ம்) மகிமையின் - தினந்தோறும் நின்னையணுகி வணங்குவதன் சிறந்த பயனாக, நிலை உணர்வின் நின் அருள் பெற - நிலைமையான மெய்யுணர்வினால் நினது அருளைப் பெறுமாறும், இன்பும் பண்பும் தெம்பும் சம்பந்தமும் மிக - இன்பமும் குணமும் மனோதிடமும் ஞானத்தோடு சம்பந்தமும் அதிகரிக்கும் வண்ணம், அருள் பெற - நினது அருளைப் பெறுமாறும், விடை தரு(ம்) விதம் - முத்தியைத்தரும் செய்கையை (செய்யும் தன்மையை), முனம் அருள்வாயே - சீக்கிரத்தில் தந்தருளவேண்டும்.

(வி - ரை) **கிரௌஞ்ச அசுரனை அகத்தியமாமுனிவர் அடக்கியது:**-நாரத மாமுனிவரால் தூண்டப்பட்டு மேருமலையின் கர்வத்தைக் குலைப்பதற்காக அண்ட முகட்டைத் தொடும்படி வளர்ந்து ஆகாய மார்க்கத்தை அடைத்து நின்ற விந்திய மலையை அடக்குவதற்காகத் தேவர்களின் வேண்டுகோளுக்கிசைந்து தென்றிசையை நோக்கிச்சென்ற அகத்திய மாமுனிவர் சூரபதுமனது தம்பியான தாரகாசுரனது நகரமான மாயாபுரியை அணுகியபோது, அவ்வசுரனுக்குச் சினேகிதனும், நிலத்தை நீராகவும், நீரை நிலமாகவும், பாதாளத்தைப் பூமியாகவும் ஆகாயமாகவும், மற்றும் எதையும் வெறொதுவாகவும் மாற்றி மிகுந்த மதிமயக்கத்தை உண்டுபண்ணும் சத்தியையுடைய கிரௌஞ்சன் என்னும் அசுரன் ஓர் மலையுருவத்தை எடுத்துக்கொண்டு வழியில் நின்றான். அச் சூதை யறியாத முனிவர் அதன்மீ தேறிச்சென்று, சிறிது தூரத்துக்கப்பால் வழியொன்றும் காணமல் தியங்கி, பிறகு பல சிறு வழிகள் தோன்றி மறைய, அவைகளின் வழியே சிறிது சிறிது தூரம் சென்று ஒரு காட்டின் நடுவே வந்து சேர்ந்தார். அப்போது எங்கும் அந்தகாரம் நிறைந்திருக்க இடிமின்னல்களுடன் பயங்கரமாக மழை பொழியத் தொடங்கிற்று. அதுகண்ட முனிவர் சற்று ஆலோசித்து, ஞானதிருஷ்டியினால்

யாவும் கிரௌஞ்சனுடைய மாயையென்று அறிந்து கோபமுற்றுத் தமது தண்டத்தினால் அம்மலையை யடித்து, "அடா கொடியவனே! நீ மலையுருவம் பூண்டு என்னை உனது மாயையினால் மயங்கச் செய்ததனால் நீ இப்போதே நிலைமையாக மலையுருவம் பெறுவாயாக! பிற்காலத்தில் உன் வடிவம் ஸ்ரீ ஷண்முகப்பெருமானது வேலாயுதத்தினால் பிளக்கப்படும்" என்று கூறித் தமது கமண்டலத்திலுள்ள காவிரி நீரை அம்மலையின்மீது தெளித்து அவ்வசுரனது மாயையை அகற்றிவிட்டுத் தமது வழியே சென்றனர். அன்று முதல் கிரௌஞ்சன் வேறு வடிவங்கொள்ளும் சக்தியை யிழந்து நிலைமையாக மலையின் வடிவத்தைப்பெற்றான். இவ்வரலாற்றையே 'ஒன்றென் றென்றுந் தின்றுங் குன்று' என்னும் மொழித்தொடர் உணர்த்துகிறது.

மகபதி - இந்திரன்; நூறு மகங்களை - நூறு அசுவமேத யாகங்களைச் செய்து இந்திரப் பட்டத்தைப் பெற்றவன். முருகப்பெருமான் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளாய் அவதரித்து, சமணர்கள் இழைத்த கொடுமைகளினால் மனச்சோர்வடையாமல் சைவ சமயத்தில் திடமான பற்றுடையவர்களாய் நின்ற பெரியார்களின் நிலைமையை யுன்னிச் சமணர்களைக் கழுவிலேற்றிய வரலாற்றை இவ்வுரையின் 186 - 188-ம் பக்கங்களில் காண்க.

**திருஞான சம்பந்த சுவாமிகள் பதிகம் பாடி ஓடம் செலுத்திய வரலாறு:—** திருஞான சம்பந்த சுவாமிகள் சோழநாட்டிலுள்ள முள்ளிவாய்க்கரையையடைந்து, அங்கு ஓடிய குடமுருட்டி யென்னும் ஆற்றின் எதிர்க்கரையிலுள்ள திருக்கொள்ளம்பூதூரில் வில்வவனநாதர் என்னும் திருநாமத்துடன் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைத் தரிசிக்க வேண்டுமென்று மிகுந்த ஆவலுற்றார்; அந்த நதியானது அச்சமயத்தில் பெருக்குற்றிருந்தபடியால் ஓடங்களை அவ்வாற்றில் செலுத்த முடியாமல் ஓடக்காரர்கள் ஓடங்களைக் கட்டிவிட்டு அகன்றதைக் கண்டு, ஓர் ஓடத்தின் கட்டுகளை யவிழ்த்து, அதில் சிவனடியார்களுடன் ஏறி, 'கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர்' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடிச் சிவபெருமானது அருளினால் ஓடத்தைச் செலுத்தி ஆற்றைக்கடந்து திருக்கொள்ளம்பூதூரை யடைந்து சிவபெருமானைச் சேவித்து மகிழ்ந்தார். இவ்வரலாற்றையே "யொரு தொகுதியி னுரைநதி யெதிர்பட அன்பின் பண்பெங் குங்கண்டு * * * கவி புகல்தரு திறலோனே" என்னும் மொழித்தொடர் உணர்த்துகிறது.

**திருஞான சம்பந்த சுவாமிகள் எலும்பைப் பெண்ணாக்கிய வரலாறு:—** திருமயிலையில் வைசியர்குலத்தி லுதித்து மிகுந்த செல்வமுடையவராய்ச் சிவநேச செட்டியார் என்னும் திருநாமம் பூண்ட ஒரு சிவபக்தர் இருந்தார். அவர் மகப்பேறில்லாமல் அருந்தவமியற்றி ஒரு புத்திரியைப் பெற்று, அப்பெண்ணுக்குப் பூம்பாவை யென்று பெயரிட்டு மிகவும் செல்வமாக வளர்த்து வந்தார். அக்காலத்தில் திருஞான சம்பந்த சுவாமிகள் மதுரையில் சமணர்களின் ஆதிக்கத்தைக்

குலைப்பதற்காக நிகழ்த்திய அற்புதச் செயல்களைப்பற்றிக் கேள்விப்பட்ட சிவ நேச செட்டியார் தமது புத்திரியையும் பொருளையும் அவருக்கே அர்ப்பணஞ் செய்து ஆனந்தக்கடலில் ஆழ்ந்திருந்தார். ஒருநாள் பூம்பாவை நந்தவனத்தில் மலர் பறித்துக்கொண் டிருந்தபோது நாகம் தீண்டி இறந்தாள். அப்போது சிவ நேச செட்டியார் தாம் சம்பந்த சுவாமிகளினிடத்துக் கொண்டிருந்த பக்தியின் திடத்தினால் மனத்தைத் தேற்றிக்கொண்டு, அப் பெண்ணின் உடலைத் தகனஞ் செய்து எலும்பையும் சாம்பலையும் ஒரு குடத்திலிட்டு, அதைக் கன்னிமாடத் தில் வைத்துப் பாதுகாத்து வந்தார். சுவாமிகள் திருவொற்றியூரில் எழுந்தருளிய போது, சிவநேச செட்டியார் அங்கு சென்று சுவாமிகளைத் திருமயிலைக்கு அழை த்து வந்து கோயிலில் சுவாமி தரிசனம் செய்வித்தார். அச் சமயத்தில் சுவாமிகள் செட்டியாருக்கு நேர்ந்த விபத்தை அங்கு கூடியிருந்த அடியார்கள் சொல்லக் கேட்டு, அப்பெண்ணின் எலும்பும் சாம்பலும் வைக்கப்பட்டிருந்த குடத்தைக் கொண்டுவரும்படி சிவநேச செட்டியாரிடம் கூறியருளினார். செட்டியார் அவ் வாறே அக்குடத்தைக் கொண்டுவந்து ஸ்ரீ கபாலீசுவரப் பெருமானது திருமுன் னர் வைத்துச் சுவாமிகளை வணங்கி நின்றார். அப்போது சுவாமிகள் சிவபெரு மானது திருவருட் பெருமையை மனத்திலிருத்தி அக்குடத்தை நோக்கி, "பூமி யில் மானிடராய்ப் பிறந்தவர் பெறத்தக்க பயன், சிவபெருமானது அடியார் களுக்குத் திருவமுது செய்வித்தலும், அப்பெருமானது திருவிழாப் பொலிவைக் கண்டு ஆனந்தித்தலுமே என்பது சத்தியமாயின், மீண்டும் உயிர்பெற்று இங்கு தோன்றுவாயாக!" என்று உரைத்து, "மட்டிட்ட" என்று தொடங்கும் பதிகத் தைத் திருவாய்மலர்ந் தருளினார். உடனே பூம்பாவையார் அக்குடத்தினின்றும் இலக்குமியின் அழகுடன் தோன்றி யாவர் மனத்தையும் களிப்பித்தார். பிறகு சிவநேச செட்டியார் சுவாமிகளை யணுகித் தமது மகளைத் திருமணஞ் செய்து கொள்ளும்படி அவரைப் பிரார்த்திக்க, சுவாமிகள் இறந்த அப்பெண்ணைச் சிவ பெருமானது அருளினால் தாம் உயிர்ப்பித்ததனால் தாம் அப்பெண்ணை மணந்து கொள்வது தகாது எனக் கூறி மறுத்துவிட்டார். இவ்வரலாற்றையே "என்பின் அரிவையை யெதிர்வர விடுகவி புகல்தரு திறலோனே" என்னும் மொழித் தொடர் உணர்த்துகிறது.

**முருகப்பெருமான் தகர் ஏறிய வரலாறு:**—முருகப்பெருமான் திருக்கைலா யத்தி லிருக்கையில், நாரத மாமுனிவர் பல தேவர்களும் முனிவர்களும் தம்மைச் சூழ்ந்து அமர்ந்திருக்க ஒரு சிறந்த வேள்வியைச் செய்தார். வேள்வி நடத்தும் முறையில் ஏதோ வொரு குற்றம் ஏற்பட்டதனால், யாகத்தில் தேவர்களுக்கு அவிர்ப்பாகம் அளித்த ஓமத்தீயினின்றும் ஒரு ஆட்டுக்கடாவானது எழும்பி ஆரவாரித்து உலகத்திலுள்ள உயிர்களை யெல்லாம் அழிக்கத் தொடங்கிற்று. அது கண்ட நாரத மாமுனிவர் மிகவும் மனம் வருந்தி, அவ் வாட்டுக் கடாவை அழித் தருளும்படி சிவபெருமானைப் பிரார்த்திக்க வேண்டுமென்ற நோக்கத்துடன்

திருக்கைலாயத்துக்குச் சென்றார். அங்கு சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோவிலுக்குச் செல்லும் வழியில் குமாரக் கடவுளைக் கண்டு, அம்முனிவர் களிப்புற்று, அந்த ஆட்டுக்கடாவை அழித்தருளும்படி அப்பெருமானையே பிரார்த்தித்தார். உடனே அப்பெருமான் தமது தம்பியர்களான நவவீரர்களில் முதல்வரான வீரவாகு தேவரை அழைத்து அக் கடாவைப் பிடித்து வரும்படி கட்டளையிட்டருளினார். வீரவாகுதேவர் உடனே புறப்பட்டுச் சென்று உலகங்களெல்லாம் திரிந்து கடைசியாகப் பிரமலோகத்தை யடைந்து, அங்கு உலாவிக் கொண்டிருந்த கடாவைப் பிடித்துக்கொண்டு வந்து முருகப்பெருமான் திருமுன்னர் நிறுத்தினார். அப்போது நாரத மாமுனிவர் அக் கடாவை வாகனமாக்கிக் கொள்ளும்படி அப்பெருமானை வேண்டிக்கொள்ள, அப்பெருமான் அதற்கிசைந்து அதைத் தம் வாகன மாக்கிக்கொண்டார். [யாகத்திற்காக ஏற்படுத்திய பசுவுக்கு (ஆட்டுக்கு) முறைப்படி உரிய சடங்குகளைச் செய்வித்து அதன் அங்கத்தைக் கண்டம் செய்தபோது அதினின்றும் அவ் வாட்டுக்கடா தோன்றினதாகக் கந்தபுராண மூலத்தில் கூறப்பட்டிருக்கிறது.]

இரதமை - இரதம்+ஐ, இரதத்தை. செஞ்சும் - செய்தும் என்பதன் மரூஉ. விடை - விடுதலை - முக்தி. விதம் - செயல். "ஒன்றென் றென்றுந் துன்றுங் குன்று" என்பதற்கு ஒன்றாகிய சூரிய மண்டலத்தையளாவும் கிரௌஞ்ச கிரி என்று பொருள் கூறுவாருமுளர். "அன்றென் றென்றுங் கொண்டன் பின்றங் கடியவர் தமையிகழ்" என்பதற்குப் பிறமதங்கள் முத்திவழியன்று என்ற ஒன்றை மாத்திரங் கொண்டு அன்பில்லாமல் என்றும், அத்தி நாத்தி யென்ற ஒன்றையே கொண்டு, அங்கு அடியவர்களை யிகழ்ந்த என்றும் பொருள்கள் கூறுவாருமுளர். (கூகூ)

தனனதன தத்த தந்த தனனதன தத்த தந்த
தனனதன தத்த தந்த—தனதான.

களபமுலை யைத்தி றந்து தளவநகை யைக்கொ ணர்ந்து
கயலொடுப கைத்த கண்கள் குழைதாவக்

கரியகுழ லைப்ப கிர்ந்து மலர்சொருகு கொப்ப விழ்ந்து
கடியிருளு டுக்கு லங்க ளெனவீழ

முழுமதியெ னச்சி றந்த நகைமுகமி னுக்கி யின்ப
முருகிதழ்சி வப்ப நின்று விலைகூறி

முதலுளது கைப்பு குந்து அழகுதுகி லைத்தி றந்து
முடுகுமவ ருக்கி ரங்கி மெலிவேனோ?

இளமதிக டுக்கை தும்பை அரவணிப வர்க்கி சைந்து
இனியபொரு ளைப்ப கர்ந்த குருநாதா!

இபமுகவ னுக்கு கந்த இளையவம ருக்க டம்ப
எனதுதலை யிற்ப தங்க ளருள்வோனே !
குழகென எடுத்து கந்த வுமைமுலைபி டித்த ருந்து
குமரசிவ வெற்ப மர்ந்த குகவேலா !
குடிலொடுமி கச்செ றிந்த இதணுளபு னத்தி ருந்த
குறவர்மக ளைப்பு ணர்ந்த பெருமாளே !

(ப - ரை) இள மதி கடுக்கை தும்பை அரவு அணிபவர்க்கு - பிறைச் சந்திரனையும் கொன்றை மலரையும் தும்பை மலரையும் பாம்பையும் (சடா முடியில்) அணிந்துகொள்ளும் சிவபெருமானுக்கு, இசைந்து - அவரது வேண்டுகோளுக்கிசைந்து, இனிய பொருளை பகர்ந்த - அவர் மனத்தில் இன்பத்தை யூட்டத்தக்க உபதேசத்தை அவருக்குச் செய்தருளிய, குருநாதா - குருவாக அமர்ந்த நாதனே !, இப முகவனுக்கு உகந்த இளையவ - யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளுக்கு மகிழ்ச்சியைத் தரும் தம்பியே !, மரு கடம்ப - வாசனை பொருந்திய கடம்ப மலர் மாலையை யணிவோனே !, எனது தலையில் பதங்கள் அருள்வோனே - அடியேனது தலையின் மீது நினது பாதமலர்களைச் சூட்டியருளியவனே !, குழகு என எடுத்து உகந்த உமை - நின்னைக் குழந்தையெனக் கருதி எடுத்து மகிழ்ச்சியுற்ற உமாதேவியாரது, முலை பிடித்து அருந்து குமர - தனபாரங்களை நினது திருக்கைகளினால் பிடித்துப் பாலுண்ணும் திருவிளையாடலைச் செய்த குமரனே !, சிவ வெற்பு அமர்ந்த சிவகிரி - யென்னும் பெயர்பெற்ற பழநிமலையின்மீது எழுந்தருளிய, குக வேலா - இதயகமல வாசியான ஞானசக்திதரனே !, குடிலொடு மிக செறிந்த இதண் உள - ஆகாயத்தை மிகவும் நெருங்கியிருக்கும் பரண் அமைக்கப்பட்டிருந்த, புனத்து இருந்த குறவர் மகளை - தினைப் புனத்தில் காவலாக விருந்த வேடர்மகளான வள்ளிநாயகியை, புணர்ந்த பெருமாளே - கலந்துகொண்ட பெரியோனே !, களப முலையை திறந்து - கலவைச் சாந்து அணிந்த தனபாரங்களைத் திறந்து காட்டி, தளவ நகையை கொணர்ந்து - முல்லை மலர்களை யொத்த பற்கள் தெரியுமாறு நகையை வருவித்துக்கொண்டு, கயலொடு பகைத்த கண்கள் குழை தாவ - (வடிவத்தின் சிறப்பைக்குறித்து) கயல்மீன்களுடன் பகைமையோடு போராடும் கண்கள் காதுகளி லணிந்துள்ள குழைகளையணுகும்படி (அவைகளைச்சுழற்றி), கரிய குழலை பகிர்ந்து மலர்சொருகு கொப்பு அவிழ்ந்து - கருத்த கூந்தலை வகிர்ந்து மலர்களைச் சொருகிய கொண்டையானது அவிழ்ந்து, கடி இருள் உடு குலங்கள் என வீழ - அந்தகார விருளும் நக்ஷத்திரங்களின் கூட்டமும்போலத் தோன்றி விழும்படிச்செய்து, முழு மதி என சிறந்த - பூரண சந்திரனே யென்று சொல்லுமாறு அழகு வாய்ந்துள்ளதும், நகை - புன்னகையினால் விளங்குவதுமான, முகம் மினுக்கி - முகத்தின் அழகு சிறப்பாய்த் தோன்றும்படி யசைத்து, இன்பம் உருகு இதழ் சிவப்ப நின்று - இன்

பத்தை யடையக் கருதி மனமுருகச் செய்யும் உதடுகள் சிவந்து தோன்ற (தெரு வீதியில்) நின்று, விலை கூறி - தங்களை யனுபவிப்பதற்குரிய விலை இன்னதென வுரைத்து, முதல் உளது கைப்புகுந்து - (வந்த ஆடவர்களது) கையிலுள்ள பொருளைக் கையிற்பெற்றுக்கொண்டு, அழகு துகிலை திறந்து - அழகிய ஆடையைத் திறந்துகொண்டு, முடுகும் அவருக்கு இரங்கி - அணுகும் விலைமாதர்களை அனுபவிக்கவேண்டு மென்று மனமுருகி, மெலிவேனோ - (அடியேன்) சோர் வடைதல் தகுதியோ?

(வி - ரை) இப்பாடலில் 'எனது தலை யிற்ப தங்க ளருள்வோனே' என்று வரும் மொழித்தொடரினால், முருகப்பெருமான் ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளது தலையின்மீது தமது பாதமலர்களைச்சூட்டி ஆட்கொண்டார் என்பது தெளிவாய் விளங்குகிறது. இதற்குப் பின்வரும் கந்தரலங்காரப் பாடல் ஆதாரமாக விருக்கிறது.

"சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழி றேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மன மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே" (௬௭)

தனதத் தனதத் தனதத் தனதத்
தனதத் தனதத்—தனதான.

புடைசெப் பெனமுத் தணிகச் சறவுட்
பொருமிக் கலசத் திணையாய
புளகக் களபக் கெருவத் தனமெய்ப்
புணரத் தலையிட் டமரேசெய்
அடைவிற் றினமுற் றவசப் படுமெற்
கறிவிற் பதடிக் கவமான
அசடற் குயர்வொப் பதில்நற் க்ருபையுற்
றடிமைக் கொருசொற் புகல்வாயே!
குடமொத் தகடக் கரடக் கலுழிக்
குணமெய்க் களிறுக் கிளையோனே!
குடிபுக் கிடமிட் டசுரப் படையைக்
குறுகித் தகரப் பொரும்வேலா!

பட‍லைச் செறிநற் கதலிக் குலையிற்
பழமுற் றொழுகப் புனல்சேர்நீள்
பழனக் கரையிற் கழைமுத் துகுநற்
பழநிக் குமரப் பெருமாளே !

(ப - ரை) குடம் ஒத்த கட - குடத்தையொத்த வயிற்றையும், கரட கலுழி குண - மதம் பாயும் சுவடுகளின் வழியே மதநீர் ஆறாய்ப்பெருகும் இயல்புடைய, மெய் களிறுக்கு - யானையின் முகத்தையுமுடைய மெய்ப்பொருளான விநாயகக்கடவுளுக்கு, இளையோனே - தம்பியே !, குடிபுக்கு இடமிட்ட அசுர படையை குறுகி - (தேவர்களுக்குப் பயந்திருந்ததையொழித்து) தங்கள் நகரங்களில் குடியேறிப் பெருகியிருந்த அசுரர்களது சேனையை யணுகி, தகர பொரும் வேலா - அச்சேனை நொருங்கிப் பொடியாகுமாறு போர் செய்த ஞானசக்திதரனே !, படலை செறி நல் கதலி குலையின் பழம் - பரந்து வளர்ந்துள்ள நல்ல வாழைமரத்தின் குலையிலுள்ள பழங்கள், முற்றி ஒழுக - முதிர்ந்து தேனைச் சொரியவும், புனல் சேர் நீள் பழன கரையில் - நீர் நிரம்பிய நீண்ட நஞ்சை வயல்களின் வரப்புகளில், கழை முத்து உகு - கரும்புகள் முத்துக்களைச்சிந்தவும் பெற்றுள்ள, நல் பழநி குமர பெருமாளே - சிறந்த தலமான பழநிமலையின்மீது குமாரசுவாமியாய் எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, புடை செப்பு என - புடைத்தெழுந்து செப்பின் வடிவமுற்று, முத்து அணி கச்சு அற - முத்துக்கள் பொருந்திய கச்சுக் கிழியுமாறு, உள் பொருமி - கச்சுக்குள் விம்மிப்புடைத்து, கலசத்து இணையாய - கலசத்தைப் போன்றவைகளாயும், புளக - சிலிர்த்துப் புடைக்கும் இயல்புடையவைகளாயும், களப - கலவைச்சாந்து அணிந்தவைகளாயும், செருவ- செருக்கைக் காட்டுபவைகளாயுமுள்ள, தன மெய் புணர - தனபாரங்கள் பொருந்திய தேகத்தை அணைய, தலையிட்டு - தொடங்கி, அமர் செய்(ஏ - அசை) அடைவில்தினம் உற்று-விருப்பமுறும் விதத்தில் (நிலைமையில்) தினந்தோறும் பொருந்தி நின்று, அவசப்படும் எற்கு - என்வச மழிந்து உருகும் அடியேனுக்கு, அறிவு இல் பதடிக்கு - அறிவில்லாத பதரையொத்த அற்பனுக்கு, அவமான அசடற்கு - (வாழ்க்கையை) வீணுக்கும் கீழ்மகனை அடியேனுக்கு, உயர்வு ஒப்பு அது இல் நல் க்ருபை உற்று - ஒப்புயர்வில்லாத நல்ல கருணையுற்று, அடிமைக்கு - அடியேனுக்கு, ஒரு சொல் புகல்வாயே - ஒப்பற்ற தனிச்சொல்லான பிரணவத்தின் பொருளை உபதேசித்தருளவேண்டும்.

(வி - ரை) இடமிடல் - பெருகுதல். முதிர்ந்த கரும்புகளின் கணுக்களில் முத்து உண்டாகும் என்பர். இறுதியடிகளிரண்டும் பழநித்தலத்தின் நீர்வளப்பத்தை யுணர்த்துகின்றன. எற்கு - என் + கு - எனக்கு. அசடற்கு - அசடனுக்கு. (கூ௬)

தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன
தத்தன தத்தன தனத்த தானன—தனதான.

நெற்றிவெ யர்த்துளி துளிக்க வேயிரு
குத்துமு லைக்குட மசைத்து வீதியி
னிற்பவர் மைப்படர் விழிக்க லாபியர் மொழியாலே
நித்தம யக்கிகள் மணத்த பூமலர்
மெத்தையில் வைத்ததி விதத்தி லேயுட
னெட்டுவ ரத்தொழில் கொடுத்து மேவியு முறவாடி
உற்றவ கைப்படி பொருட்கள் யாவையு
மெத்தவு நட்பொடு பறித்து நாடொறு
முற்பன வித்தைகள் தொடுக்கு மாதர்க ளுறவாமோ?
உச்சித மெய்ப்புற அனைத்த யாவுடன்
மெய்ப்படு பத்தியி னிணக்க மேபெற
வுட்குளிர் புத்தியை யெனக்கு நீதர வருவாயே!
கற்றத மிழ்ப்புல வனுக்கு மேமகிழ்
வுற்றொரு பொற்கொடி களிக்க வேபொரு
கற்பனை நெற்பல அளித்த காரண னருள்பாலா!
கற்பக கர்க்களி றளித்த மாதனை
பொற்புய மைப்புயல் நிறத்த வானவர்
கட்கிறை யுட்கிட அருட்கிரு பாகர எனநாளும்
நற்றவ ரர்ச்சனை யிடத்த யாபர
வஸ்துவெ னப்புவி யிடத்தி லேவளர்
நத்தணி செக்கரன் மகிழ்ச்சி கூர்தரு மருகோனே!
நட்டுவர் மத்தள முழக்க மாமென
மைக்குல மெத்தவு முழக்க மேதரு
நற்பழ நிப்பதி செழிக்க மேவிய பெருமாளே!

(ப - ரை) கற்ற தமிழ் புலவனுக்கு (உம், ஏ - அசை) மகிழ்வுற்று - கல்வி யறிவுடைய தமிழ்ப்புலவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு (அவர் பதிகத்தைக் கேட்டு) மகிழ்ச்சியுற்று, ஒரு பொன் கொடி களிக்க (ஏ - அசை) - ஒப்பற்ற

அழகுவாய்ந்த கொடியை யொத்த பரவை நாச்சியார் மனமகிழ்ச்சி யடையுமாறு, பொரு கற்பனை நெல் பல அளித்த காரணன் - உண்மையான நெல்லை யொத்திருக்கும்படி உண்டாக்கிய நெல்லை ஏராளமாக அளித்தருளியவரும் சகல வுலகங்களுக்கும் காரணருமான சிவபெருமான், அருள் பாலா - அளித்தருளிய பாலனே!, கற்ப(க) நகர் களிறு அளித்த மாது - கற்பக விருக்ஷம் இருக்கும் அமராவதி நகரத்தில் வாழும் ஐராவதம் என்னும் யானை வளர்த்த பெண்ணாகிய தெய்வயானையம்மை, அணை பொன் புய - அணைந்துகொள்ளும் அழகிய புயங்களை யுடையவனே!, மை புயல் நிறத்த வானவர்கட்கு இறை - கரிய மேகத்தை யொத்த மேனியையுடையவனும் தேவர்களுக்கு அரசனுமான இந்திரன், உட்கிட அருள் க்ருபாகரா-அஞ்சியபோது அவனுக்கு அருள்புரிந்த கருணாமூர்த்தியே!, என நாளும் நல் தவர் அர்ச்சனை இட - என்று நின்னைத் துதித்து எந்நாளும் நல்ல தவசிகள் நின்னை அருச்சிக்கும் வண்ணம், தயாபர வஸ்து என புவியிடத்தில் (ஏ - அசை) வளர் - கருணாமூர்த்தியாகப் பூவுலகில் (பல திருத்தலங்களில்) எழுந்தருளி, நத்து அணி செக்கரன் - சங்கத்தையும் அழகிய சக்கராயுதத்தையுமுடைய திருமால், மகிழ்ச்சி கூர் தரு மருகோனே - கண்டு மிகுந்த மகிழ்ச்சியடையும் வண்ணம் சிறப்புற்றிருக்கும் மருகனே!, நட்டுவர் மத்தள முழக்கமாம் என - (நடிக்கும் பெண்களை ஆட்டுவிக்கும்) நட்டுவர்களுடைய மத்தளங்களின் முழக்கமே என்று கூறுமாறு, மை குலம் மெத்தவும் முழக்கம் (ஏ - அசை) தரு - மேகக்கூட்டங்கள் மிகுந்த ஒலியைப் பரப்பும், நல் பழநி பதி- நல்ல பழநி யென்னும் தலம், செழிக்க - சிறப்படையுமாறு, மேவிய பெருமாளே- அத் தலத்தில் அமர்ந்தருளிய பெரியோனே!, நெற்றி வெயர் துளி துளிக்க (ஏ - அசை) - நெற்றியினின்றும் வியர்வை துளித்துளியாகச் சிந்த, இரு குத்து முலை குடம் அசைத்து - கூர்மையானவைகளும் குடத்தின் வடிவத்தையுடையவைகளுமான இரண்டு தனபாரங்களையும் அசைத்துக் காட்டி, வீதியில் நிற்பவர் - (வீட்டின்) தெருவாசலில் வந்து நிற்பவர்களும், மை படர் விழி கலாபியர் - மை தீட்டப்பெற்ற கண்களையும் தோகையையுடைய மயிலின் சாயலையுமுடையவர்களும், மொழியாலே - (தங்கள் இனிய) மொழிகளினால், நித்தம் மயக்கிகள் - தினந்தோறும் (ஆடவர்களுடைய புத்தியை) மயங்கச் செய்பவர்களும், மணத்த பூ மலர் மெத்தையில் - வாசனை வீசும் மலர்ந்த புஷ்பங்களினால் அமைக்கப்பட்ட மெத்தையின் மீது, வைத்து - (தங்கள் மொழிகளினால் மயங்கி வரும் ஆடவர்களை) இருக்கச் செய்து, உடன் எட்டு வர - உடனே ஆசை உண்டாகுமாறு, அதி விதத்திலே - பலவிதமாக, தொழில் கொடுத்து - சாமர்த்தியமாக லீலைகளைச் செய்து, மேவி (உம் - அசை) உறவாடி - கலந்து நேசம் பாராட்டி, உற்ற வகைப்படி - நேர்ந்த விதமாக, பொருட்கள் யாவையும் - (அவ்வாடவர் கைகளிலுள்ள) பொருள்கள் முழுவதையும், மெத்த (உம் - அசை) நட்பொடு - மிகுந்த சிநேகத்தைக் காட்டி, பறித்து - பிடுங்கிக்கொண்டு, நாள்தொறும் - தினந்

தோறும், உற்பன வித்தைகள் தொடுக்கும் - உண்மைபோல் தோன்றும் மாய வித்தைகளைச் செய்யும், மாதர்கள் உறவு ஆமோ - (விலை) மாதர்களது சிநேக மானது பெறத்தக்கதோ? உச்சித மெய்ப்பு உற - மேன்மையான நினைவு (அடியேனுக்கு) உண்டாகுமாறும், மெய்ப்படு பத்தியின் இணக்கம் (ஏ - அசை) பெற உண்மையான பத்தி நெறியில் சேருமாறும், உள் குளிர் புத்தியை - (புலன்களின் வழியே உலகவாசைகளிற் செல்லாமல்) தன்னகத்தே யடங்கித் தங்கும் புத்தியை, எனக்கு நீ தர - அடியேனுக்கு நீ தந்தருளும் பொருட்டு, அனை தயாவுடன் - தாயினுக்குரிய தயவுடன், வருவாயே - வந்தருள வேண்டும்.

(வி - ரை) சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமான் நெல்மலைகள் அளித்தருளிய வரலாறு:—சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்தில் பேரன்பு பாராட்டி வந்த குண்டையூர்க்கிழார் என்னும் வேளாளர் அரிசி பருப்பு முதலிய பண்டங்களைப் பரவையார் வீட்டுக்கு நாள்தோறும் அனுப்பி வந்தார். ஒருக்கால் மழையின்மையால் பஞ்சம் நேர்ந்தபோது, அவ்வேளாளர் சுவாமிகளுக்கு அரிசிஅனுப்ப முடியாமல் பெருங்கவலையுற்றுக் கலங்கினர். அப்போது தியாகேசப் பெருமான் தமது அடியவராகிய ஆரூரரிடத்தில் அவ்வேளாளர் கொண்ட அன்புக்கு மெச்சி அவர் முன்னே தோன்றி, "ஆரூரனுக்காக உனக்கு நெல் தந்தோம்" என்று கூறியருளினர். உடனே குபேரன் அவ்வூர் முழுவதும் நெல்மலைகள் குவிந்து கிடக்கச் செய்தான். குண்டையூர்க்கிழார் பேரானந்தமடைந்து சுவாமிகளினிடம் சென்று அவ் விந்தையைத் தெரிவிக்க, சுவாமிகளும் குண்டையூருக்குச் சென்று நெல் மலைகளைக் கண்டு வியப்புற்று, அருகே எம்பெருமான் எழுந்தருளியிருந்த திருக்கோளிலி என்னும் திருக்கோயிலுக்குச் சென்று, அளவற்ற அன்புடன்,

"நீள நினைந்தடியேனுமை நித்தலுங்கை தொழுவேன்
வாளன கண்மட வாளவள் வாடிவருந்தாமே
கோளிலி யெம்பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமா னவையட்டித் தரப்பணியே"

என்று தொடங்கும் பதிகத்தைப் பாடியருளினர். உடனே, "இன்றிரவே நமது பூதங்கள் இந்த நெல்லைக் கொண்டுவந்து ஆரூரில் சேர்க்கும்" என்று அசரீரி வாக்கு எழுந்தது. சுவாமிகள் திருவாரூருக்குத் திரும்பிச் சென்றார். அன்றிரவு சிவபூதங்கள் நெல்லைக் கொண்டுபோய் பரவை நாச்சியாரது மாளிகையிலும் மற்றும் அவ்வூரில் எங்கும் நிறைத்தன. மறுநாட் காலையில் பரவையார் அவரவர்கள் வீடுகளின் எல்லையில் உள்ள நெல்லை அவரவர்கள் எடுத்துக்கொள்ளலாமென்று பறையறைவித்தார். யாவரும் துயர் நீங்கி அவர்களை வாழ்த்தினர்கள்.

இப்பாடலில் "மைப்புயல் நிறத்த * * * * வளர்" என்னும் மொழித் தொடரை "செக்கரன் * * * * மருகோனே" என்னும் பதங்களுடன் சேர்த்து,

கரிய மேனியையுடைய தேவர்கள் அரசனாகிய இந்திரன் அசுரர்கள் இழைத்த கொடுமையினால் அச்சமுற்றபோது அவனுக்கு அருள்புரிந்த கருணாமூர்த்தியே என்று நல்ல தவசிகளால் தினந்தோறும் துதிக்கப்பட்டும் அர்ச்சனை செய்யப்பட்டும் தயாபர மூர்த்தியாகப் பூவுலகத்தில் யோக நித்திரை செய்யும் சங்க சக்ரதாரியான ஸ்ரீ ரங்கநாதர் கண்டு மிகுந்த மகிழ்ச்சியடையும் மருகோனே என்று பொருள் கூறுவாருமுளர். குளிர்தல் - தங்குதல்; உள் குளிர்தல்-மனமானது ஐம் புலன்களின் வழியே உலக ஆசைகளில் செல்லாமல் மெய்யுணர்வு பெற்று மெய்ப்பொருளைத் தியானிப்பதில் தங்கியிருத்தல். (௬௬)

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன—தனதான.

இலகிய களபசு கந்த வாடையின்
ம்ருகமத மதனைமி கிழ்ந்து பூசியெ
இலைசுருள் பிளவைய ருந்தி யேயதை யிதமாகக்
கலவியி லவரவர் தங்கள் வாய்தனி
விடுபவர் பலபல சிந்தை மாதர்கள்
கசனையை விடுவது மெந்த நாளது பகர்வாயே!
சிலைதரு குறவர்ம டந்தை நாயகி
தினைவன மதனிலு கந்த நாயகி
திரள்தன மதனில ணைந்த நாயக சிவலோகா!
கொலைபுரி யசுரர்கு லங்கள் மாளவெ
அயிலயி லதனையு கந்த நாயக
குருபர பழநியி லென்று மேவிய பெருமாளே!

(ப - ரை) சிலை தரு குறவர் மடந்தை நாயகி - மலையில் வளரும் வேடுவர்களுடைய மகளாக வளர்ந்த பெண்மணியும், தினை வனம் அதனில் உகந்த நாயகி - தினைப்புனத்தில் வசித்துச் சந்தோஷித்த நினது தலைவியுமான வள்ளிநாயகியின், திரள் தனம் அதனில் அணைந்த நாயக-பருத்து வளர்ந்த தனபாரங்களை அணைந்து கொள்ளும் தலைவனே !, சிவ லோகா - சிவலோகத்தில் இறைவனாய் எழுந்தருளியிருப்பவனே !, கொலை புரி அசுரர் குலங்கள் மாள (எ - அசை) - கொலைகளைப் புரிந்துவந்த அசுரர்களது குலங்கள் அழியுமாறு, அயில் அயில் அதனை உகந்த நாயக - கூர்மை பொருந்திய வேலாயுதத்தை உயர்த்திப் பிரயோகித்த வீரசிகாமணியே, குருபர - பரமகுருவே !, பழநியில் என்றும் மேவிய பெருமாளே - பழநி என்னும் திருத்தலத்தில் நிலைமையாய் எழுந்தருளியிருக்கும் பெரி

யோனே!, இலகிய களப சுகந்த வாடையின் ம்ருகமதம் அதனை - ஒளிவீசும் கலவைச்சாந்தையும் நல்ல வாசனை வீசும் கஸ்தூரியையும், மகிழ்ந்து பூசி (ஏ - அசை) - சந்தோஷமாகப் பூசிக்கொண்டு, இலை சுருள் பிளவை அருந்தி (ஏ - அசை) - வெற்றிலைச்சுருளையும் பாக்கையும் தின்று, அதை இதமாக கலவியில் அவரவர் தங்கள் வாய்தனில் இடுபவர் - அத் தாம்பூல எச்சிலைத் தம்மைச் சேரும் ஆடவர்கள் இன்பமடையும்படி கலவிசெய்யுங் காலத்தில் அந்தந்தச் சமயங்களில், புணரும் ஆடவர்களின் வாயினில் இடுபவர்களும், பல பல சிந்தை மாதர்கள் - பலவிதமான எண்ணங்களை யுடையவர்களுமான விலைமாதர்களது, கசனையை - குற்றம் பொருந்திய நட்பை, விடுவது (உம் - அசை) - விட்டு விடுவது, எந்த நாள் அது பகர்வாயே - எக்காலமென்று கூறியருளவேண்டும்.

(வி - ரை) சிவலோகா என்ற பதம் சிவமும் சுப்ரமண்யமும் வேறு வேறன்று என்பதை உணர்த்துகிறது. முருகப்பெருமான், பிரணவத்தின் பொருளையறியாமல் தாமே பரம்பொருள் என்று அகங்காரமடைந்த பிரமதேவரைச் சிறையிலடைத்து, தாம் சிருஷ்டிகர்த்தாவாக விருந்து சிருஷ்டித்து வந்ததைச் சிவபெருமான் உமாதேவியாரிடம் சொல்ல, உமாதேவியார் மிகுந்த ஆச்சரியமுற்றுச் சிவபெருமானைநோக்கி, “மகாப்பிரபு! ஷண்முகனுடைய உருவம் எப்படிப்பட்டது? அவன் பராக்கிரமம் எப்படிப்பட்டது? அவன் யார்? அவன் மகிமை என்ன? இவைகளையெல்லாம் அடியேனுக்கு உரைத்தருளவேண்டும்” என்று கேட்டுப் பிரார்த்தித்தார். அப்போது சிவபெருமான் முருகக்கடவுளது பெருமையைப் பலவாறு புகழ்ந்து, இறுதியில், “முருகன் ஞானசொரூபனும், சச்சிதானந்த சொரூபனும் களங்கமற்றவனுமாய் இருக்கிறான். இரண்டு நூல்களில் ஒரு நூல் கோக்கப்படுவதுபோல அவனிடத்திலும் என்னிடத்திலும் விளங்கும் ஆன்மா ஒன்றே” என்றுகூறி தாம்வேறு முருகப்பெருமான் வேறன்று என்று தெரிவித்தளிருனார். அது காரணத்தினால்தான் சுவாமிகள் முருகப்பெருமானைச் சிவலோகா என்று விளித்திருக்கிறார். மற்றும் இவ்வுரையின் 79-ம் பக்கத்தில் “ஆனதபிருதிவி” என்று தொடங்கும் பாடலில் பரம்பொருளாகிய சிவபெருமானுக்குரிய குணங்கள் முருகப்பெருமானிடத்திலும் காணப்படுவதை “பராதிரியாதீதம், அகளம், எப்போதும் உதயம், அனந்தம், ஓகம், அனிசம் முற்று ஆயது, உலைவில் சற்சோதி, மாறுத சுகவெளத்தாணு” என்னும் மொழிகளினால் உணர்த்தியிருப்பதையும் காண்க. (எ0)

தனதனன தான தந்த—தனதான.

உலகபசு பாச தொந்த மதுவான
உறவுகிளை தாயர் தந்தை மனைபாலர்
மலசலசு வாச சஞ்ச லமதாலென்
மதிநிலைகெ டாம லுன்ற னருள்தாராய்!

சலமறுகு பூளை தும்பை யணிசேயே!
சரவணப வாமு குந்தன் மருகோனே!
பலகலைசி வாக மங்கள் பயில்வோனே!
பழநிமலை வாழவந்த பெருமாளே!

(ப - ரை) சலம் அறுகு பூளை தும்பை அணி - கங்கையையும் அறுகம் புல்லையும் பூளைச்செடியின் மலரையும் தும்பையையும் அணிந்து கொள்ளும் சிவபெருமானுடைய, சேயே - செல்வப் புதல்வனே!, சரவண பவா - சரவணப் பொய்கையில் உதித்தவனே!, முகுந்தன் மருகோனே - மகாவிஷ்ணுவின் மருகனே!, பல கலை சிவ ஆகமங்கள் - பல சாஸ்திரங்களும் சைவசமயத்துக் குரிய ஆகமங்களும், பயில்வோனே - உண்மைப் பொருளென்று கூறும் தலைவனே!, பழநி மலை வாழ வந்த பெருமாளே - பழநி மலையில் அமர்ந்திருப்பதற்காக வந்தருளிய பெரியோனே!, உலக பசு பாச தொந்தம் அது ஆன - பூலோகத்தில் வந்து பிறக்கும் ஆன்மாக்களைத் தொடர்ந்து வரும் பாசத்தின் சொரூபங்களான, உறவு கிளை தாயர் தந்தை மனை பாலர் - உறவினர் வமிசத்தவர் தாய் தந்தையர்கள் மனைவி மக்கள் (இவர்களாலும்), மல சல சுவாச(ம்) - ஜடதேகத்துக்குரிய மலஜல சுவாசங்கள் (இவைகளினாலும் உண்டாகும்), சஞ்சலமதால் - சஞ்சலத்தினால், என் மதி நிலை கெடாமல் - அடியேனது அறிவானது நிலை குலையாமல் இருக்கும் வண்ணம், உன்றன் அருள் தாராய் - உனது அருளைத் தரவேண்டும்!

(வி - ரை) பசுவானது - ஆன்மாவானது-பதியாகிய பரம்பொருளை அடைய வொட்டாமல் தடுத்துக்கொண்டு வரும் பாசம் என்னும் தளையானது ஆன்மாவைப் பிறவிகள்தோறும் தொடர்ந்து வருகிறது. அந்தத் தளையானது உறவினர் தாய் தந்தையர் மனைவி மக்கள் இவர்களாலும் மலஜல வுபாதிகளினாலும் சுவாச கதியினாலும் மனத்தில் சஞ்சலத்தை யுண்டுபண்ணி உண்மையறிவை யழித்து, ஒருமை மனதாகியே அல்லலற இறைவனருளில் சென்று அமர்ந்திருக்க மார்க்கமில்லாமல் செய்கிறது. அவ்விதச் சஞ்சலத்தை அகற்றி மீண்டும் உண்மையறிவை யூட்ட வல்லது ஞானதேசிகராகிய முருகப்பெருமானது அருளே யாகுமாதலால், சுவாமிகள் அப்பெருமானது அருளை நாடுகிறார். அணி - அணிபவர். சரவணபவன் - சரவணப் பொய்கையில் அவதரித்தவன். சரவணம் - தாமரை, நாணல். இமய மலைக்கருகில் கங்காநதி பாயும் ஓர் பொய்கையில் இறைவனருளினால் அக்கினி தேவன் வாயுதேவன் இருவர்களாலும் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்ட ஆறு தீப்பொறிகளும் ஆறு திருமுகங்களையுடைய குழந்தையாக மாறின. இறைவனேயாகும் அக்குழந்தையான முருகப்பெருமானுக்கு அது காரணம்பற்றிச் சரவணபவன் என்னும் திருநாமம் உண்டாயிற்று. அச் சரவணப் பொய்கையைச் சுற்றி நாணல் விசேஷமாக வளர்ந்திருந்ததனால், நமது சுவாமிகள், "ஞால மேத்தி வழிபடு மாறு பேர்க்கு மகவென **நாணல் பூத்த படுகையில் - வருவோனே**" என்று

திருவாய்மலர்ந் தருளியிருப்பதையும், அப்பொய்கையில் தாமரை ஏராளமாக மலர்ந்திருந்த காரணத்தினால், கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்,

“ கங்கையு மொல்கப் புக்க கடுங்கனற் கடவுட் சோதி
யங்கிரு மூன்று முன்ன ரம்மைவா ழிமயச் சாரற்
றங்கிய கமலம் பூத்த சரவணம் புகலு முக்கட்
புங்கவ னருளாற் றொன்மை போன்றது வறத்த லின்றி ”

என்று திருவாய்மலர்ந் தருளியிருப்பதையும் காண்க. ஆகமம் - ஆன்மாக்களுடைய மலத்தை நசிப்பித்து, ஞானம் உதயமாகும்படி செய்து, அவைகள் முத்தியடையும்படி செய்வதற்காக இறைவனால் உபதேசிக்கப்பட்ட நூல் (எக)

தனன தனன தனத்த தனன தனன தனத்த
தனன தனன தனத்த—தனதான.

முதிர வுழையை வனத்தில் முடுகி வடுவை யழித்து
முதிய கயல்கள் கயத்தி னிடையோடி
முரண வளரும் விழிக்குள் மதன விரகு பயிற்றி
முறைமை கெடவு மயக்கி வருமாதர்
மதுர அமுத மொழிக்கு மகுட களப முலைக்கு
வலிய அடிமை புகுத்தி விடுமாய
மனதை யுடைய அசட்டு மனிதன் முழுது புரட்டன்
மகிழு வுனது பதத்தை யருள்வாயே!
சதுரன் வரையை யெடுத்த நிருத னுடலை வதைத்து
சகடு மருத முதைத்த தகவோடே
தழையு மரமு நிலத்தில் மடிய அமரை விளைத்த
தனுவை யுடைய சமர்த்தன் மருகோனே!
அதிர முடுகி யெதிர்த்த அசுர ருடலை வதைத்து
அமரர் சிறையை விடுத்து வருவோனே!
அரிய புகழை யமைத்த பெரிய பழநி மலைக்கு
ளழகு மயிலை நடத்து பெருமாளே!

(ப - ரை) சதுரன் - சாமர்த்திய சாலியும், வரையை எடுத்த நிருதன் உடலை வதைத்து - திருக்கைலாய மலையைத் தூக்கமுயன்ற இராவணனது தேகத்தை அழித்து, சகடு மருதம் உதைத்த தகவோடே - சகடாசுரனையும் புயற்

காற்றின் வடிவத்துடன் வந்த அசுரனையும் உதைத்துக்கொன்று கருணை நோக்கத்துடனேயே, தழையும் மாழும் நிலத்தில் மடிய அமரை விளைத்த - தழைகளுடன் (ஏழு) மாராமரங்களையும் தரையின்மீது அற்று விழும்படிச்செய்து வாலியினுடன் போர் உண்டாகும்படிச் செய்த, தனுவை உடைய சமர்த்தன் மருகோனே - கோதண்டம் என்னும் வில்லையுடைய வீரனுமான ஸ்ரீராமபிரானது சகோதரியின் புத்திரனே !, அதிர முடுகி எதிர்த்த அசுரர் உடலை வதைத்து - உலகங்கள் அதிர்ச்சியடையும்படி வலிமையுடன் நின்னை எதிர்த்துப் போர்செய்த அசுரர்களுடைய தேகத்தை யழித்து, அமரர் சிறையை விடுத்து வருவோனே - தேவர்களைச் சிறையினின்றும் விடுவித்து (வெற்றியுடன்) மீண்டவனே!, அரிய புகழை அமைத்த பெரிய பழநி மலைக்குள் - சொல்வதற்கரிய பெருங்கீர்த்தி உனக்கு உண்டாகும்படிச்செய்த சிறந்த பழநிமலையில், அழகு மயிலை நடத்து பெருமாளே- அழகிய மயிலின்மீது ஏறி அதை அழகாக நடக்கச்செய்யும் பெரியோனே !, முதிர் (அ) உழையை வனத்தில் முடு(க்)கி - பருவத்தையடைந்த மான்களையும் காட்டுக்குத் துரத்திவிட்டு, வடுவை அழித்து - மாமரத்தின் இளங்காயானது அடியோடு அழியும்படிச்செய்து, முதிய கயல்கள் கயத்தினிடை ஓடி முரண - பருவமடைந்த கயல்மீன்கள் தடாகத்துக்குள் ஓடி ஒளித்துப் பகைமை பாராட்டும்படிச் செய்து,வளரும் விழிக்குள் - அமைந்துள்ள விழியினால், மதன விரகு பயிற்றி - மன்மதபாணங்களினால் உண்டாகும் விரகதாபத்தை யெழுப்பி, முறைமை கெடவும் மயக்கி வரும் மாதர் - முறைதவறி நடக்குமாறும் (ஆடவர்களை) மதிமயங்கச் செய்துவரும் விலைமாதர்களுடைய, மதுர அமுத மொழிக்கு - இனிமையான அமுதத்தையொத்த சொற்களுக்கும், மகுட களப முலைக்கு-சிகரத்தையொத்தவைகளாய்க் கலவைச்சாந்து பூசப்பெற்றுள்ள தனபாரங்களுக்கும், வலிய அடிமை புகுத்திவிடும்-பலாத்காரமாக அடிமையாக்கிவிடும், மாய மனதை உடைய அசட்டு மனிதன் - மாயையினால் நிரம்பப் பெற்றுள்ள மனத்தையுடைய கீழான மனிதனும், முழுது புரட்டன் - முற்றிலும் பொய்யிலேயே உழல்பவனுமான அடியேன், மகிழ - மனமகிழ்ச்சி யடையுமாறு, உனது பதத்தை அருள்வாயே - உனது பாதாரவிந்தங்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) 'மருதம் உதைத்த' என்று வருவதனால், மருதம் என்பதற்குக் காற்று என்று பொருள் கூறவேண்டுமே யல்லாமல் மருதமரம் என்று பொருள் கூறுதல் பொருந்தாது. ஏனெனில், கிருஷ்ண பரமாத்மாவானவர் சாபத்தினால் மருதமரங்களாக நின்ற குபேர புத்திரர்களுக்கு அருள்புரிந்தாரே யல்லாமல், அவர்களை உதைத்து அழிக்கவில்லை. இவ்விஷயம் விளக்கப்பட்டிருப்பதை இவ்வுரையின் 271-ம் பக்கத்தில் காண்க. அவர் புயற்காற்றின் உருவத்துடன் வந்த அசுரனை

அழித்த வரலாற்றை இவ்வுரையின் 110-ம் பக்கத்தில் காண்க. 'அரிய புகழை யமைத்தபெரிய பழநிமலை' என்றதற்குக் காரண மென்னவெனில், 'அதிசய மநேக முற்ற பழநிமலை மீதுதித்த அழக' என்றவிடத்துக் குறிப்பிட்டபடி, முருகப்பெருமான் அத்தலத்தில் பல அதிசயச்செயல்களினால் தமது கருணையைக்காட்டிக் கருணைவள்ளல் என்னும் புகழ்பெற்றதே யாகும். மாதர் கண்களுக்கு மானின் கண்களையும் மாமரத்தின் இளங்காயையும் கயல் மீன்களையும் உவமை கூறுதல் வழக்கம். மாதர் கண்களின் வனப்பைக்கண்டு மான்கள் காட்டுக்கு ஓடின, வடுவானது வெட்கமுற்று அழிந்தது, கயல் மீன்கள் வெட்கித் தடாகத்துக்குள் மறைந்து பகைமை பாராட்டி நின்றன. ஓடிய மான்களும் கயல் மீன்களும் தங்கள் சக்தியை யறியாத இளம்பருவ முடையவைகளல்ல, தகுந்த பருவத்தை யடைந்தவைகளே யென்று கூறப்பட்டது. இராவணன் திருக்கைலாயத்தைத் தூக்க முயன்ற வரலாற்றை இவ்வுரையின் 92-ம் பக்கத்தில் காண்க.

**ஸ்ரீ ராமபிரான் ஏழு மராமரங்களை ஒரே அம்பினால் துளைத்த வரலாறு:-** கபந்தன் என்னும் இராக்கத வடிவத்தைச் சாபத்தினால் பெற்று, இராம லக்ஷ்மணர்களை எதிர்த்து அவர்களால் தன் கைகள் வெட்டப்பெற்று அந்த க்ஷணத்திலேயே சாபம் நீங்கப்பெற்றுத் தனது பழைய வடிவத்தை யடைந்த தனு என்னும் கந்தர்வன் சுக்கிரீவனது நட்பைப்பெற்றால் சீதாதேவியை மீட்பது எளிதென்று இராமலக்ஷ்மணர்களிடம் கூறிச்சென்றான். அவர்களை அன்புடன் பூஜித்த சபரியும் அதுவே தகுந்த வழியென்று கூறினாள். ஆகையினால் அவர்கள் சுக்கிரீவனது இருப்பிடமான ரிசியமூக பருவதத்துக்குச் செல்ல, அவர்கள் வரவைக் கண்ட சுக்கிரீவன் அவர்கள் வாலியினால் ஏவப்பட்டுத் தன்னைக்கொல்ல வந்தவர்கள் என்று நினைத்து அஞ்சி ஓடி யொளிந்தான். அப்போது அவனுடைய பிரதான மந்திரியான அநுமான் அவனைத் தேற்றிச் சென்று, இராமலக்ஷ்மணர்களைச் சந்தித்து அவர்கள் வரலாற்றைத் தெரிந்துகொண்டு, பிறகு சுக்கிரீவனை அழைத்து வந்து அவர்களுடன் சிநேகம் செய்வித்தான். தன் தமையனான வாலி தன் அரசுரிமையையும் மனைவியையும் பறித்துக்கொண்டு தன்னைத்துரத்திவிட்ட வரலாற்றைக் கூறிச் சுக்கிரீவன் தனக்கு வாலியைத் தொலைக்க அவர்கள் உதவி புரிந்தால், தான் சீதாதேவியை மீட்கச் சேனைகளுடன் வந்து உதவி புரிவதாகக் கூறினான். பிறகு சுக்கிரீவன் வாலியைக்கொல்லும் வல்லமை ஸ்ரீ ராமருக்கு உண்டோ என்பதைப்பற்றிச் சந்தேகித்து, அவரது வில் திறமையைப் பரீக்ஷிக்கக் கருதிச் சர்ப்பகோணமாக மாறி மாறி நின்ற ஏழு மராமரங்களையும் ஓர் அம்பினாலே துளைக்கும்படி ஸ்ரீ ராமரைக் கேட்டுக்கொண்டான். ஸ்ரீ ராமரும் அவனுக்குத் தமது வல்லமையில் நம்பிக்கை யுண்டாகும்படி அவ் வேழு மரங்களையும் ஓர் அம்பினால் துளைத்தார். (எ௨)

## 2. திருவாவினன்குடி—பழநி 

*தந்தன தந்தன தான தந்தன*
*தந்தன தந்தன தான தந்தன*
*தந்தன தந்தன தான தந்தன—தனதான.*

வஞ்சனை மிஞ்சிய மாய வம்பிகள்
வந்தவர் தங்களை வாதை கண்டவர்
வங்கண முந்தெரி யாம லன்புகள் பலபேசி
மஞ்சமி ருந்தநு ராக விந்தைகள்
தந்தக டம்பிக ளேற லுண்டிடு
மண்டைகள் கண்டித மாய்மொ ழிந்திடு முறையாலே
சஞ்சல முந்தரு மோக லண்டிகள்
இன்சொல்பு ரிந்துரு காத தொண்டிகள்
சங்கம மென்பதை யேபு ரிந்தவ ணயராதே
தங்களில் நெஞ்சக மேம கிழ்ந்தவர்
கொஞ்சிந டம்பயில் வேசை முண்டைகள்
தந்தசு கந்தனை யேபு கந்துடல் மெலிவேனோ?
கஞ்சன்வி டுஞ்சக டாசு ரன்பட
வென்றுகு ருந்தினி லேறி மங்கையர்
கண்கள்சி வந்திட வேக லந்தரு முறையாலே
கண்டும கிழ்ந்தழ காயி ருந்திசை
கொண்டுவி ளங்கிய நாளி லன்பொடு
கண்குளி ருந்திரு மால்ம கிழ்ந்தருள் மருகோனே!
குஞ்சர வஞ்சியு மான்ம டந்தையு
மின்பமி குந்திட வேய ணைந்தருள்
குன்றென வந்தருள் நீப முந்திய மணியார்பா!
கொந்தவி ழுந்தட மேநி ரம்பிய
பண்புத ருந்திரு வாவி னன்குடி
குன்றுக ளெங்கினு மேவ ளர்ந்தருள் பெருமாளே!

(ப-ரை) கஞ்சன் விடும் சகடாசுரன் பட வென்று - கம்ஸனால் ஏவப்பட்டு வந்த சகடாசுரன் அழியும்படி அவனை வென்றும், குருந்தினில் ஏறி மங்கையர் கண்கள் சிவந்திட (ஏ - அசை) கல(ா)ம் தரு முறையாலே - குருந்தமரத்தி

லேறி யமர்ந்து கோபிகா ஸ்திரீகளுடைய கண்கள் சிவக்குமாறு அவர்கள் மனத்தில் கலக்கத்தை உண்டுபண்ணி லீலை செய்து, கண்டு மகிழ்ந்து - அவர்கள் துயரத்தைக் கண்டு மகிழ்ச்சியுற்று, அழகாய் இருந்து - அம் மங்கையர்கள் மனத்தைக் கவரும் அழகு வாய்ந்த வடிவத்துடன் இருந்து, இசை கொண்டு விளங்கி அ(ந்) நாளில் அன்பொடு கண் குளிரும் - இன்னிசை பொருந்திய புல்லாங்குழலை வாசித்து மிகுந்த மகிமை பொருந்தியவனாய் இருந்து அவ் விளம் பருவத்தில் (ஆயர்பாடியிலுள்ளோர் தம்மிடத்துக் காட்டிய நிகரற்ற அன்பை)க் கண்டு அன்பு பாராட்டிக் கண்குளிர்ந்த, திருமால் - கிருஷ்ணமூர்த்தியாக அவதரித்த மகா விஷ்ணுவானவர், மகிழ்ந்தருள் மருகோனே - கண்டு மகிழ்ச்சியடையும் மருகனே!, குஞ்சர வஞ்சியும் மான் மடந்தையும் - ஐராவத யானை வளர்த்த பெண்ணான தெய்வயானை யம்மையாரும் மான் வயிற்றிற் பிறந்த வள்ளிநாயகியாரும், இன்பம் மிகுந்திட (ஏ - அசை) அணைந்து அருள் குன்று என - மிகுந்த இன்பமடையுமாறு அவர்களை அணைந்தருளும் மலையை யொத்த திருமேனியை உடையவனாய், வந்து அருள் - வந்தருளி, நீபம் உந்திய மணி மார்பா - கடம்ப மாலை உயர்ந்து தோன்றுமாறு அதை அணிந்துள்ள அழகிய மார்பை யுடையவனே, கொந்து அவிழும் தடமே நிரம்பிய பண்பு தரும்-பூங்கொத்துக்கள் மலரப்பெற்ற தடாகங்களே எங்கும் நிரம்பப் பெற்றுள்ள தன்மை வாய்ந்துள்ள, திரு ஆவினன்குடி குன்றுகள் எங்கினும் (ஏ - அசை) வளர்ந்தருள் பெருமாளே - ஆவினன்குடி என்னும் திருத்தலத்திலுள்ள குன்றுகளிலெல்லாம் கருணை மிகுந்து அமர்ந்திருக்கும் பெரியோனே!, வஞ்சனை மிஞ்சிய மாய வம்பிகள் - மிகுந்த வஞ்சனையுடையவர்களாய் (ஆடவர்களை) மயக்கித் தீய செயல்களைச் செய்பவர்களும், வந்தவர் தங்களை வாதை கண்டவர் - (தங்கள் மாயச் செயல்களினால் மயங்கி) வந்தவர்களைத் துன்புறுத்துபவர்களும், வங்கணம் (உம் - அசை) தெரியாமல் அன்புகள் பல பேசி - உண்மையான அன்பு என்பது இன்னதென்று அறியாமலே அன்பு பொருந்திய வார்த்தைகள் பலவற்றைச் சொல்லி, மஞ்சம் இருந்து அநுராக விந்தைகள் தந்த கடம்பிகள் - கட்டிலில் அமர்ந்து சிற்றின்ப விருப்பத்தினால் அற்புத லீலைகளைச் செய்யும் ஈனஜாதிப் பெண்களும், ஊறல் உண்டிடு மண்டைகள் - (கலவியில்) எச்சிலை உண்ணும் வேசிகளும், கண்டிதமாய் மொழிந்திடும் உரையாலே - தாக்ஷிணியமில்லாமல் கண்டிப்பாய்ப் பேசும் வார்த்தைகளினால், சஞ்சலம் (உம் - அசை) தரு - (தங்கள் அன்பை நாடிவரும் ஆடவர் மனத்தினில்) கலக்கத்தை உண்டுபண்ணுபவர்களும், மோக லண்டிகள் - (ஆடவர்கள் மனத்தினில்) மயக்கத்தை உண்டுபண்ணும் முரட்டுத்தனமுடையவர்களும், இன்சொல் புரிந்து உருகாத தொண்டிகள் - இனிமையான சொற்களை மொழிந்தும் அவைகளினால் மனமுருகாத வேசிகளும், சங்கமம் என்பதையே புரிந்து - எப்போதும் கலவியையே செய்தும், அவண் அயராதே - அதனால் அயர்வு அடையாமல், தங்களில் நெஞ்சு அகம் (ஏ - அசை) மகிழ்ந்தவர் - தங்கள் கூட்டத்துக்குள் (ஒரு

வரோடொருவர் பேசி) மனமகிழ்ச்சி அடைபவர்களும், கொஞ்சி நடம் பயில் வேசை முண்டைகள் - கொஞ்சிப் பேசிப் பாசாங்கு செய்யும் விலைமாதர்களான முண்டைகள், தந்த சுகம் தனையே உகந்து - தரும் சிற்றின்பத்தையே (பெரிதாக மதித்து) விரும்பி, உடல் மெலிவேனோ - அடியேன் தேகம் மெலிவடையப் பெறுதல் தகுதியோ?

(வி - ரை) ஸ்ரீ கிருஷ்ணபகவான் சகடாசுரனை வதைத்த வரலாற்றை இவ் வுரையின் 110-ம் பக்கத்தில் காண்க.

**ஸ்ரீ கிருஷ்ண பகவான் கோபிகா ஸ்திரீகளின் ஆடைகளைக் கவர்ந்த வரலாறு:—** ஆயர்பாடியில் ஆயர்கள் யாவரும் தங்கள் வமிசங்களும் பசுக்களும் பெருகும் பொருட்டுத் தமது குலதருமப்படி தங்கள் வீடுகளிலுள்ள கன்னிகைகளைக் கௌரி தேவியைக் குறித்து விரதம் அனுஷ்டிக்கும்படி கட்டளையிட்டார்கள். கிருஷ்ணனையே மணாளனாக வரிக்கவேண்டு மென்று வெகுகாலமாக நிச்சயித்திருந்த அக் கன்னியர்கள் தக்க சமயம் வாய்த்ததென்று மகிழ்ந்து காளிந்தி நதிக்கரைக்குச் சென்று, தீர்த்தமாடி ஸ்ரீ பகவதி தேவியைப் பக்தியுடன் பூஜித்து, ஸ்ரீ கிருஷ்ண பகவானை தங்களுக்கு நாயகனாகக் கிடைக்கவேண்டு மென்று பிரார்த்தித்தார்கள். அவர்கள் முறைப்படி ஒரு மாத காலம் அவ்விரதத்தை அனுஷ்டித்தார்கள். கடைசி நாளில் அவர்கள் அந்த நதியில் ஏகாந்தமான ஒரு இடத்தில் தங்கள் வஸ்திரங்களைக் களைந்து வைத்துவிட்டு நதியிலிறங்கி விளையாடிக்கொண் டிருந்தார்கள். அச்சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அங்குச் சென்று அவர்களுடைய வஸ்திரங்களை யெல்லாம் கைப்பற்றிக்கொண்டு, நதியின் கரையில் செழித்து வளர்ந்திருந்த ஒரு குருந்தமரத்தின்மீது ஏறி அமர்ந்து அந்தக் கன்னியர்களைப் பலவிதமாகப் பரிகாசஞ் செய்தார். அக்கன்னியர்கள் தங்கள் ஆடைகளைத் தரும்படி மன்றாடிக் கேட்டும் பகவான் அவைகளைக் கொடுக்காமல், அவர்களை நீரைவிட்டு வெளியேறி அஞ்சலி செய்துகொண்டு வந்தால்தான் அவர்களுடைய ஆடைகளைத் தரமுடியு மென்று கூறிவிட்டார். வேறு வழி காணாத அக்கன்னியர்கள் இலச்சையை விட்டு, அகங்காரத்தை யொழித்து களங்கமற்ற மனத்துடன் இரு கைகளையும் கூப்பிக்கொண்டு பகவானிடம் சென்று தங்கள் ஆடைகளை மீண்டும் பெற்றுக்கொண்டார்கள். அப்போது பகவான் அவர்களை நோக்கி, "நீங்கள் என்னைப் பர்த்தாவாக அடைய வேண்டு மென்று மகாதேவியைப் பிரார்த்தித்ததனால், உங்கள் வேண்டுகோள் பூர்த்தியாகும். நீங்கள் இப்போது களங்கமற்ற மனத்துடன் என்னைச் சரணமடைந்ததனால், இறுதியில் நீங்கள் முக்தி அடைவீர்கள்" என்று கூறி, அவர்களுக்கு விடைகொடுத்தனுப்பினார். (எரு)

தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத்
தனத்ததனத் தனத்ததனத்—தனதான.

கனத்திறுகிப் பெருத்திளகிப்
பணைத்துமணத் திதத்துமுகக்
கறுப்புமிகுத் தடர்த்துநிகர்த் தலமேராய்

கவட்டையுமெத் தடக்கிமதர்த்
தறக்கெருவித் திதத்திடுநற்
கலைச்சவுளித் தலைக்குலவிக் களிகூருந்

தனத்தியர்கட் கிதத்துமிகுத்
தனற்குண்மெழுக் கெனப்புவியிற்
றவித்திழிசொற் பவக்கடலுற் றயர்வாலே

சலித்தவெறித் துடக்குமனத்
திடக்கனெனச் சிரிக்கமயற்
சலத்தின்வசைக் கிணக்குமுறக் கடவேனோ?

புனத்தின்மலைக் குறத்தியுயர்த்
திருக்குதனக் குடத்தினறைப்
புயத்தவநற் கருத்தையுடைக் குகவீரா!

பொருப்பரசற் கிரக்கமொடுற்
றறற்சடிலத் தவச்சிவனிற்
புலச்சிதனக் கிதத்தைமிகுத் திடுநாதா!

சினத்தெதிர்துட் டரக்கர்தமைத்
திகைத்துவிழக் கணைப்பொழுதிற்
சிதைத்திடுநற் கதிர்க்கைபடைத் துடையோனே!

செருக்கொடுநற் றவக்கமலத்
தயற்குமரிக் கருட்புரிசைத்
திருப்பழநிக் கிரிச்குமரப் பெருமாளே!

(ப - ரை) புனத்தின் மலை குறத்தி - தினைப்புனத்தில் காவலாயிருந்த மலைக் குறவர் மகளான வள்ளிநாயகியாருடைய, உயர் திருக்கு தன குடத்தின் - உயர்ந்து நிமிர்ந்து குடத்தை யொத்துள்ள தனபாரங்களின், நறை புயத்தவ-வாசனையானது

பூசப்பெற்ற புயங்களையுடையவனே !, நல்! கருத்தை உடை(ய) குக - கருணை நோக்கமுடையவனும் மெய்யடியார் இதயத்தில் அமர்ந்திருப்பவனே !, வீரா - வீரனே !, பொருப்பு அரசற்கு இரக்கமொடு உற்ற - மலையரசனாகிய இமவான் மீது கருணை யுற்று அவனது மகளாய்த் தோன்றியவரும், அறல் சடில தவ சிவன் இல் - கங்கையைத் தரித்த சடாமுடியை யுடைய தவசியான சிவபெருமானுக் குத் தேவியாகவுள்ளவரும், புலச்சி தனக்கு - ஞானமயமானவருமான உமாதேவியா ருக்கு, இதத்தை மிகுத்திடு(ம்) நாதா - மனமகிழ்ச்சியை மிகுதியாகத் தரும் நாதனே !, சினத்து எதிர் துட்ட அரக்கர் தமை - கோபத்துடன் நின்னை எதிர்த்த துஷ்டகுணமுள்ள அசுரர்களை, திகைத்து விழ - அவர்கள் தியங்கி மடிந்து விழும் வண்ணம், கண பொழுதில் சிதைத்திடு(ம்) - கண நேரத்துக்குள் அழித்த, நல் கதிர் கை படைத்து உடையோனே - மிகுந்த ஒளிவீசும் வேலாயுதத்தைக் கையில் தரித்துள்ளவனே !, செருக்கொடு நல் தவ கமலத்து அயற்கும் அரிக்கு(ம்) அருள் - சர்வமுற்றவரும் நல்ல தவம் புரிந்தவரும் திருமாலின் திருநாபிக்கமலத் தில் உறைபவருமான பிரமதேவருக்கும் இந்திரனுக்கும் அருள் புரிந்த(வனே!), புரிசை திரு பழநி கிரி குமர பெருமாளே - மதில் சூழ்ந்த பழநி மலையின் மீது குமார சுவாமியாய் எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, கனத்து இறுகி பெருத்து இளகி பணைத்து மணத்து - பாரமானவைகளாயும் இறுகிப் பருத்து மிருதுவானவைகளாயும் உயரமானவைகளாயும் வாசனை வீசுபவைகளாயும், இதத்து முகம் கறுப்பு மிகுத்து - இன்பத்தைக் கொடுக்கும் முகங்கள் மிகவும் கறுப்பாய் இருக்கப் பெற்றவைகளாயும், அடர்த்து நிகர் தலம் மேரு ஆய் - தம்முடன் போர்புரிந்து தமக்குச் சமானமாக விருக்கத்தக்க இடம் மேரு மலையே யெனும் வண்ணம், கவட்டை (உம் - அசை) மெத்த அடக்கி - மற்ற மலைகளை வெகுவாய் அடக்கினவைகளாயும், மதர்த்து அற செருவித்து - இறு மாப்படைந்து மிகவும் கர்வமுற்றவைகளாயும், இதத்து இடு நல் கலை சவுளித் தலை - இன்பத்தைத் தரும் வண்ணம் உடுத்துள்ள அழகிய ஆடையின்கண், குலவி களி கூரும் தனத்தியர்கட்கு - அழகாகப் பொருந்தி மிக மகிழும் தன பாரங்களையுடைய பெண்களுக்கு, இதத்து மிகுத்து - இன்பத்தை மிகுதியாக அளிக்கக் கருதி, அனற்குள் மெழுக்கு என - நெருப்பினுள் இட்ட மெழுகைப் போல உருகி, புவியில் தவித்து - பூவுலகத்தில் ஆசையாம் தாபத்தினால் இளைத்து, இழி சொல் பவக்கடல் உற்று-நிந்திக்கப்படும் பாவச் செய்கைகள் நிறைந்த சமுத் திரத்தில் இறங்கி, அயர்வால் (ஏ - அசை) சலித்த வெறி துடக்கு மன திடக் கன் என - சோர்வுற்று வேறு விஷயங்களில் விருப்பம் குறைந்த காம வெறி பொருந்திய மனத்துடன் இந்திரிய சஞ்சலங்களில் ஈடுபட்டவன் என்று, சிரிக்க - பிறர் கூறி நகைக்கும் வண்ணம், மயல் சலத்தின் - பெண்காதலாகிய மயக்கத்தி னால் உண்டாகும் சஞ்சலத்தில் மூழ்கி, வசைக்கு இணக்கம் உற கடவேனோ - உலகத்தோரது நிந்தனைக்குத் தக்கவனாகுதல் தகுதியோ ?

(வி - ரை) 'நற் கருத்தையுடைக் குகவீரா' என்ற விடத்து முருகப் பெருமான் தமது அடியவர்களது சித்தத்தை முத்தி நெறியில் நிலைமையாக நிற்கச் செய்யவேண்டுமென்ற கருணை நோக்கத்துடன் அவர்களது இதயமாகிய குகையில் அமர்ந்திருக்கிறார் என்றும், அவ்வாறு அக்குகையில் அமரும் குகன் எதற்கும் பயந்து ஒளிந்துகொள்ளவில்லை யென்றும், ஜீவனால் அகற்றிக்கொள்ள வொண்ணாத மாயையை அகற்றி, மனத்தில் குடிகொண்டுள்ள அகங்காரத்தை வாகனமாக்கிக்கொண்டு அதைப் பரம்பொருளை யடையும் நெறியில் நடக்கச் செய்ய வல்ல சுத்தவீரன் என்றும் குறிப்பாக உணர்த்தப்பட்டிருக்கிறது.

புலம் - ஞானம். படைத்தல் - உடைத்தாயிருத்தல். (எச)

தனதன தத்தத் தனந்த னந்தன
தனதன தத்தத் தனந்த னந்தன
தனதன தத்தத் தனந்த னந்தன—தந்ததான.

கலவியி லிச்சித் திரங்கி நின்றிரு
கனதனம் விற்கச் சமைந்த மங்கையர்
கயல்கள் சிவப்பப் பரிந்து நண்பொடு மின்பமூறிக்

கனியித ழூற்றுற் றருந்தி யங்குறு
மவச மிகுத்துப் பொருந்தி யின்புறு
கலகம் விளைத்துக் கலந்து மண்டணை யங்கமீதே

குலவிய நற்கைத் தலங்கொ டங்கணை
கொடியிடை மெத்தத் துவண்டு தண்புயல்
குழலள கக்கட் டவிழ்ந்து பண்டையி லங்கம்வேறாய்க்

குறிதரு வட்டத் தடர்ந்த சிந்துர
முகதல முத்துப் பொலிந்தி லங்கிட
கொடிய மயற்செய்ப் பெருந்த டந்தனில் மங்கலாமோ?

இலகிய சித்ரப் புனந்த னிந்துறை
குறமகள் கச்சுக் கிடந்த கொங்கைமி
னினிதுறு பத்மப் பதம்ப ணிந்தருள் கந்தவேளே!

எழுகடல் வற்றப் பெருங்கொ டுங்கிரி
யிடிபட மிக்கப் ப்ரசண்டம் விண்டுறு
மிகலர்ப தைக்கத் தடிந்தி லங்கிய செங்கைவேலா!

பலவித நற்கற் படர்ந்த சுந்தரி
பயில்தரு வெற்புத் தருஞ்செ ழுங்கொடி
பணைமுலை மெத்தப் பொதிந்து பண்புறு கின்றபாலைப்
பலதிசை மெச்சத் தெரிந்த செந்தமிழ்
பகரென இச்சித் துகந்து கொண்டருள்
பழநியில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே!

(ப - ரை) இலகிய சித்ர புனம் தனிந்து உறை - (பசுமையான) ஒளி வீசி மிகவும் அழகாய் விளங்கிய தினைப் புனத்தில் தனிமையாக விருந்த, குறமகள் - வேடுவப்பெண்ணும், கச்சு கிடந்த கொங்கை மின் - கச்சு அணிந்த தனபாரங் களையுடையவளும் மின்னற் கொடியைப்போல் உள்ளவளுமான வள்ளிநாயகிக்கு, இனிது உறு பத்ம பதம் - கண்களுக்கு இன்பம் தருமாறு வாய்ந்துள்ள தாமரை மலரை யொத்த பாதங்களில், பணிந்து அருள் கந்த - பணிந்து - அத் தேவிக்கு அருள்புரிந்த கந்தனே!, வேளே - மன்மதனைக் காட்டிலும் பேரழகு வாய்ந்த வனே!, எழு கடல் வற்ற - எழு சமுத்திரங்களும் வறண்டு போகுமாறும், பெரும் கொடும் கிரி இடிபட - பருத்து வளர்ந்து யாவர்க்கும் கொடுமைகள் புரிந்துவந்த கிரௌஞ்ச மலையானது இடிபடுமாறும், உறும் இகலர் பதைக்க - எதிர்த்து நின்ற பகைவர்கள் மனம் பதைத்து வருந்துமாறும், தடிந்து மிக்க ப்ர சண்டம் விண்டு இலங்கிய செங்கை வேலா - அவைகளையும் அவர்களையும் அழித்து மிகுந்த வலிமையைக் காட்டி விளங்கிய வேலாயுதத்தைத் தாங்கிய சிவந்த கையை யுடையவனே!, பலவித நல் கற்பு அடர்ந்த சுந்தரி - பலவிதமான நல்ல தருமங்கள் பொருந்தியுள்ளவரும் மிகுந்த அழகு வாய்ந்தவரும், பயில் தரு வெற்பு தரும் செழும் கொடி - நெருக்கமாக வளர்ந்துள்ள இமயமலையின் அரசனது புதல்வியாக வந்தவரும் செழிப்பாக வளர்ந்த கொடியைப் போன்றவருமான உமாதேவியாரின், பணை முலை மெத்த பொதிந்து - உயர்ந்து வளர்ந்த தனபாரங்களில் நிறைந்து திணிந்திருந்த, பண்பு உறுகின்ற பாலை - மேன்மை பொருந்திய பாலை, பல திசை மெச்ச - பல திசைகளில் உள்ள வர்களும் புகழும் வண்ணம், தெரிந்த செந்தமிழ் பகர் என - சிவபெருமானுக்கு உகந்ததெனத் தெரிந்தெடுத்த திருத்தமான தமிழ் மொழியில் அவரது புகழை எடுத்துரைக்க வேண்டுமென்று, இச்சித்து - ஆசைகொண்டு, உகந்து கொண்டு அருள் - மனமகிழ்ச்சியுடன் பருகியருளிய திருஞான சம்பந்த சுவாமிகளாய்த் தோன்றிய(வனே!), பழநியில் வெற்பில் திகழ்ந்து நின்றருள் தம்பிரானே - பழநி என்னும் திருத்தலத்திலுள்ள மலையின்மீது எழுந்தருளி விளங்கும் நாய கனே!, கலவியில் இச்சித்து இரங்கி நின்று - புணர்ச்சியில் விருப்பமுற்று மனச் சோர்வடைந்து நின்று, இரு கன தனம் விற்க சமைந்த மங்கையர் - இரு தன பாரங்களையும் விற்பதற்காகவே பிறந்துள்ள விலைமாதர்களது, கயல்கள் சிவப்ப -

கயல்மீனை யொத்த கண்கள் சிவக்குமாறு, பரிந்து நண்பொடு (உம் - அசை) இன்பம் ஊறி - (அவர்களிடத்தில்) அன்பு பாராட்டிச் சிநேகம் பூண்டு (அத ஞல்) இன்பமுற்று, கனி இதழ் உற்று உற்று அருந்தி - கனியையொத்த அத ரங்களினின்றும் ஊறும் அமுதத்தை மீண்டும் மீண்டும் பருகி, அங்கு உறும் அவசம் மிகுத்து பொருந்தி - அதஞல் வசமழிந்து மயங்குவது அதிகரித்தும் அந்நிலைமையில் இஷ்டத்துடன் அமர்ந்து நின்று, இன்பு உறு கலகம் விளைத்து - சுகத்தைத் தரும் ஊடலாகிய லீலையைச் செய்து, கலந்து - கலவி செய்து, அணை மண்டு அங்கம் மீது (ஏ - அசை) - திண்டு முதலிய அணைகள் நெருங்கிப் பொருந்தியுள்ள கட்டிலின்மீது, குலவிய நல் கைத்தலம் கொடு அங்கு அணை - நேசத்தைக் காட்டும் அழகிய கைகளிஞல் அப்போது தழுவும், கொடி இடை - கொடியை யொத்த மெல்லிய இடையையுடைய பெண், மெத்த துவண்டு - மிக வும் வாடி, தண் புயல் குழல் அளக கட்டு அவிழ்ந்து - மழை பொழிய வரும் மேகத்தைப்போல் கறுத்துள்ள கூந்தலின் முடி அவிழப்பெற்று, பண்டையில் அங்கம் வேறுய் - தேகமானது முன்பிருந்ததுபோ லிராமல் மாறுதலடையப் பெற்று, குறி தரு வட்டத்து அடர்ந்த சிந்தூர முகதல(ம்) - இலக்ஷணம் பொருந் தியதாயும் சந்திர மண்டலத்தை யொத்ததாயும் சிவந்ததாயுமுள்ள முகத்தில், முத்து பொலிந்து இலங்கிட - முத்துக்களை யொத்த வியர்வைத் துளிகள் நெருக்கமாய் விளங்கும் வண்ணம், கொடிய மயல் செய் பெரும் தடம் தனில் - (பெண்காத லென்னும்) கோரமான மயக்கத்தைத் தரும் எல்லையில்லாத (விஷய சுக அனுபவம் என்னும்) நெறியில் நின்று, (அடியேன்), மங்கலாமோ - அழிந்து போதல் தகுதியோ?

(வி - ரை) பசு பாச தொந்தத்தின் உருவங்களான மனைவி மக்கள் தாய் தந்தை சுற்றத்தார் ஆகிய இவர்களை விட்டு அகன்று பற்றற்ற மனமுடைய வராய்த் தனித்திருப்பவர்க்கே பரமனருள் எளிதிற் கைகூடும் என்னும் உண் மையைப் 'புனந்தனிந்துறை' என்னும் மொழிகளிஞல் குறிப்பாக உணர்த்தப்பட் டிருக்கிறது. 'செங்கை வேலா' என்பதை 'வேல் செங்கையா' என்று மாற்றிக் கொள்ளவும். கற்பு - அறம். ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத் தார்க்குண்டி முதலிய முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்து உலகத்தை இரக்ஷிப்பவர் உலகமாதாவான சங்கரியே யாதலால் 'கற்படர்ந்த சுந்தரி' என்று சுவாமிகள் மகாதேவியைப் புகழ்கிருர். முருகப்பெருமானே திருஞானசம்பந்த சுவாமிகளாய்த் தோன்றி உமாதேவியாரது திருமுலைப்பால் உண்டு சிவபெரு மானது புகழைப் பாடிஞர் என்பதற்குரிய ஆதாரங்களை இவ்வுரையின் 186-188, 194, 231, 252-253-ம் பக்கங்களில் காண்க.

(எ௫)

தனதன தத்தத் தனந்த னந்தன
தனதன தத்தத் தனந்த னந்தன
தனதன தத்தத் தனந்த னந்தன—தந்ததான.

முகிலள கத்திற் கமழ்ந்த வண்பரி
மள அலர் துற்றக் கலந்தி டந்தரு
முகிழ்நுதி தைத்துத் துயர்ந்த மங்கைய ரங்கமீதே

முகம்வெயர் வுற்றுப் பரந்த செங்கயல்
விழியிணை செக்கச் சிவந்து குங்கும
ம்ருகமத மத்தத் தனங்க ளின்மிசை யெங்குமேவி;

உகவுயி ரொத்துப் புயங்க ளின்புற
வுறவினை யுற்றுத் திரண்டு கொங்கள
வுறுமணை யுற்றுத் திரங்கு மஞ்சமி லொன்றிமேவி

ஒளிதிகழ் பத்மக் கரங்க ளின்புற
முறுவளை யொக்கக் கலின்க லென்கவு
முயர்மய லுற்றுற் றிரங்கு மன்பதொ ழிந்திடாதோ?

செகமுழு தொக்கப் பயந்த சங்கரி
அடியவர் சித்தத் துறைந்த சம்ப்ரம
சிவனொரு பக்கத் துறைந்த மங்கைசு மங்கைநீடு

திகழ்வன பச்சைப் பசுங்கி யம்பண
கரதலி கச்சுற் றிலங்கு கொங்கையள்
திருவரு ணற்பொற் பரந்தி டும்பரை யண்டமீதே

பகலிர வற்றிட் டுயர்ந்த அம்பிகை
திரிபுரை முற்றிட் டிரண்டொ டொன்றலர்
பரிவுற வொக்கச் செயும்ப ரம்பரமி யன்புகூரும்

பதிவ்ரதை மிக்கச் சிறந்தெ ரிந்தருள்
பகிரதி வெற்பிற் பிறந்த பெண்தரு
பழநியில் வெற்பிற் றிகழ்ந்து நின்றருள் தம்பிரானே!

(ப - ரை) செக முழுது(ம்) ஒக்க பயந்த சங்கரி - பிரபஞ்ச முழுவதையும் (எண்ணிறந்த சிருஷ்டித்தொகைகள் ஒன்றேடொன்று) பொருத்தமாக விருக்குமாறு ஈன்றருளியவரும் ஆன்மகோடிகளுக்குச் சுகத்தைக் கொடுப்பவரும், அடி

யவர் சித்தத்து உறைந்த சம்ப்ரம சிவன்-அடியவர்களது மனத்தில் அமர்ந்தருளும் அன்பின் வடிவமான சிவபெருமானது, ஒரு பக்கத்து உறைந்த மங்கை - (திருமேனியின்) ஒரு பாகமான இடது பாகத்தில் அமர்ந்துள்ள பெண்மணியும், சுமங்கை - சுமங்கலியும், நீடு திகழ் வன பச்சை பசங்கி - பேரொளிவீசும் அழகிய பச்சைப்பசேல் என்றுள்ள திருமேனியை உடையவரும், அம்பண காதலி- அம்பணம் என்னும் ஒருவகை யாழைக் கையில் ஏந்தியவரும், கச்சு உற்று இலங்கு கொங்கையள் - கச்சணிந்து விளங்கும் தனபாரங்களை யுடையவரும், திருவருள் நல் பொன் பரந்திடும் பரை - தமது திருவருளான நல்ல ஒளியானது எங்கும் பரவும்படி செய்பவரும் பரம்பொருளே யானவரும், அண்டம் மீது (ஏ - அசை) - பிரபஞ்சத்துக்கு அப்பால், பகல் இரவு அற்றிட்டு உயர்ந்த அம்பிகை - சூரிய சந்திரர்கள் பிரகாசிக்கும் இடத்தைக்கடந்து நின்று மேன்மைபெற்றுள்ள உலகமாதாவும், திரிபுரை - திரிபுரங்களை யழித்தவரும், முற்று இட்டு - இறுதியிலடையவேண்டிய முக்தி இன்னதென நியமித்து, இரண்டொடு ஒன்று அலர் - இரண்டுமல்ல ஒன்றுமல்ல வென்று அறிந்தவர்கள், பரிவுற - மனத்தில் இன்பமடையுமாறு, ஒக்க செயும் - தகைமை யடையச்செய்யும், பரம்ப்ரமி - பரப்பிரமமும், அன்பு கூரும் பதிவ்ரதை - மிகுந்த அன்புள்ள பதிவிரதையும் மிக்க சிரம் தெரிந்து அருள் - மிகவும் மேலான பதவியைத் தெரிந்தெடுத்துக் கொடுத்த தவுபவரும், பகிரதி வெற்பில் பிறந்த பெண் - கங்கை உற்பவிக்கும் மலையான இமயமலை அரசனது புதல்வியாகத் தோன்றியவருமான உமாதேவியார், தரு - (உலகத்தோருக்குத்) தந்தருளிய (புதல்வனே!), பழநியில் வெற்பில் திகழ்ந்து நின்றருள் தம்பிரானே - பழநித்தலத்திலுள்ள மலையின்மீது எழுந்தருளி விளங்கும் தலைவனே !, முகில் அளகத்தில் - மேகத்தையொத்த கூந்தலில், கமழ்ந்த வண் பரிமள அலர் துற்ற - வாசனையை எங்கும் பரவச்செய்யும் அழகும் மணமும் மிக்க மலர்கள் நெருக்கமாகத் தோன்றவும், கலம் திடம் தரு முகிழ் - ஆபரணங்களை யணிந்து வலிமைபெற்று மலரின் மொட்டைப்போல் உள்ள தனபாரங்களின், நுதி தைத்து - நுனியானது (அடியேனது சரீரத்தின் மீது) பொருந்தப்பெற்று, துயர்ந்த மங்கையர் அங்கம் மீது (ஏ - அசை) - (விரகதாபத்தினால்) துன்பமுறும் பெண்களின் தேகத்தின்மீது, முகம் வெயர்வு உற்று - முகத்தில் வியர்வைத்துளிகள் தோன்றவும், பரந்த செம் கயல் விழி இணை - விசாலமாயும் சிவந்தும் கயல்மீனைப்போன்ற வடிவமுற்றுமுள்ள விழிகள் இரண்டும், செக்க சிவந்து - மிகவும் சிவப்பாகவும், குங்கும ம்ருகமதம் - குங்குமமும் கஸ்தூரியும், மத்த தனங்களின் மிசை எங்கும் மேவி உக - கர்வத்துடன் நிமிர்ந்துள்ள தனபாரங்களின்மீது எங்கும் பூசப்பெற்று அவைகளினின்றும் சிந்தவும், உயிர் ஒத்து உறவினை உற்று - உயிரின்மீது பாராட்டுமளவு நட்புற்று, புயங்கள் இன்பு உற - புயங்கள் இன்பமடையுமாறு, திரண்டு கொங்கு அளவுறும் அணை உற்று - பருத்து வாசனை பொருந்தியதாயுள்ள பஞ்சணையை அடைந்து, திரங்கு -

திரண்டுள்ள, மஞ்சமில் ஒன்றி மேவி - கட்டிலில் ஒருவரையொருவர் தழுவிக் கலந்து, ஒளி திகழ் பத்ம கரங்களின் புறம் உறு வளை-மிகுந்த ஒளி வீசும் தாமரை மலர்களைப்போல் உள்ள கைகளைச் சுற்றியுள்ள வளைகள், ஒக்க கலின் கல் என்க (உம் - அசை) - ஒருங்கே கலின் கல் என்று சப்திக்கவும், உயர் மயல் உற்று உற்று - மிகுந்த காம மயக்கத்தை மீண்டும் மீண்டும் அடைந்து, இரங்கும் - பரிதபிக்கச்செய்யும், அன்பு அது ஒழிந்திடாதோ - அன்பாகிய பெண்காதல் அடியேனை விட்டு அகலாதோ?

(வி - ரை) சங்கரி - சுகத்தைக் கொடுப்பவள். சம்ப்ரமம் - அன்பு. சூரிய சந்திரர்கள் ஒளிவீசும் பிரபஞ்சத்துக்கு அப்பால் ஆகாசத்தில் பரமஞானவொளி பரவியிருக்கும்; அதுவே சித் சொரூபியும் பராபரையுமான சங்கரியின் வடிவமாதலின், இங்கு 'பகலிர வற்றிட் டுயர்ந்த அம்பிகை' என்று கூறப்பட்டது. பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒரே பொருளுமல்ல இரண்டு பொருள்களுமல்லவென்று கூறுமாறு அவை குணகுணித் தன்மையாய்க் கலந்துள்ள உண்மையை அறிந்தவர்கள் மனத்தினில் இன்பம் ஊறுமாறு அவர்களை ஞானத்தினால் தகைமை அடையச்செய்பவர் பராபரையாகிய உமாதேவியாரே. அவர் அவ்வாறு செய்வது முக்கணெந்தையின் கருத்துக்கிசைந்ததாய் இருப்பதனால், அவ்வாறு செய்வதற்காக அத்தேவியாரைப் 'பதிவ்ரதை' என்று இங்கு கூறப்பட்டதுபோலும்.

திரங்குதல் - திரளல்; கடைந்து திரண்ட கால்கள் முதலியவற்றை யுடைத்தாயிருத்தல். (௭௬)

தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன—தனதான.

முத்துக்குச் சிட்டுக் குப்பிமு
டித்துச்சுக் கைப்பிற் சுற்றியு
முற்பக்கத் திற்பொற் புற்றிட நுதல்மீதே
முக்யப்பச் சைப்பொட் டிட்டணி
ரத்நச்சுட் டிப்பொற் பட்டிவை
முச்சட்டைச் சித்ரக் கட்டழ கெழிலாடத்
தித்திக்கச் சொற்சொற் றுப்பிதழ்
நச்சுக்கட் கற்புச் சொக்கியர்
செப்புக்கொக் கக்கச் சுப்பெறு தனமேருத்

திட்டத்தைப் பற்றிப் பற்பல
லச்சைக்குட் பட்டுத் தொட்டுயிர்
சிக்கிச்சொக் கிக்கெட் டிப்படி புழல்வேனோ ?

மெத்தத்துக் கத்தைத் தித்தியி
னிச்சித்தத் திற்பத் தத்தொடு
மெச்சிச்சொர்க் கத்திற் சிற்பர மருள்வாயே !

வித்தைக்குக் கர்த்ருத் தற்பர
முக்கட்சித் தர்க்குப் புத்திர
விச்சித்ரச் செச்சைக் கத்திகை புனைவோனே !

நித்யக்கற் பத்திற் சித்தர்க
ளெட்டுத்திக் குக்குட் பட்டவர்
நிஷ்டைக்கற் புற்றப் பத்தர்கள் அமரோரும்

நெட்டுக்குப் புட்பத் தைக்கொடு
முற்றத்துற் றர்ச்சிக் கப்பழ
நிக்குட்பட் டத்துக் குற்றுறை பெருமாளே !

(ப - ரை) வித்தைக்கு கர்த்ரு - ஞானத்தை உதிக்கச் செய்பவனே !, தற் பர - உண்மைப் பொருளே !, முக்கண் சித்தர்க்கு புத்திர - மூன்று கண்களை யுடையவரும் அஷ்டமா சித்திகளுக்கும் காரணருமான சிவபெருமானுடைய புதல் வனே !, விச்சித்ர செச்சை கத்திகை புனைவோனே - அற்புதமான வெட்சி மலர் மாலையை அணிபவனே, நித்ய கற்பத்தில் சித்தர்கள் - சித்தியடைந்ததனுல் அழியா வுடம்பு பெற்று கற்பங்கள் பல உயிர்வாழும் நிலைமையில் உள்ள சித்தர் கள், எட்டு திக்குக்கு உட்பட்டவர் - எட்டு திக்குகளுக்கும் உள்ளே வசிப்பவர் களும், நிஷ்டை கற்பு உற்ற பத்தர்கள் - தவநிலைமைக்குரிய ஏகாக்கிர சிந்த னையை அடைந்துள்ள பக்தர்கள், அமரோரும் - தேவர்களும், முற்ற துற்று - எல்லோரும் கூடி, புட்பத்தை கொடு நெட்டு உக்கு அர்ச்சிக்க - மலர்களைக் கொண்டுவந்து ஏராளமாகச் சொரிந்து அர்ச்சனை செய்யும் வண்ணம், பழநிக்குள் பட்டத்துக்கு உற்று உறை பெருமாளே - பழநித் தலத்தில் (அதைச்சுற்றிய நாட்டை) ஆளும் அரசுரிமையைப் பெற்று அமர்ந்திருக்கும் பெரியோனே !, முத்து குச்சு இட்டு - முத்துக்களினுல் செய்த குஞ்சத்தை வைத்து, குப்பி முடித்து - குப்பி என்னும் ஆபரணத்தையும் (தலையில்) அணிந்து, சுக்கை பின் சுற்றி (உம் - அசை) மலர் மாலையைப் பின்புறத்தில் (கொண்டையில்) சுற்றி, முன் பக்கத்தில் பொற்பு உற்றிட - முன் பக்கத்தில் (முகபானது) அலங்காரமுறுமாறு, நுதல் மீது (ஏ - அசை) - நெற்றியின் மீது, முக்ய பச்சை பொட்டு இட்டு - (அலங் காரத்துக்கு) அவசியமான பச்சை நிறப் பொட்டு இட்டுக்கொண்டு அணி ரத்ந,

சுட்டி பொன் பட்டு இவை முச்சட்டை - அழகிய இரத்தினச் சுட்டி அழகிய பட்டு இவைகளின் அழகினால், சித்ர கட்டழகு எழில் ஆட - அற்புதப் பேரழகும் இளமையும் விந்தையாய்த் தோன்ற, தித்திக்க சொல் சொல் துப்பு இதழ் - மதுர மொழிகளைப் பேசும் பவளத்தை யொத்த உதடுகளினாலும், நச்சு கண் கற்பு சொக்கியர் - ஆசையை யுணர்த்தும் கண்களினாலும் (ஆடவரை) தங்கள் கருத்துக்கு இசையும்படி மயக்குபவர்களுடைய, செப்புக்கு ஒக்க - (கடைந்தெடுத்த) செப்பை யொத்த வடிவமுடையனவாய், கச்சு பெறு தன மேரு திட்டத்தை பற்றி - கச்சணிந்துள்ள தனபாரங்களாகிய மேரு மலையை யொத்த குன்றுகளை அடைய விரும்புங் காரணத்தினால், பற்பல லச்சைக்கு உட்பட்டு - பலவிதமான அவமதிப்புக்கு ஆளாகி, தொட்டு - (பெண்களுடன்) இணை பிரியாமல் இருந்து, உயிர் சிக்கி - உயிரானது காமவலையிற் சிக்கப்பெற்று, சொக்கி - மதி மயங்கி, கெட்டு - சீர் குலைந்து, இப்படி உழல்வேனோ - இவ்வாறு அலைந்து திரிதல் தகுதியோ ?, மெத்த துக்கத்தை தித்தி - (இவ்வித வாழ்க்கையின்) மிகுந்த துக்கத்தை மாற்றி, இனி சித்தத்தில் பத்தத்தொடு மெச்சி - இனிமேலாயினும் நினது கருத்தினில் (அடியேனிடத்து) உறவு பாராட்டத் தொடங்கி (அடியேனையும் பொருட்படுத்திக்) கொண்டாடி, சொர்க்கத்தில் - முத்தி வீட்டில், சிற்பரம் அருள்வாயே - ஞான மயமான உண்மைப் பொருளைத் தந்தருள்வாயே !

(வி - ரை) ஞானத்துக்குக் காரணராயும் தாமே பரம்பொருளாயு முள்ள முருகப்பெருமான் தமது அடியவர்களது பகைவர்களான அகங்காரம் காமக் குரோத லோப மோகாதிகள் இருவினைப் பயன் ஆகிய இவைகளை ஓட்டுவதற்குத் தயாராக விருக்கும் உண்மையை உணர்த்துவதற்காகப் பகை நிரை ஓட்டும் மன்னர் அணியும் வெட்சிமலர் மாலையை அணிந்துகொண் டிருக்கிறார். முருகப் பெருமான் பழநித் தலத்தில் அரசனாக அமர்ந்து, அரசனுக்குரிய மரியாதைகளைப் பெற்று, பழநி ஆண்டவன் என்னும் பெயருடன் விளங்குகிறார். ஆகையினால் தான் 'பழநிக்குள் பட்டத்துக்கு உற்று' என்று கூறப்பட்டது. (எ)

தனதன தத்தா தத்தன
தனதன தத்தா தத்தன
தனதன தத்தா தத்தன— தனதான.

அகல்வினை யுட்சார் சட்சம
யிகளொடு வெட்கா தட்கிடு
மறிவிலி வித்தா ரத்தன மலிகாரம்

அகில்கமழ் கத்தூ ரித்தனி
யணைமிசை கைக்கா சுக்கள
வருள்பவர் நட்பே கொட்புறு மொருபோதன்
பகலிர விற்போ திற்பணி
பணியற விட்டா ரெட்டிய
பரமம யச்சோ திச்சிவ மயமாநின்
பழநித னிற்போ யுற்பவ
வினைவிள கட்சேர் வெட்சிரு
ரவுபயில் நற்றாள் பற்றுவ தொருநாளே ?
புகலிவ னப்பே றப்புகல்
மதுரைமன் வெப்பா றத்திகழ்
பொடிகொடு புற்பாய் சுற்றிகள் கழுவேறப்
பொருதச மர்த்தா குத்திர
துரகமு கக்கோ தைக்கிடை
புலவரில் நக்கீ ரர்க்குத வியவேளே !
இகல்படு நெட்டூர் பொட்டெழ
இளநகை யிட்டே சுட்டரு
ளெழுபுவி துய்த்தார் மைத்துனர் மதலாய்வென்
றிடாற முப்பால் செப்பிய
கவிதையின் மிக்கா ரத்தினை
யெழுதி வனத்தே யெற்றிய பெருமாளே !

(ப - ரை) புகலி வனப்பு ஏற - சீகாழித்தலத்தின் கீர்த்தியானது பெருக வும், புகல் மதுரை மன் வெப்பு ஆற - தஞ்சமென்று சொன்ன மதுரை மன்ன னாகிய கூன்பாண்டியனது வெப்பமான சுரநோயானது தணியுமாறும், புல் பாய் சுற்றிகள் கழு ஏற - புற்களினால் நெய்த பாய்களை ஆடைகளாக அணிந்திருந்த சமணமதத் தலைவர்கள் கழுமரங்களில் ஏறுமாறும், திகழ் பொடி கொடு பொருத சமர்த்தா - விளங்கும் திருநீற்றைக் கொண்டு (சமணர்களுடன்) போர்புரிந்த சாமர்த்தியசாலியே!, குத்திர துரக முக கோதை கிடை - வஞ்சகமுள்ளவளும் குதிரை முகத்தையுடையவளுமான கற்கிமுகி என்னும் பெண்பூதத்துக்குக் கிடைத்த, புலவரில் நக்கீரர்க்கு உதவிய வேளே-புலவர்களில் ஒருவரான நக்கீரர் க்கு உதவிபுரிந்த குமாரசுவாமியே!, இகல் படு நெடு ஊர் பொட்டெழ - பகைமை

பூண்டிருந்த பெரிய ஊர்களான திரிபுரங்கள் பொடியாகுமாறு, இள நகை இட்டு (ஏ - அசை) - புன்னகை செய்து, சுட்டு அருள் - அவைகளை எரித்தருளிய வரும், எழு புவி அய்த்தார் மைத்துனர் - விசாலமான பூலோகத்தை உண்ட ஸ்ரீ கிருஷ்ணபகவானது மைத்துனருமான சிவபெருமானது, மதலாய் - புதல் வனே !, வென்று இடர் அற - ஜகமாயையை வென்று துன்பத்தை அகற்றிக் கொள்ளுமாறு, முப்பால் செப்பிய கவிதையின் மிக்க - அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றையும் பற்றி யுரைக்கும் பாமாலைகளைக் காட்டிலும் சிறந்ததான, ஆரத்தினை - (பேரின்ப வீட்டைப் பற்றி யுரைக்கும்) தேவாரத்தை, எழுதி-ஏட் டில் எழுதி, வனத்து (ஏ - அசை) எற்றிய - ஆற்றில் எதிர்த்துச் செல்லச்செய்த, பெருமாளே - பெரியோனே !, அகல் வினை - (முத்தி கூட்டுவிப்பதான) பெரிய காரியத்தை மேற்கொண்டுள்ள, உள் சார் சட் சமயிகளொடு - ஆதி சைவ சமயத் துள் அடங்கிய ஆறு சமயங்களைச் சேர்ந்தவர்களுடன், வெட்கா தட்கிடும் அறி விலி-அஞ்சாது தடுத்துவாதஞ் செய்யும் அறிவீனனும், வித்தார தனம் மலி - விசா லத்தன்மை மிகுதியாகவுள்ளதும், காரம் கமழ் அகில் கத்தூரி தனி அணை மிசை- பொன்னினாலும் வாசனை வீசும் அகில் கஸ்தூரி இவைகளினாலும் (பொலிவு பெற்று) ஒப்புயர்வற்றதா யிருக்கும் பஞ்சணையின் மீது, கை காசு களவு அருள் பவர் - கையிலுள்ள பொருளைப் பறித்துக்கொண்டு தயை புரிபவர்களாகிய விலை மாதர்களது, நட்பே கொட்பு உறும் - நேசத்தையே நாடி அலைந்து திரியும், ஒரு போதன் - ஒரே கருத்தையுடையவனுமான அடியேன், பகல் இரவு இல் - சுக துக்கங்கள் இல்லாத விடமான, போதில் - முத்தி வீடாம் நினது பாதமலர் களில், பணி - வணங்குபவர்களும், பணி அற விட்டார் - செயலை முற்றிலும் ஒழித்தவர்களுமான பெரியார்கள், எட்டிய - அடையும், பரம மய சோதி - நிஷ் களத்தின் நிறைவான ஜோதியாய் நிற்கும், சிவ மயமா(ம்) நின்-சிவனது உருவமே யான நினது, (நிலையான இருப்பிடமான), பழநி தனில் போய் - பழநி என்னும் திருத்தலத்துக்குச்சென்று, உற்பவ வினை வி(ள்)ள-அடியேனை மீண்டும் மீண்டும் பிறக்கச் செய்யும் கருவினையானது அகலும் வண்ணம், கள் சேர் வெட்சி குரவு பயில் - தேன் பொருந்தியுள்ள வெட்சி மலர் மாலையும் குரவ மலர் மாலையும் நெருங்கிப் பொருந்தியுள்ள, நல் தாள் - நன்மையைச் செய்யும் நினது பாதமலர் களை, பற்றுவது ஒரு நாளே - உற்ற துணையாகப் பிடித்துக்கொள்ளும் நாளும் உண்டோ ?

(வி - ரை) சீகாழித் தலத்தில் தோன்றித் தமது அற்புதச் செயல்களினால் அத்தலத்தின் கீர்த்தியைப் பெருக்கிய திருஞான சம்பந்த சுவாமிகள் கூன் பாண்டியனது சுரநோயைத் தீர்த்துச் சமணர்களைக் கழுவிலேற்றிய வரலாற்றை யும், முருகப்பெருமானே திருஞானசம்பந்த சுவாமிகளாய்த் தோன்றினார் என் பது சுவாமிகளின் கொள்கை என்பதையும் இவ்வுரையின் 186-188-ம் பக்கங் களில் காண்க.

**நக்கீரருக்கு முருகப்பெருமான் அருள்புரிந்த வரலாறு:**—கடைச்சங்கப் புலவர்களுக்குள் தலைமை பெற்றிருந்த நக்கீரர் ஒரு சமயத்தில் இமயமலைக்குச் சமீபத்திலுள்ள ஒரு காட்டினூடே சென்றபோது, ஆங்கு ஓர் தடாகத்தைக் கண்டு, அதில் நீராடி, சிவபூஜை செய்துகொண்டிருந்தார். கற்கிமுகி (குதிரை முகத்தவள்) என்னும் ஒரு பெண்பூதம் சிவபூஜையில் வழுவின தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது பேர்களை ஒரு மலைக்குகையி லடைத்து, அவர்களைத் தின்னுமுன் அவர்கள் எண்ணிக்கையை ஆயிரமாக்குவதற்கு அவ்வாறே சிவபூஜையில் வழுவும் ஒருவனைத் தேடிக்கொண்டிருந்தது. நக்கீரர் குளக்கரையில் சிவபூஜை செய்துகொண்டிருந்தபோது அப்பூதம் அவ்விடத்தையடைந்து, அவருக்கு முன்னே ஒரு ஆலிலை தண்ணீரில் விழுந்து நீருக்குள் பாதியும் நீர் மட்டத்துக்கு மேல் பாதியுமாக இருப்பதைக் கண்டு, நீரிலிருந்த பாதியை மீனாகவும் மேலிருந்த பாதியைப் பறவையாகவும் மாற்றிற்று. அவ்வற்புதத்தைக் கண்டதும், சிவபூஜையில் இலயித்திருந்த நக்கீரருடைய மனம் சற்று நிலைகுலைந்தது. உடனே அப்பெண்பூதம் நக்கீரரையும் கொண்டுபோய் அம்மலைக்குகையி லடைத்து, அவர்கள் யாவரையும் தின்னுமுன் நீராடச்சென்றது. அதுவரையில் அப்பூதத்தினால் போஷிக்கப்பட்டுவந்த 999 பேர்களும் நக்கீரரிடம் தங்கள் நிலைமையைக் கூறி அழுதார்கள். அப்போது நக்கீரர் திருமுருகாற்றுப்படை என்னும் அருட்பிரபந்தத்தினால் முருகப்பெருமானைத் தோத்திரஞ் செய்தார். உடனே முருகப் பெருமான் அவர் முன்னே தோன்றி அவரையும் மற்றவர்களையும் காத்தருளினார்.

**கிருஷ்ணபகவான் மண் தின்ற வரலாறு:**—ஒருநாள் பலராமரும் மற்றும் சில பிள்ளைகளும் யசோதையினிடம் ஓடிவந்து ஸ்ரீகிருஷ்ணன் மண்ணைத் தின்றதாகக் கூறினார்கள். உடனே யசோதை கிருஷ்ணனைப் பிடித்துவந்து தன் மடிமீது இருத்திக்கொண்டு அவரை வாயைத்திறந்து காட்டும்படி சொன்னாள். கிருஷ்ணன் மிகவும் பயந்தவர்போல் தமது வாயைத்திறந்து காட்டினார். அப்போது யசோதை பின்வரும் பாடலிற் கூறியபடி அவர் வாயினுள் பூவுலக முழுவதையுங் கண்டு திடுக்கிட்டாள்.

விண்கண்டாள்; விண்விளக்கும் வெங்கதிருந்
தண்சுடரும் விளங்கக் கண்டாள் ;
மண்கண்டாள் ; மண்வளைத்த மாகடலும்
பேருயர்மால் வரையுங் கண்டாள் ;
தண்கொண்ட வெண்டோட்டுத் தளவநெடு
வனங்கண்டாள் ; தனையுங் கண்டாள் ;
பண்கொண்ட வண்டாற்றும் பசுந்துளவோ
னிவனெனவே பரவினாளால் !

திருஞான சம்பந்த சுவாமிகள் சிவபெருமானைப் புகழும் பதிகத்தை எழுதி ஆற்றில் ஏறவிட்ட வரலாற்றை இவ்வுரையின் 194-ம் பக்கத்தில் காண்க. (எஅ)

தனதனன தந்த தனதனன தந்த
தனதனன தந்த—தனதானு.

இலகுகனி மிஞ்சு மொழியிரவு துஞ்சு
மிருவிழியெ நஞ்சு முகமீதே
இசைமுரல்சு ரும்பு மிளமுலைய ரும்பு
மிலகியக ரும்பு மயலாலே
நிலவிலுடல் வெந்து கரியஅல மந்து
நெகிழுமுயிர் நொந்து மதவேளால்
நிலையழியு நெஞ்சி லவர்குடிபு குந்த
நினைவொடுமி றந்து படலாமோ?
புலவினைய ளைந்து படுமணி கலந்து
புதுமலர ணிந்த கதிர்வேலா!
புழுகெழும ணந்த குறமகள்கு ரும்பை
பொரமுலையு டைந்த தொடைமார்பா!
பலநிறமி டைந்த விழுசிறைய லர்ந்த
பருமயில டைந்த குகவீரா!
பணைபணிசி றந்த தரளமணி சிந்து
பழநிமலை வந்த பெருமாளே!

(ப - ரை) புலவினை அளைந்து - (சூரபதுமனது தேகத்திலுள்ள) மாமிசத்துடன் கலந்து, படு மணி கலந்து - எதிர்ப்பட்ட (அவனது ஆபரணங்களிலுள்ள) இரத்தினங்களுடன் கலந்து, புது மலர் அணிந்த கதிர்வேலா - (வெற்றியடைந்ததற்கு அடையாளமாகப்) புதிய (வாகை) மலர் மாலையை அணிந்துகொண்டதும் பேரொளி வீசுவதுமான வேலாயுதத்தை உடையவனே!, புழுகு எழ மணந்த குறமகள் குரும்பை - புனுகின் மணம் பரவ வாசனை வீசும் வேடர் மகளான வள்ளி நாயகியின் தனபாரங்கள், பொர - வந்து மோதுவதனுல், முகை உடைந்த தொடை மார்பா - மொட்டுகள் மலரப் பெற்ற மாலையை அணியும் மார்பை யுடையவனே!, பல நிறம் மிடைந்த - பல நிறங்கள் நெருங்கிப் பொருந்தியுள்ள, விழு சிறை அலர்ந்த - சிறந்த தோகையை விரித்துள்ள, பரு மயில் அடைந்த - பெரிய மயிலை வாகனமாகப் பெற்று, குக வீரா - அடியவர் இதயமான குகையில் அமர்ந்தருளும் வீரனே!, பணை - மூங்கிலும், பணி - நாகங்களும், சிறந்த தரளம் மணி சிந்து - (முறையே) மேன்மையான முத்துக்

களையும் இரத்தினங்களையும் இறைக்கும் (தலமான), பழநி மலை வந்த பெருமாளே - பழநி மலையின் மீது எழுந்தருளிய பெரியோனே !, இலகு கனி மிஞ்சும் மொழி - பேசும் உதடுகள் பிரகாசம் பொருந்திய (கோவைக்) கனியை விட அழகாய்த் தோன்றும் ; இரவு துஞ்சும் இரு விழி (ஏ - அசை) - இரவில் தூக்கத்திலுல் மறையும் விழிகள், நஞ்சும் - விஷத்தையும், முகம் மீது (ஏ - அசை) இசை முரல் சுரும்பும் - முகமான தாமரை மலரின் மீது மொய்த்து இனிமையாகப் பாடும் வண்டையும் ஒத்திருக்கும் ; இள முலை - இளமை பொருந்திய தனபாரங்கள், அரும்பும் - மலரின் மொட்டையும், இலகிய கரும்பும் - ஒளிவீசும் கும்பத்தையும் ஒத்திருக்கும் ; மயலாலே - அவைகளின்மீது கொண்ட ஆசையினுல், நிலவில் உடல் வெந்து கரிய - சந்திரனது ஒளியினுல் (விரகதாபமுற்று) தேகமானது வெப்பமுற்றுக் கறுத்து நிறம் மாறி, அலமந்து - இளைக்கவும், நெகிழும் உயிர் நொந்து - சோர்வடையும் ஜீவன் துன்பமடையவும் பெற்று, மதவேளால் நிலை அழியும் நெஞ்சில் - மன்மதனது செயலினுல் நிலைகுலையும் மனத்தினில், அவர் குடி புகுந்த நினைவொடு (உம் - அசை) - அப்பெண்கள் (மீது ஆசை உதித்து, மனத்தினில் குடிகொண்டதையே நினைத்து நினைத்து வருந்தி, இறந்து படலாமோ - (அந்த ஆசையான தாபத்தினுல் உயிரிழந்து அழிதல் தகுதியோ ?

(வி - ரை) அகங்கார சொரூபியான சூரபதுமனை வாகனமாகவடைந்த முருகப்பெருமான் யாரெனில், தம்மிடத்து மெய்யன்பு பாராட்டுபவர்களது இதயத்தில் சருணையினுல் அமர்ந்து அவர்களது அகங்காரத்தை அடக்கி அதன் மீதேறி, ஞானசொரூபியான தம்மையடையும் நெறியிலேயே அந்த அகங்காரத்தைச் செல்லும்படிச் செய்பவர். இவ்வுண்மையையே 'பருமயிலடைந்த குக வீரா' என்னும் மொழித்தொடர் உணர்த்துகிறது. அலர்ந்த - அலர்த்த என்பதன் மெலித்தல் விகாரம் கரும்பு - கரகம், கும்பம். மொழி மொழிகளைப் பேசும் உதடுகள். (எக)

தனத னந்தன தந்த னுதன
தனத னந்தன தந்த னுதன
தனத னந்தன தந்த னுதன—தந்ததான.

கனக கும்பமி ரண்டு நேர்மலை
யெனநெ ருங்குகு ரும்பை மாமணி
கதிர்சி றந்தவ டங்குலாவிய முந்துகூதம்
கடையில் நின்றுப ரந்து நாடொறு
மிளகி விஞ்சியெ ழுந்த கோமள
களப கும்கும கொங்கை யானையை பின்பமாக

அனைவ ருங்கொளு மென்று மேவிலை
யிடும டந்தையர் தங்கள் தோதக
மதின்ம ருண்டு துவண்ட வாசையில் லைந்துபாயல்
அவச மன்கொளு மின்ப சாகர
முழுகும் வஞ்சக நெஞ்சை யேயொழி
தருப தங்கதி யெம்பிரானருள் தந்திடாயோ?
தனத னந்தன தந்த னவென
டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை
தகுதி திந்திகு திந்த தோவென வுந்துதாளந்
தமர சஞ்சலி சஞ்சலாவென
முழவு டுண்டுடு டுண்டு டுவென
தருண கிண்கிணி கிண்கி ணார மு முந்தவோதும்
பணிப தங்கய மெண்டி சாமுக
கரிய டங்கலு மண்ட கோளகை
பதறி நின்றிட நின்று தோதக என்றுதோகை
பவுரி கொண்டிட மண்டி யேவரு
நிசிச ரன்கிளை கொன்ற வேலவ
பழநி யங்கிரி யின்கண் மேவிய தம்பிரானே!

(ப - ரை) பேரிகை - பேரிகையானது, தனதனந்தன * * டிங்கு * தகுதி * * திந்ததோ, என - என்று முழங்கவும், உந்து தாளம் தமரம் - எழும்பும் தாளத்தின் பேரொலி, சஞ்சலி சஞ்சலா, என - என்னும் இசை பொருந்தியிருக்கவும், முழவு - மத்தளங்கள், டுண்டுடு டுண்டுடு, என - என்று சப்திக்கவும், தருண கிண்கிணி கிண்கிணாரமும் உந்த - இளமை பொருந்திய நினது சிற்றடிகளில் அணிந்துள்ள சதங்கைகளின் கிண்கிணெனும் இனிய நாதம் மேலெழும்பவும், ஓதும் பணி - சிறப்பித்துக் கூறப்படும் ஆதிசேஷனும், பதம் - வரிசையாக நிற்பவைகளும், கயம் - மேன்மை பொருந்தியவைகளுமான, எண் திசா முக கரி அடங்கலும் - எட்டுத் திக்கு யானைகள் அனைத்தும், அண்ட கோளகை - உருண்டை வடிவமான உலகமும், பதறி நின்றிட - திடுக்கிட்டு நிற்குமாறு, நின்று தோதக என்று தோகை பவுரி கொண்டிட - நின்றவிடத்திலேயே தோதக என்னும் தாளத்துக்கிசைய தோகையையுடைய மயிலானது நிர்த்தனஞ் செய்யவும், மண்டி (ஏ - அசை) வரு நிசிசரன் கிளை - (போர்க்களத்தில்) வந்து தாக்கிய அசுரனாகிய சூரபதுமனது சுற்றத்தவரை, கொன்ற வேலவ - அழித்தருளிய வேலாயுதனே!, பழநி (அம் - சாரியை) கிரியின் கண் மேவிய தம்பிரானே - பழநிமலையின்மீது அமர்ந்துள்ள நாயகனே!, கனக கும்பம் இரண்டு நேர் - தங்கக் குடங்கள் இரண்டுக்குச் சமானமானவைகளாய், மலை என - மலைகளைப்போல் பரு

த்து உயர்ந்து, நெருங்கு - மார்பினிடத்தை நிறைத்துள்ள, குரும்பை - தென்ன மரத்தின் இளங்காயின் வடிவத்தைப் பெற்று, மா மணி கதிர் சிறந்த வடம் குலாவிய - சிறந்த இரத்தினங்களின் பேரொளி வீசும் மேன்மையான ஆரங்களினுல் அலங்கரிக்கப்பெற்று,மூந்து சூதம்-முற்பட்டு நிற்கும் சொக்கட்டான் காயைப் போல் (கடைந்தெடுத்த வடிவத்துடன்), கடை இல் - குற்றங் கூறுவதற்கு இடமில்லாமல், நின்று - உறுதியாக நின்று, பரந்து - (அடியில்) விசாலமானதாய், நாள்தொறும் - தினந்தோறும், இளகி - (புளகித்து) மிருதுவாகி, விஞ்சி எழுந்த - விம்மிப் புடைத்தெழும், கோமள - இளமை பொருந்தியவைகளாயும், களப குங்கும - கலவைச் சாந்தும் குங்குமமும் பூசப்பெற்றவைகளாயுமுள்ள, கொங்கை யானையை - தனபாரங்களாகிய மதயானையை, இன்பமாக அனைவரும் கொளும் - இன்பமடையும் வண்ணம் யாவரும் வாங்கிக்கொள்ளுங்கள், என்று (உம், ஏ - அசை) விலையிடும் - என்று விலைகூறும், மடந்தையர் தங்கள் தோதகம் அதில் மருண்டு - விலைமாதர்களுடைய வஞ்சகத்தினுல் மயங்கி, துவண்டு - மனங் கலங்கி, அவ்வாசையில் நைந்து - அந்தக் கலவியிற் கொண்ட ஆசையினுல் மனந் தளர்ந்து, பாயல் அவசம் மன் கொளும் இன்ப சாகரம் - பஞ்சணையின்மீது மிகவும் வசமழிந்து (கலவியினுல் உண்டாகும்) சிற்றின்பக்கடலில், முழுகும் வஞ்சக நெஞ்சை (ஏ - அசை) ஒழிதரு - முழுகுவதாகிய செயலில் வஞ்சகமாகப் புகுத்தும் மனோ நிலைமையை அகற்றவல்ல, பதம் - நினது பாதங்களில், கதி - அடைக்கலம் புகுந்தேன்; எம்பிரான் - அடியேனது நாயகனே!, அருள் தந்திடாயோ - அடியேனுக்கு நினது அருளைத் தரமாட்டாயோ ?

(வி - ரை) போர்க்களத்தில் பல பேரிகைகளும் தாளங்களும் பறைகளும் முழங்கியபோது முருகப்பெருமானது சிற்றடிகளில் பொருந்தியுள்ள சதங்கைகளின் இனிய நாதம் மேலெழும்பியது வியக்கத்தக்கதன்று. ஏனெனில், அவரது அரையிற் கட்டிய கிண்கிணியின் ஓசை பதினுலுலகங்களிலும் கேட்டதாகப் பின் வரும் கந்தரலங்காரப் பாடலில் கூறப்பட்டிருக்கிறது.

“ மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளை திருவரையிற்
கிண்கிணி யோசை பதினு லுலகமுங் கேட்டதுவே !”

கலவியின் நலம் அற்ப சுகமாயினும் மகா அனுபவமாதலால், பழுதற வோதிக் கடந்து பகைவினை தீரத் துறந்து பல பல யோகத்தில் இருந்தவர்களுக்கும் அதைச் சற்றும் விடுவது இயலாத காரியம். அவ்வாசையை யொழிக்கவல்லது எம்பெருமானது அருள் ஒன்றே. எம்பெருமானது அருளை நாடி அதைப்பெறும் நெறியில் நின்றொழுகி அவரது பாதமலர்களை அடைவதனுலுண்டாகும் பேரின்பத்தின் தன்மையைச் சிறிதளவேனும் உணர்ந்தவர்க்கே சிற்றின்ப வாசையை யொழிக்க வேண்டுமென்ற இச்சை பிறக்கும். (௪௦)

*தனதன தந்தத் தனத்த னதன*
*தனதன தந்தத் தனத்த னதன*
*தனதன தந்தத் தனத்த னதன—தனதான.*

மலரணி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி யின்பச் செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கி லேமுக மதியாலே

மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி வலையாலே

நிலவெறி யங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் கிலுக்கி லேகன
நிதிபறி யந்தப் பிலுக்கி லேசெயு மொயிலாலே

நிதமிய லுந்தூர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிஷமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்

அலையநி னைந்துற் பனத்தி லேயநு
தினமிகு மென்சொற் பனத்தி லேவர
அறிவும ழிந்தற் பனத்தி லேநித முலைவேனோ?

அசடனை வஞ்சச் சமர்த்த னகிய
கசடனை யுன்சிற் கடைக்க ணடியு
மலர்கொடு நின்பொற் பதத்தை யேதொழ அருள்தாராய்!

பலபல பைம்பொற் பதக்க மாரமு
மடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையு மணிவோனே!

பதியினில் மங்கைக் கதித்த மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழநியி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே!

(ப - ரை) பல பல பைம் பொன் பதக்கம் ஆரமும் - பசும் பொன்னினாற் செய்யப்பட்ட அநேக பதக்கங்களையும் ஆரங்களையும், அடிமை சொலும் சொல் - நினது அடிமையாகிய அடியேன் (நின்னைப் புகழ்ந்து) கூறும் சொற்களாகிய,

தமிழ் ப(ன்)னீரொடு - தமிழ் மொழிகளை (வாசனை பொருந்திய) பன்னீராகக் கருதி அவைகளுடன், பரிமளம் மிஞ்சு அ கடப்பமாலையும் - நறுமணமிக்க உனக் குகந்த கடப்பமலர் மாலையையும், அணிவோனே -அணிபவனே !, பதியினில் நீ எழுந்தருளியிருக்கும் எண்ணிறந்த திருத்தலங்களுக்குள், மங்கை கதித்த மா மலையொடு - வள்ளிநாயகி சிறந்த பதவியை அடைந்த மாட்சிமை பொருந்திய தலமான வள்ளிமலையிலும், சில குன்றில் தரித்து - மற்றும் சில குன்றுகளிலும் நிலைமையாக எழுந்தருளி நின்று, வாழ்வு உயர் பழநியில் அன்புற்று இருக்கும் - அமர்ந்திருப்பதற்குச் சிறந்த தலமான பழநியின்மீது அன்பு பூண்டுள்ள, வானவர் பெருமாளே - தேவர்கள் நாயகனே !, மலர் அணி கொண்டை சொருக்கிலே - புஷ்பங்கள் அணிந்துகொண்டு கூந்தலைச் சொருகிக்கொண்டுள்ள கொண்டையி னாலும், அவள் சொலும் மொழி இன்ப செருக்கிலே - அப்பெண் பேசும் வார்த் தைகளில் பொருந்தி நின்று மனத்தில் இன்பத்தை ஊட்டும் கர்வத்தினாலும், கொடுமை (உம் - அசை) அடர் நெஞ்ச திருக்கிலே - கொடிய எண்ணங்கள் நெருங்கிப் பொருந்தியுள்ள மனத்தின் வஞ்சகத்தி(னால் செய்யும் செயல்களி) னாலும், முக மதியாலே - சந்திரனையொத்த முகத்தினாலும், மருவு நிதம்ப தடத்திலே - பொருந்தியுள்ள அல்குலின் விசாலத்தினாலும், நிறை பரிமள கொங்கை குடத்திலே - வாசனை வீசுபவைகளும் குடத்தை யொத்தவைகளு மான தனபாரங்களினாலும், மிக வலியவும் வந்து ஒத்து இடத்திலே - தானாக வலிய வந்து அடியேன் மீது வேகத்துடன் முட்டும் காரணத்தாலும், விழி வலையாலே - பார்வைக்குள் அகப்பட்டவர் மனத்தை வளைத்திழுக்கும் வலையை யொத்த கண்களினாலும், நிலவு எறி அங்க குலுக்கிலே - சந்திரனது காந்தியை வீசும் தேகத்தை அசைத்து மினுக்குவதனாலும், எழில் வளை புனை செம் கை கிலுக்கிலே - அழகிய வளைகளை அணிந்துள்ள சிவந்த கைகள் அசையும் போது உண்டாகும் ஒலியினாலும், கன நிதி பறி அந்த பிலுக்கிலே - ஏராளமான பொருளைப் பிடுங்குவதற்காக வழக்கமாகச் செய்யும் ஜம்பத்தினாலும், செயும் ஒயிலாலே - செய்யும் ஆடம்பரத்தினாலும், நிதம் இயலும் துர்க்குணத்திலே - எப் போதும் பொருந்தியுள்ள துர்க்குணத்தினாலும், பரவசமுடன் அன்புற்று - அடி யேன் என்வசமழிந்து அப்பெண்ணின்மீது ஆசைகொண்டு, இணக்கிலே ஒரு நிமிஷம் இணங்கி - (அப்பெண்ணின்) சேர்க்கையில் ஒரு நிமிஷநேரம் பொருந் தியிருந்து, கணத்திலே வெகு மதி கேடு ஆய் - அந்த நிமிஷத்திலேயே அறிவு மிகவும் குறையப்பெற்று, அலைய நினைந்து - அவ் வாசையில் சுழலவேண்டு மென்று கருதி, உற்பனத்திலே - பொய்த்தோற்றத்தினாலும், அநுதினம் மிகும் மென் சொப்பனத்திலே - நாளுக்கு நாள் அதிகரிக்கும் இனிய சொப்பனத் தினாலும், வர - மேன்மேலும், அறிவும் அழிந்து - அறிவும் முற்றிலும் அழியப் பெற்று, அற்பன் - அற்ப ஆசையை உடைய அடியேன், அத்திலே நிதம் உலை வேனோ - அவ் வற்ப வாசையிலேயே தினந்தோறும் அலைந்து திரியலாமோ?, அச

டன் (ஐ - சாரியை) - குற்றம் பொருந்தியவனும், வஞ்ச சமர்த்தனாகிய கசடன் (ஐ - சாரியை) - வஞ்சகச் செயல்களைப் புரிவதில் சாமர்த்தியசாலியும் கீழ்மகனு மாகிய அடியேன், உன் சித் கடைக்கண் நாடி (உம் - அசை) - ஞானத்தை யூட்ட வல்ல நினது கடைக்கண் நோக்கத்தைப் பெறவேண்டுமென்ற ஆசைகொண்டு, மலர் கொடு நின் பொன் பதத்தையே தொழ - மலர்களைக்கொண்டு நினது அழ கிய பாதங்களையே வணங்குமாறு, அருள் தாராய் - அடியேனுக்கு அருள் புரிய வேண்டும்.

(வி - ரை) முருகப்பெருமானுக்குத் தமிழ் மொழியின்மீதுள்ள ஆர்வத்தின் அளவு அப்பெருமான் தமக்கு உகந்த கடம்ப மலர் மாலைக்கு நறுமணம் ஊட்டு வதற்காக அத் தமிழ் மொழியைப் பரிமளமிக்க பன்னீராக உபயோகிக்கிறார் என்று சுவாமிகள் கூறுவதனால் நன்கு விளங்குகிறது. ஞான சொரூபியான முருகப்பெருமானுக்கு அவரைச் சிவபெருமான் 'ஞானக்கனி நீயே!' என்று கூறிய தலமான பழநியின்மீது அன்பு அதிகமென்று சுவாமிகள் இப்பாடலில் கூறுகிறார். உற்பனம் - தோற்றம்; அதாவது, உண்மையிலேயே துன்பத்தைத் தரும் விஷய சுகங்கள் இன்பத்தைத் தருபவைகளாகத் தோன்றுதல். இதையே சுவாமிகள் மற்றொரு பாடலில் 'ஆர்வன பரிசன தெரிசன கந்த ஓசைகள் பலபல விதமுள துன்பம்' என்று கூறி விளக்கிக் காட்டியுள்ளார். 'மென் சொப்பனம்' - இனிமையைத் தரும் சொப்பனமானது பொய்யாக இருப்பது போலவும் விழித் துக் கொண்டவுடன் மறைந்து துக்கத்தை விளைவிப்பது போலவும் கலவியின்பம் உண்மையான இன்பமாக இராமல் பொய்யாக இருப்பதுமன்றி ஞானேதயமாகிப் பேரின்பத்தின் தன்மையை உணர்ந்தவருக்குப் பொய்யென எளிதில் விளங்கும். சித் கடைக்கண் - ஞானத்தை உதிக்கச் செய்யவல்ல கடைக்கண் நோக்கம். முருகப்பெருமானுடைய கடைக்கணேக்கமானது எவர் மனத்தினுள் பாய்கிறதோ அவர் மனத்தினிலுள்ள அகங்காரத்தை அழித்து, ஞானசொரூபியான அப்பெரு மானது பாதமலர்களை அடைவதற்கவசியமான ஞானத்தை உதிக்கச் செய்யும். இக்கருத்து 81-ம் பக்கத்தில் விளக்கப்பட்டிருப்பதைக் காண்க. (அக)

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன—தனதான.

**வி**தமி சைந்தினி தாமலர் மாலைகள்
குழல ணிந்தநு ராகமு மேசொலி
வித ரணஞ்சொலி வீறுக ளேசொலி யழகாக

விரிகு رும்பைக ளாமென வீறிய
கனக சம்ப்ரம மேருவ தாமதி
விரக மொங்கிய மாமுலை யாலெதி ரமர்நாடி

இதமி சைந்தன மாமென வேயின
நடைந டந்தனர் வீதியி லேவர
எவர்க ளுஞ்சித மால்கொளு மாதர்கண் வலையாலே

எனது சிந்தையும் வாடிவி டாவகை
அருள்பு ரிந்தழ காகிய தாமரை
இருப தங்களி லுலெனை யாள்வது மொருநாளே ?

மதமி சைந்தெதி ரேபொரு சூரனை
யுடலி ரண்டுகு றுய்விழ வேசின
வடிவு தங்கிய வேலினை யேவிய அதிதீரா !

மதுர இன்சொலி மாதுமை நாரணி
கவுரி யம்பிகை யாமளை பார்வதி
மவுன சுந்தரி காரணி யோகினி சிறுவோனே !

பதமி சைந்தெழு லோகமு மேவலம்
நொடியில் வந்திடு மாமயில் மீதொரு
பவனி வந்தக்ரு பாகர சேவக விறல்வீரா !

பருதி யின்ப்ரபை கோடிய தாமெனும்
வடிவு கொண்டருள் காசியின் மீறிய
பழநி யங்கிரி மீதினில் மேவிய பெருமாளே !

(ப - ரை) மதம் இசைந்து - அகங்காரங்கொண்டு, எதிரே பொரு சூரன் (ஐ - சாரியை) உடல் - எதிர்த்துப் போர் செய்த சூரபதுமனது தேகம், இரண்டு குறுய் விழ (ஏ - அசை) - இரண்டு பகுதிகளாகப் பிளவுபட்டு விழும் வண்ணம், சின வடிவு தங்கிய வேலினை ஏவிய அதி தீரா - கோபத்தின் வடிவத்தை எடுத்துக்கொண்ட வேலாயுதத்தைப் பிரயோகித்த மகா தீரனே!, மதுர இன் சொலி மாது - செவிக்கு இன்பத்தையும் உயிருக்கு நன்மையையும் விளைவிக்கும் மொழிகளைப் பேசும் பெண்கள் நாயகமும், உமை - உமாதேவியும், நாரணி - நாராயணனது சகோதரியும், கவுரி அம்பிகை யாமளை பார்வதி, (என்னும் திருநாமங்களை உடையவரும்), மவுன சுந்தரி - மோன நிலைமையிலமர்ந்த ஞானிகள் தமதுடே காணும் சுந்தர சொரூபியும், காரணி - உலகங்களை யெல்லாம் தோன்றச் செய்தவரும், யோகினி - காளியுமான (சங்கரிதேவி யருளிய), சிறுவோனே - பாலனே!, பதம் இசைந்து-ஒளி பொருந்தியதாய், எழு லோகமும் (ஏ - அசை) - மேலுலகங்கள் ஏழையும், நொடியில் - நொடிப் பொழுதில், வலம்

வந்திடு - வலமாசச் சுற்றி வந்த, மா மயில் மீது - சிறந்த மயிலின்மீது, ஒரு பவனி வந்த - ஒப்பற்ற விதமாக உலாவி வந்த, க்ருபாகர - கருணையின் வடிவமே!, சேவக - நாதனே, விறல் வீரா - வலிமை பொருந்திய வீரனே!, கோடி பருதியின் ப்ரபை அதாம் எனும் - கோடி சூரியர்களின் ஒளி என்று சொல்லத் தக்க (ஒளி வீசும்), வடிவு கொண்டு அருள் - திருமேனியைத் தாங்கியருளியவனும், காசியின் மீறிய பழநி அம் கிரி மீதினில் - காசியினும் சிறந்த தலமான பழநியிலுள்ள அழகிய மலையின் மீது, மேவிய பெருமாளே-எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, விதம் இசைந்து - கூலிக்கு (சுகமளிக்க) உடன்பட்டு, இனிதாம் மலர் மாலைகள் குழல் அணிந்து - இனிய வாசனை பொருந்திய மலர் மாலைகளைக் கூந்தலில் சூட்டிக் கொண்டு, அநுராகமும் (ஏ - அசை) சொலி - மிகுந்த காதல் கொண்டதாகக் கூறி, விதரணம் சொலி - விவேகங்கூறி, வீறுகள் (ஏ - அசை) சொலி - தங்கள் பெருமைகளை எடுத்துக்கூறி, அழகாக விரி குரும்பைகளாம் என - அழகாகப் பிரிந்து தென்னையின் இளங்காய்களை யொத்தவைகளாய், வீறிய கனக சம்ப்ரம மேரு அது ஆம் - சிறப்புற்ற தங்க நிறம் பொருந்தி இடம்பமாய்த் தோன்றி மேரு மலையை யொத்திருப்பவைகளும், அதி விரகம் ஓங்கிய - மிகுந்த விரகதாபத்தினால் புடைத்தெழுபவைகளுமான, மா முலையால் எதிர் அமர் நாடி - சிறந்த தனபாரங்களைப் பிரயோகித்து எதிர்த்துப் போர் செய்யக் கருதி, இதம் இசைந்து - அன்பு பாராட்டுவதுபோல் பாசாங்கு செய்து, அனம் ஆம் எனவே - அன்ன பக்ஷி என்றே கூறும்படி, இன நடை நடந்தனர் - அப்பறவைகளின் குலத்துக்கு இயல்பான நடையை யொத்த நடையுடையவர்களாய் நடந்து, வீதியில் (ஏ - அசை) வர - தெருவீதிக்கு வரும்பொழுது, எவர்களும் சி(த்)தம் மால் கொளும் மாதர் - யாவரும் மனமயங்கும்படி செய்யவல்ல விலைமாதர்களது, கண் வலையால் (ஏ - அசை) - கண்ணாகிய வலையிற் சிக்குவதனால், எனது சிந்தையும் வாடிவிடா வகை-அடியேனது மனமும் சோர்வடையாவண்ணம், அருள்புரிந்து - அடியேன்மீது கருணை கூர்ந்து, அழகாகிய தாமரை இரு பதங்களினால் - அழகிய தாமரைமலர்களை யொத்த நினது பாதங்களை அடியேன் தலைமீது சூட்டி, எனை ஆள்வதும் ஒரு நாளே - அடியேனை அடிமையாக்கிக் கொள்ளும் நாளும் ஒன்று உண்டோ?

(வி - ரை) தீய நெறியில் நின்ற அகங்காரத்தின் சொரூபியாயிருந்த சூரபதுமனை அழித்து விடாமல், முருகப்பெருமான் அவன் அப்போது கொண்டிருந்த வடிவத்தை மட்டும் அழித்து, அவ் வகங்காரத்தை நம்பெருமானைச்சுமந்து நிர்த்தனஞ் செய்வதும் அவரது புகழைக் கூறுவதுமான இருபகுதிகளாகப் பகுத்து அவனை யாட்கொண்டார். அவன் முதலில் பூண்டிருந்த அகங்கார சொரூபத்தைத் தூய்மையடையச்செய்து இரண்டு பகுதிகளாக்கின ஞான சக்தியாம் வேலாயுதமானது அவன் முருகப்பெருமானது நற்போதகத்தை ஏற்றுக் கொள்ளாததற்காக அவ்வாறு அவனைத் தண்டித்தது. ஞானசொரூபியான முரு

கப் பெருமானது சினமானது எவரையும் ஞான நெறியில் நிற்கச் செய்யுமேயன்றி அழிக்காது என்னும் உண்மையைச் சூரபதுமனது சரித்திரம் நன்கு விளக்குகிறது. முற்றும் துறந்த முனிவராயினும் மானிடராய்ப் பிறந்தார் எவர்க்கும் பெண்ணாசை யகற்றுதல் அரிதாதலின், சுவாமிகள் மனிதனுகப் பிறந்து பெண்ணாசையிலுழலும்படி பிரமதேவர் தமது தலையில் எழுதிய எழுத்து அழியும் வண்ணம் முருகப் பெருமானை நோக்கித் தமது தலையின்மீது அவரது பாதமலர்களைச் சூட்டும்படி வேண்டிக்கொண்டார்போலும்! (அஉ)

தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன
தானந் தத்தன தானன தானன—தனதான.

வாதம் பித்தமி டாவயி றீளைகள்
சீதம் பற்சனி சூலைம கோதர
மாசங் கட்பெரு மூலவி யாதிகள் குளிர்காசம்

மாறுங் கக்கலொ டேசில நோய்பிணி
யோடுந் தத்துவ காரர்தொ ணூறறு
வாருஞ் சுற்றினில் வாழ்சதி காரர்கள் வெகுமோகர்

சூழ்துன் சித்ரக பாயைமு வாசைகொ
டேதுஞ் சற்றுண ராமலெ மாயைசெய்
சோரம் பொய்க்குடி லேசுக மாமென இதின்மேவித்

தூசின் பொற்சர மோடுகு லாயுல
கேழும் பிற்பட வோடிடு மூடனை
தூவஞ் சுத்தடி யாரடி சேரநி னருள்தாராய்!

தீதந் தித்திமி தீதக தோதிமி
டூடுண் டட்டுடு டூடுடு டூடுடு
சேசெஞ் செக்கெண தோதக தீகுட வெனபேரி

சேடன் சொக்கிட வேலைக டாகமெ
லாமஞ் சுற்றிடவேயசு ரார்கிரி
தூவும் பொட்டெழ வேயனல் வேல்விடு மயில்வீரா!

வேதன் பொற்சிர மீதுக டாவிந
　　லீசன் சற்குரு வாயவர் காதினில்
　　மேவும் பற்றிலர் பேறரு ளோதிய　　　முருகோனே !
வேஷங் கட்டிபி னேகிம காவளி
　　மாலின் பித்துற வாகிவி ணோர்பணி
　　வீரங் கொட்பழ நுபுரி மேவிய　　　பெருமாளே.

(ப - ரை) பேரி - பேரிகையானது, தீதந் தித்திமி * * * தீகுட, என - என்று ஒலிக்க, சேடன் சொக்கிட - ஆதிசேஷன் மயங்குமாறும், வேலை கடாகம் எலாம் அஞ்சுற்றிட (ஏ - அசை) - விரிந்த சமுத்திர முழுவதும் பயப்படுமாறும், அசுரார் கிரி தீவும் - அசுரர்களான சூரபதுமனும் தாரகனும் கிரௌஞ்ச மலையும் (சூரபதுமனது நகரமான வீரமகேந்திரபுரி இருந்த) தீவும், பொட்டெழ (ஏ - அசை) - தூளபடுமாறும், அனல் வேல் விடு - வெப்பமிக்க வேலாயுதத்தைப் பிரயோகித்த(வனும்), மயில் வீரா - மயிலை வாகனமாகவுடைய(வனுமான) வீரனே !, வேதன் பொன் சிரம் மீது - பிரமதேவரது அழகிய தலைகளின்மீது, கடாவி - குட்டி, நல் ஈசன் சத் குருவாய் - ஜீவர்களுக்கு நன்மை புரியும் சர்வேசுவரரான சிவபெருமானுக்கு உண்மையைப் போதிக்கும் குருவாய் அமர்ந்து, அவர் காதினில் - அவரது காதுக்குள் இரகசியமாக, மேவும் பற்று இலர் - ஆசையான தொந்தம் இல்லாத பெரியார், அருள் பேறு - பெறத்தக்க அருளாகிய பிரணவத்தை, ஓதிய முருகோனே - உபதேசித்தருளிய ஞானசொரூபியே !, வேஷம் கட்டி பின் ஏகி - மாறுவேடம்பூண்டு சென்று, மகா வ(ள்)ளி மாலின் - சிறந்த வள்ளிநாயகியின்மீது கொண்ட பெருங்காதலினால், பித்து உறவாகி - சகதுக்க மோகங்களின் சம்பந்தமுள்ளவன் போல நடித்தவனும், வி(ண்)ணோர் பணி - தேவர்கள் வணங்குமாறு, வீரம் கொள் - பராக்கிரமம் பொருந்தியவனும், பழநு புரி மேவிய - பழநித்தலத்தில் எழுந்தருளியவனுமான, பெருமாளே - பெரியோனே !, வாதம் பித்தம், மிடா வயிறு - பெருவயிறு - ஈளைகள் - கோழையினால் உண்டாகும் நோய்கள், சீதம், குளிர் நோய், பல் ச(ன்)னி - பலவிதமான சன்னிகள், சூலை - சூலத்தினால் குத்துவதுபோல் வலியுண்டாகும் நோய், மகோதரம் -, (அம் - சாரியை) கண் மாசு - கண்ணில் உண்டாகும் நோய், பெரு மூலம் - கொடிய மூலரோகம், வியாதிகள் - என்னும் வியாதிகளும் , குளிர் காசம் மாறங் கக்கலொடு (ஏ - அசை) சில நோய் - குளிர்சுரம் காசரோகம் மாறி மாறிக் கக்கலுண்டாகும் சிலநோய்கள், பிணியோடும் - என்னும் வியாதிகளோடும், சுற்றினில் வாழ் - என்னைச் சூழ்ந்து வசிக்கும், தத்துவகாரர் தொண்ணூறறுவாரும் - தொண்ணூற்றாறு தத்துவங்களும், சதிகாரர்கள் - கொடிய வஞ்சகர்கள், வெகு மோகர் - மிகுந்த மயக்கத்தை யுண்டுபண்ணுபவர்கள் ; (அவர்கள்), துன் சூழ் சித்ரகபாயை - நெருங்கிச் சூழ்ந்துள்ள விசித்திரமான சட்டையும், மூ ஆசை

கொ(ண்)டு எதும் சற்று உணராமல் (எ - அசை) - மூவாசைகளில் உழன்று எவ் விஷயத்தையும் ஆராய்ந்தறிய முடியாமல், மாயை செய் - மருட்சியைத்தரும், சோரம் பொய் குடிலே - வஞ்சகத்தன்மை பொருந்தியதும் நிலையற்றதுமான குடிசையுமாகிய உடம்பையே, சுகம் ஆம் என - சுகத்தைத்தரும் இடமாகக்கருதி, இதின் மேவி - இதில் விருப்பத்துடன் பொருந்திநின்று, தூசின் பொன் சரமோடு - அழகிய ஆடையையும் பொன்னினாற்செய்த ஆரங்களையும் அணிந்துள்ள மாதர்களுடன், குலாய் - பழகிக்களித்து, உலகு ஏழும் பிற்பட ஓடிடும் மூடன் (ஐ - சாரியை) - ஏழு உலகங்களும் பின்னடையுமாறு வெகு தீவிரமாக விஷய சுகங்களைத் தேடித்திரியும் மூடனாகிய அடியேன், தூ அம் சுத்த அடியார் அடி சேர - தூய்மை அடைந்ததனால் சுத்தர்களான நினது அடியவர்களுடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கும்படி, நின் அருள் தாராய் - நினது அருளைத் தரவேண்டும்.

(வி - ரை) ஆசைகளே வினைகளுக்குக் காரணமாயும், வினைகளே ஓயாப் பிறவிகளுக்குக் காரணமாயும் இருப்பதனால், 'மேவும் பற்று' என்பதற்கு ஆசையான தொந்தம் என்று பொருள் கூறப்பட்டது. அவ்வித ஆசைகளை யொழித்து மனப்பதைப்பு அற்றவர்களே மெய்ஞ்ஞானத்தைப் பெறுவர். மெய்ஞ்ஞானம் பிரணவப்பொருளேயாகும். வள்ளிநாயகியின்மீது காதல்கொண்ட முருகப்பெருமான் அந்நாயகியைத் தேடிச்சென்றபோது தமது சொரூபத்தை மறைத்து வேட்டைக்குச்சென்ற இராஜனது வேடத்தையும், விருத்தாப்பியமடைந்த சிவனடியார் வேடத்தையும் பூண்டு சென்று, தாம் உலகத்து ஆடவரைப்போல் காதல் கொண்டதாக நடித்து, நின்மலராயிருந்தும் சுகதுக்க மோகங்களை அனுபவிப்பது போல் பாசாங்கு செய்தார். அப்பெருமான் சிறுபாலகனா யிருந்தபோது, அவரது பாலலீலைகளைக்கண்டு வியப்புற்று மயங்கிக் கோபமுற்ற தேவர்கள் அவரை எதிர்க்க, அவர் மலைகளின் சிகரங்களைச் சுலபமாய்ப் பறித்தெறிந்து அவர்களைச் சங்கரித்து, பிறகு பிருகஸ்பதி பகவானது வேண்டுகோளுக்கிசைந்து அவர்களை மீண்டும் உயிர்ப்பித்தார். அப்போது தேவர்களெல்லோரும் முருகப்பெருமானைப் பணிந்து அவரது பராக்கிரமத்தைப் புகழ்ந்தனர். தத்துவங்கள் 96-மனிததேகத்தில் பொருந்தியுள்ளன ; அவையாவன :— ஆன்மதத்துவம் - 24, நாடி - 10, அவஸ்தை - 5, மலம் - 3, குணம் - 3, மண்டலம் - 3, பிணி - 3, விகாரம் - 8, ஆதாரம் - 6, தாது - 7, வாயு - 10, கோசம் - 5, வாயில் - 9. மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் மூன்று ஆசைகளிலும் உழலும் தேகமானது மாயையின் சொரூபமாக நின்று உண்மையை ஆராய்ந்தறியவொட்டாமல் தடுக்கும் வஞ்சகக் கபட மூடியாக இருக்கிறது. அதுவேறு தான்வேறு என்பது உணராமல் அதைத்தானாகப் பாவிப்பதனாலேயே மனிதன் சுகதுக்கங்களை அனுபவிக்கிறான். அடியார் பெருமையைப்பற்றி 116-ம் பக்கத்திலுள்ள விருத்தியுரையைப்பார்க்க. பழனிபுரி - செய்ப்பதியான வயலூராகவும் இருக்கலாம். (அங)

# 2. திருவாவினன்குடி—பழநி



*தந்த தானன தானதன தானதன*

*தந்த தானன தானதன தானதன*

*தந்த தானன தானதன தானதன—தனதான.*

பஞ்ச பாதகன் பாவிமுழு மூடன்வெகு
வஞ்ச லோபியன் சூதுகொலை காரன்மதி
பண்கொ ளாதவன் பாவகடலூடு நுழை பவுஷாசை

பங்கன் மோதியம் பாழ்நரகில் வீணின்விழ
பெண்டிர் வீடுபொன் தேடிநொடி மீதில்மறை
பஞ்ச மாமலம் பாசமொடு கூடிவெகு சதிகாரர்

அஞ்சு பூதமுண் டாகடிய காரரிவர்
தங்கள் வாணிபங் காரியம லாமலரு
ளன்பர் பாலுடன் கூடியறி யாதபுக ழடியேனை

அண்டர் மாலயன் தேடியறி யாதவொளி
சந்த்ர சேகரன் பாவைவிளை யாடுபடி
கந்த நாடுடன் கூடிவிளை யாடஅருள் புரிவாயே !

வஞ்ச மாசுரன் சேனைகட லோடுகுவ
டுங்க வேயினன் போலவொளிர் வேலைவிடு
வண்கை யாகடம் பேடுதொடை யாடுமுடி முருகோனே !

மங்கை மோகசிங் காரகுரு ராமரிட
தங்கை சூலியங் காளியெமை யீணபுகழ்
மங்க ளாயிசந் தானசிவ காமியுமை யருள்பாலா !

கொஞ்சு மாசுகம் போலமொழி நீலகடை
பெண்கள் நாயகந் தோகைமயில் போலிரச
கொங்கை மால்குறம் பாவையயல் நீரவர அணைவோனே !

கொண்டல் சூழுமஞ் சோலைமலர் வாவிகயல்
கந்து பாயநின் றுடுதுவர் பாகையுதிர்
கந்தி யோடகஞ் சேர்பழநி வாழ்குமர பெருமாளே !

(ப - ரை) வஞ்ச மா அசுரன் சேனை கடலோடு குவடு உங்க (ஏ - அசை) - வஞ்சகமுள்ள பெரிய அசுரனுடைய சூரபதுமனது சேனையும் சமுத்திரமும் கிரௌஞ்ச மலையும் அழியுமாறு, இனன் போல ஒளிர் வேலை விடு - சூரியனைப்

போலப் பிரகாசிக்கும் வேலாயுதத்தைப் பிரயோகித்த, வண் கையா - அழகிய கையை யுடையவனே !, கடம்பு ஏடு தொடை ஆடும் முடி முருகோனே - கடம்ப மலரின் இதழ்களால் தொடுக்கப்பட்ட மாலையானது அசைந்து விளங்கும் முடியையுடைய முருகனே !, மங்கை - மங்கைப் பருவத்திலேயே எந்நாளும் இருப்பவரும், மோக சிங்கார ரகுராமரிட தங்கை - யாவர் மனத்தையுங் கவரத் தக்க பேரழகு வாய்ந்தவரும் இரகு வம்சத்தில் அவதரித்தவருமான ஸ்ரீ ராமரு டைய தங்கையாம் நாராயணியும், சூலி - சூலத்தைக் கையிலேந்தியவரும், அம் காளி - அழகிய காளியும், எமை ஈண - ஜீவர்களாகிய நம்மைப் பெற்றருளிய (வரும்), புகழ் மங்கள ஆயி - கீர்த்தி பெற்றவரும் சகல மேன்மைகளையும் தந்தரு ளும் தாயாரும், சந்தான சிவகாமி - சந்தான சிவகாமி என்னும் திருநாமம் பெற்ற வருமான, உமை - உமாதேவியார், அருள் பாலா - தந்தருளிய பாலனே !, கொஞ் சும் மா சுகம் போல மொழி - கொஞ்சிப் பேசும் சிறந்த கிளியைப்போலப் பேசு பவளும், நீல கடை - நீலோற்பலத்தை யொத்த கண்களை உடையவளும், பெண் கள் நாயகம் - பெண்களுக்குள் தலைமை பெற்றவளும், தோகை மயில் போல் - தோகையையுடைய மயிலைப் போன்றவளும், இரச கொங்கை மால் குறம்பாவை- இன்பத்தைத் தரும் தனபாரங்களை உடையவளும் மிகுந்த காதலையுடையவளுமான குறப்பெண்ணாகிய வள்ளிநாயகி, அவல் தீர வர அணைவோனே - தனது ஆவ லைத் தீர்த்துக்கொள்வதற்காக நின்னையணுகியபோது அவளை யணைந்துகொண்டு அருள் புரிந்தவனே !, கொண்டல் சூழும் அம் சோலை - மேகங்கள் சூழ்ந்துள்ள அழகிய சோலைகளும், மலர் வாவி கயல் - மலர்கள் நிறைந்த தடாகங்களிலுள்ள கயல்மீன்கள், கந்து பாய - அருகே துள்ளிப் பாய்வதனால், நின்று ஆடு - நின்று ஆடி, துவர் பாகை உதிர் - துவர்க்கும் பாக்கை உதிர்க்கும், கந்தியோடு அகம் சேர் - பாக்குமரங்களும் தன்னகத்தே பொருந்தப்பெற்றுள்ள, பழநி வாழ் குமர பெருமாளே - பழநித்தலத்தில் எழுந்தருளியிருக்கும் குமார சுவாமியே !, பஞ்ச பாதகன் - பஞ்ச மகா பாதகங்களையும் செய்பவனும், பாவி - பாவத்தைச் செய் பவனும், முழுமூடன் - அறிவென்பது சிறிதுமில்லாதவனும், வெகு வஞ்ச லோபி யன் - மிகுந்த வஞ்சக சுபாவம் பொருந்தியவனும் ஈயாத லோபியும், சூது கொலைகாரன் - சூது கொலை இவைகளைப் புரிபவனும், மதி பண் கொ(ள்)ளாத வன் - புத்தியானது சீரடையப் பெறாதவனும், பாவ கடல் ஊடு நுழை பவுஷ ஆசை பங்கன் - பாவக்கடலுக்குள் நுழையச் செய்யும் ஜடவுலக வாழ்க்கையின் மீதுள்ள ஆசையாகும் குற்றம் பொருந்தியுள்ளவனும், மோதி (அம் - அசை) பாழ் நரகில் வீணில் விழ - வேகத்துடன் தாக்கிப் பாழான நரகத்தின் கதவைத் திறந்து அதில் விழக்கருதி, பெண்டிர் வீடு பொன் தேடி - மனைவி வீடு பொருள் இவைகளை விருப்பத்துடன் தேடியடைந்து, நொடிமீதில் மறை - கணப்பொழு தில் உயிரிழந்து மறைபவனும், பஞ்ச மா மலம் - ஆணவம் கன்மம் மாயை மாயே யம் திரோதானம் என்னும் ஐந்து மலங்களாகிய, பாச மொடு கூடி - விலங்குகள்

பூட்டப்பெற்று, வெகு சதிகாரர் - மிகுந்த வஞ்சனைகளைப் புரிபவர்களும், முண்டு ஆகடியகாரர் - முரண்பட்டு நின்று கொடுமைகளைச் செய்பவர்களுமான, அஞ்சு பூதம் இவர் தங்கள் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் ஐந்து பூதங் களுடைய, வாணிபம் காரியம் அலாமல் - இலாபம் காரியம் இவைகளைக் கவனிப் பதல்லாமல், அருள் அன்பர் பால் உடன் கூடி அறியாத புகழ் அடியேன் (ஐ - சாரியை) - நினது அருளைப்பெற்ற அடியவர்களிடஞ் சென்று அவர்களு டன் சகவாசஞ் செய்தறியாதவன் என்னும் கீர்த்திபெற்ற அடியேன், அண்டர் மால் அயன் தேடி அறியாத - தேவர்களும் திருமாலும் பிரமதேவரும் அடிமுடி தேடி அறியமுடியா வண்ணம் நின்ற, ஒளி சந்த்ர சேகரன் - ஜோதிப் பிழம்பாய் விளங்கியவரும் சந்திரனைச் சடாமுடியி லணிந்துகொண்டவருமான சிவபெரு மான், பாவை விளையாடும் - அற்புத நிர்த்தனம் செய்யும் இடமான, படிக அந்த நாடுடன் கூடி - படிகத்தைப்போல் வெள்ளிய ஒளி வீசும் நாடான சுத்த நிரா காச வெளியில் போய்ச் சேர்ந்து அங்குள்ளோருடன் கலந்து, விளையாட அருள் புரிவாயே - குதித்துக் களிக்கும்படி அருள்புரியவேண்டும்.

(வி - ரை) 'ஆர்வன பரிசன தெரிசன கந்த ஓசைகள்' என்னும் ஐந்து புலன் களின் தாபத்தைத் தீர்ப்பதான விஷயசுகங்களைத் தேடுவதில் மனிதன் பல பாவங் களைச் செய்யும்படி நேரிடுகிறதாதலின், உலக வாழ்க்கையிலுள்ள ஆசை ஒருவ னைப் பாவக்கடலில் நுழையச் செய்கிறதென்று இப்பாடலிற் கூறப்பட்டிருக் கிறது. முருகப்பெருமானது அருளைப்பெற்ற அடியவர்களுடன் கூடுவதே முத்தி யடைவதற்கு ஒப்பற்ற வழியென்பது 150, 166-ம் பக்கங்களில் விளக்கப்பட் டிருப்பதைக் காண்க. உங்க - உக ; குறம்பாவை - குறப்பாவை ; மெலித்தல் விகாரம். அவல் - ஆவல். பாவை - ஒருவகைக் கூத்து. (அச)

தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன
தந்தன தானன தத்தத் தந்தன—தனதான.

சிந்துர கூரம ருப்புச் செஞ்சரி
செங்கைகு லாவந டித்துத் தென்புற
செண்பக மாலைமு டித்துப் பண்புள தெருவூடே

சிந்துகள் பாடிமு ழக்கிச் செங்கய
லம்புகள் போலவி ழித்துச் சிங்கியில்
செம்பவ ளாடைது லக்கிப் பொன்பறி விலைமாதர்

வந்தவ ராரென ழைத்துக் கொங்கையை
யன்புற மூடிநெ கிழ்த்திக் கண்பட
மஞ்சணி ராடிமி னுக்கிப் பஞ்சணை தனிலேறி

மந்திர மோகமெ மூப்பிக் கெஞ்சிட
முன்றலை வாயில டைத்துச் சிங்கிகொள்
மங்கைய ராசைவி லக்கிப் பொன்பத மருள்வாயே !

இந்திர நீலவ னத்திற் செம்புவி
யண்டக டாகம ளித்திட் டண்டர்க
ளெண்படு சூரைய ழித்துக் கொண்டரு ளொருபேடி
யின்கன தேரைந டத்திச் செங்குரு
மண்டல நாடும ளித்துப் பஞ்சவ
ரின்புறு தோழ்மையு டைக்கத் தன்திரு மருகோனே !

சந்திர சூரியர் திக்கெட் டும்புக
ழந்தமில் வாழ்வது பெற்றுத் தங்கிய
சங்கர னுர்செவி புக்கப் பண்பருள் குருநாதா !
சம்ப்ரம மானகு றத்திக் கின்புறு
கொங்கையின் மேவுச மர்த்தச் சுந்தர
தண்டமிழ் சேர்பழ நிக்குட் டங்கிய பெருமாளே !

(ப - ரை) இந்திர நீல வனத்தில் செம் புவி அண்ட கடாகம் - இந்திர நீல வனத்தில் (அன்று) வளமை பொருந்திய பூலோகத்தையும் விரிந்த வானுலகத்தை யும், அளித்திட்டு - காத்து, அண்டர்கள் எண் - வானவர்களெல்லோரும், படு சூரை அழித்து - அனுபவித்துவந்த துன்பத்தை யகற்றி, கொண்டு அருள்-அவர் களை ஆட்கொண்டருளியவரும், ஒரு பேடியின் கன தேரை நடத்தி - ஒப்பற்ற வில்லியும் சாபத்தினுல் பேடியானவனுமான அர்ச்சுனனது சிறந்த இரதத்தைச் சாரதியாகவிருந்து செலுத்தியவரும், செம் குரு மண்டல நாடும் அளித்து - செழிப்பான பரதகண்டம் என்னும் நாட்டை (ஆளும் உரிமையைப் பாண்டவர் களுக்கு) மீட்டுக்கொடுத்து, பஞ்சவர் இன்பு உற தோழ்மை உடை - பாண்டவர் களுக்கு இன்பத்தைத்தரும் நட்பை அவர்களிடத்துப் பூண்டவருமான, கத்தன் திரு மருகோனே - மகாவிஷ்ணுவின் செல்வமருகனே !, சந்திர சூரியர் - சந்திர னும் சூரியனும், திக்கு எட்டும் புகழ் - உலகத்தின் எட்டுத் திக்குகளிலும் உள்ளவர் களால் புகழப்படுவதும், அந்தம் இல் வாழ்வு அது பெற்று - முடிவில்லாததுமான மேன்மையான வாழ்வைப்பெற்று, தங்கிய - நிலைமையாக அமர்ந்துள்ள (சடா முடியையுடைய), சங்கரனுர் - சிவபெருமானது, செவி புகு அ பண்பு-செவியில் புகத்தக்க தகைமை வாய்ந்த உபதேசத்தை, அருள் குரு நாதா - உபதேசஞ் செய் தருளிய குருநாதனே !, சம்ப்ரமமான குறத்திக்கு இன்பு உற - ஆடம்பரமான அழகு வாய்ந்த குறப்பெண்ணுன வள்ளிநாயகிக்கு நின்னை யணைவதனுலுண்டா

கும் இன்பத்தை யூட்டுவிக்கும், கொங்கையின் மேவு சமர்த்த - தனபாரங்களின் மீது பொருந்தி அணையும் சாமர்த்தியசாலியே, சுந்தர - நிகரற்ற அழகு வாய்ந்த வனே !, தண் தமிழ் சேர் - இன்பத்தைத் தரும் தமிழ் மொழியில் (விருப்பத் துடன்) பொருந்தியிருப்பவனும், பழநிக்குள் தங்கிய - பழநித்தலத்துக்குள் நிலை மையாக எழுந்தருளியிருப்பவனுமான, பெருமாளே - பெரியோனே !, சிந்துர கூர் (அ - இடைச்சொல்) மருப்பு செம் சரி - யானையின் கூர்மையான தந்தத்தி னூற் செய்த அழகிய கைவளையல்கள், செங்கை குலாவ - சிவந்த கைகளில் அழ காய்த் தோன்ற, நடித்து - நடனஞ்செய்து, தென்பு உற - குதூகலத்துடன், செண்பக மாலை முடித்து - செண்பக மலர்கள் தொடுத்த மாலையைச் சூட்டிக் கொண்டு, பண்பு உள தெருவூடே - தக்க தெருவின் வழியே, சிந்துகள் பாடி முழக்கி - சிந்து என்று சொல்லப்படும் பாடல்களைப் பாடிக் கோஷித்து, செம் கயல் அம்புகள் போல விழித்து - நன்றாய் வளர்ந்த கயல்மீனை யொத்த கண் களின் பார்வையானது (ஆடவர்கள் மனத்தில்) அம்புகளைப் போல் பாயும்படி விழித்து, சிங்கி இல் - நாணமின்றி, செம் பவள ஆடை துலக்கி - சிவந்த பவ ளத்தை யொத்த ஆடையானது பிரகாசிக்கும்படி மினுக்கிக் காட்டி, பொன் பறி விலை மாதர் - (ஆடவர்களது கையிலுள்ள) பொருளைப் பிடுங்கிக்கொள்ளும் விலைமாதர்கள், வந்தவர் ஆர் என அழைத்து - (தங்களை நாடி) வந்தவர்களை யாரென்று விசாரித்து உபசரித்து அழைத்துச் சென்று, அன்பு உற கொங் கையை மூடி நெகிழ்த்தி - அவர்கள் தம்மீது காதல் கொள்ளும் வண்ணம் தங்கள் தனபாரங்களை மூடியே வைத்துக்கொண்டு அவைகளின் கச்சையவிழ்த்தும், கண் பட மஞ்சள் நிர் ஆடி மினுக்கி - திருஷ்டிபடும் வண்ணம் வெகு அழகாக மஞ்சள் கலந்த நீரில் குளித்துத் தேகத்தைக் காந்தியுறச் செய்துகொண்டு, பஞ் சணை தனில் ஏறி மந்திர மோகம் எழுப்பி - பஞ்சணையின் மீதேறி (தம்முடன் கலவி செய்யவந்த ஆடவரது மனத்தினில்) தாம் முன்பே ஆலோசனை செய்து தீர்மானித்தபடி காம மயக்கத்தை உண்டுபண்ணி, கெஞ்சிட - அவர்கள் தங்க ளைக் கெஞ்சி வேண்டிக்கொள்ளும்படி செய்து, (பிறகு), முன் தலைவாயில் அடைத்து - (அச்சமயத்தில் வேறு ஆடவர்கள் வாராவண்ணம்) தலைவாயில் கதவை முதலில் மூடி, சிங்கி கொள் மங்கையர் - பிறகே தாம் காம நோயை யடையும் இயல்புடைய பெண்கள்; (அப்படிப்பட்டவர்கள் மீதுறும்), ஆசை விலக்கி - ஆசையை அடியேன் மனத்தினின்றும் அகற்றி, பொன் பதம் அருள் வாயே - நினது அழகிய பாதங்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) **ஊர்வசி அர்ச்சுனனுக்கு இட்ட சாபம் :**—பாண்டவர்கள் வனவாசஞ் செய்துவந்த காலத்தில், தருமபுத்திரரது கட்டளைப்படி தெய் வப்படைகள் பெறத் தேவலோகத்துக்குச் சென்ற அர்ச்சுனன் இந்திரனால் ஆதரிக்கப்பட்டுச் சகல போகங்களையும் அனுபவித்துக்கொண்டு அவனுடன் சிலகாலம் வசித்துவந்தான். அக்காலத்தில் ஒரு நாள் அவனுடைய மனத்

தைக் களிப்பிக்கும்படி தேவேந்திரனால் ஏவப்பட்டு அவனையடைந்த ஊர்வசி என்னும் அப்சரஸ்திரீ அவனிடத்தில் மோகங்கொண்டு தன்னைச் சேரும்படி அவனை வேண்டினாள். அப்போது அர்ச்சுனன், அவள் தன் மூதாதையான புரூரவ சக்கரவர்த்தியின் மனைவியாக இருந்ததையுன்னி, அவள் வேண்டுகோளுக்கு இசைய முடியாதென்று மறுத்துவிட்டான். மோகத்தினால் மதிமயங்கிய ஊர்வசி கோபங்கொண்டு, "நீ பேடியாகிப் பெண்களினிடையே நடிக்கும் இழிதொழிலைச் செய்வாயாக!" என்று அர்ச்சுனனுக்குச் சாபமிட்டாள். அதனால் அர்ச்சுனன் பெருந்துயர முற்றிருந்தபோது இந்திரன் அவனிடம் வந்து, அச்சாபம் அவன் இஷ்டப்பட்டபோது ஒரு வருஷ காலந்தான் நிறைவேறுமென்றும், அதனால் அவனுக்கு அஞ்ஞாதவாச காலத்தில் அனுகூலமுண்டாகுமென்றும் கூறி, ஊர்வசியைக்கொண்டே அச் சாபத்தை அவ்வாறு மாற்றுவித்தான். இதனால்தான் அஞ்ஞாதவாச காலத்தில் அர்ச்சுனன் பேடியாகி விராடராஜனது அரண்மனையில் நடனம் பழக்குவிக்கும் பேடியாக விருந்தான்.

ஸ்ரீகிருஷ்ணபகவான் குருக்ஷேத்திரத்தில் நடந்த பாரதப் போரில் அர்ச்சுனனுக்குச் சாரதியாக விருந்ததும், பாண்டவ சகாயனாக விருந்து அவர்களுக்கு அரசுரிமையை மீட்டுக் கொடுத்ததும் யாவரும் அறிந்த பாரதக்கதை. சிந்துரம் - யானை. சிங்கியில் - சிக்கு இல்; மெலித்தல் விகாரம். சிக்கு - வெட்கம். முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் முருகப்பெருமானுக்குத் தமிழ்மொழியின் மீதுள்ள மிகுந்த அன்பை 'தண்டமிழ்சேர்' என்னும் மொழித்தொடர் இனிது உணர்த்துகிறது. (அ௫)

தனனதன தாத்த— தனதான.

வசனமிக வேற்றி மறவாதே
மனதுதுய ராற்றி லுழலாதே
இசைபயில்ச டாக்ஷ ரமதாலே
யிகபரசௌ பாக்ய மருள்வாயே !
பசுபதிசி வாக்ய முணர்வோனே !
பழநிமலை வீற்ற ருளும்வேலா !
அசுரர்கிளை வாட்டி மிகவாழ
அமரர்சிறை மீட்ட பெருமாளே !

(ப - ரை) பசுபதி சி வாக்யம் உணர்வோனே - ஆன்மாக்களுக்கு நாயகராகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய வேதங்கள் சிவாகமங்கள் இவைகளினுதவியினால் உணரப்படும் மெய்ப்பொருளே !, பழநி மலை வீற்றருளும்

வேலா - பழநிமலையின்மீது எழுந்தருளியிருக்கும் வேலாயுதனே!, அசுரர் கிளை வாட்டி - அசுர குலத்தை அழியச் செய்து, அமரர் மிக வாழ - தேவர்கள் மேலான வாழ்வு அடையுமாறு, சிறை மீட்ட பெருமாளே - அவர்களைச் சிறையி னின்றும் விடுவித்தருளிய பெரியோனே!, வசனம் மிக ஏற்றி - (அடியேன்) ஒரு மந்திரத்தை உருவேறச் செபித்து, மறவாதே - (நின்னைப் பேரன்பினு லேயே அடைய முடியுமென்பதை) மறவாமலிருக்குமாறும், மனது துயர் ஆற்றில் உழலாதே - (அடியேனது) மனமானது துயரத்தைத் தருவதும் (பெருகி வடி யும்) ஆற்றின் இயல்பையுடையதுமான உலக வாழ்க்கையில் உழன்று திரியாம லிருக்குமாறும், இசை பயில் சட(ா)க்ஷரம் அதாலே - இன்னிசை பொருந்திய ஷடாக்ஷரத்தை அடியேனுக்குப் போதிப்பதன் மூலமாக, இக பர சௌபாக் யம் அருள்வாயே - இம்மையிலும் மறுமையிலும் சகல செல்வங்களையுந் தந்தருளவேண்டும்.

(வி - ரை) சிவாகமங்கள் - சிவபெருமான், ஆன்மாக்கள் தருமார்த்த காம மோக்ஷமென்னும் நான்கு புருஷார்த்தங்களையு மடைவதற்குச் சாதகமாக அருளிச் செய்த முதனூல்கள்; அவை 28. உணர்வோனே - உணரப்படுபவனே. முருகப் பெருமானை அடையும் நெறி, அவரிடத்து அன்பு பாராட்டுவது ஒன்றே, யென் பதை மறந்து மருட்சியுற்று யாதாமொரு மந்திரத்தை உருவேறச் செபிப்பதைச் சுவாமிகள் பல பாடல்களில் கண்டித்திருக்கிறார்; அவைகளிலொன்று பின் வருமாறு:—

“உருவேற வேஜெபித் தொருகோடி யோமசித்தி
யுடனாக ஆகமத் தந்துபேணி
உணர்வாசை யாரிடத் தருவாத வோரெழுத்தை
யொழியாது வூதைவிட் டுந்துநாளும்
தரியாத போதகத்தர் குருவாவ ரோரொருத்தர்
தருவார்கள் ஞானவித்தை தஞ்சமாமோ?”

உலக வாழ்க்கையானது ஒரு சமயத்தில் நீர் பெருகிப் பல சுழல்களுடன் கரை புரண்டோடியும், மற்றொரு சமயத்தில் நீர் வற்றியும் இருக்கும் இயல்புடைய ஆற்றையொத்தது என்பதைப் பின்வரும் **கந்தரலங்காரப்** பாடலில் காண்க.

“சுழித்தோடு மாற்றிற் பெருக்கா னதுசெல்வந் துன்பமின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ் சேகரிக் கோட்டுமுத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோட னென்கிலை குன்றமெட்டுங்
கிழித்தோடு வேலென் கிலையெங்ங னேமுத்தி கிட்டுவதே!” (அக)

தனனா தனனா—தனதான.

வாரதா மணிநீ யெனவோரில்
வருகா தெதுதா னதில்வாரா
திரதா திகளால் நவலோக
மிடவே கரியா மிதிலேது?
சரதா மறையோ தயன்மாலும்
சகலா கமநூ லறியாத
பரதே வதையாள் தருசேயே!
பழனா புரிவாழ் பெருமாளே!

(ப - ரை) சரதா - உண்மைப் பொருளே!, மறை ஓது அயன் மாலும் - வேதங்களை உலகத்துக்கு உபதேசித்த பிரமதேவரும் திருமாலும், சகல ஆகம நூல் அறியாத - சகல ஆகம நூல்களும் அறியமுடியா வண்ணம் நிற்பவரும், பர தேவதையாள் - முத்தியைத் தரவல்ல தேவியாருமாகிய உமாதேவியார், தரு சேயே - தந்தருளிய புதல்வனே!, பழனாபுரி வாழ் பெருமாளே - பழநித்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, வரதா மணி நீ என - வேண்டியவற்றை அளிக்கவல்ல மணி நீயே என்று, ஓரில் - ஆராய்ந்து அறிந்தால், எது தான் வருகாது - (கோரிய பொருள்) எதுதான் கிடைக்காது?, அதில் வாராது - அப்படி ஆராய்ந்தறிவதனால் கிடைக்காமல், (அதை வேறு வழியாக அடையக் கருதி), இரதாதிகளால் நவ லோகம் இடவே - இரசம் முதலியவைகளைக் கலந்து ஒன்பது உலோகங்களையும் (அனலிலிட்டு) புடம்வைத்தாலோ, கரி ஆம் - அவை கரியாகும், (ஆதலின்), இதில் ஏது - இவ்வழியில் எவ்வாறு கிடைக்கும்?

(வி - ரை) நவலோகங்களாவன :— தமனியம், இரும்பு, தாமிரம், ஈயம், வெள்ளி, பித்தளை, இரதி, நாகம், கஞ்சம். முருகப்பெருமானே 'எவர் வேண்டினும் கேட்ட பொருளையும் த்யாகாங்க சீலம்' பொருந்திய மணி என அறிந்து அவரைப் போற்றுகிறவர் கோரிய பொருளை அடைவது திண்ணம்; அவ்வாறு அவரை வழிபடாது, நவலோகங்களை இரசங்களுடன் கலந்து தழலில் புடம் வைத்து வேண்டியபொருளைப் பெறலாமென எண்ணுவது புத்தியீனமாகும். ()

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த—தனதான.

சுருளளக பார கொங்கை மகளிர்வச மாயி சைந்து
சுரதக்ரியை யால்வி ளங்கு மதனூலே
சுருதியென வேநி னைந்து அறிவிலிக ளோடி ணங்கு
தொழிலுடைய யானு மிங்கு னடியார்போல்

அருமறைக ளோதி னைந்து மனுநெறியி லேந டந்து
அறிவையறி வால றிந்து நிறைவாகி
அகிலபுவ னாதி யெங்கும் வெளியுறமெய்ஞ் ஞான இன்ப
அமுதையொழி யாத ருந்த அருள்வாயே !

பருதிமகன் வாசல் மந்த்ரி அநுமனொடு நேர்ப ணிந்து
பரிதகழை யாமுன் வந்து பரிவாலே
பரவியவி பீஷ ணன்பொன் மகுடமுடி சூட நின்ற
படைஞரொடி ராவ ணன்ற னுறவோடே

எரிபுகுத மாறி லண்டர் குடிபுகுத மாறு கொண்ட
ரகுபதியி ராம சந்த்ரன் மருகோனே !
இளையகுற மாது பங்க பழநிமலை நாத கந்த
இமயவள்த னால்ம கிழ்ந்த பெருமாளே !

(ப - ரை) பருதி மகன் - சூரிய குமாரனாகிய சுக்கிரீவன், வாசல் மந்த்ரி அநுமனொடு - (தான் ஸ்ரீராமரைச் சந்திப்பதற்குக்) காரணனாகிய மந்திரியான ஹநுமாரோடு, நேர் பணிந்து-எதிரே சென்று வணங்கி, பரி தக அழையா முன்- ஸ்ரீராமர் தன்னைப் பரிவுடன் அழைப்பதற்கு முன்னமேயே, வந்து - அவரிடம் வந்து சேர்ந்து, பரிவால் (ஏ - அசை) பரவிய - அன்பினால் வணங்கிய, விபீஷணன் பொன் மகுடம் முடி சூட - விபீஷணனுக்குப் பொன்னினாலான கிரீடத்தைச் சூட்டிப் பட்டாபிஷேகம் செய்வதற்காக, நின்ற படைஞரொடு - தம்மைப் புடைசூழ்ந்து நின்ற சேனைகளுடன் (போருக்குச் சென்று), இராவணன் தன் உறவோடு (ஏ - அசை) எரி புகுத - இராவணன் தனது சுற்றத்தவர்களுடன் தகனமாகி அழியுமாறும், மாறு இல் அண்டர் குடி புகுத - (அவ்வாறு அவர்கள் அழிந்ததனால்) பகைவர்கள் அற்று நின்ற தேவர்கள் தேவலோகத்தில் குடியேறுமாறும், மாறு கொண்ட - (இராவணனிடம்) பகைமை பூண்ட, ரகுபதி இராம சந்த்ரன் மருகோனே - ரகு வம்ச திலகராய் அவதரித்த ஸ்ரீ இராமச்சந்திரனது மருகனே !, இளைய குற மாது பங்க - இளமை பொருந்திய குறமகளான வள்ளி நாயகியை ஒரு பக்கத்தி லமர்த்திக்கொண்டவனே!, பழநி மலை நாத - பழநிமலையில் வீற்றிருக்கும் நாதனே!, கந்த - அன்பர்களது பகையை அழிப்பவனே !, இமயவள் த(ன்)னால் மகிழ்ந்த பெருமாளே - இமயமலை அரசனது புதல்வியான உமாதேவியாரது அன்பினால் மகிழ்ச்சியுற்ற பெரியோனே!, சுருள் அளக பார - சுருண்டு மிகுதியாய் வளர்ந்துள்ள கூந்தலையும், கொங்கை - தனபாரங்களையு

மூடைய, மகளிர் வசமாய் இசைந்து - பெண்களுக்கு ஆளாகி அவர்களுடன் இணக்கமாயிருந்து, சுரத க்ரியையால் விளங்கு மதன் நூலே - கலவிக் கிரீடைகளை உணர்த்தி விளங்கும் காமசாஸ்திரந்தான், சுருதி என (ஏ - அசை) நினைந்து - வேதமென்று நினைத்து, அறிவிலிகளோடு இணங்கு தொழிலுடைய யானும் - அறிவில்லாதவர்களோடு சேர்ந்து பழகுவதே தொழிலாகவுடைய அடியேனும், இங்கு உன் அடியார் போல் - இவ்வுலகத்தில் உன்னிடத்து அன்பு பாராட்டும் அடியவரைப் போலவே, அரு மறைகளே நினைந்து - அருமையான வேதங்களையே ஓதத்தக்க நூல்களாகக் கருதி, மனு நெறியில் (ஏ - அசை) நடந்து - மனு தர்ம சாஸ்திரத்தில் கூறியுள்ள நெறியில் நின்று ஒழுகி, அறிவை அறிவால் அறிந்து - ஞான சொரூபியாய் அடியேனகத்துள் அமர்ந்துள்ள நின்னை அறிவினால் அறிந்து, நிறைவாகி - உண்மையறிவு நிறையப்பெற்று, அகில புவன ஆதி எங்கும் வெளி உற - சகல புவனங்களும் எங்கு நோக்கினும் சுத்த நிராகாச வெளியாகத் தோன்றக்கண்டு, மெய்ஞ்ஞான இன்ப அமுதை - மெய்ஞ்ஞான அனுபவமாகிய இன்பத்தைத் தரும் அமுதத்தை, ஒழியாது அருந்த - ஓயாமல் உட்கொள்ளுமாறு, அருள்வாயே - அருள் புரியவேண்டும்.

(வி - ரை) ஞானசொரூபியாக மனத்தினுள் அமர்ந்திருக்கும் முருகப்பெருமானை அறிவினால் அறிவதே மெய்ஞ்ஞானம் என்னும் போதகத்தைச் சுவாமிகள் 'அறிவை யறிவது பொருளென வருளிய பெருமாளே' என்றும், 'அறிவை யறிபவரறிய மின்பந்தனை' என்றும் பல பாடல்களில் அருளிச்செய்திருக்கிறார்.

> "ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மே
> லளியில் விளைந்தவொ ரானந்தத் தேனை யநாதியிலே
> வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
> தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே!" —**கந்தரலங்காரம்.**

> "சும்மா விருசொல் லறவென் றலுமே
> அம்மா பொருளொன் றுமறிந் திலனே" —**கந்தரனுபூதி.**

> "சுட்டதுபோ லாசை விட்டுலகா சார
> துக்கமிலா ஞான சுகமேவிச்
> சொற்கரண தீத நிர்க்குணமூ டாடு
> சுத்தநிரா தார வெளிகாண" —**திருப்புகழ்.**

மேலே கண்ட பாடல்களில் விளக்கியுள்ளபடியும் மற்றுமோர் கந்தரலங்காரப் பாடலில் 'எங்கும் ஒன்றுபோலே இருக்கும் பொருளை' என்று கூறியுள்ளபடியும், உலகத்திலுள்ள எண்ணிறந்த ஜடபேதங்களெல்லாம் மறையப்பெற்று எங்கும் ஜோதிமயமாய் நிறைந்திருக்கும் பரம்பொருளைக் காண்பதே மெய்ஞ்ஞானமாகும்.

## 2. திருவாவினன்குடி—பழநி

*தனதத்தத் தனனத் தத்தத்*
*தனதத்தத் தனனத் தத்தத்*
*தனதத்தத் தனனத் தத்தத்*
*தனதத்தத் தனனத் தத்தத்*
*தனதத்தத் தனனத் தத்தத்*
*தனதத்தத் தனனத் தத்தத்—தனதான;*

சகடத்திற் குழையிட் டெற்றிக்
குழலுக்குச் சரம்வைத் தெற்றிப்
புளகித்துக் குவளைக் கட்பொற்
கணையொத்திட் டுழலச் சுத்தித்
தரளப்பற் பவளத் தொட்டக்
களபப்பொட் டுதலிட் டத்திக் குவடான

தனதுத்திப் படிகப் பொற்பிட்
டசையப் பெட் பசளைத் துப்புக்
கொடியொத்திட் டிடையிற் பட்டைத்
தகையிற்றொட் டுகளப் பச்சைச்
சரணத்துக் கியலச் சுற்றிச்
சுழலிட்டுக் கடனைப் பற்றிக் கொளுமாதர்

சுகமுற்றுக் கவலைப் பட்டுப்
பொருள்கெட்டுக் கடைகெட் டுச்சொற்
குளறிட்டுத் தடிதொட் டெற்றிப்
பிணியுற்றுக் கசதிப் பட்டுச்
சுகதுக்கத் திடர்கெட் டுற்றுத்
தளர்பட்டுக் கிடைபட் டுப்பிக் கிடைநாளிற்

சுழலர்ச்சக் கிரியைச் சுற்றிட்
டிறுகக்கட் டுயிரைப் பற்றிக்
கொளுகப்பற் பலரைக் கட்டிக்
கரம்வைத்துத் தலையிற் குத்திச்
சுடுகட்டைச் சுடலைக் கட்டைக்
கிரையிட்டுப் பொடிபட் டுட்கிச் சடமாமோ ?

திகுடத்திக் குகுடட் டுட்டுட்
டமடட்டட் டமடட் டிக்குட்
டிமிடிட்டிட் டிமிடிட் டிக்குத்
தொகுதொக்குத் தொகுதகத் தொக்குச்
செகணக்கச் செகணச் செக்குத்
தகுடத்தத் தகுடத் தட்டுட் டிடிபேரி

திமிலைக்கைத் துடிதட் டெக்கைப்
பகடிட்டுப் பறையொத் தக்கட்
டிகையெட்டுக் கடல்வற் றித்தித்
தரவுக்கக் கிரியெட் டுத்தைத்
தியருக்குச் சிரமிற் றுட்கச்
சுரர் பொற்புச் சொரியக் கைக்கொட் டிடும்வேலா !

பகலைப்பற் சொரியத் தக்கற்
பதிபுக்கட் டழுலிட் டுத்திட்
புரமட்கிக் கழைவிற் புட்பச்
சரனைச்சுட் டயனைக் கொத்திப்
பவுரிக்கொட் பரமர்க் குச்சற்
குருவொத்துப் பொருளைக் கற்பித் தருள்வோனே !

பவளப்பொற் கிரிதுத் திப்பொற்
றனகொச்சைக் கிளிசொற் பற்றிப்
பரிவுற்றுக் கமலப் புட்பத்
திதழ்பற்றிப் புணர்சித் ரப்பொற்
படிகத்துப் பவளப் பச்சைப்
பதமுத்துப் பழநிச் சொக்கப் பெருமாளே!

(ப - ரை) திகுடத்திக் * * * * தகுடத் தட்டுட்டு, (என), இடி பேரி - இடிபோல் முழங்கும் பேரிகையும், திமிலை - கைத்தாளங்களும், கைதுடி - கையில் பிடித்து அடிக்கும் உடுக்கையும், தட்ட - முழங்க, எக்கை பகடு இட்டு - போருக்குரிய யானைப்படையைச் செலுத்தி, பறை ஒத்த - வாத்தியங்கள் (பல) ஒலிக்க, கண் திகை எட்டு கடல் வற்றி - இடமகன்ற (விசாலமான) எட்டுத் திக்குகளிலுமுள்ள கடல்கள் நீர்வற்றி, தி (தீ) தர் - அனலை வீசுமாறும், கிரி

உக்க - கிரௌஞ்ச மலையானது முரிந்து போகுமாறும், எட்டு தைத்தியருக்கு சிரம் இற்று உட்க - அந்த மலையில் பொருந்தியிருந்த அசுரனுகிய தாரகன் தலை அறுக்கப்பெற்று மடியுமாறும், சுரர் பொன் பு (பூ) சொரிய - தேவர்கள் அழகிய புஷ்பங்களை (மழைபோல் நின்மீது) சொரியுமாறும், கை தொட்டிடும் வேலா - வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே !, பகலே பல் சொரிய - பற்கள் பேரொளி வீசுமாறு (புன்னகை செய்து), தக்கன் பதி புக்கு அட்டு - வீரபத்திர வுருவத் துடன் தக்ஷனது நகரமான தக்ஷமாபுரிக்குள் நுழைந்து (அவனது யாகசாலையில் கூடியிருந்தவர்களை) அழித்து, அழல் இட்டு திண் புரம் மட்கி - (ஞானமாகும்) தீயைச் செலுத்தி வலிமை பொருந்திய திரிபுரங்கள் அழியும்படி செய்தும், கழை வில் புட்ப சரனே சுட்டு - கரும்பினுலாகிய வில்லையும் புஷ்ப பாணங் களையுமுடைய மன்மதனை எரித்துச் சாம்பராக்கியும், அயனை கொத்தி - பிரம தேவரது தலைகளில் ஒன்றைக் கிள்ளியும், பவுரி கொள் - (வெட்ட வெளியில்) நிர்த்தனஞ் செய்யும், பரமற்கு - பரம்பொருளாகிய சிவபெருமானுக்கு, சத் குரு ஒத்து - நல்ல குருவைப்போல் அமர்ந்து, பொருளை கற்பித்து அருள்வோனே - பிரணவத்தின் பொருளை உபதேசஞ் செய்தருளியவனே!, பவள பொன் கிரி - பவளத்தின் நிறமுடைய அழகிய மலையையும், துத்தி - பாம்பின் படத்தையும், (ஒத்த), பொன் தன(ம்) - அழகிய தனபாரங்களையும், கொச்சை கிளி சொல் - கொச்சையாகக் கிளியைப்போல் பேசும் மொழிகளையும், பற்றி - உடைய கார ணத்திஞல், பரிவு உற்று - அன்பு பூண்டு, கமல புட்பத்து இதழ் பற்றி - தாமரை மலரின் இதழை யொத்த உதட்டைக் கடித்து, புணர் - (வள்ளிநாயகி யைப்) புணர்ந்த(வனும்), சித்ர பொன் படிகத்து பச்சை பவள பத - பேரழகு வாய்ந்தவைகளாயும் பளிங்கைப்போல் மாசற்றவைகளாயும் பைம்பவளத்தின் நிறம் பொருந்தியவைகளாயுமுள்ள பாதங்களையுடையவனும், முத்து பழநி சொக்க பெருமாளே - அருமையான பழநித்தலத்தில் அமர்ந்துள்ளவனுமான அழகிய நாயகனே!, சகடத்து இல் குழை இட்டு - சக்கரத்தைப்போல் வட்ட வடிவமுள்ள குழைகளைக் காதுகளில் அணிந்துகொண்டு, எற்றி குழலுக்கு சரம் வைத்து - தூக்கிச் செருகியுள்ள கூந்தலின்மீது புஷ்பங்களைக் கோத்த சரத்தை அணிந்துகொண்டு, எற்றி புளகித்து - தேகம் புடைத்துச் சிலிர்க்கவும், குவளை கண் பொன் கணை ஒத்திட்டு உழல - கருங்குவளை மலர்களை யொத்த கண்கள் பொன்னினுலாகிய அம்புகளைப்போல் கூர்மையான பார்வையை யுடையவை களாய் அலைந்து சுழலவும், சுத்தி தரள பல் பவளத்து ஒட்ட - சுத்தமான முத் துக்களைப் போன்ற பற்கள் பவளத்தை யொத்த உதடுகளுடன் ஒட்டினுற்போல் தோன்றப் (புன்னகை செய்தும்), களப அப்பு ஒட்டுதல் இட்ட - கலவைச்சாந்து பூசப்பெற்றவைகளாயும், அத்தி குவடான - யானையின் மத்தகத்தைப் போன்ற வைகளாயும், தனதுத்தி - பாம்பின் படத்தை யொத்தவைகளாயு முள்ள தனபாரங்கள், படிக பொற்பு இட்டு அசைய - பளிங்கின் தூயவொளி வீசி

அசையவும், பென் - விரும்பத்தக்கதும், பசளை துப்பு கொடி ஒத்திட்ட இடையில் - சிவந்த பசளைக் கொடியையும் பவளக் கொடியையும் போன்ற இடுப்பில், பட்டை - பட்டாடையை, உகள பச்சை சரணத்துக்கு இயல சுற்றி - (மஞ்சட் பூச்சினுல்) பசுமை பொருந்தியுள்ள இரு பாதங்களுக்கும் பொருத்தமாகச் சுற்றி, தகை (இல் - சாரியை) தொட்டு - அழகாக உடுத்திக்கொண்டு, சுழல் இட்டு - காமமாகிய சுழலில் விழச்செய்து, கடனை பற்றிக்கொளும் மாதர் சுகம் உற்று - (முற்பிறப்புக்களில் தங்களிடம் கடன் வாங்கியிருந்தவர்களிடமிருந்து தங்களுக்கு வரவேண்டிய) கடனை பலாத்காரமாக வரப்பற்றிக்கொள்ளும் விலைமாதர்களது சுகத்தை யனுபவித்து, கவலைப்பட்டு - (அச்சுகத்தைப் பெறமுடியாமற் போய் விடுமோ வென்று) கவலைப்பட்டு, பொருள் கெட்டு - கைப்பொருள் அழியப் பெற்று, கடைகெட்டு - நெறி தவறி நடந்து, சொல் குளறிட்டு - (தேகம் தளர்ச்சியுற்றதனுல்) நாக்குழறப் பேசி, தடி தொட்டு எற்றி - தடியையூன்றி எழுந்திருந்து, பிணியுற்று - வியாதிகளினுல் பீடிக்கப்பட்டு, கசதிப்பட்டு - வருத்தப்பட்டு, சுகதுக்கத்து இடர் உற்று - சுக துக்கங்களை யனுபவித்துத் துன்பமுற்று, கெட்டு - மனோ வலிமையையும் இழந்து, தளர்பட்டு - தேகத் தளர்ச்சியடைந்து, கிடைபட்டு - நோயுற்று, உப்பி - தேகம் ஊதப் பெற்று, கிடை நாளில் (எழ முடியாமல்) பாயலில் கிடக்குங் காலத்தில், சுழலர் - தந்திரமாகத் தமது வேலைகளை நடத்தும் யமதூதர்கள், சக்கிரியை சுற்றிட்டு - பாம்புகளைச் சுழற்றி, இறுக கட்டி உயிரை பற்றிக்கொ(ள்)ளுக-ஜீவனைப் பாசத்தினுல் கட்டிப் பிடித்துக்கொண்டு போக, பற்பலர் (ஐ - சாரியை) கட்டி - (உயிர் நீங்கப்பெற்ற) சடலத்தை (பாடையில் வைத்துக்) கட்டி, கரம் வைத்து - கைகளைக் குவித்து மார்பின்மீது வைத்து, தலையில் குத்தி - தலையில் குத்தி, சுடு கட்டை - சுட வேண்டிய சடலத்தை, சுடலை கட்டைக்கு - சுடுகாட்டில் கட்டைக்கு, இரை இட்டு - இரையாக்கப்பட, பொடிபட்டு உட்கு - பொடியாகி அழியும், இ சடம் ஆமோ - இந்தப் பிரகிருதி சம்பந்தமுள்ள தேகம் கருதத் தக்கதோ?

(வி - ரை) **தக்ஷன் வேள்வி தகர்த்த வரலாறு:**—சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்து அவரது அருளினுல் எல்லையற்ற செல்வங்களைப்பெற்ற தக்ஷன் தனது சாபத்தினுல் துன்பமுற்று வருந்திய தனது மருமகனுன சந்திரன் அச்சாபத்தினுல் முற்றிலும் அழிந்து விடாவண்ணம், கருணைக் கடலான சிவபெருமான் அவனுக்கு அபயமளித்து இரக்ஷித்ததைக் கண்டு கடுங்கோபமுற்று, அப்பெருமானை நிந்தித்து அவரிடத்துப் பகைமை பாராட்டத்தொடங்கி, இறுதியில் அப்பெருமானுக்கு அவிர்ப்பாக மளிக்காமல் யாகஞ்செய்யத் தொடங்கினுன். ததீசிமாமுனிவர் அவனுக்குப் பல விதமாக நற்புத்தி கூறியும், அவன் பிடிவாதமாகச் சிவபெருமானுக்கு அவிர்ப்பாக மளிக்காமலே யாகத்தை நடத்தினுன். அவன் யாகத்தைப்பற்றிக் கேள்விப்பட்ட தாக்ஷாயணி தம்மை அவன் அழைக்

காமலிருந்தும், இறைவனிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு அவனது யாக சாலைக்குச்செல்ல, அவன் அத்தேவியாரை அவமதித்துச் சிவபெருமானையும் நிந்தித்தான். உடனே தாக்ஷாயணி முக்கண்ணெந்தையினிடம் மீண்டுசென்று அந்தச் சிவத்துரோகியின் யாகத்தை அழித்தருளும்படி மன்றாடிக் கேட்டுக்கொண்டார். இறைவனும் உலகமாதாவின் மனத்தைத் திருப்தி செய்வதற்காக வீரபத்திரரைப் படைத்து, தக்ஷனது யாகத்தை அழிக்கும்படி அவருக்குக் கட்டளையிட்டருளினார். வீரபத்திரர் அந்த யாகசாலைக்குச் சென்று தக்ஷனையும் தேவர்களெல்லோரையும் அழித்துவிட்டு, யாகநாயகராக அமர்ந்திருந்த திருமாலுடன் மிகுந்த கோபத்துடன் போர்புரிந்துகொண் டிருக்கையில், சாந்த சொரூபியும் கருணைக் கடலுமான சம்பு அங்கு சென்று வீரபத்திரர் கோபத்தைத் தணித்து மாண்டு கிடந்தவர்களெல்லோரையும் உயிர்ப்பித்து அவர்களுக்கு ஞானத்தைப் புகட்டியருளினார்.

திரிபுர தகனம், மன்மத தகனம், பிரமன் தலையை அறுத்தது இவைகளின் வரலாறுகளை முறையே 156, 201, 268 இப்பக்கங்களிற் காண்க.

திரிபுரதகனத்தின் அகப்பொருள் 'மும்மலங்களைச் சர்வேசுவரன் ஞானோபதேசத்தினால் அகற்றுகிறார்' என்பது பின்வரும் திருமூலநாயனாரது திருமந்திரப் பாடல் ஒன்றில் விளக்கப்பட்டிருக்கிறது.

> " அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
> முப்புரஞ் செற்றன னென்பர்கண் மூடர்கள்
> **முப்புர மாவது மும்மல காரியம்**
> அப்புர மெய்தமை யாரறி வாரே." —**திருமந்திரம்.**

உலகரக்ஷணையின்பொருட்டு அகங்காரத்தை யழிப்பதற்காகச் சிவபெருமான் வீரபத்திரரையும் பைரவரையும் படைத்தாரேயன்றி, அப்பெருமான் கோபமூர்த்தியன்று. பரம்பொருளாகிய சிவபெருமானையும் அப்பெருமானால் ஏவப்பட்டு ஊழிக்காலத்தில் உலகங்களை யழிக்கும் உருத்திரமூர்த்தியையும் ஒருவராகக் கருதுபவர் சிவபெருமானுக்குப் பதிலாக ஏகாதசருத்திரர்களில் ஒருவரை யாகநாயகராக அமர்த்திக்கொள்வதாகத் தக்ஷன் கூறியபொழுது ததீசிமாமுனிவர் அளித்த பதிலைத் தெரிந்துகொள்வது நலமாயிருக்கும். திரிபுரதகனம் முதலியவைகளைச் சிவபெருமான் செய்தது கருணைநோக்கங் கொண்டேயாதலால், அக்காலங்களில் அவர் முகத்தில் புன்னகை தோன்றிற்று. (௮௯)

தனதன தனத்த தான தனதன தனத்த தான
தனதன தனத்த தான—தனதான.

**கலைகொடு பவுத்தர் காம கருமிகள் துருக்கர் மாய**
**கபிலர்ப கரக்க ணாதர்** **உலகாயர்**

கலகமி டுதர்க்கர் வாம பயிரவர் விருத்த ரோரி
கலகலெ னமிக்க நூல்க ளதனாலே
சிலுகியெ திர்குத்தி வாது செயவுமொ ருவர்க்கு நீதி
தெரிவரி யசித்தி யான வுபதேசந்
தெரிதர விளக்கி ஞான தரிசன மளித்து வீறு
திருவடி யெனக்கு நேர்வ தொருநாளே ?
கொலையுற எதிர்த்த கோர இபமுக அரக்க னோடு
குரகத முகத்தர் சீய முகவீரர்
குறையுட லெடுத்து வீசி யலகையொ டுபத்ர காளி
குலவியி டவெற்றி வேலை விடுவோனே !
பலமிகு புனத்து லாவு குறவனி தைசித்ர பார
பரிமள தனத்தில் மேவு மணிமார்பா !
படைபொரு துமிக்க யூக மழைமுகி லையொட்டி யேறு
பழநிம லையுற்ற தேவர் பெருமாளே !

(ப - ரை) கொலை உற எதிர்த்த - (நின்னால்) கொல்லப்பட (வேண்டிய காலம் நெருங்கியதனால்) நின்னைப் (போர்க்களத்தில்) எதிர்த்துப் போர்செய்த, கோர இபமுக அரக்கனோடு - கொடியவனும் யானை முகத்தை யுடையவனுமான தாரகாசுரனோடு, குரகத முகத்தர் - குதிரைமுகத்தை யுடைய அசுரர்கள், சீய முக வீரர் - சிங்கத்தின் முகத்தை யுடைய வீரர்கள், (இவர்களுடைய), குறை உடல் எடுத்து வீசி - அங்கங்கள் வெட்டப்பட்டுக் குறைந்த தேகங்களைத் தூக்கியெறிந்து, அலகையொடு பத்ரகாளி குலவியிட - பேய்களும் (அவைகளின் தலைவியான) பத்திரகாளியும் விளையாடிக் களிக்கும் வண்ணம், வெற்றி வேலை விடுவோனே - வெற்றியைத் தரும் வேலாயுதத்தைப் பிரயோகிப்பவனே !, பலம் மிகு புனத்து உலாவு - விளைவு மிகுதியாகவுள்ள தினைப்புனத்தில் விளையாட்டாகச் சஞ்சரித்த, குற வனிதை சித்ர பார பரிமள தனத்தில் - வேடர் மகளான வள்ளிநாயகியின் பேரழகு வாய்ந்தவைகளும் பருத்தவைகளும் வாசனை வீசுபவைகளுமான தனபாரங்களில், மேவு மணி மார்பா - பொருந்தும் அழகிய மார்பையுடையவனே !, படை பொருது மிக்க யூகம் - படைத் திரளினும் மிகுந்த குரங்குகள், மழை முகிலை ஒட்டி ஏற - மழை பெய்வதற்கு இறங்கும் மேகங்களைத் தொடும்படி மலையின் உச்சிக்கு ஏறப்பெற்ற, பழநிமலை உற்ற தேவர் பெருமாளே - பழநி மலைக்கு வந்தருளிய தேவாதி தேவனே !, கொடு கலை - கொடுமையான கோட்பாடுகளைப்

போதிக்கும் சாஸ்திரங்களையுடைய, பவுத்தர் - புத்தன் ஏற்படுத்திய மதத்தைச் சார்ந்தவர், காம கருமிகள் - உலக சுகங்களைப் பெறக் கருதிக் கருமங்களைச் செய்பவர், துருக்கர் - துருக்கர்கள், மாய - மாயா வாதிகள், கபிலர் - கபிலமுநிவர் ஏற்படுத்திய நிரீசுவர சாங்கிய மதத்தைச் சார்ந்தவர்கள், பகர் அ கணாதர் - உயர்ந்ததென்று சொல்லப்படுவதும் கணாதன் என்னும் முநிவன் ஏற்படுத்தியதுமான வைசேஷிக மதத்தைச் சார்ந்தவர்கள், உலகாயர் - கண்ணாற் காண்பதே உண்மையென்னும் கோட்பாடுடைய நாஸ்திக மதமான உலகாயத மதத்தைச் சார்ந்தவர், கலகம் இடுதர்க்கர் - (உண்மையை யறியவேண்டு மென்னும் நோக்கமில்லாமல்) சதா காலமும் கலகஞ் செய்வதிலேயே காலத்தைக் கழிக்கும் தர்க்க மதத்தைச் சார்ந்தவர்கள், வாம - வாமசமயத்தவர், பயிரவர் - பைரவ மதத்தவர், (இவர்களான) விருத்தரோடு - உண்மைக்கு மாறுபாடான கொள்கைகளையுடையவர்களோடு, கலகல என - மிகுந்த சப்தம் செய்து, மிக்க நூல்கள் அதனாலே - அநேக சாஸ்திரங்களில் கூறியவைகளின் உதவியினாலே, சிலுகி - சண்டையிட்டு, எதிர் குத்தி வாது செயவும் - (அவர்கள் சொல்பவைகளை) மறுத்துப் பலமான காரணங்களை எடுத்துரைத்து வாதஞ் செய்தபோதிலும், ஒருவர்க்கு நீதி தெரிவரிய சித்தியான - அப்படி வாதிப்பவர்க்கு உண்மையறிய முடியாத சித்தியாகவுள்ள, உபதேசம் தெரிதர விளக்கி - (நினது சம்ப்ரதாயம் இன்னதென்ற) உபதேசத்தை அடியேன் அறியும் வண்ணம் விளங்கச்செய்து, ஞான தரிசனம் அளித்து - ஞானத்துடன் பார்க்கும் வல்லமையைத் தந்து, வீறு திருவடி - சிறந்த நினது பாதாரவிந்தங்களை, எனக்கு நேர்வது ஒரு நாளே - அடியேனுக்கு அளிக்கும் நாளும் உண்டோ?

(வி - ரை) துர்க்குணங்களுக்கும் மும்மலங்களுக்கும் மாயையும் அஞ்ஞானமுமே,காரணமாதலால், அந்த மாயையையும் அஞ்ஞானத்தையும் அகற்றவல்ல பரமஞான சக்தியாம் வேலாயுதமானது துர்க்குணங்களையும் மும்மலங்களையும் எக்காலத்திலும் ஜயிக்கும் வன்மையுடையதா யிருக்கிறது. ஞானதேசிகராகிய முருகப்பெருமானிடத்து அன்பு பாராட்டி அவரது அருளைப்பெற முயலாமல், தத்தம் கலைகளைக்கொண்டு ஒருவரோடொருவர் வாதஞ்செய்து பொழுதை அவமே கழிக்கும் சமயவாதிகளைச் சுவாமிகள் பின்வருமாறு பல விடங்களில் கண்டித்திருக்கிறார்.

“ கலக விபரித வெகுபர சமயிகள் பலர்கூடி
கலக லெனநெறி கெடமுறை'முறைமுறை
கதறி வதறிய குதறிய கலைகொடு
கருத அரியதை * * * * * *
உதய மரணமில் பொருளினை யருளுவ தொருநாளே?”

"கலகல லெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்க வாதிகள்
கதறிய வெகுசொற் பங்க மாகிய பொங்களாவுங்
கலைகளு மொழிய * * * *
* * * * தந்த ஞானமி ருந்தவாறென்?" (௬௦)

தனன தனதன தனன தனதன
தனன தனதன—தனதான.

குழல டவிமுகில் பொழில் வி ரவில்நுதல்
குமுத வதரமு றவலாரம்
குழைமக ரம்வளை மொழிகு யிலமுது
குயமு ளரிமுகை கிரிகூது
விழிக யலயில்ப கழிவ ருணிகரு
விளைகு வளைவிட மெனநாயேன்
மிகவ ரிவையரை அவநெ றிகள்சொலி
வெறிது ளம்விதன முறலாமோ?
கழல்ப ணியவினை கழல்ப ணியையணி
கழல்ப ணியவருள் மயில்வீரா!
கமல திருமரு கமலை நிருதரு
கமலை தொளைசெய்த கதிர்வேலா!
பழனி மலைவரு பழநி மலைதரு
பழநி மலைமுரு கவிசாகா!
பரவு பரவைகொல் பரவை வண அரி
பரவு மிமையவர் பெருமாளே!

(ப-ரை) பணிய வினை கழல்-முற்பிறப்புக்களிற் செய்த வினைகளின் பயன் அகலும்படி செய்பவைகளும், கழல் பணியை அணி-(நீ சுத்தவீரன் என்பதையும் வள்ளல் என்பதையும் உணர்த்தும் வண்ணம்) கழலையும் (தண்டை சிலம்பு முதலிய) ஆபரணங்களையும் அணிந்துள்ளவைகளுமான, கழல் பணிய அருள் மயில் வீரா - நினது பாதங்களைப் பணியும்படி அருள்புரியும் மயில் வீரனே!, கமல திருமருக - தாமரையில் வசிக்கும் இலக்குமியின் செல்வ மருகனே!, மலை நிருதர் உக - கிரௌஞ்ச மலையில் ஒளித்துக்கொண்ட அசுரர்கள் அழியும்வண்ணம்,

மலை தொளை செய்த - அந்த மலையைத் தொளைத்த, கதிர் வேலா - பேரொளி வீசும் வேலாயுதத்தை யுடையவனே !, பழனி - கனியை யொத்தவரும், மலை வரு - இமயமலை யரசனுக்குப் புத்திரியாக அவதரித்தவரும், பழ நிமலை - ஆதியில் தோன்றிய புராதனியும் மலத்துடக்கற்றவருமான உமாதேவியார், தரு - தந்தருளிய புதல்வனும், பழநி மலை முருக - பழநி மலையில் எழுந்தருளியிருப்பவனுமான ஞானசொரூபியே !, விசாகா - விசாக நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் அவதரித்தவனே!, பரவு பரவை கொல்-(இராமாவதாரத்தில்) பரவிய சமுத்திரத்தை அழிக்கவெண்ணி அதன்மீது பாணத்தை விடுத்தவரும், பரவை வ(ண்)ண அரி - சமுத்திரத்தின் நிறம் பொருந்திய திருமேனியை யுடையவருமான திருமால், பரவும் - வணங்கும், இமையவர் பெருமாளே - தேவர்கள் நாயகனே !, குழல் அடவி முகில் பொழில் - கூந்தல் (அடர்ந்து வளர்ந்திருப்பதனுல்) காட்டையும் (கரிய நிறத்தினுல்) மேகத்தையும் (புஷ்பங்கள் சூட்டப் பெற்றிருப்பதனுல்) பூஞ்சோலையையும் ஒத்திருக்கிறது; வீர வில் நுதல் - புருவமானது வீரன் கை வில்லை ஒத்திருக்கிறது; குமுத அதரம் - உதடு சிவந்த ஆம்பலை ஒத்திருக்கிறது; முறுவல் ஆரம் - புன்னகையில் தோன்றும் பற்கள் முத்துக்களை ஒத்திருக்கின்றன; குழை மகரம் வளை - காதுகளில் அணிந்துள்ள குழைகள் மீனையும் சங்கத்தையும் ஒத்திருக்கின்றன; மொழி குயில் அமுது - பேசும் சொற்கள் குயிலின் இனிய கானத்தையும் (சுகத்தை விளைவிக்கும்) அமுதத்தையும் போன்றது; குயம் முளரி முகை கிரி சூது - தனபாரங்கள் தாமரையின் மொட்டையும் மலையையும் சொக்கட்டான் காயையும் ஒத்தவை; விழி கயல் அயில் பகழி வருணி கருவிளை குவளை விடம்-கண்கள் (உருவத்தில்) கயல் மீனையும் வேலாயுதத்தையும் (பார்வைக் கூர்மையில்) அம்பையும் (விசாலத்தில்) சமுத்திரத்தையும் (நிறத்தில்) கருவிளை மலரையும் கருங்குவளை மலரையும் (பார்வைக் கொடுமையில்) விஷத்தையும் ஒத்தவை; என - என்று, நாயேன் - நாயை யொத்த அடியேன், மிக அரிவையரை அவநெறிகள் சொலி - வெகுவாகப் பெண்களைத் தாறுமாறுகப் புகழ்ந்து, வெறி(த்)து உளம் விதனம் உறலாமோ - மனக்கலக்கமுற்று விசனப்படுதல் தகுதியோ ?

(வி - ரை) முந்தை வினைப்பயன் அகன்றாலல்லது ஜனன மரணங்களினின்றும் விடுதலையாகிய முத்தியடைவது சாத்தியமன்று. முந்தை வினைப் பயனை அகற்றிக்கொள்ள ஒரேவழிதான் உண்டு; அதென்னவெனில், அப்பெருமானது பாதமலர்களை வணங்குவதேயாகும்.

ஸ்ரீ ராமர் சீதாப்பிராட்டியை மீட்டுக்கொள்ள இலங்கைக்குச் செல்ல முயன்ற போது, சமுத்திரம் அவர் அங்கு செல்ல வழிவிடாததனுல் அவர் சமுத்திரராஜன் மீது பாணத்தை எய்தார். "பரவு பரவை கொல்" என்றது அதைக் குறித்துத்தான். (கூ௩)

தான தான தனத்தன தத்தன
தான தான தனத்தன தத்தன
தான தான தனத்தன தத்தன—தனதான.

ஓடி யோடி யழைத்துவ ரச்சில
சேடி மார்கள் பசப்பஅ தற்குமு
ன்னோதிகோதி முடித்த விலைச்சுரு ளதுகோதி
நீடு வாச நிறைந்தஅ கிற்புழு
கோட மீது திமிர்த்தத னத்தினில்
நேச மாகி யணைத்தசி றுக்கிக ளுறவாமோ ?
நாடி வாயும் வயற்றலை யிற்புன
லோடை மீதி னிலத்ததி வட்கையி
னாத கீத மலர்த்துளி பெற்றளி யிசைபாடுங்
கோடு லாவி யமுத்துநி ரைத்தவை
காவூர் நாட தனிற்பழ நிப்பதி
கோதி லாத குறத்திய ணைத்தருள் பெருமாளே !

(ப - ரை) நாடி - தேடிச்சென்று, வாயும் - எதிர்ப்படும், வயல் தலையில் - வயல்களிலும், புனல் ஓடை மீதினில் - நீரோடை மீதிலும், அத்த திவட்கையின் - ஆசையுடன் சேர்வதனால், நாத கீத மலர்த்துளி பெற்று - இனிய நாதம் பொருந்திய கானத்தைச் செய்வதற்குரிய குதூகலத்தைத் தருவதும் மலர்களில் சிறுதுளிகளாகக் கிடைப்பதுமான தேனை யடைந்து, இசை பாடும் - இன்னிசையுடன் பாடும், அளி கோடு உலாவிய - தேனீக்கூட்டங்கள் களிப்புடன் சஞ்சரிக்கப் பெற்றதும், முத்துநிரைத்த - முத்துக்கள் நிறையப்பெற்றதும், வைகாவூர் நாடு அதனில் - வைகாவூர் நாட்டில், பழநி பதி-பழநி யென்னும் திருத்தலத்தில், கோது இ(ல்)லாத குறத்தி அணைத்து அருள் பெருமாளே - குற்றமற்றுப் பரிசுத்தமானவளா யிருந்த குறமகளான வள்ளிநாயகியை அணைத்துக் கொண்டருளிய பெரியோனே !, சில சேடிமார்கள் ஓடி ஓடி அழைத்து வர பசப்ப - சில பணிவிடைப் பெண்கள் வேகமாய் ஓடிச்சென்று (பொருளுடைய ஆடவர்களை மனைக்கு) அழைத்து வந்து அவர்களைப் பலவிதமாக மயக்கி நிற்க, அதற்கு முன்- அதற்குள்ளாக, ஓதி கோதி முடித்த இலை சுருள் அது கோதி - கூந்தலை வகிர்ந்து மலரிதழ்களை வைத்துப் பின்னிச் சொருகிய முடியைச் சீர்திருத்திக் கொண்டு, நீடு வாச நிறைத்த அகில் புழுகு மீது ஓட-நிலைமையாக வீசும் வாசனை நிறைந்துள்ள அகிற்கட்டைச் சாந்தும் புனுகும் தம்மீது ஓடுமாறு, திமிர்த்த - பூசப் பெற்றுள்ள, தனத்தினில் - தனபாரங்களின் மீது, நேசம் ஆகி - ஆசையுற்று,

அணைத்த சிறக்கிகள் உறவு ஆமோ - அணைத்துக்கொண்ட இளமை பொருந்திய விலைமாதர்களது சிநேகம் கொள்ளத்தக்கதோ?

(வி - ரை) அத்தம் - ஆசை. திவட்கை - திவளல் - சேர்தல் 96-ம் பக்கத்தில் "நாதவிந்து கலாதி" என்று தொடங்கும் பாடலின் பதவுரையில், கொங்குவை காவூர்நாடு என்று பிரித்து, கொங்கு தேசத்திலுள்ள காவூர் வளநாடு என்று பொருள் கூறப்பட்டிருப்பதை மாற்றி, கொங்கு வைகாவூர் நாடு எனப் பிரித்து, கொங்கு தேசத்தைச் சேர்ந்த வைகாவூர் வளநாடு என்று பொருள் கொள்ளவும். (௯உ)

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்—தனதான.

கடலைச் சிறைவைத் துமலர்ப் பொழிலிற்
ப்ரமரத் தையுடற் பொறியிட் டுமடுக்
கமலத் தைமலர்த் திவிடத் தையிரப் பவனூணுக்

கருதிச் சருவிக் கயிலைக் கயமுட்
படுவித் துழையைக் கவனத் தடைசிக்
கணையைக் கடைவித் துவடுத் தனையுப் பிளின்மேவி

அடலைச் செயல்சத் தியையக் கினியிற்
புகுவித் துயமப் ப்ரபுவைத் துகைவித்
தரிகட் கம்விதிர்த் துமுறித் துமதித் தசகோரம்

அலறப் பணிரத் நமணிக் குழையைச்
சிலுகிட் டுமையிட் டொளிவிட் டுமருட்
டுதலுற் றபொறிச் சியர்கட் கடையிற் படுவேனோ?

சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மப் பெயர்செப் பியிடப் பரிவாலே

சநகர்க் குமகஸ் த்யபுலஸ்த் யசநற்
குமரர்க் குமநுக் க்ரகமெய்ப் பலகைச்
சதுபத் துநவப் புலவர்க் கும்விபத் தியில்ஞான

படலத் துறுலக் கணலக் யதமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ்ருத் தியினைப்
பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா!

பவளக் கொடிசுற் றியபொற் கமுகிற்
றலையிற் குலையிற் பலமுத் துதிர்செய்ப்
பழநிப் பதிவெற் பினில்நிற் குமரப் பெருமாளே !

(ப - ரை) சடிலத்தவன் இட்ட விசிட்ட குலத்து - சடாமுடியைத் தரித்துள்ள சிவபெருமான் குறிப்பிட்ட மேன்மையான செட்டி வமிசத்தில், ஒரு செட்டியிடத்து (இன் - சாரியை) உதித்து - தனபதி என்னும் செட்டியினிடத்து அவனது புதல்வனாகத் தோன்றி, அருள் வித்தக ருத்ரஜன்ம பெயர் செப்பிட - இறைவனருளினால் ஞானம் பெற்ற உருத்திர சன்மன் என்று எல்லோராலும் புகழப் பெற்று, பரிவாலே-அன்பினாலே, சகர்க்கும் அகஸ்த்ய புலஸ்த்ய சநற்குமரர்க்கும் அநுக்ரக - சநகர் அகஸ்தியர் புலஸ்தியர் சநற்குமாரர் இவர்களுக்குக் கருணையினால் உபதேசஞ்செய்த வண்ணமே, மெய் பலகை சதுபத்து நவபுலவர்க்கும் - மெய்யை யுணர்த்தும் சங்கப் பலகையில் அமர்ந்திருந்த நாற்பத்தொன்பது புலவர்களுக்கும், விபத்தியில் ஞான படலத்து உற - வேற்றுமையில்லாத ஞானத்தைப் போதிக்கும் நூல்வகைக் குட்பட்டவைகளும், லக்கண லக்ய தமிழ் த்ரயம் அத்தில் - இலக்கணம் அமையப்பெற்று இயல் இசை நாடகம் என்னும் மூன்று வகைப்பட்டு ஆன்றோரால் இயற்றப்பட்டுள்ள தமிழ் நூல்களில், அகப்பொருள் வ்ருத்தியினை - அகப்பொருளை வித்தாரமாய் எடுத்துரைக்க வேண்டிய முறை இன்னதென்று, பழுதற்று உணர்வித்து அருள் - குற்றமின்றித் தெரிவித்தருளிய, சத் வித்தக குருநாதா - நல்ல ஞானகுரு சிகாமணியே !, பவள கொடி சுற்றிய பொன் கமுகின் தலையின் குலையின் - பவளக்கொடி சுற்றிப் படரப் பெற்ற அழகிய பாக்குமரத்தின் தலையிலுள்ள குலைகளினின்றும், பல முத்து உதிர் செய் - முத்துக்கள் அநேகம் உதிரப்பெற்ற, பழநி பதி வெற்பினில் நில் - பழநித் தலத்திலுள்ள மலைமீது எழுந்தருளியிருக்கும், குமர பெருமாளே!, குமார சுவாமியாகிய பெரியோனே !, கடலை சிறை வைத்து - (தனது விசாலமிகுதியினால் அகன்ற) சமுத்திரத்தையும் அடக்கிச் சிறையிலிட்டு, மலர் பொழிலில் ப்ரமரத்தை உடல் பொறியிட்டு - (தனது கருமைநிற மிகுதியினால்) பூஞ்சோலையில் சஞ்சரிக்கும் வண்டின் தேகத்தைப் (பொருமையாகிய) தீயினில் இட்டு வாட்டி, மடு கமலத்தை மலர்த்தி - (சூரியனது ஜோதியை யொத்த தனது காந்தியினால்) நீர் மடுவிலுள்ள தாமரையை மலரச்செய்து, விடத்தை இரப்பவன் ஊண் (க) கருதி சருவி - விஷத்தையே பசித்து வந்து பிச்சை கேட்போனுக்கு அளிக்கத் தக்க உணவாக நினைத்துச் சைகைசெய்து, கயலை கயம் உட்படுவித்து - (தனது வடிவத்தின் சிறப்பினால் தன்னையொத்த) கயல் மீனை வெட்கமுற்றுத் தடாகத்துக்குள்ளேயே மறைந்து கிடைக்கும்படி செய்து, உழையை கவனத்து அடைசி - (சஞ்சல சுபாவத்தினால் தன்னையொத்த கண்ணையுடைய) மானை (தனது சிறப்பினால் நாணமுறச் செய்து அது) காட்டில் அடைபட்டுக் கிடக்கும்படி செய்து,

*கணையை கடைவித்து - (தனது கூர்மை மிகுதியினால் கூர்மையான) அம்பையும் கடைந்து கூர்மையுறச் செய்து, வடு தனை உப்பினின் மேவி-(வடிவத்தில் தன்னை யொத்த) மாமரத்தின் இளங்காயை உப்பினில் இட்டு (தண்டித்து), அடலை செயல் சத்தியை அக்கினியில் புகுவித்து - நீறுக்கும் சக்தியை அக்கினிக்குப் புகட்டி, யம ப்ரபுவை துகைவித்து - (தனக்குள்ள கொல்லுந் திறமை மிகுதியினால்) மேலான பதவியிலுள்ள இயம ராஜனையும் அலையச் செய்து, அரி கட்கம் விதிர்த்து முறித்து - வெற்றியைத் தரத்தக்க கத்தியையும் (தனது வல்லமை மிகுதியினால்) நடுங்கச் செய்து ஒடித்து, மதித்த சகோரம் அலற பண்ணி - (அழகில் சிறந்ததென்று) மதிக்கப்பட்ட செம்பரத்தை மலரானது (தனது சிவப்பின் பெருமையைக் கண்டு) பயந்து அலறும்படி செய்து, ரத்ந மணி குழையை சிலுகிட்டு - இரத்தினங்களிழைத்த அழகிய குழையைத் தாக்கிச் சண்டை செய்து, மை இட்டு - மை தீட்டப் பெற்று, ஒளிவிட்டு - பிரகாசித்து, மருட்டுதல் உற்ற - மயக்குந் தொழிலைப் பூண்ட, பொறிச்சியர் - சூத்திரக்காரர்களான விலைமாதர்களது, கண் கடையில் படுவேனோ - கடைக்கண் பார்வையாகிய வலையில் சிக்கும்படி விடுவது தகுதியோ ?*

(வி - ரை) **சங்கப் பலகை யளித்த வரலாறு:—** *பிரம தேவர் சரஸ்வதிக்கு இட்ட சாபத்தினால் அக்ஷரங்கள் நரர்களாய்த் தோன்றி வட மொழி தென் மொழி இரண்டிலும் சிறந்த புலவர்களாய் விளங்கி, பல நாடுகளுக்குச் சென்று ஆங்காங்குள்ள புலவர்களை வென்று, பிறகு பாண்டிய நாட்டிலுள்ள புலவர்களை வெல்லவேண்டு மென்ற கருத்துடன் அந்நாட்டை நோக்கிச் சென்றனர். சோமசுந்தரக் கடவுள் அவர்களை எதிர் கொண்டு சென்று, நான்மாடக் கூடலுக்கு அழைத்துச் சென்று, அவர்களைத் தம்மைத் தரிசிக்கச் செய்து மறைந்தார். புலவர்கள் வியப்புற்றுப் பேரானந்த மடைந்து நீலகண்டராகிய எம்பெருமானைப் புகழ்ந்து, பிறகு வங்கியசேகர பாண்டியனிடம் சென்றனர். பாண்டியன் அப்புலவர்களுடைய கல்வித்திறமையையும் ஒழுக்கத்தையும் கண்டு களிப்புற்று, அவர்களுக்கு ஒரு சங்க மண்டபம் கட்டுவித்து அவர்களை அதிலிருக்கச் செய்து ஆதரித்து வந்தான். அவர்களடைந்த சிறந்த பதவியைக் கண்டு மனம் புழுங்கிய அந்நாட்டுப் புலவர்களும் பிறநாட்டுப் புலவர்களும் கூடி வந்து சங்கப் புலவர்களுடன் வாதஞ் செய்து தோற்றுச் சென்றனர். இவ்வாறு பல புலவர்கள் ஓயாமல் வந்து வாதஞ் செய்ததைக்கண்டு சலிப்புற்ற சங்கப்புலவர்கள் சோமசுந்தரக்கடவுளை வணங்கித்துதித்து, வாதஞ்செய்ய வரும் புலவர்களது புலமையை அளக்குங் கருவியாகத் தங்களுக்குச் சங்கப்பலகை யொன்று தந்தருள வேண்டுமென்று வேண்டினார்கள். உடனே எம் பெருமான் ஒரு புலவராகத் தோன்றி, இரண்டு சாண் சதுரமுள்ள பலகை யொன்றை அவர்களுக்கு அளித்து, "இப் பலகை புனிதமானது; இது மந்திர சக்தியுமுள்ளது; அறிவில் முதிர்ந்த உங்களைப் போன்றவர்களுக் கெல்லாம் ஒவ்வொருவருக்கு ஒரு முழம் வளர்ந்து*

இருக்க இடந்தரும். பிறர் கல்வித்திறமையை அளப்பதற்கு இது உங்களுக்கு அளவு கோலாக இருக்கட்டும்'' என்று கூறியருளினர். அதனுலேயே இப்பாடலில் அப்பலகையை மெய்ப்பலகை என்று கூறப்பட்டிருக்கிறது.

**சங்கத்தார் கலகம் தீர்ந்த வாலாறு (முருகப்பெருமான் செட்டி குலத்தில் ஊமைப் பிள்ளையாகத் தோன்றிய வரலாறு)**:—சங்கப் புலவர்கள் நாற்பத்தெண்மரும் வெவ்வேறு செந்தமிழ் நூல்களை இயற்றிச் செருக்குற்றுத் தமக்குள்ளேயே மாறுபட்டு, தங்களுக்குள் ஏற்பட்ட கலகத்தைத் தீர்த்துக் கொள்ளச் சோமசுந்தரக் கடவுளது சந்நிதானத்தை யடைந்து தாங்கள் இயற்றிய பிரபந்தங்களின் பெருமை சிறுமைகளை எடுத்துரைத்துத் தங்களுக்குள் நேர்ந்த கலகத்தை நீக்கியருள வேண்டுமெனப் பிரார்த்தித்தார்கள். அப்போது அப்பெருமான் ஒரு புலவராக அவர்கள் முன்னே தோன்றி, "இந்நகரத்தில் தனபதி யென்னும் ஒரு வைசியனுக்கு அவன் செய்த சிறந்த தவத்தின் பயனுக ஒப்பற்ற குமாரக்கடவுள் புதல்வனுகத் தோன்றியுள்ளார் அப்பிள்ளை ஊமைப் பிள்ளை. உங்கள் பிரபந்தங்களை நீங்கள் அப்பிள்ளையினிடத்தில் படித்துக் காட்டுவீராயின், அவன் சிரக்கம்பம், ஆநந்தபாஷ்பம், மயிர்சிலிர்த்தல் முதலிய சின்னங்களினுல் அப்பிரபந்தங்களிலுள்ள சொல்லாழமும் பொருளாழமும் இத்தன்மையன வென்று உணர்த்துவான்'' என்று கூறியருளினர். புலவர்கள் அவ்வாறே அந்த ஊமைப்பிள்ளையினிடம் சென்று, தங்கள் பிரபந்தங்களைப் படித்துக் காட்ட, அப்பிள்ளை சைகைகளினுல் நக்கீரர் கபிலர் பரணர் இம்மூவருடைய நூல்களே சிறந்தவையெனத் தெரிவித்தான்.

பெண்களின் கண்களுக்குக் கடல், வண்டு, கயல் மீன், மானின் கண் அம்பு இவைகளை உவமை கூறுதல் மரபு. பூத பேதங்கள் ஒழியப் பெறுவதே ஞானமாதலின், "விபத்தியில் ஞான படலம்'' என்று கூறப்பட்டது. (௩௩)

தனனதன தானந்த தத்ததன தானதன
தனனதன தானந்த தத்ததன தானதன
தனனதன தானந்த தத்ததன தானதன—தனதான.

சுருதிமுடி மோனஞ்சொல் சிற்பரம ஞானசிவ
சமயவடி வாய்வந்த அத்துவித மானபர
சுடரொளிய தாய்நின்ற நிட்களசொ ரூபமுத லொருவாழ்வே
துரியநிலை யேகண்ட முத்தரித யாகமல
மதனில்விளை யாநின்ற அற்புதசு போதசுக
சுயபடிக மாவின்ப பத்மபத மேஅடைய உணராதே

கருவினுரு வேதங்கு சுக்கிலநி தானவளி
பொருமஅதி லேகொண்ட முக்குணவி பாகநிலை
கருதவறி யாவஞ்ஜ கக்கபட மூடியுடல் வினைதானே
கலகமிட வேபொங்கு குப்பைமல வாழ்வுநிஜ
மெனவுழலு மாயஞ்செ னித்தகுகை யேஉறுதி
கருதசுழ மாமிந்த மட்டைதனை யாளஉன தருள்தாராய் !
ஒருநியம மேவிண்ட சட்சமய வேதஅடி
முடிநடுவு மாயண்ட முட்டைவெளி யாகியுயி
ருடலுணர்வ தாயெங்கு முற்பனம தாகஅம ருளவோனே !
உததரிச மாமின்ப புத்தமிர்த போகசுக
முதவுமம லாநந்த சத்திகர மேவுணர
வுருபிரண வாமந்த்ர கர்த்தவிய மாகவரு குருநாதா !
பருதிகதி ரேகொஞ்சு நற்சரண நூபுரம
தசையநிறை பேரண்ட மொக்கநட மாடுகன
பதகெருவி தாதுங்க வெற்றிமயி லேறுமொரு திறலோனே !
பணியுமடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
சரவணப வாவொன்று வற்காமு மாகிவளர்
பழநிமலை மேனின்ற சுப்ரமணி யாவமரர் பெருமாளே !

(ப - ரை) ஒரு நியமமே விண்ட - (அன்பினால் பரமனை அடைய முயல வேண்டுமென்ற) ஒரு நியமத்தையே எடுத்துரைக்கும், சட் சமய - உட்சமயம் ஆறினுக்கும் (ஆதாரமாகவுள்ள), வேத அடி முடி நடுவும் ஆய் - வேதத்தின் ஆரம்பமாகவும் நடுவாகவும் முடிவாகவும் நின்று, அண்ட முட்டை வெளி ஆகி - அண்ட கோளமாகவும் அதற்கப்பாலுள்ள (சுத்த நிராதார) வெளியாகவும் ஆகி, உயிர் உடல் உணர்வு அது ஆய் - (உலகத்தில் தோன்றும் சகல விதமான ஜீவகோடிகளின்) உடலாகவும் உயிராகவும் அறிவாகவும் நின்று, எங்கும் உற்பனம் அது ஆக அமர் உளவோனே - (பார்க்குமிடமெங்கும் நீக்கமற) சத்தாக (உண்மைப்பொருளாக) (நிறைந்து) பொருந்தியிருப்பவனே !, உத தரிசம் ஆம் இன்ப - ஜலத்தோற்றமானது (தாகவிடாய்ப்பட்டவருக்கு) தரும் இன்பத்துக்குச் சமானமான இன்பத்தை அளிக்கும், புத்து அமிர்த - நூதனமான அமுதத்தை, போக சுகம் - அநுபவிப்பதனாலுண்டாகும் சுகத்தை, உதவும் - ஊட்டுவிக்கும், அமல ஆநந்த சத்திகரம் (ஏ - அசை) உணர - மலசம்பந்தமில்லாத ஆநந்தம் பொருந்தியிருக்கும் திறமையைத்தரும் அருட்பெருங்கொடையை அறிவினால் அறிய இயலும் வண்ணம், உரு பிரணவா மந்த்ர கர்த்தவியம் ஆக - (ஓங்கார) வடிவத்தை ஏற்று நிற்கும் பிரணவ மந்திரத்தின் பொருளை விளங்கச்

செய்யத்தக்கவனாக, வரு குரு நாதா - வந்த ஞான தேசிகனான இறைவனே !, பருதி கதிரே கொஞ்சு - சூரியனது கிரணத்தை யொத்த ஒளி இனிமையாகப் பொருந்தியிருக்கும், நல் சரண நூபுரம் அது அசைய - பெறற்கரிய பேறாகிய முத்தியை அளிக்கும் (நினது) பாதங்களில் அணிந்துள்ள தண்டைகள் அசைந்து ஒலிப்ப, நிறை பேர் அண்டம் ஒக்க நடமாடும் - விரிந்து பரந்துள்ள பெரிய அண்டத்திலுள்ள ஜீவராசிகளனைத்தும் (அவ்வொலிக்குப்) பொருத்தமாக நடிக்கும்படி செய்யும், கன பத செருவிதா - சிறந்த பாதமலர்கள் உடைமையினால் செருக்குற்றிருப்பவனே !, துங்க வெற்றி மயில் ஏறும் ஒரு திறலோனே - சிறந்ததும் என்றும் வெற்றியை அடைவதுமான மயிலின்மீது ஏறிச் சவாரிச் செய்யவல்ல ஒப்புயர்வற்ற திறமை வாய்ந்தவனே !, பணியும் அடியார் சிந்தை மெய்ப்பொருள் அது ஆக நவில் - வணங்கும் மெய்யடியவர்கள் மனமானது எப்பொருளை அழிவில்லாத உண்மைப் பொருளான சத்து என்று சொல்லுகிறதோ அப்பொருளானவனும், சரவணபவா ஒன்று வற்காரமும் ஆகி வளர் - நினது சடக்ஷரம் பொருந்தப் பெற்று வட்டவடிவமாக வளர்ந்திருக்கும், பழநி மலைமேல் - பழநிமலையின் மீது, நின்ற சுப்ரமணியா - சுப்ரமண்ய மூர்த்தியாக அமர்ந்திருப்பவனே !, அமரர் பெருமாளே - தேவர்கள் நாயகனே !, சுருதி முடி மோனம் சொல் - வேதத்தை முற்றும் உணர்ந்தோர் அறியும் மௌனத்தின் தன்மையை எடுத்துரைப்பதும், சித் பரம ஞான - சித்தான பொருளை அடைவதற்குரிய உண்மையான ஞானத்தை உணர்த்துவதுமான, சிவ சமய வடிவாய் நின்ற - சிவ சமயத்தின் வடிவத்தை ஏற்று நிற்கும், அத்துவிதம் ஆன - அத்துவித நிலைமையில் பொருந்தி, பர சுடர் ஒளி அது ஆய் நின்ற - ஞானப் பரஞ்சோதியாய் அமர்ந்துள்ள, நிட்கள சொரூப முதல் ஒரு வாழ்வே - நிட்கள வடிவமுடைய முழுமுதற் பொருளாய் நின்று ஒப்பற்ற வாழ்வைத் தருபவனே !, துரிய நிலை (ஏ - அசை) கண்ட முத்தர் - துரிய நிலையில் அமர்ந்து மெய்ப்பொருளை உணர்ந்த ஜீவன் முக்தர்களது, இதயா கமலம் அதனில் விளையா நின்ற - இதயத் தாமரையில் உதித்துத் தோன்றுபவைகளும், அற்புத சுபோத - ஞான மயமான நல்ல போதகத்தைத் தருபவைகளும், சுக - துக்கமற்ற சுகத்தை ஊட்டுபவைகளும், சுய படிக மா இன்ப - சுயமான படிகத்தைப்போல் மாசற்ற தூய்மை பொருந்திய பேரின்ப அநுபவத்தைத் தருபவைகளுமான, பத்ம பதமே - தாமரையையொத்த நினது பாதாரவிந்தங்களையே, அடைய உணராது (ஏ - அசை) - அடையவேண்டியது அவசியமென்று அறியாமல், கருவில் உருவே தங்கு சுக்கிலட்-கருவில் வடிவத்தைச் தங்கச்செய்யும் சுக்கிலத்தினில், நிதான வளி பொரும-ஒரு அளவான பிராணவாயு வந்து மோத, அதிலே கொண்ட முக்குண விபாக நிலை-அதனாலே வந்து பொருந்தப்பெற்ற முக்குணங்களை விட்டுப் பிரிந்து நிற்கும் நிலைமை, கருத அறியா வஞ்சக கபட மூடி உடல் - இன்ன தன்மையதென்று அறிய முடியா வண்ணம் தடுப்பது வஞ்சகம் பொருந்தியதும் கபடமாக வேலை செய்வதுமான மூடியான தேகமானது,

வினை தானே கலகம் இடவே பொங்கு - (பலவகைப்பட்ட) வினைகளே கலகத்தை யுண்டுபண்ணும் வண்ணம் நிறைந்திருக்கப் பெற்றதும், குப்பை - குப்பையைப்போல் ஒதுக்கித் தள்ளத் தக்கதும், மல - மும்மலங்களின் காரியம் நிறையப் பெற்றதுமான, வாழ்வு - உலக வாழ்க்கையை, நிஜம் என உழலும் மாயம் - உண்மையென்று கருதி அதில் அலைந்து திரியும்படி செய்யும் மாயையானது, செனித்த குகையே உறுதி கருது - உதித்த அந்தகாரம் நிறைந்த குகை (யாக இருக்கிறது ; அதுவே) அழியாத பொருள் என்று எண்ணும், அசுழும் ஆம் இந்த மட்டை தீனை - நாயாகிய இந்த மூடனை, ஆள உனது அருள் தாராய் - அடிமை யாக்கிக்கொள்ள நீ அருள் புரியவேண்டும்.

(வி - ரை) "ஒன்றது பேரூர் வழியா றதற்குள, என்றதுபோல விருமுச் சமயமும்" என்று திருமந்திரத்தில் கூறியுள்ளபடி, உட்சமயங்கள் ஆறும் பரம் பொருளின் அருளைப்பெற அன்பின் வழியையே போதிக்கின்றன. உட்சமயங்கள் ஆறு :—சைவம், வைஷ்ணவம், சாத்தம், சௌரம், காணுபத்தியம், கௌமாரம். இந்த ஆறு சமயங்களும் வேதத்தைப் பிரமாணமாக வுடையவை. உற்பனம் - மெய்ப்பொருள் - சத்து. முருகப் பெருமானது பாதார விந்தங்கள் பலகோடி அருணரவியின் காந்தியை வீசுவதனால், "பருதி கதிரே கொஞ்சு நற் சரணம்" என்று கூறப்பட்டது. அம்பலத்தில் அற்புத நிர்த்தனஞ்செய்து அகில வுலகங்களையும் ஆட்டுவிக்கும் முக்கணனைத்தையும் தமது சிலம்புகளின் ஓசைக் கிணங்க அண்ட பகிரண்டங்களும் ஆடும்படி செய்யும் முருகப் பெருமானும் வேறு வேறன்று. சிவமும் சுப்ரமண்யமும் ஒன்றே. முருகப்பெருமான் சிவ பெருமானது பழைய அறுமுக வடிவம். அகங்காரத்தை அடக்கியாளும் வல்லமை பொருந்தியது ஞானமொன்றே யாதலால், அகங்கார சொரூபியான சூர பதுமன் அருளினால் பெற்ற வடிவமான மயிலின்மீது ஏறிச் சவாரி செய்ய வல்லவர் ஞான சொரூபியான முருகப்பெருமானே. இதையே "வெற்றி மயிலேறு மொருதிறலோனே" என்ற விடத்து உணர்த்தப்பட்டது. பழநி மலையானது சடாக்ஷரத்தின் வடிவம் என்பது சுவாமிகள் கருத்துப்போலும். சுருதி முடிவான யோனத்தை உரைப்பதும், சித் பரமஞானத்தைப் புகட்டுவதும் சிவசமயம். அந்தச் சிவசமயத்தின் வடிவத்தை ஏற்றுக்கொண்டது அத்துவிதம். அத்துவித நிலைமையில் பொருந்தி நின்று, அந்நிலைமையை அடைந்தோருக்கு ஞானப்பரஞ் சோதியாய்த் தோன்றி ஒப்புயர்வற்ற வாழ்வைத் தருபவன் முருகப்பெருமானே. கருவில் உதிக்கும் பிண்டத்தில் பிராணவாயு வந்துசேர்ந்த மாத்திரத்திலேயே முக்குணங்களும் வந்து சேர்ந்து விடுகின்றன. அவைகளை விட்டுப் பிரிந்து நிற்கும் நிலைமையின் தன்மையை உணரமுடியாமல்;செய்வது இத்தேகமே யாகும்.()

தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன
தானந்தன தானன தானன—தனதான.

மூலங்கிள ரோருரு வாய்நடு
நாலங்குல மேனடு வேரிடை
மூள்பிங்கலை நாடியொ டாடிய முதல்வேர்கள்

மூளும்பிர காசம தாயொரு
சூலம்பெற வோடிய வாயுவை
மூலந்திகழ் தூண்வழி யேயள விடவோடிப்

பாலங்கிள ராறுசி காரமொ
டாருஞ்சுட ராடுப ராபர
பாதம்பெற ஞானச தாசிவ மதின்மேவிப்

பாடுந்தொனி நாதமு நூபுர
மாடுங்கழ லோசையி லேபரி
வாகும்படி யேயடி யேனையும் அருள்வாயே!

சூலங்கலை மான்மழு வோர்துடி
வேதன்தலை யோடும ராவிரி
தோடுங்குழை சேர்பர னார்தரு முருகோனே!

சூரன்கர மார்சிலை வாளணி
தோளுந்தலை தூள்பட வேஅவன்
சூளுங்கெட வேல்விடு சேவக மயில்வீரா!

காலின்கழ லோசையு நூபுர
வார்வெண்டைய வோசையு மேயுக
காலங்களி னோசைய தாநட மிடுவோனே!

கானங்கலை மான்மக ளார்தமை
நாணங்கெட வேயணை வேள்பிர
காசம் பழநுபுரி மேவிய பெருமாளே!

(ப-ரை) சூலம் கலைமான் மழு ஓர் துடி. வேதன் தலையோடும் - சூலத்தையும் கலைமானையும் மழுவையும் ஒப்பற்ற உடுக்கையையும் பிரமகபாலத்தையும் (கையி லேந்திக் கொண்டும்), அரா விரி தோடும் குழை சேர் - பாம்பின் படத்தையும் தோடுகளையும் குழைகளையும் (காதுகளில்) அணிந்து கொண்டுமுள்ள, பரனார் - பரம்பொருளான சிவபெருமான், தரு - தந்தருளிய, முருகோனே - ஞான

சொரூபியே !, சூரன் கரம் ஆர் சிலை - சூரபதுமனது கையில் தங்கியிருந்த வில்லும், வாள் அணி தோளும் - வாள் தங்கியிருந்த தோளும், தலை - தலையும், தூள் பட (ஏ - அசை) - பொடியாகுமாறும், அவன் சூள் (உம் - அசை) கெட - அவனுடைய ஆணை அழியுமாறும், வேல் விடு சேவக - வேலாயுதத்தைப் பிரயோகஞ் செய்த நாதனே !, மயில் வீரா - மயிலை வாகனமாகக்கொண்டு நடத்தவல்ல வீரனே !, காலின் கழல் ஓசையும் - நினது கால்களில் அணிந்துள்ள கழல்களின் ஓசையும், நூபுர ஆர் வெண்டைய ஓசையும் (ஏ - அசை) - சிலம்புகளில் பொருந்தியுள்ள சதங்கைகளின் ஓசையுமே, யுக காலங்களின் ஓசை அது ஆ(க) - யுக காலங்களை வரையறுத்துக் குறிப்பிடும் ஓசையாக இருக்கும்படி, நடமிடுவோனே - நிர்த்தனம் புரிபவனே !, கானம் கலைமான் மகளார் தமை - காட்டிலுள்ள கலைமான் வயிற்றிற் பிறந்த மகளான வள்ளிநாயகியை, நாணம் கெட (ஏ - அசை) - வெட்கத்தை விட்டு, அணை வேள் - அணைந்துகொண்ட கட்டழகு பொருந்தியவனே ! பிரகாசம் பழனுபுரி மேவிய பெருமாளே - (எல்லா நலங்களாலும்) பிரகாசித்து விளங்கும் பழநித் தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, மூலம் கிளர் ஓர் உருவாய் - மூலாதாரத்திலுள்ள பிரணவம் இயங்குவதனுல் எழும்பும் ஒரு வடிவத்தை மேற்கொண்டு, (அவ்வடிவத்தின்), நடு நாலு அங்குலம் மேல் நடு வேர் இடை - நடுவினுக்கு நான்கு அங்குலம் மேலேயுள்ள மத்திய நாடியான சுழுமுனை நாடியினிடத்து, மூள் பிங்கலை நாடியொடு - கலக்கும் பிங்கலை நாடியினேடு, ஆடிய முதல் வேர்கள் - கலந்து சுழலும் குண்டலினியும் அதன் கிளைகளும், மூளும் பிரகாசம் அது ஆய் - நிறைந்த பேரொளியை வீச, ஒரு சூலம் பெற ஓடிய வாயுவை - இரேசகம் பூரகம் கும்பகம் என்று சூல வடிவமாக ஓடிய காற்றை, மூலம் திகழ் தூண் வழியே அளவிட ஓடி - மூலாதாரத்தில் (பிரணவத்தில்) விளங்கும் சுழுமுனை நாடியினூடே கணக்கிடுமாறு ஓடும்படி செய்து, பாலம் கிளர் ஆறு சிகாரமொடு ஆரும் சுடர்-இடையீடின்றிப் பொருந்தியுள்ள ஆறு ஆதாரங்களில் சிவத்துடன் கலந்துள்ள ஜோதி சொரூபமான சிவசக்தி, ஆடு பராபர - நடம்புரிவதனுல் உதிக்கும் சச்சிதானந்த சொரூபியும் பராபரனுமாகிய நினது, பாதம் பெற - பாதமலர்களை அடையும் பொருட்டு, ஞான சதா சிவம் அதில் மேவி - ஞானத்தைத் தரத்தக்க சதா சிவ தத்துவத்தில் பொருந்தி நின்று, பாடும் தொனி நாதமும் - (மகா மாயையான குண்டலினி சக்தியால் ஏற்படும்) பாடுந் தொனியை யொத்த நாதத்திலும், நூபுரம் ஆடும் கழல் ஓசையிலே - அசைகின்ற சிலம்பு கழல் இவைகளின் ஓசையிலும், பரிவாகும்படி (ஏ - அசை) - அன்பு பூணும்படி, அடியேனையும் அருள்வாயே - அடியேனுக்கும் அருள்புரியவேண்டும்.

(வி-ரை) மூலம் - மூலாதாரம். தேகத்தில் பொருந்தியுள்ள ஆறு ஆதாரங்களில் ஒன்று. அவையாவன:—மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை. குண்டலினி சக்தி - சுழுமுனை நாடியினூடே அநேக காந்திகளுடனே பாம்பின் வடிவாயிருந்து உடலை வளைத்துக் கொண்டு மூலாதாரத்தின் மேலே படத்தை வைத்து யோக நித்திரை செய்வது. (௬௫)

# 3. திருச்சீரலைவாய் எனும் திருச்செந்தூர்

*தந்தனன தந்தனந் தந்தனன தந்தனந்*
*தந்தனன தந்தனந்—தந்ததான.*

தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையுந்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்

தந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்

கண்டுறக டம்புடன் சந்தமகு டங்களுங்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்

கண்களுமு கங்களுஞ் சந்திரநி றங்களுங்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ ?

புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது

பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும் வளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூரக்

கொண்டநட னம்பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே !

கொங்கைகுற மங்கையின் சந்தமண முண்டிடுங்
கும்பமுநி கும்பிடுந் தம்பிரானே !

(ப - ரை) புண்டரிகர் அண்டமும் - (திருமாலின் உந்தித்) தாமரையில் தோன்றிய பிரமதேவரது அண்டமான பிரமாண்டமும், கொண்ட பகிர் அண்டமும் - (அவ்வண்டத்தைத் தன்னகத்தே) அடக்கிக்கொண்டுள்ள பேரண்டமும், பொங்கி எழ - கொதித்துக் கிளம்புமாறு, (உக்கிரமான கோபத்துடன்), வெம் களம் கொண்டபோது - கொடிய போர்க்களத்தை அடைந்தபோது, பொன் கிரி என அம் சிறந்து - பொன்மலையைப்போல் அழகிற் சிறந்து, எங்கினும் வளர்ந்து - எல்லாப் புறங்களிலும் பெருகி விசுவரூபம் எடுத்துக்கொண்டு, முன் புண்டரிகர்

தந்தையும் சிந்தைகூர - முன்பு விசுவரூபம் எடுத்துக்கொண்ட (வரும்) மல ரோனாகிய பிரமதேவரது தந்தை(யுமான) திருமால் அதிசயித்து ஆலோசனை செய்யும் வண்ணம், நடனம் கொண்ட - திருவிளையாடலைப் புரிந்த, பதம் செந்தி லிலும் - நினது இருப்பிடமான திருச்செந்தூரிலும், என்றன் முன் - அடியேன் முன், கொஞ்சி - அழகாக, நடனம் கொளும் - நிர்த்தனஞ் செய்த, கந்த - கந் தனே !, வேளே - கட்டழகு வாய்ந்தவனே !, கொங்கை குற மங்கையின் - அழ கிய தனபாரங்களையுடைய குறப்பெண்ணான வள்ளிநாயகியின், சந்த மணம் உண் டிடும் - (தனபாரங்களின் மீது பூசப்பெற்ற) சந்தனத்தின் வாசனையை (மகிழ்ச்சி யுடன்) முகர்பவனும், கும்பமுனி கும்பிடும் - கும்பத்திலுதித்த முனிவரான அகத்திய மாமுனிவரால் வணங்கப்படுபவனுமான, தம்பிரானே - நாயகனே !, தண்டை அணி வெண்டையம் - (நினது கால்களில் அணிந்துள்ள) தண்டை களில் பொருந்திய அழகிய சதங்கைகளும், கிண்கிணி சதங்கையும் - கிண் கிணென ஒலிக்கும் சதங்கைகளும், தண் கழல் சிலம்புடன் - இனிய நாதம் பொருந்திய கழல்களுடனும் சிலம்புகளுடனும், கொஞ்சவே - இனிமையாக ஒலிக் கும் வண்ணம், முன் நின் தந்தையினை பரிந்து - முன்பு நினது தந்தையி னிடத்து அன்புற்று, இன் பவுரி கொண்டு - இனிமையான விசித்திர நிர்த்த னம் புரிந்து, நல் சந்தொடம் அணைந்து நின்ற அன்பு போல - மிகுந்த சந்தோ ஷத்துடன் (முக்கணணைத்தையை) அணைந்து நின்றபோது காட்டிய அன்பை (அடி யேனிடத்தும்) பூண்டு, கண்டு உற - நின்னை (அடியேன்) தரிசித்து அடையும் வண்ணம், கடம்புடன் - கடம்ப மலர்மாலையும், சந்த மகுடங்களும் - அழகிய கிரீ டங்களும், கஞ்ச மலர் செம் கையும் - தாமரை மலரையொத்த அழகிய கைகளும், சிந்து வேலும் - (பேரொளி) வீசும் வேலாயுதமும், கண்களும் - பதினெட்டுக் கண்களும், முகங்களும் - ஆறுமுகங்களும், சந்திர நிறங்களும் - (அம்முகங்கள் வீசும்) சந்திரனையொத்த பிரகாசமும், கண் குளிர - அடியேனது கண்கள் இன்பமடையுமாறு, என்றன் முன் - அடியேன் முன்னே, சந்தியாவோ - தோன் றும்படி நீ என் முன்னே வாராயோ ?

(வி - ரை) முருகப்பெருமான் போர்க்களத்தில் சூரபதுமனுக்கு விசுவரூப தரிசனம் அளித்த வரலாற்றை 256-ம் பக்கத்தில் காண்க.

**அகத்தியர் ஜனன வரலாறு** (கும்பமுனி)—கடற்கரையிலிருந்த மகா தவசி களான மித்திரர் வருணர் என்பவர்கள் ஊர்வசி என்னும் தேவதாசியைக் கண்டு பெருங்காமமுற்றனர். அப்போது அவர்களில் ஒருவர் தமது வீரியத்தை ஜலத்தி லும் மற்றொருவர் கும்பத்திலும் விடுப்ப, ஜலத்தினின்று வசிஷ்டரும் கும் பத்தினின்று அகத்தியரும் தோன்றினர். அதனால் அகத்தியருக்குக் **கும்ப யோனி, கும்பசம்பவர், கும்பமுனி,** குடமுனி முதலிய பல திருநாமங்கள் உண் டாயின. (க)

*தனதனன தனதனன தந்தத் தந்தத்*
*தனதனன தனதனன தந்தத் தந்தத்*
*தனதனன தனதனன தந்தத் தந்தத்—தனதான.*

அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலையுமுடை யவனரவ தண்டச் சண்டச் சமனோலை

அதுவருகு மளவிலுயி ரங்கிட் டிங்குப்
பறைதிமிலை திமிர்தமிகு தம்பட் டம்பற்
கரையவுற வினரலற வுந்திச் சந்தித் தெருவூடே

எமதுபொரு ளெனுமருளை யின்றிக் குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட் டுண்கைக்
கிளையுமுது வசைதவிர இன்றைக் கன்றைக் கெனநாடா

திடுககடி தெனுமுணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனவகலு நெறிகருதி நெஞ்சத் தஞ்சிப் பகிராதோ ?

குமுதபதி வகிரமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலசடை பவுரிகொடு தொங்கப் பங்கிற் கொடியாடக்

குலதடினி அசையஇசை பொங்கப் பொங்கக்
கழலதிர டெகுடெகுட டெங்கட் டெங்கத்
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத் தொகுதீதோ

திமிதமென முழவொலிமு ழங்கச் செங்கைத்
தமருகம திர்சதியொ டன்பர்க் கின்பத்
திறமுதவு பாதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா !

திரளுமணி தரளமுயர் தெங்கிற் றங்கிப்
புரளஎறி திரைமகர சங்கத் துங்கத்
திமிரசல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே !

(ப - ரை) குமுத பதி வகிர் - நீராம்பல் மலருக்கு நாயகனான சந்திரனது பிறையானது, அமுது சிந்த சிந்த - அமுத கிரணங்களை மேன்மேலும் பொழியவும், சரண பரிபுர சுருதி கொஞ்ச கொஞ்ச - பாதமலர்களில் அணிந்துள்ள

சிலம்புகளின் இனிய நாதம் பரவவும், குடில சடை பவுரி கொடு தொங்க - வளைந்த சடைகள் (நிர்த்தனத்துக்கு ஏற்ப) குதித்தசைந்து தொங்கவும், பங்கில் கொடி ஆட - இடப்புறத்தில் கொடியைப்போன்ற இடையுடைய உமா தேவியார் ஆடவும், குல தடினி அசைய - சிறந்த ஆறுன கங்காநதி (சடாமுடியில்) அசைந்து தோன்றவும், இசை பொங்க பொங்க - இனிய வாத்தியங்கள் கோஷிக்கவும், கழல் அதிர - (பாதமலர்களில் அணிந்துள்ள) கழல்கள் ஒலிப்பவும், டெகு டெகுட * * * * * திமிதம்,—என - என்று, முழவு ஒலி முழங்க- மத்தளங்களின் ஓசை முழங்கவும், செம் கை தமருகம் அது அதிர் சதியொடு - அழகிய கையிலுள்ள உடுக்கையானது ஒலித்துத் தாளம் போடவும், (அம்பலத்தில் அற்புத நிர்த்தனஞ்செய்து), அன்பர்க்கு - மெய்யன்பு பூண்ட அடியவர்களுக்கு, இன்ப திறம் - நிலைமையான பேரின்பத்தை, உதவும் - தந்தருளும், பரத குரு - பரத (நிர்த்தன) சாஸ்திரத்தைப் போதிக்கவல்ல ஒப்பற்ற குருவான சிவபெருமான், வந்திக்கும் - வணங்கிய, சத் குருநாதா - சத்தான பொருளைப் போதிக்கும் குருவான நாதனே !, திரளும் மணி தாளம் - கூட்டமாயுள்ள அழகிய முத்துக்கள், உயர் தெங்கில் தங்கி புரள - (கடற்கரையிலுள்ள) உயரமான தென்னைமரங்களில் போய்ச் சேர்ந்து அங்கு புரளும் வண்ணம், எறி திரை - (அலைகளை) வீசி எறியும் அலைகளை வீசுவதும், மகர சங்க - மீன்களும் சங்கங்களும் தன்னகத்தே வசிக்கப்பெற்றதும், துங்க-விசாலமானதும், திமிர - இருள் நிறைந்ததும், சல நிதி தழுவும் - நீர் நிறைந்ததுமான சமுத்திரத்தை ஒட்டியுள்ள, செந்தில் கந்த பெருமாளே - திருச்செந்தூரில் அடியவர்க்குப் பகைவர்களாயுள்ளவர்களை அழிப்பவனாய் அமர்ந்திருக்கும் பெரியோனே !, அமுத உததி விடம் உமிழும் -அமுதம் தோன்றிய திருப்பாற்கடலில் உதித்த ஆலகால விஷத்தைக் கக்கும், செம் கண் - சிவந்த கண்களையும், திங்கள் பகவின் ஒளிர் - சந்திரனது பிறையைப் போலப் பிரகாசிக்கும், வெளிறு எயிறு - வெண்மையான பற்களையும், அஞ்சல் குஞ்சி தலையும் - அவிழ்ந்து விரிந்துள்ள மயிரையுடைய தலையையும், உடையவன் - உடையவனும், அரவ தண்ட - பாம்பையே தண்டமாக உடையவனும், சண்ட சமன் ஓலை அது வருகும் அளவில் - கொடியவனுமாகிய யமனது ஓலையானது வரும்போது, உயிர் அங்கிட்டு - ஜீவனானது யமலோகத்துக்குச் செல்ல, இங்கு பறை திமிலை - இவ்வுலகத்தில் (உயிரிழந்த ஜடத்துக்காக) பறைகளும் கைத்தாளங்களும், திமிர்தம் மிகு - ஒலிமிக்க, பல் தம்பட்டம் - பல தம்பட்டங்களும், கரைய - முழங்கவும், உறவினர் அலற - சுற்றத்தவர்கள் (துக்கத்தினால்) புலம்பிக் கதறவும், உந்தி சந்தி தெருவூடே - அகன்ற சந்திகளையுடைய தெருவின் வழியே, கிளை (உம் - அசை) முது வசை தவிர - சுற்றத்தவர்கள் வெகுகாலமாகக் கூறிவந்த (உலோபி என்ற) நிந்தை வார்த்தையைக் கூறாது விடுமாறு, எமது பொருள் எனும் மருள் (ஐ - சாரியை) இன்றி - எம்முடைய பொருள் என்னும் மயக்கமில்லாமல், குன்றி பிளவு அளவு -

குன்றிமணியைப் பிளந்த பகுதியின் அளவாயினும், தினை அளவு - தினையளவாயினும், பங்கிட்டு - (வறிஞர்க்குப்) பகிர்ந்து கொடுத்து, உண்கைக்கு - உண்பதற்கு, இன்றைக்கு அன்றைக்கு என நாடாது - இன்றைக்கு நாளைக்கு என்று நாள் தேடாமல், கடிது இடுக எனும் உணர்வு - சீக்கிரம் தானஞ்செய்ய வேண்டுமென்ற அறிவு, பொன்றிக்கொண்டிட்டு - அழிந்து போகப்பெற்று, டுடுடுடு * * * டுண்டுட்டு—, என - என்னும் உடுக்கை யொலியுடன், அகலும் நெறி கருதி - (தன்னுடையவையென்று கருதிய வீடு, பொருள் முதலியற்றை விட்டு) நீங்கும்போது செல்லவேண்டிய மார்க்கத்தை நினைத்து, நெஞ்சத்து அஞ்சி - மனத்தில் பயமுற்று, பகிராதோ - பகிர்ந்து கொடுக்கமாட்டேனோ?

(வி - ரை) இப்பாடலில் தருமத்தின் அவசியம் கூறப்பட்டது.

"மலையாறு கூறெழ வேல்வாங்கி னானை வணங்கியன்பி
னிலையான மாதவஞ் செய்குமி னோநும்மை நேடிவருந்
தோலையா வழிக்குப் பொதிசோறு முற்ற துணையுங்கண்டீ
ரிலையா யினும்வெந்த தேதா யினும்பகிர்ந் தேற்றவர்க்கே."

—கந்தரலங்காரம். (௨)

தானனா தந்தனந் தானனா தந்தனந்
தானனா தந்தனந்—தனதான.

காலனார் வெங்கொடுந் தூதர்பா சங்கொடேன்
காலினார் தந்துடன் கொடுபோகக்

காதலார் மைந்தருந் தாயரா ருஞ்சுடுங்
கானமே பின்தொடர்ந் தலறாமுன்

சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ தண்டமுஞ்
சூடுதோ ளுந்தடந் திருமார்புந்

தூயதாள் தண்டையுங் காணஆர் வஞ்செயுந்
தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்!

ஆலகா லம்பரன் பாலதா கஞ்சிடுந்
தேவர்வா ழுன்றுகந் தமுதீயும்

ஆரவா ரஞ்செயும் வேலைமேல் கண்வளர்ந்
தாதிமா யன்றனன் மருகோனே!

சாலிசேர் சங்கினம் வாவிசூழ் பங்கயஞ்
சாரலார் செந்திலம் பதிவாழ்வே!

தாவுசூ ரஞ்சிமுன் சாயவே கம்பெறுந்
தாரைவே லுந்திடும் பெருமாளே!

(ப - ரை) ஆலகாலம் பரன் பாலது ஆக - ஆலகால விடமானது பரம் பொருளான சிவபெருமானிடம் போய்ச் சேர்ந்தபின், அஞ்சிடும் தேவர் வாழ - அதைக் கண்டு பயந்தோடிய தேவர்கள் அழியாமல் நல்வாழ்வு வாழும் வண்ணம், அன்று - திருப்பாற்கடலைக் கடைந்த நாளில், உகந்து - மகிழ்ந்து, அமுது ஈயும் - அவர்களுக்கு அமுதத்தை அளித்தருளியவரும், ஆரவாரம் செயும்-பேரொலி செய்யும்,வேலை மேல் - திருப்பாற்கடலின்மீது, கண்வளர்ந்த - யோகநித்திரை செய்பவரும், ஆதிமாயன் தன் (அன் - சாரியை) மருகோனே - (பரமனருளினால்) ஆதியில் தோன்றிய மாயையின் சொரூபருமான நாராயணனது சகோதரியின் புத்திரனே!, சாலி சேர் சங்கு இனம் - கவசத்தையுடைய சங்குக்கூட்டங்கள், சூழ் - சுற்றி வளைந்துவரப் பெற்றதும், பங்கயம் - தாமரைமலர்கள் மலரப்பெற்றதுமான, வாவி சாரல் ஆர் செந்தில் அம் பதி - தடாகங்கள் அருகே அமையப் பெற்றுள்ள அருமையான திருச்செந்தூர் என்னும் அழகிய தலத்தில், வாழ்வே எழுந்தருளியிருப்பவனே!, தாவு சூர் அஞ்சி முன் சாய - (போருக்குக் கிளம்பி ஆரவாரித்துத்) தாவிவந்த சூரன் பயந்து நின்னை எதிர்த்து நிற்கமாட்டாமல் பின் வாங்குமாறு, வேகம் பெறும் தாரை வேல் - வேகம் பொருந்தியதும் கூர்மை யானதுமான வேலாயுதத்தை, உந்திடும் பெருமாளே - பிரயோகித்த பெரியோனே!, காலனார் வெம் கொடும் தூதர் - கோபமும் கொடுமையும் பொருந்திய யமதூதர்கள், பாசம் கொடு - பாசக்கயிற்றினால், என் காலின் ஆர் தந்து-அடியேனது கால்களைக்கட்டி, உடன் கொடு போக - அப்போதே பிடித்துக்கொண்டு போக, காதல் ஆர் மைந்தரும் தாயாரும் - (அடியேனிடத்து) மிகுந்த அன்பு பூண்ட பிள்ளைகளும் தாயாரும், சுடும் கானம் (ஏ - அசை) பின் தொடர்ந்து அலறு முன் - சுடுகாட்டுக்கு அடியேனது ஜடத்தைப் பின்தொடர்ந்துவந்து கதறியழும் கதி வாய்க்குமுன், சூலம் வாள் தண்டு செம் சேவல் கோதண்டமும் - சூலாயுதம் கத்தி தண்டம் அழகிய சேவற்கொடி வில் இவைகளை, சூடு தோளும்- அணிந்துள்ள தோள்களையும், தடம் திரு மார்பும் - விசாலமான அழகிய மார்பையும், தூய தாள் தண்டையும் - பரிசுத்தமான நினது பாதங்களையும் (அவைகளில் அணிந்துள்ள) தண்டைகளையும், காண - அடியேன் தரிசிக்கும் வண்ணம், ஆர்வம் செயும் தோகை மேல்|கொண்டு - (நின்னைச் சுமக்க வேண்டுமென்ற) ஆசை பூண்டுள்ள மயிலின்மீது ஏறி, முன் வரவேணும் - அடியேன் முன்னே எழுந்தருள வேண்டும்.

(வி - ரை) "தருமராஜன் வினைக்குத் தக்க பலனை யளிக்க அதிகாரமுடையவனே யல்லாமல் மன்னித்து இரக்ஷிக்க அதிகார மில்லாதவனாதலின், பாவியேனை அவன் பிடித்துச் சென்றால் நான் பெருந் துன்பங்களை யனுபவிக்க வேண்டிவரும். ஆதலால் அவன் அடியேனைப் பிடித்துச் செல்லுமுன் நீ அடியேன்முன் தோன்றி அடியேனை இரக்ஷித்தருளவேண்டும்" என்று சுவாமிகள் இறைவனிடம் தெரிவித்துக்கொள்ளுகிறார். (௩)

தந்தன தந்தன தந்தன தந்தன
தந்தன—தந்ததான.

சங்கைதா னென்றுதா னின்றியே நெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்
சந்தொடே குங்குமா லங்க்ருதா டம்பரா
சம்ப்ரமா நந்தமாயன்
மங்கைமார் கொங்கைசே ரங்கமோ கங்களால்
வம்பிலே துன்புறுமே
வண்குகா நின்சொரூ பம்ப்ரகா சங்கொடே
வந்துநீ யன்பிலாள்வாய் !
கங்கைசூ டும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா !
கம்பியா திந்த்ரலோ கங்கள்கா வென்றவா
கண்டலே சன்சொல்வீரா !
செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர் பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா !
செங்கண்மால் பங்கஜா னன்தொழா னந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே !

(ப - ரை) கங்கை சூடும் பிரான் மைந்தனே - கங்காநதியைச் சடாமுடியில் அணிந்துள்ள நாயகராகிய சிவபெருமானுடைய புதல்வனே !, அந்தனே - அழகனே !, கந்தனே - (அன்பரது) பகைவர்களை அழிப்பவனே !, விஞ்சை ஊரா - கல்வியையே இருப்பிடமாகக் கொண்டவனே !, கம்பியாது இந்த்ர லோகங்கள் கா என்று அ ஆகண்டலேசன் சொல் வீரா - இந்திரலோகம் பயந்து நடுங்கா வண்ணம் அதைக் காப்பாற்ற வேண்டுமென்று சொல்லி (அந்த உலகத்துக்கு இறைவனான) இந்திரனால் பிரார்த்திக்கப்பெற்ற வீரனே !, செம் கை வேல் - நினது அழகிய கையில் பொருந்திய வேலாயுதத்தை, வென்றி வேல் - வெற்றியைத்தரும் வேலாயுதத்தை, கொண்டு சென்று - எடுத்துக்கொண்டு போய், சூர் பொன்ற (ஏ - அசை) - சூரன் அழியும் வண்ணம், மோதும் ப்ரதாபா - எதிர்த்துத் தாக்கிக் கீர்த்தி பெற்றவனே ! செம் கண் மால் - (தாமரை மலரை

யொத்த) சிவந்த கண்களையுடைய திருமாலும், பங்கஜா(ஸ)னன் - தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவரும், தொழு - வணங்கும், ஆனந்த வேள் - சச்சிதானந்த சொரூபியான முருகனே !, செந்தில் வாழ் தம்பிரானே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் நாயகனே !, சங்கை தான் ஒன்று தான் இன்றியே - அளவு என்பதேயில்லாமல், நெஞ்சிலே - மனத்திலே, சஞ்சல ஆரம்ப மாயன் - சஞ்சலத்தை யுண்டுபண்ணும் மாயை நிரம்பப் பெற்றவன், சந்தொடு (ஏ - அசை) குங்கும அலங்க்ருத - சந்தனத்துடன் குங்குமத்தைக் கலந்த கலவைச் சாந்தை அணிந்து அலங்கரித்துக்கொண்ட, ஆடம்பர சம்ப்ரம ஆநந்த மாயன் - அலங்காரத் தோற்றத்துடன் இடம்பமாக நடந்து கொள்வதிலேயே ஆநந்தமடையச் செய்யும் மாயை நிரம்பப்பெற்றவன், மங்கைமார் கொங்கை சேர - பெண்களுடைய தனபாரங்களின்மீது பொருந்த (வேண்டுமென்று), அங்க மோகங்களால் - (தேகத்திற் பொருந்தியுள்ள) இந்திரியங்கள் மயங்கி விரும்புவதனால், வம்பில் (ஏ - அசை) - நிலையில்லாத வாழ்க்கையில் உழன்று, துன்பு உறுமே - வருந்தாமல், வண் குகா - வள்ளலான குகனே ! நின் ப்ரகாசம் சொரூபம் கொடு (ஏ - அசை) - நீ நினது ஜோதிமயமான சொரூபத்துடன் (சுயஞ்ஜோதி உருவத்துடன்), உந்து - அடியேனிடம் வந்து, அன்பில் ஆள்வாய் - அன்பினால் அடியேனை அடிமையாக்கிக் கொள்ளவேண்டும் !

(வி - ரை) "விஞ்சை ஊரா" என்று முருகப்பெருமானை விளித்ததற்குக் காரணமென்னவெனில், கல்வியினால் புத்திதெளிவுற்றோர் மனத்தில்தான் முருகப்பெருமானது சொரூபமான ஞானம் தோன்றும். உலகவாழ்க்கையை நிலைமையானதெனக் கருதி நின்ற வள்ளிநாயகிக்கு முன்னே புத்திக்கிறைவரான விநாயகக் கடவுளை யானையின் உருவத்துடன் முதலில் தோன்றும்படி செய்து, அக்கடவுள் தோன்றியதனால் யாக்கையும் வாழ்க்கையும் நிலையாத பொருள்களென அத்தேவியார் அறிந்துகொண்ட பின்பே ஞானசொரூபியான முருகப்பெருமான் தோன்றி அத்தேவியாருக்குப் பேரின்பத்தை அளித்தது மேற்கூறிய கருத்தை நன்கு விளக்கும். ஆகண்டலன் - வெட்டியவன்; மலைகளின் சிறகுகளை முன்பு அரிந்தவன். பங்கஜாஸனன் என்னும் பதம் சீர்கருதி பங்கஜானன் என இடைகுறைந்து வந்தது. "அடியேனிடத்து நினது அடிமையாக இருப்பதற்குரிய குணங்களும் தூய்மையும் இல்லையேயெனினும், நீ யார் வேண்டினாலும் கேட்ட பொருள் ஈயும் தியாகமூர்த்தி யாதலின், நினது கருணையைக்காட்டி அடியேனை ஆட்கொள்ளவேண்டும். அவ்வாறு ஆட்கொள்ள வரும்போது, நீ அடியேனது அஞ்ஞான விருளை யகற்றுவதற்காக ஜோதி மயமான ஞானவுருவத்துடன் வரவேண்டும்" என்னுங் கருத்தைக்கொண்டே 'வண்குகா...... அன்பில் ஆள்வாய்' என்றார். (௬)

தத்தனன தானதன தத்தான
தத்தனன தானதன தத்தான
தத்தனன தானதன தத்தான—தனதான.

சத்தமிகு மேழுகட லைத்தேனை
யுற்றமது தோடுகணை யைப்போர்கொள்
சத்திதனை மாவின்வடு வைக்காவி தனைமீறு

தக்கமணம் வீசுகம லப்பூவை
மிக்கவிளை வானகடு வைச்சீறு
தத்துகளும் வாளையடு மைப்பாவு விழிமாதர்

மத்தகிரி போலுமொளிர் வித்தார
முத்துவட மேவுமெழில் மிக்கான
வச்சிரகி ரீடநிகர் செப்பான தனமீதே

வைத்தகொடி தானமயல் விட்டான
பத்திசெய ஏழையடி மைக்காக
வஜ்ரமயில் மீதிலினி யெப்போது வருவாயே?

சித்ரவடி வேல்பனிரு கைக்கார
பத்திபுரி வோர்கள்பனு வற்கார
திக்கினு நடாவுபுர விக்கார குறமாது

சித்தஅநு ராககல விக்கார
துட்டஅசு ரேசர்கல கக்கார
சிட்டர்பரி பாலலளி தக்கார அடியார்கள்

முத்திபெற வேசொல்வச னக்கார
தத்தைநிகர் தூயவனி தைக்கார
முச்சகர்ப ராவுசர ணக்கார இனிதான

முத்தமிழை யாயும்வரி சைக்கார
பச்சைமுகில் தாவுபுரி சைக்கார
முத்துலவு வேலைநகர் முத்தேவர் பெருமாளே.

(ப - ரை) சித்ர வடிவேல் ப(ன்)னிரு கைக்கார - பேரழகு பொருந்தியதும் வடித்துக் கூராக்கப் பட்டதுமான வேலாயுதத்தை ஏந்தியவனே! பன்னிரு கைகளை யுடையவனே!, பத்தி புரிவோர்கள் பனுவற்கார - நின்னிடத்து அன்பு

பாராட்டுவோர்களால் புகழ்ந்து பாடப்படுபவனே ! திக்கினும் நடாவு புரவிக்கார - எட்டுத் திக்குகளிலும் செலுத்தும் வேகம் பொருந்திய வாகனத்தை யுடையவனே ! குறமாது சித்த அநுராக கலவிக்கார - வேடர் மகளான வள்ளிநாயகியின் உள்ளக் கருத்துக்கிசைய மிகுந்த பிரியத்துடன் அத்தேவியாரைச் சேர்ந்தவனே ! துட்ட அசுரேசர் கலகக்கார - துஷ்ட குணமுள்ள அசுரராஜனாகிய சூரபதுமனது மனத்தினில் கலக்கத்தை விளைவித்தவனே !, சிட்டர் பரிபால லளிதக்கார - நன்னெறியில் நிற்போர்களைக் காக்கும் இனிய குணமுடையனே !, அடியார்கள் முத்திபெற (ஏ-அசை) சொல் வசனக்கார-நின்னை வழிபடும் அடியவர்கள் முத்தியடைவதற்குரிய உபதேச மொழியைச் சொல்பவனே !, தத்தை நிகர் தூய வனிதைக்கார - கிளியை யொத்தவரும் தூய்மை பொருந்தியவருமான தெய்வயானையம்மையாரைத் தேவியாக வுடையவனே !, மூ சகர் பராவு சரணக்கார - மூன்று உலகங்களிலுள்ளவர்களும் வணங்கும் பாதமலர்களை யுடையவனே !, இனிதான மூ தமிழை ஆயும் வரிசைக்கார - இனிமை பொருந்தியதும் இயல் இசை நாடகம் என்று மூவகைப்பட்டதுமான தமிழ்மொழியிலுள்ள நூல்களில் சிறந்தது இன்னதென்று தெரிந்தெடுத்துக் கூறிய மேலோனே!, பச்சை முகில் தாவு புரிசைக்கார- பசுமை நிறமுள்ள மேகங்களை அளாவியுள்ள மதில்களை (யுடைய திருக்கோயிலை) யுடையவனே !, முத்து உலவு வேலை நகர் முத்தேவர் பெருமாளே - முத்துக்கள் எங்கும் புரளப்பெற்றதும் சமுத்திரக் கரையிலுள்ளதுமான திருச்செந்திற் பதியில் பிரமன் விஷ்ணு உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளுக்கும் தலைவனாய் எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, சத்த (ம்) மிகும் ஏழு கடலை - பேரொலி செய்யும் ஏழு சமுத்திரங்களையும், தேன் (ஐ - சாரியை) உற்ற மது தோடு கணையை - தேன் பொருந்திய அசோகு மலராகிய (மன்மத) பாணத்தையும், போர் கொள் சத்திதனை - போருக்கு எழும்பும் வேலாயுதத்தையும், மாவின் வடுவை - மாமரத்தின் இளங்காயையும், காவிதனை மீறு தக்க மணம் வீசு கமல பூவை - காவிக்கல்லைக் காட்டிலும் அதிக சிவப்பானதும் (நிறத்துக்குத்) தக்க மணம் வீசுவதுமான தாமரை மலரையும், மிக்க விளைவான கடுவை - முதிர்ந்த விஷத்தையும், சீறு தத்து உகளும் வாளை - கோபத்துடன் பாயும் அவமிருத்துவைப் போலத் துள்ளிக் குதிக்கும் வாளையும், அடு - பொருது வெற்றி யடைபவைகளும், மை பாவு - மை தீட்டப்பெற்றவைகளுமான, விழி மாதர் - கண்களை யுடைய பெண்களது, மத்த கிரி போல் (உம் - அசை) ஒளிர் - முத்தாலாய மலையைப்போல பிரகாசிப்பவைகளும், வித்தார - பருத்தவைகளும், முத்து வடம் மேவும் - முத்து மாலைகள் பொருந்தப்பெற்றவைகளும், எழில் மிக்கான வச்சிர கிரீட நிகர் - மிகவும் அழகியதும் வைரங்க ளிழைக்கப்பெற்றதுமான மகுடத்தை யொத்தவைகளும், செப்பான - (கடைந்தெடுத்த மரச்) செப்பை யொத்தவைகளுமான, தனம் மீது (ஏ - அசை) - தனபாரங்களின்மீது, வைத்த கொடிதான மயல் விட்டு - பூண்டுள்ளதும் துன்பத்தை விளைவிப்பதுமான ஆசையாம் மயக்

கத்தை ஒழித்து, ஆன பத்தி செய - முத்திக்குக் காரணமான அன்புடன் கூடிய வழிபாட்டை அடியேன் செய்யுமாறு, ஏழை அடிமைக்காக - ஏழையும் நினது அடிமையுமான அடியேன் பொருட்டு, வஜ்ர மயில் மீதில் இனி எப்போது வருவாயே - வைரத்தைப்போல் ஒளிவீசும் மயிலின்மீது இனிமேல் எப்போது எழுந்தருள்வாய் ?

(வி - ரை) "அடியார்கள் முத்திபெறவே சொல் வசனக்கார என்று கூறிய விடத்துக் குறித்த வசனம், "மமதை விட்டு ஆவி உய அருள்பாராய்" என்று வரும் 79-ம் பக்கத்திலுள்ள "ஆறுத பிருதிவி" என்று தொடங்கும் பாடலின் கடைசி அடியினுலும் அதன் விருத்தியுரையினுலும் விளங்கும். "முத்த மிழை ஆயும் வரிசைக்கார" என்ற விடத்து முருகப் பெருமான் மதுரைப்பதியில் ஊமைப்பிள்ளையாகப் பிறந்து சங்கப்புலவர்க ளியற்றிய நூல்களில் முதன்மையானவை எவையெனத் தேர்ந்தெடுத்துக் கூறியதாகச் சொல்வதைக் குறிக்கப்பட்டிருக்கிறது. இவ்வரலாற்றை 342-ம் பக்கத்திற் காண்க. கடல், மன்மத பாணம், வேல், தாமரைமலர், மாவடு முதலியவைகளைப் பெண்களின் கண்களுக்கு உவமை கூறுதல் மரபு. "கலவியின் நலம் அற்ப சுகமாகிலும் மா அநுபவம் இது சற்றும் விடவோ இயலாது இயலாதே" என்று நமது சுவாமிகள் மற்றொரு பாடலில் தெரிவித்துள்ளபடி கலவியின்பத்தைத் தவிர்ப்பது அரிதாதலின், சுவாமிகள் அதைவிட்டுத் தாம் பத்தி நெறியில் நிற்கும் வண்ணம் தமக்குத் தரிசனம் தரும்படி வேண்டிக்கொள்ளுகிருர். மத்தம் - முத்து. கடு - விஷம். (௫)

தந்தனன தானதன தத்தான
தந்தனன தானதன தத்தான
தந்தனன தானதன தத்தான—தனதான.

சந்தனச வாதுநிறை கர்ப்பூர
குங்குமப மாவிரை கத்தூரி
தண்புழுக ளாவுகள பச்சீத வெகுவாச

சண்பகக லாரவகு ளத்தாம
வம்புதுகி லாரவயி ரக்கோவை
தங்கியக டோரதர வித்தார பரிதான

மந்தரம தானதன மிக்காசை
கொண்டுபொருள் தேடுமதி நிட்டூர
வஞ்சகவி சாரஇத யப்பூவை யனையார்கள்

வந்தியிடு மாயவிர கப்பார்வை
அம்பிலுளம் வாடுமறி வற்றேனை
வந்தடிமை யாளஇனி யெப்போது நினைவாயே ?

இந்த்ரபுரி காவல்முதன் மைக்கார
சம்ப்ரம மயூரதுர கக்கார
என்றுமக லாதஇளை மைக்கார குறமாதின்
இன்பஅநு போகசர சக்கார
வந்தஅசு ரேசர்கல கக்கார
எங்களுமை சேயெனரு மைக்கார மிகுபாவின்
செந்தமிழ்சொல் நாலுகவி தைக்கார
குன்றெறியும் வேலின்வலி மைக்கார
செஞ்சொலடி யார்களெளி மைக்கார எழில்மேவும்
திங்கள்முடி நாதர்சம யக்கார
மந்த்ரவுப தேசமகி மைக்கார
செந்திநகர் வாழுமரு மைத்தேவர் பெருமாளே !

(ப - ரை) இந்த்ர புரி காவல் முதன்மைக்கார - இந்திரனது அமராவதி நகரத்தைக் காப்பதில் முதன்மை பெற்ற நாயகனே !, சம்ப்ரம மயூர துரகக்கார - தீவிரமுள்ள குதிரையைப்போல் விரைந்து செல்லும் மயிலாகிய வாகனத்தை யுடையவனே !, என்றும் அகலாத இளமைக்கார - எந்நாளும் நீங்காத இளமை பொருந்திய குமரனே !, குற மாதின் இன்ப அநுபோக சரசக்கார - வேடர் மகளான வள்ளிநாயகியின் கலவியின்பத்தை யனுபவித்துச் சரசலீலைகளைச் செய் பவனே !, வந்த அசுரேசர் கலகக்கார - நின்னை எதிர்த்துப் போர்செய்ய வந்த அசுரராஜனாகிய சூரபதுமனது மனத்தில் கலக்கத்தை யுண்டுபண்ணியவனே !, எங்கள் உமை சேய் என் அருமைக்கார - எங்கள் உமாதேவியாரது செல்வப் புதல்வன் என்று (யாவராலும்) அருமை பாராட்டப்படுபவனே !, மிகு பாவின் செம் தமிழ் சொல் நாலு கவிதைக்கார - பலவகைப்பட்ட பாக்களுக்குள் திருத்த மான தமிழ்ச்சொற்களைக்கொண்டு இயற்றப்பட்ட ஆசுகவி மதுரகவி சித்திரகவி வித்தாரகவி என்னும் நான்கு விதமான கவிகளுக்கு நாயகனு யிருப்பவனே !, குன்று எறியும் வேலின் வலிமைக்கார - (மாயையின் சொரூபமான) கிரௌஞ்ச மலையைப் பிளந்த வேலாயுதத்தை ஏந்தும் வல்லமையுடையவனே !, செம் சொல் அடியார்கள் எளிமைக்கார - திருத்தமான சொற்களினல் நின்னைத் துதிக்கும் அடியவர்கள் எளிதில் அடையத்தக்கவனுய் நிற்பவனே !, எழில் மேவும் திங்கள் முடி நாதர் சமயக்கார - அழகிய திருமேனியை யுடையவரும் சந்திரனைச் சடாமுடியில் தரித்தவருமான சிவபெருமானது சமயமான சைவசம யத்தைச் சார்ந்த நாயகனே ! மந்த்ர உபதேச மகிமைக்கார - (ஒப்புயர்வற்ற மந்

திரமான) பிரணவமந்திரத்தை (பரமனுக்கு) உபதேசஞ்செய்து மாட்சிமை பெற்றவனே !, செந்தில் நகர் வாழும் - திருச்செந்தூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருப்பவனும், அருமை - அடியவர்கள் பேரன்புக்குப் பாத்திரமானவனுமான, தேவர் பெருமாளே - தேவர்கள் நாயகனே !, சந்தன சவாது நிறை கர்ப்பூர குங்கும - சந்தனம் சவ்வாது ஏராளமான பச்சைக்கர்ப்பூரம் குங்குமப்பூ, படீர விரை கத்தூரி - சிவந்ததும் வாசனை பொருந்தியதுமான கஸ்தூரி, தண் புழுகு - குளிர்ந்த புனுகு, அளாவு களப - இவைகளைச் சேர்த்துக்கலந்த கலவைச் சாந்தும், சீத வெகு வாச சண்பக கலார வகுள தாமம் - குளிர்ச்சியும் மிகுந்த வாசனையும் பொருந்திய சண்பகமலர் செங்கழுநீர்மலர் மகிழமலர் இவைகளால் தொடுத்த மலர்மாலைகளும், வம்பு துகில் - கச்சு ஆடை இவைகளும், ஆர வயிர கோவை - முத்துமாலைகளும் வயிரமாலைகளும், தங்கிய-பொருந்தப் பெற்றவைகளும், கடோர தர - கொடிய குணமுள்ளவைகளும், வித்தார - வித்தாரமானவைகளும், பரிதான- பருத்தவைகளும், மந்தாம் அது ஆன - மந்தரம் என்னும் மலையையொத்தவைகளுமான, தன - தனபாரங்களை யுடையவர்களும், மிக்க ஆசை கொண்டு - மிகுந்த ஆசைகொண்டு, பொருள் தேடும் - பொருள் சம்பாதிக்கவேண்டுமென்ற நோக்கமுடையவர்களும், அதி நிட்டூர - மிகவும் கொடுமை பாராட்டுபவர்களும், வஞ்சக விசார இதய - வஞ்சக ஆலோசனை செய்யும் மனத்தையுடையவர்களும், பூவை அனையார்கள் - கிளியைப்போல் அழகுவாய்ந்தவர்களுமான (விலை மாதர்களது), வந்தி இடும் (ஆடவர் மனத்தில்) வருத்தத்தை உண்டுபண்ணத்தக்கதும், மாய விரக பார்வை - மாயமாய்க் கலவியாசையை உண்டுபண்ணத்தக்கதுமான கண் பார்வையாகிய, அம்பில் உளம் வாடும் அறிவற்றேனை - அம்பினால் அடிபட்டு மனச்சோர்வடையும் மூடனாகிய அடியேனை, வந்து அடிமை ஆள - நீ வந்து அடிமையாக்கிக்கொள்ள, இனி - இனிமேல், எப்போது நினைவாயே - எப்போது மனத்தினில் நினைத்தருள்வாய் ?

(வி - ரை) முருகப்பெருமான் 'என்றும் இளையவன்' 'காளைக்குமரேசன்' ஆதலால், அப்பெருமானை 'என்று மகலாத இளமைக்கார' என்று சுவாமிகள் விளிக்கிறார். முருகப்பெருமான் சிவபெருமானுக்குப் பிரணவத்தின் பொருளை உபதேசித்த காரணத்தினால் 'தகப்பன் சாமி' என்னும் பெயரையும், 'சத்குரு சிகாமணி' யென்று மதிக்கப்படும் கீர்த்தியையும் பெற்றார். இப்பாடலில் "திங்கள்முடி நாதர்சம யக்கார !" என்றும், 342-ம் பக்கத்தில் "சுருதிமுடி" என்று தொடங்கும் பாடலின் முதல் அடியில் "சிவ சமயவடி வாய் வந்த அத்துவிதமானபர சுடரொளிய தாய்நின்ற நிட்களசொ ரூபமுத - லொரு வாழ்வே !" என்றும் கூறுவதால் முருகப்பெருமான் சைவசமயத்தோர் வழிபடவேண்டிய தெய்வமென்றும், அப்பெருமானை வழிபடுவோர் சைவ சமயத்தவரேயன்றி வேறு சமயத்தவரல்லரென்றும் தெளிவாய் விளங்குகிறது. (௯)

## 3. திருச்சீரலைவாய்—திருச்செந்தூர் 

*தந்ததன தான தானத் தான*
*தந்ததன தான தானத் தான*
*தந்ததன தான தானத் தான—தனதான.*

முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே
முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே
திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு நடமாடுஞ்
செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன்மயில் மீதி லேயெப் போது வருவாயே?
அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே
அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான
சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேளைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ்சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்திநகர் வாழு மாண்மைக் கார பெருமாளே!

(ப - ரை) அம் தண் மறை வேள்வி காவற்கார - அழகியதும் சாந்தத்தை யூட்டுவதுமான வேதங்களில் கூறியுள்ளபடி நடத்தும் யாகங்களுக்கு இடையூற

கள் நேராவண்ணம் காத்து இரக்ஷிக்கும் நாயகனே !, செம் தமிழ் சொல் பாவின் மாலைக்கார - திருத்தமான தமிழ்ச்சொற்களினால் அமைக்கப்பட்டு (நினது மகிமையை எடுத்துரைக்கும்) பாடல்களான மாலைகளை யுடையவனே !, அண்டர் உபகார - தேவர்களுக்கு (அவர்கள் பகைவனாகிய சூரபதுமனைத் தொலைத்து) உதவி புரிந்தவனே !, சேவற்கார - சேவலைக் கொடியாக வுடையவனே !, முடி மேலே அஞ்சலி செய்வோர்கள் நேயக்கார - சிரத்தின்மீது கைகளைக் குவித்து வைத்து நின்னை வணங்குபவர்களிடத்து அன்பு பாராட்டுபவனே !, குன்று உருவ ஏவும் வேலைக்கார - கிரௌஞ்சமலையை ஊடுருவிச்சென்று பிளக்கும்படி பிரயோகிக்கும் வேலாயுதத்தை யுடையவனே!, அந்தம் வெகுவான ரூபக்கார-அழகு மிகுந்த திருமேனியை யுடையவனே !, எழிலான சிந்துர(ம்) மின் மேவு போகக்கார - கட்டழகு வாய்ந்தவரும் (ஐராவதம் என்னும் இந்திரனது) யானையின் மகளாக வளர்ந்தவருமான தெய்வயானை யம்மையாரைச் சேரும் சுகத்தை அனுபவிப்பவனே!, விந்தை குற மாது வேளைக்கார - அற்புத அழகு வாய்ந்த வேடர் மகளான வள்ளிநாயகியாரைத் தக்க தருணத்தில் நினது தேவியாக்கிக் கொண்டவனே !, செம் சொல் அடியார்கள் வாரக்கார - இனிய மொழிகளினால் நின்னைத் துதிக்கும் அடியவர்களிடத்து அன்புடையவனே !, எதிரான செம் சமரை மாயும் மாயக்கார - நின்னை (அசுரர்கள்) எதிர்த்தபோது உண்டான கொடிய போரில் பகைவர்களை (நொடிப்பொழுதில்) அழித்த மாயவித்தைக்காரனே !, ரணதுங்க சூர சூறைக்கார - போரில் சிறந்த வீரர்களான சூரபதுமன் முதலாயினோர் உயிரைக் கொள்ளை கொண்டவனே !, செந்தில் நகர் வாழும் - திருச்செந்தூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும், ஆண்மைக்கார பெருமாளே-ஆளுந்தன்மை யுடைய பெரியோனே !, முந்து தமிழ் மாலை கோடி கோடி - முதன்மை பெற்றுள்ள தமிழ் மொழியில் கோடிக்கணக்கான மலர் மாலைகளையொத்த பாடல்களை, சந்தமொடு நீடு பாடி பாடி - சந்தம் பொருந்தியவைகளாகப் பலகாலம் ஓயாமல் இயற்றிப் பாடி, முஞ்சர் மனை வாசல் தேடி தேடி - அழியுந் தன்மையுடைய மனிதரது வீட்டு வாயிலை ஓயாமல் நாடி நாடி யடைந்து, உழலாது (ஏ - அசை) - (பொருள் பெற விரும்பி) அலைந்து திரியாமலிருக்கும் வண்ணமும், முந்தை வினை (ஏ - அசை) வராமல் போக - முற்பிறப்புக்களிற் செய்த வினைகளின் பயன் அடியேனைத் (தொந்த பாசமாகத்) தொடர்ந்து வராமல் விலகிப்போகும் வண்ணமும், மங்கையர்கள் காதல் தூரத்து ஏக - பெண்களின்மீது கொள்ளும் ஆசை அடியேனை விட்டு வெகுதூரம் அகன்று செல்லும் வண்ணமும், முந்து அடிமையேனை ஆள - (பொருளாசை, முந்தைவினைப் பயன், பெண்ணாசை இவைகளுக்கு) முதன்மை பெற்ற அடிமையாகவுள்ள அடியேனை நினது அடிமையாக்கிக் கொள்வதற்காக, தான்-(உம் - அசை)-நீ, முனை மீது (ஏ - அசை)-போர்க்களத்தில், திந்திதிமிதோதி * * * * செஞ்ணகு சேகு,—(என்னும்), தாளத்தோடு நடமாடும் - தாளத்துக்கிசைய நிர்த்தனஞ்செய்வதும், செம் சிறிய கால் விசால தோகை - அழகிய சிறு

கால்களையும் விசாலமான தோகையையும், துங்க அநுகூல பார்வை - சிறந்த கருணை பொருந்திய பார்வையையும் உடையதும், தீர - வெற்றி யடைவதும், செம் பொன் மயில் மீதில் (ஏ - அசை) எப்போது வருவாய் (ஏ - அசை) - சிவந்த பொன்னைப்போல் ஒளி வீசுவதுமான மயிலின்மீது ஏறி எப்போது வந் தருள்வாய் ?

(வி - ரை) பெண்ணாசையாம் சுழலில் அகப்பட்டு வருந்தும்படித் தலை யில் எழுதி, அயன் நம்மைத் தாயின் கர்ப்பத்தில் சேர்ப்பதனால், நாம் தாய் என்றும் பிள்ளை யென்றும் சுற்றத்தவரென்றும் பொருள் என்றும் மோகமுற்று உலக வாழ்க்கையில் உழன்று வருந்துகிறோம். அவ்வாறு நெடுநாளாகத் துன்புற்ற நாம் நமது துன்பத்தை யகற்றிக்கொள்ள வழியறியாது தியங்கிச் சோர்வுற்று இறுதி யில் இறைவனருளைப் பிரார்த்திக்கிறோம். துன்பங்களை யொழித்துச் சுகம்பெற இறைவனருளைத் தவிர வேறு உற்றதுணையில்லை யென்ற அறிவுடன் அவன் அருளை நாடுவோர்க்கு அவ்வருள் எளிதிற் கைகூடும். துன்புற்றுச் சோர்வடைந்த ஆன்மாவானது ஓலம் என்று கூறியதைக் கேட்டவுடன், அடியவர்களுக்கு உதவி புரிவதற்காகச் சதாகாலமும் மயிலின்மீது வீற்றிருக்கும் ஞான சொரூபியான முருகப்பெருமான் நொடிப்பொழுதில் அந்த ஆன்மாவிடம் வந்து சேர்கிறார். அந்த நொடிப்பொழுதில் அந்த ஆன்மா கொடுந்துன்பம் அடையக் கூடாதென்ற கருணை நோக்கத்துடன் எம்பெருமானது கொடியில் அமர்ந்துள்ள சேவலா னது "உனது துயரத்துக்கெல்லாம் காரணமான அஞ்ஞானத்தையும் மாயையை யும் அகற்றித் துன்பக்கலப்பில்லாத பேரின்பத்தைத் தரும் ஞானத்தை உனக்குப் புகட்டும் வண்ணம் ஞானசூரியன் வருகிறான்! இனி நீ வருந்த வேண்டாம் !" என்று கூவி, அந்த ஆன்மாவின் துயரத்தைத் தணிக்கிறது. ஆதலின் "சேவற் கார !" என்று முருகப்பெருமானை விளிக்கும்போது அவ்வளவு கருணையுள்ள சேவலைக் கொடியாகக்கொண்ட அப்பெருமானது கருணையை நினைத்து நாம் பேரானந்தமடைய வேண்டும். ஆண்மைக்காரன் - ஆளுந்தன்மையுடையவன். திருச்செந்தூரில் தேவர்கள் முருகப்பெருமானைத் தங்கள் சேனாதிபதியாக்கிக் கொண்டு அவருக்கு முடிசூட்டினார்கள். அன்றே அப்பெருமான் அவர்களை ஆண்டுகொண்டார். இக்கருத்தை மற்றொரு பாடலில் "பழநியில் அறுமுக செந்தில் காவல தணிகையி லிணையிலி" என்ற விடத்தும் காண்க. இனிமை யிற் சிறந்த தமிழ்மொழியை அதையளித்த முருகப்பெருமானைத் துதிக்க உப யோகியாமல் அழியும் நரர்களைத் துதிக்க உபயோகிப்பது பாவமென்பதும், இன்பமடைய விரும்புவோர் பேரின்பத்தைக் கருதி முருகப்பெருமானது அருளை நாடி முந்தை வினையை அகற்றிக்கொள்ளாமல் மாதர் சிற்றின்பத்தை நாடுவது மேன்மேலும் துயரத்துக்கே காரணமென்பதும் இப்பாடலில் குறிப்பாய்க் கூறப்பட்டிருக்கின்றன. (எ)

பதைப்பற்றிச்) சந்தேகமடைந்து அடியேன் படும் துயரத்தை, கண் பார்த்து - நோக்கி, அன்புற்று - (அடியேன் மீது) அன்பு பாராட்டி, அருளாயோ - அடியேனுக்கு அருள்புரிய மாட்டாயோ?

(வி - ரை இனிய தமிழ் மொழியின் இருப்பிடமான தென்னாட்டிலிருந்து வருவதனால் தென்றற் காற்று (தெற்குக் காற்று) தமிழின் இனிமையைப் பெற்றதென்றும், மேல்லவீசும் தென்றற் காற்றே விரகதாபத்தை யுண்டு பண்ணுவதனால் மன்மதன் தென்காற் கன்றில் ஏறிவருகிறானென்றும், மன்மதன் விஷ்ணு மைந்தனாதலின், அவனைக் கஞ்சா கன்று (கஞ்சகன் - கிருஷ்ணன்; கன்று - பிள்ளை) என்றும் கூறப்பட்டது. பிரணவத்தின் பொருளைச் சிவபெருமானுக்குப் போதித்த காலத்தில் முருகப்பெருமான் சிவபெருமானுக்குச் சிவ வடிவம் காட்டியதாக இப்பாடலில் கூறப்பட்டிருப்பதனால், சிவபெருமானது சொரூபம் இப்படிப்பட்டதென்றே பிரணவம் கூறுகிறது எனக் கொள்ளலாம் மற்றொரு பாடலில், "பதிபசு பாசத் தீர்வினை முதிய புராரிக் கோதிய குருவே" என்று கூறப்பட்டிருப்பதில், பாசத்தினால் கட்டுண்டுள்ள பசு (ஆன்மா) தனது நாயகனாகிய பதியை - பசுபதியை - அடைய, அந்நாயகனாகிய சிவபெருமான், எந்தச் சொரூபத்தைத் தாங்கியிருக்கிறாரென்பதையே பிரணவம் கூறுகிறதென்றும் கொள்ளலாம். இவ்விஷயத்தைக் குறித்துத் திருமூல நாயனார் அருளிச் செய்திருப்பதைக் கீழே காண்க:—

"உணர்வு மவனே யுயிரு மவனே
புணரு மவனே புலவி யவனே
இணரு மவன்றன்னை யெண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே."

"ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்று முற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே."

"அறிவறி வென்ற வறிவு மனாதி
அறிவுக் கறிவாம் பதியு மனாதி
அறிவினைக் கட்டிய பாச மனாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே." —திருமந்திரம்.

பிரணவத்தின் பொருள் யானே யென மயங்கிக்கூறிய பிரமதேவரை முருகப்பெருமான் குட்டிச் சிறையிலிட்டுத் தாமே சிருஷ்டி செய்துவந்து சிவபெருமானுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்த வரலாற்றை 72-ம் பக்கத்தில் காண்க.

## 3. திருச்சீரலைவாய்—திருச்செந்தூர்

தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன—தன தானு.

அனிச்சங் கார்முகம் வீசிட மாசறு
துவட்பஞ் சானத டாகம்வி டாமட
அனத்தின் தூவிகு லாவிய சீரடி மடமானார்

அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
அழுத்தும் பாவியை யாவி யிடேறிட நெறிபாரா

வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கண் டாணவ மானநிர் மூடனை
விடக்கன் பாய்நுகர் பாழனை யோர்மொழி பகராதே

விகற்பங் கூறிடு மோகவி காரனை
அறத்தின் பாலொழு காதமு தேவினை
விளித்துன் பாதுகை நீதர நானருள் பெறுவேனோ ?

முனைச்சங் கோலிட நீலம கோததி
அடைத்தஞ் சாதஇ ராவண னீள்பல
முடிக்கன் ரோர்கணை யேவுமி ராகவன் மருகோனே !

முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் காநதி தாதகி கூவிள
முடிக்குஞ் சேகரர் பேரரு ளால்வரு முருகோனே !

தினைச்செங் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வேகணி யாகிய
திறற்கந் தாவளி நாயகி காமுறும் எழில்வேலா !

சிறக்குந் தாமரை யோடையில் மேடையில்
நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
திருச்செந் தூர்வரு சேவக னேசுரர் பெருமாளே !

(ப - ரை) முனை சங்கு ஒலிடு - போருக்குரிய சங்கங்கள் முழங்கும், நீல மகா உததி அடைத்து - நீலநிறமுள்ள பெரிய சமுத்திரத்தை அடைத்து, அஞ்சாத இராவணன் நீள் பல முடிக்கு - (தனது சத்துரு கடலை யடைத்ததைக் கண்டும் சிறிதும்) பயமடையாத இராவணனது உயர்ந்த மகுடங்கள் தரித்த பல

தலைகளையும் அறுப்பதற்கு, அன்று ஓர் கணை ஏவும் இராகவன் மருகோனே - அந்நாளில் ஒரேவொரு அம்பைப் பிரயோகித்தவரும் இரகுவமிசத்தில் உதித்தவருமான ஸ்ரீராமரது மருகனே!, முளைக்கும் சீத நிலாவொடு - (அமாவாசைக்குப் பிறகு) புதிதாகத் தோன்றுவதும் குளிர்ந்த வெள்ளிய கிரணங்களை வீசுவதுமான பிறைச்சந்திரனையும், அரா - பாம்பையும், விரி திரை கங்காநதி-அகன்றதும் அலைகளை வீசுவதுமான கங்காநதியையும், தாதகி கூவிளம் - ஆத்தி மலரையும் வில்வத்தையும், முடிக்கும் சேகரர் - சூட்டிக்கொண்டுள்ள சடாமுடியையுடைய சிவபெருமானது, பேர் அருளால் - பெருங்கருணையினால், வரு முருகோனே - தோன்றிய ஞானசொரூபியே!, தினை செம் கானக வேடுவரானவர் - தினை விளையும் செழித்த காட்டில் திரியும் வேடர்களான நம்பிராஜனும் அவன் பரிவாரங்களும், திகைத்து அந்தோ என (எ - அசை) - பிரமித்துப் பயத்தினால் ஐயோ! (இதற்கென் செய்வோம்?) என்று சொல்லும் வண்ணம், கணி ஆகிய - வேங்கை மரமாக மாறி நின்ற, திறல் கந்தா - சாமர்த்தியம் வாய்ந்த கந்தனே!, வளிநாயகி காமுறும் எழில் வேலா - வள்ளிநாயகி கண்டு காதல் கொண்ட கட்டழகு பொருந்திய வேலனே!, சிறக்கும் தாமரை ஓடையில் மேடையில் - சிறந்த தாமரையானது மலரும் ஓடைகளிலும் உயர்ந்த உப்பரிகைகளிலும், நிறக்கும் சூல் வளை - நல்ல நிறம் வாய்ந்தவைகளும் சினைகொண்டவைகளுமான சங்கங்கள், பால் மணி வீசிய - சுத்த வெண்மை நிறம் பொருந்திய முத்துக்களை வீசப்பெறும், திருச் செந்தூர் வரு சேவகனே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் நாதனே!, சுரர் பெருமாளே- தேவர்களுக்கும் மேலோனாய் நிற்கும் பெரியோனே!, அனிச்சம் - அனிச்ச மலரும், கார்முகம் வீசிட மாசு அறு துவள் பஞ்சு - கொட்டும் வில்லினால் அடிக்கப்பட்டு வீசப்பெறுவதனால் குற்றம் பொருந்திய (கடினமான) வஸ்துக்கள் நீங்கப்பெற்ற மெல்லிய பஞ்சும், ஆன தடாகம் விடா மட அனத்தின் தூவி-தன் மனத்திக்கு உகந்த தடாகத்தை விட்டு நீங்காத அழகிய அன்னப்பறவையின் சிறகும், குலாவிய சீர் அடி மடமானார் - கண்டு மெச்சும் (வண்ணம் மிருதுவாயிருக்கும்) அழகிய பாதங்களை யுடையவர்களும் பேதைமை பொருந்திய மானைப் போன்றவர்களுமான பெண்களுடைய, அருக்கன் போல் ஒளி வீசிய-சூரியனைப்போலப் பிரகாசிக்கும், மா மரகத பைம் பூண் அணி - சிறந்த மரகதங்கள் இழைக்கப்பெற்ற பசுமையான ஆபரணத்தை அணிந்துள்ள, வார் முலை மேல் - நேரான தனபாரங்களின்மீது, முகம் அழுத்தும் பாவியை - முகத்தை வைத்து அழுத்திக் களிக்கும் பாவியாகிய அடியேனை, ஆவி இடேறிட நெறி பாரா - ஆன்மாவானது உய்வதற்குத் தக்க நெறி இன்னதென்று ஆராய்ந்தறியாத(வனும்), வினை சண்டாளனை - (மீண்டும் மீண்டும் பிறவியிற் சேர்க்கும்) இருவினைகளை இடைவிடாது புரிந்து வரு(பவனு)ம் (ஆன) துரோகியாம் அடியேனை, வீணனை-வீணாக நாளைக் கழிப்பவனை, நீள் நிதி தனை கண்டு ஆணவமான நிர் மூடனை - ஏராளமான தன

முடைமையை நினைத்து அகங்காரங் கொள்ளும் முழுமூடனாகிய அடியேனை, விடக்கு அன்பாய் நுகர் பாழனை-மாமிசத்தை விருப்பத்துடன் உண்ணும் (செயலினால்) ஜன்மத்தைப் பாழாக்கிக் கொள்பவனாகிய அடியேனை, ஓர் மொழி பகராதே-(ஆவி உய்வதற்கு அவசியமான) ஒப்பற்ற மொழியான நினது சடக்ஷரத்தை மொழியாமல், விகற்பம் கூறிடும் மோக விகாரனை - முத்தி நெறிக்கு மாறுபாடான நெறியை எடுத்துக்கூறுபவனும் மதிமயக்கத்தினால் காமக்கவலை கொண்டிருப்பவனுமாகிய அடியேனை, அறத்தின்பால் ஒழுகாத முதேவியை - தரும நெறியில் நின்று ஒழுகாத துர்க்குணனாகிய அடியேனை, விளித்து - கூவியழைத்து, உன் பாதுகை நீ தர - நினது பாதுகைகளை அடியேன் தலைமீது சூட்டும் வண்ணம், நான் அருள் பெறுவேனோ - அடியேன் நினது அருளைப் பெறுவேனோ?

(வி - ரை) சகடக்கால் போலவரும் செல்வத்தைக்கண்டு தன்னுடையதென்று அகங்காரமடைவது அறிவீனமாதலால் தம்மை நிர்மூடனென்றும், முத்தி நெறிக்கு மாறுபாடான நெறியான உலகாயத நெறியை எடுத்துக் கூறுவதற்குக் காரணம் மதிமயங்கிப் பெண்காதலுற்று உலக வாழ்க்கையில் ஆசை கொள்வதே யாதலால் தம்மை 'விகற்பங் கூறிடுமோக விகாரனை' என்றும் இழித்துக்கூறிக்கொண்டார். உலக வாழ்க்கையில் உழல்பவர், அவ்வாழ்க்கை 'விருமஞ் சித்திரமா மிது நொடி மறையும் பொய்ப்பவுஷோ டுழல்வது விட வும்பர்க் கரிது' ஆதலின், அவர்களை ஆட்கொள்ளத் தயாராகவிருக்கும் நாயகனை அணுக மாட்டார்; ஆகையினால் அந்த நாயகனே வா வென்றழைத்துத் தமது பாதங்களை அவர்கள் முடிகளின்மீது சூட்டினாலன்றி அவர்கள் உய்வதற்கு வழியில்லை. இவ்வுண்மை "விளித்துன் பாதுகை நீதர" என்ற விடத்துக் குறிப்பாகக் கூறப்பட்டிருக்கிறது. (க)

தந்தனா தந்தனத் தந்தனா தந்தனத்
தந்தனா தந்தனத்—தனதான.

பங்கமே வும்பறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் றடுமாறிப்

பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் பொதுமாதர்

தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கமால் கொண்டிளைத் தயராதே

தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ யன்புவைத் தருள்வாயே!

அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவே தான்

அஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே !

திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ்சடா பஞ்சரத் துறுதோகை

சிந்தையே தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே !

(ப - ரை) அம் கை வேல் கொண்டு - அழகிய கையிற் பொருந்திய வேலாயுதத்தினால், அரக்கன் ப்ரதாபம் கெடுத்து - அசுரனாகிய சூரபதுமனது கீர்த்தியை அழித்து, அண்ட வேதண்டம் உட்படவே தான் அஞ்ச (ஏ-அசை) - அண்டமும் (அதைத் தன்னகத்தே அடக்கிக்கொண்டுள்ள) பிரமாண்டமும் கூடப் பயப்படும்வண்ணம், திண் திறல் - மிகுந்த வலிமை காட்டி, கொண்டல் ஆகண்டலற்கு - மேகத்தை வாகனமாகவுடைய தேவேந்திரனுக்கு, அண்ட லோகம் - வானுலகத்தை (ஆளும் உரிமையை), கொடுத்து அருள்வோனே - மீட்டுக்கொடுத்து அருள் புரிந்தவனே !, திங்கள் ஆர் கொன்றை மத்தம் துழாய் - சந்திரன் அழகிய கொன்றைமலர் ஊமத்தைமலர் துளசி (இவைகள்), துன்று பொன் செம் சடா பஞ்சரத்து - பொருந்தப் பெற்ற அழகிய செந்நிறமுள்ள சடாமுடியாகிய கூட்டினுள், உறு தோகை சிந்தையே - அமர்ந்துள்ள பெண்ணான கங்கையைப்பற்றி நினைக்கச்செய்யும் காங்கேயனே !, தென் திசை தென்றல் வீசும் பொழில் செந்தில் வாழ் - தெற்குத் திசையில் தென்றற்காற்று வீசும் சோலைகள் பொருந்திய திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும், செந்தமிழ் பெருமாளே - திருத்தமான தமிழ் மொழியைத் தந்து அதன்மீது பிரியம் வைத்துள்ள பெரியோனே!, பங்கம் மேவும் பிறப்பு அந்தகாரம் தனில் - குற்றம் பொருந்திய பிறவியினால் ஏற்பட்ட அஞ்ஞானமாகிய காரிருளில், (அகப்பட்டு), பந்த பாசம் தனில் - (மனைவி மக்கள் மீதுள்ள) ஆசையாகிய கயிற்றினால் கட்டப்பெற்ற கட்டினால், தடுமாறி - கலக்கமுற்று, பஞ்ச பாணம் பட - மன்மதனது ஐந்து புஷ்ப பாணங்களும் வந்து உடலின்மீது தைக்கப்பெற்று, புண் படா - (மனம்) நொந்து, வஞ்சக பண்பு இல் ஆடம்பர பொது மாதர் தங்கள் - வஞ்சக சுபாவமுடையவர்களும் குணமில்லாதவர்களும் (பார்ப்பதற்கு மட்டும்) அலங்காரமான தோற்றமுடையவர்களுமான விலைமாதர்களுடைய, ஆலிங்கன கொங்கை ஆகம் பட - ஆலிங்கனத்தில் (அவர்களுடைய) தனபாரங்கள் அடியேனது தேகத்தில் பொருந்தவேண்டுமென்று, சங்க மால் கொண்டு - கலவியாசை கொண்டு, இளைத்து - மெலிந்து, அயராது (ஏ - அசை)-

சோர்வடையாமல், தண்டை சூழ் கிண் கிணி புண்டரீகம் தனை - தண்டைகள் சூழப்பெற்றுச் சதங்கைகளை அணிந்துள்ள (நினது பாதத்) தாமரைகளை, தந்து - அடியேனுக்குத் தந்து, நீ அன்பு வைத்து அருள்வாயே-(அடியேனது எண்ணிறந்த குற்றங்களைக் கவனியாமல்) நீ அடியேன்மீது அன்பு வைத்து அடியேனுக்கு அருள்புரிய வேண்டும்.

(வி - ரை) வடதிசையிலுள்ள கங்கையின் நினைப்பைத் தென்றிசையிலுள்ளோர்க்கு வருவிப்பதற்காக அக் கங்கா நதியினிடத்துத் தமது அவதார காலத்திலேயே பெருங்கருணை காட்டிய காங்கேயனாகிய முருகப்பெருமான் திருச்செந்தூரில் அமர்ந்திருக்கிறார். உலக வாழ்க்கையில் உழன்று பெண் காதல்கொண்டு கலங்குவதற்குக் காரணம் ஜடவுலகத்தில் பிறந்த மாத்திரத்தில் ஜீவனைச் சூழும் ஜகமாயையானது விளைவிக்கும் அஞ்ஞான விருளே யாதலால், சுவாமிகள் மாயையின் மகனாய்த் தோன்றிய அகங்கார சொரூபியான சூர பதுமனது பிரதாபத்தை யழித்து அவனது அந்தகார வுருவத்தைத் தொலைத்த வேலாயுதனை அந்த அஞ்ஞானவிருளை யகற்றுவதற்காக அழைக்கிறார். (௧0)

தனனதன தந்த தானதன
தனனதன தந்த தானதன
தனனதன தந்த தானதன—தந்ததான.

உததியறல் மொண்டு சூல்கொள்கரு
முகிலெனஇ ருண்ட நீலமிக
வொளிதிகழு மன்ற லோதிநரை பஞ்சுபோலாய்

உதிரமெழு துங்க வேலவிழி
மிடைகடையொ துங்கு பீளைகளு
முடைதயிர்பி திர்ந்த தோஇதென வெம்புலாலாய்

மதகரட தந்தி வாயினிடை
சொருகுபிறை தந்த சூதுகளின்
வடிவுதரு கும்ப மோதிவளர் கொங்கைதோலாய்

வனமழியு மங்கை மாதர்களி
னிலைதனையு ணர்ந்து தாளினுறு
வழியடிமை யன்பு கூருமது சிந்தியேனோ?

இதழ்பொதிய விழ்ந்த தாமரையின்
மணவறைபு குந்த நான்முகனு
மெறிதிரைய லம்பு பாலுததி நஞ்சராமேல்

இருவிழி துயின்ற நாரணனு
முமைமருவு சந்த்ர சேகரனு
மிமையவர்வ ணங்கு வாசவனும் நின்றுதாழும்

முதல்வசுக மைந்த பீடிகையி
லகிலசக அண்ட நாயகிதன்
முகிழ்முலைசு ரந்த பாலமுத முண்டவேளே !

முளைமுருகு சங்கு வீசியலை
முடுகிமைத வழ்ந்த வாய்பெருகி
முதலிவரு செந்தில் வாழ்வுதரு தம்பிரானே !

(ப - ரை) பொதி இதழ் அவிழ்ந்த தாமரையின் - அடர்ந்து பொருந்திய இதழ்கள் தோன்ற மலர்ந்த தாமரையின், மண அறை புகுந்த நான்முகனும் - வாசனை பொருந்திய அகத்தில் குடி புகுந்த பிரமதேவரும், திரை எறி அலம்பு பால் உததி - அலைகளை வீசி ஆரவாரிக்கும் திருப்பாற்கடலில், நஞ்சு அரா மேல் - விஷம் பொருந்திய பாம்பின் மேல், இரு விழி துயின்ற நாரணனும் - தமது அகன்ற கண்களை மூடி யோக நித்திரை செய்யும் நாராயண மூர்த்தியும், உமை மருவு சந்த்ர சேகரனும் - உமாதேவியார் பக்கத்தில் அமரப்பெற்றவரும் சந்திரனைச் சடாமுடியில் அணிந்துள்ளவருமான சிவபெருமானும், இமையவர் வணங்கு வாசவனும் - தேவர்கள் வணங்கும் இந்திரனும், நின்று தாழும் முதல்வ - திருமுன்னர் நின்று வணங்கும் முதன்மையான தலைவனே !, சுக மைந்த - சிவபெருமானுக்கும் உமாதேவியாருக்கும் இன்பத்தை யளிக்கும் புதல்வனே !, பீடிகையில் - பூந்தட்டில் (அமர்ந்து), அகில சக அண்ட நாயகி தன் முகிழ் முலை சுரந்த பால் அமுதம் - சகல வுலகங்களுக்கும் சகல அண்டங்களுக்கும் தலைவியான உமாதேவியாரது குவிந்த தனபாரங்களினின்றும் பெருகிய பாலமுதத்தை, உண்ட வேளே - குடித்த கட்டழகனே !, அலை - அலைகள், முளை முருகு சங்கு வீசி - இளமை பொருந்திய அழகிய சங்கங்களை வீசியெறிந்து, முடுகி - வேகமாய்ப் பாய்ந்து, மை தவழ்ந்த வாய் பெருகி - கரிய மேகங்கள் படர்ந்து செல்லுமிடத்துப் பரவி, முதல் இவரு(ம்) - ஆகாயத்துடன் கலக்கும், செந்தில் வாழ்வு தரு தம்பிரானே - திருச்செந்தூர் மேன்மையடையும் படி செய்யும் நாயகனே!, உததி அறல் மொண்டு - கடல் நீரை மொண்டு, சூல் கொள் கரு முகில் என - கருப்பமடைந்த கரிய மேகம் என்று சொல்லும் வண்ணம், இருண்ட நீல மிக ஒளி திகழும் - கறுத்து நீலநிறமும் பொருந்தி மிகுந்த ஒளி வீசிப் பிரகாசித்து, மன்றல் ஓதி - மிகுந்த வாசனைவீசும் கூந்தலானது, நரை பஞ்சு போல் ஆய் - வெண்மையான பஞ்சைப்போல் நரைக்கப்பெற்றும், உதிரம் எழு துங்க வேல் (அ - சாரியை) விழி யிடை கடை ஒதுங்கு பீளைகள்

(உம் - அசை) - செவ்வரி எழும்பித் தோன்றிய சிறந்த வேலையொத்த கண்களில் நெருக்கமாய் உண்டாகி கடைக்கண்களில் ஒதுங்கும் பீளைகள், உடைதயிர் பிதிர்ந்ததோ இது என - உடைபட்ட தயிர் சிதறியதோ இது எனும் வண்ணம் (வெளுத்து), வெம் புலால் ஆய் - கொடிய துர்நாற்றமுள்ள மாமிசத்தைப் போல் ஆகப்பெறும், மத கரட தந்தி - மதநீர் பாய்ந்த சுவடுடைய யானையின், வாயினிடை சொருகு பிறை தந்த சூதுகளின் வடிவு தரு - வாயில் சொருகப்பட்டாற்போல் தோன்றும் பிறைச்சந்திரனை யொத்த தந்தம் (கடைந்தெடுத்த) சூதாட்டக்கருவி இவைகளின் வடிவங்களை யுடையவைகளும், கும்ப-கும்பத்தை ஒத்தவைகளும், மோதி வளர் - பருத்து உயர்ந்தவைகளுமான, கொங்கை - தனபாரங்கள், தோல் ஆய் - வெறுந்தோல்களாக மாறப்பெறும், வனம் அழியும் மங்கை மாதர்களின் - (பிற்காலத்தில்) தங்கள் அழகு அழியப்பெறும் இயல்புள்ள மங்கைப் பருவத்திலுள்ள பெண்களின், நிலை தனை உணர்ந்து - நிலைமையை ஆராய்ந்தறிந்து, தாளில் உற(ம்) வழி அடிமை அன்பு கூரும் அது - நினது பாதமலர்களில் வந்து சேரும் வண்ணம் அடிமையாகிய அடியேன் நின்னிடத்து அன்பு மிகுதியாகப் பாராட்டுவதான நெறியைப்பற்றி, சிந்தியேனோ - நினைக்க(வும்) மாட்டேனோ?

(வி - ரை) சிவபெருமான் முருகப்பெருமானை வணங்குகிறார் என்பது சிவமும் சுப்ரமண்யமும் வேறு வேறன்று என்பதற்கு முரணாகாது. ஏனெனில், முருகப்பெருமான் உலகங்களுக்கெல்லாம் ஞானத்தைப் புகட்டவந்த ஞானதேசிகன் என்பதை விளக்கிக் காட்டுவதற்காகவும், குரு சிஷ்ய முறை இன்னதென்பதைப் போதிப்பதற்காகவுமே சிவபெருமான் முருகப்பெருமானை வணங்கி நின்று உபதேசம் பெற்றார். அன்றியும், சுத்த ஸத்வமூர்த்தியாக விருக்கும் சிவபெருமான் இரஜோகுணம் பொருந்திய உபதேசத் தொழிலை மேற்கொண்ட பொழுது தமது பழைய வடிவத்துக்குரிய ஆறு திருமுகங்களுடன் ஷண்முகப் பெருமானைத் தோன்றினார்.

மங்கைப்பருவம் - பன்னிரண்டு வயது முதல் பதின்மூன்று வயது வரையில். இளமையில் மனத்தைக்கவரும் அழகுடையவரும் வயது முதிர்ந்தபின் அழகை இழப்பது இயல்பு. அதை ஆராய்ந்தறிந்தவர் பெண்காதலினால் மதி மயங்கமாட்டார்கள். (௧௧)

தானன தானன தானன தானன
தானன தானன—தனதான.

ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணு
ஈனனை வீணனை யேடெழு தாமுழு
ஏழையை மோழையை அகலாநீள்

மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மையி லாதனை யிகழாதே

மாமணி நூபுர சீதள தாள்தனி
வாழ்வுற ஈவது மொருநாளே?

நாவலர் பாடிய நூலிசை யால்வரு
நாரத னார்புகல் குறமாதை

நாடியெ கானிடை கூடிய சேவக
நாயக மாமயி லுடையோனே!

தேவிம னோமணி ஆயிப ராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே!

சேணுயர் சோலையி னீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே!

(ப - ரை) நாவலர் பாடிய நூல் இசையால் வரு நாரதனார் - பாடுந்திறமை வாய்ந்த புலவர்கள் இயற்றிய நூல்களிலுள்ள பாடல்களை இன்னிசையுடன் பாடி வரும் நாரத மாமுனிவர், புகல் குறமாதை நாடி (எ - அசை) - சொன்ன வேடப் பெண்ணான வள்ளிநாயகியை அடைய விரும்பி, (சென்று), கானிடை கூடிய சேவக - காட்டில் அந்த நாயகியைக் கலந்த நாதனே!, நாயக - யாவர்க்கும் தலைவனே! மா மயில் உடையோனே - சிறந்த மயிலை வாகனமாக வுடையவனே!, தேவி மனோ மணி - சிவபெருமானது தேவியாரும் மனத்தில் இரத்தினவொளி வீசி அஞ்ஞான விருளை யகற்றுபவரும், ஆயி - உலகங்க ளெல்லாவற்றையும் ஈன்ற தாயும், பராபரை - பராபரையெனும் சிவசத்தியும், தேன் மொழியாள் - தேனைப்போல் மதுரமான மொழிகளை உரைப்பவருமான உமாதேவியார், தரு சிறியோனே - தந்தருளிய பாலகனே!, சேண் உயர் சோலையின் நீழலில் (ஏ - அசை) - ஆகாயத்தை யளாவுமாறு உயர்ந்த மரங்களையுடைய சோலைகளின் நிழலுடைமையினால், திகழ் - விளங்கும், சீரலைவாய் - அழகிய அலைவாய் என்னும் திருச்செந்தூரில், வரு பெருமாளே - எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, ஏவினை நேர் விழி மாதரை - பாணத்தை யொத்த கண்பார்வையை யுடைய பெண்களை, மேவிய ஏதனை - புகழும் குற்றம் பொருந்தியவனை, மூடனை - அறிவில்லாதவனை, நெறி பேணா ஈனனை - முத்தி நெறியை விரும்பிக் கடைப்பிடித்தொழுகாத இழிகுணமுடையவனை, வீணனை - வாணாளை வீணே கழிப்பவனை, ஏடு எழுதா முழு ஏழையை-ஏடு எடுத்து எழுதும் வல்லமையற்று முற்றிலும் எளியவனாயிருப்பவனை, மோழையை - மடையனை, அகலா நீள் மா வினை

மூடிய - அடியேனை விட்டு நீங்காததும் வெகுகாலமாகத் தொடர்ந்து வருவது மான அளவற்ற வினைப்பயனால் மூடப்பெற்று, நோய் பிணியாளனை - நோய் பிணி இவைகளால் பீடிக்கப்படுபவனை, வாய்மை இலாதனை - மெய்பேசும் இயல்பில்லாதவனை, (இப்படிப்பட்ட அடியேனை), இகழாது (ஏ - அசை) - நிந்தியாமல், மா மணி நூபுர சீதள தாள் - சிறந்த இரத்தினங்கள் இழைக்கப் பெற்ற சிலம்புகளை அணிந்தவைகளும் (ஜடவுலக வாழ்க்கைத் துயரத்தின் வெப் பத்தை யொழிக்கவல்ல) குளிர்ச்சி பொருந்தியவைகளுமான நினது பாதங்களை, தனி வாழ்வு உற - ஒப்புயர்வற்ற வாழ்வை அடியேன் அடையும் வண்ணம், ஈவது (உம் - அசை) ஒரு நாளே - அளிக்கும் நாளும் உண்டோ ? (கஉ)

தத்ததன தத்தத் தனந்தந் தனந்தனன
தத்ததன தத்தத் தனந்தந் தனந்தனன
தத்ததன தத்தத் தனந்தந் தனந்தனன—தனதான.

கட்டழகு விட்டுத் தளர்ந்தங் கிருந்துமுன
மிட்டபொறி தப்பிப் பிணங்கொண்ட தின்சிலர்கள்
கட்டணமெ டுத்துச் சுமந்தும் பெரும்பறைகள் முறையோடே

வெட்டவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சமென
மக்கள்ஒரு மிக்கத் தொடர்ந்தும் புரண்டும்வழி
விட்டுவரு மித்தைத் தவிர்ந்துன் பதங்களுற வுணர்வேனோ ?

பட்டுருவி நெட்டைக் கிரௌஞ்சம் பிளந்துகடல்
முற்றுமலை வற்றிக் குழம்புங் குழம்பமுனை
பட்டஅயில் தொட்டுத் திடங்கொண் டெதிர்ந்தவுணர் முடிசாயத்

தட்டழிய வெட்டிக் கவந்தம் பெருங்கழுகு
நிர்த்தமிட ரத்தக் குளங்கண் டுமிழ்ந்துமணி
சற்சமய வித்தைப் பலன்கண்டு செந்திலுறை பெருமாளே !

(ப - ரை) பட்டு உருவி நெட்டை கிரௌஞ்சம் பிளந்து - தாக்கி அத னூடே பாய்ந்து உயர்ந்த கிரௌஞ்ச மலையைப்பிளந்து, கடல் முற்றும் அலை வற்றி குழம்பும் குழம்ப - கடல் முழுவதும் அலைவீசும் நீர்வற்றிச் சேறும் உண்டாகும் வண்ணம், முனை பட்ட அயில் தொட்டு - கூர்மை பொருந்திய வேலாயுதத்தைப் பிரயோகித்து, திடம் கொண்டு எதிர்ந்த அவுணர் முடி சாய தட்டழிய - மனத் தைத் திடப்படுத்திக்கொண்டு நின்னை எதிர்த்த அசுரர்கள் தலைகளை யிழந்து (அசுர சேனை) நிலைகுலையுமாறு, வெட்டி - அவர்களை வெட்டி, கவந்தம் பெரும் கழுகு நிர்த்தம் இட - கவந்தங்களும் பெரிய கழுகுகளும் (களித்து) ஆடுமாறு, ரத்த குளம் கண்டு - இரத்தம் குளமாகத் தேங்கும்படி செய்து, மணி உமிழ்ந்து -

அழகிய (ஞான) ஒளி வீசி, சத் சமய வித்தை பலன் கண்டு - சத்து (உண்மை)ப் பொருளை யறிவதற்குரிய நெறியைக் கூறும் சமயத்தில் நிற்கக் கற்பதனாலுண் டாகும் பலன் இன்னதென வுணர்த்தி, செந்தில் உறை பெருமாளே - திருச் செந்தூரில் நிலைமையாக எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, கட்டழகு விட்டு- மிருந்த அழகானது நீங்கப்பெற்று, தளர்ந்து - தேகம் தளரப்பெற்று, அங்கு இருந்து - அந்நிலைமையில் சிலகாலம் இருந்து, முனம் இட்ட பொறி தப்பி - முன்பு விஷய சுகங்களில் புகுத்திவிட்ட புலன்கள் தங்கள் தொழில்களைச் செய் வதை ஒழித்துவிடப் பெற்று, பிணம் கொண்டதின் - (மரித்து) பிணமான பிறகு, சிலர்கள் கட்டணம் எடுத்து சுமந்து (உம் - அசை) - சிலர் கூலி வாங்கிக் கொண்டு (ஜீவனற்ற ஜடத்தை) தூக்கிக்கொண்டு செல்ல, பெரும் பறைகள் முறையோடு (எ - அசை) - பெரிய தம்பட்டங்கள் வழக்கப்படி, வெட்டவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சம்—, என - என்று முழங்க, மக்கள் ஒரு மிக்க தொடர்ந்தும் புரண்டும் வழிவிட்டு வரும் - பெண்களும் பிள்ளைகளும் ஒன்று கூடிச் சேர்ந்து பின்தொடர்ந்து வந்து கீழே புரண்டு (அழுது யமலோகத்துக்குச் செல்ல) வழிவிட்டு வருவதான, மித்தை தவிர்ந்து - பொய்யான உலக வாழ்க் கையை ஒறுத்துத்தள்ளி, உன் பதங்கள் உற உணர்வேனோ - நினது பாதமலர் களைப் பெறுவதற் கவசியமான மெய்யுணர்வைப் பெறுவேனோ?

(வி - ரை) முருகப்பெருமான் போர்க்களத்தில் காட்டிய திறமையைக் கண்டு அச்சமுற்ற சிங்கமுகன் முதலான அசுரர்கள் சூரபதுமனது நிந்தைமொழி களைக் கேட்டு மனம் பொறுததனால் தங்கள் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு சென்று அப்பெருமானை எதிர்த்து வெட்டுண்டு மாய்ந்தது இப்பாடலில் கூறப் பட்டிருக்கிறது. (௧௩)

தந்ததன தந்த தந்த தந்ததன தந்த தந்த
தந்ததன தந்த தந்த—தனதான.

கண்டுமொழி கொம்பு கொங்கை வஞ்சியிடை அம்பு நஞ்சு
கண்கள்குழல் கொண்ட லென்று பலகாலும்
கண்டுளம்வ ருந்தி நொந்து மங்கையர்வ சம்பு ரிந்து
கங்குல்பக லென்று நின்று விதியாலே
பண்டைவினை கொண்டு மூன்று வெந்துவிழு கின்றல் கண்டு
பங்கயப தங்கள் தந்து புகழ்ோதும்
பண்புடைய சிந்தை யன்பர் தங்களினு டன்க லந்து
பண்புபெற அஞ்ச லஞ்ச லெனவாராய்!
வண்டுபடு கின்ற தொங்கல் கொண்டுறநெ ருங்கி யிண்டு
வம்பினைய டைந்து சந்தின் மிகமூழ்கி

வஞ்சியைமு னிந்த கொங்கை மென்குறம டந்தை செங்கை
வந்தழகு டன்க லந்த மணிமார்பா !

திண்டிறல்பு னைந்த அண்டர் தங்களப யங்கள் கண்டு
செஞ்சமர்பு னைந்து துங்க மயில்மீதே

சென்றசுர ரஞ்ச வென்று குன்றிடைம ணம்பு ணர்ந்து
செந்தில்நகர் வந்த மர்ந்த பெருமாளே !

(ப - ரை) வண்டு படுகின்ற தொங்கல் கொண்டு - வண்டுகள் மொய்த்துப் பாடப்பெற்ற மலர்மாலையை அணிந்து கொண்டு, அற நெருங்கி இ (ச) ண்டு- (பருத்து) மிகவும் நெருங்கி உயர்ந்து வளர்ந்து, வம்பினை அடைந்து - (அப்படி வளர்ந்ததனால்) நிலைதளர்ந்து, சந்தின் மிக மூழ்கி - சந்தனத்தில் அதிகமாக மூழ்கி, வஞ்சியை முனிந்த கொங்கை - (தங்களைத் தாங்க மாட்டாமல் தத்தளிக்கும்) கொடியை யொத்த இடையின்மீது கோபமுறும் தனபாரங்களையுடைய, மென் குற மடந்தை செம் கை - மென்மை பொருந்திய குற மகளான வள்ளி நாயகியின் அழகிய கைகள், வந்து அழகுடன் கலந்த மணி மார்பா - (சந்தனம் பூசுவதற்காக) வந்து அழகாய்ப் பொருந்தும் அழகிய மார்பை யுடையவனே!, திண் திறல் புனைந்த அண்டர் தங்கள் அபயங்கள் கண்டு - மிகுந்த வலிமை பொருந்திய தேவர்கள் (நினது பாத மலர்களில்) அடைக்கலம் புகுந்ததைக் கண்டு, செம் சமர் புனைந்து - கொடிய போர்த் தொழிலை மேற்கொண்டு, துங்க மயில் மீது (ஏ - அசை) சென்று - சிறந்த மயிலின்மீது ஏறிச்சென்று, அசுரர் அஞ்ச வென்று - அசுரர்கள் (நின்னைக் கண்டு) அஞ்சும்படி (போர் புரிந்து, வெற்றி யடைந்து, குன்றிடை மணம் புணர்ந்து - (வள்ளி மலை என்னும்) மலையின்மீது (வள்ளிநாயகியைக்) கலந்து (காந்தருவ) விவாகஞ் செய்துகொண்டு, செந்தில் நகர் வந்து அமர்ந்த பெருமாளே - (பிறகு) திருச்செந்தூருக்கு வந்து எழுந்தருளிய பெரியோனே!, கண்டு மொழி - கற்கண்டைப்போல் மதுர மானவை (அப்பெண் பேசும்) வார்த்தைகள், கொம்பு கொங்கை - (யானையின்) தந் தங்களை ஒத்தவை (அவளுடைய) தனபாரங்கள், வஞ்சி இடை - கொடியை ஒத்தது (அவள்) இடை, அம்பு நஞ்சு கண்கள் - (கூர்மையில்) அம்பையும் (துன்பம் விளைவிப்பதில்) விஷத்தையும் ஒத்தவைகள் (அவள்) கண்கள், குழல் கொண்டல் - (அவள்) கூந்தல் (கருமையில்) மேகத்தை ஒத்தது, என்று பல காலும் கண்டு - என்று எண்ணி மயங்கிப் பலமுறை பெண்களைப் பார்த்துப் பார்த்து, உளம் வருந்தி நொந்து - பெரிதும் மனவருத்தமுற்று, (என் வச மழிந்து), மங்கையர் வசம் புரிந்து - பெண்களின் வசமாகி ஆசை கொண்டு, கங் குல் பகல் என்று(ம்) நின்று - இரவும் பகலும் தினந்தோறும் அந் நிலைமையி லேயே நின்று, விதியால் (ஏ - அசை) - விதிவசத்தினால், பண்டை வினை

கொண்டு - முற் பிறப்புக்களிற் செய்த வினைகளின் பயனை அனுபவிக்கத் தொடங்கி, உழன்று வெந்து விழுகின்றதல் கண்டு - (உலகவாழ்க்கையில்) சுழன்று திரிந்து கொடுந்துயரமுற்று (அடியேன்) அழிவதைக்கண்டு, (இரக்கமுற்று), பங்கய பதங்கள் தந்து - தாமரைகளை யொத்த பாதங்களை (அடியேனுக்குத்) தந் தருளி, புகழ் ஓதும் பண்பு உடைய சிந்தை அன்பர் தங்களினுடன் - நினது கருணையையும் பெருமையையும் புகழ்ந்து பாடும் நற்குணம் பொருந்திய மனத்தையுடைய (நினது) மெய்யன்பர்களுடன், கலந்து - (அடியேன்) சேர்ந்து பழகி, பண்பு பெற - நற்குணம் அடையும்(படி செய்யும்) வண்ணம், அஞ்சல் அஞ்சல் என வாராய் - அஞ்சாதே அஞ்சாதே என்று கூறி அபயமளித்து (அடியேன்முன்னே) வந்தருளவேண்டும். (கச)

தனந்த னந்த னந்த னந்த னந்த னந்த னந்த னந்த
னந்த னந்த னந்த னந்த—தனதான.

கனங்கள் கொண்ட குந்த ளங்க ளுங்கு லைந்து லைந்து விஞ்சு
கண்க ளுஞ்சி வந்த யர்ந்து களிகூரக்

கரங்க ளுங்கு விந்து நெஞ்ச கங்க ளுங்க சிந்தி டுங்க
றங்கு பெண்க ளும்பி றந்து விலைகூறிப்

பொனின்கு டங்க ளஞ்சு மென்த னங்க ளும்பு யங்க ளும்பொ
ருந்தி யன்பு நண்பு பண்பு முடனாகப்

புணர்ந்து டன்பு லர்ந்து பின்க லந்த கங்கு ழைந்த வம்பு
ரிந்து சந்த தந்தி ரிந்து படுவேனோ ?

அனங்க னொந்து நைந்து வெந்து குந்து சிந்த அன்று கண்தி
றந்தி ருண்ட கண்டர் தந்த அயில்வேலா !

அடர்ந்த டர்ந்தெ திர்ந்து வந்த வஞ்ச ரஞ்ச வெஞ்ச மம்பு
ரிந்த அன்ப ரின்ப நண்ப உரவோனே !

சினங்கள் கொண்டி லங்கை மன்சி ரங்கள் சிந்த வெஞ்ச ரந்தெ
ரிந்த வன்ப ரிந்த இன்ப மருகோனே !

சிவந்த செஞ்ச தங்கை யுஞ்சி லம்பு தண்டை யும்பு னைந்து
செந்தில் வந்த கந்த எங்கள் பெருமாளே !

(ப - ரை) அனங்கன் நொந்து நைந்து வெந்து உகுந்து சிந்த - மன்மதன் துன்பமுற்றுச் சோர்ந்து தீயினால் வெந்து அழிந்து சாம்பராகிச் சிதறுமாறு,

அன்று கண் திறந்து - ஒருகாலத்தில் தமது நெற்றிக்கண்ணைத் திறந்தவரும், இருண்ட கண்டர் - (உலகங்களெல்லாவற்றையும் அழிக்க வெழுந்த) ஆலகால விஷத்தையுட்கொண்டு (தமக்குள்ளே பொருந்தியுள்ள ஜீவராசிகள் அழியாவண்ணம் அவ்விஷத்தைத்) தமது கண்டத்திலேயே நிறுத்திக்கொண்ட நீலநிறமுள்ள கண்டத்தையுடைய சிவபெருமான், தந்த - தந்தருளிய, அயில் வேலா - கூர்மையான வேலாயுதத்தையுடைய மூர்த்தியே!, அடர்ந்து அடர்ந்து எதிர்ந்து வந்த - மீண்டும் மீண்டும் நெருங்கி எதிர்த்துப் போர்செய்ய வந்த, வஞ்சர் அஞ்ச - வஞ்சகர்களான அசுரர்கள் பயப்படும் வண்ணம், வெம் சமம் புரிந்த-கொடிய போர் புரிந்த(வனே!), அன்பர் இன்ப நண்ப - நினது மெய்யன்பர்களுக்குப் பேரின்பத்தை யளிக்கும் சிநேகிதனே! உரவோனே - ஞானசொரூபியே!, சினங்கள் கொண்டு-கோபங்கொண்டு, இலங்கை மன் சிரங்கள் சிந்த - இலங்கையின் அரசனை இராவணனது (பத்துத்) தலைகளும் அறுந்து விழுமாறு, வெம் சரம் தெரிந்தவன்-கொடிய அம்பு ஒன்றைப் பிரயோகிக்க வல்லவரான ஸ்ரீராமபிரான், பரிந்த இன்ப மருகோனே - அன்பு பாராட்டி இன்பமடையும்படி பெருமை வாய்ந்துள்ள மருகனே!, சிவந்த செம் சதங்கையும் சிலம்பு தண்டையும் புனைந்து - சிவந்த செம்பொன்னாற்செய்த சதங்கைகளையும் சிலம்புகளையும் தண்டைகளையும் அணிந்துகொண்டு, (பால குமாரசுவாமியாக), செந்தில் வந்த கந்த - திருச்செந்தூரில் வந்து அமர்ந்தருளிய சத்துரு சங்காரனே!, எங்கள் பெருமாளே- எங்கள் நாயகனே!, கனங்கள் கொண்ட குந்தளங்களும் - (அடர்ந்து வளர்ந்து பாரமாகவுள்ள கூந்தலும், குலைந்து உலைந்து - அவிழ்ந்து புரளவும், விஞ்சு கண்கள் (உம் - அசை) சிவந்து - மிகவும் அழகிய கண்கள் சிவக்கவும் (பெற்று), அயர்ந்து - சோர்வடைந்து, களிகூர - காண்போர் மிகுந்த சந்தோஷமடையுமாறு, கரங்கள் (உம்-அசை) குவிந்து - கைகளைத்தூக்கித் தலைமீது குவித்து வைத்துக்கொண்டு, நெஞ்சகங்கள் (உம்- அசை) கசிந்திடும்-(ஆடவர்கள்) மனமுருகும்படி செய்பவர்களான, கறங்கு பெண்கள் (உம் - அசை) - சுழன்று ஆடும் நாட்டியப் பெண்கள், பிறந்து விலை கூறி - உலகத்திற் பிறந்து தங்களை யனுபவிப்பதற்குரிய விலை இன்னதென்று சொல்லியபின், பொ(ன்)னின் குடங்கள் அஞ்சு மென் தனங்களும் - பொன்னாற்செய்த குடங்களும் கண்டு தங்களைவிட அழகிற் சிறந்தவையென்று எண்ணிப் பயப்படும் வண்ணம் பேரழகு வாய்ந்துள்ள மெல்லிய தனபாரங்களும், புயங்களும் - தோள்களும், பொருந்தி - மார்பில் பொருந்தும்படி (அவர்களை) அணைந்து, அன்பு நண்பு பண்புமுடனாக - அன்புடனும் நேசத்துடனும் குணத்துடனும், புணர்ந்து - அவர்களுடன் கலவிசெய்து, உடன் புலர்ந்து - உடனே சோர்வுற்று, பின் கலந்து - மீண்டும் கலவிசெய்து, அகம் குழைந்து - மனமுருகி, அவம் புரிந்து - கெட்ட காரியத்தையே செய்து, சந்ததம் திரிந்து-எப்போதும் இடைவிடாது அலைந்து திரிந்து, படுவேனோ-அழியலாமோ? அழியும்படி விட்டு இறைவன் வாளாவிருத்தல் நியாயமல்ல வென்றபடி.)

(வி - ரை) சிவபெருமான் ஆன்மாக்களைக் காமத்திலாழ்த்தித் துன்புறச் செய்த மன்மதன் உடலை அழித்ததும் ஆலாகலத்தை யுண்டதுபோலவே ஆன்மாக்களின் மீதுள்ள கருணையினாலேயே செய்த காரியமாகும். முருகப்பெருமான் மன்மதனது உடலை எரித்து உலகத்தை யழிக்கக்கிளம்பிய ஆலாகலத்தை யுண்ட சிவபெருமானது புதல்வராதலால், மன்மதனது செய்கையினால் உதித்த காமநோயானது ஆலாகலத்தைப்போலத் தம்மை அழித்துவிடா வண்ணம் காத்தருளும்படி அருணகிரிநாத சுவாமிகள் இப்பாடலில் வேண்டிக்கொள்கிறார்.(௧௫)

தனனாதன தனதந் தாத்த
தனனாதன தனதந் தாத்த
தனனாதன தனதந் தாத்த—தனதான.

முகிலா மெனு மளகங் காட்டி
மதிபோலுயர் நுதலுங் காட்டி
முகிழாகிய நகையுங் காட்டி — அமுதூறு
மொழியாகிய மதுரங் காட்டி
விழியாகிய கணையுங் காட்டி
முகமாகிய கமலங் காட்டி — மலைபோல
வகையாமிள முலையுங் காட்டி
யிடையாகிய கொடியுங் காட்டி
வளமானகை வளையுங் காட்டி — யிதமான
மணிசேர்கடி தடமுங் காட்டி
மிகவேதொழி லதிகங் காட்டு
மடமாதர்கள் மயலின் சேற்றி — லுழல்வேனோ ?
நகையால்மத னுருவந் தீத்த
சிவனாருள் சுதனென் றார்க்கு
நலனேயரு ளமர்செந் தூர்க்கு — ளுறைவோனே !
நவமாமணி வடமும் பூத்த
தனமாதெனு மிபமின் சேர்க்கை
நழுவாவகை பிரியங் காட்டு — முருகோனே !
அகமேவிய நிருதன் போர்க்கு
வரவேசமர் புரியுந் தோற்ற
மறியாமனு மபயங் காட்டி — முறைகூறி

அயிராவத முதுகின் தோற்றி
யடையா மெனவினிதன் பேத்து
மமரேசனை முழுதுங் காத்த பெருமாளே !

(ப - ரை) நகையால் மதன் உருவம் தீத்த சிவனார் - சிரித்து மன்மதனது தேகத்தை எரித்தருளிய சிவபெருமான், அருள் சுதன் என்றார்க்கு - அளித்தருளிய புதல்வன் என்று கூறி நின்னைத் துதிப்பவர்க்கு, நலனே அருள் - நன்மையையே புரிந்தருள்(பவனே !), அமர் செந்தூர்க்குள் உறைவோனே - போருக்குப் பாசறை யமைத்துக்கொண்ட திருச்செந்தூர்ப் பதியில் நிலைமையாக வசிப்பவனே !, மா நவ மணி வடம் (உம் - அசை) பூத்த - சிறந்த நவரத்தினங்களிழைத்த மாலையை அணிந்துள்ள, தன மாது எனும் - தனபாரங்களையுடைய பெண் என்று சொல்லப்படு(பவரு)ம், இப மின் - யானையின் மகளாக வளர்ந்த வரும் மின்னலையொத்த இடையை யுடையவருமான தெய்வயானை யம்மையாரது, சேர்க்கை நழுவா வகை - சேர்க்கையை விட்டுப் பிரியாமலிருக்குமளவு, பிரியம் காட்டும் முருகோனே - (அத்தேவியாரிடத்தில்) அன்பு பூண்டிருக்கும் ஞான சொரூபியே !, அகம் மேவிய நிருதன் போர்க்கு வரவே - அகங்காரம் பொருந்திய அசுரனை சூரபதுமன் நின்னுடன் போர் புரிய வந்தபொழுது, சமர் புரியும் தோற்றம் அறியாமல் (உம் - அசை) - போர் புரியும் காட்சியை அவன் காணா வண்ணம் மறைத்து, (விசுவரூப தரிசனம் கொடுத்து), அபயம் காட்டி - அவனை இரக்ஷிப்பதாகக் கூறி அபயமளித்து, முறை கூறி - தரும மார்க்கத்தை எடுத்துரைத்து, அயிராவத முதுகின் தோற்றி - ஐராவதம் என்னும் தனது வெள்ளை யானையின்மீது ஏறி வந்து, அடை ஆ(கு)ம் என - நினது பாதங்களே தனக்குப் புகலிடம் ஆகுமென்று கூறி, இனிது அன்பு ஏத்து - இனிமையாக அன்புடன் நின்னைத் துதித்த, அமரேசனை - தேவ ராஜனை இந்திரனை, முழுதும் காத்த - முற்றிலும் காத்தருளிய, பெருமாளே - பெரியோனே !, முகில் ஆ(கு)ம் எனும் அளகம் காட்டி - மேகந்தான் என்று கூறத்தக்க (கரிய) கூந்தலைக் காட்டி, மதி போல் உயர் நுதலும் காட்டி - (பிறைச்) சந்திரனைப்போல் உள்ள சிறந்த புருவங்களையும் காட்டி, முகிழ் ஆகிய நகையும் காட்டி - முல்லை மொட்டுகளை ஒத்தவைகளும் புன்னகையில் தோன்றுபவைகளுமான பற்களையும் காட்டி, அமுது ஊறு மொழி ஆகிய மதுரம் காட்டி - அமுதம் ஊறிப் பெருகும் மொழிகளாகிய இனிய பொருளையும் காட்டி, விழி ஆகிய கணையும் காட்டி - கண்களான அம்புகளையும் காட்டி, முகம் ஆகிய கமலம் காட்டி - முகமாகிய தாமரையையும் காட்டி, மலை போலே வகை ஆ(கு)ம் இள முலையும் காட்டி - மலையைப் போலப் பருத்து உயர்ந்து வளர்ந்து (ஆடவர் மனத்தைக் கவர்வதற்கு) ஏதுவாயிருப்பவைகளும் இளமை பொருந்தியவைகளுமான தனபாரங்களையும் காட்டி, இடை ஆகிய கொடியும் காட்டி - இடை யென்று சொல்லப்படும் கொடியையும் காட்டி, வளை

மான கை வளையும் காட்டி - அழகிய கைகளிலணிந்துள்ள வளைகளையும் காட்டி இதமான மணி சேர் கடி தடமும் காட்டி - இன்பத்தைத் தரும் விசாலமான அல்குலையும் காட்டி, தொழில் மிக (ஏ - அசை) அதிகம் காட்டும் - சாமர்த்தியத்தையும் மிகவும் அதிகமாகக் காட்டும், மட மாதர்கள் மயலின் சேற்றில் உழல்வேனோ - அழகிய பெண்களின்மீது கொள்ளும் ஆசையாகிய சேற்றில் அகப்பட்டுத் தடுமாறித் திரி(ய விட்டிருத்)தல் முறையோ ?

(வி - ரை) ஞானமூர்த்தியாகிய சிவபெருமான் பெண்காதலை ஆடவர் மனத்தில் உண்டுபண்ணும் மன்மதனது புன்மை பொருந்திய பாணங்கள் தம் மீது பட்டபோது, மாயையை அடியோடு அழிக்க வல்லதும் மும்மலங்களைத் தொலைக்க வல்லதுமான ஞானத்தைப் பெண் காதல் என்னும் ஒரு ஜக மாயை தாக்கி வெல்ல முடியுமென்று கருதி மன்மதனைத் தம் பால் அனுப்பிய தேவர்களது மன மயக்கத்தை எண்ணி நகைத்தார். முக்கணெந்தை அவ்வாறு நகைத்த மாத்திரத்தில், பெண் காதலுக்குக் காரணமான மயக்கத்தையுண்டுபண்ணும் மன்மதன் எரிந்து சாம்பராயினான். அப்படிப்பட்ட பெருமை பொருந்திய ஞானமூர்த்தியின் புதல்வராகத் தோன்றிய ஞான சொரூபியும் ஞான தேசிகருமான முருகப் பெருமான், இந்நிலவுலகத்தில் சகல மயக்கங்களுக்கும் ஆதி காரணமானது ஆணவ மலமே யாதலின், தாம் " **அகம் மேவிய** " அகங்கார சொரூபியான சூரபதுமனுடன் போர் செய்யப் பாசறை அமைத்துக்கொண்ட (" **அமர்** ") திருச்செந்தூர்ப் பதியில் உலகத்து ஆன்மாக்களின் மலங்களை அழிப்பதற்காக நிலைமையாகப் போர்க்கோலத்துடன் எழுந்தருளி யிருக்கிறார். அப்பெருமான் சூரபதுமனிடம் காட்டிய கருணையை அகங்காரம் பொருந்திய ஏனைய ஆன்மாக்களிடத்தும் காட்டி, அவர்களை இவ்வுலகத் துன்பங்களினின்றும் விடுவித்து முத்தி வீடு அளிப்பதாக அபயங்கூறி, அம் முத்தி வீட்டை அடைவதற்குரிய நெறியையும் போதித்தருளுவார். (௧௫)

தந்தந்தந் தந்தன தானன
தந்தந்தந் தந்தன தானன
தந்தந்தந் தந்தன தானன—தனதான.

வஞ்சங்கொண் டுந்திட ராவண
னும்பந்தென் திண்பரி தேர்கரி
மஞ்சின்பண் புஞ்சரி யாமென வெருசேனை

வந்தம்பும் பொங்கிய தாகவ
திர்ந்துந்தன் சம்பிர தாயமும்
வம்புந்தும் பும்பல பேசியும் மெதிரேகை

மிஞ்சென்றுஞ் சண்டைசெய் போதுகு
ரங்குந்துஞ் சுங்கனல் போலவெ
குண்டுங்குன் றுங்கர டார்மர மதும்வீசி

மிண்டுந்துங் கங்களி றுலெத
கர்ந்தங்கங் கங்கர மார்பொடு
மின்சந்துஞ் சிந்திநி சாசரர் வகைசேர

வுஞ்சண்டன் தென்றிசை நாடிவி
ழுந்தங்குஞ் சென்றெம தூதர்க
ளுந்துந்துந் தென்றிட வேதசை நிணமூளை

உண்டுங்கண் டுஞ்சில கூளிகள்
டிண்டிண்டென் றுங்குதி போடவு
யர்ந்தம்புங் கொண்டுவெல் மாதவன் மருகோனே !

தஞ்சந்தஞ் சஞ்சிறி யேன்மதி
கொஞ்சங்கொஞ் சந்துரை யேயருள்
தந்தென்றின் பந்தரு வீடது தருவாயே !

சங்கங்கஞ் சங்கயல் சூழ்தட
மெங்கெங்கும் பொங்கம காபுனி
தந்தங்குஞ் செந்திலில் வாழ்வுயர் பெருமாளே !

(ப - ரை) வஞ்சம் கொண்டு (உம் - அசை) - வஞ்சகம் பொருந்திய மனத்துடன், திட ராவணன் (உம் - அசை) - வலிமை பொருந்திய இராவணன், பந்து என் - திரளான, திண் பரி தேர் கரி - வலிமை பொருந்திய குதிரைப்படை தேர்ப் படை யானைப்படை (இவைகள் அடங்கியதும்), மஞ்சின் பண்பு (உம்-அசை) சரி ஆ(கு)ம் என - மேகத்தின் தன்மையே இதன் தன்மைக்குச் சமானமாகும் என்று சொல்லத்தக்கதா யுள்ளதுமான, வெகு சேனை வந்து - பெருத்த சேனையுடன் வந்து, அம்பு (உம் - அசை) பொங்கியதாக எதிர்ந்து (உம் - அசை) - கடல் பொங்கியதுபோல் ஆரவாரித்து எதிர்த்து நின்று, தன் சம்பிரதாயமும் வம்பும் தும்பும் பல பேசி (உம் - அசை) - தனது வழக்கத்தைக் கூறியும் மற்றும் நீதிக்கு மாறுபாடான பல மொழிகளைப் பேசியும், எதிரே கைமிஞ்சு என்று (உம் - அசை) சண்டை செய் போது-எதிர்த்துக் கைகலக்கும்படி (சேனைக்கு) உத்தரவளித்துச் சண்டை செய்தபோது, குரங்கு (உம் - அசை) துஞ்சும் கனல்போல வெகுண்டு - ஹநுமான் (உலகத்தை யெல்லாம்) அழிக்கக் கிளம்பும் காலாக்கினியைபோலக் கோபங்கொண்டு, குன்றும் கரடு ஆர் மரம் அதும் வீசி - குன்றுகளையும் கனுக்

கள் நிறைந்த மரங்களையும் வீசியெறிந்து, மிண்டு (உம் - அசை) துங்கங்களினுல் (ஏ - அசை) தகர்ந்து - நெருங்கிச்சென்று உயரமான மரங்களினுல் புடைத்து, அங்கு அங்கம் கரம் மார்பொடு மின் சந்தும் சிந்தி - அந்தப் போர்க்களத்தில் (இராக்ஷதசேனுவீரர்களுடைய) அங்கங்களும் கைகளும் மார்பும் இடையும் அற்றுக் கீழேவிழும்படி செய்ய, நிசாசரர் வகை சேரவும் - (மடிந்த) இராக்ஷதர்கள் கூட்டம் முழுவதும், சண்டன் தென்திசை நாடி விழுந்து - யமனது உலகமுள்ள தெற்குத் திசையை நோக்கிச் சென்று விழ, அங்கு (உம் - அசை) சென்று எம தூதர்கள் உந்து உந்து உந்து என்றிட - (அவர்களுயிரைக் கொண்டுபோக வந்து அவர்கள் உயிர்கள் முன்னமேயே தாமாகவே யமபுரத்துக்குச் சென்றதைக்கண்டு) அவ்விடத்துக்குச் சென்று யமதூதர்கள் அவ்வுயிர்களைப் பிடித்துத் தள்ளு தள்ளு என்று கூவுமாறும், தசை நிணம் மூளை உண்டும் கண்டும் சில கூளிகள் டிண் டிண்டு என்று (உம் - அசை) குதி போட - அவர்கள் தேகத்திலுள்ள தசை மாமிசம் மூளை இவைகளைத் தின்றும் (தங்களுக்குப் பலநாட்களுக்கு உணவாகுமாறு அவைகள் ஏராளமாகக் குவிந்து கிடப்பதைக்) கண்டும் சில பேய்கள் டிண் டிண்டு என்னும் தாளத்துக்கிசைய ஆடுமாறும், உயர்ந்த அம்பு (உம் - அசை) கொண்டு - சிறந்த பாணத்தைப் பிரயோகித்து, வெல் மாதவன் மருகோனே - வெற்றிபெற்ற மகாவிஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமரது மருகனே!, சங்கம் கஞ்சம் கயல் சூழ் தடம் எங்கெங்கும் பொங்க - சங்கங்களும் தாமரைமலர்களும் கயல் மீன்களும் சூழப்பெற்ற தடாகங்கள் எங்கும் அழகாய்த் தோன்றப்பெற்றுள்ளதும், மகா புனிதம் தங்கும் - மிகுந்த தூய்மை பொருந்தியதுமான, செந்திலில் - திருச்செந்தூரில், வாழ்வு உயர் பெருமாளே - எழுந்தருளியிருக்கும் யாவர்க்கும் மேலான நாயகனே!, தஞ்சம் தஞ்சம் - நினது பாதமலர்களில் அடைக்கலம் புகுந்துவிட்டேன்; சிறியேன் மதி கொஞ்சம் கொஞ்சம் - அற்பனுகிய அடியேனது அறிவு மிகவும் கொஞ்சமானது; (ஆயினும்); துரையே - மேலான நாதனே!, அருள் தந்து - அடியேன்மீது கருணைபுரிந்து, என்று(ம்) - எப்போதும், இன்பம் தரு வீடு அது தருவாயே - இன்பத்தையே யளிக்கும் முத்திவீட்டைத் தந்தருள வேண்டும்.

(வி - ரை) எதிர்க்கும் சத்துரு எவ்வளவு பராக்கிரம முடையவனுயிருந்த போதிலும் அவனை ஒரே பாணத்தினுல் சங்கரிக்கும் வல்லமை வாய்ந்த ஸ்ரீராமரது பாணங்களினுல் உயிரை யிழந்த இராக்ஷத சேனைகளின் உயிர்கள் அப்பாணங்களினுலேயே யமலோகத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டன. அவ்வுயிர்கள் அங்கு சென்ற பின்னர், அவைகளைக் கொண்டுபோவதற்காகப் போர்க்களத்துக்கு வந்த யமதூதர்கள் யமலோகத்துக்கு மீண்டு சென்று அவைகளைத் தள்ளித் தாமே அவைகளை அங்கு கொண்டு வந்தாற்போலப் பாசாங்கு செய்தார்கள். இவ்விஷயமே "நிசாசரர் வகைசேரவும் * * * * தூதர்களுந் துந்துந் தென்றிடவே" என்றவிடத்துக் கூறப்பட்டுள்ளது. (கஎ)



முருகன் திருவவதாரம்.

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன—தனதான.

அளக பாரம லைந்துகு லைந்திட
வதனம் வேர்வுது லங்கிந லங்கிட
அவச மோகம்வி ளைந்துத ளைந்திட அணைமீதே
அருண வாய்நகை சிந்திய சம்ப்ரம
அடர்ந காநுதி பங்கவி தஞ்செய்து
அதர பானம ருந்திம ருங்கிறு முலைமேல்வீழ்ந்
துளமும் வேறுப டும்படி யொன்றிடு
மகளிர் தோதக இன்பின்மு யங்குத
லொழியு மாறுதெ ளிந்துள மன்பொடு சிவயோகத்
துருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
உபய சீதள பங்கய மென்கழல் தருவாயே !
இளகி டாவளர் சந்தன குங்கும
களப பூரண கொங்கைந லம்புனை
யிரதி வேள்பணி தந்தையும் அந்தண மறையோனும்
இனிது றுதெதி ரிந்திர னண்டரும்
அரஹ ராசிவ சங்கர சங்கர
எனமி காவரு நஞ்சினை யுண்டவ ரருள்பாலா !
வளர்நி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவி ரோதமி டுங்குல சம்ப்ரமன்
மகர வாரிக டைந்தநெ டும்புயல் மருகோனே !
வளரும் வாழையு மஞ்சளு மிஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே !

(ப - ரை) இளகிடா வளர் - தளர்ச்சியுறாமல் வளர்ந்து, சந்தன குங்கும களப - சந்தனமும் குங்குமமும் கலந்த கலவைச் சாந்து பூசப்பெற்று, பூரண - வேட்கையினால் பூரித்துள்ள, கொங்கை நலம் புனை - தனபாரங்களினால் உண்

டாகும் அழகு வாய்ந்துள்ள, இரதி-இரதிதேவி(யின் நாயகனான), வேள்-மன்மதன், பணி தந்தையும் - வணங்கும் தந்தையான திருமாலும், அந்தண மறையோனும் - உயிர்கள்மீது செந்தண்மை பூண்டவரும் வேதங்களில் வல்லவருமான பிரம தேவரும், இனிது உறாது எதிர் - (ஆலாகலவிஷத்தின் வெப்பத்துக்குப் பயந்து எங்கு சென்றும்) சுகமடையாமல் (திருமால் பிரமதேவர் இவர்களுடைய) சந்நிதானத்தை யடைந்த, இந்திரன் அண்டரும் - தேவேந்திரனும் தேவர்களும், அரஹரா சிவ சங்கர சங்கர—, என - என்று கூவி ஓலமிட்ட காலத்தில், மிகா வரு நஞ்சினை - மிகுந்த சக்தியுடன் (அழிக்க) வந்த ஆலாகலம் என்னும் விஷத்தை, உண்டவர் அருள் பாலா - உண்டு உலகங்களைக் காத்தருளிய சிவபெருமான் தந்தருளிய பாலனே !, வளர் நிசாசரர் தங்கள் சிரம் பொடிபட - வல்லமை மிகுத்திருந்த இராக்ஷதர்களது தலைகள் பொடியாகும் வண்ணம், விரோதம் இடும் குல சம்ப்ரமன் - அவர்கள்மீது பகைமை பூண்டு போர்புரிந்தவரும் தமது குலத்துக்கு அலங்காரமாய் விளங்கிய மேலோனுமான ஸ்ரீ ராம(ராய் அவதரித்தவ)ரும், மகர வாரி கடைந்த நெடும்புயல் - மீன்கள் வசிக்கப்பெற்ற (திருப்பாற்) கடலை (அமுதத்துக்காக)க்கடைந்தவரும் மேகத்தின் நிறமுள்ள திருமேனியை யுடையவரும் ஆஜானுபாகுவாய் விளங்குபவருமான திருமாலின், மருகோனே - சகோதரியின் புத்திரனே !, வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும் இடைவிடாது நெருங்கிய- ஓங்கியுயர்ந்து வளர்ந்துள்ள வாழையும் மஞ்சளும் இஞ்சியும் இடைவெளி யிராமல் அடர்ந்து வளரப்பெற்றதும், மங்கல - சகல வளப்பங்களும் பொருந்தப்பெற்றதும், மகிமை - பெருமை வாய்ந்ததுமான, மா நகர் செந்திலில் - சிறந்த நகரமான திருச்செந்தூரில், வந்து உறை பெருமாளே - வந்து நிலைமையாக எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, அளக பாரம் அலைந்து குலைந்திட - பருத்த கொண்டையாகவுள்ள கூந்தலானது அசைந்து அவிழ்ந்து விழுமாறும், வதனம் வேர்வு துலங்கி நலங்கிட - முகமானது முத்துப்போல் வியர்வைத் துளிகள் தோன்றப்பெற்று வாடுமாறும், அவச மோகம் விளைந்து தளைந்திட - தன்வசம் அழியச் செய்யும் காமமயக்கம் உண்டாகி அதன் வசமாக்கிக்கொண்ட காரணத்தினால், அணைமீது (ஏ - அசை) - படுக்கையின்மீது, (அமர்ந்துள்ள பெண்ணின்), அருண வாய் நகை சிந்திய சம்ப்ரம - சிவந்த வாயிலுள்ள அழகிய பற்கள் (புன்சிரிப்பினால்) வெளியே தோன்றிய அலங்காரத்தை (கண்டு களித்து), அடர் நகா நுதி பங்க விதம் செய்து - (கலவியில் விளையாட்டாகப்) போர் செய்யும் நகங்களின் நுனியினால் (மாசற்ற மேனியில்) குற்றமுண்டாகும் வண்ணம் குறிகளுண்டாகச்செய்து, அதர பானம் அருந்தி - (அப்பெண்ணின்) உதடுகளினின்றும் பெருகும் (அமுதமாகத் தோன்றும்) எச்சிலையுண்டு, மருங்கு இற முலை மேல் வீழ்ந்து - (மெல்லிய) இடையை ஒடிக்கும்படி வளர்ந்துள்ள தனபாரங்களின் மேல் விழுந்து, உளமும் வேறுபடும்படி - (அறிவு பொருந்திய) மனமும் வேறுபடும்படி, (அறிவை யிழக்கும்படி), ஒன்றிடு மகளிர் தோதக இன்பின் -

அணைத்துக்கொள்ளும் பெண்கள் தருவதும் மனத்தை வஞ்சகமாகக் கவர்வது மான இன்பத்தில் (ஆசைகொண்டு), மயங்குதல் ஒழியுமாறு - அவர்களைச் சேர்வது ஒழியும் வண்ணம், உளம் தெளிந்து - மனம் மயக்கம் நீங்கப்பெற்றுத் தெளிவுற்று, அன்பொடு - மெய்யன்புடன், சிவயோகத்து உருகு ஞான - சிவயோகஞ் செய்து மனமுருகப்பெறும் ஞானத்தையூட்டும், பரம்பர தந்திர அறிவினோர் - சிவாகமநூல்களைக் கற்றறிந்தவர்கள், கருது - பெறத்தக்க பேருக மதிப்பவைகளும், அம் கொள் சிலம்பு அணி - அழகு பொருந்திய சிலம்புகளை யணிந்திருப்பவைகளுமான, சீதள பங்கய மென் உடய கழல்தருவாயே - குளிர்ச்சியைத் தருபவைகளும் தாமரையை யொத்தவைகளும் மென்மை பொருந்தியவைகளுமான நினது பாதங்களிரண்டையும் தந்தருளவேண்டும்.

(வி - ரை) தேவர்களும் அசுரர்களும் அமுதத்துக்காகத் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் முதலில் ஆலாகலம் என்னும் கொடிய விஷம் தோன்ற, சிவபெருமான் அவ்விஷத்தை உட்கொண்டு உலகங்களைக் காத்தருளிய வரலாற்றை 263-ம் பக்கத்தில் காண்க. "கலவியின் நலம் அற்பசுகமாகினும் மா அனுபவம்" என்று வேறோர் பாடலில் கூறியுள்ளபடி, மாதர் கலவியினால் பெறும் சிற்றின்பம் உலகசுகங்கள் எல்லாவற்றுள்ளும் மிகவும் சிறந்தது. ஞானசொரூபியான முருகப்பெருமானுடைய அருளைப் பெற்று ஞானமடைந்து மயக்கம் நீங்கப்பெற்றோர்க்கன்றி அதை விடுவது இயலாத காரியமாதலின், சுவாமிகள் அதிலுள்ள ஆசை நீங்கும் வண்ணம் முருகப்பெருமானை அவரது பாதமலர்களைத் தந்தருளும்படி பிரார்த்திக்கிறார். சிவயோகத்தில் அமர்ந்து மனமுருகும்படியான ஞானத்தைத் தருபவை சைவ ஆகம நூல்கள். "நீலச்சிகண்டியிலேறும் பிரான் * * * சொன்ன சீலத்தை மெல்லத் தெளிந்தறிவார் சிவயோகிகள்." முருகப்பெருமான் சொன்ன சீலமோவெனில், அவர் முதிய புராரிக்கு ஓதிய பதிபசுபாசத் தீர்வுதான். பதி, பசு (ஆன்மா) இவைகளின் தன்மைகளையும் இவைகளுக்குள்ள சம்பந்தத்தையும், பசுவுக்கும் பாசத்துக்கும் உள்ள சம்பந்தத்தையும், பசுவானது பாசத்தை யகற்றிக்கொள்ளும் மார்க்கத்தையும் தெளிவாக எடுத்துரைப்பவை பரம்பொருளான சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு எடுத்துரைத்த சிவாகமங்களேயாகும்.

உலகவாழ்க்கையில் உழன்று வெந்துயரில் அகப்பட்டு வருந்தும் ஆன்மாக்களுக்குச் சுகமான குளிர்ச்சியைத் தருவதனால் முருகப்பெருமானது பாதங்களுக்கு "சீதள" என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. (கஅ)

தனனதன தான தானன தனனதன தான தானன
தனனதன தான தானன
தந்தத் தந்தத்—தனதான.

அருணமணி மேவு பூஷித ம்ருகமதப டீர லேபன
அபிநவவி சால பூரண
அம்பொற் கும்பத் தனமோதி

அளிகுலவு மாதர் லீலையின் முழுகியபி ஷேக மீதென
அறவுமுற வாடி நீடிய
அங்கைக் கொங்கைக் கிதமாகி

இருணிறைய மோதி மாலிகை சருவியுற வான வேளையி
லிழைகலைய மாத ரார்வழி
யின்புற் றன்புற் றழியாநீள்

இரவுபகல் மோக னாகியெ படியில்மடி யாமல் யானுமுன்
இணையடிகள் பாடி வாழஎ
னெஞ்சிற் செஞ்சொற் றருவாயே!

தருணமணி யாட ராவணி குடிலசடி லாதி யோதிய
சதுர்மறையி னாதி யாகிய
சங்கத் துங்கக் குழையாளர்

தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரி யேயமு
துண்டிட் டண்டர்க் கருள்கூரும்

செருமுதலி மேவு மாவலி யதிமதக போல மாமலை
தெளிவினுடன் மூல மேயென
முந்தச் சிந்தித் தருள்மாயன்

திருமருக சூரன் மார்பொடு சிலையுருவ வேலை யேவிய
ஜெயசரவ ணாம னோகர
செந்திற் கந்தப் பெருமாளே!

(ப - ரை) தருண மணி ஆடு அரா அணி - புதுமையான (சிறந்த) இரத்தினம் (முடியில்) அழகாய்த் தோன்றப் பெற்றுள்ளதும் ஆடுகின்றதுமான பாம்பை அணிந்துகொண்டுள்ளவரும், குடில சடில - வட்டமான சடாமுடியை யுடையவரும், ஆதி ஓதிய சதுர் மறையின் ஆதி ஆகிய - உலகங்களுக்கெல்லாம் ஆதி இன்னதென்று எடுத்துரைக்கும் நான்கு வேதங்களுக்கும் ஆதி காரணராய் இருப்பவரும், சங்க துங்க குழையாளர் - சங்கினாற்செய்த சிறந்த குழையை அணிந்தவருமான சிவபெருமான், தரு - தந்தருளிய, முருக - ஞானசொரூபியே!, மேக சாயலர் - மேகத்தின் நிறமுள்ள திருமேனியை யுடையவரும், தமர மகர ஆழி சூழ் புவி தனை முழுதும் வாரி (ஏ-அசை) அமுது உண்டிட்டு - பேரொலியுடன் முழங்குவதும் மீன்களுக்கு உறைவிடமாயிருப்பதுமான சமுத்திரத்தினால் சூழப்பெற்ற பூவுலகமுழுவதையும் உணவாக உண்டவரும், அண்

டர்க்கு அருள் கூரும் செரு முதலி - தேவர்களுக்கு அருள்புரிந்தவரும் போரில் முதன்மையானவரும், மா வலி மேவு - மிகுந்த வலிமையுள்ளதும், அதி மத கபோல - மத நீர் மிகுதியாகச் சொரியும் கன்னங்களை யுடையதும், மா மலை - பெரிய மலையை யொத்ததுமான (கஜேந்திரன் என்னும்) யானையானது, தெளிவினுடன் மூலமே என - (தஞ்ச மென்றுரைத் தெய்வம் காக்கும் என்ற) மெய்யுணர்வு பெற்று ஆதி மூலமே என்று கூவி யழைத்த மாத்திரத்தில், முந்த சிந்தித்து அருள் - (முதலை அதைக் கொல்வதற்கு) முன்னதாகத் தாம் அங்கு செல்லவேண்டுமே யென்ற கவலையுடன் சென்று அருள்புரிந்த, மாயன் திரு மருக - திருமாலின் செல்வ மருகனே !, சூரன் மார்பொடு சிலை உருவ வேலை ஏவிய - சூரபதுமனது மார்பையும் கிரௌஞ்ச மலையையும் ஊடுருவிப் பிளக்குமாறு வேலாயுதத்தைப் பிரயோகித்த, ஜெய சரவண - வெற்றி பெறும் சரவணபவனே !, மனோகர - மனமகிழ்ச்சியைத் தருபவனே !, செந்தில் கந்த பெருமாளே - திருச்செந்தூரில் அடியவரது பகைவர்களை யழிப்பவனாய் அமர்ந்திருக்கும் பெரியோனே !, அருண மணி மேவு பூஷித - சிவந்த கிரணங்களைச் சொரியும் இரத்தினங்களிழைத்த ஆபரணங்கள் அணியப்பெற்றவைகளும், ம்ருகமத படீர லேபன - கஸ்தூரியையும் சந்தனத்தையும் கலந்த கலவைச் சாந்து பூசப்பெற்றவைகளும், அபிநவ - மிகுந்த இளமைபொருந்தியவைகளும், விசால - பருத்து விசாலமாயுள்ளவைகளும், பூரண - வேட்கையினால் பூரித்துள்ளவைகளும், அம் பொன் கும்ப - அழகிய பொற்கும்பத்தை யொத்தவைகளுமான, தனம் மோதி - தனபாரங்களை (ஆடவர்மீது) இடித்து, அளி குலவு மாதர் - அன்பு பாராட்டும் பெண்களின், லீலையின் முழுகி - கலவிலீலையில் முழுகிக் கிடந்து, அபிஷேகம் ஈது என - தூய்மையைத் தரும் திருமஞ்சனம் இதுவே என்று நினைத்து, அறவும் உறவாடி - அவர்களிடம் மிகுந்த நட்புப் பாராட்டி, நீடிய அம் கை கொங்கைக்கு இதமாகி - நீண்ட அழகிய கைகளினால் தன பாரங்களுக்குச் சுகத்தைக் கொடுத்து, இருள் நிறை அம் ஓதி மாலிகை சருவி - மிகவும் கறுத்ததாயும் அழகானதாயுமுள்ள கூந்தலில் சூட்டியுள்ள மலர் மாலையைத் தொட்டு, உறவான வேளையில் - குலவி அன்பு பாராட்டும் வேளையில், இழை கலைய - ஆடையானது கலைய, மாதரார் வழி இன்புற்று - பெண்களினால் அடையும் கலவியின்பத்தை யடைந்து, அன்புற்று - பெண்களின்மீது அன்பு பாராட்டி, அழியா - கலங்கி, நீள் இரவு பகல் - பலகாலம் இரவும் பகலும் (இடைவிடாமல்), மோகன் ஆகியெ - பெண்காதல்கொண்டு மயங்குபவனாகியே, படியில் மடியாமல் - பூமியில் இறந்து அழிந்து போகாமல், யானும் உன் இணை அடிகள் பாடி வாழ - அடியேனும் நினது இரண்டு பாதமலர்களையும் புகழ்ந்து பாடி மெய்வாழ்க்கை வாழுமாறு, என் நெஞ்சில் செம் சொல் தருவாயே - அடியேனுடைய மனத்தினில் நினது மெய்ஞ்ஞான உபதேசம் தோன்றும்படி செய்தருள வேண்டும்.

(வி - ரை) திருமால் புவியை யுண்ட வரலாற்றை 306-ம் பக்கத்திலும், கஜேந்திரனைக் காத்தருளிய வரலாற்றை 153-ம் பக்கத்திலும் காண்க. "நெஞ்சில் செஞ்சொல் தருவாயே" என்று கூறினபடியால், "செஞ்சொல்" என்பதற்கு "மெய்ஞ்ஞான உபதேசம்" என்று பொருள் கூறப்பட்டது. (௧௧)

தனதனன தனதனன தனதனன தனதனன
தனதனன தனதனன - தனதான.

அறிவழிய மயல்பெருக வுரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே
அனையுமனை யருகிலுற வெருவியழ வுறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே
செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
திருவடியி லணுகவர மருள்வாயே!
சிவனைநிகர் பொதியவரை முநிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே!
நெறிதவறி யலரிமதி நடுவன்மக பதிமுளரி
நிருதிநிதி பதிகரிய வனமாலி
நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி
நிருதனுர மறஅயிலை விடுவோனே!
மறிபரசு கரமிலகு பரமனுமை யிருவிழியு
மகிழுமடி மிசைவளரு மிளையோனே!
மதலைதவழுததியிடை வருதரள மணிபுளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே!

(ப - ரை) சிவனை நிகர் பொதிய வரை முநிவன் - சிவபெருமானுக்குச் சமானமானவரும் பொதிய மலையில் வசிப்பவருமான அகத்திய மாமுனிவர், அக மகிழ - மனமகிழ்ச்சியடையுமாறும், இரு செவி குளிர - அவரது இரண்டு காதுகளும் இதமான குளிர்ச்சியடையுமாறும், இனிய தமிழ் பகர்வோனே - இனிய தமிழ்மொழியை அவருக்குப் போதித்தருளியவனே !, நெறி தவறி - நன்னெறியினின்று தவறி நடந்த காரணத்தினால், அலரி - சூரியன், மதி - சந்திரன், நடுவன் - இயமன், மகபதி - இந்திரன், முளரி - அக்கினி, நிருதி - (தென்மேற்றிசைப் பாலனாகிய) நிருதி, நிதிபதி - நிதிகளுக்கு அதிபதியாகிய குபேரன், கரிய வனமாலி - கறுத்த திருமேனியையுடையவரும் வனமாலையை அணிந்

துள்ளவருமான திருமால், நிலவும் மறையவன் - (திருமாலின் திருநாபிக்கமலத்தில்) பொருந்தியுள்ள பிரமதேவர், இவர்கள் அலைய - இவர்கள் (ஏனைய தேவர்களுடன்) வருந்தித் திரியும் வண்ணம், அரசு உரிமை புரி - அரசனுக்குரிய அதிகாரத்தைச் செலுத்திவந்த, நிருதன் உரம் அற - அசுரனாகிய சூரபதுமனது தேகமானது அழியுமாறு, அயிலை விடுவோனே - வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே !, மறி பரசு கரம் இலகு - மான்குட்டியும் மழுவும் திருக்கைகளில் விளங்கப்பெற்ற, பரமன் உமை-பரம்பொருளான சிவபெருமானது தேவியாரான உமாதேவியாரின், இரு விழியும் மகிழ - இரண்டு கண்களும் கண்டு களிக்குமாறு, மடி மிசை - (அத்தேவியாரின்) மடியின்மீது, வளரும் இளையோனே - அமர்ந்து வளரும் பாலகனே !, மதலை தவழ் உததி இடை வரு - மரக்கலங்கள் செல்லும் சமுத்திரத்தின்கண் எழுந்து தோன்றும், தரள மணி-முத்துக்களும், பு(ள்)ளினம்-பறவைகளும், மறைய உயர் - காணப்படாமலிருக்கும் வண்ணம் உயர்ந்திருக்கும், கரையில் - அலைவாய்க்கரை என்று சொல்லப்படும் திருச்செந்தூரில், உறை பெருமாளே - எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, அறிவு அழிய - அடியேனது அறிவு நீங்கவும், மயல் பெருக - (சோர்வினால்) மயக்கம் வரவர அதிகரிக்கவும், உரையும் அற - பேசுவதும் ஒழியவும், விழி சுழல - விழிகள் சுழலவும், அனல் அவிய - தேகத்திலுள்ள உஷ்ணம் நீங்கவும், மலம் ஒழுக - (என் வசமழிந்து) மலம் தானாகக் கழிபவும், அகலாதே - (அருவருப்பைத் தரும் நிலைமையைக்கண்டும்) அடியேனை விட்டு நீங்காமல், அனையும் மனை - அடியேனுடைய தாயாரும் மனைவியும், அருகில் உற வெருவி அழ-அடியேன் சமீபத்தில் அமர்ந்து பயந்து அழவும், உறவும் அழ - சுற்றத்தாரும் அழவும், அழலின் நிகர் மறலி - அக்கினிக்குச் சமானமான இயமன், எனை அழையாதே - அடியேனைத் தன்னுடன் வரும்படி அழைக்காவண்ணம், செறியும் இரு வினை - அடியேனை நெருங்கிப்பற்றியுள்ள (வைகளும் முற்பிறப்புக்களில் செய்தவைகளுமான) நல்வினை தீவினைகளின் பயன், (ஒழியவும்), கரண மருவு புலன் ஒழிய - பொறிகளுடன் சம்பந்தப்பட்டுள்ள புலன்களின் வல்லமை யழியவும் (பெற்று), உயர் திரு அடியில் அணுக - சிறந்த நினது திருப்பாதங்களில் அடியேன் வந்து சேரும்படி, வரம் அருள்வாயே - வரம் தந்தருளவேண்டும்.

(வி - ரை) திருமால், பிரமன் முதலிய தேவர்கள் தக்ஷன் தங்களைத் தங்கள் பதவிகளினின்றும் தள்ளிவிடுவா னென்று பயந்து, இறைவனைத் தொழக்கூடா தென்று அவன் இட்ட கட்டளைக்கு அடங்கி இறைவனைத் தொழாமலும், இறைவனுக்கு அவிர்ப்பாகம் அளிக்காமல் அவன் செய்த யாகத்தில் அவன் தங்களுக்களித்த அவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொண்டும், நன்னெறி தவறிப் பாவிகளானார்கள். அது காரணத்தினால் அவர்கள் சூரபதுமனது கொடுங்கோன்மைக்கு உட்பட்டு வருந்தும்படி நேரிட்டது. அவர்கள் அவ்வாறு துன்பங்களை யனுபவித்து மெய்யுணர்வு பெற்ற பின்னர், இறைவனிட்ட கட்டளைப்படி முருகப்

பெருமான் அகங்காரசொரூபியான சூரபதுமனது தேகத்தை ஞானசக்தியாம் வேலினால் பிளந்து அவனை ஆட்கொண்டு தேவர்களுடைய துன்பங்களையும் தொலைத்தருளினார். (௨0)

தனதனன தந்த தந்த தனதனன தந்த தந்த
தனதனன தந்த தந்த — தனதான.

அனைவருமருண்டருண்டு கடிதெனவெகுண்டி யம்ப
அமரஅடி பின்தொடர்ந்து பிணநாறு
மழுகுபிணி கொண்டு விண்டு புழுவுடனெனும்ப லம்பு
மலவுடலஞ்சு மந்து தடுமாறி
மனைதொறுமிதம்ப கர்ந்து வரவரவிருந்த ருந்தி
மனவழிதிரிந்து மங்கும் வசைதீர
மறைசதுர்வி தந்தெ ரிந்து வகைசிறுச தங்கை கொஞ்சு
மலரடிவணங்க என்று பெறுவேனோ?
தினைமிசைசு கங்க டிந்த புனமயிலி ளங்கு ரும்பை
திகழிருத னம்பு ணர்ந்த திருமார்பா!
ஜெகமுழுது முன்பு தும்பி முகவனொடு தந்தை முன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா!
இனியகனி மந்தி சிந்து மலைகிழவ செந்தில் வந்த
இறைவகுக கந்த என்று மிளையோனே!
எழுகடலு மெண்சி லம்பும் நிசிசரரும் அஞ்ச அஞ்ச
இமையவரை யஞ்ச லென்ற பெருமாளே!

(ப - ரை) தினை மிசை சுகம் கடிந்த — தினைப்பயிரின்மீது பறந்து வந்த கிளிகளை ஓட்டிய (வரும்), புன மயில் — தினைப்புனத்தில் மயிலின் சாயலுடன் அழகாய்த் தோன்றிய (வருமான) வள்ளிநாயகியின், இளம் குரும்பை திகழ் இரு தனம் — இளமை பொருந்தியவைகளாய்த் தென்னையின் இளங்காயின் வடிவத்துடன் விளங்கிய இரண்டு தனபாரங்களையும், புணர்ந்த திருமார்பா — சேர்த்து அணைத்துக்கொண்ட அழகிய மார்பையுடையவனே!, முன்பு — முன்னொரு காலத்தில், தும்பிமுகவனொடு — யானையின் முகத்தையுடைய விநாயகக்கடவுளோடு (பந்தயம்போட்டு), தந்தை முன்பு — நினது தந்தையான சிவபெருமானது சந்நிதானத்தில், ஜெகமுழுதும் திகிரி வலம் வந்த — உலகமுழுவதையும் சுற்றி வலமாக வந்த(வனும்), செம் பொன் மயில் வீரா — சிவந்த பொன்னைப்போல் பிர

காசிக்கும் மயிலை வாகனமாக வுடைய(வனுமான) வீரனே !, இனிய கனி மந்தி சிந்து - இனிமையான பழங்களைக் குரங்குகள் இறைக்கும், மலை கிழவ - மலைக ளுக்குரிய நாயகனே !, செந்தில் வந்த இறைவ - (அகங்காரம் முதலிய குணங் களின் வசத்திலிருந்த ஆன்மாக்களைக் காத்தருளுவதற்காக) திருச்செந்தூருக்கு(ப் போர்க்கோலத்துடன்) வந்தருளிய காவலனே !, குக - மெய்யன்பர் இதயமான குகையில் வசிப்பவனே !, கந்த - (அன்பர்களது) பகைவர்களை அழிப்பவனே !, என்றும் இளையோனே - எப்போதும் இளமை மாறாமலிருப்பவனே !, எழு கட லும் - எழு சமுத்திரங்களும், எண் சிலம்பும் - எட்டுக் குலபர்வதங்களும், நிசிச ரும் - அசுரர்களும், அஞ்ச - அஞ்சும்படி, அஞ்சும் இமையவரை அஞ்சல் என்ற- (அவ்வசுரர்களுக்குப்) பயந்து நின்ற தேவர்களை அஞ்சவேண்டாமென்று கூறி அவர்களுக்கு அபயமளித்த, பெருமாளே - பெரியோனே !, அனைவரும் - (அடி யேனைக் கண்டவர்கள்) எல்லோரும், அருண்டு அருண்டு-(அடியேனுக்குச் சமீபத் தில் வர) பயந்து பயந்து, கடிது என வெருண்டு இயம்ப-சீக்கிரம்(அகன்று செல்) என்று கோபத்துடன் கூற, அமர அடி பின் தொடர்ந்து - (நோயினால் மெலிந் துள்ள அடியேன்) மெல்ல அடிமேல் அடி எடுத்துவைத்து நடந்து, பிண நாறும் அழுகு பிணி கொண்டு - பிணநாற்றம் வீசும்படி செய்வதும் தேகம் அழுகும்படி செய்வதுமான நோயுற்று, விண்டு - உருவம் மாறப்பெற்று, புழுவுடன் எலும்பு அலம்பும் - புழுக்களும் எலும்புகளும் நிறைந்து ததும்பப்பெற்ற, அவல உடலம் சுமந்து - பிரயோசனமற்ற தேகத்தைச்சுமந்து, தடுமாறி - மனங்கலங்கி, மனை தொறும் இதம் பகர்ந்து - வீடுகள் தோறும் சென்று அங்குள்ளோர் மனத்துக்கு இனிமை தரத்தக்க வார்த்தைகளைக்கூறி, வரவர இருந்து அருந்தி - (அவர்கள் தரும் உண்டிகள்) கிடைக்கக் கிடைக்க ஆங்காங்கே உட்கார்ந்து அவைகளை யுண்டு, மன வழி திரிந்து - மனம்போகும் வழியே அலைந்து திரிந்து, மங்கும் வசை தீர - சீர்கெடுவதான குற்றம் நீங்குமாறு, மறை சதுர் விதம் தெரிந்து - வேதங்கள் நான்கையும் கற்றுணர்ந்து, வகை சிறு சதங்கை கொஞ்சு - பலவகைப் பட்ட சிறு சதங்கைகள் இனிமையாக ஒலித்துப் பொருந்தப்பெற்ற, மலர் அடி - மலர்களையொத்த நினது பாதங்களை, வணங்க என்று பெறுவேனோ - வணங்குவ தான பாக்கியத்தை என்றைக்கு அடைவேனோ?

(வி - ரை) உலகத்தைக் காப்பதற்காகத் திருச்செந்தூரில் நிலைமையாகப் போர்க்கோலத்துடன் அமர்ந்திருக்கும் இறைவனாகிய முருகப்பெருமான் ஆன் மாக்களிடத்தில் தமக்குள்ள காதல் சற்றுங் குறையாவண்ணம் **என்றும் இளமை மாறாத காளைக்குமரனாகவும்**, தம்மைச் சரண்புகுந்தவர் இதயத்தில் அமரும் **குக னாகவும்**, தாம் அவ்வாறு அமரும் இதயத்தில் பொருந்தியுள்ளவைகளும் அடி யவர்களுக்குப் பகையுள்ளவைகளுமான அகங்காரம் முதலிய துர்க்குணங்களையும் அவைகளுக்கெல்லாம் மூலகாரணமான அஞ்ஞானத்தையும் ஞானசக்தியாம் வேலினால் அழித்தருளும் **கந்தனாகவும்** விளங்குகிறார். (உக)

தனதனன தனன தந்தத்—தனதான.

இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே
உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி
உனையெனது ளறியு மன்பைத் தருவாயே!
மயில்தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்
வனசகுற மகளை வந்தித் தணைவோனே!
கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே!
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே!

(ப - ரை) மயில் தகர் கல் இடையர் - மயிலும் ஆடும் நிறைந்த குன்றினிடத்தே வசிக்கும் வேடுவர்களது, அந்த தினை காவல் - அழகிய தினைப்பயிரைக் காத்துவந்த, வனச குற மகளை - தாமரையில் வசிக்கும் இலக்குமியின் புதல்வியாக அவதரித்தவரும் வேடுவர் மகளாக வளர்ந்தவருமான வள்ளிநாயகியை, வந்தித்து - வணங்கி, அணைவோனே - (பிறகு) அணைத்துக் கொண்டவனே!, கயிலை மலை அனைய செந்தில் பதி வாழ்வே - திருக்கைலாயத்தையொத்த (மகிமை பொருந்திய) திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில் அமர்ந்திருப்பவனே!, கரி முகவன் இளைய கந்த பெருமாளே - யானை முகத்தையுடைய விநாயகக் கடவுளுக்குத் தம்பியாக அவதரித்து அடியவர் பகைவர்களையழிக்கும் பெரியோனே!, இயல் இசையில் உசித வஞ்சிக்கு அயர்வாகி - குணத்தினும் உருவத்தினும் தக்கவளாயிருக்கும் பெண்ணின் மீது விருப்பங்கொண்டு, இரவு பகல் மனது சிந்தித்து உழலாது (ஏ - அசை) - இரவும் பகலும் மனத்திற் கவலை கொண்டு அலைந்து திரியாமல், உயர் கருணை புரியும் இன்ப கடல் மூழ்கி - சிறந்த நினது கருணையானது உதிக்கச் செய்யும் பேரின்பக் கடலில் மூழ்கி, உனை எனதுள் அறியும் அன்பை தருவாயே - நின்னை நீ என் அறிவுக்குள் அறிவின் உருவமாய்ப் பொருந்தியுள்ள நிலைமையில் அறிவதற்கு அவசியமான மெய்யன்பு என் மனத்தில் உதிக்கும்படிச் செய்தருளவேண்டும்.

(வி - ரை) முருகப்பெருமானது கருணையைப் பெற்றவர்களே அதையனுபவிப்பதனாலுண்டாகும் பேரின்பக்கடலில் ஆழ்ந்து தமது அறிவுக்குள்ளே அறிவின் உருவமாய் - அஞ்ஞான அந்தகாரத்தை யகற்றும் ஜோதியுருவமாய் - அப்பெருமான் அமர்ந்திருப்பதைக் காணமுடியும். அப்படிப்பட்ட சிறந்த பலனைத் தரவல்லது அப்பெருமானிடத்துப் பாராட்டும் மெய்யன்பேயாகும். ஆனால், அவரிடத்து மெய்யன்பு பாராட்டுவதும் அவரது அருளைப் பெற்றாருக்கே சாத்தியமாகும். இவ்விஷயம் இதற்கு முன்னமேயே பலவிடங்

களில் விளக்கப்பட் டிருப்பதைக் காண்க. 'மகா புனிதம் தங்கும்' செந்திற்பதி திருக்கைலாயத்துக்குச் சமானமானது; எனெனில், ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு மும்மலங்களின் உருவங்களான திரிபுரங்களையும் மீண்டும் மீண்டும் பிறவிக் கடலில் ஆழ்த்தும் மன்மதனைச் சங்கரித்து, தவநிலையி லமர்ந்து, சனகாதியருக்கு மெய்ஞ்ஞானம் இன்னதெனச் சொல்லாமற் சொல்லியருளிய **சிவபெருமானே** ஆன்மாக்கள் தம்மை யடைய வொட்டாமல் தடுத்து வருந்தச் செய்யும் அகங்காரம் முதலியவைகளை யழிக்கும்பொருட்டு **முருகப்பெருமானகத்** தோன்றிச் சதாகாலமும் போர்க்கோலங்கொண்டு **திருச்செந்தூரில்** அமர்ந்திருக்கிருர். கல் இடை - குன்றின் இடம். கல் இடையர் - குன்றினிடத்தே வசிப்பவர் - வேடுவர். வனச குறமகள் - வனச மகள், குறமகள். அயர்தல்-விரும்புதல்.()

தந்ததனன தனனு தனனதன
தந்ததனன தனனு தனனதன
தந்ததனன தனனு தனனதன—தனதான.

தொந்திசரிய மயிரே வெளிறநிரை
தந்தமசைய முதுகே வளையஇதழ்
தொங்கவொருகை தடிமேல் வரமகளிர் நகையாடி

தொண்டுகிழவ னிவனு ரெனஇருமல்
கிண்கிணெனமு னுரையே குழறவிழி
துஞ்சுகுருடு படவே செவிடுபடு செவியாகி

வந்தபிணியு மதிலே மிடையுமொரு
பண்டிதனுமெ யுறுவே தனையுமிள
மைந்தருடைமை கடனே தெனமுடுகு துயர்மேவி

மங்கையழுது விழவே யமபடர்கள்
நின்றுசருவ மலமே யொழுகவுயிர்
மங்குபொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்!

எந்தைவருக ரகுநா யகவருக
மைந்தவருக மகனே யினிவருக
என்கண்வருக எனதா ருயிர்வருக அபிராம

இங்குவருக அரசே வருகமுலை
யுண்கவருக மலர்சூ டிடவருக
என்றுபரிவி னொடுகோ சலைபுகல வருமாயன்

சிந்தைமகிழு மருகா குறவரிள
வஞ்சிமருவு மழகா அமரர்சிறை
சிந்தஅசுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா !

திங்களரவு நதிசூ டியபரமர்
தந்தகுமர அலையே கரைபொருத
செந்திநகரி லினிதே மருவிவளர் பெருமாளே !

(ப - ரை) எந்தை வருக - என் அப்பா வா !, ரகு நாயக வருக - இரகுவம்சத்தில் உத்தமனாய் உதித்தவனே வா !, மைந்த வருக - என் குழந்தாய் வா ! மகனே இனி வருக - என் புதல்வனே இனி வந்துவிடு !, என் கண் வருக - என் கண்ணே வா !, எனது ஆர் உயிர் வருக - எனது அருமையான உயிரைப் போன்றவனே வா !, அபிராம இங்கு வருக - அழகனே இங்கே வா !, அரசே வருக - ராஜாவே வா ! முலை உண்க வருக - பால் உண்ண வா !, மலர் சூடிட வருக - புஷ்பம் சூட்டிக்கொள்ள வா!, என்று பரிவினொடு கோசலை புகல - என்று அன்புடன் கௌசலா தேவி சொல்லி அழைக்கும்படி, வரு மாயன் - ஸ்ரீ ராமராய் அவதரித்தவரும் பரம மாயையின் சொரூபியுமான திருமால், சிந்தை மகிழும் மருகா - கண்டு மனமகிழ்ச்சி யடையும் (படியான தகைமை வாய்ந்துள்ள அவரது) மருகனே !, குறவர் இள வஞ்சி மருவும் அழகா - வேடுவர் குலத்தில் வளர்ந்தவரும் இளமை பொருந்தியவரும் கொடியையொத்த இடையையுடையவருமான வள்ளி நாயகி (மகிழ்ச்சியுடன்) சேரும் அழகு வாய்ந்தவனே!, அமரர் சிறை சிந்த - தேவர்களின் சிறைச்சாலை வாசம் நீங்குமாறு, அசுரர் கிளை வேரொடு மடிய - அசுரர்களின் குலம் முற்றிலும் வேரோடு அழியும் வண்ணம், அடு தீரா - (அவ்வசுரர்களுடன்) போர் புரிந்த தீரனே !, திங்கள் அரவு நதி சூடிய பரமர் தந்த குமர - சந்திரனையும் பாம்பையும் கங்கா நதியையும் (சடாமுடியில்) சூட்டிக் கொண்டுள்ள பரம்பொருளான சிவபெருமான் தந்தருளிய குமார சுவாமியே !, அலை (ஏ - அசை) கரை பொருத செந்தில் நகரில் - அலை (ஓயாமல்) கரையில் மோதப்பெறும் (அலைவாய்க்கரை என்ற) திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில், இனிது (ஏ - அசை) மருவி வளர் பெருமாளே - மகிழ்ச்சியுடன் அமர்ந்துள்ள பெரியோனே !, தொந்தி சரிய - தொந்தி தள்ளவும், மயிரே வெளிற - தலை மயிர் நரைக்கவும், நிரை தந்தம் அசைய - வரிசையாகவுள்ள பற்கள் (எல்லாம்) அசையவும், முதுகு (ஏ - அசை) வளைய - முதுகு வளையவும், இதழ் தொங்க - உதடுகள் தொங்கவும் (பெற்றும்), ஒரு கை தடி மேல் வர - ஒரு கை யானது தடியின் மேல் பொருந்தியிருக்கும் வண்ணம் (தடியைப் பிடித்துக் கொண்டு) நடந்தும், மகளிர் நகையாடி தொண்டு கிழவன் இவன் ஆர் என - (அடியேன் மனத்தில் ஆசையாகிய மயக்கத்தைத் தரும்) பெண்கள் அடியேனைக் கண்டு பரிகாசமாகச் சிரித்துத் ‘ தொண்டு கிழவனாயிருக்கும் இவன் யார் ?’ என்று

சொல்லப்பெற்றும், இருமல் கிண் கிண் என - கிண் கிண் என்ற ஒலியுண்டாகும்படி இருமல் வரவும், முன் உரை (ஏ - அசை) குழற - நினைத்ததைச் சொல்லத் தொடங்குகையில் வாய் குழறவும், விழி துஞ்சு குருடு பட (ஏ-அசை)- கண்கள் தூக்கநிலைமையி லிருப்பது போல் (எப்போதும்) மூடிக்கொண்டேயிருந்து குருடாகவும், செவிடு படு செவியாகி - செவிட்டுத் தன்மையடைந்த செவிகள் கிடைக்கவும் (பெற்று), வந்த பிணி (உம் - அசை) அதிலே மிடையும் ஒரு பண்டிதன் (உம் - அசை) - அடியேனை வந்தடைந்த நோயை அகற்ற ஊடாடித் துன்புறும் வைத்தியன், மெய் உறு வேதனை (உம்-அசை) (ஏது என)- தேகத்தில் உண்டாயிருக்கும் துன்பம் யாதென்றும், இள மைந்தர் உடைமை கடன் ஏது என-இளம் பருவத்திலுள்ள பிள்ளைகள் ஆஸ்தி என்ன கடன்என்ன என்றும், முடுக - அவசரமாய்க் கேட்கவும், மங்கை துயர் மேவி அழுது விழ (ஏ - அசை)- மனைவி பெருந்துன்ப முற்று அழுது கீழே விழவும், யம படர்கள் நின்று சருவ - யமனது தூதர்கள் அருகில் நின்று சைகை செய்து அடியேனை அழைக்கவும், மலம் (ஏ - அசை) ஒழுக - மலமானது தானாகக் கழியவும், உயிர் மங்கு பொழுது- உயிர் மறையும் பொழுது (நீங்கும் பொழுது), கடிதே - வேகமாக, மயிலின் மிசை வரவேணும் - மயிலின்மீது ஏறிவந்து அருளவேண்டும்.

(வி - ரை) ஸ்ரீராமராக அவதரித்த பரம மாயையின் சொரூபியான திருமால் தமது உண்மையான தன்மையைத் தெளிவாக எடுத்துரைக்கும் பரமஞான சொரூபியும் பரமஞான தேசிகருமான முருகப்பெருமானது வல்லமையைக்கண்டு மனமகிழ்ச்சி யடைகிறார் என்றதை

"பரம மாயையி னோர்மையை யாவரு
மறியொ ணாததை நீ தரு வாயிது
பகரு மாறுசெய் தாய்முதல் நாளுற பயனோதான்?"

என்னுந் திருப்புகழ் விளக்குதல் காண்க. (உரு)

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த—தனதான.

விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர

குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ?

மறிமானு கந்த இறையோன்ம கிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா!

மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவேலெ றிந்த அதிதீரா!

அறிவால றிந்து னிருதாளி றைஞ்சு
மடியாரி டைஞ்சல் களைவோனே!

அழகான செம்பொன் மயில்மேல மர்ந்து
அலைவாயு கந்த பெருமாளே!

(ப - ரை) மறி மான் உகந்த இறையோன் - மான்குட்டியை (க்கரத்தினில்) உயரத்தூக்கிப் பிடித்திருக்கும் இறைவராகிய சிவபெருமான், மகிழ்ந்து வழிபாடு தந்த - மனக்களிப்புடன் வணங்கிய, மதியாளா - ஞான சொரூபியே!, மலை மாவு சிந்த - (கிரௌஞ்ச) மலையும் (இறுதியில் சூரன் எடுத்துக்கொண்ட வுருவமான) மாமரமும் பிளவுபடுமாறும், அலை வேலை அஞ்ச - அலைவீசும் சமுத்திரம் பயப்படுமாறும், வடி வேல் எறிந்த அதிதீரா - கூர்மையான வேலாயுதத்தைப் பிரயோகித்த மகா தீரனே!, அறிவால் அறிந்து உன் இரு தாள் இறைஞ்சும் அடியார் - அறிவினால் ஆராய்ந்து உண்மையை அறிந்துகொண்டு (அவ்வாறு அறிந்துகொண்டதன் பயனாக) நினது பாதமலர்கள் இரண்டையும் வணங்கும் அடியவர்களுடைய, இடைஞ்சல் களைவோனே - இடுக்கண்களை நீக்குபவனே!, அழகான செம்பொன் மயில் மேல் அமர்ந்து - அழகு வாய்ந்ததும் சிவந்த பொன்னின் ஒளிவீசும் இறகுகளையுடையதுமான மயிலின்மீது அமர்ந்து, அலைவாய் உகந்த பெருமாளே - அலைமோதும் கரையிலுள்ள திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூரில் மகிழ்ச்சியுடன் எழுந்தருளி யிருக்கும் பெரியோனே!, விறல் மாரன் - வலிமை பொருந்திய மன்மதன், ஐந்து மலர் வாளி சிந்த - ஐந்து மலர்களினாலாகிய அம்புகளையும் பிரயோகிக்க (அது காரணத்தினால்), மிக வானில் இந்து வெயில் காய - விசாலமான வானத்தினின்றும் சந்திரன் வெப்பமான கிரணங்களை வீசவும், மித வாடை வந்து தழல் போல ஒன்ற - மெல்ல வீசும் (தென்றற்) காற்று வந்து தீயைப் போல் எரித்துத் தேகத்தின்மீது படவும், வினை மாதர் தம் தம் வசை கூற - வஞ்சகம் பொருந்திய மாதர்கள் தத்தமக்குத் தோன்றிய நிந்தை மொழிகளைக் கூறவும் (பெற்ற), குறவாணர் குன்றில் உறை பேதை கொண்ட கொடிதான துன்ப மயல் தீர - (ஐம்புலன்களாகிய) குறவர்களுடைய மலையின்மீது வசிக்கும் பேதையான ஆன்மாவானது நின்பால் கொண்டதும் அதற்குக்கொடிய

துன்பத்தைத் தருவதுமான ஆசை தீரும் வண்ணம், குளிர் மாலையின்கண் - குளிர்ந்த (தென்றற் காற்று வீசும்) சாயங்காலவேளையில், அணி மாலை தந்து - நீ அணிந்து கொண்டுள்ள மலர்மாலையை (அந்த ஆன்மாவுக்கு) அளித்து, குறை தீர வந்து குறுகாயோ - அந்த ஆன்மாவின் மனக்குறை தீரும் வண்ணம் அந்த ஆன்மாவினிடம் வந்து சேராயோ?

(வி - ரை) மாடையின் சொரூபமான கிரௌஞ்ச மலையையும், தனது குலத்தைக் காக்கும் அகங்காரத்தின் வடிவமான சூரபதுமனது மாமர வடிவத்தையும், சமுசாரத்தின் சொரூபமான அலை வீசும் சமுத்திரத்தையும் அழிப்பதற்காக ஞான சக்தியாம் வேலாயுதத்தைப் பிரயோகித்த முருகப்பெருமான் ஜீவர்களின் மீது மிகுந்த அன்பு பூண்ட கருணைமூர்த்தி யென்றும் அவர்கள் தம்மைச் சரண் புகுந்த மாத்திரத்தில் அவர்களை ஆட்கொள்ளுவாரென்றும் அறிவினால் ஆராய்ந்தறிந்து அவ்வறிவுடன் அவரது பாதமலர்களை வணங்குவோரது இடைஞ்சல்களை அப்பெருமான் அகற்றுவார். ஆதலின், அப்பெருமானை அடையவேண்டுமென்று ஆசைகொண்டவளும், அவ்வாசையினால் தலைவனைப் பிரிந்த தலைவி சாயங்கால வேளையில் சந்திரனாலும் மந்த மாருதத்தினாலும் காமம் வளர்க்கப் பெற்று அடையும் துன்பமனைத்தையும் அடைபவளும், பிறந்த மாத்திரத்திலேயே ஐம்புலன்களாகிய வேடர்கள் கையிற் சிக்கி அவர்கள் நடுவே வளர்ந்து அவர்கள் சொற்படி நடப்பவளுமான பேதையான ஆன்மாவின் துன்பம் நீங்குமாறு அந்த ஆன்மாவுக்கு அவர் அணிந்துகொண்ட மலர் மாலையை அளித்துத் தமது நாயகியாக்கிக்கொள்ளும்படி சுவாமிகள் பாங்கியைப்போல் தலைவரான முருகப் பெருமானிடத்தில் தெரிவித்துக் கொள்ளுகிறார். இப்பொருள் 182, 183-ம் பக்கங்களிலும் மற்றும் பல விருத்தி யுரைகளிலும் விளக்கப்பட்டிருப்பதைக் காண்க. இப்பாடலில் "வினை மாதர்"கள் என்றது தம்செயல் அழியாது இடைவிடாமல் இருவினைகளைப் புரிந்து வருபவர்களைக் குறிக்கிறது; அப்பெண்கள், பரம்பொருளிடத்து மெய்யன்புபூண்டு அவரை அடையவேண்டுமென்று பெருங்காதலுற்றுத் தம் வசமழிந்து பரவசமாயிருக்கும் மெய்யடியார்களைப் பலவிதமாக நிந்திப்பது ஜடவுலக வியல்பு. (௨௪)

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன—தனதான

களப மொழுகிய புளகித முலையினர்
கடுவு மயிர்தரும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலின ரெவரோடும்

கலக மிடுகய லெறிகுழை விரகியர்
பொருளி லிளைஞரை வழிகொடு மொழிகொடு
தளர விடுபவர் தெருவினி லெவரையு நகையாடிப்

பிளவு பெறிலதி லளவள வொழுகியர்
நடையி லுடையினி லழகொடு திரிபவர்
பெருகு பொருள்பெறி லமளியி லிதமொடு குழைவோடே

பிணமு மணைபவர் வெறிதரு புனலுணும்
அவச வனிதையர் முடுகொடு மணைபவர்
பெருமை யுடையவ ருறவினை விடஅருள் புரிவாயே!

அளையி லுறைபுலி பெறுமக வயிறரு
பசுவி னிரைமுலை யமுதுண நிரைமகள்
வசவ னொடுபுலி முலையுண மலையுட னுருகாநீள்

அடவி தனிலுள வுலவைகள் தளிர்விட
மருள மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளியுயர் பறவைகள் நிலம்வர விரல்சேரேழ்

துளைகள் விடுகழை விரன்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்
சுருதி யுடையவ னெடியவன் மனமகிழ் மருகோனே!

துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளரறு முககுக
துறையி லலையெறி திருநக ருறைதரு பெருமாளே!

(ப - ரை) அளையில் உறை புலி பெறு மகவு - மலைக்குகையில் வசிக்கும் புலி ஈன்ற குட்டியானது, அயில் தரு - (சுரந்து) உண்பிக்கும், நிரை பசுவின் முலை அமுது உ(ண்)ண - கூட்டமாயுள்ள பசுக்களின் மடிகளிலுள்ள பால முதத்தைக் குடிக்குமாறும், நிரை மகள் வசவனொடு - பசுவின் பெண் கன்றும் ஆண் கன்றும், புலி முலை உ(ண்)ண - புலியின் முலையிலுள்ள பாலைக் குடிக்குமாறும், மலை உடன் உருகா - (வன்மை பொருந்திய) மலைகளும் அக்கணத்திலேயே உருகுமாறும், நீள் அடவி தனில் உ(ள்)ள உலவைகள் தளிர்விட - நீண்ட காட்டிலுள்ள மரக்கொம்புகளில் இலைகள் தளிர்க்குமாறும், மருள் அ மதமொடு களிறுகள் - (பெண்) மயக்கத்தைத் தரும் மதம்பொருந்திய ஆண் யானைகள், பிடி உடன் அகல - பெண்யானைகளை விட்டு உடனே பிரிந்து செல்லுமாறும்,

வெளி உயர் பறவைகள் நிலம் வர - ஆகாய வெளியில் உயரமாகப் பறந்து செல் லும் பறவைகள் பூமிக்குத் திரும்பி வருமாறும், விரல் சேர் எழ் துளைகள் விடு கழை - விரல்கள் பொருந்துவதற்காக எழு துளைகள் அமைக்கப்பெற்ற மூங்கிலி னாலாகிய புள்ளாங்குழலை, விரல் முறை தடவிய - விரல்களினால் முறைப்படி தடவுவதனால், இசைகள் பல பல தொனி தரு கரு முகில் - பலவிதமான இன் னிசைகளைக் கானஞ் செய்பவரும் கரிய மேகத்தை யொத்த திருமேனியை யுடையவரும், சுருதி உடையவன் - நாதங்கள் தம்மிடத்தே பொருந்தப்பெற்ற வரும், நெடியவன் - திருவிக்கிரமாவதாரம் செய்தவருமான திருமால், மன(ம்) மகிழ் மருகோனே - கண்டு களிப்படையும் மருகனே!, துணைவ - ஆன்மாக் களுக்குத் துணையாக இருந்து காப்பவனே!, குணதர - (எட்டு) குணங்களை மேற்கொண்டவனே, சரவண பவ - சரவணப் பொய்கையில் அவதரித்த வனே!, நம - உன்னை வணங்குகிறேன்!, முருக - மாறாத இளமையும் அழ கும் ஞான வாசனையும் பொருந்திய பெரியோனே!, குரு பர - ஞானத்தைப் போதிக்க வரும் பரம்பொருளே!, வளர் அறு முக - (அநாதியான பரம்பொரு ளாகவிருந்தும் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுக் குழந்தையாகத் தோன்றி) வளர்ந்து வந்த ஆறுமுகப்பெருமாளே!, குக - மெய்யடியார் மனத்தில் வசிப்ப வனே!, துறையில் அலை எறி திருநகர் உறைதரு பெருமாளே - துறைமுகத்தில் அலை வீசப்பெறும் அழகிய நகரமான திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூ ரில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, களபம் ஒழுகிய புளகித முலையினர் - கலவைச் சாந்து (மிகுதியாகப் பூசப்பெற்றுப்) பெருகப் பெற்றவைகளும் (ஆசை மிகுதியினால்) புடைக்கப்பெற்றவைகளுமான தனபாரங்களை யுடையவர்களும், கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர் - விஷமும் அமுதமும் பொருந்திய கண் பார்வையை யுடையவர்களும், கழுவு சரி புழுகு ஒழுகிய குழலினர் - சுத்தி செய் யப்பட்டு மாசறப்பெற்ற புனுகு மிகுதியாகப் பூசப்பெற்ற கூந்தலையுடையவர் களும், எவரோடும் கலகம் இடு கயல் எறி குழை விரகியர் - (தம்மைச் சந்திப்ப வர்) எவராயினும் அவரோடு பூசலிடும் பார்வையுடையவைகளும் கயல் மீனை யொத்தவைகளுமான கண்கள் (சஞ்சலப் பார்வையினால்) வந்து மோதப்பெற்ற குழைகளை யுடையவர்களாய் விரகதாபம் மிகுதியாக வுடையவர்களும், பொருள் இல் இளைஞரை வழி கொடுமொழி கொ(ண்)டு தளர விடுபவர் - கையில் பொரு ளில்லாதவரை அவர்கள் இளமைப் பருவமுடையவரா யிருந்தபோதிலும் அநேக கொடிய வார்த்தைகளைக் கூறி மனச்சோர்வடையும்படி செய்பவர்களும், தெரு வினில் எவரையும் நகையாடி - தெருவில் போகிறவர்கள் எவர்களாயிருந்த போதிலும் அவர்களைப் பார்த்து (பழகினவர்போல) நகைத்து, பிளவு பெறில் அதில் அளவளவி ஒழுகியர் - (நொய்யின்) பிளவான ஒரு பகுதியளவு பொருள் கிடைத்தபோதிலும் அதற்காக அதைக் கொடுத்தவர்களைக் கொண்டாடி நடப்ப வர்களும், நடையில் உடையினில் அழகொடு திரிபவர் - நடையுடை பாவனை

களில் அழகுடையவராய்ச் சஞ்சரிப்பவர்களும், பெருகு பொருள் பெறில் - மிகுந்த பொருள் (மட்டும்) கிடைக்குமாயின், (அப்பொருளுக்காக), அமளியில் இதமொடு குழைவோடே - படுக்கையின்மீது இன்பமடைபவர்போலும் அன்பி ஞல் மனமுருகியவர் போலும் நடித்து, பிணமும் அணைபவர் - பிணத்தையும் அணைத்துக் கொள்பவர்களும், வெறி தரு புனல் உ(ண்)ணும் அவச வனிதை யர் - மனத்தில் வேகம் பொருந்திய பிரமத்தையுண்டுபண்ணும் நீரான கள்ளைக் குடித்துத் தமது வசமழியும் பெண்களும், மூடுகொடும் அணைபவர் - கலவியில் தீவிரமுடையவர்களும், பெருமை யுடையவர் - கர்வமுடையவர்களுமான (விலை மாதர்களது), உறவினை விட அருள் புரிவாயே-நட்பைத் தவிர்க்கும் வண்ணம் (அறிவைப் புகட்டி மனமயக்கத்தை யகற்றி) நீ அருள்புரிய வேண்டும்.

(வி - ரை) இப்பாடலில் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியின் வேணுகான விசேஷம் கூறப்பட்டிருக்கிறது. அவ்வேணுகானம் ஆன்மாக்களெல்லாம் தம்வச மழிந்து பரவசமாகும்படிச் செய்தது. அதன் இன்னிசையினுல் மரங்கள் தளிர்த்தன, மலைகள் உருகின, கலவியாசை கொண்ட மதயானைகள் அவ்வாசையை மறந்தன. அவ்வளவு சக்தி பொருந்திய திருமால் தமது மருகனுன முருகப்பெருமான் தமது ஞானவாசனையினுல் ஆன்மாக்களைத் தம்வச மாக்கிக்கொள்வதைக் கண்டு வியப் புற்று மகிழ்கிருர். அன்னையைக் காட்டிலும் தயவுடைய முருகப்பெருமான் தமது அருளை நாடும் ஆன்மாக்களுக்குச் சதாகாலமும் துணையாக நின்று அருள் புரிகிருர். இக்கருத்து 119 - 120-ம் பக்கங்களில் விரிவாக விளக்கப்பட்டிருப் பதைக் காண்க. 'சரவணபவன்' என்னும் பதத்துக்கு நாணலும் தாமரை மலர்களும் நெருங்கியுள்ள பொய்கையில் உதித்தவன் என்பது பொருள். இவ் விஷயம் 287-288-ம் பக்கங்களில் விரிவாகக் கூறப்பட்டிருப்பதைக் காண்க. நிர்க்குணராகிய முருகப்பெருமான் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு எட்டுக்குணங் களை மேற்கொண்டார். ஆகையினுல்தான் குணங்களைத் தரித்தவனே என்று பொருள்படும் குணதர என்னும் பதம் உபயோகிக்கப் பட்டது. அக்குணங்க ளாவன:—தன் வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், இயற்கை உணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவி லாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை. "குருபர"— குருவாக வந்த பரம் பொருள். பரம்பொருளான சிவபெருமானே ஆன்மாக்களுக்கு ஞானத்தைப் புகட்டுவதற்காக ஞானகுருவாகிய முருகப்பெருமானுகத் தோன்றினுர். (உ௫)

தந்தன தானன தானன
தந்தன தானன தானன
தந்தன தானன தானன—தனதான.

**கொ**ம்பனை யார்காது மோதிரு
கண்களி லாமோத சீதள
குங்கும பாடீர பூஷண

நகமேவு

கொங்கையி னீராவி மேல்வளர்
செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி லாதார சோலையில் மருளாதே
உம்பர்கள் ஸ்வாமீந மோநம
எம்பெரு மானேந மோநம
ஒண்டொடி மோகாந மோநம எனநாளும்
உன்புக ழேபாடி நானினி
அன்புட னாசார பூசைசெய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே !
பம்பர மேபோல ஆடிய
சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி
பங்கமி லாநீலி மோடிப
யங்கரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்
டெம்புதல் வாவாழி வாழியெ
னும்படி வீறான வேல்தர
என்றுமு ளானேம னோகர வயலூரா !
இன்சொல்வி சாகாக்ரு பாகர
செந்திலில் வாழ்வாகி யேயடி
யென்றனை யீடேற வாழ்வருள் பெருமாளே !

(ப - ரை) பம்பரமே போல ஆடிய சங்கரி - (அம்பலத்தினில் இறைவன் நிர்த்தனஞ் செய்யுங்கால்) பம்பரத்தைப்போலவே சுழன்று ஆடிய சங்கரியும், வேதாள நாயகி - வேதாள பூதகணங்களுக்குத் தலைவியும், பங்கய சீ பாத நூபுரி- தாமரை மலரையொத்த திருப்பாதங்களில் தண்டைகளை யணிந்துள்ளவரும், கர சூலி - கையில் சூலாயுதத்தைத் தரித்தவரும், பங்கம் இலா நீலி - குற்றமில்லாத பார்வதிதேவியாரும், மோடி - துர்க்கையும், பயம் ஹரி-(அடியவர்) பயத்தை அகற்றுபவரும், மாகாளி - மகாகாளியும், யோகினி - யோகினியுமான உமாதேவியார், பண்டு சுரா பான சூரனொடு எதிர் போர் கண்டு - முன்பு மதுபானஞ் செய்யும் வழக்கமுள்ள சூரபதுமனோடு நீ எதிர்த்துப் போர்செய்ததைக்கண்டு, எம் புதல்வா வாழி வாழி எனும்படி - எமது குமாரனே ! நீ நீடூழி வாழ்வாயாக !

என்று உன்னை வாழ்த்தும்படி, வீறுன வேல் தர - வெற்றியைத் தரும் வேலாயுதத்தைக் கையில் தரித்துள்ளவனே !, என்றும் உளானே - எந்நாளும் அழிவில்லாமல் இருக்கும் இறைவனே !, மனோகர - கட்டழகு வாய்ந்தவனே !, வயலூரா - வயலூர் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருப்பவனே !, இன் சொல் விசாகா - இனிய சொற்களைப் பேசும் விசாகனே !, க்ருபாகர - கருணைக்கு உறைவிடமானவனே !, செந்திலில் வாழ்வாகி (ஏ - அசை) - திருச்செந்தூரில் எழுந்தருளி, அடியென் தனை ஈடேற வாழ்வு அருள் பெருமாளே - அடியேன் உய்யும்பொருட்டு நல்வாழ்வு தந்தருளிய பெரியோனே !, கொம்பு அனையார் - மரத்தின் கொம்பைப்போல வளையும் இடையை யுடைய பெண்களின், காது மோது இரு கண்களில் - (சஞ்சலப்பார்வையினால்) காதுகள் வரையில் செல்லும் விழிகளையுடைய இருகண்களைக்கண்டும், ஆமோத - மிக்க குணம் பொருந்தியவைகளும், சீதள குங்கும பாடீர - குளிர்ச்சியைத் தருவதும் குங்குமப்பூவினுடன் கலந்ததுமான சந்தனம் பூசப்பெற்றவைகளும், பூஷண - ஆபரணங்கள் அணியப்பெற்றவைகளும், நகம் மேவு - (கலவியில் உண்டான) நகக்குறிகள் பொருந்தப் பெற்றவைகளுமான, கொங்கையில் - தனபாரங்களைக் கண்டும், நீர் ஆவி மேல் வளர் செங்கழுநீர் மாலை - நீர்நிறைந்த குளத்தில் பூத்த செங்கழுநீர் மலர்களினால் தொடுத்த மாலையை, சூடிய கொண்டையில் - சூட்டிக் கொண்டுள்ள கொண்டையைக்கண்டும், ஆதார சோபையில் - தேகத்தின் அழகைக்கண்டும், மருளாதே - மனமயக்கம் அடையாமல், உம்பர்கள் ஸ்வாமீ நமோநம - தேவர்களுக்கும் தேவனே நமஸ்காரம் !, எம்பெருமானே நமோநம - எமது நாயகனே நமஸ்காரம் !, ஒள் தொடி மோகா நமோநம - பிரகாசிக்கும் வளையல்களை அணிந்துள்ள வள்ளிநாயகியின்மீது மோகமடைந்துள்ளவனே நமஸ்காரம் !, என - என்று துதித்து, நாளும் - தினந்தோறும், உன் புகழே பாடி - உனது புகழை எடுத்துரைக்கும் பாடல்களையே பாடி, நான் இனி அன்புடன் ஆசார பூசை செய்து - நான் இனிமேல் நின்னிடத்து அன்புடையவனாய் தக்க ஆசாரத்துடன் நின்னைப் பூஜித்து, உய்ந்திட - நற்கதி யடையவும், நாள் வீண் படாது - என் காலம் வீணாகக்கழியாமலிருக்கவும், அருள் புரிவாயே - (நீ அடியேனுக்கு) அருள் புரியவேண்டும்.

(வி - ரை) ஜடவுலக வாழ்க்கையில் விஷய சுகங்களாகிய கள்ளைக் குடிக்கும் அசுரனாகிய அகங்காரம் ஆன்மாக்களை உய்யும் நெறியில் நிற்கவொண்ணாது தடுப்பதைக்கண்டு வருந்திய உலகமாதாவான பார்வதி தேவியார், தமது குமாரரும் ஞான சொரூபியுமான முருகப்பெருமான் ஞான சக்தியாம் வேலாயுதத்தைப் பிரயோகித்து ஆன்மாக்களின் அகங்காரத்தை யழித்து, அவ்வகங்காரத்தினாலேயே உண்டாகும் ஏனைய துர்க்குணங்களனைத்தையும் அழித்து, ஆன்மாக்கள் ஞானம் பெறும்படி செய்வதைக் கண்டு மனமகிழ்ந்து, " சித்சொரூபியாகிய

எனக்கும் சத்சொரூபியாகிய சிவபெருமானுக்கும் செல்வப்புதல்வனாகத் தோன்றிய சச்சிதானந்தனே! ஞானகுருவே! நீ இவ்வாறே ஆன்மாக்களின் அகங்காரத்தை யகற்றி அவைகளுக்கு ஞானத்தைப் புகட்டிக்கொண்டு நீடூழி வாழ்வாயாக!" என்று ஆசீர்வதிக்கிறார். (உசு)

தனதன தனதன தனதன தனதன - தந்தத் தனதானா.

கொலைமத கரியன ம்ருகமத தனகிரி கும்பத் தனமானார்
குமுதஅ முதஇதழ் பருகியு ருகிமயல் கொண்டுற் றிடுநாயேன்
நிலையழி கவலைகள் கெடவுன தருள்வழி நின்றுற் றிடவேதான்
நினதிரு வடிமல ரிணைமன தினிலுற நின்பற் றடைவேனோ?
சிலையென வடமலை யுடையவ ரருளிய செஞ்சொற் சிறுபாலா!
திரைகட லிடைவரு மசுரனை வதைசெய்த செந்திற் பதிவேலா!
விலைநிகர் நுதலிப மயில்குற மகளும்வி ரும்பிப் புணர்வோனே!
விருதணி மரகத மயில்வரு குமரவி டங்கப் பெருமாளே!

(ப - ரை) சிலை என் அ வட மலை உடையவர் - வில்லாக வளைக்கப்பட்டது என்று சொல்லப்படும் அந்த வடதிக்கிலுள்ள மலையான இமயமலையைத் தமது இருப்பிடமாக வுடையவரான சிவபெருமான், அருளிய - தந்தருளிய (பாலனே!), செம் சொல் சிறு பாலா - பிரணவத்தின் பொருளான உத்தமமான மொழிகளை மொழிந்த சிறு பாலனே!, திரை கடல் இடை வரும் அசுரனை - அலைவீசும் சமுத்திரத்தின் நடுவேயிருந்து எதிர்த்து வந்த அசுரனாகிய சூரபதுமனை, வதை செய்த - சங்கரித்த (வேலாயுதனே!), செந்தில் பதி வேலா - திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் வேலாயுதனே!, வி(ல்)லை நிகர் நுதல் - (வளைந்து) வில்லைப் போன்றவைகளாகவுள்ள புருவங்களையுடைய, (நாயகிகளான), இப மயில் - (ஐராவதம் என்னும்) யானையின் மகளாக வளர்ந்த வரும் மயிலின் அழகிய சாயலை யுடையவருமான தெய்வயானை யம்மையாரையும், குற மகளும் - குறவர் குலத்தில் வளர்ந்த, வள்ளி நாயகியாரையும், விரும்பி புணர்வோனே - விருப்பத்துடன் கலந்து கொள்பவனே! விருது அணி மரகத மயில் வரு - தனது வீரத்தைக் காட்டும் (வீரக்கழல் முதலிய) விருதுகளை யணிந்துள்ளதும் பச்சை நிறமுள்ளதுமான மயிலின்மீது ஏறிவரும், குமர விடங்க பெருமாளே- குமாரசுவாமியாகிய அழகிய நாயகனே!, கொலை மத கரி அ(ன்)ன - கொல்வதற்காக வரும் மதயானையைப் போன்றவைகளும், ம்ருக மத - கஸ்தூரி பூசப்பெற்றவைகளும், தன கிரி - பொன் மலையையும், கும்ப தனமானார் - கும்பத்தையும் ஒத்தவைகளுமான தனபாரங்களைக்கொண்ட பெண்களுடைய, குமுத அமுத இதழ் பருகி - செவ்வாம்பல் மலரை யொத்தவைகளும் அமுதம் பொருந்தப்பெற்

றவைகளுமான உதடுகளில் வந்து சேரும் அதரபானத்தை அருந்தி, உருகி - (ஆசையினால்) மனமுருகப்பெற்று, மயல் கொண்டு உற்றிடு(ம்) நாயேன் - காம மயக்கமடைந்து அது மேன்மேலும் மிகுதியாகப் பெறும் நாயை யொத்த அடியேன், நிலே அழி கவலைகள் கெட - அடியேனை நிலைகுலையச் செய்யும் கவலைகள் நீங்குவதற்காக, உனது அருள் வழி நின்று உற்றிட (ஏ, தான் - அசை). நினது கருணையைப் பெறும் (முத்தி) நெறியில் நின்று அக் கருணையைப் பெறும் வண்ணம், நின திருவடி மலர் இணை - நினது திருவடி மலர்கள் இரண்டும், மனதினில் உற - அடியேனது மனத்தில் வந்து அமரப்பெறுமாறு, நின் பற்று அடைவேனோ - நின்னிடத்தில் அன்பு கொள்வேனோ?

(வி - ரை) முருகப்பெருமானது வாகனமான மயிலானது கழல் முதலிய விருதுகளைப் பெறத்தக்க வீரத்தன்மை வாய்ந்தது என்பது 165-166-ம் பக்கங்களில் விளக்கப்பட்டிருப்பதைக் காண்க. அடியேனை நிலை குலையச்செய்யும் கவலைகள் நீங்கவேண்டுமானால், அடியேன் நினது அருளைப் பெறுவதற்குரிய நெறியில் நின்று அவ்வருளைப் பெறவேண்டும். அந்நெறியில் நிற்பதற்கு அவசியமானது நினது பாதமலர்களை மனத்தினில் நிலைமையாக நிறுத்திக்கொண்டு தியானம் செய்வது. அப்படிச் செய்வது நின்னிடத்து அன்பு பூண்டார்க்கே சாத்தியம். அடியேன் அப்படிப்பட்ட அன்புடையவ னல்லனாதலின், அடியேனுக்கு நின்னிடத்து அன்பு உண்டாகும்படி அருள்புரிய வேண்டும். (உஎ)

தான தந்த தான தான தான தந்த தான தான
தான தந்த தான தான—தனதான.

**நா**லு மைந்து வாசல் கீறு தூறு டம்பு கால்கை யாகி
நாரி யென்பி லாகு மாக மதனூடே

நாத மொன்ற ஆதி வாயில் நாட கங்க ளான ஆடி
நாட றிந்தி டாம லேக வளராமுன்

நூல நந்த கோடி தேடி மால்மி குந்து பாரு ளோரை
நூறு செஞ்சொல் கூறி மாறி வினைதீமை

நோய்க லந்த வாழ்வு றாமல் நீக லந்து ளாகு ஞான
நூல டங்க வோத வாழ்வு தருவாயே!

காலன் வந்து பால னாவி காய வென்று பாசம் வீசு
காலம் வந்து வோல மோல மெனுமாதி

காம னைந்து பாண மோடு வேமி னென்று காணு மோனர்
காள கண்ட ரோடு வேத மொழிவோனே!

ஆல மொன்று வேலை யாகி யானை யஞ்சல் தீரு மூல
ஆழி யங்கை ஆயன் மாயன் மருகோனே !
ஆர ணங்கள் தாளை நாட வார ணங்கை மேவு மாதி
யான செந்தில் வாழ்வ தான பெருமாளே !

(ப - ரை) காலன் வந்து பாலன் ஆவி காய என்று - இயமராஜன் வந்து பாலனுயிருந்த மார்க்கண்டேயனது உயிரை அழிக்க வேண்டுமென்று, பாசம் வீசு காலம் வந்து - பாசக்கயிற்றை வீசியபோது (இலிங்கத்தினின்றும்) தோன்றி, ஓலம் ஓலம் எனும் ஆதி - அஞ்சேல் என்று கூறி அபயமளித்தருளிய உலகத்தின் ஆதி காரணரும், காமன் ஐந்து பாணமோடு வேமின் என்று காணும் மோனர் - மன்மதனே ! நீயும் உனது ஐந்து மலர்ப் பாணங்களும் வெந்து போங்கள் ! என்று (ஞானச் சுடர் வீசும்) நெற்றி விழியைத் திறந்து பார்த்தருளிய மௌனகுருவாகிய தக்ஷிணா மூர்த்தியும், காளகண்டரோடு - ஆலாகலத்தைக் கழுத்தில் அமர்த்திக்கொண்ட பிரபுவுமான சிவபெருமானுக்கு, வேதம் மொழிவோனே - வேதத்தின் சாரமான பிரணவப்பொருளை உபதேசித்தவனே ! ஆலம் ஒன்று வேலையாகி - ஆலாகலம் என்னும் விஷம் பொருந்தியிருந்த திருப்பாற் கடலில் அக்கடலின் நிறமே பொருந்திய திருமேனியுடைய ஸ்ரீமந்நாராயணராகப் பள்ளிகொண்டவரும், யானை அஞ்சல் தீரும் மூல - கஜேந்திரன் என்னும் யானைக்கு அபயமளித்து அதன் துயரத்தைத் தீர்த்தருளியவரும் உலகங்களுக்குக் காரணமான பரம மாயையின் சொரூபியும், ஆழி அம் கை ஆயன் - சக்கராயுதத்தைக் கையிலேந்திய ஸ்ரீகிருஷ்ண பகவானும், மாயன் - சகல மாயைகளுக்கும் ஆதிகாரணருமான திருமாலின், மருகோனே - சகோதரியின் புத்திரனே !, ஆரணங்கள் தாளை நாட - வேதங்களெல்லாம் நினது பாதமலர்களை அடைய விரும்பித் தேட, வாரணம் கை மேவும் ஆதி ஆன - கோழிக்கொடி கையில் பொருந்தப் பெற்றுள்ளவனும் சகல ஜகங்களுக்கும் ஆதி காரணமான பரம்பொருளானவனும், செந்தில் வாழ்வு அது ஆன பெருமாளே - திருச்செந்தூரின் வாழ்வுக்குக் காரணமானவனுமான பெரியோனே !, நாலும் ஐந்து வாசல் கீறு-ஒன்பது வாயில்கள் உண்டாகுமாறு கிழிக்கப்பெற்றதும், நாறு உடம்பு - தீமையை விளைவிப்பதுமான உடம்பாகவும், கால் கை ஆகி - கால் கைகளாகவும் ஆகி, நாரி என்பில் ஆகும் ஆகம் அதன் ஊடே - ஒரு பெண்ணின் தேகத்துக்குள் உண்டாகும் தேகத்தினுள்ளே, நாதம் ஒன்ற - சகல நாதங்களும் பொருந்திக் கேட்கப்பெற்று, ஆதி வாய் இல் - (தேகத்திலுள்ள ஆறு) ஆதாரங்களினிடத்தே, நாடகங்களான ஆடி-(சிவமும் சத்தியும் கலந்து நிர்த்தனஞ் செய்யுங்கால் தானும்) பலவிதமான நிர்த்தனஞ்செய்யும் சச்சிதானந்த மூர்த்தியான முருகப்பெருமானை, நாட அறிந்திடாமல் - அடைய விரும்பித்தேடும் அறிவில்லாமல், ஏக வளரா முன் - உயர்ந்து வளரு முன்னமேயே, மால் மிகுந்து - மயக்கம் மிகுதியாக உண்டாகப் பெற்று,

நூல் அநந்த கோடி தேடி - எண்ணிறந்த நூல்களைக் கற்று ஆராய்ந்து, பார் உ(ள்)ளோரை - இந்நிலவுலகத்திலுள்ள மானிடரை, நூறு செம் சொல் கூறி - (கற்று ஆராய்ந்ததனால் அறிந்து கொண்ட) பல் திருத்தமான சொற்களினால் புகழ்ந்து, மாறி - அவ்வாறு புகழ்ந்ததன் பயனாக, வினை தீமை நோய் கலந்த வாழ்வு உறாமல் - வினையும் தீமையான பவநோய் கலந்த வாழ்க்கை அடியேனுக்கு வந்து சேராமல் (காத்து), நீ கலந்து உள் ஆகு(ம்) ஞான நூல் அடங்க - நீ அடியேனுடன் கலந்து அடியேனது இதயத்துக்குள் பொருந்துவதற்குரிய ஞானத்தைப் புகட்டும் நூல்கள் அனைத்தையும், ஓது அ வாழ்வு தருவாயே - கற்றறியும் அந்த (நல்ல) வாழ்க்கையைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) ஸ்ரீமந்நாராயண மூர்த்தியானவர் திருப்பாற்கடலிற் பள்ளி கொண்டிருக்குங்கால் அக்கடலுக்கும் அவர் திருமேனிக்கும் யாதொரு வித்தியாசமும் தெரிவதில்லையாதலின், "ஆலமொன்று வேலையாகி" என்று கூறப்பட்டது. வேதங்கள் முருகப்பெருமானுடைய பாதமலர்களின் சிறப்பை மட்டுமே சொல்ல முயலுகின்றன. அப்பெருமானுடைய கருணையினளவைக் கூறவல்லார் ஞான சூரியனாகிய அப்பெருமானது வரவைத் தெரிவித்துக் கூவும் அவரது கொடியாகும் சேவலைத் தவிர வேறெவருமில்லை. "சலமலம் விட்டத் தடம் பெருங்குடில்...... தந்தை தாயும், தரவரு பொய்க்குட் கிடந்த கந்தலில்" என்றபடி, ஆன்மா வசிப்பதற்காக ஏற்படும் வீடு ஒன்பது துவாரங்களுள்ளதாகும்படி கிழிக்கப்பட்டுக் கந்தலாகவிருக்கிறது. யோகநிஷ்டையிலமர்ந்து குண்டலினி சத்தியை எழுப்பிச் சுவாசத்தை முறைப்படி அத்தேகத்தினூடே செலுத்தினால், பலவிதமான நாதங்கள் தேகத்தினூடே ஒலித்துக்கேட்கும்; மற்றும் தேகத்தினுள்ளே யுள்ள மூலாதாரம், சுவாதிஷ்டாநம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்று சொல்லப்படும் ஆறு ஆதாரங்களில் ஜோதி சொரூபமாகிய சிவசக்தி (சித்து) சிவத்துடன் (சத்துடன்) கலந்து நிர்த்தனஞ் செய்யும்; அப்போது சச்சிதாநந்த சொரூபியாகிய முருகப்பெருமானும் அந்த ஆறு ஆதாரங்களிலும் நிர்த்தனஞ் செய்கிறார். அந்த சச்சிதாநந்த மூர்த்தியை நாடி யடைவதே ஆன்மாவின் கடமையாகும். பல நூல்களைக் கற்றறிந்து, அவ்வறிவை அப்பெருமானைத் துதிக்க உபயோகியாமல், அழியும் மானிடரைத் துதிக்க உபயோகிப்பது துரோகமாகும். ஏனெனில், "யாமோ தியகல்வியு மெம்மறிவும் தாமே பெற வேலவர் தந்ததனால்" என்றவாறு, நமது கல்வி யறிவெல்லாம் சர்வலோகங்களுக்கும் ஆதிகாரணரும் ஞான சக்தியைத் தரித்துள்ளவருமான முருகப் பெருமானாலேயே அருளப்பட்டதாகும். ஆதலின், அவ்விதத் துரோகஞ் செய்பவருடைய வாழ்க்கை அத்துரோகத்தின் பயனான பவ நோய் - மீண்டும் மீண்டும் பிறவிக்கடலில் புகுத்தும் நோய்-கலந்த வாழ்க்கையாகும். அவ்வித வாழ்க்கையை யடையாமல், அப்பெருமானைச் சதாகாலமும் இதயகமலத்துக்குள் அமர்த்திக்

கொள்வதற்குரிய ஞானத்தைப்புகட்டும் சிவாகம நூல்களைக் கற்றறிவதி லேயே பொழுதைக்கழிக்கும் நல்வாழ்க்கையை அடைவதற்கும் அப்பெருமானது அருளையே நாடவேண்டும். (உஅ)

தந்தன தனந்தனந் தனதனத்
தந்தன தனந்தனந் தனதனத்
தந்தன தனந்தனந் தனதனத்—தனதான.

அந்தகன் வருந்தினம் பிறகிடச்
சந்தத மும்வந்துகண் டரிவையர்க்
கன்புரு குசங்கதந் தவிரமுக் குணமாள

அந்திப கலென்றிரண் டையுமொழித்
திந்திரி யசஞ்சலங் களையறுத்
தம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடிச்

செந்திலை யுணர்ந்துணந் துணர்வுறக்
கந்தனை யறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெ ருகுந்தடந் தெளிதரத் தணியாத

சிந்தையு மவிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவ ரஎன்றுநின் தெரிசனைப் படுவேனோ ?

கொந்தவிழ் சரண்சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாளக்

குன்றிடி யஅம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீசத்

தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான

சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந்தொழுஞ் சரவணப் பெருமாளே !

(ப - ரை) கொந்து அவிழ் சரண் - பூங்கொத்திலுள்ள மலர்கள் மலர்ந்தாற் போலுள்ள நினது பாத மலர்களில், சரண் சரண் என - அடைக்கலம் புகுந்தேன் என்று பலமுறை கூறி, கும்பிடு புரந்தரன் பதி பெற - நின்னை வணங்கிய தேவேந்திரன் தனது நாட்டை அடைவதற்காகவும், குஞ்சரி குயம் புயம் பெற - (தேவேந்திரன் மகளாகத் தோன்றி) ஐராவதம் என்னும் யானையினால் வளர்க்கப்பட்ட தெய்வயானை யம்மையாரது தனபாரங்கள் நினது புயங்களை (அணைவதற்கு) அடைவதற்காகவும், அரக்கர் (உம் - அசை) மாள - அசுரர்கள் அழிவதற்காகவும், குன்று இடிய - கிரௌஞ்சம் என்னும் மலை இடிவதற்காகவும், அம் பொனின் திரு அரை கிண்கிணி - பொன்னினாற் செய்யப்பட்டு அழகு பொருந்தியவைகளாய் நினது அரையில் கட்டப்பட்டுள்ள சதங்கைகள், கிணின் கிணின் கிணின்,— என - என்று இனிய வொலி பரப்பவும், குண்டலம் அசைந்து - குண்டலங்கள் அசைந்து, இளம் குழைகளில் ப்ரபை வீச - இளமை பொருந்திய நினது காதுகளில் ஒளிவீசவும், தந்தன தனந்தனம் தன,— என செம் சிறு சதங்கை கொஞ்சிட - என்று (நினது பாதங்களில் அணிந்துள்ள) அழகிய சிறு சதங்கைகள் இனிமையாகச் சத்திக்கவும், மணி தண்டைகள் கலின் கலின் கலின் என - அழகிய தண்டைகள் கலின் கலின் கலின் என்று ஒலிக்கவும், திரு ஆன - சகல செல்வங்களுக்கும் காரணியான, சங்கரி - பார்வதி தேவியார், மனம் குழைந்து உருக முத்தம் தர - மனம் கசிந்து அன்பினால் உருகும்வண்ணம் அத்தேவியாருக்கு முத்தம் தருவதற்காக, வரும் - நடந்துவந்த, செழும் தளர் நடை சந்ததி - அழகிய தளர்நடை பொருந்திய புதல்வனே !, சகம் தொழும்-உலகம் முழுவதும் வணங்குகின்ற, சரவண பெருமாளே-சரவணப் பொய்கையில் அவதரித்தருளிய பெரியோனே ! அந்தகன் வரும் தினம் பிறகிட - யமன் அடியேனது உயிரைக் கவர வரும் நாள் பின்னிட்டுச் செல்லவும், சந்ததமும் வந்து கண்டு அரிவையர்க்கு அன்பு உருகு - தினந்தோறும் வந்து பெண்களைப்பார்த்து அவர்களிடத்து அன்பு பூண்டு மனம் உருகும், சங்கதம் தவிர-அவர்களுடைய நட்பு ஒழியவும், முக்குணம் மாள - சத்துவம் இராஜதம் தாமதம் என்னும் மூன்று குணங்களும் அழியவும், அந்தி பகல் என்ற இரண்டையும் ஒழித்து - சுகதுக்கங்கள் என்னும் இரண்டு மனப் பதைப்புகளையும் நீக்கிக்கொண்டு, இந்திரிய சஞ்சலங்களை அறுத்து - மெய் வாய் கண் மூக்குச் செவி எனும் ஐந்து இந்திரியங்களினால் மனத்தினில் ஏற்படும் சஞ்சலங்களை அகற்றிக்கொண்டு, அம்புய பதங்களின் பெருமையை கவிபாடி - தாமரைமலரை யொத்த நினது பாதங்களின் பெருமையைப் புகழ்ந்து பாடல்கள் இயற்றிப்பாடி, செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வு உற - நீ திருச்செந்திற் பதியில் போர்க்கோலம் கொண்டு எழுந்தருளி இருப்பதன் காரணத்தை உணர்ந்து உணர்ந்து நாளடைவில் மெய்யுணர்ச்சி பெறுமாறும், கந்தனை அறிந்து அறிந்து- அடியவர் பகையை அழிக்கும் இறைவனாகிய தேவரீரை அறிவினால் மெல்ல மெல்ல அறிந்து, அறிவினில் சென்று செருகும் தடம் தெளிதர - (அறிவும்

அறியாமையும் கடந்த) அறிவையே திருமேனியாகவுடைய தேவரீரிடத்து வந்து நிலைமையாகத்தங்கும் இடம் இன்னதென்று விளங்குமாறும், தணியாத சிந்தையும் அவிழ்ந்து அவிழ்ந்து - அடங்காதமனமும் அடங்கப்பெறுமாறும், உரை ஒழித்து - பேசுவதையொழித்து (மௌனநிலைமை யுற்று), என் செயல் அழிந்து அழிந்து அழிய - நான் செய்கிறேன் என்னும் எண்ணத்துடன் செய்யும் செயல்கள் நாளடைவில் முற்றிலும் அழியப்பெறுமாறும், (சொல்லறச் சும்மா இருக்கும் வண்ணம்), மெய் சிந்தை வர - உண்மை அறிவு உண்டாகும் வண்ணம், என்று நின் தெரிசனை படுவேனோ - என்றைக்குத் தேவரீருடைய சொரூபத்தைக் கண்டு அறிவேனோ?

(வி - ரை) ஆசைகளின் வழியே மனத்தை இழுத்துச் செல்லும் பஞ்சேந்திரியங்களின் அதிகாரத்தை அழித்து, மனம் பதைப்பற்று நிற்க, சுகதுக்கங்களை ஒழித்து, எந்நாளும் துன்பக் கலப்பில்லாத இன்பத்தையே தருவதான குமரன் தாள் தொழுதலில் அன்புடன் அமர்ந்து, அடியவர் பகையை அழிக்கும் அவனது பாத மலர்களின் பெருமையை வாயாரப்பாடி, அவைகளைப்பற்றிச் சிந்தித்து, ஆன்மாக்களின் மீது பேரன்பு வாய்ந்த அப்பெருமான் ஆன்மாக்கள் தம்மை அடையாவண்ணம் தடுக்கும் அகங்காரம் முதலிய துர்க்குணங்களை முன்பு தாம் சூரபத்மன் முதலாயினோரை அழித்தவண்ணமே அழிப்பதற்காகச் சதாகாலமும் போர்க்கோலத்துடன் மயிலின்மீது அமர்ந்திருக்கிற உண்மையைப் பையப் பைய உணர்ந்து நல்லுணர்ச்சி பெற்று, அறிவின் சொரூபமாகிய முருகனது பாதமலர்களே உற்றபுகலிடமெனத் தெளிந்து, ஓயாது அலைந்து சஞ்சலமடைவதும் அடக்க முடியாததுமான மனத்தை யடக்கி, மனம் வாக்கு காயம் மூன்றும் ஒன்றுபட்டு இறைவன்பால் செல்லும்படிச்செய்து சொல்லறச் சும்மா இருந்தால், உலகத்தில் தோன்றும் பூதபேதங்களெல்லாம் ஒழிந்து முருகனது உண்மையான ஜோதி சொரூபம் எதிர்ப்படும். அப்படிப்பட்ட பாக்கியத்தைப் பெற்றவர்களே சிறந்த தபோதனர்களாலும் விடமுடியாத சிற்றின்ப ஆசையை ஒழிக்க முடியும்; அவர்களே காலத்தைக் கடந்திருப்பர். (உக)

*தந்ததன தந்ததன தந்ததன தந்ததன*
*தந்ததன தந்ததன—தந்ததான.*

கொங்கைகள்கு லுங்கவளை செங்கையில்வி ளங்கஇருள்
கொண்டலைய டைந்தகுழல் வண்டுபாடக்
கொஞ்சியவ னங்குயில்கள் பஞ்சநல்வ னங்கிளிகள்
கொஞ்சியதே னுங்குரல்கள் கெந்துபாயும்
வெங்கயல் மிரண்டவிழி அம்புலிய டைந்தநுதல்
விஞ்சையர்கள் தங்கள்மயல் கொண்டுமேலாய்

வெம்பிணியு மூன்றபவ சிந்தனைநி னைந்துனது
　　மின்சரண பைங்கழலொ 　　　　டண்டஆளாய் !

சங்கமுர சந்திமிலை துந்துமித தும்பவளை
　　தந்தனத னந்தவென 　　　　வந்தசூரர்

சங்கைகெட மண்டிதிகை யெங்கிலுமம டிந்துவிழ
　　தண்கடல்கொ ளுந்தநகை 　　　　கொண்டவேலா !

சங்கரனு கந்தபரி வின்குருவெ னுஞ்சுருதி
　　தங்களின்ம கிழ்ந்துருகு 　　　　மெங்கள்கோவே !

சந்திரமு கஞ்செயல்கொள் சுந்தரகு றம்பெணொடு
　　சம்புபுகழ் செந்தில்மகிழ் 　　　　தம்பிரானே !

(ப - ரை) சங்க முரசம் திமிலை துந்துமி ததும்ப - கூட்டமாயுள்ள பேரிகைகளும் பறைகளும் துந்துமிகளும் பேரொலி செய்யவும், வளை தந்தன தனந்த என—சங்கங்கள் தந்தன தனந்த எனத் தொனிக்கவும், வந்த சூரர் சங்கை கெட - போருக்குவந்த அசுரர்களது சேனைத்தொகை குறையுமாறு, மண்டி திகை எங்கிலும் மடிந்து விழ - அவர்கள் எல்லாத் திக்குகளிலும் இறந்து விழுமாறும், தண் கடல் கொளுந்த - குளிர்ந்த நீருள்ள சமுத்திரமானது தீப்பற்றி எரியுமாறும், நகை கொண்ட வேலா - புன்னகை செய்தருளிய வேலாயுதனே !, சங்கரன் உகந்த பரிவின் குரு எனும் - சிவபெருமான் மிகுந்த அன்பினால் குருவே என்று அழைத்த ஞானதேசிகனும், சுருதி தங்களின் மகிழ்ந்து உருகும் - நாதங்களினால் மகிழ்ச்சியடைந்து அன்பு பெருகுபவனுமான, எங்கள் கோவே - எங்கள் இறைவனே !, சந்திர முகம் செயல்கொள் சுந்தர குறம் பெ(ண்)ணொடு - சந்திரனையொத்த காந்தியுடைய முகத்தினால் பேரழகு வாய்ந்துள்ள குறமகளான வள்ளி நாயகியுடன், சம்பு புகழ் செந்தில் மகிழ் தம்பிரானே - ஆன்மாக்களுக்கு நன்மையே புரியும் சிவபெருமானால் புகழப்பெற்ற திருச்செந்தூர்ப்பதியில் களிப்புடன் அமர்ந்திருக்கும் நாதனே !, கொங்கைகள் குலுங்க - தனபாரங்கள் குலுங்கவும், வளை செம் கையில் விளங்க - வளைகள் அழகிய கைகளில் பிரகாசிக்கவும், இருள் கொண்டல் (ஐ - சாரியை) அடைந்த குழல் வண்டு பாட - கரிய மேகம் பணியும் கூந்தலில் (அணிந்துள்ள மலர்களினூடே) வண்டுகள் பாடவும்பெற்று, கொஞ்சிய வனம் குயில்கள் - இனிமையாகக் கூவுகிறவைகளும் சோலைகளில் வசிப்பவைகளுமான குயில்களும், நல் பஞ்ச வனம் கிளிகள் – நல்ல பஞ்ச வர்ணக் கிளிகளும், கொஞ்சியது எனும் குரல்கள் - இனிமையாகக் கூவிப்பேசின என்று சொல்லும்படி இனிமை வாய்ந்துள்ள குரல்களும், கெந்து பாயும் வெம் கயல்

மிரண்ட விழி - வெளிந்துபாயும் கயல் மீன்களை ஒத்தவைகளாய்ப் பயந்ததுபோல் சஞ்சரிக்கும் இயல்புடைய கண்களும், அம்புலி அடைந்த நுதல் - (பிறைச்)சந்திரன் பணியும் புருவங்களும் (வாய்ந்துள்ள), விஞ்சையர்கள் தங்கள் மயல் கொண்டு - மாயக்காரிகளான பெண்களின்மீது ஆசையான மயக்கம் கொண்டு, மேலாய் - அதன்பிறகு, வெம் பிணி உழன்ற - கொடிய நோய்களினால் அலைவுற்றவனும், பவ சிந்தனை - பிறவியெனும் சமுத்திரத்தில் அலைபவனுமான அடியேனை, நினைந்து - ஒரு பொருட்டாக மதித்து, உனது மின் சரண பைம் கழலொடு - நினது ஒளிபொருந்திய பாதங்களில் அணிந்துள்ள பைம்பொன்னாற் செய்த கழல்களுடன், அண்ட ஆளாய் - அடியேன் பொருந்தியிருக்கும்படி அடியேனை ஆட்கொண்டருளவேண்டும்.

(வி - ரை) மும்மலங்களின் சொரூபங்களான திரிபுரங்களை எரிக்குங்கால் புன்னகை செய்தருளிய சிவபெருமானது செல்வப் புதல்வரான முருகப்பெருமானும் அகங்கார சொரூபியான சூரபதுமன் போர் செய்யும்போது ஒரு முறை அவனுடைய அளவில்லாத சேனை சமுத்திரத்தைச் சிரிப்பினாலேயே அழித்தருளினார். (கூ0)

தனத்தத் தந்தனந் தனத்தத் தந்தனந்
தனத்தத் தந்தனந்—தனதான.

நிதிக்குப் பிங்கலன் பதத்துக் கிந்திரன்
நிறத்திற் கந்தனென் றினைவோரை
நிலத்திற் றன்பெரும் பசிக்குத் தஞ்சமென்
றரற்றித் துன்பநெஞ் சினில்நாளும்
புதுச்சொற் சங்கமொன் றிசைத்துச் சங்கடம்
புகட்டிக் கொண்டிடம் பழிமாயும்
புலத்திற் சஞ்சலங் குலைத்திட் டின்பதம்
புணர்க்கைக் கன்புதந் தருள்வாயே!
மதித்துத் திண்புரஞ் சிரித்துக் கொன்றிடும்
மறத்திற் றந்தைமன் றினிலாடி
மழுக்கைக் கொண்டசங் கரர்க்குச் சென்றுவண்
டமிழ்ச்சொற் சந்தமொன் றருள்வோனே!
குதித்துக் குன்றிடந் தலைத்துச் செம்பொனுங்
கொழித்துக் கொண்ட செந் திலின்வாழ்வே!

குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே!

(ப - ரை) மதித்து - தம்மால் அழிக்கத்தக்கவைகளென்று மதித்து, திண் புரம் - வலிமை பொருந்திய மும்மலங்களின் சொரூபங்களான திரி புரங்களை, சிரித்து கொன்றிடும் மறத்து (இல் - சாரியை) தந்தை - புன்னகை செய்து அழித்தவரும் சினம் அற்றவருமான உலகத்தின் தந்தையும், மன்றினில் ஆடி - (அகங்காரம் முதலிய துர்க்குணங்கள் அழிந்து) வெட்ட வெளியாகவுள்ள அடியவர் அகத்தில் தாண்டவம் ஆடுபவரும், மழு கைக்கொண்ட சங்கரர்க்கு சென்று - மழுவைக்கையில் தரித்துக்கொண் டுள்ளவருமான சிவபெருமானுக்குக் குருவாகச் சென்று, வண் தமிழ்ச்சொல் சந்தம் ஒன்று அருள்வோனே - வளமை வாய்ந்த தமிழ்மொழியில் வேதசாரமான ஒரு உண்மைப்பொருளை உபதேசித்தருளிய வனே!, குதித்து குன்று இடந்து அலைத்து - அலைகள் தாவி மோதி (கரையிலுள்ள) குன்றுகளைப்பிளந்து கலக்கி, செம் பொன் (உம் - சாரியை) கொழித்துக் கொண்ட - சிவந்த பொன்னைக் கொழித்தெடுத்துக்கொள்ளும், செந்திலின் வாழ்வே - திருச்செந்திற்பதியின் வாழ்வுக்குக் காரணமானவனே! குற பொன் கொம்பை - வேடர் குலத்தில் வளர்ந்தவரும் அழகிய மரக்கொம்பை யொத்தவருமான வள்ளிநாயகியை, முன் - ஒரு காலத்தில், புனத்தில் - தினைப்புனத்தில் செம் கரம் குவித்து கும்பிடும் பெருமாளே - நினது அழகிய கைகளைக் குவித்துக் கும்பிட்டு வணங்கிய பெரியோனே!, நிதிக்கு பிங்கலன் - செல்வத்தைப் பார்த்தாலோ தாங்களே குபேரன், பதத்துக்கு இந்திரன் - தங்கள் பதவியைக் கவனித்தால் தாங்கள் தேவேந்திரனுக்குச் சமானமானவர், நிறத்தில் கந்தன் - குணத்தைப் பார்த்தாலோ தாங்களே கந்தப்பெருமான், என்று-என்று கூறி இனேவோரை - (ஏழைகளைக்கண்டு) இரங்குகிறவர்களை, நிலத்தில் தன் பெரும் பசிக்கு தஞ்சம் என்று அரற்றி - பூவுலகில் தனது மிகுந்த பசியைத் தீர்ப்பதற்கு அவர்களே புகலிடமென்று பிதற்றி, துன்ப நெஞ்சினில் - எப்போதும் துன்படையும் மனத்தினால் தூண்டப்பட்டு, நாளும் - தினந்தோறும், புது சொல் சங்கம் ஒன்று இசைத்து - புதிது புதிதான சொற்களின் தொகை ஒன்றைப் பொருத்தமாக அமைத்து, சங்கடம் புகட்டிக்கொண்டு - தானாகவே வருத்தத்தை உண்டுபண்ணிக்கொண்டு, உடம்பு அழிமாயும் புலத்தில் - சரீரம் நிலை குலைந்து அழியும்படி செய்து கொள்ளும் சமயத்தில், சஞ்சலம் குலைத்திட்டு - அடியேனது மனத்திலுள்ள சஞ்சலங்களை அழித்து, உன் பதம் புணர்க்கைக்கு - நினது பாத மலர்களில் வந்து சேர்வதற்கு அவசியமான, அன்பு - அன்பை, தந்து அருள்வாயே - அடியேனுக்கு நின்பால் தந்தருளவேண்டும்.

(வி - ரை) மனிதர்களேயன்றித் தேவர்களும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் பொருந்தியவர்களாயும், அவைகளை அகற்றிக் கொள்

ளும் திறனற்றவர்களாயும் இருந்ததைக்கண்ட சிவபெருமான் அவர்கள் உய்யும்பொருட்டுத் தாமே மும்மலங்களையும் அழிக்கவேண்டுமென்றும், ஞானத்தின் உறைவிடமான தம்மாலன்றி வேறெவராலும் அவைகளை அழிக்க முடியாதென்றும் தீர்மானித்து, அந்த மும்மலங்களுக்கும் அறியாமையே காரணமாயிருந்ததை உன்னிப் புன்னகை செய்தார். உடனே அவைகள் அழிந்தன. அவைகளை அழிக்குங்கால் சாந்த சொரூபியான சிவபெருமான் சினங்கொண்டார் என்று சொல்வது பேதைமையாகும். அவ்வுண்மையையே சுவாமிகள் 'மறத்தில் தந்தை' என்னும் மொழித்தொடரால் விளக்கியருளினர். முருகப்பெருமான் குருவாக அமர்ந்து வேதத்தின் சாரமான பிரணவப் பொருளைச் சிவபெருமானுக்கு உபதேசித்தது இனிய தமிழ்மொழியில் என்று இப்பாடலினால் தோன்றுகிறது. 390-ம் பக்கத்தில் உள்ள 'அறிவழிய' என்று தொடங்கும் பாடலினாலும் முருகப்பெருமான் அகத்தியமாமுனிவருக்குத் தமிழ்மொழியிலேயே பிரணவப்பொருளை உபதேசித்ததாகத் தோன்றுகிறது. இது ஆராய்தக்கது. ()

தனதனன தந்த தனதனன தந்த
தனதனன தந்த—தனதான.

பனைகனக மைந்தர் தமதழகு பெண்டிர்
வலிமைகுல நின்ற நிலையூர்பேர்
வளரிளமை தஞ்ச முனைபுனைவ ளங்கள்
வரிசைதம ரென்று வருமாயக்
கனவுநிலை யின்ப மதனையென தென்று
கருதிவிழி யின்ப மடவார்தம்
கலவிமயல் கொண்டு பலவுடல்பு ணர்ந்து
கருவில்விழு கின்ற தியல்போதான்?
நினையுநின தன்பர் பழவினைக ளைந்து
நெடுவரைபி ளந்த கதிர்வேலா!
நிலமுதல் விளங்கு நலமருவு செந்தில்
நிலைபெறஇ ருந்த முருகோனே!
புனைமலர்பு னைந்த புனமறம டந்தை
புளகஇரு கொங்கை புணர்மார்பா!
பொருதுடனெ திர்ந்த நிருதர்மகு டங்கள்
பொடிபடந டந்த பெருமாளே!

(ப - ரை) நினையு(ம்) நினது அன்பர் - நின்னைச் சிந்திக்கும் நினது அன்பர்களுடைய, பழவினை களைந்து - முற்பிறப்புக்களில் செய்த வினைகளின் பயனைத் தொலைத்து, நெடுவரை பிளந்த - உயர்ந்த மலையான கிரௌஞ்சத்தைப் பிளந்தருளிய, கதிர்வேலா - ஒளிவீசும் வேலாயுதத்தை யுடையவனே !, நிலம் முதல் விளங்கு நலம் மருவு செந்தில் - பூலோகத்தில் முதன்மையான தலமாக விளங்கும்படிச் செய்யும் மேன்மை பொருந்திய திருச்செந்தூரில், நிலைபெற இருந்த முருகோனே - நிலைமையாக எழுந்தருளியிருக்கும் ஞானசொரூபியே !, புனை மலர் புனைந்த - அழகிய மலர் மாலையை அணிந்துள்ளவரும், புன மறமடந்தை - தினைப்புனத்தைக் காப்பவரும் வேடுவர் குலத்தில் வளர்ந்த பெண்ணுமான வள்ளிநாயகியின், புளக இரு கொங்கை - ஆசையினால் புளகித்திருக்கும் இரு தனபாரங்களும், புணர் மார்பா - வந்து பொருந்தும் மார்பையுடையவனே!, பொருது - போர்செய்து, உடன் - கணநேரத்தில், எதிர்ந்த நிருதர் மகுடங்கள் - நின்னை எதிர்த்த அசுரர்களது கிரீடங்கள், பொடிபட - பொடியாகும் வண்ணம், நடந்த பெருமாளே - (வீரத்துடன்) சென்ற பெரியோனே !, மனை கனக மைந்தர் தமது அழகு பெண்டிர் - வீடு செல்வம் மக்கள் தமது அழகிய மனைவிமார்கள், வலிமை - வல்லமை, குலம் - தாம் உதித்தகுலம், நின்ற நிலை - தாம் அமர்ந்துள்ள பதவி, ஊர் - தமது ஊர், பேர் - கீர்த்தி, வளர் இளமை - மிகுதியான இளமை, தஞ்சம் - பெருமை, முனை புனை வளங்கள் - போர்செய்வதற்குரிய (படை முதலிய) செல்வங்கள், வரிசை தமர் - மேன்மை பொருந்திய சுற்றத்தவர்கள், என்று வரும் மாய கனவு நிலை - என்பவை ஒன்றன்மேலொன்றாகத் தோன்றும் மாயமான கனவில் பொருந்தியிருக்கும் நிலைமையில், இன்பம் அதனை - (உதிக்கும்) இன்பத்தை, எனது என்று கருதி - எனக்கு உரியதாக மதித்து, விழி இன்ப மடவார்தம் - காண்போர் மனத்தில் இன்பத்தை ஊட்டும் அழகு வாய்ந்த பெண்களின், கலவி மயல் கொண்டு - கலவியில் ஆசைகொண்டு, பல உடல் புணர்ந்து - அநேக சரீரங்களை ஏற்று, (பல ஜன்மங்கள் எடுத்து), கருவில் விழுகின்றது இயல்போதான் - பிறவிக்கடலில் மீண்டும் மீண்டும் வீழ்வது ஆன்மாவின் உண்மையான இயற்கை யாகுமோ ?

(வி - ரை) முருகப்பெருமான் தம்மை அன்புடன் சிந்திக்கும் அடியவர்கள் தமது பாதமலர்களை அடையா வண்ணம் தடுக்கும் விலங்காகிய முந்தை வினைப் பயனை முற்றிலும் ஒழித்துவிடும் தயாளகுண முடையவராதலாலும், முந்தை வினைப்பயனே ஆன்மாக்களை மூவாசைகளில் சிக்கி மயக்கமுறச் செய்கிறபடியால் அவைகளை அழிப்பதற்காக நிலைமையாகப் போர்க்கோலங்கொண்டு திருச்செந்தூரில் அமர்ந்திருக்கிறாராதலாலும், சுவாமிகள் அப்பெருமானை விளித்து, "பசுவானது பாசத்தை அகற்றிக்கொண்டு பதியை அடைய முயலாமல், மீண்டும் மீண்டும் பிறவியில் புகுத்தும் கருவினைக்குக் காரணமான பெண் காதலில் உழன்று

அதன் பயனாகப் பலதேகங்களை ஏற்றுப் பலமுறை பிறந்து பிறவிக்கடலில் பன்முறை வீழ்வது பசுவுக்கு இயல்பாக வுள்ள நெறியாகுமோ?" என்று வினவுகிறார். (௩௨)

தந்த தனன தந்த தனன
தந்த தனன—தனதான.

மங்கை சிறுவர் தங்கள் கிளைஞர்
வந்து கதற வுடல்தீயின்
மண்டி யெரிய விண்டு புனலில்
வஞ்ச மொழிய விழஆவி
வெங்கண் மறலி தன்கை மருவி
வெம்பி யிடறு மொருபாச
விஞ்சை விளையு மன்று னடிமை
வென்றி யடிகள் தொழவாராய்!
சிங்க முழுவை தங்கு மடவி
சென்று மறமி னுடன்வாழ்வாய்!
சிந்தை மகிழ அன்பர் புகழும்
செந்தி லுறையு முருகோனே!
எங்கு மிலகு திங்கள் கமல
மென்று புகலு முகமாதர்
இன்பம் விளைய அன்பி னணையு
மென்று மிளைய பெருமாளே!

(ப - ரை) சிங்கம் உழுவை தங்கும் அடவி சென்று - சிங்கமும் புலியும் வசிக்கும் காட்டுக்கு (நினது நாயகியைத் தேடி)ச் சென்று, மறமின் உடன் வாழ்வாய் - வேடுவர் குலத்தில் வளர்ந்தவரும் மின்னற் கொடியையொத்த இடையை யுடையவருமான வள்ளி நாயகியினுடன் வாழ்ந்தவனே!, சிந்தை மகிழ அன்பர் புகழு(ம்) செந்தில் உறையும் முருகோனே - மனமகிழ்ச்சியினால் மெய்யன்பர்கள் புகழும் திருச்செந்திற்பதியில் எழுந்தருளியிருக்கும் ஞான சொரூபியே!, எங்கும் இலகு திங்கள் - உலகெங்கும் தனது ஒளியை வீசும் சந்திரன் என்றும், கமலம் என்று - தாமரை மலர் என்றும், புகலும் முக மாதர் - சொல்லும்படி ஒளியும்

அழகும் வாய்ந்துள்ள) முகத்தையுடைய பெண்களான தெய்வயானையம்மை வள்ளிநாயகி (இருவருக்கும்), இன்பம் விளைய - இன்பம் உண்டாகும் வண்ணம், அன்பின் அணையும் - அன்பினால் அவர்களை அணைந்துகொள்ளும், என்றும் இளைய பெருமாளே - என்றும் இளமை மாறாமல் இருக்கும் பெரியோனே!, மங்கை சிறுவர் தங்கள் கிளைஞர் - மனைவியும் இளமைப்பருவமுள்ள மக்களும் சுற்றத்தவர்களும், வந்து கதற - உடன் வந்து புலம்பி அழ, உடல் தீயில் மண்டி எரிய - தேகமானது தீயில் தீவிரமாய் எரியுமாறும், புனல் இல் வஞ்சம் ஒழிய - நீர்மையில்லாத (கருணையில்லாத) வஞ்சகத்தன்மை ஒழியுமாறும், ஆவி விண்டு விழ - உயிரானது (தேகத்தைவிட்டுப்) பிரிந்து விழும் வண்ணம், வெங்கண் மறலி தன் கை மருவி - கொடிய யமனது கையில் பொருந்தி நின்று, வெம்பி இடறும் ஒரு பாச விஞ்சை - கோபத்துடன் வந்து தடுத்து இழுக்கும் ஒரு யமபாசம் மீறுதல் (என்னும் ஆபத்து), விளையும் அன்று - சம்பவிக்கும் நாளில், உன் அடிமை - நினது அடிமையாகிய நான், வென்றி அடிகள் தொழ வாராய் - (சரண்புகுந்தவரது பகைவர்களைத் தொலைத்து) வெற்றியடையும் நினது பாதமலர்களை வணங்கும் வண்ணம் (அடியேன் முன்னே) வந்தருள வேண்டும்.

(வி - ரை) அடியவர்களுடைய பிணிகளைத் தொலைத்துத் துன்பக்கலப்பில்லாத இன்பத்திலிருத்துபவை முருகப் பெருமானது பாதமலர்களே யாதலின், அவைகளைத் தொழும் வண்ணம் தம் முன்னே தோன்றியருளும்படி சுவாமிகள் அப்பெருமானைப் பிரார்த்திக்கிறார். (கூகூ)

தந்த தந்தன தானா தானா
தந்த தந்தன தானா தானா
தந்த தந்தன தானா தானா—தனதானா.

அங்கை மென்குழ லாய்வார் போலே
சந்தி நின்றய லோடே போவா
ரன்பு கொண்டிட நீரோ போறீ ரறியீரோ

அன்று வந்தொரு நாள்நீர் போனீர்
பின்பு கண்டறி யோநா மீதே
அன்று மின்றுமொர் போதோ போகா துயில்வாரா

தெங்க ளந்தரம் வேறா ரோர்வார்
பண்டு தந்தது போதா தோமே
லின்று தந்துற வோதா னீதே னிதுபோதா

திங்கு நின்றதென் வீடே வாரீ
றென்றி ணங்கிகள் மாயா லீலா
இன்ப சிங்கியில் வீணே வீழா தருள்வாயே !

மங்கு லின்புறு வானாய் வானா
டன்ற ரும்பிய காலாய் நீள்கால்
மண்டு றும்பகை நீறா வீறா எரிதீயாய்

வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்
அம்ப ரம்புனை பாராய் பாரேழ்
மண்ட லம்புகழ் நீயாய் நானாய் மலரோனாய்

உங்கள் சங்கரர் தாமாய் நாமார்
அண்ட பந்திகள் தாமாய் வானாய்
ஒன்றி னுங்கடை தோயா மாயோன் மருகோனே !

ஒண்த டம்பொழில் நீடூர் கோடூர்
செந்தி லம்பதி வாழ்வே வாழ்வோர்
உண்ட நெஞ்சறி தேனே வானோர் பெருமாளே !

(ப - ரை) மங்குல் இன்பு உறு வான் ஆய் - மேகமானது இன்பத்துடன் தங்கும் ஆகாயமாக ஆகி, வானூடு அன்று அரும்பிய கால் ஆய் - ஆகாயத்தினிடத்தே அப்போது தான் உதித்த காற்றாக (வாயுவாக) ஆகி, நீள் கால் மண்டு - வலிய காற்றினால் தாக்கப்பெறுவதும், உறும் பகை நீறா(க) வீறா(ய்) எரி தீ ஆய் - தன்னை எதிர்க்கும் பகையைச் சாம்பராகும்படி வலிமையுடன் எரிக்கும் அக்கினியாக ஆகி, இரைந்து வந்து எழு(ம்) நீர் ஆய் - கோஷித்து வந்து கிளம்பும் நீராக ஆகி, நீர் சூழ் அம்பரம் புனை பார் ஆய் - நீர் நிறைந்துள்ள சமுத்திரத்தை அணிந்துள்ள பூமியாக ஆகி, பார் ஏழ் மண்டலம் புகழ் நீ ஆய் - பூமி முதலிய மேலுலகங்கள் ஏழும் துதிக்கும் கடவுளான நீயாக ஆகி, நான் ஆய் - நினது அடிமையாகிய நானாக ஆகி, மலரோன் ஆய் - (திருமாலின் திருநாபித்) தாமரைமலரில் உதித்த பிரமதேவராக ஆகி, உங்கள் சங்கரர் தாம் ஆய் - நினது தந்தையான சிவபெருமானாக ஆகி, நாம(ம்) ஆர் அண்ட பந்திகள் தாம் ஆய் - புகழ் பெற்ற உலக வரிசைகளாக ஆகி, வான் ஆய் - (சகலவுலகங்களையும் காக்கும்) மழையாக ஆகி, ஒன்றினும் கடை தோயா - (அவ்வாறு தோன்றிய பொருள்களுள்) ஒன்றிலும் தமது முடிவான உறைவிடமாக அமராத, மாயோன் மருகோனே - திருமாலின் மருகனே !, ஒண் தடம் பொழில் நீடு ஊர் - தடாகங்

களும் சோலைகளும் மிகுதியாகவுள்ள புராதன தலமும், கோடு ஊர் - கடலின் கரையிலுள்ள தலமுமான, செந்தில் அம் பதி வாழ்வே - திருச்செந்தூர் என்னும் அழகிய தலத்தில் எழுந்தருளி யிருப்பவனே !, வாழ்வோர் உண்ட நெஞ்சு அறி தேனே-அத்தலத்தில் வாழ்பவர்களான நினதுகருணையை அநுபவித்தவர்களுடைய மனத்துக்கே தெரியும் (இனிய) தேனே !, வானோர் பெருமாளே - தேவர்கள் நாயகனே !, அம் கை மென் குழல் ஆய்வார் போலே - அழகிய கைகளினால் தமது மென்மை பொருந்திய கூந்தலை ஆய்ந்துகொள்பவர்கள்போல நடித்து, சந்தி நின்று - பல வழிகள் கூடுமிடத்தில் நின்று, அயலோடே போவார் அன்பு கொண்டிட - சமீபத்தில் நடந்து போகிறவர்கள் தம்மீது ஆசை கொள்ளும்படி, நீரோ போறீர் - தாங்களா போகிறீர்கள் ?, அறியீரோ - தங்களுக்கு என்னைத் தெரியவில்லையோ ?, அன்று ஒரு நாள் வந்து நீர் போனீர் - தாங்கள் அன்று ஒருநாள் (அடியாளிடம்) வந்துவிட்டுப் போனீர்கள், பின்பு கண்டு அறியோம் நாம் - அதற்குப் பிறகு நாம் ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்ளவில்லை, மீது (ஏ - அசை) அன்றும் இன்றும் ஓர் போதோ போகா - அதன்மேல் அன்றுமுதல் இன்று வரையில் அடியாளுக்குப் பொழுதே போகவில்லை, துயில் வாராது - தூக்கம் வரவுமில்லை, எங்கள் அந்தரம் வேறு ஆர் ஓர்வார் - (விலைமாதர்களாகிய) எங்களுடைய உண்மையான கருத்தை (தங்களைத் தவிர) வேறு யார் அறிவார்கள் ?, பண்டு தந்தது போதாதோ - (கையிற் பொருளில்லை என்கிறீர்களா?) முன்பு தாங்கள் கொடுத்தது போதாதோ ?, மேல் இன்று தந்து உறவோ (தான் - அசை) - அதற்குமேல் இன்றைக்கும் தாங்கள் பொருள் கொடுப்பதனலா (தங்களுக்கும் அடியாளுக்கும்) சிநேகம் உண்டாகப்போகிறது ?, ஈது ஏன் - இப்படித் தாங்கள் சொல்வானேன் ?, இது போதாது - (தங்களைத் தெருவில் சந்தித்து) இப்படிப் பேசியது போதாது, இங்கு நின்றது என் - இங்கு சந்தியில் தாங்கள் நிற்பானேன்?, வீடே வாரீர் - (அடியாளுடைய) வீட்டுக்கு வாருங்கள், என்று - என்று (விநயத்துடன்) பேசி, இணங்கிகள் - (தெருவில் செல்பவர்களை) தங்கள் இஷ்டத்துக்கு உடன்படச் செய்பவர்க(ளான விலைமாதர்க)ளுடைய, மாயா லீலா இன்ப சிங்கியில் - மாயம் பொருந்திய மதனலீலைகளினல் உண்டாகும் சிற்றின்பத்தின்மீது ஆசை கொள்ளும் காமநோயில், வீணே வீழாது அருள்வாயே - அடியேன் எனது பிறவி பாழாகும்படி வீழாமலிருக்கும் வண்ணம் அருள் புரிய வேண்டும்.

(வி - ரை) இப்பாடலில் திருமால் விசுவரூபம் எடுத்துக்கொண்டது வருணிக்கப்பட்டிருக்கிறது. திருமால், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களாகவும், சச்சிதாநந்த சொரூபியான முருகப்பெருமானகவும், அப்பெருமானது அடியவராகவும், சங்கரராகவும், சகல அண்டங்களாகவும், அவைகளைச் செழிக்கச் செய்து காக்கும் மழையாகவும் தோன்றியும், அவைகளுக்குள்

தாம் அடங்காமல் அவைகளைக் கடந்து நின்றாராதலின், "ஒன்றினுங் கடைதோயா" என்றும், இவ்விந்தைச் செயலைச்செய்ய வல்லது பரமமாயையே யாதலின், "மாயோன்" என்றும் கூறப்பட்டது. ஆதி முதல்வரான சிவபெருமானாகவும், அச்சிவபெருமானது பழைய வடிவமேயான முருகப்பெருமானாகவும் ஆவது யாவர்க்கேனும் சாத்தியமாவெனின், சிவபெருமானிடத்து மெய்யன்பு பாராட்டுபவருள் ஒப்புயர்வற்றவரான திருமாலுக்கு அப்பெருமானது திருவுருவைப் பெறுதலான சிவசாரூப்பிய பதவியை யடைதல் அரிதல்ல; அன்றியும், அப்பெருமானது அருளினால் பரமமாயையே சகல வுலகங்களையும் தோன்றச் செய்ததனால், இச்செயல் பரமமாயையின் சொரூபியான திருமாலுக்கு அரிதல்ல. கோடு - நீர்க்கரை. அந்தரம் - அந்தரங்கம் என்பதன் சிதைவு. திருச்செந்தூரில் வாழ்வோரது பெருமை "வாழ்வோர் உண்ட நெஞ்சறி தேனே" என்னும் மொழித்தொடரினால் எளிதில் விளங்கும். (௩௪)

தனதன தனந்த தந்தன தனதன தனந்த தந்தன
தனதன தனந்த தந்தன—தனதான.

இருகுழை யெறிந்த கெண்டைகள் ஒருகுமி ழடர்ந்து வந்திட
இணைசிலை நெரிந்தெ ழுந்திட அணைமீதே

இருளள கபந்தி வஞ்சியி னிருகலை யுடன்கு லைந்திட
இதழமு தருந்து சிங்கியின் மனமாய

முருகொடு கலந்த சந்தன அளறுப டுகுங்கு மங்கமழ்
முலைமுக டுகொண்டெ ழுந்தொரு முருகார

முழுமதி புரிந்த சிந்துர அரிவைய ருடன்க லந்திடு
முகடியு நலம்பி றந்திட அருள்வாயே!

எரிவிட நிமிர்ந்த குஞ்சியி னிலவொடு மெழுந்த கங்கையு
மிதழியொ டணிந்த சங்கரர் களிகூரும்

இமவரை தருங்க ருங்குயில் மரகத நிறந்த ருங்கிளி
யெனதுயி ரெனுந்த்ரி யம்பகி பெருவாழ்வே!

அரைவட மலம்பு கிண்கிணி பரிபுர நெருங்கு தண்டைக
ளணிமணி சதங்கை கொஞ்சிட மயில்மேலே

அகமகிழ் வுகொண்டு சந்ததம் வருகும ரமுன்றி லின்புறம்
அலைபொரு தசெந்தில் தங்கிய பெருமாளே!

(ப - ரை) எரி விட - அக்கினியைப்போல (சிவந்த) ஒளி வீசி, நிமிர்ந்த - உயர்ந்த முடியாகவுள்ள, குஞ்சியில் - தலைமயிரில், நிலவொடு (உம் - அசை) எழுந்த கங்கையும் இதழியொடு - சந்திரனோடு பாய்கின்ற கங்கையையும் கொன்றைமலர் மாலையையும், அணிந்த சங்கரர் - அணிந்து கொண்டுள்ள சிவ பெருமான், களிகூரும்-(கண்டு) மனமகிழும் (தேவியும்), இமவரை தரும் - இமயமலை அரசனது புதல்வியாக அவதரித்தவரும், கரும் குயில் - கருநிறமுள்ள குயிலைப்போல் இனிமையான குரலுடையவரும், மரகத நிறம் தரும் - பச்சை நிறம் பொருந்திய திருமேனியை யுடையவரும், கிளி-கிளியைப்போல் இனிமை யாகப் பேசுபவரும், எனது உயிர் எனும் - எனது உயிர் என்று சொல்லப்பெறத் தகுந்தவரும், த்ரியம்பகி - மூன்று கண்களை யுடையவருமான பார்வதி தேவி யார் (பெற்ற), பெரு வாழ்வே - பெரும் பாக்கியமே!, அரை வடம் அலம்பு கிண்கிணி - அரையிற் கட்டியுள்ள கோவைகளில் பொருந்தி அதிரும் சதங்கை களும், நெருங்கு பரிபுரம் தண்டைகள்-நெருக்கமாக அணிந்துள்ள நூபுரங்களும் தண்டைகளும், அணிமணி சதங்கை - (மற்றும்) அணிந்துள்ள அழகிய சதங்கை களும், கொஞ்சிட -இனிமையாக ஒலிக்கும் வண்ணம், அகமகிழ்வு கொண்டு - மனமகிழ்ந்து, சந்ததம் - எப்போதும், மயில் மேலே வரு குமர - மயிலின்மீதுஏறி வரும் குமரனே!, முன்றிலின் புறம் - திருக்கோயிலின் முன்புறத்தில், அலை பொருத - அலை மோதப்பெறும், செந்தில் - திருச்செந்தூரில், தங்கிய பெரு மாளே - நிலைமையாக எழுந்தருளியிருக்கும் பெரியோனே! இரு குழை எறிந்த கெண்டைகள் - இரண்டு (காதுகளில் அணிந்துள்ள) குழைகளின்மீது பாய்ந்து மோதும் கயல்மீன்களை யொத்த கண்கள், ஒரு குமிழ் அடர்ந்து வந்திட - குவிந்து தமதுபார்வையினால்-போருக்கு வரவும், இணை சிலை நெரிந்து எழுந்திட- வில்லையொத்த இரண்டு புருவங்களும் நெரிந்து உயரவும், அணை மீது (ஏ- அசை) படுக்கையின்மீது, இருள் அளக பந்தி - (கொண்டையாக விருந்த) கூந்தலின் கூட்டமானது, வஞ்சியின் இரு கலையுடன் குலைந்திட - கொடியையொத்த இடையையுடைய பெண்ணின் சிறந்த ஆடையுடன் கலைந்து போகவும், (கலவி லீலைகளைச் செய்து), இதழ் அமுது அருந்து சிங்கியின் - (மகளிர்) உதடுகளி னின்றும் பெருகும் அமுதத்தைப் பருகவேண்டுமென்னும் ஆசையைத் தரும் காம நோயினால், மனம் மாய - மனமானது சோர்வுறப்பெற்று, முருகொடு கலந்த சந்தன அளறு படு - வாசனைத் திரவியங்களுடன் கலந்த சந்தனக் குழம்பில் கலந்திருந்த, குங்குமம் கமழ் முலை - குங்குமத்தின் வாசனையை வீசும் தனபாரங் கள், முகடு கொண்டு எழுந்தொறும் - விரக தாபத்தினால் புளகித்து உயர்ந்து எழும்போதெல்லாம், முருகு ஆர - வாசனை எங்கும் பரவி நிறைய(ச்செய்பவரும்), முழு மதிபுரிந்த சிந்துர - பூரண சந்திரனது அழகுவாய்ந்த முகத்தையுடைய (வருமான), அரிவையருடன் கலந்திடும் - பெண்களுடன் கலவி செய்திடும், மூக டியும் நலம்பிறந்திட அருள்வாயே - மூதேவியான அடியேனுக்கும் நன்மை விளையு மாறு அருள் புரியவேண்டும்.

(வி - ரை) "நீலச் சிகண்டியி லேறும் பிரான் எந்த நேரத்திலும் கோலக் குறத்தியுடன் வருவான்" என்று சுவாமிகள் கூறியவாறு முருகப்பெருமான் தம்மை அன்புடன் வாவென்றழைக்கும் அடியவர்கள் முன்னே தோன்றி யருளு வார். ஒருவர் எப்படிப்பட்ட பாவியாயினும் அவர் அப்பெருமானிடம் மெய் யன்பு பாராட்டி அவரை வேண்டுவாராயின், அக்கருணாமூர்த்தி அவர் கேட்ட பொருளைக் கொடுத்தருளுவார். ஆன்மாக்களிடத்தில் பேரன்புடைய அம்மூர்த்தி அப்படி வருங்கால், பாவி செய்த பாவங்களைக் கருதாமல் தம்மிடத்துப்பூண்ட அன்பையே பெரிதாக மதித்து, அகமகிழ்வுடனும் நகைமுகத்துடனும் கருணை நோக்கத்துடனும் தோன்றுவார். இது நமது சுவாமிகள் துணிபு. 210-ம் பக்கத்தில் "சூரம்பை மலசலம்" என்று தொடங்கும் பாடலையும் உரை யையும் பார்க்க. (௩௫)

தானா தந்தத் தானா தந்தத்
தானா தந்தத்—தனதான.

ஓரா தொன்றைப் பாரா தந்தத்
தோடே வந்திட் டுயிர்சோர

ஊடா நன்றற் றார்போல் நின்றெட்
டாமால் தந்திட் டுழல்மாதர்

கூரா வன்பிற் சோரா நின்றக்
கோயா நின்றுட் குலையாதே

கோடார் செம்பொற் றோளா நின்சொற்
கோடா தென்கைக் கருள்தாராய்!

தோரா வென்றிப் போரா யன்றற்
றோளா குன்றைத் தொளையாடீ!

சூதா யெண்டிக் கேயா வஞ்சச்
சூர்மா அஞ்சப் பொரும்வேலா!

சீரார் கொன்றைத் தார்மார் பொன்றச்
சேவே றெந்தைக் கினியோனே!

தேனே யன்பர்க் கேயா மின்சொற்
சேயே செந்திற் பெருமாளே!

(ப - ரை) தோரு வென்றி போரா - தோல்வியே யடையாமல் எந்நாளும் வெற்றியே யடைந்து போர் செய்பவனே !, மன்றல் தோளா - மிகுந்த வாசனை யுள்ள கலவைச்சாந்து பூசப்பெற்ற தோள்களையுடையவனே !, குன்றை தொளை யாடீ - கிரௌஞ்சம் என்னும் மலையைத் தொளை செய்தவனே !, சூதாய் எண் திக்கு வயா - மாயமாக எட்டுத் திக்குகளிலும் (வியாபித்துப்) பொருந்தி நின்றதும், வஞ்ச சூர்மா - வஞ்சக சுபாவமுள்ள சூரபதுமன் எடுத்துக்கொண்ட உருவமுமான மாமரமானது, அஞ்ச பொரும் வேலா - பயப்படும்படி போர்செய்த வேலாயுதனே !, சீர் ஆர் கொன்றை தார் மார்பு ஒன்ற - அழகு பொருந்திய கொன்றை மலர் மாலை மார்பின்மீது பொருந்தப்பெற்று, சே ஏறு - இடபத்தின்மீது ஏறி வரும், எந்தைக்கு இனியோனே - எமது தந்தையாகிய சிவபெருமான் மனத்தினில் இன்பத்தை யூட்டுபவனே !, தேனே - நின்னை யனுபவிப்பவர் மனத்தினில் தேனைப்போல் இனிய சுகத்தை யூட்டுபவனே !, அன்பர்க்கே ஆ(கு)ம் இன் சொல் சேயே - நின்னிடத்து மெய்யன்பு பாராட்டுகிறவர்களுக்கே கிடைக்கத் தக்க இனிய மொழிகளைப் பேசும் குமரனே ! செந்தில் பெருமாளே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே ! ஓராது - ஒன்றையும் ஆராய்ந்தறியாமலும், ஒன்றை பாராது - ஒன்றையும் கவனிக்காமலும், அந்தத்தோடே வந்திட்டு - அழகுடன் அணுகிவந்து, உயிர் சோர - ஆவி சோர்வடையும் வண்ணம், ஊடா(க) நன்று அற்றார் போல் நின்று - மனத்தினுள் நற்குணம் பொருந்தப் பெறுதவர்போல் நடந்துகொண்டு, எட்டா மால் - எல்லையறிய வொணுத மயக்கத்தை, தந்திட்டு உழல் மாதர் - உண்டாக்கி (விஷய சுகங்களில்) மயங்கி யலையும் பெண்களினிடத்தே, கூரா அன்பில் சோரா நின்று-பெருகும் அன்பினுல் மனச்சோர்வுற்று, அக்கு ஓயா நின்று - எலும்புக் கூட்டை ஆதாரமாகவுடைய தேகம் சோர்வடையப்பெற்று, உள் குலையாதே - மனம் பதருமல், கோடு ஆர் செம் பொன் தோளா - குன்றுகளை யொத்தவைகளும் சிவந்த பொன்னின் ஒளியை வீசுபவைகளுமான தோள்களை யுடையவனே ! நின் சொல் கோடாது என்கைக்கு - நீ சொன்ன சொல் தவறுது என்பதற்கு அத்தாட்சியாக, அருள் தாராய் - அடியேனுக்கு அருள் புரிவாயாக !

(வி -ரை) "உல்லாசனுகவும் நிராகுலனுகவும் யோக இதச் சல்லாப விநோதனுகவும்" உள்ள முருகப்பெருமான் தம்மிடத்து மெய்யன்பு பாராட்டும் அடியவர்களிடத்தில் இனிமையாகப் பேசியே அவர்களுக்கு மெய்ஞ்ஞானத்தை எளிதில் போதித்து விடுகிருர். அவ்வாறு அப்பெருமானிடத்தில் மெய்ஞ்ஞான உபதேசம் பெறுவது அவரது அன்பர்களுக்கே சாத்தியம் என்று இப்பாடலில் கூறப்பட்டிருக்கிறது.

" அஞ்சாதமை யாகிரி யாக்கையை
பஞ்சாடிய வேலவ னுர்க்கிய
லங்காகுவம் வாஇனி தாக்கையை ஒழியாமல்

வந்தோமிது வேகதி யாட்சியு
மிந்தாமயில் வாகனர் சீட்டிது
வந்தாளுவம் நாமென வீக்கிய சிவநீறும்"

என்ற விடத்துக் கூறியவாறு, மாயையின் சொரூபமான கிரௌஞ்சத்தைப் பிளந்த முருகப் பெருமான் தம்மைச் சரண் புகுந்தவர்களைத் தாம் ஆட்கொள்வது திண்ணமெனக் கூறியுள்ளார் போலும்! ஆதலினால்தான் சுவாமிகள் "நின் சொல் கோடாது என்கைக்கு அருள் தாராய்" என்றார். இக்கருத்துக் கீழே கண்ட பாடல்களிலும் அமைந்திருப்பதைக் காண்க.

"நஞ்சினைப் போலுமன வஞ்சகக் கோளர்களை
நம்புதற் றீதெனநி னைந்து நாயேன்
நண்புகப் பாதமதி லன்புறத் தேடியுனை
நங்களப் பாசரண மென்று கூறல்
உன்செவிக் கேறலை கொல் பெண்கள் மெற் பார்வையைகொல்
உன்சோலைத் தாழ்வு செய்து மிஞ்சுவாரார்?"

"வேண்டாமை யொன்றைய டைந்துள
மீண்டாறி நின்சர ணங்களில்
வீழ்ந்தாவல் கொண்டுந கன்பினை யுடையேனும்
வேந்தாக டம்பு புனைந்தருள்
சேந்தாச ரண்சர ணென்பது
வீண்போம தோன்றல வென்பதை யுணராதே?" (௩௪)

தனன தானனத் தனதன தனனத்
தந்தத் தந்தத்—தனதான.

குகர மேவுமெய்த் துறவினின் மறவாக்
கும்பிட் டுந்தித் தடமூழ்கிக்
குமுத வாயின்முற் றமுதினை நுகராக்
கொண்டற் கொண்டைக் குழலாரோ
டகரு தூளிகர்ப் புரதன இருகோட்
டன்புற் றின்பக் கடலூடே
அமிழு வேனைமெத் தெனவொரு கரைசேர்த்
தம்பொற் றண்டைக் கழல்தாராய்!

ககன கோளகைக் கணவிரு மளவாக்
கங்கைத் துங்கப் புனலாடும்

கமல வாதனற் களவிட முடியாக்
கம்பர்க் கொன்றைப் புகல்வோனே !

சிகர கோபுரத் தினுமதி ளினுமேற்
செம்பொற் கம்பத் தளமீதும்

தெருவி லேயுநித் திலமெறி யலைவாய்ச்
செந்திற் கந்தப் பெருமாளே !

(ப - ரை) ககன கோளகைக்கு அணவிரும் அளவா - ஆகாயத்தின் உச்சியில் பொருந்தும் வண்ணம் அதை யளாவிநிற்கும், கங்கை துங்க புனல் ஆடும் கமல ஆதனற்கு அளவிட முடியா - கங்காநதியின் பெருமை வாய்ந்த தீர்த்தத்தில் நீராடுபவரும் திருமாலின் திருநாபித் தாமரையில் அமர்ந்திருப்பவருமான பிரம தேவரால் அளவிட முடியாவண்ணம் (திருவருணையில் ஜோதியுருவமாய் நின்ற), கம்பர்க்கு ஒன்றை புகல்வோனே - ஏகாம்பரமூர்த்தியான சிவபெருமானுக்கு ஒப்புயர்வற்ற பொருளான பிரணவப்பொருளை உபதேசித்தவனே!, சிகர கோபுரத்தினும் மதிளினும் - சிகரங்கள் பொருந்திய கோபுரங்களிலும் மதில்களிலும், மேல் செம் பொன் கம்ப தள(ம்) மீதும் - உயரமானவைகளும் சிவந்த பொன்னால் செய்யப்பட்ட தூண்களையுடையவைகளுமான உப்பரிகைகளின் மீதும், தெருவிலேயு(ம்) - தெருவிலேயும், நித்திலம் எறி அலை வாய் செந்தில் கந்த பெருமாளே - முத்துக்களை வீசியெறியும் அலைகள் மோதப்பெறும் திருச்செந்தூரில் (அடியவர் பகையை யழிக்கும்) கந்தப்பெருமானாக எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, குகரம் மேவு(ம்) மெய்த்துறவின் இன் மறவா - குகையாம் இதயத்தில் நீ வந்து பொருந்தப் பெறுவதாகிய உண்மையான துறவு நிலைமையில் உதிக்கும் இன்பத்தின் தன்மையை மறந்து, கும்பிட்டு உந்தித்தடம் மூழ்கி - (பெண்களின் கால்களில் வீழ்ந்து) வணங்கி (அவர்களுடைய) நாபித் தடத்தில் (பொருந்தும் இன்பத்தில்) மூழ்கி, குமுத வாயின் முற்று அமுதினை நுகரா - செவ்வாம்பல் மலரையொத்த அவர்களது வாயினின்றும் பெருகும் முதிர்ந்த அமுதத்தைப் பானஞ்செய்து (அதரபானம் செய்து), கொண்டற் கொண்டை குழலாரோடு - மேகத்தைப்போல் கறுத்ததும் கொண்டையாக அமைக்கப்பெற்றதுமான கூந்தலையுடைய பெண்களோடு (பழகி), அகரு தூளி கர்ப்புர தன இரு கோட்டு அன்பு உற்று - சந்தனப் பொடியும் பச்சைக்கர்ப்பூரமும் கலந்த கலவைப் பொடியை யணிந்துள்ள தனபாரங்களாகிய இரு குன்றுகளின் மீது ஆசையுடையவனாகி, இன்ப கடலூடே அமிழுவேனை - (கலவியினால் உண்

டாகும்) சிற்றின்பமான கடலில் மூழ்குபவனாகிய அடியேனை, மெத்து என ஒரு கரை சேர்த்து - (சுகத்தைத் தரும் வண்ணம்) மென்மை பொருந்தியுள்ள ஒரு கரையில் கொண்டுபோய்ச் சேர்த்து, அம் பொன் தண்டை கழல் தாராய் - அழகியவைகளும் பொன்னினாற் செய்த தண்டைகளை யணிந்துள்ளவைகளுமான (நினது) பாதங்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) அன்பர்கள் இதயமான குகையில் வசிக்கும் குகனாகிய முருகப் பெருமான் ஒருவரது இதயத்தில் வந்து அமரப்பெறுவதே மெய்த்துறவாகும். துறவு என்பது விஷயசுகங்களைத் துறப்பது. அவைகளைத் துறப்பது 'தூசா மணியுந் துகிலும் புனைவாள் நேசனாகிய முருகப்பெருமானிடத்து அன்பு பாராட்டி அப்பெருமானது அருளைப் பெற்றாருக்கே சாத்தியம். 'அராப்புனை வேணியன் சேய் அருளை' அவ்வாறு பெற்று, 'அவிழ்ந்த அன்பால் குராப்புனை தண்டையம் தாள்'களைத் தொழுதால், 'ஆசா நிகளம் (ஆசையெனும் விலங்கு துகளாகும்;' அப்போதே பேசாவனுபூதி பிறக்கும் அதுவே ஞானமும் இன்பமும் முத்தியுமாகும். அது முருகப்பெருமான் இதயத்தில் வந்து அமர்வதே யாகும். இவ்வாறல்லாது வேறு விதமாக விஷயசுகங்களைத் துறந்தோர் மறுபடியும் ஆசையான விலங்கு பூட்டப்பெறலாமாகையால், அவர்கள் மெய்த்துறவிகளல்லர்.

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த—தானாந் தனனா.

குடர்நிண மென்பு சலமல மண்டு
குருதிந ரம்பு சீயூன் பொதிதோல்

குலவு குரம்பை முருடு சுமந்து
குனகிம கிழ்ந்து நாயேன் தளரா

அடர்மத னம்பை யணையக ருங்க
ணரிவையர் தங்கள் தோடோய்ந் தயரா

அறிவழி கின்ற குணமற வுன்றன்
அடியிணை தந்து நீயாண் டருள்வாய் !

தடவியல் செந்தி லிறையவ கண்பு
தருகுற மங்கை வாழ்வாம் புயனே !

சரவண கந்த முருககடம்ப
தனிமயில் கொண்டு பார்சூழ்ந் தவனே !

சுடர்படர் குன்று தொளைபட அண்டர்
தொழவொரு செங்கை வேல்வாங் கியவா !

துரிதப தங்க இரதப்ர சண்ட
சொரிகடல் நின்ற சூராந் தகனே !

(ப - ரை) தடவு இயல் செந்தில் இறையவ - பெருமை பொருந்திய திருச்செந்தூரில் அமர்ந்திருக்கும் உலகநாதனே !, நண்பு தரு குற மங்கை வாழ்வாம் புயனே - நின்னிடத்து அன்பு பாராட்டிய குறமகளான வள்ளிநாயகிக்குப் பெரு வாழ்வை அளித்த புயங்களை யுடையவனே !, சரவண - நாணலும் தாமரையும் செழித்துவளரும் சரவணப் பொய்கையில் அவதரித்தவனே !, கந்த - அடியவர் பகையை அழிப்பவனே !, முருக - ஞானவாசனை வீசும் ஞானசொரூபியே !, கடம்ப-கடம்பமலர்மாலையை யணிந்து கொள்பவனே!, தனி மயில் கொண்டு பார் சூழ்ந்தவனே - ஒப்பற்ற மயிலை வாகனமாகக் கொண்டு பூமியை வலமாகச் சுற்றி வந்தவனே!, சுடர் படர் குன்று தொளைபட - சூரியன் அதன் மீது தவழ்ந்து செல்லும்(படி உயர்ந்திருந்த) குன்றான கிரௌஞ்சம் தொளைபடுமாறும், (அதைக் கண்ட), அண்டர் தொழ - தேவர்கள் (தங்கள் பகையை நீ அழித்ததற்காக) நின்னைத் தொழுமாறும், ஒரு செம் கை வேல் வாங்கியவா - நினது சிவந்த கைகளுள் ஒன்றில் தரித்திருந்த வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே !, துரித பதங்க இரத ப்ரசண்ட - வேகமாய்ச்செல்லும் மயிலையே இரதமாகக் கொண்டு மிகுந்த வேகத்துடன் செல்பவனே ! சொரி கடல் நின்ற சூர அந்தகனே - முத்துக்களை எறிந்து சொரியும் சமுத்திரத்தில் ஒளிந்து நின்ற சூரபதுமனை அழித்தருளியவனே !, குடர் நிணம் என்பு சலம் மலம் மண்டு குருதி நரம்பு சீ ஊன் பொதி - குடல் கொழுப்பு எலும்பு மூத்திரம் மலம் (எங்கும்) நெருங்கிச் செல்லும் இரத்தம் நரம்பு சீ மாமிசம் இவைகள் பொதியப்பெற்று, தோல் குலவு - தோலினால் வளைத்து மூடப்பெற்ற, குரம்பை முருடு சுமந்து - தேகமாகிய கட்டையைச் சுமந்து, குனகி மகிழ்ந்து - (அப்படிப்பட்ட தேகத்தைப் பெரிதாக மதிப்பதனால்) மனங்குழைந்து மகிழ்ச்சியுற்று, நாயேன் - நாயையொத்த அடியேன், தளரா - (காமநோயினால்) மனந்தளர்ந்து, அடர் மதன் அம்பை அனைய - போருக்கு வரும் மன்மதனுடைய பாணத்தை யொத்த, கரும் கண் அரிவையர் தங்கள் - கரிய கண்களையுடைய பெண்களின், தோள் தோய்ந்து அயரா - தோள்களை அணைத்துக்கொண்டு அயர்வுற்று, அறிவு அழிகின்ற குணம் அற - மெய்யறிவை யிழக்கும் சுபாவம் நீங்குமாறு, உன் தன் அடி இணை தந்து - உனது பாதங்கள் இரண்டையும் (அடியேனுக்குத்) தந்து, நீ ஆண்டு அருள்வாய் - நீ (அடியேனை) ஆட்கொண்டு அருளவேண்டும்.

(வி - ரை) அஞ்ஞானம் நீங்கப்பெற்று மெய்யறிவு பெற்றவர்களும், 'கலவியின் நலம் அற்ப சுகமாகினும் மா அநுபவம் இது சற்றும் விடவோ இயலாது

இயலாதே' என்ற விடத்துக் கூறியபடி, பெண்மயக்கத்தினல் மெய்யறிவை யிழந்துவிடக்கூடு மாதலின், அந்த மாயையை அகற்றவல்ல அப்பெருமானது பாதங்களைத் தமக்குத் தந்தருளித் தம்மை அந்த மாயை மீண்டும் மீண்டும் பீடிப்ப தற்கு இடங்கொடுக்கும் துர்க்குணத்தை அழித்தருளும்படி சுவாமிகள் அப்பெரு மானைப் பிரார்த்திக்கிறார். (௩அ)

தானன தானன தானன தந்தத்
தானன தானன தானன தந்தத்
தானன தானன தானன தந்தத்—தனதான.

தோலொடு மூடிய கூரையை நம்பிப்
பாவையர் தோதக லீலைநி ரம்பிச்
சூழ் பொருள் தேடிட வோடிவ ருந்திப் புதிதான

தூடொடு நான்மணி மாலைப்ர பந்தக்
கோவையு லாமடல் கூறிய மூந்தித்
தோமுறு காளையர் வாசல்தொ றும்புக் கலமாரும்

காலனை வீணனை நீதிகெ டும்பொய்க்
கோளனை மானமி லாவழி நெஞ்சக்
காதக லோபவ்ரு தாவனை நிந்தைப் புலையேனைக்

காரண காரிய லோகப்ர பஞ்சச்
சோகமெ லாமற வாழ்வுற நம்பிற்
காசறு வாரிமெய்ஞ் ஞான தவஞ்சற் றருளாதோ ?

பாலன மீதும ணன்முக செம்பொற்
பாலனை மோதப ராதன பண்டப்
பாரிய மாருதி தோள்மிசை கொண்டுற் றமராடிப்

பாவியி ராவண னார்தலை சிந்திச்
சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்
பாவையர் தோள்புணர் மாதுலர் சிந்தைக் கினியோனே !

சீலமு லாவிய நாரதர் வந்துற்
றீதவள் வாழ்புன மாமென முந்தித்
தேமொழி பாளித கோமள இன்பக் கிரிதோய்வாய் !

சேலொடு வாளைவ ரால்கள் கிளம்பித்
தாறுகொள் பூகம ளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே !

(ப - ரை) பால் அ(ன்)னம் மீது மன் - பால் நிறம் பொருந்திய அன்னப் பக்ஷியின்மீது ஏறிச்செல்பவரும், நான்முக செம் பொன் பாலனை - நான்கு முகங்களையுடையவரும் சிவந்த பொன்னை யொத்த திருமேனியை யுடையவரும் தமது புதல்வனுமான பிரமதேவரை, மோது அபராதன - மோதிய அபராதத் துக்காக, பண்ட பாரிய மாருதி தோள்மிசை கொண்டு - தேகம் பெரிதாகவுள்ள அநுமானது தோள்களின்மீது ஏறிச்சென்று, உற்று அமராடி - கொடிய போர் செய்து, பாவி இராவணனார் தலை சிந்தி - பாவியான இராவணனுடைய தலை களை வீழ்த்தி, சீரிய வீடணர் - மேன்மைக் குணமுள்ள விபீஷணர், வாழ்வு உற - நல்வாழ்வு பெறும்படிச்செய்து, மன்றல் பாவையர் தோள் புணர் - தாம் மணந்துகொண்ட ஸ்ரீதேவி பூதேவி இவர்களுடைய தோள்களை அணைத்துக் கொண்ட, மாதுலர் சிந்தைக்கு இனியோனே - மாமனாகிய மகாவிஷ்ணுவின் மனத்தினில் இன்பத்தை யூட்டுபவனே !, சீலம் உலாவிய நாரதர் வந்து உற்று - நற்குணத்தினால் சதாகாலமும் சஞ்சரிக்கும் நாரதமாமுனிவர் (நின் திருமுன்னர்) வந்து அடைந்து, ஈது அவள் வாழ்புனம் ஆ(கு)ம் என - இதுவே (நின்னிடத்து ஆராத காதல்கொண்ட) வள்ளிநாயகி வசிக்கும் தினைப்புனமாகும் என்று கூற (அதுகேட்டு), முந்தி - விரைவில் (அங்கு) சென்று, தே மொழி - தேனையொத்த மொழிகளையுடைய வள்ளிநாயகியின், பாளித கோமள இன்ப கிரி தோய்வாய் - சந்தனம் பூசப்பெற்றவைகளும் இளமை பொருந்தியவைகளும் இன்பத்தைத் தருபவைகளும் குன்றுகளை யொத்தவைகளுமான தனபாரங்களில் மூழ்கிக் கிடப்பவனே !, சேலொடு வாளை வரால்கள் கிளம்பி - கயல்மீன்களும் வாளை மீன்களும் வரால் மீன்களும் மேலேபாய்ந்து, தாறு கொள் பூகம் அளாவிய - குலைகளையுடைய பாக்குமரங்களின் உச்சியை அணுகப்பெறுவதும், இன்ப சீரலைவாய் நகர் மேவிய- பார்ப்போர் மனத்தினில் இன்பத்தை யூட்டுவதுமான திருச்சீரலைவாய் என்னும் திருநகரத்தில் எழுந்தருளியிருக்கும், கந்த பெருமாளே - (அடியவர் பகையை யழிக்கும்) கந்தனாகிய பெரியோனே !, தோலொடு மூடிய கூரையை நம்பி - தோலினால் மூடப்பெற்ற சிறுவீடான தேகத்தை (அழியாத வஸ்துவாகக் கருதி) நம்பி, பாவையர் தோதக லீலை நிரம்பி - பெண்களுடைய வஞ்சக லீலைகளின் மீதுள்ள ஆசையினால் மனம் நிரம்பப்பெற்று, சூழ் பொருள் தேடிட ஓடி வருந்தி - (அவ்வாசையைப் பூர்த்திசெய்து கொள்வதற்கு அவசியமானதாகக்) கருதும் பொருளைச் சம்பாதிப்பதற்காக அலைந்து திரிந்து கஷ்டப்பட்டு, புதிதான தூதொடு நான் மணிமாலை ப்ரபந்தக்கோவை உலா மடல் கூறி - புதிதான தூது நான்மணிமாலை பிரபந்தக்கோவை உலா மடல் என்னும் பிரபந்தங்களை இயற்றிப்

பாடி, அழுந்தி - பொருளீட்டுவதிலேயே மனமுழுவதையும் செலுத்தி, தோம் உறு காளையர் - குற்றம் பொருந்திய காளைப் பருவத்திலுள்ளவர்களுடைய, வாசல் தொறும் புக்கு - வாசற்படிகள் தோறும் நுழைந்து, அலமாரும் காலன் (ஐ - சாரியை) - கலங்குவதிலேயே காலத்தைக் கழிப்பவனும், வீணன் (ஐ - சாரியை) - வாழ் நாளை வீணாக்கிக் கொள்பவனும், நீதி கெடும் பொய் கோளன் (ஐ - சாரியை)-தருமநெறியினின்றும் தவறிப் பொய்பேசும் தீயகுணமுள்ளவனை, மானம் இலா வழி நெஞ்ச - மானமில்லாத வழியில் நிற்கச்செய்யும் மனத்தை யுடைய(வனும்), காதக - கொலை பாதகனும், லோப - அநியாயமாகப் பிறர் பொருளை விரும்புவனும், வ்ருதாவன் (ஐ - சாரியை) - பயனற்ற வாழ்க்கை வாழ்பவனும், நிந்தை புலையேன் (ஐ - சாரியை) - (நல்லோரால்) நிந்திக்கப்படும் கீழ்மகனுமான அடியேன், காரண காரிய - (பிரபஞ்ச உற்பத்திக்குக் காரண மான) பிரகிருதி மாயையின் செயலினால் தோன்றும், லோக - பூலோக சம் பந்தமான, ப்ரபஞ்ச - (ஜக)மாயை(யினால் உண்டாகும்), சோகம் எலாம் அற - துன்பங்களெல்லாம் நீங்கப்பெறவும், வாழ்வு உற - நல்வாழ்வு பெறவும், நம்பில் - விருப்பத்துடன், காசு அறு வாரி மெய்ஞ்ஞான தவம் - குற்றமற்ற இன் பக்கடலில் சேர்க்கும் மெய்ஞ்ஞானத்தைத் தாவல்ல தவத்தினைப் புரியும் இயற் கையை, சற்று அருளாதோ - அடியேனுக்குச் சிறிதளவு கொடுத்தருளமாட் டாயோ?

(வி - ரை) காரணம் - பிரகிருதி மாயை ஆன்மா. காரியம் - தேகம். பிர பஞ்சம் - மாயை. 'காரணகாரிய லோகப்ரபஞ்ச' என்பதற்கு, 'ஆன்மாவானது பிரகிருதி மாயையின் சம்பந்தமுள்ள ஜடதேகத்தில் வந்து சேர்வதனால் அதைப் பிடிக்கும் ஜகமாயையினால் உதிக்கும்' என்று பொருள் கூறினும் பொருந்தும். நம்பு - விருப்பம். தூது, நான்மணிமாலை முதலியன பிரபந்த வகைகள். (௩௧)

தந்தா னந்தா னந்தா னந்தா
தந்தா னந்தத்— தனதான.

வெங்கா ளம்பா ணஞ்சேல் கண்பால்
மென்பா கஞ்சொற் குயில் மாலை

மென்கே சந்தா னென்றே கொண்டார்
மென்றோ ளொன்றப் பொருள்தேடி

வங்கா ளஞ்சோ னஞ்சீ னம்போய்
வன்பே துன்பப் படலாமோ?

மைந்தா ருந்தோள் மைந்தா அந்தா
வந்தே யிந்தப் பொழுதாள்வாய்!

கொங்கார் பைந்தே னுண்டே வண்டார்
குன்றாள் கொங்கைக் கினியோனே !
குன்றோ டுஞ்சூ ழம்பே ழுஞ்சூ
ரும்போய் மங்கப் பொருகோபா !
கங்கா ளஞ்சேர் மொய்ம்பா ரன்பார்
கன்றே யும்பர்க் கொருநாதா !
கம்பூர் சிந்தார் தென்பால் வந்தாய்
கந்தா செந்திற் பெருமாளே !

(ப - ரை) கொங்கு ஆர் பைம் தேன் - வாசனை பொருந்தியதும் தக்க பருவத்திலுள்ளதுமான தேனை, உண்டு (ஏ - அசை) வண்டு ஆர் - குடித்துவிட்டு வண்டுகள் ஆரவாரிக்கப்பெற்ற, குன்றாள் - மலையில் வளர்ந்த பெண்ணான வள்ளிநாயகியின், கொங்கைக்கு இனியோனே - தனபாரங்களுக்கு இன்பத்தை யூட்டுபவனே !, குன்றோடு (உம் - அசை) - கிரௌஞ்சம் என்னும் மலையினுடன், சூழ் அம்பு ஏழும் - புவியைச் சூழ்ந்திருக்கும் சமுத்திரங்கள் ஏழும், சூரும் - சூரபதுமனும், போய் மங்க (மங்கி போக) - அழிந்து போகும் வண்ணம், பொரு கோபா - போர் செய்யுமாறு கோபங்கொண்டவனே!, கங்காளம் சேர் மொய்ம்பார்-(வாமனனுடைய) முதுகெலும்பு பொருந்தப்பெற்ற தோள்களையுடைய சிவபெருமானது, அன்பு ஆர் கன்றே - அன்பை நிறையப்பெற்றுள்ள புதல்வனே!, உம்பர்க்கு ஒரு நாதா - தேவர்களுக்குத் தலைவனாக விருக்கும் ஒருவனே !, கம்பு ஊர் சிந்து ஆர் - சங்குகள் தவழும் சமுத்திரம் பொருந்தியுள்ள, தென்பால் வந்தாய் - தென்றிசைக்கு எழுந்தருளியவனே !, கந்தா - அடியவர் பகையைத் தொலைப்பவனே !, செந்தில் பெருமாளே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பவனே!, கண் வெம் காளம் பாணம் சேல் - கண்கள் கொடிய ஆலாகல விஷத்தையும் பாணத்தையும் கயல் மீனையும் ஒத்தவை, அம் சொல் பால் மென் பாகு குயில்- அழகிய சொற்கள் இனிய பாலையும் மென்மை பொருந்திய பாகையும் குயில் கூவுவதையும் ஒத்தவை, மென் கேசம் தான் மாலை-மெல்லிய கூந்தலோ இரவை ஒத்தது, என்றே கொண்டார்-என்று சொல்லும் வண்ணம் அழகிய அங்கங்களை யுடைய பெண்களது, மென் தோள் ஒன்ற - அழகிய தோள்க(ளை அணைத்து அவைக)ளின்மீது பொருந்தவேண்டுமென்று (ஆசை கொண்டு), பொருள் தேடி- (அதற்கு வேண்டிய) பொருளைச் சம்பாதிப்பதற்காக, வங்காளம் சோனம் சீனம் போய் - வங்காளம் சோனகம் சீனம் இந்தத் தேசங்களுக்குச் சென்று, வன்பே - துன்பப்படலாமோ - (அடியேன்) துன்பப்படும்படி விட்டுச்சும்மாவிருத்தல் தகுதியோ ?, மைந்து ஆரும் தோள் மைந்தா - வலிமைபொருந்திய தோள்களை

யுடைய பலசாலியே!, அந்தா அழகனே!, வந்தே இந்தப்பொழுது ஆள் வாய் - வந்து இப்போது அடியேனை ஆட்கொண்டருளவேண்டும். (சுo)

தனன தனதனந் தந்தத் தந்தத்
தனன தனதனந் தந்தத் தந்தத்
தனன தனதனந் தந்தத் தந்தத்—தனதான.

பதும விருசரண் கும்பிட் டின்பக்
கலவி நலமிகுந் துங்கக் கொங்கைப்
பகடு புளகிதந் துன்றக் கன்றிக் கயல்போலும்

பரிய கரியகண் செம்பொற் கம்பிக்
குழைகள் பொரமருண் டின்சொற் கொஞ்சிப்
பதற விதமுறுஞ் சந்துக் கொந்துக் குழல்சாயப்

புதுமை நுதிநகம் பங்கத் தங்கத்
தினிது வரையவெண் சந்தத் திந்துப்
புருவ வெயர்வுடன் பொங்கக் கங்கைச் சடைகாரி

பொடிசெய் தருள்மதன் தந்த்ரப் பந்திக்
கறிவை யிழவிடும் பண்புத் துன்பப்
பொருளின் மகளிர்தம் மன்புப் பண்பைத் தவிரேனோ?

திதிதி தததகந் திந்தித் தந்தட்
டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத்
தெனன தனதனந் தெந்தத் தந்தத் தெனனனெ

திகுர்தி தகிர்ததிந் திந்தித் திந்தித்
திரிரி தரரவென் றென்றொப் பின்றித்
திமிலை பறையறைந் தெண்டிக் கண்டச் சுவர்சோரச்

சதியில் வருபெருஞ் சங்கத் தொங்கற்
புயவ சுரர்வெகுண் டஞ்சிக் குஞ்சித்
தலைகொ டடிபணிந் தெங்கட் குன்கட் க்ருபைதாவென்

சமர குமரகஞ் சஞ்சுற் றுஞ்செய்ப்
பதியில் முருகமுன் பொங்கித் தங்கிச்
சலதி யலைபொருஞ் செந்திற் கந்தப் பெருமாளே!

(ப - ரை) திதிதி * * * * * திரிரி தார,—என்று என்று - பலமுறை, ஒப்பு இன்றி - கோஷம் நிகரற்றதாயிருக்கும்படி, திமிலே பறை அறைந்து- பேரிகைகளும் தம்பட்டங்களும் முழங்கி, (அதனால்), எண் திக்கு அண்ட சுவர் சோர - எட்டுத் திக்குகளிலுமுள்ள அண்டச் சுவர்கள் தளரும் வண்ணம், சதியில் வரு(ம்) - தாளத்துக்கிசைய நடந்துவரும், பெரும் சங்க - பெருங் கூட்டமான, தொங்கல் புய அசுரர் - மலர் மாலையைப் புயங்களில் அணிந்துள்ள அசுரர்கள், வெகுண்டு - (முதன் முதலில்) கோபத்துடன் அணுகி, அஞ்சி (பிறகு நினது பராக்கிரமத்தைக் கண்டு) அச்சமுற்று, குஞ்சி தலை கொடு அடி பணிந்து- (மகுடங்களை எடுத்து விட்டு) மயிர் தெரியும் தலையினால் நினது பாதங்களை வணங்கி, எங்கட்கு உன் கண் க்ருபை தா என் - எங்களுக்கு நினது கண்களினின்றும் பொழியும் கருணையைத் தந்தருள வேண்டும் என்று பிரார்த்திக்கும் (வண்ணம்), சமர குமர - போருக்குச்சென்ற குமார சுவாமியே!, கஞ்சம் சுற்றும் செய்ப்பதியில் முருக-தாமரை மலர்கள் சுற்றிலும் மலரப்பெறும் வயலூரில் அமர்ந்திருக்கும் ஞான சொரூபியே!, முன் பொங்கி தங்கி - முதலில் கோஷித்துக் கொண்டு புரண்டு வந்து பிறகு பின்னடைந்து, சலதி அலை பொரும்-சமுத்திரத்தின் அலைகள் வந்து மோதப்பெறும், செந்தில் கந்த பெருமாளே-திருச்செந்தூரில் அடியவர் பகையை அழிப்பதற்காக அமர்ந்திருக்கும் பெரியோனே! பதும இரு சரண் - (பெண்களின்) தாமரைமலர்களை யொத்த இரண்டு பாதங்களையும் கும்பிட்டு வணங்கி, இன்ப கலவி நலம் மிகும் - இன்பந்தரும் கலவியின் இன்பத்தை அதிகரிக்கச் செய்யும், துங்க பகடு கொங்கை - அழகிற் சிறந்தவைகளும் ஆண் யானையைப்போல் மதமுற்றிருப்பவைகளுமான தனபாரங்கள், புளகிதம் துன்ற கன்றி - புளகித்துப் புடைத்தெழப்பெற்றும், கயல் போல் (உம் - அசை) பரிய கரிய கண் - கயல்மீனைப் போன்றவைகளும் விசாலமானவைகளும் கருநிறமுள்ளவைகளுமான கண்கள், செம்பொன் கம்பி குழைகள் பொர மருண்டு - சிவந்த பொன்கம்பிகளினால் செய்த குழைகளின்மீது பாய்ந்து மோதும் வண்ணம் சலிக்கப்பெற்றும், இன் சொல் கொஞ்சி - (செவிக்கு) இன்பத்தைத் தரும் மொழிகளைக் கொஞ்சிப்பேசி, பதற - (விரகதாபத்தினால்) அங்கமெல்லாம் பதறப் பெற்றும், விதம் உறும் கந்தி கொந்து குழல் சாய - பல விதமான நறுமணம் வீசும் புஷ்பங்களைக் கொத்துக் கொத்தாக அணிந்துள்ள கூந்தல் சரியப்பெற்றும், புதுமை நகம் நுதி அங்கத்து பங்கத்து இனிது வரைய - புதிதாக நகங்களின் நுனிகள் தேகத்தில் குற்றம் தோன்றுமாறு இன்பமுற அழுத்துவதனால் சுவடுண்டாகப்பெற்றும், வெண் சந்தத்து இந்து புருவ வெயர்வு உடன் பொங்க-வெண்ணிறமுள்ள சந்திரனது பிறையைப்போல் வளைந்துள்ள புருவங்களில் உடனே வியர்வை கொதித்துத் தோன்றப்பெற்றும், கங்கை சடைதாரி-கங்காநதியைச் சடாமுடியில் தரித்துக்கொண்டுள்ள சிவபெருமான், பொடி செய்தருள் மதன் - சாம்பராகும்படி எரித்தருளிய மன்மதனுடைய,

தந்த்ர பந்திக்கு - வரிசையாகத்தோன்றும் தந்திரங்களினால் மயக்கமுற்று, அறிவை இழவிடும் பண்பு - அறிவை யிழக்கும்படி செய்யும் தன்மையுடையதும், துன்ப பொருளின் மகளிர்தம் அன்பு பண்பை - (இன்பத்தைத் தருவதாகத் தோன்றுவதும்) உண்மையில் துன்பத்தையே தருவதுமான செயலாகிய கலவியை இச்சித்துப் பெண்களின்மீது ஆசைகொள்ளும் குணத்தை, தவிரேனோ - ஒழித்துக்கொள்ளமாட்டேனோ? (சுக)

தான தானன தந்தன தந்தன
தான தானன தந்தன தந்தன
தான தானன தந்தன தந்தன—தனதான.

மாய வாடைதி மிர்ந்திடு கொங்கையில்
மூடு சீலைதி றந்தம ழுங்கிகள்
வாசல் தோறுந டந்துசி ணுங்கிகள் பழையோர்மேல்

வால நேசநி னைந்தழு வம்பிகள்
ஆசை நோய்கொள்ம ருந்திடு சண்டிகள்
வாற பேர்பொருள் கண்டுவி ரும்பிக ளெவரேனும்

நேய மேகவி கொண்டுசொல் மிண்டிகள்
காசி லாதவர் தங்களை யன்பற
நீதி போலநெ கிழ்ந்தப றம்பிக ளவர்தாய்மார்

நீலி நாடக மும்பயில் மண்டைகள்
பாளை யூறுக ளுண்டிடு தொண்டிகள்
நீச ரோடும ணங்குக டம்பிக ளுறவாமோ?

பாயு மாமத தந்திமு கம்பெறு
மாதி பாரத மென்றபெ ருங்கதை
பார மேருவி லன்று வரைந்தவ னிளையோனே!

பாவை யாள்குற மங்கை செழுந்தன
பார மீதில ணைந்து முயங்கிய
பாக மாகிய சந்தன குங்கும மணிமார்பா!

சீய மாயுரு வங்கொடு வந்தசு
ரேசன் மார்பையி டந்து பசுங்குடர்
சேர வாரிய ணிந்த நெடும்புயன் மருகோனே!

தேனு லாவுக டம்ப மணிந்தகி
ரீட சேகர சங்கரர் தந்தருள்
தேவ நாயக செந்தி லுகந்தருள் பெருமாளே !

(ப - ரை) பாயும் மா மத தந்தி முகம் பெறும் - மிகுதியாகப் பெருகும் மத நீரையுடைய யானையின் முகத்தைப் பெற்றவரும், ஆதி பாரதம் என்ற பெரும் கதை - முதன் முதலில் பாரதம் என்னும் பெரிய கதையை, பார மேருவில் அன்று வரைந்தவன் - பெரிய மேருமலையின்மீது அந்நாளில் எழுதிய வருமான விநாயகக்கடவுளின், இளையோனே - தம்பியே !, பாவையாள் குற மங்கை செழும் தனபார மீதில் - சித்திரத்தைப்போல் அழகு வாய்ந்த வரும் குறக்குலத்தில் வளர்ந்தவருமான வள்ளிநாயகியின் அழகிய தனபாரங் களின் மீது, அணைந்து முயங்கிய பாகமாகிய - கலவியிற் பொருந்திய பாகமும், சந்தன குங்கும மணி மார்பா - (தனபாரங்களின்மீது பொருந் தியதனால் அங்குள்ள) சந்தனமும் குங்குமமும் பூசப்பெற்றதுமான அழ கிய மார்பையுடையவனே !, சீயமாய் உருவம் கொடு வந்து - (நர) சிங்கமாக வடிவத்தைப் பூண்டு தோன்றி, அசுரேசன் மார்பை இடந்து - அசுரர்களுக் குத் தலைவனான இரணியனது மார்பைப் பிளந்து, பசும் குடர் சேர வாரி அணிந்த - ஈரமாகவுள்ள அவனது குடர் முழுவதையும் எடுத்து (மாலை யாக) அணிந்து கொண்ட(வரும்), நெடும் புயல் - திருவிக்கிரமாவதாரம் செய்தவரும் மேகத்தின் நிறமுள்ள திருமேனியையுடையவருமான திருமாலின், மருகோனே - சகோதரியின் புத்திரனே !, தேன் உலாவு கடம்பம் அணிந்த கிரீட சேகர - தேன் பொருந்திய கடம்பமலர் மாலையை அணிந்துள்ளவனே ! மகுடத் தைத் தரித்துக்கொண்டிருப்பவனே !, சங்கரர் தந்தருள் - ஆன்மாக்களுக்குச் சுகத்தைத் தரும் சிவபெருமான் தந்தருளிய, தேவ நாயக - தேவாதிதேவனே !, செந்தில் உகந்தருள் பெருமாளே - திருச்செந்தூரில் மகிழ்ச்சியுடன் எழுந்தருளி யிருக்கும் பெரியோனே!, மாய வாடை திமிர்ந்திடு கொங்கையில்-மனமயக்கத்தை யுண்டுபண்ணும் வாசனை பூசப்பெற்ற தனபாரங்களின்மீது, மூடு சீலை திறந்த மழுங்கிகள் - மூடிக்கொண்டிருக்கும் புடவையை (விலக்கித்) திறந்துகாட்டும் (வண்ணம்) அறிவு மழுங்கப்பெற்றவர்களும், வாசல் தோறு(ம்) நடந்து சிணுங்கி கள்-தெருக்களிலெல்லாம் நடந்து கொஞ்சிப் பேசுகிறவர்களும், பழையோர் மேல் வால நேச(ம்) நினைந்து அழு(ம்) வம்பிகள் - முன்பு தங்களுடன் பழகினவர்க ளிடத்து அவர்கள் காளைப்பருவத்திலிருந்த காலத்தில் தாம் கொண்டிருந்த சிநேகத்தை நினைத்து அழுவதுபோல் பாசாங்கு செய்யும் வஞ்சகிகளும், ஆசை நோய் கொள் மருந்து இடு(ம்) சண்டிகள் - அவர்கள்மீது ஆசைகொள்ளச் செய்ய வல்ல மருந்தை உட்கொள்ளச் செய்யும் கொடியவர்களும், வாற பேர் பொருள் கண்டு விரும்பிகள் - தெருவில் வருகிறவர்களுடைய கைப்பொருளைக் கண்டு

அதை யடைய விரும்புகிறவர்களும், எவரேனும் நேயமே கவி கொண்டு சொல் மிண்டிகள் - தம்மைச் சந்திப்பவர்கள் எவராயிருந்த போதிலும் அவர்களைப் பாடல்களினால் புகழ்ந்து நெருங்குபவர்களும், காசு இலாதவர் தங்களை அன்பு அற நீதி போல நெகிழ்ந்த பறம்பிகள் - கையில் காசுஇல்லாத ஏழைகளின்மீது அன்பு பாராட்டாமல் அவர்களை யகற்றுவதே நீதிபோல நடித்து அவர்களை யகற் றும் ஈனப் பெண்களுமான விலைமாதர்களுடைய (உறவும்), அவர் தாய்மார்- அந்த விலைமாதர்களுடைய தாய்க்கிழவிகளோ, நீலி நாடகமும் பயில் மண்டை கள் (மட்டைகள்) - நீலித்தனம் பொருந்திய செயல்களைச் செய்யும் மதிகேடர் கள், பாளை ஊறு கள் உண்டிடு தொண்டிகள் - (தென்னை, பனை முதலியவை களின்) பாளையிலிருந்து ஊறிவரும் கள்ளைக் குடிக்கும் கீழ்மக்கள், நீசரோடும் இணங்கு கடம்பிகள் - ஒழுக்கமில்லாதவர்களோடு கூடச் சிநேகஞ் செய்யும் கீழோர்கள், உறவு ஆமோ - (அவர்களுடைய) சிநேகம் கொள்ளத் தக்கதோ?

(வி - ரை) **விநாயகக் கடவுள் பாரதம் எழுதின வரலாறு** :—ஆன்மா வானது பரமனது கருணையினால் முத்தி பெறுவது எவ்வாறென்று கூறும் வேதங்களின் சாரமானது யாவர்க்கும் எளிதில் புலப்படும் வண்ணம் பாரதம் என் னும் ஒரு சரித்திரத்தை எழுதவேண்டுமென்று விருப்புற்ற வேதவியாச முனிவர், அதற்கு விநாயகக் கடவுளைத் துணையாகக் கொள்ளுமாறு அக்கடவுளைத் தியா னித்து, அவர் தம் முன்னே தோன்றியதும் அவரைப் புகழ்ந்து தமக்கு உதவி புரியும்படி வேண்டினார். அப்போது விநாயகக் கடவுள் அதற்கு உடன்பட்டு, "எனது எழுத்தாணி தடைபடாது நீர் கவி சொல்லி வருவீராயின் யான் எழுதி முடிப்பேன். தாமதிப்பீராயின் அக்கணமே மறைந்து விடுவேன்" என்று கூறி யருளினார். அப்படியே வியாசமுனிவர் சொல்லிக்கொண்டுவர விநாயகக் கட வுள் அதை மேரு மலையின்மீது தமது கொம்புகளுள் ஒன்றினால் எழுதிமுடித்தார்.

தானன தான தந்த தானன தான தந்த
தானன தான தந்த தானன தான தந்த
தானன தான தந்த தானன தான தந்த—தனதான

பூரண வார கும்ப சீத படீர கொங்கை
மாதர் விகார வஞ்ச லீலையி லேயு ழன்று
போதவ மேயி ழந்து போனது மான மென்ப தறியாத

பூரிய னாகி நெஞ்சு காவல் படாத பஞ்ச
பாதக னாய றஞ்செ யாதடி யோடி றந்து
போனவர் வாழ்வு கண்டு மாசையி லேய முந்து மயல்தீரக்

காரண காரி யங்க ளானதெ லாமொ ழிந்து
யானெனு மேதை விண்டு பாவக மாயி ருந்து
காலுட லூடி யங்கி நாசியின் மீதிரண்டு விழிபாயக்
காயமு நாவு நெஞ்சு மோர்வழி யாக அன்பு
காயம் விடாம லுன்ற னீடிய தாள் நினைந்து
காணுதல் கூர்த வஞ்செய் யோகிக ளாய்வி ளங்க அருள்வாயே!
ஆரண சார மந்த்ர வேதமெ லாம்வி ளங்க
ஆதிரை யானை நின்று தாழ்வனெ னுவ ணங்கு
மாதர வால்வி ளங்கு பூரண ஞான மிஞ்சு முரவோனே !
ஆர்கலி யூடெ ழுந்து மாவடி வாகி நின்ற
சூரனை மாள வென்று வானுல காளு மண்ட
ரானவர் கூர ரந்தை தீரமு னாள்ம கிழ்ந்த முருகேசா !
வாரண மூல மென்ற போதினி லாழி கொண்டு
வாவியின் மாடி டங்கர் பாழ்பட வேயெ றிந்த
மாமுகில் போலி ருண்ட மேனிய னாமு குந்தன் மருகோனே
வாலுக மீது வண்ட லோடிய காலில் வந்து
சூல்நிறை வான சங்கு மாமணி யீன வுந்து
வாரிதி நீர்ப ரந்த சீரலை வாயு கந்த பெருமாளே !

(ப - ரை) ஆரண சார மந்த்ர வேதம் எ(ல்)லாம் விளங்க - வேதத்தின் சாரமாகிய மந்திரமான பிரணவத்தின் உரையினால் வேதத்தில் அடங்கியதெல்லாம் எனக்கு விளங்கும் வண்ணம், ஆதிரையான் (ஐ - சாரியை) நின்று தாழ்வன் எனு - திருவாதிரை நட்சத்திரத்துக்கு உரியவரான சிவபெருமான் நான் (உன் முன்னே சீடனாக) நின்று உன்னை வணங்குவேன் என்று சொல்லி, வணங்கும் ஆதரவால் விளங்கு - நின்னை வணங்கியதனால் அன்பு பூண்டு அதை விளக்கியருளிய, பூரண ஞான(ம்) மிஞ்சும் உரவோனே - பரிபூரண ஞானம் ததும்பப் பெற்ற அறிஞனே !, ஆர்கலியூடு எழுந்து மா வடிவு ஆகி நின்ற சூரனை - சமுத்திரத்தினுள்ளே யிருந்து எழுந்து மாமரத்தின் வடிவத்தைப் பூண்டுநின்ற சூரபதுமனை, மாள வென்று - மடியச்செய்து வெற்றியடைந்து, வான் உலகு ஆளும் அண்டரானவர் கூர் அரந்தை தீர - தேவலோகத்தை ஆள்பவரான தேவர்கள் அடைந்த மிகுந்த துயரமானது தீரும்படிச்செய்து, முன் நாள் மகிழ்ந்த முருக ஈசா - முன்னொரு காலத்தில் களிப்புற்ற ஞானவாசனை வீசும் ஈசனே !, வாரணம் மூலம் என்ற போதினில் - (கஜேந்திரன் என்னும்) யானை ஆதி மூலமே யென்று கூவி அழைத்தபோது, ஆழிகொண்டு - சக்கராயுதத்தினால்,

வாவியின் மாடு இடங்கர் பாழ்பட (எ - அசை) எறிந்த - மடுவிலிருந்த முதலையானது அழியும் வண்ணம் அதை அறுத்தருளியவரும், மா முகில் போல் இருண்ட மேனியன் ஆம் - சிறந்த மேகத்தைப்போலக் கறுத்த திருமேனியை யுடையவருமான, முகுந்தன் - மகாவிஷ்ணுவின், மருகோனே-சகோதரியின் புத்திரனே!, வாலுகம் மீது வண்டல் ஓடிய காலில் வந்து - (நதியின் முகத்துவாரத்தில் கடற்கரையிலுள்ள) மணலின் மீது (நதியின்) வண்டல் ஓடி வந்து படியப்பெறும் (நதிக்கிளையான) கால்வாயில் வந்து சேர்ந்து, சூல் நிறைவான சங்கு - பூரண கர்ப்பமுற்ற சங்குகள், மா மணி ஈன - சிறந்த முத்துக்களைப் பிறப்பித்துத் தரும் வண்ணம், உந்து வாரிதி நீர் பரந்த - அலைகளை (அலைகளினால்) செலுத்தும் சமுத்திரத்தின் நீரானது எங்கும் வந்து பரவப்பெறும், சீரலைவாய் உகந்த பெருமாளே - திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூரை மகிழ்ச்சியுடன் நினது இருப்பிடமாகக் கொண்ட பெரியோனே!, பூரண வார கும்ப - பூரணமாக வளர்ந்து நேராகவிருப்பவைகளும் கும்பத்தை யொத்தவைகளும், சீத படீர கொங்கை - குளிர்ச்சி பொருந்திய சந்தனம் பூசப்பெற்றவைகளுமான தனபாரங்களை யுடைய, மாதர் விகார வஞ்ச லீலையிலே உழன்று - மாதர்கள் செய்வதும் மனோ விகாரத்தை யுண்டு பண்ணுவதும் வஞ்சகம் பொருந்தியதுமான கலவிலீலைகளில் மயங்கித்திரிந்து, போது அவமே இழந்து - காலத்தை வீணாகக் கழித்து இழந்து, மானம் போனது என்பது அறியாத பூரியனாகி - மானம் தொலைந்து போயிற்று என்பதை அறிய மாட்டாத கீழ்மகனாகி, நெஞ்சு காவல் படாத பஞ்ச பாதகனாய் - மனம் அடக்கப்படாததனால் பஞ்ச மகாபாதகங்களையும் செய்பவனாகி, அறம் செ(ய்)யாது - தருமத்தைச் செய்யாமல், அடியோடு இறந்து போனவர் வாழ்வு கண்டும் - (இருந்த சுவடேயிராவண்ணம்) நிர்மூலமாக இறந்து போனவர்களுடைய வாழ்வு நிலையற்றதாயிருப்பதைக் கண்டும், ஆசையிலே அழுந்து(ம்) மயல் தீர - விஷயசுகங்களின்மீதுள்ள ஆசையில் மூழ்கும்படிச் செய்யும் மயக்கம் நீங்கும் வண்ணம், காரண காரியங்களானது எலாம் ஒழிந்து - செயலிற் செலுத்தும் ஏதுக்களினால் தூண்டப்பெறுவதும் (தன் செயலாகச் செய்யும்) செயல்களும் எல்லாம் ஒழியப்பெற்று, யான் எனும் ஏதை விண்டு - நான் என்று மார்தட்டும் பேதைமை நீங்கப்பெற்று, பாவகமாய் இருந்து - தியானத்தில் அமர்ந்து, கால் உடலூடு இயங்கி - பிராணவாயுவானது தேகத்தினூடே இரேசகம் பூரகம் கும்பகமாக அசைந்து செல்லப்பெற்று, நாசியின்மீது இரண்டு விழிபாய - மூக்கின் முனைமீது இரண்டு விழிகளின் நோக்கமும் செல்லப் பெற்று, காயமும் நாவும் நெஞ்சும் ஓர் வழியாக - தேகம் வாக்கு மனம் என்னும் திரிகரணங்களும் (தியானமாகிய) ஒரே காரியத்தில் ஈடுபட்டு நிற்கப்பெற்று, அன்பு காயம் விடாமல் - அன்புக்குப் பாத்திரமான தேகம் அழியாமலிருக்கப் பெற்று, நீடிய உன் தன் தாள் நினைந்து - நித்தியமான (முத்திவீடான) உனது பாதமலர்களைத் தியானித்து, காணுதல் கூர் - அவைகளைக் காணவிரும்புகிறவர்

களும், (அவ்விருப்பத்தினால்), தவம் செய் யோகிகளாய் விளங்க அருள்வாயே - தவம் புரிபவர்களுமான யோகிகளைப்போல அடியேனும் விளங்கும்படி அருள் புரியவேண்டும். (சங)

தனதன தனதன தந்தத் தந்தத்—தனதானா.

பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானார்
படையம படையென அந்திக் குங்கட் கடையாலே
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே
மறுகிடு மருளனை யின்புற் றன்புற் றருள்வாயே !
அரிதிரு மருகக டம்பத் தொங்கற் றிருமார்பா !
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித் தெறிவேலா !
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா !
ஜெயஜெய ஹரஹர செந்திற் கந்தப் பெருமாளே !

(ப - ரை) அரி திரு மருக - திருமாலின் செல்வ மருகனே !, கடம்ப தொங்கல் திரு மார்பா - கடம்ப மலர் மாலையை அணிந்துகொண்டுள்ள அழகிய மார்பையுடையவனே !, அலை குமு குமு என எம்ப - சமுத்திரத்தின் அலைகள் குமு குமு வென்று பொங்கி எழுந்தபோது, கண்டித்து எறி வேலா - (அச்சமுத்திரத்தை) அடக்கி யழித்த வேலாயுதனே !, திரிபுர தகனரும் வந்திக்கும் சத் குரு நாதா - (ஆணவம் கன்மம் மாயை என்னும்) திரிபுரங்களை எரித்தருளிய சிவபெருமானும் வணங்கும் (படி பெருமை வாய்ந்துள்ள) உண்மைப் பொருளை யுணர்த்தும் ஒப்புயர்வற்ற குருவே !, ஜெய ஜெய - என்றும் வெற்றியடைபவனே !, ஹர ஹர - (பக்குவமடைந்த) ஆன்மாக்களின் பாசத்தை யழித்தருளும் சிவமே !, செந்தில் கந்த பெருமாளே - திருச்செந்தூரில் (அடியவர் பகையை யழிக்கும்) கந்தப் பெருமானாக அமர்ந்திருக்கும் பெரியோனே !, பரிமள களப சுகந்த சந்த தன மானார் - நறுமணமுள்ள வஸ்துக்களோடு கலக்கப்பட்டதும் நல்ல வாசனை பொருந்தியதுமான சந்தனம் பூசப்பெற்ற தனபாரங்களை யுடைய பெண்களது, படை யம படை என - சேனையானது யமனது சேனைதான் என்று சொல்லும் வண்ணம், அந்திக்கும் - வந்து சந்திக்கும், கண் கடையாலே - கடைக் கண் பார்வையினாலும், வரி அளி நிரை முரல் - இனிமையாகப் பாடும் வண்டுக் கூட்டங்கள் பாடப்பெற்றதும், கொங்கு கங்குல் குழலாலே - வாசனை வீசுவதும் இரவைப்போல் கறுத்ததுமான கூந்தலினாலும், மறுகிடும் மருளனை - மனங் கலங் கும்படி (காம) மயக்கமுற்றவனை, இன்பு உற்று அன்பு உற்று அருள்வாயே - மனக்களிப்புடனும் அன்புடனும் வந்து ஆண்டருளவேண்டும். (சச)

## 3. திருச்சீரலைவாய்—திருச்செந்தூர் ருருக

**தந்த தானன தானன தந்த தானன தானன**
**தந்த தானன தானன—தனதான.**

வெஞ்ச ரோருக மோகடு நஞ்ச மோகய லோநெடு
விஞ்ப சாகர மோவடு வகிரோமுன்

வெந்து போனபு ராதன சம்ப ராரிபு ராரியை
வென்ற சாயக மோகரு விழியோகண்

தஞ்ச மோயம தூதுவர் நெஞ்ச மோவெனு மாமத
சங்க மார்ப யோதர மதில்மூழ்கு

சங்கை யோவிரு கூதள கந்த மாலிகை தோய்தரு
தண்டை சேர்கழ லீவது மொருநாளே ?

பஞ்ச பாதக தாருக தண்டு நீறெழ வானவர்
பண்டு போலம ராவதி குடியேறப்

பங்க யாசனர் கேசவ ரஞ்ச லேயென மால்வரை
பங்க நீறெழ வேல்விடு மிளையோனே !

செஞ்ச டாடவி மீமிசை கங்கை மாமதி தாதகி
திங்கள் சூடிய நாயகர் பெருவாழ்வே !

செண்ப காடவி நீடிய துங்க மாமதிள் சூழ்தரு
செந்தில் மாநகர் மேவிய பெருமாளே !

(ப-ரை) பஞ்ச பாதக தாருக தண்டு நீறு எழ - பஞ்சமகாபாதகங்களைச் செய்யும் மாயாசொரூபியான தாருகனும் அவனுடைய சேனையும் எரிந்து சாம்பராகுமாறும், வானவர் பண்டுபோல் அமராவதி குடி ஏற - தேவர்கள் முன் போலத் தங்கள் நகரமான அமராவதியில் வந்து வசிக்குமாறும், பங்கய ஆசனர் - (திருமாலின் திருநாபித்) தாமரை மலரின்மீது அமர்ந்திருக்கும் பிரமதேவரும், கேசவர் - திருமாலும், அஞ்சல் (ஏ - அசை) என - பயமாயிருக்கிறதே யென்று கூறுமாறும், பங்கம் மால் வரை - குற்றம் பொருந்திய பெரிய மலையான கிரௌஞ்சம் என்னும் மலையானது, நீறு எழ - எரிந்து பொடியாகுமாறும், வேல் விடும் இளையோனே - வேலாயுதத்தைப் பிரயோகித்த குமரனே !, அடவி செம் சடை மீமிசை - காட்டைப்போல் அடர்ந்ததும் சிவந்த நிறமுடையதுமான சடா முடியின் மேல், கங்கை மா மதி தாதகி திங்கள் சூடிய நாயகர் பெரு வாழ்வே - கங்காநதியையும் சிறந்ததும் அழகியதுமான ஆத்திமலர் மாலையையும் சந்திரனையும்

அணிந்துகொண்டுள்ள இறைவரான சிவபெருமானுக்கு மிகுந்த மேன்மையை உண்டாக்கியவனே!, செண்பக அடவி நீடிய-செண்பகமரச் சோலை வெகு தூரம் பரவியிருக்கப்பெற்றதும், துங்க மா மதிள் சூழ்தரு - உயரமான சிறந்த மதிள்களி னால் சூழப்பெற்றதுமான, செந்தில் மாநகர் மேவிய பெருமாளே - திருச்செந்தூர் என்னும் சிறந்த நகரத்தில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, கண் - கண்கள், வெம் சரோருகமோ - குணம் கொடியதா யாகப்பெற்ற தாமரை மலர் களோ? கடு நஞ்சமோ - பாம்பின் விஷமோ?, கயலோ - கயல்மீன்களோ?, நெடு இன்ப சாகரமோ - விசாலமான இன்பக்கடலோ? வடு வகிரோ - மாவடுவின் பிளப்போ?, முன் வெந்து போன - முன்னாளில் எரிந்து சாம்பரான, புராதன சம்பர அரி - வெகுகாலமா யுள்ளவனும் சம்பராசுர னைச் சங்கரித்தவனுமான மன்மதன், புர அரியை வென்ற சாயகமோ - திரிபுரங் களைச் சங்கரித்தருளிய சிவபெருமானை வெல்வதற்கு உபயோகித்த பாணமோ?, கருவிளையோ - காக்கணம்பூவோ?, (என்று சொல்லி அதிசயித்துப் புகழ்ந்து) தஞ்சமோ - இவைகளே (நமது விரகதாபம் ஒழிந்து இன்பமுற) உற்ற புக லிடமோ?, யம தூதுவர் நெஞ்சமோ - யமதூதர்களது நெஞ்சத்தைப்போல் வன்மை பொருந்தியவைகளோ?, எனும் - என்று சொல்லும்படியுள்ள, சங்க மாதர் - கலவியையே நாடும் விலைமாதர்களது, மா மத பயோதரம் அதில் மூழ்கு சங்கை - மிகவும் செருக்குற்ற தனபாரங்களில் மூழ்கும் வழக்கம், ஓவ - நீங்கும் வண்ணம், கந்த கூதள மாலிகை தோய்தரு - நல்ல வாசனை பொருந்திய கூதள மலர்மாலையை அணிந்துள்ளவைகளும், தண்டை சேர் - தண்டைகளை யணிந் துள்ளவைகளுமான, இரு கழல் ஈவதும் ஒருநாளே - (நினது) இருபாதங்களையும் அடியேனுக்கு என்றைக்கேனும் தந்தருள்வாயோ? (சஙு)

தந்தன தான தந்தன தான
தந்தன தான - தனதான.

விந்ததி னூறி வந்தது காயம்
வெந்தது கோடி பினிமேலோ
விண்டுவி டாம லுன்பத மேவு
விஞ்சையர் போல அடியேனும்
வந்துவி நாச முன்கலி தீர
வண்சிவ ஞான வடிவாகி
வன்பத மேறி யென்களை யாற
வந்தருள் பாத மலர்தாராய்!

## 3. திருச்சீரலைவாய்—திருச்செந்தூர் 

எந்தனு ளேக செஞ்சுட ராகி
யென்கணி லாடு தழல்வேணி
எந்தையர் தேடு மன்பர்ச காய
ரெங்கள்சு வாமி யருள்பாலா !
சுந்தர ஞான மென்குற மாது
தன்திரு மார்பி லணைவோனே !
சுந்தர மான செந்திலில் மேவு
கந்தசு ரேசர் பெருமாளே !

(ப - ரை) எந்தனுள் ஏக செம் சுடராகி - அடியேனது மனத்தகத்தில் எங்கும் நிறைந்துள்ள சிவந்த ஒளியின் உருவயாகத்தோன்றி, என் க(ண்)ணில் ஆடு - அடியேனது அகக்கண்ணுக்கு முன்னே நிர்த்தனஞ் செய்பவரும், தழல் வேணி - நெருப்பை யொத்த சடாமுடியை யுடையவரும், எந்தையர் - (உலகத்தி லுள்ள ஆன்மாக்களாகிய) எமது தந்தையும், தேடும் அன்பர் சகாயர் - தமது கருணையைப் பெறமுயலும் மெய்யன்பர்களுக்கு அருள் புரிந்து உதவி செய்ப வரும், எங்கள் சுவாமி - எங்கள் இறைவனுமான சிவபெருமான், அருள் பாலா - (எங்கள் துயரம் நீங்கும் பொருட்டுத்) தந்தருளிய பாலனே !, சுந்தர ஞான மென் குற மாது தன் திருமார்பில் - அழகு பொருந்தியவரும் (உலகப்பற்றாகிய பாசத்தை யகற்றிக்கொண்டு) பதியாகிய நின்னை யடைய வேண்டுமென்ற வேட்கை யுற்றவரும் (கருணையினால்) மென்மையாகவுள்ள இதயமுடையவரும் குறக்குலத்தில் வளர்ந்தவருமான வள்ளிநாயகியின் அழகிய தனபாரங்களின்மீது, அணைவோனே - அணைந்து பொருந்துபவனே !, சுந்தரமான செந்திலில் மேவு கந்த - அழகு பொருந்திய திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் கந்தனே !, சுர ஈசர் பெருமாளே - தேவர்களது தலைவர்களான மும்மூர்த்திகளுக்கும் நாய கனே!, காயம்-தேகமானது, விந்து அதின் ஊறி வந்தது-(ஒரு சிறு துளி) விந்துவி னின்றும் தோன்றிப்பெருத்து, வெந்தது - தீயில் எரிந்து போனது, (கணக்கிட் டால்), கோடி-கோடிக்கணக்கானவை, இனி மேல் (ஓ-அசை) விண்டு விடாமல்- இனிமேல் உயிரானது உடலைவிட்டுப் பிரியாவண்ணம், உன் பதம் மேவு விஞ்சை யர் போல-நினது பாதங்களில் வந்து சேரும் அறிவாளர்களைப்போல, அடியேனும் வந்து - நின்னையணுகி வந்து, விநாசம் உன்(னும்) கலி தீர - அடியோடழிவதை நாடும் அகந்தை நீங்கப்பெறுமாறு, வண் சிவஞான வடிவாகி-உண்மைப்பொருளை யறிவதான சிவஞானத்தின் உருவத்தைப் பூண்டு, வன் பதம் ஏறி - வலிமை யுள்ள கால்களையுடைய மயிலின்மீது ஏறி, என் களை ஆற வந்து - அடியேன் (உலகத்தில் உழலுவதனால்) அடைந்துள்ள சோர்வு நீங்கும் பொருட்டு அடியேனி

டம் வந்து, அருள் பாதமலர் தாராய் - நினது அருளின் உருவமான நினது பாத மலர்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) பசுவானது பாசத்தை யகற்றிக்கொண்டு பதியை யடைவதே தனக்கு உற்ற நெறியென்று அறிவினால் அறிந்துகொண்டு அந்நெறியில் நிற்பதே ஞான மாதலால், முருகப்பெருமானிடத்து ஆராத காதல் கொண்ட வள்ளி நாயகியை " ஞான ...குறமாது" என்றும், அத்தகைய ஞானத்தைப்பெற்ற ஆன்மாவின் வடிவமே ஞானசொரூபியான முருகப்பெருமான் கண்களுக்கு மகிழ்ச்சியைத் தருமாதலால், " சுந்தர ஞான...குறமாது" என்றும், கருணைக்கு உறைவிடமான முருகப்பெருமானை அடைய விரும்புவோருடைய மனம் கருணை யுற்றுத் தன் வன்மையை யிழந்து மென்மையை யடையுமாகையினால், " மென் குற மாது" என்றும் கூறப்பட்டது. ஆன்மாவானது தனது வினைப்பயனுக்கேற்ப அநேக தேகங்களைப்பெற்று அவைகளை யிழக்கிறது. அது அவ்வாறு பெறும் தேகங்கள் எண்ணிறந்தன. ஆனால் பெண்ணலைகளைப்போல ஜனன மரணங்கள் மாறிமாறி ஓயாமல் வரப்பெறும் சமுத்திரத்தைவிட்டுக் கரையேறுவது முருகப்பெருமானது அருளைப்பெற்ற ஆன்மாக்களுக்கே சாத்தியம். கலி - செருக்கு - யான் எனும் அகந்தை; வண்மை - உண்மை. உண்மையாய் - என்றும் அழியாமல் நித்தியமாய்-உள்ள பொருளை அறிவது சிவஞானமாகும். " நடை பக்ஷியெனும் உக்ர துரகம்" என்று மற்றொரு பாடலில் கூறியுள்ளபடி, பக்ஷியினத்தில் அதிவேகமாய் நடந்து செல்லக்கூடிய பக்ஷி மயிலேயாகும்; ஆதலால்தான், மயில் "வன்பதம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. " உனது பததூள் புவன கிரிதான், உனது கிருபாகர மேதோ?" என்று வேறோர் பாடலில் கூறியுள்ளபடி, முருகப்பெருமானது கிருபையின் ஆகாரம் - அருளின் வடிவம் - அவரது பாதமலர்களேயாகும்; ஏனெனில், அப்பெருமானது அருளையடைந்தார் அடைவது துன்பக்கலப்பில்லாத இன்பத்தைத் தரும் முத்திவீடான அவரது பாதமலர்களன்றோ? (௪௪)

தனதான தந்த—தனதான

வரியார்க ருங்கண் மடமாதர்
மகவாசை தொந்த மதுவாகி
இருபோது நைந்து மெலியாதே
இருதாளி னன்பு தருவாயே!
பரிபால னஞ்செய் தருள்வோனே!
பரமேசு ரன்ற னருள்பாலா!

அரிகேச வன்றன் மருகோனே
அலைவா யமர்ந்த பெருமாளே.

(ப - ரை) பரிபாலனம் செய்து அருள்வோனே - அகில வுலகங்களையும் காத்தருள்வோனே!, பரமேசுரன் தன் அருள் பாலா-பரமேசுவரரான சிவபெருமானது அருளின் வடிவமான பாலனே !, அரி கேசவன் தன் மருகோனே - ஹரி கேசவன் என்னும் திருநாமங்களையுடைய திருமாலின் மருகனே !, அலைவாய் அமர்ந்த பெருமாளே - திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே !, வரி ஆர் கரும் கண் மட மாதர் மகவு ஆசை - சிவந்த வரிகள் பொருந்திய கறுத்த கண்களையுடைய அழகிய மனைவிமார்கள் மக்கள் இவர்களின் மீதுள்ள ஆசையானது, தொந்தம் அது ஆகி - தொடர்ந்து வரப் பெற்று, இரு போது நைந்து மெலியாதே - அல்லும் பகலும் துன்பமுற்றுச் சோர்வடையாமலிருக்கும் வண்ணம், இருதாளின் அன்பு தருவாயே - நினது பாதங்களிரண்டின் மீதும் அடியேனுக்கு அன்புண்டாகும்படி செய்தருள வேண்டும்.

(வி - ரை) "ஆசாமணியும் துகிலும் புனைவாள், நேசா முருகா நினதன்பருளால், ஆசா நிகளம் துகளா யினபின், பேசாவனுபூதி பிறந்ததுவே" என்று கூறியுள்ளபடி, முருகப்பெருமானது பாதமலர்களின்மீது அளவில்லாத அன்பு கொண்டவர்களே தமது கால்களிலுள்ள ஆசை யெனும் விலங்குகள் பொடியாகப் பெறுவார்கள். (சஎ)

தனதனன தான தான தந்தன
தனதனன தான தான தந்தன
தனதனன தான தான தந்தன—தனதான.

படர்புவியின் மீது மீறி வஞ்சர்கள்
வியனினுரை பானு வாய்வி யந்துரை
பழுதில்பெரு சீல நூல்க ளுந்தெரி சங்கபாடல்
பனுவல்கதை காவ்ய மாமெ ணெண்கலை
திருவளுவ தேவர் வாய்மை யென்கிற
பழமொழியை யோதி யேயு ணர்ந்துபல் சந்தமாலை
மடல்பரணி கோவை யார்க லம்பக
முதலுளது கோடி கோள்ப்ர பந்தமும்
வகைவகையி லாசு சேர்பெ ருங்கவி சண்டவாயு

மதுரகவி ராஜ னுனென் வெண்குடை
விருதுகொடி தாள மேள தண்டிகை
வரிசையொ டுலாவு மால கந்தைத விர்ந்திடாதோ ?

அடல்பொருது பூச லேவி ளைந்திட
எதிர்பொரவொ ணாம லேக சங்கர
அரஹர சிவாம ஹாதெ வென்றுனி அன்றுசேவித்

தவனிவெகு கால மாய்வ ணங்கியு
ளுருகிவெகு பாச கோச சம்ப்ரம
அதிபெல கடோர மாச லந்தர னொந்துவீழ

உடல்தடியு மாழி தாவெ னம்புய
மலர்கள்தச நூறு தாளி டும்பக
லொருமலரி லாது கோவ ணிந்திடு செங்கண்மாலுக்

குதவியம கேசர் பால இந்திரன்
மகளைமண மேவி வீறு செந்திலி
லுரியஅடி யேனை யாள வந்தருள் தம்பிரானே !

(ப - ரை) அடல் பொருது பூசல் (ஏ - அசை) விளைந்திட - (ஜலந்தராசுரன்) வலிமையுடன் (எல்லோரையும்) தாக்கிப் போர் தொடங்கியபோது, எதிர் பொரவொணமல் - அவனை எதிர்த்துப்போர் செய்யமாட்டாமல், ஏக - ஒப்புயர் வற்ற பரம்பொருளே !, சங்கர - ஆன்மாக்களுக்குச் சுகத்தைக் கொடுப்பவரே !, அரஹர - ஆன்மாக்களின் பாசத்தைக் களைந்தெறிபவரே !, சிவா - அடியவர்களுக்குச் சகல மங்களங்களும் உண்டாகும்படி செய்பவரே !, மஹாதெவ - தேவாதி தேவரே !, என்று உ(ன்)னி அன்று சேவித்து - என்று தியானித்து அந்நாளில் வழிபட்டு, அவனி வெகு காலமாய் வணங்கி - பூலோகமானது வெகு காலமாக வணங்கி (யதைக்கண்டு), உள் உருகி - கருணையினால் மனங்கசிந்து, வெகு பாச - மிகுந்த ஆணவ முடையவனும், கோச சம்ப்ரம - செல்வச் செருக் கடைந்தவனும், அதி பெல - மிகுந்த பலசாலியும், கடோர - கொடியகுணமுள்ளவனும், மா சலந்தரன் நொந்து வீழ - நிகரற்ற தீரனுமான சலந்தராசுரன் நொந்து கீழே விழும் வண்ணம், உடல் தடியும் ஆழி தா என - அவனது தேகத்தை அறுப்பதற்கு உபயோகித்த சக்கராயுதத்தைத் (தமக்குத்) தரவேண்டுமென்று பிரார்த்தித்து, தச நூறு அம்புய மலர்கள் - ஆயிரம் தாமரைமலர்களை, தாள் இடும் பகல் - பாதங்களில் இட்டு

அருச்சனை செய்ய முயன்ற நாளில், ஒரு மலர் இலாது-(ஆயிரம் மலர்களுக்கு) ஒரு மலர் குறைவாக விருக்க(க்கண்டு), கோ அணிந்திடு-(தாமரை மலரை யொத்த) தமது கண்களில் ஒன்றையே இட்டு அருச்சித்த, செம் கண் மாலுக்கு-சிவந்த (தாமரை மலரை யொத்த) கண்களையுடைய திருமாலுக்கு,உதவிய மக ஈசர் பால-அச் சக்கராயுதத்தைக் கொடுத்தருளிய மகாதேவராகிய சிவபெருமானுடைய பாலனே!, இந்திரன் மகளை மணம் மேவி-தேவேந்திரன் மகளாக வளர்ந்த தெய்வ யானையம்மையை மணம் புரிந்து கொண்டு, வீறு செந்திலில்-பெருமை வாய்ந்த திருச்செந்தூரில், உரிய அடியேனை ஆளவந்தருள் தம்பிரானே - சொந்த அடிமையாகிய என்னை ஆட்கொள்வதற்காக வந்தருளிய நாதனே!, படர் புவியின் மீது - அகன்ற பூலோகத்தில், மீறி-பெருமையுற்று, வஞ்சர்கள் வியனின் உரை பானுவாய் - வஞ்சகம் பொருந்திய மனத்தையுடையவர்களால் புத்தியில் சூரியன் இவனே என்று உயர்த்திப் புகழப்பட்டவனாகி, வியந்து உரை பழுதில் பெருசீல நூல்களும் - புகழப்படுபவைகளும் குற்றமற்றவைகளும் பெருமை வாய்ந்தவைகளுமான நீதி நூல்களையும், தெரி சங்க பாடல் (மறைந்துபோனவைகள் போகத்) தெரிந்துள்ள தமிழ்ச்சங்கப் பாடல்களையும், பனுவல் - இசைப்பாட்டுகளையும், கதை - கதைகளையும், காவ்யம் (ஆம் - அசை) - காவியங்களையும், எண் எண் கலை - அறுபத்து நான்கு சாஸ்திரங்களையும், திருவளுவதேவர் வாய்மை என்கிற பழமொழியை - திருவள்ளுவ நாயனார் அருளிச் செய்த உண்மை மொழி என்னும் பழைய நூலாகிய திருக்குறளையும், ஓதி (ஏ - அசை) உணர்ந்து - கற்றறிந்து, பல் சந்த மாலை - பல சந்தங்கள் பொருந்திய பாமாலைகளையும், மடல் பரணி கோவை ஆர் கலம்பகம் - மடல்பரணி கோவை அழகிய கலம்பகம், முதல் உளது கோடி கோள் ப்ரபந்தமும் - முதலான அநேக வகையான சிறந்த பிரபந்தங்களையும், வகை வகையில் ஆசு சேர் பெருங்கவி - வகை வகையாக ஆசு கவியாகப் பாடும் (திறமையுள்ள) பெரிய கவி (நான்), சண்ட வாயு - (கவி பாடுந்திறமையில்) புயற்காற்றை ஒத்தவன் (நான்), மதுரகவி ராஜன் நான் - இனிமையான கவிபாடுவோர்களுள் முதன்மை பெற்றவன் நான், என் - என்று கூறி, (கவிப்ரசண்டமாருதம் என்றும், மதுரகவி ராஜன் என்றும் பட்டங்கள் வைத்துக்கொண்டு), வெண் குடை விருது கொடி தாள(ம்) மேளம் - (கவித்திறமையின் அறிகுறிகளாக) வெண்மையான குடை விருதுகள் கொடி தாளம் மேளம் (இவைகள் முன் செல்லப்பெற்று), தண்டிகை வரிசையொடு உலாவு - பல்லக்கின் மீதேறி பரிசுகளாகப் பெற்ற மேற்கூறிய விருது முதலியவைகளுடன் உல்லாசமாக (நாடெங்கும்) திரியச்செய்யும், மால் அகந்தை தவிர்ந்திடாதோ - மிகுந்த அகங்காரத்தை ஒழித்துவிட மாட்டேனோ? (ஒழிக்கும்படி உதவி புரியமாட்டாயோ என்றபடி.)

(வி - ரை) ஜலந்தராசுரன் வரலாறு :—முன்னொரு காலத்தில் இந்திரன் சிவபெருமானைச் சேவிப்பதற்காகத் திருக்கைலாயத்துக்குச் சென்றான். அவன்

மனத்தில் அகங்காரம் சிறிதளவு குடிகொண்டிருந்ததை யறிந்த சர்வவியாபியான சிவபெருமான் அவன் ஆணவமலத்தை யகற்றத் திருவுளங்கொண்டு பிரமதகணத்தின் உருவத்தைப்பூண்டு திருக்கோயிலின் வாயிலில் நின்றார். இந்திரன் அப்பிரபுவை நோக்கித் தான் சிவபெருமானை அச்சமயம் பார்க்கமுடியுமா வென்று செருக்குடன் கேட்டான். சிவபெருமான் யாதும் பதிலுரையாமல் கோபத்துடன் இந்திரனை நோக்கினார். அதுகண்ட இந்திரன் மிகுந்த கோபமுற்றுத் தனது வஜ்ராயுதத்தினால் எந்தையின் மார்பினில் அடித்தான். வஜ்ராயுதம் பொடியாயிற்று. உடனே சிவபெருமான் தமது உருத்திரவுருவத்தை யெடுத்துக் கொண்டார். இந்திரன் தான் செய்த பெரும் பிழையை யுன்னி நடுநடுங்கிச் சிவபெருமானை வணங்கித் துதித்தான். கருணையங்கடலான அப்பெருமான் அவனிடம் கருணை காட்டியருளினார். பிறகு அப்பெருமான் தாமுற்ற கோபத்தின் அக்கினியைக் கடலில் எறிந்தார். அது ஒரு குழந்தையாக மாறி அழுதது. சமுத்திரராஜனாகிய வருணபகவான் அக்குழந்தையை எடுத்து வளர்த்தார். ஜலந்தரன் என்று பெயர்பெற்ற அக்குழந்தை நாளடைவில் பெருகி, சிலகாலம் கழித்துச் சில அசுரர்களைச் சேர்த்துக்கொண்டு பூலோகத்துக்கு வந்து எட்டுத்திக்குப் பாலர்களையும் ஜயித்து, பிறகு தேவர்களெல்லோரையும் போரில் வென்று, அவர்களுக்கு உதவியாக வந்த திருமாலையும் தாக்கி நெடுங்காலம் அவருடன் போர் செய்தான். திருமால் சோர்வடைந்து அவனைத் துதித்துச் சமாதானம் செய்து கொண்டார். பிறகு அவன் மதிமயங்கி, தன் மனைவியான பிருந்தையின் வார்த்தையைக் கேளாமல், தேவர்களுடன் மறுபடியும் போர் செய்வதற்காக அவர்கள் ஒளிந்து கொண்டிருந்த திருக்கைலாயத்துக்குச் சென்றான். அவன் வரவை யறிந்த தேவர்கள் சிவபெருமான் திருமுன்னரை யடைந்து, தங்களைக் காத்தருளும்படிப் பிரார்த்தித்தார்கள். சிவபெருமான் அவர்களுக்கு அபயமளித்து, ஒரு பிராமண முனிவரைப்போல வேடந்தரித்து ஜலந்தரனிடம் சென்று, "நீ யார்? எங்கு செல்கிறாய்?" என்று கேட்டார். அதற்கு அவன், "முனிவரே! என் பெயர் ஜலந்தரன். நான் தேவர்களெல்லோரையும் போரில் வென்று விட்டேன். இப்போது நான் சங்கரனை வெல்லப் போகிறேன்" என்றான். அப்போது எம்பெருமான், "சர்வலோகங்களுக்கும் ஆதிகாரணரான சம்புவை வெல்ல யாரால் முடியும்? ஆயினும் உனது திறமையைப் பார்ப்போம்; இதோ இச்சக்கரத்தைத் தூக்கி உன் தலை மீது வைத்துக்கொள்" என்று கூறித் தமது கால் பெருவிரலினால் பூமியின்மீது ஒரு சக்கரம் வரைந்தார். ஜலந்தரன் நகைத்துக்கொண்டே அதைத் தூக்கச்சென்று மிகுந்த பிரயாசையுடன் அதைத் தூக்கித் தன் தலைமீது வைத்துக்கொண்டான். உடனே அச் சக்கரம் சுழன்று நொடிப்பொழுதில் அவனை இருதுண்டங்களாக்கிவிட்டுப் பூமியில் வீழ்ந்தது. ஜலந்தரனும் மடிந்தான்.



திருச்செந்தூர் முருகன் திருக்கோயில்

**சிவபெருமான் திருமாலுக்குச் சக்கரம் அளித்த வரலாறு:**—முன்னொரு காலத்தில் அசுரர்களால் மிகவும் துன்பமடைந்த தேவர்கள் திருமாலையடைந்து தங்களைக் காத்தருளும்படி பிரார்த்திக்க, திருமால் தாம் தமது சக்கராயுதத்தைத் ததீசி முனிவரின்மீது பிரயோகித்ததனால் அவ்வாயுதம் முனை முறிந்து போய் விட்டபடியால் தம்மால் அசுரர்களை வெல்ல முடியாது என்று கூறினர். அப் போது தேவர்கள் சிவபெருமான் ஜலந்தராசுரனைச் சங்கரிப்பதற்காகச் சிருஷ் டித்த சக்கராயுதத்தைப் பெற முயற்சி செய்யும்படி திருமாலை வேண்டிக்கொண் டார்கள். திருமால் அதற்கு உடன்பட்டுக் காஞ்சிபுரத்துக்குச் சென்று, அங்கு சிவ பெருமானைத் தினந்தோறும் ஆயிரம் தாமரைமலர்களினால் அருச்சித்து வந்தார். ஒரு நாள் ஒரு மலர் குறைவாயிருந்ததைக்கண்ட திருமால் தமது நேத்திரங்களி லொன்றைப் பறித்து அம்மலருக்குப் பதிலாக உபயோகித்து அருச்சித்தார். உடனே சிவபெருமான் களிப்புற்று அவர் கோரிய சுதர்சனம் என்னும் பேரொளி வீசும் சக்கராயுதத்தை அவருக்கு அளித்து, அவருக்குத் தாமரை மலர்களை யொத்த கண்களையும் அளித்து, அவர் கோரியபடி அவரை யாவரும் கமலக்கண் ணன் என்று அழைக்கும்படி வரமும் தந்தருளினர்.

348-ம் பக்கத்தில் "தண்டையணி வெண்டையம்" என்று தொடங்கும் பாடலில் "செந்திலிலும் என்றன் முன் கொஞ்சி நடனங்கொளும் கந்தவேளே" என்று கூறியுள்ளபடி, இப்பாடலிலும், "செந்திலிலுரிய அடியேனை யாள வந்தருள் தம்பிரானே" என்று கூறப்பட்டிருப்பதைக் கவனிக்கவும். (௬அ)

தனனத் தனன தனனத் தனன
தனனத் தனன—தனதான.

நிலையாப் பொருளை யுடலாக் கருதி
நெடுநாட் பொழுது மவமேபோய்

நிறைபோய்ச் செவிடு குருடாய்ப் பிணிகள்
நிறைவாய்ப் பொறிகள் தடுமாறி

மலநீர்ச் சயன மிசையாப் பெருகி
மடிவேற் குரிய நெறியாக

மறைபோற் றரிய வொளியாய்ப் பரவு
மலர்தாட் கமல மருள்வாயே !

கொலைகாட் டவுணர் கெடமாச் சலதி
குளமாய்ச் சுவற முதுசூதம்

குறிபோய்ப் பிளவு படமேற் கதுவு
 கொதிவேற் படையை விடுவோனே !
அலைவாய்க் கரையின் மகிழ்சீர்க் குமர
 அழியாப் புநித வடிவாகும்
அரனுர்க் கதித பொருள்காட் டதிப
 அடியார்க் கெளிய பெருமாளே !

(ப - ரை) கொலை காட்டு அவுணர் கெட - கொலைத் தொழிலையே புரிந்து வந்த அசுரர்கள் அழியுமாறும், மா சலதி குளமாய் சுவற-பெரிய சமுத்திரமானது ஒரு குளத்தைப்போல நீர் வற்றுமாறும், முதூ சூதம் குறி போய் பிளவுபட - தொன்று தொட்டுள்ளது போல் தோன்றிய மாமரமானது தனது இலட்சணத்தை யிழந்து பிளவு படுமாறும், மேல் கதுவு கொதி வேல் படையை விடுவோனே - எப்பொருளின் மீது பட்டபோதிலும் அதைத் தீப்பற்றி எரியச் செய்வதும் வெப்பம் பொருந்தியதுமான வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே !, அலைவாய்க் கரையின் மகிழ் சீர் குமர - அலைவாய் என்னும் திருநாமம் பெற்றுக் கடலோரத்திலுள்ள திருச்செந்தூரில் அமர்ந்து மகிழ்ச்சியடையும் அழகிய குமரக் கடவுளே !, அழியா புநித வடிவாகும் அரனுர்க்கு - அழிவில்லாதவரும் தூய்மையின் வடிவமானவருமான சிவபெருமானுக்கு, அதித பொருள் காட்டு அதிப - (அறிவும் அறியாமையும்) கடந்து நின்ற தனிப்பொருளை யுபதேசித்தருளிய தலைவனே !, அடியார்க்கு எளிய பெருமாளே - (நின்னிடத்து மெய்யன்பு பாராட்டும்) அடியவர்கள் எளிதில் அடையக் கூடியவனுய் நிற்கும் பெரியோனே !, நிலையாப் பொருளை உடலா(க) கருதி - நிலைத்திராத ஜடவுலகப் பொருளை (நித்தியமானதும்) அடையத்தக்க(துமான) செல்வமாக நினைத்து, நெடு நாள் பொழுதும் அவமே போய் - வெகுகாலம் பொழுது வீணுகக் கழியப்பெற்று, நிறை போய் - மனவமைதி நீங்கப் பெற்று, செவிடு குருடாய் - காது செவிடாய் ஆகவும் கண் குருடாய் ஆகவும் பெற்று, பிணிகள் நிறைவாய்-நோய்கள் நிறையப் பெற்று, பொறிகள் தடுமாறி - இந்திரியங்கள் தடுமாறப் பெற்று, மல நீர் சயன மிசையாய் பெருகி மடிவேற்கு - மல மூத்திரங்களைக் கிடக்கும் படுக்கையிலேயே பெருக விட்டு இறக்கும் இயல்புடைய அடியேனுக்கு, உரிய நெறியாக - சொந்தமான கதியாக (நீ கருதி), மறை போற்ற அரிய ஒளியாய் பரவு மலர் தாள் கமலம் - வேதங்களினுல் தக்கவாறு புகழ முடியாதவைகளும் பேரொளியை எங்கும் பரவச் செய்பவைகளுமான மலரை யொத்த நினது பாத தாமரைகளை, அருள்வாயே - அடியேனுக்குத் தந்தருள வேண்டும்.

(வி - ரை) முந்திய பாடலில் " உரிய அடியேனை " என்று கூறப்பட்டிருப்பதுடன் இப்பாடலில் " மடிவேற்குரிய நெறியாக " என்று கூறப்பட்டிருப்பதைச் சேர்த்துப் பார்த்து, சுவாமிகள் உரிமை கொண்டாடுவதைக் கவனிக்கவும். (சுக)

தனனதன தாந்த னந்தத்
தனனதன தாந்த னந்தத்
தனனதன தாந்த னந்தத்—தனதான.

தகரநறை பூண்ட விந்தைக்
குழலியர்கள் தேய்ந்த இன்பத்
தளருமிடை யேந்து தங்கத் தனமானார்

தமைமனதில் வாஞ்சை பொங்கக்
கலவியொடு சேர்ந்து மந்த்ரச்
சமயஜெப நீங்கி யிந்தப் படிநாளும்

புகலரிய தாந்த்ரி சங்கத்
தமிழ்பனுவ லாய்ந்து கொஞ்சிப்
புவியதனில் வாழ்ந்து வஞ்சித் துழல்மூடர்

புநிதமிலி மாந்தர் தங்கட்
புகழ்பகர்தல் நீங்கி நின்பொற்
புளகமலர் பூண்டு வந்தித் திடுவேனோ ?

தகுடதகு தாந்த தந்தத்
திகுடதிகு தீந்த மிந்தித்
தகுகணக தாங்க ணங்கத் தனதான

தனனதன தாந்த னந்தத்
தெனநடன மார்ந்த துங்கத்
தனிமயிலை யூர்ந்த சந்தத் திருமார்பா !

திதையசுரர் மாண்ட முந்தத்
திறலயிலை வாங்கு செங்கைச்
சிமையவரை யீன்ற மங்கைக் கொருபாலா !

திகழ்வயிர மேந்து கொங்கைக்
குறவனிதை காந்த சந்த்ரச்
சிகாமுகி லோங்கு செந்திற் பெருமாளே !

(ப - ரை) தகுடதகு தாந்த * * * * தனனதன தாந்த னந்தத்து—
என - என்னும் தாளத்துக் கிசைய, நடனம் ஆர்ந்த - நிர்த்தனஞ் செய்து அதை

யாவரும் கண்டு அநுபவிக்கச் செய்த, துங்க தனி மயிலை - சிறந்ததும் ஒப்பற்றது மான மயிலை, ஊர்ந்த - வாகனமாகக் கொண்டருளிய (வனே), சந்த திரு மார்பா - அழகு பொருந்தியதும் வீர லக்ஷ்மி வசிக்கப் பெற்றதுமான மார்பை யுடைய வனே !, திசை அசுரர் மாண்டு அழுந்த - எட்டுத் திக்குகளிலுமுள்ள அசுரர்கள் இறந்தும் (கீழுலங்கங்களில்) அழுந்தியும் மறையுமாறு, திறல் அயிலை - மிகுந்த சக்தி பொருந்திய வேலாயுதத்தை, வாங்கு செம் கைச்சி - பிரயோகிக்கும் அழகிய கையையுடையவரும், இமைய வரை ஈன்ற மங்கைக்கு - இமயமலை யரசன் பெற்ற புதல்வியுமான பார்வதி தேவியாருக்கு, ஒரு பாலா - ஒப்பற்ற பாலனுக உதித்தவனே !, திகழ் வயிரம் ஏந்து(ம்) - ஒளி வீசும் வயிரங்கள் இழைக்கப் பெற்ற ஆபரணங்களைத் தாங்கும், கொங்கை குறவனிதை காந்த - தனபாரங்களை யுடைய குறப் பெண்ணான வள்ளி நாயகியின் நாயகனே !, சந்த்ர சிகர(ம்) முகில் ஓங்கு-சந்திரனது வெள்ளிய வொளியைப் பரப்பும் (கோபுரச்) சிகரங்கள் மேகங்களை யளாவும்படி உயர்ந்திருக்கப்பெற்ற, செந்தில் பெருமாளே - திருச்செந்தூரில் அமர்ந்திருக்கும் பெரியோனே!, தகர நறை பூண்ட - மயிர்ச் சந்தனத்தின் நறு மணம் பொருந்தப் பெற்றுள்ளதும், விந்தை குழலியர்கள் - ஆச்சரியத்தை விளை விக்கத் தக்கதுமான கூந்தலையுடையவர்களும், தேய்ந்த - மெல்லியதும், இன்ப - இன்பத்தைத் தரவல்லதும், தளரும் - (தனங்களின் பாரத்தைத் தாங்க முடியா மல்) வருந்துவதுமான, இடை - இடையானது, ஏந்து - தாங்குகிற, தங்க தனமானுர் தமை - பொன்னை யொத்த தனபாரங்களையுடையவர்களும் மானைப் போல் அழகுவாய்ந்தவர்களுமான பெண்களை, மனதில் வாஞ்சை பொங்க - மனத் தினில் ஆசை மேன்மேலும் அதிகரிக்கப்பெற்று, கலவியொடு சேர்ந்து - புணர் வதுடன் அவர்களுடன் சேர்ந்து பழகி, சமய மந்த்ர ஜெப(ம்) நீங்கி - சமய நூல் களில் விதித்துள்ள மந்திரங்களை ஜெபிப்பதை யொழித்து, இந்த படி - இந்த பூலோகத்திலே(யே யுழன்று), நாளும் - தினந்தோறும், புகல் அரியது ஆ(கு)ம் சொல்வதற்கரிய (புகழ்பெற்ற), த்ரி சங்க - தலை இடை கடை யென்ற மூன்று தமிழ்ச் சங்கங்களின், (புலவர்கள் இயற்றிய), தமிழ் பனுவல் - தமிழ் அறிவைப் புகட்டும் நூல்களை, ஆய்ந்து - ஆராய்ந்து, புவி அதனில் கொஞ்சி வாழ்ந்து - பூலோகத்தில் அறிவு பெறாத மதலையைப்போல் வாழ்நாளைக் கழித்து, வஞ்சித்து உழல் மூடர் - பிறரை வஞ்சித்துத் திரியும் மூடர்களான, புனிதம் இலி மாந்தர் தங்கள் - தூய்மையில்லாத மனிதர்களுடைய, புகழ் பகர்தல் நீங்கி - கீர்த்தியை (தமிழ்ப் பாக்களினுல்) எடுத்துரைப்பதை யொழித்து, பொற்பு உள - அழகு பொருந்தியவைகளும், கம் - முத்தி வீடுமான, நின் அலர் - நினது பாதமலர்களை, பூண்டு - அடியேன் சிரமீது அமர்த்திக்கொண்டு, வந்தித்திடுவேனோ - வணங்கு வேனோ ?

(வி-ரை) தமிழ்ச் சங்கங்கள் மூன்று:—தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச் சங்கம். அவை தமிழறிந்த புலவர் தொகுதி. தலைச்சங்கம் :—இது அகத்தியமா

முனிவரால் தென் மதுரையில் காய்சின வழுதி யெனும் பாண்டியன் காலத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. பாண்டியன், தமிழ்ப்பாஷையில் எத்துணைத் திறமுடையோர் அச்சங்கத்திலிருப்பதற்கு உரியவரென்றும், புதிதாக ஒரு தமிழ் நூல் இயற்றியவர் அந்நூலை அச்சங்கத்தில் அரங்கேற்ற வேண்டுமென்றும், அந்நூல் அச்சங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்டால் இயற்றியோருக்குத் தான் தக்க பரிசளிப்பதாகவும் தன் நாட்டிலுள்ளோருக்குத் தெரிவித்தான். அதனால் தமிழ் மொழி பெரிதும் சிறப்புற்று வளர்ந்தது. இச்சங்கம் கடுங்கோன் காலம் வரை நிகழ்ந்தது. **இடைச்சங்கம் :—** இது சித்திர ரத பாண்டியன் எனும் சிறப்புப் பெயர் பெற்ற வெண்டேர்ச் செழியனால் கபாடபுரத்தில் ஸ்தாபிக்கப்பட்டது; முடத்திருமாறன் காலம் முடியும் வரை நிலைபெற்று நின்றது. **கடைச்சங்கம்:—** இது முடத்திருமாறன் காலம் முதல் உக்கிரப் பெருவழுதி காலம் வரை நடந்தது. மற்றும் தமிழ்ச் சங்கத்தைக் குறித்து 341-342-ம் பக்கங்களில் கூறப்பட்டிருப்பதைப் பார்க்க. சிவபெருமானே தனது அங்கத்தினருள் ஒருவராக இருக்கும் பெருமை வாய்க்கப்பெற்ற தமிழ்ச் சங்கத்தினரால் அங்கீகரிக்கப்பட்ட தமிழ் நூல்களைக் கற்றாராய்ந்து பெறும் தமிழறிவை, தமிழ் மொழியை அகத்திய மாமுனிவருக்குப் போதித்தருளியவரும் தமிழ் மொழியின் மீது மிகுந்த அன்புடையவருமான கடவுளாகிய முருகப் பெருமானது புகழை எடுத்துரைப்பதற்கு உபயோகிக்காமல் உலகத்தில் பிறரை வஞ்சித்துத் திரியும் மூடர்களைப் புகழ்வதற்கு உபயோகிப்பது கொடிய துரோகம் என்று இங்குக் குறிப்பாகக் கூறப்பட்டிருக்கிறது. ()

தந்த தனனதன தந்த தனனதன
தந்த தனனதன—தனதான.

தந்த பசிதனைய றிந்து முலையமுது
தந்து முதுகுதட வியதாயார்
தம்பி பணிவிடைசெய் தொண்டர் பிரியமுள
தங்கை மருகருயி ரெனவேசார்
மைந்தர் மனைவியர்க டும்பு கடனுதவு
மந்த வரிசைமொழி பகர்கேடா
வந்து தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க வொருமகிட மிசையேறி
அந்த கனுமெனைய டர்ந்து வருகையினி
லஞ்ச லெனவலிய மயில்மேல்நீ

அந்த மறலியொடு கந்த மனிதனம
தன்ப னெனமொழிய                                    வருவாயே!
சிந்தை மகிழுமலை மங்கை நகிலிணைகள்
சிந்து பயமயிலு                                    மயில்வீரா!
திங்க ளரவுநதி துன்று சடிலரருள்
செந்தி னகரிலுறை                                    பெருமாளே!

(ப - ரை) மலை மங்கை - இமயமலை யரசன் புதல்வியான பார்வதி தேவி யாரது, சிந்தை மகிழ - உள்ளங்களிக்க, நகில் இணைகள் சிந்து - தனபாரங்களி னின்றும் பெருகிய, பயம் - பாலமுதத்தை, அயிலும் - உண்டருளிய(வனே) அயில் வீரா - ஞானசக்தியாம் வேலாயுதத்தைத் தரிக்கும் வீரனே!, திங்கள் அரவு நதி துன்று சடிலர் அருள் - சந்திரனும் பாம்பும் கங்கா நதியும் பொருந்தப் பெற்ற சடா முடியையுடைய சிவபெருமான் தந்தருளிய (புதல்வனே!), செந்தில் நகரில் உறை பெருமாளே - திருச்செந்தூர் என்னும் நகரத்தில் அமர்ந் திருக்கும் பெரியோனே!, தந்த பசி தனை அறிந்து - அயரத்தைத் தந்தது பசி யென்பதைக் குறிப்பாக வுணர்ந்து, முலை அமுது தந்து - தனபாரங்களினின்றும் பெருகும் பாலமுதத்தை யூட்டி, முதுகு தடவிய தாயார் - முதுகைத் தடவிக் கொடுக்கும் தாயார், தம்பி - தம்பி, பணிவிடை செய் தொண்டர் - குற்றேவல் களைச் செய்யும் வேலைக்காரர்கள், பிரியம் உ(ள்)ள தங்கை—, மருகர் - சகோதரி யின் புத்திரர்கள், உயிர் எனவே சார் மைந்தர் மனைவியர் - தன்னுயிரேபோல் நெருங்கியுள்ள பிள்ளைகள் மனைவிமார்கள், கடும்பு - உறவினர், (இவர்கள்), கடன் உதவும் - ஈமக் கடனுகச் செலுத்தும், அந்த வரிசை மொழி பகர் - அந்த உப சார மொழிகளை(ப் புலம்பி)க் கூறுவதற்கான, கேடா வந்து - கெடுதியாக (அடியேனுக்கு) ஆபத்து நேர்ந்து, தலை நவிர் அவிழ்ந்து தரை புக - தலை மயிர் அவிழ்ந்து தரையில் புரளப்பெற்று, மயங்க - மயங்கும் வண்ணம், ஒரு மகிட(ம்) மிசை ஏறி - ஒரு எருமைக் கடாவின்மீது ஏறிக்கொண்டு, அந்தகன் (உம் - அசை) எனை அடர்ந்து வருகையினில் - யமன் அடியேனை நெருங்கி வரும் போது, அஞ்சல் என - பயப்படாதே என்று கூறி அடியேனுக்கு அபயமளிக்க வும், அந்த மறலியொடு - (அடியேனுயிரைக் கவர்வதற்கு வரும்) அந்த யமனிடம், உகந்த மனிதன் - ' இவன் நாம் மகிழ்வுடன் அடிமை கொண்ட மனிதன் ', நமது அன்பன் - ' இவன் நம்மிடத்து அன்பு பூண்டவன் ', என மொழிய - என்று கூறவும், வலிய மயில்மேல் நீ வருவாயே - வலிமையுள்ள மயிலின்மீது நீ வந் தருள வேண்டும்.

(வி - ரை) பார்வதி தேவியார் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்கு ஊட்டிய பாலமுதம் ஞானமான இன்னமுதமென்று கூறப்பட்டுள்ளவாறு, அத் தேவியார் கந்தப்பெருமானுக்குச் சரவணப் பொய்கையில் ஊட்டிய பாலமுதம்

ஞானமான இன்னமுதமே யாதலின், "பய மயிலு மயில் வீரா" என்னும் மொழித்தொடரைப் "பயம் அயிலும் மயில் வீரா" என்று பிரிக்காமல், ஞான மான இன்னமுதத்தைப் பருகி ஞான சக்தியைத் தரிக்கும் வீரனே என்னும் இசைவான பொருளைத் தரும் வண்ணம் "பயம் அயிலும் அயில் வீரா" என்று பிரிக்கப்பட்டது. ஒருவன் எப்படிப்பட்ட குணமும் ஒழுக்கமும் உடையவனு யிருந்தபோதிலும், அவன் இறந்தவுடன் அவனைப் புகழ்ந்து அவனது பிரிவைச் சகிக்கமுடியாதென்று உபசாரமாகக் கூறுவது உலகத்தில் வழக்கமாயிருப்பது யாவரும் அறிந்த விஷயமே யாகலின், தாயார் முதலியோர் "கடனுதவு மந்த வரிசைமொழி" என்றார் சுவாமிகள். (ருக)

தனத்தந்தன தனத்தந்தன
தனத்தந்தன—தனதான.

தரிக்குங்கலை நெகிழ்க்கும்பர
தவிக்குங்கொடி மதனேவிற்

றகைக்குந்தனி திகைக்குஞ்சிறு
தமிழ்த்தென்றலி னுடனேநின்

றெரிக்கும்பிறை யெனப்புண்படு
மெனப்புன்கவி சிலபாடி

இருக்குஞ்சிலர் திருச்செந்திலை
யுரைத்துய்ந்திட அறியாரே!

அரிக்குஞ்சதுர் மறைக்கும்பிர
மனுக்குந்தெரி வரிதான

அடிச்செஞ்சடை முடிக்கொண்டிடு
மரற்கும்புரி தவபாரக்

கிரிக்கும்பகன் முநிக்குங்க்ருபை
வரிக்குங்குரு பரவாழ்வே!

கிளைக்குந்திற லரக்கன்கிளை
கெடக்கன்றிய பெருமாளே!

(ப - ரை) அரிக்கும் - திருமாலுக்கும், சதுர் மறைக்கும் - நான்கு வேதங் களுக்கும், பிரமனுக்கும் - பிரமதேவர்க்கும், தெரி அரிது ஆன - அறிய முடியா வண்ணம் நின்ற, அடி - பாத மலர்களையும், செம் சடை முடி - சிவந்த சடா முடியையும், கொண்டிடும் அரற்கும் - கொண்டு (ஜோதிப் பிழம்பாய்) நின்ற சிவபெருமானுக்கும், புரி தவ பார கிரி - தாம் புரிந்த தவம் பெரிய மலையைப்

போலிருக்கப் பெற்ற(வரும்), கும்ப நல் முநிக்கும் - கும்பத்திலிருந்து தோன்றியவருமான நல்ல அகத்திய மாமுநிவருக்கும், க்ருபை வரிக்கும் - கருணை புரிந்த, குரு பர - பரம குருவே!, வாழ்வே - (பரம குருவாயிருந்து) அவர்களுக்கு வாழ்வை யளித்தவனே!, கிளைக்கும் திறல் அரக்கன் கிளை - எண்ணிறந்த சுற்றத்தவர்களை யடைந்து பெருவலிமை பெற்றிருந்த சூரபதுமனது சுற்றத்தவர்கள், கெட - அழியுமாறு, கன்றிய பெருமானே - கோபித்த பெரியோனே!, தரிக்கும் கலை நெகிழ்க்கும் பாதவிக்கும் - (விரகதாபத்தினால்) தான் உடுத்திருக்கும் ஆடையைத் தளர்த்திக்கொண்டு துயருறும், கொடி - கொடியையொத்த பெண், மதன் ஏவில் - மன்மதனால் ஏவப்பட்டால், தகைக்கும் தனி திகைக்கும் - வாட்டித் தனிமையை யடைந்து மயங்கும்படி செய்யும் இயல்புடைய(தும்), சிறு தமிழ் தென்றலினுடனே நின்று - தமிழின் சொந்த வீடுள்ள தென்றிசையிலிருந்து வரு(வது)ம் (ஆன) மெல்லிய தென்றற்காற்றினோடு சேர்ந்துநின்று, பிறை எரிக்கும் என - சந்திரன் (நாயகனைவிட்டுப் பிரிந்திருந்த) தன்னை (விரகதாபம் என்னும் தீயை மூட்டி) எரிக்குமென்று, புண்படும் என - மனம் நொந்து வருந்துவாள் என்று, புன் கவி சில பாடி இருக்கும் சிலர் - அற்பமான பாடல்கள் சிலவற்றைப் பாடி வாழும் சிலர், திரு செந்திலை உரைத்து உய்ந்திட அறியார் - (ஏ - அசை) திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் நின்னைப் புகழ்ந்து பாடி நற்கதியடைய அறியமாட்டார்கள்.

(வி - ரை) திருமாலும் பிரமதேவரும் அடி முடி தேடி அறியமுடியா வண்ணம் சிவபெருமான் ஜோதிப் பிழம்பாகநின்ற வரலாற்றை 24 - 25 பக்கங்களில் காண்க. ஞான தேசிகரான முருகப்பெருமான் சிவபெருமானுக்கும் அகத்திய முனிவருக்கும் பிரணவத்தின் மாபொருளை யுபதேசித்து அருள்புரிந்தார். முருகப்பெருமானிடம் உபதேசம் பெற்றதனால் சிவபெருமான் வாழ்வு பெற்றார் என்று கூறுவது பொருந்துமோவெனில், உலகத்திலுள்ள ஆன்மாக்களெல்லாம் ஒரு ஞானதேசிகனையடைந்து வாழ்வுற்றால் ஆன்மாக்களின் தந்தையாகிய சிவபெருமானும் வாழ்வடைகிறாராதலால், அவ்வாறு கூறுவது பொருந்தும். "கிளைக்குந் திறலரக்கன் கிளை கெடக்கன்றிய பெருமாளே" என்னுமிடத்து அசுரர்கள் யாவரும் மாண்டுபோய்ச் சூரபதுமன் தனித்து நின்றபோது, அவன் மாயையின் உதவியினால் தனது சுற்றத்தவர் அனைவரையும் உயிர்ப்பிக்க, முருகப்பெருமான் அவர்களனைவரையும் ஒருங்கே அழித்ததும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. (௫உ)

தந்தந்தந் தந்த தனந்தன
தந்தந்தந் தந்த தனந்தன
தந்தந்தந் தந்த தனந்தன—தனதான.

துன்பங்கொண் டங்க மெலிந்தற
நொந்தன்பும் பண்பு மறந்தொளி
துஞ்சும்பெண் சஞ்ச லமென்பதி லணுகாதே

இன்பந்தந் தும்பர் தொழும்பத
கஞ்சந்தந் தஞ்ச மெனும்படி
யென்றென்றுந் தொண்டு செயும்படி யருள்வாயே!

நின்பங்கொன் றுங்குற மின்சர
ணங்கண்டுந் தஞ்ச மெனும்படி
நின்றன்பின் றன்படி கும்பிடு மிளையோனே!

பைம்பொன்சிந் தின்றுறை தங்கிய
குன்றெங்குஞ் சங்கு வலம்புரி
பம்புந்தென் செந்திலில் வந்தருள் பெருமாளே!

(ப-ரை) நின் பங்கு ஒன்றும் - நினது பக்கத்தில் நெருங்கி நிற்கும், குற மின் - குறப் பெண்ணான வள்ளி நாயகியின், சரணம் கண்டு (உம்-அசை)-பாதங்களைக் கண்டு, தஞ்சம் எனும்படி நின்று - அவைகளே உனக்குப் புகலிடம் என்று சொல்லும்படி அவைகளை யணுகி நின்று, அன்பின் தன்படி கும்பிடும் இளையோனே - அன்பைக்காட்டும் முறைப்படி கும்பிட்டு வணங்கிய குமரனே!, பைம் பொன் சிந்தின் துறை தங்கிய - பசும்பொன் சமுத்திரத்தின் துறைமுகத்தில் தங்கும்படி செய்யும், குன்று எங்கும் - குன்றுகளில் எங்கும், வலம்புரி சங்கு பம்பும் - வலம்புரிச் சங்கங்கள் ஆரவாரிக்கப் பெற்ற(தும்), தென் செந்தில் வந்து அருள் பெருமாளே - தென்றிசையிலுள்ள(துமான) திருச்செந்தூரில் வந்து எழுந்தருளிய பெரியோனே!, துன்பம் கொண்டு அங்கம் மெலிந்து - (விரகதாபத்தினால்) துன்பமுற்றதனால் தேகம் மெலியப்பெற்று, அற நொந்து - மிகவும் மனத்துயரமுற்று, அன்பும் - நினது பேரன்பையும், பண்பும் - (கருணையின் வடிவமான) நினது தன்மையையும், மறந்து—, ஒளி துஞ்சும் - அறிவின் ஒளி மங்கப்பெறும்படி செய்யும், பெண் சஞ்சலம் என்பதில் அணுகாதே - பெண்ணின்மேல் காதல் கொள்வதனால் உண்டாகும் மனக்கவலையில் நெருங்கிச் சோாமலிருக்கும் வண்ணம், இன்பம் தந்து - பேரின்பத்தை அடியேனுக்கு ஊட்டி, உம்பர் தொழும் பத கஞ்சம் த(ா)ம் - தேவர்கள் வணங்கும் நினது பாதத் தாமரைகளே, தஞ்சம் எனும்படி - (அடியேனுக்குப்) புகலிடமென்று அடியேன் கூறுமாறும், என்றென்றும் தொண்டு செ(ய்)யும்படி அருள்வாயே - என்றென்றைக்கும் அடியேன் உனக்குத் தொண்டுபுரிந்து வருமாறும் அருள்புரிய வேண்டும்.

(வி-ரை) பதி பசு இரண்டும் அநாதியாகவுள்ளவை யாதலின், பதியை விட்டால் பசுவுக்குக் கதியில்லை, பசுவை விட்டால் பதிக்குத் தொழிலில்லை யென்பதே இங்கு உணர்த்தப்பட் டிருக்கிறது. சிற்றின்பமானது பேரின்பத்தை உருசியில் ஒருவாறு ஒத்திருப்பதனால் மனிதர் மனத்தைக் கவர்ந்து பேரின்பத்

தில் விருப்பங்கொள்ள வொட்டாமல் தடுக்கிறது. பேரின்பத்தின் சுவையைச் சிறிதேனும் அறிந்தவர்களுக்கே சிற்றின்பத்தின் அற்பத்தன்மை புலப்படும். பரம்பொருளின் கருணையையும் பேரன்பையும் மறந்தவரோ ஞானவொளி மங்கப் பெற்று அஞ்ஞான விருளில் அகப்பட்டுச் சிற்றின்பத்தில் உழல்வர். கடவுளிடத்து அன்பு பாராட்டுவதும் அவரது அருளைப் பெற்றாருக்கே சாத்தியமென்பது இப்பாடலில் குறிப்பாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. (ருஙு)

தானத் தானன தானத் தானன
தானத் தானன—தந்ததான.

சேமக் கோமள பாதத் தாமரை
சேர்தற் கோதும நந்தவேதா

தீதத் தேயவி ரோதத் தேகுண
சீலத் தேமிக அன்புறாதே

காமக் ரோதவு லோபப் பூதவி
காரத் தேயழி கின்றமாயா

காயத் தேபசு பாசத் தேசிலர்
காமுற் றேயும தென்கொலோதான் !

நேமிச் சூரொடு மேருத் தூளெழ
நீளக் காளபு யங்ககால

நீலக் ரீபக லாபத் தேர்விடு
நீபச் சேவக செந்தில்வாழ்வே !

ஓமத் தீவழு வார்கட் கூர்சிவ
லோகத் தேதரு மங்கைபாலா !

யோகத் தாறுப தேசத் தேசிக
வூமைத் தேவர்கள் தம்பிரானே !

(ப - ரை) நேமி சூரொடு மேரு தூள் எழ - கடலும் சூரபதுமனும் மேரு மலையும் பொடியாகித் தூள் மேலெழுமாறு, நீள காள புயங்க கால - நீண்டதும் நஞ்சுடையதுமான பாம்பைக் கால்களிற் பிடித்துள்ளதும், நீல க்ரீப - நீல நிறமுள்ள கழுத்தை யுடையதும், கலாப தேர் விடு - தோகையை யுடையதுமான வாகனமாகிய மயிலின்மீது ஏறி நடத்தும், நீப சேவக - கடம்பமலர் மாலையை அணிந்துள்ள வீரனே !, செந்தில் வாழ்வே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பவனே !, ஓம தீ வழுவார்கள் - ஓமாக்கினியை வளர்த்து வைதிக கருமங்களைச்

செய்யும் நெறியினின்றும் தவறி நடவாதவர்கள், கூர் - விரும்பும், சிவலோகத்தே- சிவலோகத்திலே, தரு(ம்) - அருள் பாலிக்கும், மங்கை பாலா - பார்வதிதேவி யாரின் புதல்வனே!, யோகத்து ஆறு உபதேச தேசிக - யோக மார்க்கத்தை உபதேசித்த குருவே! ஊமை - (தக்ஷயாகத்தில் நந்தியெம்பெருமான் தக்ஷன் சிவபெருமானை நிந்திப்பது உங்களுக்குச் சம்மதமோவென்று கேட்டபோது) ஊமைபோலிருந்த, தேவர்கள் தம்பிரானே-தேவர்களைக் காத்தருளிய கடவுளே!, சேம - (உலகத்துயரத்துக்குப் பயந்து ஓடுபவர்களுக்குக்) கோட்டையாக விருப்பவைகளும், கோமள - இளமை பொருந்தியவைகளுமான, பாத தாமரை- தாமரைமலரை யொத்த பாதங்களை, சேர்தற்கு ஓதும் - அடையும் மார்க்கத்தை எடுத்துரைக்கும், அநந்த வேத அதீதத்தே - எண்ணிறந்த சாகைகளையுடைய வேதத்துக்கப்பால் நிற்கும் பொருளின்மீதும், அவிரோதத்தே - எந்த ஜீவனிடத்தும் விரோதம் பாராட்டாமலிருக்கும் தன்மையின்மீதும், குண - நற்குணத்தின் மீதும், சீலத்தே - நல்லொழுக்கத்தின் மீதும், மிக அன்புறாதே - மிகுந்த அன்பு செய்யாமல், காமம் - பெண் காதல், க்ரோதம் - கோபம், உலோபம் - பேராசை, பூத விகாரத்தே-ஜடவேற்றுமையினால் பலவாய்த் தோன்றும் உலகப்பொருள்கள் (இவைகள்) மீதும், அழிகின்ற மாயா காயத்தே - அழியும் இயல்புடையதும் மாயையினால் உதித்து மாயை நிரம்பியுள்ளதுமான தேகத்தின்மீதும், பசு பாசத்தே- ஆன்மாவின் கால்களில் விலங்குபோல் போடப்பட்டுள்ள பாசமாகிய பஞ்சமா மலங்களின்மீதும், காமுற்று - ஆசைகொண்டு, சிலர் எயும் அது என்கொலோ (தான் - அசை) - சிலர் அவைகளில் பொருந்தியிருப்பதற்குக் காரணம் யாதோ?

(வி - ரை) "வேதா கமசித்ர வேலாயுதன் வெட்சி பூத்ததண்டைப்
பாதா ரவிந்த மரணாக வல்லும் பகலுமில்லாச்
சூதா னதற்ற வெளிக்கே யொளித்துச் சும்மாவிருக்கப்
போதா யினி மனமே தெரியா தொருபூதர்க்குமே!"

என்று கந்தரலங்காரத்தில் கூறியுள்ளபடி, மாறி மாறி இரவும் பகலும் வருவது போல் சுகமும் துக்கமும் வரப்பெற்றதும் சூது நிறைந்ததுமான உலகத்திலுண்டாகும் துயரத்தைச் சகிக்க மாட்டாமல் அவைகளற்ற விடமான சொல்லறச் சும்மாவிருக்கும் நிலைமையில் அமர்பவருக்கு முருகப்பெருமானுடைய பாதமலர்கள் அரணாக விருக்கின்றன. முத்திவீடான அப் பாதமலர்களை யடைய விரும்புவோர் யாவரிடத்தும் விரோதம் பாராட்டாமலிருக்கும் தூய்மையும் நற்குணமும் நல்லொழுக்கமு முடையவரா யிருக்கவேண்டும். அவிரோதமே ஞானத்துக்கு அடிப்படையாகும். பாசம் என்பது பசுவானது பதியின் உண்மையான தன்மையை யறிவதான மெய்ஞ்ஞானத்தை யடைந்து அதன் மூலமாய்ப் பதியைச் சேரவொட்டாமல் தடுக்கும் மலம். அது, ஆணவம், காமியம், மாயேயம், வைந்தவம் திரோதசத்தி என ஐந்து வகைப்படும். (ருசு)

தந்ததன தான தந்ததன தான
தந்ததன தான—தனதான.

கன்றிலுறு மானை வென்றவிழி யாலெ
கஞ்சமுகை மேவு முலையாலே

கங்குல்செறி கேச மங்குல்குலை யாமை
கந்தமலர் சூடு மதனாலே

நன்றுபொருள் தீர வென்றுவிலை பேசி
நம்பவிடு மாத ருடனாடி

நஞ்சுபுசி தேரை யங்கமது வாக
நைந்துவிடு வேனை யருள்பாராய்!

குன்றிமணி போல்வ செங்கண்வரி போகி
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்

கொண்ட மயிலேறி அன்றசுரர் சேனை
கொன்றகும ரேச குருநாதா!

மன்றல்கமழ் பூக தெங்குதிரள் சோலை
வண்டுபடு வாவி புடைசூழ

மந்தி நடமாடு செந்திநகர் மேவு
மைந்தஅம ரேசர் பெருமாளே!

(ப - ரை) குன்றி மணி போல்வ செம் கண் - குன்றி மணியைப் போன்றவைகளாகவுள்ள சிவந்த கண்களையுடைய, வரி போகி - நீண்ட பாம்பு, கொண்ட படம் வீசும் - எடுத்துக்கொண்ட படத்தைக் கொத்தி யெறியும், மணி கூர்வாய் கொண்ட - அழகியதும் கூர்மையானதுமான அலகையுடைய, மயில் ஏறி - மயிலின்மீது ஏறிக்கொண்டு, (சென்று), அன்று அசுரர் சேனை கொன்ற - ஒரு காலத்தில் அசுரர்களுடைய சேனையை யழித்தருளிய, குமரேச - குமார சுவாமியே! குருநாதா - ஞானதேசிகனாய்த் தோன்றிய இறைவனே!, மன்றல் கமழ் - மிகுந்த வாசனை வீசும், பூக தெங்கு திரள் சோலை - கமுகும் தென்னை மரமும் அடர்ந்துள்ள சோலைகளும், வண்டு படு - வண்டுகள் (தேனையுண்டு) சத்திக்கும், வாவி - மலர்த்தடாகங்களும், புடை சூழ - சுற்றிலும் பொருந்தி யிருக்கப் பெற்றதும், மந்தி நடமாடு - குரங்குகள் (களித்துக்) குதிக்கப்பெற்றதுமான,

செந்தில் நகர் மேவு - திருச்செந்தூர் என்னும் நகரத்தில் அமர்ந்துள்ள, மைந்த - வலிமை பொருந்திய வீரனே !, அமரேசர் பெருமாளே - தேவர்களது அதிபதி யான இந்திரனுக்கு அருள்புரிந்த பெரியோனே ! கன்றில் உறு மானை - இளமைப் பருவத்திலுள்ள மானை, வென்ற விழியாலெ (தனது அழகினால்) வென்ற கண் களினாலும், கஞ்ச முகை மேவு முலையாலே - தாமரை மொட்டை யொத்த தன பாரங்களினாலும், கங்குல் செறி மங்குல் கேசம் - இருளிற் குளித்து மேகத்தை யொத்துள்ள கூந்தல், குலையாமை - அவிழாவண்ணம், கந்தமலர் சூடும் அத னாலே-நல்ல வாசனை வீசும் புஷ்பங்களைச் சூட்டிக்கொள்ளும், செய்கையினாலும் (மனமயக்கத்தை யுண்டுபண்ணி), நன்று பொருள் தீர என்று விலை பேசி - நன்மை தரத்தக்க கைப்பொருள் ஒழியுமாறு (தங்களை யனுபவிக்க) விலை பேசி, நம்பவிடும் மாதருடன் ஆடி - ஆசையுறச் செய்யும் பெண்களுடன் மதனலீலை களைச் செய்து, நஞ்சு புசி தேரை அங்கம் அது ஆக - நஞ்சுடைய பாம்பு தின்னும் தவளையின் தேகத்தைப்போல, நைந்து விடுவேனை - சோர்வடையும் அடி யேனை, அருள் பாராய் - கருணை பொழியும் கண்களினால் பார்த்தருளவேண் டும். (௯௫)

தனத்தந்தத் தனத்தந்தத்

தனத்தந்தத் தனத்தந்தத்

தனத்தந்தத் தனத்தந்தத்—தனதான.

பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்துந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக்குன்றத் தனமானார்

பரிக்குந்துற் சரக்கொன்றத்
திளைத்தங்குற் பலப்பண்பைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்

துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்புற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனைத்

துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தந்திப் படியாள்வாய் !

தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரார்க்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்

சமர்க்கெஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டத்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே!

திருக்கஞ்சத் தனைக்கண்டித்
துறக்கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன்றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே!

செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே!

(ப - ரை) தரு தங்கு - கற்பக விருக்ஷம் இருக்கும், அ பொலத்து அண்டத்தினை - அந்தப் பொன்னுலகத்தை, கொண்டு - கைப்பற்றிக்கொண்டு, அ சுரார்க்கு - அந்தத் தேவர்களுக்கு, அஞ்சு அ தட துன்பத்தினை தந்திட்டு - அவர்கள் அஞ்சுமளவு அதிகமான துன்பத்தைக் கொடுத்து, எதிர் சூரன் - (நின்னையும்) எதிர்த்துப் போர்செய்த சூரபதுமன், சமர்க்கு எஞ்சி - (ஒருவனே) போர்க்கு மிஞ்சி நின்று, படி துஞ்ச-பூமியில் இறந்து விழுமாறு, கதிர் துங்கத்து - பேரொளி வீசிச்சிறந்திருக்கும், அயில் கொண்டு-வேலாயுதத்தைப் பிரயோகித்தமையினாலே, அ தலத்து உம்பர் பதிக்கு - அந்த வானுலகத்திலுள்ள தேவர்களுக்கு அதிபதியான இந்திரனுக்கு, அன்பு உற்று அருள்வோனே - அன்பு பூண்டு அருள் புரிந்தவனே! திரு கஞ்சத்தனை கண்டித்து - திருமாலின் திருநாபிக்கமலத்தினில் தோன்றிய பிரமதேவரைக் கண்டித்து, கம் உற குட்டி விட்டு (உம்-அசை)-தலையில் பலமாகக் குட்டிவிட்டு, சத் சிவற்கு அன்று அ பொருள் - ஆதியந்தமற்ற உண்மைப் பொருளான சிவபெருமானுக்கு அக்காலத்தில் அந்தப் பிரணவப் பொருளை, கொஞ்சி பகர்வோனே - மதலைச் சொற்களினால் உபதேசஞ் செய்தருளியவனே!, செய துங்க - வெற்றியில் சிறந்தவனே! கொடை துங்க - ஈகையில் சிறந்தவனே! திரு தங்கி தரிக்கும் - செல்வம் நிலைத்திருக்கப் பெற்ற, பொன் திருச்செந்தில் பதி கந்த பெருமாளே - அழகிய திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில் அடியவர் பகையை யழிக்கும் மூர்த்தியாய் அமர்ந்திருக்கும் பெரியோனே!, பருத்து அந்தத்தினை தந்திட்டிருக்கும் - பருத்து அழகைத் தருபவைகளும், கச்சு அடர்த்து உந்தி பருக்கும் - (தம்மேல் போட்டுள்ள) கச்சை நெருக்கி உயர்ந்து புடைத்தெழுபவைகளும், பொன் ப்ரபை குன்ற தன

மானார் - பொன்னின் ஒளி வீசிக் குன்றுகளை யொத்திருப்பவைகளுமான தன பாரங்களையுடையவர்களும் மானின் சாயலை யுடையவர்களுமான பெண்கள், பரிக்கும் தன் சரக்கு ஒன்ற - சுமக்கும் மிகுந்த வியாபாரச் சாக்குகளான அவய வங்கள் (அடியேன் தேகத்தில்) பொருந்தும்படி கலவி செய்து, இளைத்து - (கலவியிலேயே) அழுந்திக் கிடந்து, அங்கு உற்பல பண்பை பரக்கும் - அப் போது கருங்குவளை மலரின் தன்மையை விசாலமாகக் காட்டுபவைகளும், சக் கரத்தின் சத்தியை நேரும் - சக்கராயுதத்துக்குள்ள (அழிக்கும்) சக்தியையொத்த சக்தியை யுடையவைகளும், துரை செம் கண் கடைக்கு ஒன்றி - மிகவும் சிவந் தவைகளுமான கண்களின் கடையினால் பார்க்கும் பார்வைக்கு இசைந்து, பெருத்த அன்பு உற்று இளைத்து - மிகுந்த காதல்கொண்டு சோர்வடைந்து, அங்கு துணிக்கும் புத்தியை - அந்நிலையில் (மனங்கலங்காமல்) துணிவுற்றிருக்கச் செய்யும் புத்தியை, சங்கித்து அறியேனை - சந்தேகித்து உண்மையை ஆராய்ந் தறியாத அடியேனை, செம் பொன் துணை பதத்து - சிவந்த பொன்னின் ஒளி வீசும் நினது இருபாதங்களில், இன்பு உற்று - இன்பமடையச் செய்து (சேர்த் துக்கொண்டு), அ பொருள் தங்க தொடுக்கும் தமிழ் சொல் - அன்று நீ சிவபெரு மானுக்கு உபதேசித்த பிரணவப் பொருள் பொருந்தியிருக்குமாறு பாமாலை தொடுப்பதற்குவேண்டிய தமிழ்ச் சொல் அறிவை, எனக்கு என்று தந்து - அடி யேனுக்கு என்றைக்குத் தந்தருளி, இ படி ஆள்வாய் - இப்பூமியில் அடியேனை ஆட்கொண்டு அருள்வாய்?

(வி - ரை) உலகத்தில் சம்பவிக்கும் பாவச் செயல்களுக்கெல்லாம் காரணம் அஞ்ஞானமேயாதலானும், அஞ்ஞானத்தை ஞானம் வெல்வது என்றும் திண்ண மாதலானும், ஞான சத்தியாம் வேலாயுதத்தைக் கையில் ஏந்தியிருக்கும் முருகப் பெருமானை 'செயதுங்க' என்றும், அப்பெருமான் 'யார் வேண்டினாலும் கேட்ட பொருள் ஈயும் தியாக' மூர்த்தியாதலானும், 'வேண்டிய போதடியர் வேண்டிய போகமது வேண்ட வெறாதுதவு பெருமாள்' ஆதலானும் அப்பெருமானை 'கொடைத்துங்க' என்றும் சுவாமிகள் விளித்திருக்கிறார். பெண்களின் கடைக் கண் பார்வையில் மயங்கி மிகுந்த காதல்கொண்டு தேகமும் மனமும் சோர்வுறப் பெற்றும், அக்காதலை யொழித்துத் துன்பத்தை யகற்றிக்கொள்ள முயலாமல் அந்நிலைமையிலேயே பொருந்தியிருக்கத் துணியும்படி செய்யும் புத்தி சரியான மார்க்கத்தில் செல்லவில்லையென்று சந்தேகித்து, அப்புத்தியைச் சரியான நெறி யில் செலுத்தி அந்நிலைமையின் தன்மையை ஆராய்ந்து பார்த்தால் அதன் பொய்ம்மையும் கொடுமையும் தெளிவாய் விளங்கி அதன்மேல் வெறுப்புண் டாகும். உலகத் துயரத்தில் அகப்பட்டுத் தியங்குவதற்கு அஞ்ஞானமே கார ணம்; புத்தியினால் ஆராய்ந்து பார்த்தால் உண்மை விளங்கும்; அவ்வுண்மை விளக்கமே ஞானமாகும். (௫௬)

தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்—தனதான.

குழைக்குஞ்சந் தனச்செங்குங்
குமத்தின்சந் தநற்குன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே

குழைக்குங்குண் குமிழ்க்குஞ்சென்
றுரைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்கும்பண் தழைக்குஞ்சிங் கியாலே

உழைக்குஞ்சங் கடத்துன்பன்
சுகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டுடற்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே

உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
ப்ரபைக்கொன்றுஞ் சிவக்குந்தண்
டியர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் சடிசேராய்!

தழைக்குங்கொன் றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தரத்தஞ்செம் புயத்தொன்றும் பெருமானுர்

தனிப்பங்கின் புறத்தின்செம்
பரத்தின்பங் கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக்கென்றும் பெருவாழ்வே!

கழைக்குங்குஞ் சரக்கொம்புங்
கலைக்கொம்புங் கதித்தென்றுங்
கயற்கண்பண் பளிக்குந்திண் புயவேளே!

கறுக்குங்கொண் டலிற்பொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ்செந்
திலிற்கொண்டன் பினிற்றங்கும் பெருமாளே!

(ப-ரை) தழைக்கும் கொன்றையை - வாழ்வு பெற்ற கொன்றை மல மாலையை, செம் பொன் சடை கண்டு - சிவந்த பொன்னின் ஒளி வீசும் சடா முடியின்மீது அணிந்துகொண்டு, அங்கியை - அக்கினியை, தங்கும் தரத்து

தாங்கும் முறைப்படி, அம் செம் புயத்து - அழகும் இலக்ஷணமும் வாய்ந்த கரத்தினில், ஒன்றும் - பொருந்தும்படி தரித்துள்ள, பெருமானார் - இறைவராகிய சிவபெருமானது, தனி பங்கின் புறத்தில் - ஒப்புயர்வற்ற வலப்பாகத்தின் பக்கத்தில் (அதாவது, வாமபாகத்தில்), செம்பரத்தின் பங்கயத்தின் செம்பரத்தை மலரையும் தாமரை மலரையும் ஒத்த திருமேனியை யுடையவராய் உலாவும், சங்கரிக்கு என்றும் பெருவாழ்வே - பார்வதி தேவியாருக்கு எப்போதும் பேரானந்தத்தை யுண்டு பண்ணுபவனே !, கழைக்கும் - கரும்பைப் போல் இனிமை தரும், குஞ்சர கொம்பும் - (ஐராவதத்தின் மகளாக வளர்ந்த) தெய்வயானை யம்மையாரும், கலை கொம்பும்-மானின் மகளாய்த் தோன்றிய வள்ளி நாயகியும், கதித்து - குதூகலத்துடன், என்றும் - சதாகாலமும், கயல் கண் பண்பு அளிக்கும் - கயல்மீனை யொத்த கண்களின் குணத்தை எவைகளினிடத்துக் காட்டுகிறார்களோ அந்த, (ஓயாது சலனமுறும் கண்களினால் எவைகளைப் பார்க்கிறார்களோ அந்த), திண் புய வேளே - வலிமை பொருந்திய புயங்களையுடைய குமாரசுவாமியே!, கறுக்கும் கொண்டலில் - கறுத்த மேகங்களின் மீது, பொங்கும் கடல் சங்கம் கொழிக்கும் - ஆரவாரித்து எழும் கடலானது சங்கங்களை வீசி யெறியும் (தலமான), செந்திலில் கொண்டு-திருச்செந்தூரில் கோயில் கொண்டு, அன்பினில் தங்கும் பெருமாளே - (அத்தலத்தின் மீதுள்ள) அன்பினால் அங்கே நிலைபெற்று அமர்ந்திருக்கும் பெரியோனே !, குழைக்கும் சந்தன செம் குங்குமத்தின் - சேர்த்துக் கலந்த சந்தனம் சிவந்த குங்குமம் இவைகளை யணிந்து, சந்த - அழகாய் விளங்கும், நல் குன்றம் குலுக்கும் - நல்ல குன்றங்களை யொத்த தனபாரங்களை அசைத்து நடிக்கும், பைம் கொடிக்கு - என்றும் பசுமையான கொடியை யொத்த பெண்களுக்காகவென்று, இங்கு - இவ்வுலகில், இயலால் (ஏ - அசை) - தமது சுபாவத்தின்படி, குழைக்கும் - (காதுகளில் அணிந்துள்ள) குழைகளுக்கும், குண்குமிழ்க்கும் - கண்கள் குவிந்து ஒன்றையொன்று நெருங்குமிடத்துக்கும், சென்று - (சஞ்சலித்து மாறி மாறிச்) சென்று, உரைக்கும் - அவைகளைத் தேய்க்கும், செம் கயல் கண் கொண்டு அழைக்கும் - சிவந்த நிறமுள்ளவைகளாகக் கயல்மீனை யொத்திருக்கும் கண்களினால் (சைகை செய்து) அழைக்கும் இயல்புடையவரும், பண் தழைக்கும் - மிகுந்த அழகுள்ளவரும், சிங்கியராலே - காம நோயை யுண்டாக்குபவருமான பெண்களினாலே, (பெண்களின்மீது கொள்ளும் ஆசையினாலே), உழைக்கும் சங்கட துன்பன் - (பொருள் தேடி) உழைத்துத் தொலைவயுற்று வருந்தும் அடியேன், சுக பண்டம் சுகித்து உண்டு உண்டு - இன்பத்தைத்தரும் உணவுப் பொருள்களை இன்பமாக மேன்மேலும் உண்டு, உடல் பிண்டம் பருத்து - தேகத்திலுள்ள மாமிசம் பருத்து வளரப்பெற்று, இன்று இங்கு உழலாதே - இப்போது இவ்வுலகத்தில் மயங்கித் திரியாமலிருக்கும் வண்ணம், உதிக்கும் செம் கதிர் - உதய காலத்தில் தோன்றும் சிவந்த ஒளி பொருந்திய சூரியன், சிந்தும் ப்ரபைக்கு ஒன்றும் - வீசும்

ஒளியை யொத்த ஒளியையே வீசுகிறவைகளும், சிவக்கும் தண்டு உயர்க்கும் - சிவந்த பூவின் இதழ்களைக் காட்டிலும் (நிறத்திலும் மென்மையிலும்) சிறந்தவைகளும், கிண் கிணி - சதங்கைகளை யணிந்துள்ளவைகளும், செம் பஞ்சு அடி சேராய் - சிவந்த பஞ்சை யொத்த வைகளுமான பாதார விந்தங்களில் அடியேனைச் சேர்த்துக் கொண் டருளவேண்டும். (கூள)

தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்—தனதான.

கருப்பந்தங் கிரத்தம்பொங்
கரைப்புண்கொண் டிருக்கும்பெண்
களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே

கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்
துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறிச்

செருத்தண்டந் தரித்தண்டம்
புகத்தண்டந் தகற்கென்றுந்
திகைத்தந்திண் செகத்தஞ்சுங் கொடுமாயுந்

தியக்கங்கண் டுயக்கொண்டென்
பிறப்பங்கஞ் சிறைப்பங்கஞ்
சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே!

அருக்கன்சஞ் சரிக்குந்தெண்
டிரைக்கண்சென் றரக்கன்பண்
பனைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா!

அணிச்சங்கங் கொழிக்குந்தண்
டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
தளிக்குஞ்செந் திலிற்றங்குங் குமரேசா!

புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
கார்க்குஞ்சங் கார்க்கின்பம்
புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனேய்!

## 3. திருச்சீரலைவாய்—திருச்செந்தூர் 

புனக்குன்றந் திளைக்குஞ்செந்
தினைப்பைம்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே !

(ப - ரை) அருக்கன் சஞ்சரிக்கும் தெண் திரைக் கண் சென்று - சூரியன் சஞ்சரிக்கும் பூமத்தியரேகை செல்லும் சமுத்திரத்தினிடத்தே சென்று, அரக்கன் பண்பு அனைத்தும் பொன்றிட - சூரபதுமனுடைய சிறப்புகளெல்லாம் அழியுமாறு, கன்றும் - கோபித்தருளிய, கதிர் வேலா - பேரொளி வீசும் வேலாயுதத்தைத் தரிப்பவனே !, அணி சங்கம் கொழிக்கும் - கூட்டமாகவுள்ள சங்கங்களை வீசி யெறிவதான, தண் தலை பண்பு - சமுத்திரத்தின் குணமானது, எண் திசைக்கும் கொந்தளிக்கும் - எட்டுத் திக்குகளிலும் ஆரவாரத்துடன் காணப்படும் (தலமான), செந்திலில் தங்கும் குமரேசா - திருச்செந்தூரில் அமர்ந்திருக்கும் குமாரசுவாமியே !, புரக்கும் சங்கரிக்கும் - (சிவபெருமானது அருள்வடிவமாக நின்று சகல வுலகங்களையும்) காப்பாற்றியருளும் உமாதேவியாருக்கும், சங்கரர்க்கும் - ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்யும் சிவபெருமானுக்கும், சங்கரர்க்கு இன்பம் புதுக்கும் கங்கையட்கும் - அச்சிவபெருமானுக்கு இன்பத்தை விசித்திரமாக ஊட்டும் கங்காதேவிக்கும், தம் சுதன் ஆனாய் - உரிய புதல்வனாகத் தோன்றியவனே !, புன குன்றம் திளைக்கும் செம் தினை - வயல்கள் பொருந்திய குன்றில் (எங்கும்) நிறைந்துள்ள செழிப்பான தினைப்பயிரை (காத்துவந்த), பைம் பொன் குற கொம்பின் - பசும் பொன்னை யொத்த திருமேனியையுடைய குறப்பெண்ணான வள்ளி நாயகியின், புறத்து அண் - பக்கத்தில் அணுகிச் சென்ற(வனும்), கொங்கையில் துஞ்சும் - அத்தேவியாரின் தனபாரங்களின்மீது பொருந்தி யுறங்கு (பவனு)ம் (ஆன), பெருமாளே - பெரியோனே !, கருப்பம் தங்கு இரத்தம் பொங்கு அரைப்புண் கொண்டு உருக்கும் பெண்களைக் கண்டு - அங்கு அவர் பின் சென்று (கண்டவுடன் காதல்கொண்டு) உடனே அவர்களைப் பின் தொடர்ந்து சென்று, அவரோடே கலப்புண்டும் - அவர்களோடே கலவி செய்தும், சிலுப்புண்டும் - மனக்கலக்கமுற்றும், துவக்குண்டும் - (பெண் காதலினால்) கட்டுண்டும், பிணக்குண்டும் - கலவியில் மாறுபட்டுப் பிரிந்தும், களிப்புண்டும் - (ஒரு சமயம்) பெருமகிழ்ச்சியுற்றும், சலிப்புண்டும் - (மற்றொரு சமயம்) துக்கமடைந்தும், தடுமாறி - மதிமயங்கி, செரு தண்டு (அம் - அசை) த(ா)ரி - போர்க்குரிய வில்லை (சதாகாலமும்) தரிக்கும் மன்மதனுடைய, தண்டு அம்பு கத்து அண்டு-வில்லினால் எய்யப்படும் அம்பின் தலையில் பொருந்திய, அம் தகற்கு-அழகிய நெருப்பினால், என்றும் - சதாகாலமும், திகைத்து - மனக்கலக்கமுற்று, அம் திண் செகத்து - அழகும் வலிமையும் வாய்ந்த ஜடவுலகத்தில், அஞ்சும் கொடு - (விஷயசுகங்களை யனுபவிக்கும்படி தூண்டும்) ஐம்புலன்கள் இழுக்கும் வழியே செல்வதனால், மாயும் தியக்கம் கண்டு - அழிவதற்குரிய மனமயக்கம் (அடியேன் கொண்டிருப்பதைக்) கண்டு, உய கொண்டு - அடியேன் நற்கதியடையும்படி

அடியேனை ஆட்கொண்டு, என் பிறப்பு அங்கம்-பிறவியினுல் எனக்குக் கிடைத்த தேகம் என்று சொல்லப்படும், சிறை பங்கம் - அடியேனது ஆன்மா அடைபட்டுள்ள குற்றம் பொருந்திய சிறைச்சாலையை, சிதைத்து - அழித்து, உன் தன் பதத்து இன்பம் தருவாயே - நினது பாதமலர்களில் மட்டுமே கிடைக்கக் கூடிய பேரின்பத்தைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) 'அருக்கன் சஞ்சரிக்கும் தெண்டிரை' என்றதனுல் சூரபதுமனது வீரமகேந்திரபுரம் பாரதகண்டத்துக்குத் தெற்கேயுள்ள கடலில் பூமத்திய ரேகை செல்லும் பாகத்தில் இருந்ததென்று தெரிகிறது. சூரியன் பூமத்திய ரேகைக்கு நேர்மேலாகச் செல்வதாக நமது முன்னோர் கொள்கை. தண்டலை - தண் தலை - நீர்ப்பரப்பு - கடல். உமாதேவியார் சிவபெருமானது அருள் வடிவமாதலாலும், அப்பெருமானது திருவருளே உலகத்தைக் காப்பதனுலும், 'புரக்கும் சங்கரி' என்று கூறப்பட்டது. சிவபெருமானது நெற்றி விழிகளிலிருந்து தோன்றிய ஆறு தீப்பொறிகளே ஆறுமுகப் பெருமாளுக மாறியதனுல் சிவசுதனுகவும், அந்த ஆறு தீப்பொறிகளும் சிவபெருமான் உமாதேவியாரை மணந்த பின்னர் தோன்றியதனுல் பார்வதி சுதனுகவும், அந்த ஆறு தீப்பொறிகளையும் கங்காதேவி சுமந்து சென்று சரவணப் பொய்கையில் சேர்த்த பின்பே அவை ஆறுமுகப் பெருமாளுக மாறியதனுல் கங்காசுதனுகவும் முருகப்பெருமான் விளங்குகிறார். "செருத்தண்டந்தாரி" என்ற விடத்து, தாரி என்பது தரி என மாறி நின்றது செய்யுள் விகாரம். ஜடவுலக வாழ்க்கையானது பார்ப்பதற்கு அழகானதாகவும் மனத்தைக் கவரும் வல்லமை யுடையதாகவும் இருக்கிறது. அது "விருமஞ் சித்திரமா மிதுநொடி, மறையும் பொய்ப்பவுஷோ டுழல்வது, விடவும்பர்க் கரிதாம்." ஆகையினுல்தான் 'அம் தீண் சேகத்து' என்று கூறப்பட்டது. மன்மதபாணத்தினுல் விரகதாபமுற்றுத் திகைத்து ஐம்புலன்கள் இழுக்கும் வழியே சென்று ஆசையுற்று விஷயசுகங்களை யனுபவித்து மயக்கமுற்றால் இறைவனை நினைக்கவும் அவகாசம் அகப்படாதாகையினுல் பிறவி அவமாகும்; ஆகையினுல்தான் "அஞ்சுங் கொடுமையும்" என்று சொல்லப்பட்டது. ஜடவுலகத்தில் பிறப்பதனுல் கிடைக்கும் தேகமானது இருவினைப் பயனுக ஜீவன் அடைபடும் சிறைச்சாலையாகும். "ஏழையினிரட்டை வினையாய தொர் உடல் சிறையிராமல் விடுவித்தருள் நியாயக்காரனும்" என்ற விடத்து இது தெளிவாய் விளக்கப்பட்டிருக்கிறது. (ருஅ)

தனத்தத்தந் தனத்தத்தந்
தனத்தத்தந் தனத்தத்தந்
தனத்தத்தந் தனத்தத்தந்—தனதான.

பெருக்கச்சஞ் சலித்துக்கந்
தலுற்றுப்புந் தியற்றுப்பின்
பிழைப்பற்றுங் குறைப்புற்றும் பொதுமாதர்

ப்ரியப்பட்டங் கழைத்துத்தங்
கலைக்குட்டங் கிடப்பட்சம்
பிணித்துத்தங் தனத்தைத்தந் தணையாதே

புரக்கைக்குன் பதத்தைத்தந்
தெனக்குத்தொண் டுறப்பற்றும்
புலத்துக்கண் செழிக்கச்செந் தமிழ்பாடும்

புலப்பட்டங் கொடுத்தற்கும்
கருத்திற்கண் படக்கிட்டும்
புகழ்ச்சிக்குங் க்ருபைச்சித்தம் புரிவாயே !

தருக்கிக்கண் களிக்கத்தெண்
டனிட்டுத்தண் புனத்திற்செங்
குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே !

சலிப்புற்றங் குரத்திற்சம்
ப்ரமித்துக்கொண் டலைத்துத்தன்
சமர்த்திற்சங் கரிக்கத்தண் டியசூரன்

சிரத்தைச்சென் றறுத்துப்பந்
தடித்துத்திண் குவட்டைக்கண்
டிடித்துச்செந் திலிற்புக்கங் குறைவோனே !

சிறக்கற்கஞ் செழுத்தத்தந்
திருச்சிற்றம் பலத்தத்தன்
செவிக்குப்பண் புறச்செப்பும் பெருமாளே !

(ப - ரை) தருக்கி - வீரத்துடன் (வேடுவனாகச்) சென்று, கண் களிக்க - (ஜீவராசிகள்) கண்டு களிப்படையுமாறு, தெண்டனிட்டு - நமஸ்காரஞ் செய்து வணங்கி, தண் புனத்தில் செம் குறத்திக்கு - குளிர்ந்த தினைப்புனத்தில் அழகு வாய்ந்த குறப்பெண்ணான வள்ளிநாயகியினிடத்து, அன்பு உற - காதல்கொண்டு, சித்தம் தளர்வோனே - மனந்தளர்ந்தவனே !, சலிப்புற்று - அக்கமடைந்து, அங்கு - அச்சமயத்தில், உரத்தில் சம்ப்ரமித்துக் கொண்டு - தன் வலிமையைப் பற்றி இடம்பஞ் செய்துகொண்டு, அலைத்து - (நின்சேனையைத்) துன்புறுத்தி, தன் சமர்த்தில் சங்கரிக்க தண்டிய - தனது சாமர்த்தியத்தினால் (நின்னை) அழிக்க வேண்டுமென்று எதிர்த்துப் போர்செய்த, சூரன் சிரத்தை சென்று அறுத்து - சூரபதுமனது தலையைப் போய் அறுத்து, பந்து அடித்து - அதைப் பந்துபோல் அடித்து விளையாடி, திண் குவட்டை கண்டு இடித்து - வலிமை பொருந்திய

கிரௌஞ்சம் என்னும் மலையைக் கண்டு அதனை இடித்து, செந்திலில் புக்கு - திருச்செந்தூரில் புகுந்து, அங்கு உறைவோனே - அங்கு எழுந்தருளியிருப்பவனே !, சிறக்க அற்கு(ம்) - சிறப்பாக நிலைபெற்றிருக்கும், அஞ்சு எழுத்து அத்தம் - பஞ்சாக்ஷரத்தின் அர்த்தமான பிரணவப் பொருளை, திருச்சிற்றம்பலத்து அத்தன் செவிக்கு - தில்லையிலுள்ள ஞானசபையில் அமர்ந்துள்ள எந்தையாகிய சிவபெருமானது செவிகளில், பண்பு உற செப்பும் பெருமாளே - சிறப்பாகக் கூறியருளிய பெரியோனே !, பெருக்க சஞ்சலித்து - மிகுந்த சஞ்சலமுற்று, கந்தல் உற்று - சீர் கெட்டு, புந்தி அற்று - புத்தியை யிழந்து, பின் பிழைப்பு அற்று (உம் - அசை) - பிறகு பிழைப்பையும் இழந்து, குறைப்பு உற்று (உம் - அசை) தாழ்ந்த நிலைமையை யடைந்து, பொது மாதர் ப்ரியப்பட்டு - விலைமாதர்கள் (ஆகிய பெண்கள்) அடியேன்மீது ஆசைகொண்டு, அங்கு அழைத்து - உடனே அடியேனை அழைத்து, தம் கலைக்குள் தங்கிட - தமது சேலைக்குள் அடியேன் தங்கியிருக்கும்படி, பட்சம் பிணித்து - அடியேனைத் தமது பிரியத்தினால் கட்டி, தம் தனத்தை தந்து - தமது தனபாரங்களை யனுபவிப்பதற்குக் கொடுத்து, அணையாதே - அடியேனை அணைந்துகொள்ளாம லிருக்கும்படி, புரக்கைக்கு - அடியேன் வணங்குவதற்கு, உன் பதத்தை தந்து - உனது பாதமலர்களைத் தந்தருளி, எனக்கு - அடியேனுக்கு, தொண்டு உற பற்றும் - உனக்குத்தொண்டனாக ஆவதற்கு வேண்டிய அன்பையும், புலத்துக்கண் - தேசத்தினில், செழிக்க - மேன்மையுறும் வண்ணம், செம் தமிழ் பாடும் புல பட்டம் கொடுத்தற்கும் - திருத்தமான தமிழ்ப்பாடல்களைப் பாடும் திறமை வாய்ந்த புலவன் என்னும் பட்டத்தையும் கொடுப்பதற்கும், கருத்தில் கண்பட கிட்டும் புகழ்ச்சிக்கும் - (புகழ்ச்சியை) இச்சித்த மனமே கண்டு திருஷ்டிப்படுமளவு கிடைக்கும் கீர்த்தி கிடைப்பதற்கும், க்ருபை சித்தம் புரிவாயே - கருணையோடு கூடிய நோக்கத்தைப் புரிந்தருள வேண்டும்.

(வி - ரை) பஞ்சாக்ஷரமானது பதி, பசு, பாசம், பாசத்தை யொழிக்கும் பதியினருள் இவைகளையே உணர்த்தி நிற்கிறது. அப்படியே பிரணவமும் 'பதி பசுபாசத் தீர்வினை'யே உணர்த்துகிறது. ஆனதுபற்றி பிரணவத்தின் அர்த்தம் என்பதற்குப் பதிலாக அஞ்செழுத்தின் அர்த்தம் என்று கூறப்பட்டிருக்கிறது. "இடர் கலிகள் பிணியோட வினையுமருள் குறமாதின் இணையிளநிர் முலைமார்பின் அணைமார்பா" என்ற விடத்துக் குறிப்பிட்டபடி, முருகப்பெருமான் வள்ளிநாயகியின் பாதங்களில் வீழ்ந்து பணிந்ததன் காரணம், சகல ஜீவராசிகளும் ஞானதேசிகரான அப்பெருமான் தமக்கும் அப்படிப்பட்ட அருள்புரிந்து ஆட்கொண்டு தமது அருகில் அமர்த்திக்கொள்வார் என்ற உண்மையை அறியுமாறேயாதலாலும், அவ்வுண்மையை யறிந்துகொள்வதே ஜடவுலக துக்க நிவர்த்திக்கு அடிப்படையாதலாலும், "கண் களிக்கத் தெண்டனிட்டு" என்று கூறப்பட்டிருக்கிறது.

(நிக)

## 3. திருச்சீரலைவாய்—திருச்செந்தூர் சஎக

*தந்தத் தனனத் தந்தத் தனனத்*
*தந்தத் தனன—தன தான.*

அம்பொத் தவிழித் தந்தக் கலகத்
தஞ்சிக் கமலக் கணையாலே

அன்றிற் குமனற் றென்றற் குமிளைத்
தந்திப் பொழுதிற் பிறையாலே

எம்பொற் கொடிமற் றுன்பக் கலனற்
றின்பக் கலவித் துயரானுள்

என்பெற் றுலகிற் பெண்பெற் றவருக்
கின்பப் புலியுற் றிடலாமோ ?

கொம்புக் கரிபட் டஞ்சப் பதுமக்
கொங்கைக் குறவிக் கினியோனே !

கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே !

செம்பொற் சிகரப் பைம்பொற் கிரியைச்
சிந்தக் கறுவிப் பொரும்வேலா !

செஞ்சொற் புலவர்க் கன்புற் றதிருச்
செந்திற் குமரப் பெருமாளே !

(ப - ரை) கொம்பு கரி பட்டு அஞ்ச - தந்தத்தையுடைய யானையானது எதிர்ப்பட்டதனுல் அச்சமுற்ற, அ பதும கொங்கை குறவிக்கு இனியோனே - அந்தத் தாமரை மொட்டை யொத்த தனபாரங்களை யுடைய குறத்திக்கு இன்பத்தை யூட்டியவனே!, கொன்றை சடையர்க்கு - கொன்றை மலர்மாலையை யணிந்த சடாமுடியை யுடைய சிவபெருமானுக்கு, ஒன்றை தெரிய கொஞ்சி தமிழை பகர்வோனே - ஒப்பற்றதான பிரணவப்பொருளை உபதேசிக்க மதலைச் சொற்களால் தமிழ் மொழியை உரைத்தவனே!, செம் பொன் சிகர பைம் பொன் கிரியை - சிவந்த பொன்னின் ஒளியை வீசும் சிகரத்தையுடைய பைம் பொன்னை யொத்த மலையான கிரௌஞ்சமலையை, சிந்த - அது பொடியாகிச் சிதறுமாறு, கறுவி பொரும் வேலா - கோபத்தைக்காட்டிப் போர்செய்த வேலாயுதனே !, செம் சொல் புலவர்க்கு அன்புற்ற - திருத்தமான தமிழ்மொழிகளை உபயோகிக்க வல்ல புலவர்களின்மீது அன்பு பூண்ட, திருசெந்தில் குமரப்பெருமாளே - திருச்செந்தூர்க் குமரக்கடவுளே!, அம்பு ஒத்த விழி தந்த கலகத்து

அஞ்சி - அம்புபோலுள்ள கண்களையுடைய பெண்கள் பேசிய பழிச்சொற்களுக்குப் பயந்து, கமல கணையாலே - மன்மதனுடைய பாணம் வந்து மேலே தைக்கப் பெற்றதனாலே, அன்றிற்கும் - அன்றில் பறவைகளைக்கண்டும், அனல் தென்றற்கும் - தீயைப்போன்ற விரகதாபத்தை மூட்டும் தென்றல் காற்று மேலே வீசப் பெற்றும், இளைத்து - சோர்வடைந்து, அந்தி பொழுதில் - மாலைப்பொழுதில், பிறையாலே - சந்திரனாலே, எம் பொன் கொடி - பொன்னை யொத்த மேனியை யுடையவளும் கொடியை யொத்த இடையை யுடையவளுமான எமது பெண், மன் துன்ப கலன் அற்று - தான் தரித்திருப்பவைகளும் துன்பத்தைத் தருபவைகளுமான ஆபரணங்களைக் களைந்து, இன்ப கலவி துயரானாள் - இன்பத்தைத் தரும் கலவியைப் பெறாததனால் பெரிதும் வருத்த முற்றாள், உலகில் - இவ்வுலகத்தில், பெண் பெற்று - பெண்களின் செல்வம், என் பெற்று - என்ன செல்வம்?, அவருக்கு இன்ப புலி (புலவி) உற்றிடலாமோ - பெண்களுக்கு இன்பத்தில் வெறுப்பு ஏற்படலாமோ?

(வி - ரை) இப்பாடலில் "**கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழைப் பகர்வோனே**" என்று கூறப்பட்டிருப்பதனாலும், 413-ம் பக்கத்தில் "நிதிக்குப் பிங்கலன்" என்று தொடங்கும் பாடலில் "மழுக்கைக் கொண்டசங் கரர்க்குச் சென்றுவண் டமிழ்ச்சொற் சந்தமொன் றருள்வோனே" என்று கூறப்பட்டிருப்பதனாலும், முருகப் பெருமான் சிவபெருமானுக்குப் பிரணவப் பொருளை யுபதேசித்தது தமிழ் மொழியிலேயே யென்று தோன்றுகிறது. பதியாகிய தலைவனைப் பிரிந்த பசு (ஆன்மா)வான நாயகி மன்மத பாணத்தினால் அடிபட்டு மாலைப்பொழுதில் அப்பாணத்தினால் துன்புறாத பெண்களின் நிந்தை மொழிகளைக் கேட்டும், ஆணும் பெண்ணும் பிரியாமல் சேர்ந்தே இன்புற்று வசிக்கும் அன்றிற் பறவைகளைக் கண்டும், விரகதாபத்தை யெழுப்பும் தென்றல் காற்று மேலே வீசப்பெற்றும், நிலவைக்கண்டும் பெருந் துன்பமுற்று, தான் அணிந்திருக்கும் ஆபரணங்கள் விரகதாபத்தினால் துன்புறும் தனது தேகத்தை இன்னும் அதிகமாகத் துன்புறச் செய்வதனால் அவைகளைக் கழற்றி யெறிந்து விடுகிறாள். ஒரு பெண் எவ்வளவு செல்வம் பெற்றிருந்தபோதிலும், அவள் தனது நாயகனைப் பிரிந்திருக்கும்படி நேரிட்டால் அச்செல்வங்களனைத்தும் பயனற்றவை யாகிறபடியால், அவர்கள் செல்வத்தைச் செல்வம் என்று சொல்லலாமா என்கிறார் சுவாமிகள். [182, 183, 399-ம் பக்கங்களைப் பார்க்கவும். பெண்களுக்கு யாவற்றினும் நாயகனுடன் சேர்ந்திருப்பதே மேலானதாயிருப்பதாலும், நாயகனைப் பிரிந்த பெண்கள் செல்வங்களை வெறுப்பதனாலும், சுவாமிகள் "அவருக்கின்பப் புலியுற்றி டலாமோ?" என்றார். புல+இ-புலவி என்பது புலி என்று விகாரப்பட்டது. "நாலுகவித்யாகா சுரலோக சிகாமணியே" என்று கந்தரனுபூதியில் கூறியுள்ளபடி, முருகப்பெருமான் செந்தமிழ்ப் புலவர்கள் பால் மிகுந்த அன்பு காட்டுவார்.

(கூ0)

*தனத்த னத்தத் தனத்தன*
*தனத்த னத்தத் தனத்தன*
*தனத்த னத்தத் தனத்தன—தந்தான தனன.*

தெருப்பு றத்துத் துவக்கியாய்
முலைக்கு வட்டைக் குலுக்கியாய்
சிரித்து ருக்கித் தருக்கியே பண்டைகூள மெனவாழ்

சிறுக்கி ரட்சைக் கிதக்கியாய்
மனத்தை வைத்துக் கனத்தபேர்
தியக்க முற்றுத் தவிக்கவே கண்டுபேசி யுடனே

இருப்ப கத்துத் தளத்துமேல்
விளக்கெ டுத்துப் படுத்துமே
விருத்தி வைத்துப் பசப்பியே கொண்டுகாசு தணியா

திறுக்க துக்குக் கடப்படா
மெனக்கை கக்கக் கழற்றியே
இளைக்க விட்டுத் துரத்துவார் தங்கள்சேர்வை தவிராய் !

பொருப்பை யொக்கப் பணைத்ததோ
ரிரட்டி பத்துப் புயத்தினல்
பொறுத்த பத்துச் சிரத்தினல் மண்டுகோப முடனே

பொரப்பொ ருப்பிற் கதித்தபோ
ரரக்கர் பட்டுப் பதைக்கவே
புடைத்து முட்டத் துணித்தமா லன்புகூரு மருகா !

வரப்பை யெட்டிக் குதித்துமே
விடத்தில் வட்டத் தளத்திலே
மதர்த்த முத்தைக் குவட்டியே நின்றுசேலி னினம்வாழ்

வயற்பு றத்துப் புவிக்குள்நீள்
திருத்த ணிக்குட் சிறப்பில்வாழ்
வயத்த நித்தத் துவத்தனே செந்தில்மேவு குகனே !

(ப - ரை) பொருப்பை ஒக்க பணைத்தது - மலையைப் போலப் பருத்துள்ள, ஓர் இரட்டி பத்து புயத்திலுல் - இருபது புயங்களினுல், பொறுத்த பத்து சிரத்திலுல் - தாங்கப்பெற்ற பத்துத் தலைகளுடன், மண்டு கோபமுடனே - மேன் மேலும் அதிகரிக்கும் கோபத்துடனே, பொர - போர் செய்வதற்காக, பொருப்பில் கதித்த - மலையைப்போல் கிளம்பிவந்த, போர் அரக்கர் பட்டு பதைக்கவே - போராடும் இராக்கதனுகிய இராவணன் (பாணத்திலுல்) அடிபட்டுப் பதைக்குமாறு, புடைத்து - நன்ருய் அடித்து, முட்ட துணித்த - நெருங்கியபோது வெட்டிய, மால் - திருமால், அன்பு கூரும் மருகா - பெரிதும் அன்பு பாராட்டும் மருகனே !, வரப்பை எட்டி குதித்து - வயல்களின் வரப்பைத் தாவித் துள்ளிக் குதித்து, மேல் இடத்தில் - உயர்வான இடங்களிலும், வட்ட தளத்திலே - நீர் நிலைக்குச் சமீபமாகவுள்ள உப்பரிகைகளிலும், மதர்த்த முத்தை குவட்டி (ஏ - அசை) நின்று - செழித்துத் திரண்டுள்ள முத்துக்களைக் குவித்துச்சேர்த்து, சேலின் இனம் வாழ் - கயல் மீன்கள் வாழப்பெற்ற, வயல் புறத்து-வயல்களின் பக்கலில் அமைந்து, புவிக்குள் நீள் - பூலோகத்தில் மேன்மை பெற்று விளங்கும், திருத்தணிக்குள் சிறப்பில் வாழ் வயத்த - திருத்தணிகையில் சிறப்பாக எழுந்தருளியிருக்கும் தன்வயத்தனுன பரமனே !, நித்தத்துவ - (அழிவற்று) என்றும் நிலைத்திருக்கும், அத்தனே - இறைவனே !, செந்தில் மேவு குகனே - திருச் செந்தூரில் அமர்ந்திருக்கும் குகப்பெருமானே !, தெரு புறத்து துவக்கியாய் - தெருவின் பக்கத்தில் (நின்று அங்கு செல்லும் ஆடவரைக் கண்பார்வையினுல்) கட்டுபவராய், முலை குவட்டை குலுக்கியாய் - அழகிய தனபாரங்களாகிய மலைகளை அசைத்து நடப்பவராய், சிரித்து - புன்முறுவல் செய்து, உருக்கி - (ஆடவர்) மனம் உருகும்படிச் செய்து, தருக்கி (ஏ - அசை) - செருக்குற்று, பண்டை கூளம் என வாழ் - பழைய குப்பையைப்போல (அருவருப்பைத் தரத்தக்க வழியில்) வாழும், சிறுக்கி இரட்சைக்கு இதக்கி ஆய் - சிறு பெண்ணினுல் ஆட்கொள்ளப்படுவதில் பற்றுள்ளவராய், மனத்தை வைத்து - மனத்தை அவ்விஷயத்தில் செலுத்தி, கனத்த பேர் - (அவ்வாசை) அதிகரிக்கப் பெற்றவர்கள், தியக்கம் உற்று தவிக்க (ஏ - அசை) - மனக்கலக்க முற்றுத் தவிக்கும் வண்ணம், கண்டு பேசி - அவர்களைச் சந்தித்துப் பேசி, உடனே - தாமதமின்றி, இருப்பு அகத்து தளத்துமேல் - தாம் வசிக்கும் வீட்டின் உப்பரிகையின்மீது, விளக்கு எடுத்து - விளக்கு எடுத்துவைத்து, படுத்து மேல் இருத்தி வைத்து - படுக்கையின்மேல் அவர்களை அமரச்செய்து, பசப்பி (ஏ - அசை) - (அவர்களை) மயக்கி, காசு கொண்டு - பொருள் பெற்றுக்கொண்டு, தணியாது - (பெற்றும்) பொருளாசை குறையப்பெருமல், இதுக்கு அதுக்கு கடப்பாடாம் என்று - இந்தச் சுகத்துக்காக இவ்வளவு கொடுக்கவேண்டும் அந்தச் சுகத்துக்காக அவ்வளவு கொடுக்கவேண்டும் என்று சொல்லி, கை கக்க கழற்றி (ஏ - அசை)-கைப்பொருளைக் கக்கச்செய்து பறித்துக்கொண்டு, இளைக்கவிட்டு -

சோர்வடையச்செய்து, (பிறகு), தூரத்துவார் தங்கள் - தங்கள் வீட்டினின்றும் தூரத்திவிடும் சுபாவமுடைய விலைமாதர்களுடைய, சேர்வை - நட்பை, தவிராய் - அடியேனிடத்திலிருந்து அகற்றி யருளவேண்டும்.

(வி - ரை) வள்ளிநாயகியின்மீது காதல் கொண்டு அத்தேவியாரைப் பணிந்து காமத்தின் கைப்பட்டவன்போல நடித்தும் பரம்பொருளாகிய முருகப் பெருமான் பரம்பொருளின் சக்திகளுள் ஒன்றாகிய தன் வயத்தனாதல் என்னும் சக்தி மங்காமல் விளங்கிநின்றது திருத்தணிகையி லாதலால், "திருத்தணிக்குட் சிறப்பில் வாழ் வயத்த!" என்று சுவாமிகள் முருகப்பெருமானை விளித்தார். (சுக)

தனதனன தனதனன தந்தனந் தந்தனம்
தனதனன தனதனன தந்தனந் தந்தனம்
தனதனன தனதனன தந்தனந் தந்தனம்—தந்ததான.

கொடியனைய இடைதுவள அங்கமும் பொங்கஅங்
குமுதஅமு திதழ்பருகி யின்புறுஞ் சங்கையன்
குலவியணை முகிலளக முஞ்சரிந் தன்பினின் பண்புலாவக்

கொடியவிரல் நகநுதியில் புண்படுஞ் சஞ்சலன்
குனகியவ ருடனினிது சம்ப்ரமங் கொண்டுளங்
குரலழிய அவசமுறு குங்குணன் கொங்கவிழ்ந் தொன்றுபாய்மேல்

விடமனைய விழிமகளிர் கொங்கையின் பன்புறும்
வினையனியல் பரவுமுயிர் வெந்தழிந் தங்கமும்
இதமொழிய அறிவில்நெறி பண்பிலண் டுஞ்சகன் செஞ்செநீடும்

வெருகனக வொளிகுலவும் அந்தமன் செந்திலென்
றவிழவுள முருகிவரு மன்பிலன் தந்திலன்
விரவுமிரு சிறுகமல பங்கயந் தந்துகந் தன்புறாதோ ?

படமிலகு மரவினுட லங்கமும் பங்கிடந்
துதறுமொரு கலபிமிசை வந்தெழுந் தண்டர்தம்
பகையசுர ரனைவருடல் சந்துசந் துங்கதஞ் சிந்துவேலா !

படியவரு மிமையவரும் நின்றிறைஞ் சென்குணன்
பழையஇறை யுருவமிலி யன்பர்பங் கன்பெரும்
பருவரல்செய் புரமெரிய விண்டிடுஞ் செங்கணன் கங்கைமான்வாழ்

சடிலமிசை யழகுபுனை கொன்றையும் பண்புறுந்
தருணமதி யின்குறைசெய் துண்டமுஞ் செங்கையொண்
சகலபுவ னமுமொழிக தங்குறங் கங்கியும் பொங்கிநீடும்

சடமருவு விடையரவர் துங்கஅம் பங்கினின்
றுலகுதரு கவுரியுமை கொங்கைதந் தன்புறுந்
தமிழ்விரக வுயர்பரம சங்கரன் கும்பிடுந் தம்பிரானே !

(ப - ரை) படம் இலகும் அரவின் உடல் அங்கம் (உம்-அசை)-படம் விளங்கப்பெற்ற பாம்பின் தேகத்தை, பங்கு இடந்து - சின்னபின்னமாகும்படிப் பிளந்து, உதறும் ஒரு கலபி மிசை - உதறும் ஒப்பற்ற கலாபத்தையுடைய மயிலின் மீது, வந்து எழுந்து - எறிவந்து கோபத்துடன் எழுந்து, அண்டர் தம் பகை அசுரர் அனைவர் உடல் - தேவர்களுடைய பகைவர்களான அசுரர்கள் எல்லோருடைய தேகங்களிலும், சந்து சந்தும் - மூட்டுகளெல்லாம், கதம் சிந்து - போகும்படி சிதற அடித்த, வேலா - வேலாயுதனே !, படியவரும் இமையவரும் - இவ்வுலகத்திலுள்ளவர்களும் தேவர்களும், நின்று இறைஞ்சும் - தொழுது நின்று வணங்கும், எண் குணன் - எட்டுக்குணங்களையுடைய பரம்பொருளும், பழைய இறை-ஆதியந்தமற்ற இறைவரும், உருவம் இலி - (ஆதியில்) உருவமில்லாதவரும், அன்பர் பங்கன் - தமது மெய்யன்பர்களுக்குத் துணையாகவிருப்பவரும், பெரும் பருவரல் செய் புரம் எரிய - (உலகங்களுக்குப்) பெருந்துன்பம் செய்துவந்த திரிபுரங்கள் எரிந்து அழியும் வண்ணம், விண்டிடும் செம் கணன் - திறந்த (ஞானத்தீயினால்) சிவந்த ஒளி வீசும் (நெற்றிக்) கண்ணையுடையவரும், கங்கை மான் வாழ் சடிலம் மிசை - கங்கையென்னும் அழகிய பெண் வசிக்கும் சடாமுடியின் மீது, அழகு புனை கொன்றையும்-அழகு பொருந்திய கொன்றை மலர் மாலையும், பண்பு உறும் தருண மதியின குறைசெய் துண்டமும் - சிறப்புப்பெற்ற இளஞ்சந்திரனுடைய வெட்டப்பட்ட பிளப்பும் (பிறைச் சந்திரனும்), செம் கை - அழகிய கையினில், ஒள் சகல புவனமும் ஒழி கத - மிகுதியாகவுள்ள சகலவுலகங்களையும் அழிக்கவெழுந்து, அங்கு உறங்கு அங்கியும் - அந்தக் கையினில் ஒடுங்கியமர்ந்த அக்கினியும், பொங்கி நீடும் - பொலிவுபெற்று நிலைத்துள்ள, சடம் மருவு - திருமேனியைப் பூண்டுள்ள, விடை அரவர் - இடபவாகனரும் நாகாபரணருமான சிவபெருமானுடைய, துங்க அம் பங்கின் நின்று - சிறந்ததும் அழகியதுமான (வாம)பாகத்தில் அமர்ந்து, உலகு தரு கவுரி உமை - உலகங்களையீன்ற தாயாராகிய பொன்னிறம் வாய்ந்த உமாதேவியார், கொங்கை தந்து - தமது தனபாரங்களினின்றும் சுரந்த பாலமுதத்தையூட்டி, அன்பு உறும் - அன்பு பாராட்டிய (புதல்வனே !), தமிழ் விரக - தமிழ் மொழியின்மீது பேரன்புடையவனே !, உயர் பரம சங்கரன் கும்பிடும் தம்பிரானே - யாவரினும் மேலான பரம

பொருளான சிவபெருமானால் வணங்கப்படும் நாயகனே !, கொடி அனைய இடை துவள - கொடியை யொத்த இடையானது அசையுமாறும், அங்கம் (உம் - அசை) பொங்க - தேகம் புளகிதமடையுமாறும், அம் குமுத அமுத இதழ் பருகி - அழகிய செவ்வாம்பலை யொத்தவைகளும் அமுதத்தைச் சொரிபவைகளுமான உதடுகளினின்றும் பெருகும் அமுதத்தைப் பானஞ்செய்து, இன்பு உறும் சங்கையன் - இன்பமடையும் வழக்கமுடையவன் ; குலவி அணை முகில் அளகம் (உம் - அசை) சரிந்து - கொண்டாடிப்புகழ்ந்து அணைந்துகொள்ளும் கூந்தல் அவிழ்ந்து, அன்பின் (இன் - சாரியை) பண்பு உலாவ - அன்பைப் பெருக்கத் தக்கபடி அசைய, கொடிய விரல் நக நுதியில் புண்படும் சஞ்சலன் - (கலவியில்) கொடிய குணம் காட்டும் விரல் நக நுனியினால் காயம்பெற்று (ஊடலினால்) சஞ்சலமடையும் இயல்புடையவன் ; குனகி - மனங்குழைந்து, அவருடன் இனிது சம்ப்ரமம் கொண்டு - அம்மாதர்களிடம் இன்பமடைந்து ஆதரவுகொண்டு, உளம் குரல் அழிய - மனமும் குரலும் தமது தன்மையை யிழக்குமாறு, அவசம் உற - தன்வச மழியும், குங்குணன் - குணவீனன் ; கொங்கு அவிழ்ந்து ஒன்று பாய் மேல் - மலர்களின் மகரந்தப்பொடி சிந்திப் பொருந்தியிருக்கப்பெற்ற படுக்கையின்மீது, விடம் அனைய விழி மகளிர் - (கொடிய பார்வையுடைமையினாலும் கருநிறத்தினாலும்) விஷத்தையொத்த கண்களையுடைய மாதர்களது, கொங்கை இன்ப அன்பு உறும் - தனபாரங்களின் இன்பத்தை அடைய ஆசைகொள்ளும், வினையன் - வஞ்சகன் ; இயல் பரவும் உயிர் வெந்து அழிந்து - (ஆதியில்) குணம் மிகுந்துள்ள ஆன்மாவானது (காமத்தீயினால்) வெந்து அழிந்து, அங்கமும் இதம் ஒழிய - தேகமும் ஏற்ற தன்மை யழியப்பெறுமாறு, அறிவில் நெறி பண்பில் அண்டும் - அறிவில்லாத மார்க்கத்தில் நின்றொழுகும் குணத்தில் பொருந்தி நிற்கும், சகன் - ஜடவுலக வாழ்க்கையில் உழல்பவன் ; செஞ்செ நீடும் வெகு கனக ஒளி குலவும் - நல்லசிவப்பானதும் நிலைத்துள்ளதும் பொன்னின் ஒளியை யொத்ததுமான பேரொளியை அழகாக வீசும் (திருமேனியையுடைய), அந்தமன் செந்தில் என்று - அந்த இறைவனாகிய ஷண்முகன் எழுந்தருளியிருக்கும் திருச்செந்தூர் என்று நினைத்து, உளம் அவிழ உருகி வரும் அன்பு இலன் - மனம் கசிந்து உருகி அத் திருப்பதியைத் தரிசிக்கவரும் அன்பு இல்லாதவன் ; தந்து இலன் - கல்வி நூல்களை ஆராய்ந்தறியாதவன் ; (அப்படிப்பட்ட அடியேனுக்கு), விரவும் இரு சிறு கமல பங்கயம் - (ஞானமும் பேரின்பமும்) கலந்துள்ள இரண்டு சிறிய பாததாமரைகளையும், தந்து உகந்து அன்பு உறுதோ - அளித்து மனமகிழ்ச்சி கொண்டு அடியேன்மீது அன்பு பூணமாட்டாயோ ?

(வி - ரை) சிவபெருமானும் தேவர்கள் கூட்டத்தில் ஒருவராய் நிற்பதனால், ஏனைய தேவர்கள் அப்பெருமானுக்கு இணையானவர்போல அவருடன் கலந்து நிற்பினும், அப்பெருமான் அவர்களால் வணங்கப்படும் தேவாதி தேவராக இருப்

பதனுல், "படியவரு மிமையவரும் நின்றிறைஞ் செண்குணன்" "தம்முடன் கலந்து வரும் தேவர்களாலும் வணங்கப்படும் எண்குணன்" என்பதற்கு என்று பொருள் கூறினும் பொருந்தும். இறைவனது எட்டுக் குணங்களாவன:— தன்வயத்தனுதல், தூயவுடம் பினனுதல், இயற்கையுணர்வினனுதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை. "அன்பர் பங்க"னுகிய சிவபெருமான் அடியவர்களுக்கு மிகுந்த துன்பம் இழைத்து வந்த "ஆணவம் கன்மம் மாயை" என்னும் மும்மலங்களான திரிபுரங்களைத் தமது நெற்றிக்கண்ணினின் றும் பொழியும் ஞானத்தீயினுல் எரித்து அழித்தார். இதைக்குறித்து 156, 333-ம் பக்கங்களைப் பார்க்க. "விடையரவர்" என்பதற்கு 'மிகுந்த நாகங்களைப் பூண்டவர்' என்று பொருள் கூறினும் பொருந்தும். விடை - மிகுதி. இங்கு "தமிழ்விரக" என்றதனுலும், கந்தரலங்காரத்தில் "முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன்" என்றதனுலும், முருகப்பெருமானுக்குத் தமிழ்மொழியின் மீதுள்ள அன்பு தெளிவாய் விளக்கப் பட்டிருக்கிறது. (கூஉ)

தனனத் தந்தத் தனனத் தந்தத்
தனனத் தந்தத்—தனதான.

புகரப் புங்கப் பகரக் குன்றிற்
புயலிற் றங்கிப் பொலிவோனும்

பொருவிற் றஞ்சச் சுருதிச் சங்கப்
பொருளைப் பண்பிற் புகல்வோனும்

திகிரிச் செங்கட் செவியிற் றுஞ்சத்
திகிரிச் செங்கைத் திருமாலும்

திரியப் பொங்கித் திரையற் றுண்டுட்
டெளிதற் கொன்றைத் தரவேணும்!

தகரத் தந்தச் சிகரத் தொன்றித்
தடநற் கஞ்சத் துறைவோனே!

தருணக் கொங்கைக் குறவிக் கின்பத்
தையளித் தன்புற் றருள்வோனே!

பகரப் பைம்பொற் சிகரக் குன்றைப்
படியிற் சிந்தத் தொடும்வேலா!

பவளத் துங்கப் புரிசைச் செந்திற்
பதியிற் கந்தப் பெருமாளே

(ப - ரை) தகரத்து அந்த சிகரத்து ஒன்றி - தகராகாசத்தில் (முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்து நிற்பதான) அந்த மேலான பதவியில் அமர்ந்து, தட நல் கஞ்சத்து -(கருணையாம்) நீர்மையினால் நலம்பெற்றுள்ள இதயதாமரையில், உறைவோனே - எழுந்தருளி வசிப்பவனே!, தருண கொங்கை குறவிக்கு - இளமை பொருந்திய தனபாரங்களையுடைய குறப்பெண்ணான வள்ளிநாயகிக்கு, இன்பத்தை அளித்து - (நினக்குச் சத்திபாகப் பெற்ற) இன்பத்தைக் கொடுத்து, அன்புற்று அருள்வோனே - அத்தேவியாரின்மீது அன்பு பூண்டு அருள்புரிந்தவனே!, பகர பைம் பொன் சிகர குன்றை - ஒளிவீசும் பசும்பொன்னை யொத்ததும் உயர்ந்த முடியை யுடையதுமான குன்றான கிரௌஞ்சமலையை, படியில் சிந்தொடும் வேலா - பூமியில் சிதறச்செய்யுமாறு பிரயோகித்த வேலாயுதத்தை யுடையவனே!, பவள துங்க புரிசை செந்திற் பதியில் - பவளத்தினால் எழுப்பப்பட்ட சிறந்த மதில்களையுடைய திருச்செந்தூர் என்னும் திருத்தலத்தில், கந்த பெருமாளே - அடியவர் பகையை ஓட்டுபவனாக அமர்ந்திருக்கும் பெரியோனே!, புகர - கபில நிறமுடையதும், புங்க - உயர்ந்ததும், பகர - அலங்காரமானதும், ஆன, குன்றில் - குன்றை யொத்த ஐராவதம் என்னும் யானையின்மீதும், புயலில் - மேகத்தின்மீதும், தங்கி பொலிவோனும் - ஏறியமர்ந்து விளங்கும் இந்திரனும், பொரு இல் - ஒப்பற்ற, தஞ்ச - (ஆன்மாக்களுக்குப்) புகலிடமான, சுருதி சங்க பொருளை - வேதத்தின் பல சாகைகளான நித்தியமான பொருளை, பண்பில் புகல்வோனும் - முறைப்படி சொல்லும் பிரமதேவரும், திகிரி செம் கட்செவியில் துஞ்சு - வளைந்துள்ள அழகிய பாம்பின்மீது படுத்து யோகநித்திரை செய்பவரும், திகிரி செம் கை அ திருமாலும் - சக்கராயுதத்தைத் தமது அழகிய கையினில் தரித்துள்ளவருமான அந்தத் திருமாலும், (சேர்ந்து கடலை)த் திரிய - கடைந்தபோது, பொங்கி - அது பெருகி யெழுந்து, திரை அற்று - அலைகள் ஓயப்பெற்றபின், உண்டு உள் தெளிதற்கு ஒன்றை - உண்டு மனம் தெளிவடைவதற்காக அளித்தருளிய அமுதத்தை, தரவேணும் - (அடியேனுக்குத்) தந்தருள வேண்டும். (கூங)

தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன—தனதான.

கமல மாதுட னிந்திரை யுஞ்சரி
சொலவொ ணாதம டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையி லங்கையி விருபோதே
களவு நூல்தெரி வஞ்சனை யஞ்சன
விழியின் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியி லிந்துமு கந்தனின் மருளாதே

அமல மாகிய சிந்தைய டைந்தகல்
தொலைவி லாதஅ றம்பொரு ளின்பமு
மடைய வோதியு ணர்ந்துத ணந்தபின் அருள்தானே

அறியு மாறுபெ றும்படி யன்பினி
னினிய நாதசி லம்புபு லம்பிடு
மருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய் !

குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பர யம்பிகை
குடிலை யோகினி சண்டினி குண்டலி யெமதாயி

குறைவி லாளுமை மந்தரி யந்தரி
வெகுவி தாகம சுந்தரி தந்தருள்
குமர மூஷிக மூர்ந்திய ஐங்கர கணராயன்

மமவி நாயக னஞ்சுமிழ் கஞ்சுகி
அணிக ஜானன விம்பனொ ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தரு ளிளையோனே !

வளரும் வாழையு மஞ்சளு மிஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே !

(ப-ரை) குமரி - அழிவில்லாத கன்னி, காளி - துர்க்கை, பயம் ஹரி - அடியவர் பயத்தை நீக்குபவள், சங்கரி - ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்பவள், கவுரி - பொன்னிறமுடையவள், நீலி - , பரம்பரை - பராபரை, அம்பிகை - உலகமாதா, குடிலை - சுத்தமாயை, யோகினி சண்டினி குண்டலி - , எமது ஆயி - ஆன்மாக்களாகிய எங்கள் தாய், குறைவு இலாள் - குறைவில்லாதவள், உமை - உமாதேவி, மந்தரி அந்தரி - , வெகு வித ஆகம சுந்தரி - பலவகைப்பட்ட சைவ ஆகம நூல்களில் பர தேவதையாக் கூறப்படும் சுந்தரி (என்று பலவாறாகத் துதிக்கப்படும் பார்வதி தேவியார்), தந்தருள் - ஈன்றருளிய, குமர - புதல்வனும், மூஷிகம் உந்திய ஐங்கர கணராயன் - பெருச்சாளியின்மீது ஏறிச்செல்லும் ஐந்து கரங்களையுடைய கணபதியும், மம விநாயகன் - எமது விநாயகக் கடவுளும், நஞ்சு உமிழ் கஞ்சுகி - விஷத்தைக் கக்கும் பாம்பை, அணி கஜ ஆனன விம்பன் - (அரைஞாணாக) அணிந்துகொள்ளும் யானை முகத்தையுடைய மூர்த்தியுமானவர், ஓர் - சிந்திக்கும் (நாதனாகிய), அம்புலி மவுலியான் - சந்திரனைச் சடாமுடியில் அணிந்துள்ள சிவபெருமான், உறு சிந்தை உகந்து அருள்

- மிகவும் மனமகிழ்ந்து தந்தருளிய, இளையோனே - என்றும் இளமை மாறாத குமரனே ! வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும் - செழித்து வளர்ந்துள்ள வாழையும் மஞ்சளும் இஞ்சியும், இடைவிடாது - இடைவெளி யில்லாமல், நெருங்கிய - அடர்ந்துள்ள, மங்கல - சிறப்புப் பெற்றதும், மகிமை - பெருமை வாய்ந்ததும், மா நகர் செந்திலில் - மேன்மை பொருந்தியதுமான நகரமாகிய திருச்செந்தூரில், வந்து உறை பெருமாளே - வந்து எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, கமல மாதுடன் இந்திரையும் - இலக்குமியையேயல்லாமல் இந்திராணியையுங் கூட, சரி சொல ஒணாத - ஈடாகச் சொல்லமுடியாத (அவ்வளவு அழகு வாய்ந்த), மடந்தையர் - பெண்களுடைய, சந்தன களப சீதள கொங்கையில் - சந்தனக் கலவைச் சாந்து பூசிக் குளிர்ச்சி பெற்றுள்ள தனபாரங்களின்மீது, அங்கையில் இருபோது எய் - அழகிய கைகளினால் நெடுநாட் பொழுதும் பொருந்தியிருந்து, களவு நூல் தெரி - திருட்டுத்தனமாக (ஆடவர் மனத்தைக்) கவரும் நூல்களில் தேர்ந்துள்ளவைகளும், வஞ்சனை - வஞ்சிக்கும் இயல்புடையவைகளும், அஞ்சன - மை தீட்டப்பெற்றவைகளுமான, விழியில் மோகித - விழிகளைக்கண்டு மோகமுற்றவனாய், கந்த - வாசனை வீசுவதும், சுகம் தரு - இன்பத்தை யூட்டுவதுமான, கரிய ஓதியில் - கறுத்த கூந்தலைக் கண்டும், இந்து முகம் தனில் - சந்திரனை யொத்த முகத்தைக் கண்டும், மருளாதே - மதிமயங்காமல், அமலம் ஆகிய சிந்தை அடைந்து - மலம் நீங்கப்பெற்ற மனத்தை அடைந்து, அகல் தொலைவு இலாத - நீக்கமும் அழிவுமில்லாத, அறம் பொருள் இன்பமும் அடைய ஓதி - (புருஷார்த்தங்களுள் முதல் மூன்றாகிய) அறம் பொருள் இன்பம் என்பவைகளைப்பற்றிய நூல்கள் அனைத்தையும் கற்று, உணர்ந்து - (அவைகளிற் கூறப்பட்டுள்ளவைகளை) அறிவினால் உணர்ந்து, தணந்த பின் - (விஷய சுகங்களிலுள்ள ஆசை) நீங்கப்பெற்ற பின், அருள் தானே அறியும் ஆறு பெறும் படி - நினது திருவருளைத் தானாகவே அறியும் வழியை அடியேன் அடையும் படி, அன்பினின் - அன்பு பாராட்டி, இனிய நாத சிலம்பு புலம்பிடு - இனிமையாக ஒலிக்கும் தன்மையுடைய தண்டைகள் சத்திக்கப்பெற்றவைகளும், அருண - சிவந்த நிறமுள்ளவைகளும், ஆடக கிண்கிணி தங்கிய - ஆடகம் என்னும் பொன்னினால் செய்யப்பட்ட சதங்கைகள் அணியப்பெற்றவைகளுமான, அடி தாராய் - பாதமலர்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) உமாதேவியார் அகில வுலகங்களையும் ஈன்றருளிய தாயாகவிருந்தும் என்றும் கன்னியாகவே விளங்குகிறாராதலின், அத்தேவியார் குமரி என்னும் திருநாமம் பெற்றுள்ளார். மரணபயமே யாவற்றினும் பெரிய பயமாதலாலும், அத்தேவியார் "இறுகிய சிறு பிறை யெயிறுடை யமபடரெனதுயிர் கொளவரின் யானேங்குதல் கண்டெதிர் தானேன்று கொளுங்குயில்" ஆதலாலும் அவரைப் "பயங்கரி" என்று விளிக்கப்பட்டிருக்கிறது.

**கஜமுகாசுரன் பிறப்பும் இறப்பும், விநாயகர் உற்பத்தியும்:—** ஒரு காலத்தில் இந்திரனால் தோல்வியுற்ற அசுரர் தலைவன், அசுர குருவாகிய சுக்கிராசாரியார் கூறியபடி, விபூதி என்னும் அழகிய அசுரப் பெண்ணொருத்தியை யழைத்து, வசிஷ்டமா முனிவரது குலத்திலே யுதித்துக் கடுந்தவம் புரிந்துவந்த மகா யோகீசுவரரான மாகதமுனிவரைச் சேர்ந்து ஒரு புதல்வனைப் பெற்று அசுர குலத்தைக் கரையேற்றும்படி கேட்டுக்கொண்டான். உடனே விபூதி என்பவள் மேருகிரியின் தென்புறத்தில் மாகதமுனிவர் தவமியற்றிக்கொண்டிருந்த விடத்தை யடைந்து, அம்முனிவரது பரிசுத்தமான தவநிஷ்டையைக் கண்டு அவரது மனத்தைக் கலைப்பது அசாத்தியமென்றுணர்ந்து, அவருக்கு முன்னே யமர்ந்து தானும் தவமியற்றலானாள். வெகுகாலம் சென்றபின், மாகத முனிவர் நிஷ்டை கலைந்தெழுந்து, இரண்டு யானைகள் புணர்ந்ததைக்கண்டு தாமும் காமமுற்றுக் கலவியில் இச்சைகொண்டார். அச்சமயத்தில் விபூதி அவரை யணுகி, தான் அவர்மீது காதல்கொண்டு தன் ஆசைநிறைவேறுமாறு தவமியற்றி வந்ததைத்தெரிவித்தாள். மாகத முனிவர் களிப்புற்று, அவளைப் பெண் யானையாக மாற்றித் தாமும் ஆண் யானை யுருவம் பூண்டு, அவளுடன் புணர்ந்தார். அப்போது அவளிடத்தில் மகா கோரமான கஜமுகாசுரன் தோன்றினான். அவன் மிகுந்த வலிமையுடையவனாய் எங்கும் திரிந்து, தேவேந்திரன் முதலிய தேவர்களைத் துன்பப்படுத்தலானான். அப்போது சுக்கிராசாரியார் அவனிடம் சென்று, சிவபெருமானை நோக்கித் தவமியற்றி அவரிடம் வரம்பெற்றால் பிறகு அவன் இச்சைப்படி திரியலாமென்று அவனுக்குப் புத்திகூற, அவனும் மேருமலைக்குச் சென்று நெடுங்காலம் கடுந்தவம் புரிந்து, தேவர்களும் அவனை எதிர்க்க முடியா வண்ணம் போராற்றல் பெற வேண்டுமென்றும், எந்த ஆயுதத்தினாலும், தேவர்கள் அரக்கர்கள் மனிதர்கள் முதலிய எவராலும், எந்த இடத்திலும் தனக்குப் பயமுண்டாகாம லிருக்க வேண்டுமென்றும், ஒருக்கால் முக்கணெந்தையின் திருமாயையினால் தனக்கு மரணம் சம்பவித்தால், தனக்கு மறுபிறப்பு உண்டாகாமலிருக்க வேண்டுமென்றும் சிவபெருமானைப் பிரார்த்தித்து அவ்வரங்களைப் பெற்றான். பிறகு அவன் தேவர்கள் முதலிய யாவரையும் ஜயித்துச் சகல உலகங்களுக்கும் அரசனாயினான். ஒருநாள் அவன் தன்னை வணங்கி நின்ற தேவர்களை நோக்கி, "இன்று முதல் நீங்கள் சோம்பலின்றி சாஷ்டாங்கம், பஞ்சாங்கம், திரியங்கம் என்னும் மூன்று விதங்களாலும் என்னை நமஸ்கரித்துப் பிறகு கைகளால் நெற்றியில் குட்டிக்கொண்டு இரு கைகளாலும் மாறுதலாய்க் காதுகளைப் பிடித்துக்கொண்டு என் முன்னே தோப்புக் கரணம் போட்டுவிட்டுப் பிறகே உத்தரவு பெற்றுச் செல்ல வேண்டும்" என்று கட்டளையிட்டான். அன்று முதல் தேவர்கள் அவ்வாறே வெகு காலம் அவனைச் சேவித்து மனச்சோர்வுற்று, முக்கணெந்தையின் திருமுன்னர் சென்று, தங்கள் குறைகளை எடுத்துக்கூறி, அவைகளை யகற்றத்தக்க ஒரு புத்திரனைத் தந்தருள வேண்டுமெனப் பிரார்த்தித்தார்கள். சிவபெருமான்

அவர்களுக்கு அபயமளித்து அனுப்பிவிட்டு, பார்வதி தேவியாருடன் ஓர் உத்தியான வனத்தினுள் சென்று அங்குள்ள சிங்கார மண்டபத்திலிருந்த ஒரு சிங்காதனத்தின்மீது அமர்ந்து சுவரில் சித்திரிக்கப்பட்டிருந்த பிரணவத்தைக் களிப்புடன் கண்ணுற்றார். உடனே அவ்வெழுத்திலிருந்து ஓர் ஆண் யானையும் பெண் யானையும் தோன்ற, அவைகளிரண்டும் கூடி மகிழ்ந்தன. அப்போது கோடி சூரியப் பிரகாசரான விநாயக மூர்த்தி தோன்றினார். அப்போது சிவபெருமான் விநாயகரை நோக்கி, "குழந்தாய்! உன்னை வணங்குபவர் கோரிக்கைகள் இடையூறின்றி விரைவில் பூர்த்தியாகும். நீயே நமது கணங்களுக்கெல்லாம் தலைவன். நீ கஜமுகாசுரனை யழித்துத் தேவர்களைக் காப்பாயாக!" என்று கூறிவிட்டுத் தேவியாருடன் அகன்றார். பிறகு விநாயகர் தேவர்களுடைய வேண்டுகோளுக்கிசைந்து, அசலன் என்னும் ஒரு பெரும் பூதத்தின்மேல் ஏறிக்கொண்டு, கஜமுகாசுரனுடைய நகரமான மதங்க நகரத்துக்குப் பூதப்படைகளுடனும் தேவர்களுடனும் சென்று, தம்மை எதிர்க்கவந்த அவ்வசுரனுக்குத் தேவர்களை வருத்தாமலிருக்கும்படி நற்புத்தி கூறி, அவன் அதைக் கேளாமையால் தமது தந்தம் ஒன்றை யொடித்து அதை அவன்மேல் பிரயோகித்தார். அது அவனுடலைக் கிழித்துக் கடலில் நீராடிவிட்டு அக்கடவுளின் திருக்கரத்தினில் வந்து சேர்ந்தது. அதனால் கிழிக்கப்பட்ட கஜமுகாசுரன் ஒரு பெருச்சாளியின் வடிவத்தைப் பூண்டு அக்கடவுளை எதிர்க்க வந்தான். உடனே அப்பெருமான் அதன்மீது ஏறிக்கொண்டு அதைத் தன் வாகனமாக்கிக் கொண்டார். பிறகு தேவர்களுடைய வேண்டுகோளுக்கியைந்து, அவர்கள் கஜமுகாசுரனை வணங்கிய வண்ணம் தம்மை வணங்குவோருடைய மனோபீஷ்டங்களைப் பூர்த்தி செய்வதாகத் திருவாய்மலர்ந் தருளினார். (௬௪)

தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன
தனத்தந் தானன தானன தானன—தனதான.

உருக்கம் பேசிய நீலியர் காசுகள்
பறிக்கும் தோஷிகள் மோகவி காரிகள்
உருட்டும் பார்வையர் மாபழி காரிகள் மதியாதே

உரைக்கும் பீரிகள் கோளர வாமென
வுடற்றுந் தாதியர் காசள வேமனம்
உறைக்குந் தூரிகள் மீதினி லாசைகள் புரிவேனோ?

அருக்கன் போலொளி வீசிய மாமுடி
யனைத்துந் தானழ காய்நல மேதர
அருட்கண் பார்வையி னாலடி யார்தமை மகிழ்வோடே

அழைத்துஞ் சேதிகள் பேசிய காரண
வடிப்பந் தானென வேயெனை நாடொறும்
அதிக்கஞ் சேர்தர வேயருள் ளாலுட னினிதாள்வாய் !

இருக்குங் காரண மீறிய வேதமும்
இசைக்குஞ் சாரமு மேதொழு தேவர்கள்
இடுக்கண் தீர்கன னேயடி யார்தவ முடன்மேவி

இலக்கந் தானென வேதொழ வேமகிழ்
விருப்பங் கூர்தரு மாதியு மாயுல
கிறுக்குந் தாதகி சூடிய வேணிய னருள்பாலா !

திருக்குந் தாபதர் வேதிய ராதியர்
துதிக்குந் தாளுடை நாயக னாகிய
செகச்செஞ் சோதியு மாகிய மாதவன் மருகோனே !

செழிக்குஞ் சாலியு மேகம ளாவிய
கருப்பஞ் சோலையும் வாழையு மேதிகழ்
திருச்செந் தூர்தனில் மேவிய தேவர்கள் பெருமாளே !

(ப - ரை) இருக்கும் காரணம் மீறிய வேதமும் - சகல வுலகங்களும் காணப்படுவதற்குக் காரணமாயுள்ள பிரகிருதி மாயையைக் கடந்து நிற்கும் (ஞானம் அடங்கிய) வேதமும், இசைக்கும் சாரமுமே - கூறுவதன் சாரமாக நிற்பவனே ! தொழு தேவர்கள் இடுக்கண் தீர் கனனே - நின்னை வணங்கும் தேவர்களுடைய துன்பத்தைத் தீர்க்கும் பெருங்குண முடையோனே !, அடியார் தவமுடன் மேவி இலக்கம்தான் என (ஏ - அசை) தொழ (ஏ - அசை) - அடியார்கள் (தவத்தைப் புரிந்து அத்)தவச் செல்வமுடையவராக இலக்கக்கணக்காக வந்து வணங்குங்கால், மகிழ் விருப்பம் கூர்தரு - மகிழ்ச்சியும் அவர்கள்மீதுள்ள அன்பும் அதிகரிக்கப்பெறும், ஆதியும் ஆய் - (உலகங்களுக்கெல்லாம்) ஆதிகாரணராக விருந்துகொண்டு, உலகு இறுக்கும் - (சர்வசங்கார காலத்தில்) உலகங்களை யழிப்பவராய் நிற்கும், தாதகி சூடிய வேணியன் அருள் பாலா - ஆத்திமலர்மாலை சூட்டப்பெற்ற சடாமுடியையுடைய சிவபெருமான் தந்தருளிய பாலனே !, திருக்கும் தாபதர் - தந்திரமார்க்கத்திற் செல்லும் தவவேடம் பூண்டவர்கள், வேதியர் - பிராமணர்கள், ஆதியர் - முதலானவர்கள், துதிக்கும் தாள் உடை நாயகன் ஆகிய - துதிக்கும் பாதமலர்களுடைய நாதனும், செக செம் சோதியும் ஆகிய - உலகத்தில் நல்ல ஒளிவீசும் சுடருமாகிய, மாதவன் - திருமாலின், மருகோனே -, செழிக்கும் சாலியும் - செழித்து வளர்ந்துள்ள நெற்பயிரும், மேகம் அளாவிய கருப்பஞ் சோலையும் - மேகமண்டலத்தை யளாவி வளர்ந்துள்ள கருப்பஞ்சோலை

யும், வாழையும் (ஏ - அசை)—, திகழ் - விளங்கப்பெற்ற, திருச்செந்தூர் தனில் மேவிய - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும், தேவர்கள் பெருமாளே - தேவாதி தேவனே !, உருக்கம் பேசிய நீலியர் - தமக்கு அன்பு உண்டென்று கூறும் வஞ்சகர்களும், காசுகள் பறிக்கும் தோஷிகள் - கைப்பொருளைப் பிடுங்கும் இயல்புடைய குணவீனர்களும், மோக விகாரிகள் - மோகமுற்றுக் காமத்தினால் மனோவிகாரமடைபவர்களும், உருட்டும் பார்வையர் - விழிகளை யுருட்டிப் பார்க்கும் இயல்புடையவர்களும், மா பழிகாரிகள் - மிகுந்த பாவச்செயல்களைச் செய்பவர்களும், மதியாது (ஏ - அசை) உறைக்கும் பீ(வ)ரிகள் - (எவரையும்) மதியாமல் பேசும் பெண்கிளிகளைப் போன்றவர்களும், கோள் அரவு ஆ(கு)ம் என உடற்றும் தாதியர் - விழுங்கும் (மலைப்) பாம்புகள் என்று சொல்லும்படி (பொருள் பறிப்பதனால்) மனங்கலங்கச்செய்யும் தாசிகளும், காசு அளவே மனம் உறைக்கும் தூரிகள் மீதினில் - தாம்பெறும் பொருளுக்குத்தக்க அளவே மனத்தில் அழுந்தும் ஆசையுடையவர்களுமான விலைமாதர்களின்மீது, ஆசைகள் புரிவேனோ - ஆசை கொள்வது தகுதியோ ?, அருக்கன்போல் ஒளி வீசிய மா முடி அனைத்தும் தான் - சூரியனைப்போலப் பேரொளி வீசும் சிறந்த மகுடங்கள் எல்லாம், அழகாய் நலம் (ஏ-அசை) தர - அழகாய்த் தோன்றிக் காண்போர் (மனத்தினில்) இன்பத்தையூட்ட, அருள் கண் பார்வையினால் - கருணை பொழியும் கண்களின் பார்வையினால், அடியார் தமை மகிழ்வோடே அழைத்து (உம் - அசை) - அடியவர்களை மகிழ்ச்சியுடன் அருகில் அழைத்து, சேதிகள் பேசிய காரண - (அவர்களுக்குப் பல) உபதேசங்களைச் செய்தருளிய ஆதிகாரணனே !, வடிப்பம் தான் என (ஏ - அசை) - நடு நிலைமையின் உருவம் நீயே யென்று கூறும்படி, நாள்தொறும் அதிக்கம் சேர்தர (ஏ - அசை) - (அடியேன்) தினந்தோறும் மேன்மேலும் மேன்மையடையும் வண்ணம், அருளால் - கருணை காட்டி, உடன் - இந்தக்கணத்திலேயே, எனை இனிது ஆள்வாய் - அடியேனை அன்போடு ஆட்கொண்டருளவேண்டும்.

(வி - ரை) சுத்த சூனியமாயிருந்த வெளியில் சகல வுலகங்களையும் தோன்றும்படிச் செய்த பிரகிருதி மாயையானது தோற்றுவித்த ஜட பேதங்களெல்லாவற்றையும் கடந்து நிற்கிற மெய்ஞ்ஞானந்தான் - தோன்றுவனவெல்லாம் ஒரு பொருளேயென்ற அறிவுதான் - வேதத்தில் அடங்கி யிருப்பதனால், " இருக்குங் காரண மீறிய வேதமும் " என்று கூறப்பட்டிருக்கிறது. காரணம் - பிரகிருதி மாயை. எண்ணிறந்த பிறவிகளை யெடுத்து இளைத்த ஆன்மாக்களின் அயர்வை நீக்குவதற்காகவே கருணைக்கடலாகிய சிவபெருமான் சர்வசங்கார மூர்த்தியாக நின்று ஆன்மாக்களுடைய சகல வினைகளையும் போக்கி, அவைகளைச் சுத்த ஆன்மாக்களாக்கித் தம்மகத்தே சிலகாலம் வைத்துக்கொள்ளுகிறார் என்பது அறியத்தக்கது. 'பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதம்' அல்லவாதலின், பிள்ளையின் குணம் எப்படிப்பட்டதாயினும் அப்பிள்ளையைக் காப்பாற்றும் தாயே

நடு நிலைமையில் நிற்பவள். கோரமான பாவச் செயல்களைச் செய்யும் பாவியை ஆண்டுகொண்டால், முருகப்பெருமானை "நடு நிலைமையின் உருவம் இவரே" என்று யாவரும் கூறிப் புகழ்வார்களன்றோ! அதுவே இங்கு கூறப்பட்டது.(சுடு)

தனத்தந் தானன தத்தன தந்தன
தனத்தந் தானன தத்தன தந்தன
தனத்தந் தானன தத்தன தந்தன—தனதான.

நிறுக்குஞ் சூதன மெய்த்தன முண்டைகள்
கருப்பஞ் சாறொட ளைத்துள வுண்டைகள்
நிழற்கண் காணவு ணக்கிம ணம்பல தடவாமேல்

நெருக்கும் பாயலில் வெற்றிலை யின்புறம்
ஒளித்தன் பாகஅ ளித்தபி னிங்கெனை
நினைக்கின் றீரிலை மெச்சலி தஞ்சொலி யெனவோதி

உறக்கண் டாசைவ லைக்குள ழுந்திட
விடுக்கும் பாவிகள் பொட்டிகள் சிந்தனை
யுடுக்குந் தூவைகள் செட்டைகு ணந்தனி லுழலாமே

உலப்பின் றுறெனு மக்கர முங்கமழ்
கடப்பந் தாருமு கப்ப்ரபை யுந்தினம்
உளத்தின் பார்வையி டத்தினி னைந்திட அருள்வாயே!

கறுக்குந் தூயமி டற்றன ருஞ்சிலை
யெடுக்குந் தோளணி றத்தம ரெண்கரி
கடக்குந் தானவ னைக்கொல ரும்புயன் மருகோனே!

கனத்தஞ் சாபுரி சிக்கல்வ லஞ்சுழி
திருச்செங் கோடு இடைக்கழி தண்டலை
களச்செங் காடு குறுக்கைபு றம்பயம் அமர்வோனே!

சிறுக்கண் கூர்மத அத்தி சயிந்தவம்
நடக்குந் தேரநி கப்படை கொண்டமர்
செலுத்தும் பாதகன் அக்ரமன் வஞ்சனை யுருவானோன்

செருக்குஞ் சூரக லத்தை யிடந்துயிர்
குடிக்குங் கூரிய சத்திய மர்ந்தருள்
திருச்செந் தூர்நக ரிக்குள்வி ளங்கிய பெருமாளே!

(ப - ரை) கறுக்கும் தூய மிடற்றன் - (ஆலாகலத்தையுண்டு அதைத் திருக் கழுத்தினில் நிறுத்திக் கொண்டதனால்) கருநிறம் அடைந்துள்ளதும் பரிசுத்த மானது மான கழுத்தையுடைய சிவபெருமானுடைய, அரும் சிலை எடுக்கும் தோளன்-சிறந்த மலையான திருக்கைலாயத்தைத் தூக்க முயன்ற தோள்களை யுடையவனும், நிறத்து - தனது புயத்தின் வலிமையினால், அமர் - போரில், எண் கரி-எட்டுத் திக்கு யானைகளையும், கடக்கும் தானவனை - வென்ற அரக்கனுமான இராவணனை, கொல் அரும் புயன் மருகோனே - சங்கரித்தருளிய சிறந்த தோள் வலிமையுடைய திருமாலின் மருகனே !, கன - சிறப்பு வாய்ந்த (தலங்களான), தஞ்சாபுரி - தஞ்சாவூர், சிக்கல், வலஞ்சுழி திருசெங்கோடு, இடைக்கழி - திரு இடைக்காடு, தண்டலை - திருத்தண்டலை நீணெறி, களர் - திருக்களர், செங் காடு - திருச்செங்காட்டங்குடி, குறுக்கை - திருக்குறுக்கை, புறம் பயம் - திருப் புறம்பயம், (என்னும் திருத்தலங்களில்), அமர்வோனே - எழுந்தருளி யிருப்ப வனே!, சிறு கண் கூர் மத அத்தி - சிறு கண்களையும் பெருகும் மதத்தையுமுடைய யானை, சயிந்தவம் - குதிரை, நடக்கும் தேர் - (போரில்) செலுத்தும் தேர், (இவைகளடங்கிய), அநிக படை கொண்டு - ஒன்பது சமுத்திரம் சேனைகளைத் திரட்டிக்கொண்டு, அமர் செலுத்தும் - போரில் அவைகளைச் செலுத் திய, பாதகன் அக்ரமன் - பாவியும் அக்கிரமச் செயல்களைச் செய்ப வனும், வஞ்சனை உருவானோன் - வஞ்சனையின் உருவமேயானவனும், செருக் கும் சூர் - கர்வமுற்றவனுமான சூரனது, அகலத்தை இடந்து - அகன்ற மார்பைப் பிளந்து, உயிர் குடிக்கும் - அவனது உயிரைக் குடித்துக் கவர்ந்த, கூரிய சத்தி அமர்ந்து அருள் - கூர்மையான ஞான சக்தியாம் வேலாயுதம் நிலையாக அமர்ந்திருக்கப் பெற்ற, (தலமான), திருச்செந்தூர் நகரிக்குள் - திருச்செந்தூர் என்னும் நகரத்தில், விளங்கிய பெருமாளே - ஞானவொளி வீசி அமர்ந்திருக்கும் பெரியோனே !, நிறக்கும் - அசையாமல் நிற்பவைகளும், சூது அ(ன்)ன - சூதாட்டக் கருவிகளை யொத்தவைகளும், மெய் தன முண்டைகள் - (அவ்விரு காரணங்களினாலும்) உண்மையிலேயே தனங்கள் என்று சொல்லத் தக்கவைகளுமான தனபாரங்களையுடைய முண்டைகள், கருப்பஞ் சாறொடு - கரும்பின் சாற்றினோடு, அரைத்து உ(ள்)ள உண்டைகள் - அரைத்துச் செய்த உருண்டைகளை, நிழல் கண் காண உணக்கி - நிழலில் வைத்து (நீர்சுண்டி) வணங்க உலர்த்தி, மணம் பல தடவாமேல் - வாசனைத் திரவியங்கள் பலவற்றை அவைகளின்மீது தடவியபின், நெருக்கும் பாயலில் வெற்றிலையின் புறம் ஒளித்து - இறுக அணைந்துகொள்ளும் படுக்கையின்மீது (இருக்கையில்) வெற் றிலையின் பக்கத்தில் ஒளித்து வைத்து, அன்பாக அளித்தபின்-(தம்மைப் புணரும் ஆடவர்களுக்கு) அன்புடன் அளித்த பின்னர், இங்கு எனை மெச்சல் இதம் சொ(ல்)லி நினைக்கின்றீர் இ(ல்)லை - இங்கு (என்னுடன் இருக்கும்போது) என்னைப் புகழ்ந்து இனிமையான வார்த்தைகளைக் கூறுகிறீரே யெனினும்

(பிறகு) என்னை நீங்கள் நினைப்பதில்லை, என ஓதி - என்று சொல்லி, ஆசை வலைக்குள் உற கண்டு - தங்கள்மீது கொள்ளும் ஆசையாம் வலைக்குள் அவர்கள் சிக்குவதைக்கண்டு, அழுந்திட விடுக்கும் பாவிகள் - அவ்வலைக்குள் அழுந்தச் செய்யும் பாவிகள், பொட்டிகள் - (பொதுப்பெண் என்பதற்கடையாளமாகப்) பொட்டுக் கட்டிக்கொண்டிருப்பவர்கள், சிந்தனை உருக்கும் தூவைகள் - கவலை தரும் ஆசையை உதிக்கச்செய்யும் மாமிசப்பிண்டங்கள், (இப்படிப்பட்ட விலை மாதர்களின்) செட்டை குணம் தனில் உழலாமே - தீய நெறியிற் செல்லச் செய்யும் குணத்தைக்கண்டு அதில் மயக்கமுற்றுத் திரியாமல், உலப்பு இன்று - கேடு அடையாமல், ஆறு எனும் அக்கரமும் - சடாக்ஷரத்தையும், கமழ் கடப்பம் தாரும் - நறுமணம் வீசும் கடப்பமலர் மாலையையும், முக ப்ரபையும் - (நினது) முகத்தின் ஒளியையும், தினம் - தினந்தோறும், உளத்தின் பார்வையிடத்தில் - அகக்கண்ணினால், நினைந்திட அருள்வாயே - சிந்தித்துக் காணும்படி அடியேனுக்கு அருள்புரியவேண்டும்.

(வி - ரை) இராவணன் திருக்கைலாயத்தைத் தூக்க முயன்ற வரலாற்றை 92-93-ம் பக்கங்களில் காண்க. அநிகம் - ஒரு சேனைத்தொகை—சங்கம் மூன்று கொண்டது. சங்கம் என்பது மூன்று சமுத்திரம் கொண்டது ; அதாவது, தேர் 2187, யானை 2187, குதிரை 6561, காலாள் 10,935. இப்பாடலின் இறுதி அடியில் திருச்சேந்தூர் ஞானசக்தி ஸ்தானம் என்னும் பொருள் தொனிக்கிறது. இது ஆராயத்தக்கது. இராவணன் திக்கு விஜயம் செய்த காலத்தில் எட்டுத் திக்கு யானைகளையும் வென்றான். சேட்டை என்பது செட்டை எனக் குறுகி நின்றது. முருகப்பெருமானது சடாக்ஷரத்தையும் கடப்ப மலர் மாலையையும் கருணை பொழியும் திருமுக காந்தியையும் அகக்கண்ணால் கண்டு களிப்பதே உய்யு நெறியாகும். புறக்கண்ணால் காண்பது அகக்கண்ணால் காண்பதற்கு ஒரு சாதனமேயன்றி வேறல்ல. (சகூ)

தனன தந்த தந்த தனன தந்த தந்த
தனன தந்த தந்த—தனதான.

முலைமு கந்தி மிர்ந்த கலவை யுந்து லங்கு
முறுவ லுஞ்சி வந்த கனிவாயும்

முருக விழ்ந்து திர்ந்த மலர்க ளுஞ்ச ரிந்த
முகிலு மின்ப சிங்கி விழிவேலும்

சிலைமு கங்க லந்த திலத முங்கு ளிர்ந்த
திருமு கந்த தும்பு குறுவேர்வும்

தெரிய வந்து நின்ற மகளிர் பின்சு ழன்று
செயல ழிந்து ழன்று திரிவேனோ?

மலைமு கஞ்சு மந்த புலவர் செஞ்சொல் கொண்டு
வழிதி றந்த செங்கை வடிவேலா!

வளர்பு னம்ப யின்ற குறம டந்தை கொங்கை
மணிவ டம்பு தைந்த புயவேளே!

அலைமு கந்த வழ்ந்து சினைமு திர்ந்த சங்க
மலறி வந்து கஞ்ச மலர்மீதே

அளிக லந்தி ரங்க இசையு டன்து யின்ற
அரிய செந்தில் வந்த பெருமாளே!

(ப - ரை) மலை முகம் சுமந்த - மலையி(லுள்ள குகையி)ன் இடத்தே (கற்கி முகி யென்னும் பூதத்தினால்) சுமந்துகொண்டு போய் அடைக்கப்பட்ட, புலவர் - (தமிழ்ப்) புலவராகிய நக்கீரனாருடைய, செம் சொல் - இனிய பாடல்களை, கொண்டு - ஏற்றுக்கொண்டு, வழி திறந்த - அக்குகையினின்றும் வெளி வருவதற்குரிய வழியைத் திறந்துவிட்ட, செம் கை வடி வேலா - அழகிய கையினில் கூர்மையான வேலாயுதத்தைத் தரித்துக் கொண்டிருப்பவனே!, வளர் புனம் பயின்ற - (தினைப்பயிர்) வளர்ந்திருந்த தினைப்புனத்தில் நீ வணங்கிய, குற மடந்தை - குறப்பெண்ணான வள்ளிநாயகியின், கொங்கை மணி வடம் - தன பாரங்களின்மீது அணிந்துள்ள இரத்தின மாலை, புதைந்த புய வேளே - அழுந்திப் பொருந்தப்பெற்ற மார்பையுடைய குமரனே!, சினை முதிர்ந்த சங்கம் - (கரு வுற்றுக்) கரு முதிரப்பெற்ற சங்கங்கள், அலைமுகம் தவழ்ந்து - அலைகளின் மீது தவழ்ந்து, அலறி வந்து - (பூரண கருப்பத்தைத் தாங்க மாட்டாமல்) அலறிக் கொண்டு வந்து, கஞ்ச மலர்மீது (ஏ - அசை) - (கடலோரத்திலுள்ள தடாகங்களில் மலர்ந்திருக்கும்) தாமரை மலர்களின் மீது (அமர்ந்து), அளி கலந்து இரங்க - தேனீக்கள் அவைகளுடன் சேர்ந்து அமர்ந்து (அவைகளுடைய துன்பத்தைக் கண்டு) இரக்கமுற்றுப் பாட, இசையுடன் துயின்ற - அந்த இன்னிசையைக் கேட்டுத் தம் துன்பத்தை மறந்து தூங்கும் (தலமான), அரிய செந்தில் - அருமையான திருச்செந்தூரில், வந்த பெருமாளே - வந்து அமர்ந்துள்ள பெரியோனே!, முலை முகம் திமிர்ந்த கலவையும் - தனபாரங்களின் மீது பூசப்பெற்ற கலவைச் சந்தனமும், துலங்கு முறுவலும் - விளங்கும் பற்களும், சிவந்த கனி வாயும் - சிவந்து இனிய கனியை யொத்துள்ள வாயும், முருகு அவிழ்ந்து உதிர்ந்த மலர்களும் - (மலரும் காலத்தில்) நறுமணமுள்ள மகரந்தப்பொடி விடு

விக்கப்பட்டுச் சிந்தப்பெறும் மலர்களும், சரிந்த முகிலும் - அவிழ்ந்துகொண்டிருக்கும் மேகத்தையொத்த கூந்தலும், இன்ப சிங்கி விழி வேலும் - சிற்றின்ப ஆசையான நோயை யுண்டாக்கும் வேலையொத்த விழிகளும், சிலைமுகம் கலந்த திலதமும் - வில்லையொத்த புருவங்களுடன் கலந்து விளங்கும் பொட்டும், குளிர்ந்த திருமுகம் ததும்பு குறு வேர்வும் - அன்பினால் குளிர்ச்சி பெற்றுள்ள அழகிய முகத்தில் மிகுதியாகத் தோன்றும் வியர்வைத் துளிகளும், தெரிய வந்து நின்ற மகளிர் பின் சுழன்று - தோன்றும்படி (தெருவில்) வந்து நிற்கும் பெண்கள் பின்னே சுற்றியாடி, செயல் அழிந்து - (தன் வசமாகச் செய்யும்) செய்கைகள் அழியப்பெற்று, உழன்று திரிவேனோ - அலைந்து திரிவது தகுதியோ?

(வி - ரை) நக்கீரனுருடைய இனிய பாடல்களைக் கேட்டு மகிழ்ந்து அப்புலவரை மலைக் குகையினின்றும் விடுவித்தருளிய வரலாற்றை 306 - ம் பக்கத்தில் காண்க. அன்புடன் தம்மைப் புகழ்வோர் அல்லலைக் களைந்தெறியும் தமது இயல்பை நக்கீரர்பால் காட்டியும், தம்மிடத்து ஆராத காதல்கொண்ட ஆன்மாவைத் தேடிச் சென்று ஆட்கொள்ளும் தமது இயல்பை வள்ளிநாயகியினிடத்தில் காட்டியும் தமது கருணையின் தன்மையை உலகத்தோருக்குத் தெரிவித்த முருகப்பெருமானை வணங்காமல் அழகிய மாதர்களைத் தொடர்ந்து சென்று அலைந்துதிரிவது தகுதியன்றெனச் சுவாமிகள் உணர்த்துகிறார்கள். (௬௭)

*தாத்தத் தத்தன தாத்தத் தத்தன*
*தாத்தத் தத்தன—தனதான.*

மூப்புற் றுச்செவி கேட்பற் றுப்பெரு
மூச்சுற் றுச்செயல் தடுமாறி

மூர்க்கச் சொற்குரல் காட்டிக் கக்கிட
மூக்குக் குட்சளி யீளையோடும்

கோப்புக் கட்டியி னுப்பிச் செற்றிடு
கூட்டிற் புக்குயி ரலையாமுன்

கூற்றத் தத்துவ நீக்கிப் பொற்கழல்
கூட்டிச் சற்றருள் புரிவாயே!

காப்புப் பொற்கிரி கோட்டிப் பற்றலர்
காப்பைக் கட்டவர் குருநாதா!

# 3. திருச்சீரலைவாய்—திருச்செந்தூர்

காட்டுக் குட்குற வாட்டிக் குப்பல
காப்புக் குத்திர மொழிவோனே!
வாய்ப்புற் றத்தமிழ் மார்க்கத் திட்பொருள்
வாய்க்குச் சித்திர முருகோனே!
வார்த்தைச் சிற்பர தீர்த்தச் சுற்றலை
வாய்க்குட் பொற்பமர் பெருமாளே!

(ப - ரை) காப்பு பொன் கிரி கோட்டி - மதில்களையுடைய அழகிய மலையை யொத்த கோட்டைகளை வளைத்துக்கொண்டு, பற்றலர் - விரோதிகளான திரி புரர்களுடைய, காப்பை - கோட்டைகளை, கட்டவர் குருநாதா - களைந்தவரான சிவபெருமானுக்குக் குருவாக அமர்ந்த நாதனே! காட்டுக்குள் குறவாட்டிக்கு - தினைப்புனத்திலிருந்த குறப்பெண்ணான வள்ளிநாயகிக்கு, பல கா புக்கு - பல சோலைகளுக்குள் சென்றபோது, திரம் மொழிவோனே - ஞானத்தை யுபதேசித் தவனே!, வாய்ப்பு உற்ற - இனிமை பொருந்திய, தமிழ் மார்க்க - தமிழ்மொழி யினால் நின்னை வழிபடும் நெறியில், திண் பொருள் வாய்க்கும் - மெய்ப்பொருள் (அறிவு) கிடைக்கச் செய்யும், சித்திர முருகோனே - பேரழகு வாய்ந்த ஞான சொரூபியே!, வார்த்தை சித் பர - ஞானத்தை உபதேசிப்பதற்காகத் தோன்றிய சித்பரனே!, தீர்த்த(ம்) சுற்று அலைவாய்க்குள் - பல புண்ணிய தீர்த்தங்களாற் சூழப்பெற்ற அலைவாய் என்னும் திருச்செந்தூரில், பொற்பு அமர் பெருமாளே - அழகாக அமர்ந்துள்ள பெரியோனே!, மூப்பு உற்று - கிழப்பருவம் அடைந்து, செவி கேட்பு அற்று - காதுகள் கேட்கும் திறன் ஒழியப்பெற்று (செவிடாகி), பெருமூச்சு உற்று - (வலிமை குன்றியதனால் எது செய்தாலும்) பெருமூச்சு விடும் இயல்பை யடைந்து, செயல் தடுமாறி - எச்செயலையும் செய்யும் முறையில் கலக்கமுற்று, மூர்க்க சொல் குரல் காட்டி கக்கிட - முரட்டுத்தனமான மொழி களை உரத்த குரலில் கக்கி வெளிப்படுத்துவது போல் பேசத்தொடங்கி, மூக்குக் குள் சளி இளையோடும் கோப்பு கட்டி-மூக்குக்குள் சளி ஈளையுடன் சேர்ந்து கட்டிக் கொள்ள, இ(ன்)னு பிச்சு எற்றிடும் கூட்டில் புக்கு உயிர் அலையாமுன் - (அத னால்) துன்பமானது பிய்த்து எறியும் கூடான தேகத்தில் புகுந்திருக்கும் உயிர் தள்ளாடி வருந்துமுன், கூற்ற தத்துவம் நீக்கி - யமனது அதிகாரத்தை யொழித்து, பொன் கழல் கூட்டி - நினது அழகிய பாதங்களில் அடியேனைச் சேர்ப்பித்து, சற்று அருள் புரிவாயே - சற்று அருள் புரியவேண்டும்.

(வி - ரை) “தமிழ் மார்க்கத்திட்பொருள் வாய்க்கும் சித்திர முருகோனே” என்பதற்கு தமிழ் மொழியினால் வழிபடும் நெறியில் மெய்ஞ்ஞானப் பொருளாய்க் கிடைக்கும் விசித்திர ஞான சொரூபியே” என்று பொருள் கூறினும் பொருந்

தும். "கூட்டில் புக்கு...........நீக்கி" என்னும் மொழித் தொடருக்கு, 'கூட்டில் யமன் புகுந்து உயிரை வதைப்பதற்கு முன் உடல் வேறு உயிர் வேறு கக் கூறுபடுத்தும் யமவேதனைத் தன்மையை நீக்கி' என்று பொருள் கூறுவாரு முளர். தத்துவம்—அதிகாரம். (கூஅ)

தந்த னந்தன தந்தன தந்தன
தந்த னந்தன தந்தன தந்தன
தந்த னந்தன தந்தன தந்தன—தந்ததான.

மஞ்செ னுங்குழ லும்பிறை யம்புரு
வங்க ளென்சிலை யுங்கணை யங்கயல்
வண்டு புண்டரி கங்களை யும்பழி சிந்துபார்வை

மண்ட லஞ்சுழ லுஞ்செவி யங்குழை
தங்க வெண்டர ளம்பதி யும்பலு
மண்ட லந்திக ழுங்கமு கஞ்சிறு கண்டமாதர்

கஞ்சு கங்குர லுங்கழை யம்புய
கொங்கை செங்கிரி யும்பவ ளம்பொறி
கந்த சந்தன மும்பொலி யுந்துகில் வஞ்சிசேருங்

கஞ்ச மண்டளி னின்றிர சம்புகு
கண்ப டர்ந்திட ரம்பையெ னுந்தொடை
கண்கை யஞ்சர ணஞ்செயல் வஞ்சரை நம்புவேனோ?

சஞ்ச சஞ்சக ணஞ்சக டுண்டுடு
டிண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு
தந்த னந்தன திந்திமி சங்குகள் பொங்குதாரை

சம்பு வின்கும ரன்புல வன்பொரு
கந்த னென்றிடு துந்துமி யுந்துவ
சங்க ளங்கொளி ருங்குடை யுந்திசை விஞ்சவேகண்

டஞ்ச வஞ்சசு ரன்திர ளுங்குவ
டன்ற டங்களும் வெந்துபொ ரிந்திட
அண்ட ரிந்திர னுஞ்சர ணம்புக வென்றவேளே!

அம்பு யந்தண ரம்பைகு றிஞ்சியின்
மங்கை யங்குடில் மங்கையொ டன்புடன்
அண்டருந்தொழு செந்திலி லின்புறு தம்பிரானே!

(ப - ரை) சஞ்ச சஞ்ச * * * * திந்திமி, - (என வொலிக்கும்), சங்குகள் - சங்கங்களும், பொங்கு தாரை - பேரொலி செய்யும் காளங்களும், சம்புவின் குமரன் - ஆன்ம கோடிகளுக்குச் சுகத்தைச் செய்யும் சிவபெருமானது புதல்வன் (வந்துள்ளான்)!, புலவன் - ஞானபண்டிதன் (வந்துள்ளான்!) பொருகந்தன் - (அஞ்ஞானத்தினுலுண்டாகும் மலங்களை யகற்ற ஞானசக்தியைப் பிரயோகித்துப்) போர்புரிந்து (ஆன்ம கோடிகளின்) பகை(களாகிய அவை)களை ஓட்டுபவன் (வந்துள்ளான்)!, என்றிடு துந்துமியும் - என்று முழங்கிடும் பேரிகைகளும், துவசம் - கொடிகளும், களம் கொள் இரும் குடையும் - போர்க்களத்தின் இட முழுவதும் நிழல் செய்யும் பெரிய குடைகளும், திசை விஞ்ச (எ - அசை) கண்டு - அத்திசை யெங்கும் நிரம்பி யிருந்ததைக் கண்டு, அஞ்ச அன்று - அஞ்சியபோது, அஞ்சு அசுரன் திரளும் குவடு அடங்கலும் - அஞ்சிய அசுரனும் அவனுடைய திரண்ட சேனையும் கிரௌஞ்சம் என்னும் மலையும் மற்றி யாவும், வெந்து பொரிந்திட - (ஞானசக்தியாம் வேலாயுதத்தினின்றும் வெளிப்பட்ட ஞானத் தீயினுல்) வெந்து பொரிந்து போகுமாறும், அண்டர் இந்திரனும் - தேவர்களும் (அவர்கள் தலைவனுன) இந்திரனும், சரணம் புக - நினது சரணங்களில் அடைக்கலம் புகுமாறும், வென்ற வேளே - வெற்றியடைந்த குமாரசுவாமியே!, அம்புய அம் தண் அரம்பை-தாமரை மலரின்மீது வசிப்பவரும், அழகும் கருணையும் வாய்ந்தவருமான தேவி யாகிய இலக்குமியின், (புதல்விகளான), குறிஞ்சியின் மங்கை(யொடு) - மலைக்கிராமத்தில் வசித்த பெண்ணை வள்ளிநாயகியாரோடும், குடில் அம் மங்கை யொடு - விண்ணுலகத்தில் வசித்த அழகிய பெண்ணை தெய்வயானை யம்மையாரோடும், அன்புடன் அண்டரும் தொழு செந்திலில் - மெய்யன்புடன் தேவர்களும் வணங்கும் சிறப்பு வாய்ந்த தலமான திருச்செந்தூரில், இன்பு உறு தம்பிரானே - இன்பமடையும் நாதனே!, மஞ்சு எனும் குழலும் - மேகம் என்று சொல்லத் தக்க கூந்தலும், பிறை சிலை என் அம் புருவங்களும் - பிறைச் சந்திரன் என்றும் வில் என்றும் சொல்லத்தக்க அழகிய புருவங்களும், கணை அம் கயல் வண்டு புண்டரிகங்களையும் பழி - அம்பு அழகிய கயல்மீன் வண்டு தாமரைமலர் இவைகளையும் பழிக்கத்தக்கவைகளும், சிந்து பார்வை - சமுத்திரத்தைப்போல் விசாலமானவைகளுமான கண்கள், மண்டலம் சுழலும் செவி அம் குழை - வட்டமிட்டுச் சுழன்று தொடும் காதுகளில் அணிந்துள்ள குழைகளும், தங்க வெண் தரளம் பதியும் ப(ல்)லு(ம்) - சுத்த வெண்மை நிறம் வாய்ந்த முத்துக்களும் வணங்கத்தக்க பற்களும், மண்டலம் திகழும் கமுகு அம் சிறு கண்டம் - சூரிய மண்டலத்தை யளாவி நின்று விளங்கும் பாக்குமரத்

தைப்போன்ற அழகிய சிறு கழுத்தும், மாதர் கஞ்சுகம் குரலும் - ஆசை நிறைந்த அதிமதுரமான குரலும், கழை அம் புய - மூங்கிலை யொத்த அழகிய தோள்களும், செம் கிரி கொங்கையும் - அழகிய குன்றுகளை யொத்த தனபாரங்களும், பவளம் பொறி கந்த சந்தனமும் - பவளத்தின் நிறமுடையதாய்ப் பூசப்பெற்றுள்ள வாசனை கலந்த சந்தனமும், பொலியும் துகில் வஞ்சி - அழகாய் விளங்கும் புடவை உடுத்துள்ள கொடியைப் போன்ற இடையும், சேரும் - இடைக்கு அடுத்தாற் போலுள்ளவைகளும், கஞ்சம் மண்டு உ(ள்)ளினின்று - நீர் மிகுதியாகவுள்ள உட்புறத்தினின்று, இரசம் - (ஜீவாதாரமான) சாறு, புகு கண் படர்ந்திடு அரம்பை - செல்லும் துவாரங்கள் பரவியுள்ள வாழை, எனும் தொடை - என்று சொல்லத் தக்கதாக வுள்ளவைகளுமான தொடைகளும், கண்கை - விரும்பத் தக்க, அம் சரணம் - அழகிய பாதங்கள், (இவைகளின்), செயல் வஞ்சரை - செயல்களினால் (ஆடவர் மனத்தை) வஞ்சித்துக் கவர்பவரான மாதரை, நம்புவேனோ - (உண்மையான அன்புடையவர்களென்று) நம்புதல் தகுதியோ ?

(வி - ரை) பெண்களின் அழகைக் கண்டு மோகிப்பதற்கு அஞ்ஞானமே காரணமாதலால், அந்த அஞ்ஞானத்தை அகற்றும்படி ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்வதையே நோக்கமாகவுடைய சிவபெருமானுக்குப் புதல்வராய்த் தோன்றியவரும், ஞானபண்டிதரும், அகங்காரம் முதலிய துர்க்குணங்களை ஞானோபதேசத்தினால் அகற்றுபவருமான முருகப்பெருமானைச் சுவாமிகள் குறிப்பாய்ப் பிரார்த்திக்கிறார்கள். (௬௧)

தனதன தனன தனத்தத் தாத்தன
தனதன தனன தனத்தத் தாத்தன
தனதன தனன தனத்தத் தாத்தன — தந்ததான.

இருள்விரி குழலை விரித்துத் தூற்றவு
மிறுகிய துகிலை நெகிழ்த்துக் காட்டவு
மிருகடை விழியு முறுக்கிப் பார்க்கவு மைந்தரோடே

இலையிள வதனை நடித்துக் கேட்கவு
மறுமொழி பலவு மிசைத்துச் சாற்றவு
மிடையிடை சிறிது நகைத்துக் காட்டவு மெங்கள்வீடே

வருகென வொருசொ லுரைத்துப் பூட்டவும்
விரிமல ரமளி யணைத்துச் சேர்க்கவும்
வருபொரு ளளவி லுருக்கித் தேற்றவு நிந்தையாலே

வனைமனை புகுதி லடித்துப் போக்கவு
மொருதலை மருவு புணர்ச்சித் தூர்த்தர்கள்
வசைவிட நினது பதத்தைப் போற்றுவ தெந்தநாளோ?

குருமணி வயிர மிழித்துக் கோட்டிய
கழைமட வுருவு வெளுத்துத் தோற்றிய
குளிறிசை யருவி கொழித்துத் தூற்றிய மண்டுநீரூர்

குழிபடு கலுழி வயிற்றைத் தூர்த்தெழு
திடர்மண லிறகு துருத்திக் காப்பொதி
குளிர்நிழ லருவி கலக்கிப் பூப்புனை வண்டலாடா

முருகவிழ் துணர்க ளுகுத்துக் காய்த்தினை
விளைநடு விதணி லிருப்பைக் காட்டிய
முகிழ்முலை யிளைய குறத்திக் காட்படு செந்தில்வாழ்வே!

முளையிள மதியை யெடுத்துச் சாத்திய
சடைமுடி யிறைவர் தமக்குச் சாத்திர
முறையருள் முருக தவத்தைக் காப்பவர் தம்பிரானே!

(ப - ரை) குரு மணி வயிரம் இழித்து கோட்டிய - பிரகாசிக்கின்ற அழகிய வயிரங்களை (மலையுச்சியினின்றும்) இறக்கிக் குவிப்பவைகளும், கழை மட உருவு - மூங்கிலிலுண்டாகும் முத்துக்களின் அழகிய வடிவமானது, வெளுத்து தோற்றிய - வெண்மையாகத் தோன்றும்படி அவைகளைக் கொண்டுவருபவைகளும், குளிறு இசை - ஒலித்து இன்னிசை பரப்புகிறவைகளுமான, அருவி - மலையருவிகள், கொழித்து தூற்றிய மண்டு நீர் - தெள்ளி வீசுவதனால் பெருகும் நீரானது, ஊர் - செல்லும், குழி படு கலுழி வயிற்றை - குழிகளையுடைய கான்யாற்றின் அகத்தை, தூர்த்து எழு திடர் மணல் - நிரப்பி (நீர்மட்டத்துக்கு மேல்) எழும்பும் மேட்டிலுள்ள மணலானது, இறகு துருத்தி - இறகியதினால் ஆற்றினிடையிலுண்டான உயர்ந்த மேட்டினிடத்தே யுள்ள, கா பொதி - சோலைக்குள் மறைந்துள்ளதும், குளிர் நிழல் அருவி - குளிர்ந்த நிழலின்கீழே யுள்ளதுமான நீரை, கலக்கி - கலக்கி, பூ புனை வண்டல் ஆடா - மலரினால் அலங்கரித்துக் கொள்ளும் விளையாட்டை விளையாடி, முருகு அவிழ் துணர்கள் உகுத்து - வாசனை வீசும் மலர்களை உதிர்த்து, காய் தினை விளை நடு இதணில் - (முதிராமல்) காய்ப்பதத்திலுள்ள தினை விளைந்துள்ள புனத்தின் நடுவேயுள்ள பரண்மீது,

இருப்பை காட்டிய - காவலிருக்கும் கோலத்தைக் காட்டியவரும், முகிழ் முலை இளைய குறத்திக்கு - மொட்டை யொத்த தனபாரங்களை யுடையவரும் இளமைப் பருவத்திலுள்ளவருமான குறப்பெண்ணான வள்ளிநாயகிக்கு, ஆட்படு - அடிமைப்பட்ட(வனே), செந்தில் வாழ்வே - திருச்செந்தூரில் அமர்ந்திருப்பவனே!, முளை இள மதியை எடுத்து சாத்திய - (வானில்) முதலில் தோன்றும் பிறைச்சந்திரனை எடுத்து அணிந்துகொண்ட, சடைமுடி இறைவர் தமக்கு - சடாமுடியை யுடைய தேவாதி தேவராகிய சிவபெருமானுக்கு, சாத்திர முறை அருள் முருக - வேதம் முதலான நூல்களில் அடங்கிய பொருளை முறைப்படி (குருவாக அமர்ந்து) உபதேசித்தருளிய ஞானதேசிகனே!, தவத்தை காப்பவர் தம்பிரானே - தவநெறியில் நின்று ஒழுகுபவர்களுடைய நாதனே!, இருள் விரிகுழலை விரித்து தூற்றவும் - இருளை எங்கும் பரப்பும் இயல்புடைய கரிய கூந்தலை விரித்துப் பறக்கச் செய்வதையும், இறுகிய துகிலை நெகிழ்த்து காட்டவும் - இறுக வுடுத்திருந்த புடவையைத் தளர்த்திக் காட்டுவதையும், இரு கடை விழியும் உறக்கி பார்க்கவும் - இரு கடைக்கண்களாலும் கோபித்துப் பார்ப்பதையும், மைந்தரோடு (ஏ - அசை) இலை பிளவு அதனை நடித்து கேட்கவும் - இளைஞர்களைத் தங்களுக்கு வெற்றிலைபாக்குத் தரும்படி சைகையினால் கேட்பதையும், மறுமொழி பலவும் இசைத்து சாற்றவும் -(அவர்கள் கேட்பவைகளுக்குப்) பல பதில்களைப் பொருத்தமாகச் சொல்வதையும், இடையிடை சிறிது நகைத்து, காட்டவும் - காட்டுவதையும், எங்கள் வீடு (ஏ - அசை) வருக என ஒரு சொல் உரைத்து பூட்டவும் - எங்கள் வீட்டுக்கு வரவேண்டும் என்னும் ஒரு வார்த்தை சொல்வதனாலேயே தங்கள்மீது அன்பு பூணச் செய்வதையும், விரி மலர் அமளி அணைத்து சேர்க்கவும் - வாசனையைப் பரப்பும் மலர்களினால் அமைத்த படுக்கையின் மீது அணைத்து அமர்த்துவதையும், வரு பொருள் அளவில் உருக்கி தேற்றவும் - (தம்மைச் சேரும் ஆடவரிடமிருந்து) கிடைக்கும் பொருளுக்குத் தக்க அளவு அன்பு காட்டி அவர்கள் மனத்தை உருகச் செய்து (அவ்வாறு செய்வதனால், அவர்கள் பொருள் கொடுத்ததைக் குறித்து வருந்தா வண்ணம் அவர்கள் மனத்தைத்) தேற்றுவதையும், (அவர்கள் கைப்பொருளனைத்தையும் பறித்துக்கொண்ட பிறகு), வனை மனை புகுதில் - அவர்கள் தங்களுடைய அழகிய வீடுகளுக்குள் புகுந்தால், நிந்தையால் (ஏ - அசை) அடித்து போக்கவும் - நிந்தித்து அடித்துத் துரத்துவதையும், ஒருதலை மருவு - தங்கள் குலாசாரங்களாகக் கொண்டுள்ள (வர்களும்,) புணர்ச்சி தூர்த்தர்கள் - கலவியிலேயே அழுந்திக் கிடக்கும் காமுகர்(களுமான விலைமாதர்)களது, வசை விட - இழிவான நட்பு நீங்கப்பெற்று, நினது பதத்தை போற்றுவது எந்த நாளோ - நினது பாதமலர்களைத் துதிக்கும் காலம் எப்போது வருமோ?

(வி - ரை) " சாய்த்திரளை விளைகடு விதணி விருப்பைக் காட்டிய முகிழ் முலை இளைய குறத்திக் காட்படு " என்றவிடத்து, பரிபாகமடையாத ஒரு ஆன்மாவானது தனது செயல்களில் அகங்காரம் முதலிய துர்க்குணங்கள் சேராவண்ணம் காத்துக்கொண்டு தவநெறியில் நிற்குமாகில், ஞானசொரூபியாகிய முருகப்பெருமான் தாமே வலியச் சென்று அந்த ஆன்மாவுக்கு ஆட்படுகிறார் என்பது உணர்த்தப்பட்டது. இப்பொருள், பாடலின் இறுதியில் " தவத்தைக் காப்பவர் தம்பிரானே " என்னும் மொழிகளாலும் குறிப்பாக வுணர்த்தப்பட்டுளது. (எ0)

தந்தனந் தந்தனந் தந்தனந் தந்தனந்
தந்தனந் தந்தனந்—தனதான.

இன்பமுந் துன்பமுஞ் சந்ததங் கொண்டுசென்
றிங்குமங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெண் கும்பியங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் களியேனோ?
புன்குருந் துந்தியஞ் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசும்
தன்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணுந்
தந்திடுஞ் செந்திலம் பெருமாளே!

(ப - ரை) புன் குருந்து உந்தி - புன்மையான குருந்த மரங்களை வேருடன் பறித்துத் தள்ளியும், அம் சந்தனம் சிந்தி - அழகிய சந்தன மரங்களை வீழ்த்தியும், முன் பொங்கி - மேலே பொங்கி வந்து, வெண் சங்கு எறிந்து - வெண்மையான சங்குகளை வீசி யெறிந்து, அலை வீசும்—, தன் பொருந்தம் - தனது தாமிரபரணி ஆறானது, பசும் பொன் சொரிந்து - பசும் பொன்னையே சொரிந்தாற்போல பசுமையான பயிர்களைச் செழுமையாக வளரச்செய்து, எங்கணும் தந்திடும் - தன்னிட மெங்குமுள்ள உயிர்களைக் காக்கப்பெறும், செந்திலம் பெருமாளே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, இன்பமும் துன்பமும் சந்ததம் கொண்டு - சுகத்தையும் துக்கத்தையும் இடைவிடாமல் அனுபவித்துக் கொண்டு, இங்கும் அங்கும் சென்று—, சுழன்றிடு - திரிந்து கலங்கச் செய்வதும், மாய துன்ப - வஞ்சகமாகத் துன்பத்தில் ஆழ்த்துவதும், வெண் - புல்லறிவையே தனக்கு ஆதாரமாகக் கொண்டதும், கும்பி - சேற்றை யொத்ததுமான ஜடவுலக வாழ்க்கை என்னும், அங்கம் - குற்றத்தை, தவிர்ந்து - அகற்றிக் கொண்டு, உன்பெரும் தொண்டன் என்று-உனக்குத் தொண்டு புரியும் பெருமையுடையவனாகி, உய்ந்து - திண்ணமாய் நற்கதியைத் தரும் நெறியில் நின்று,

உளம் களியேனே - (நான் முத்தியடைவது நிச்சயமென வுணர்ந்து) மனங்களிக்க மாட்டேனே?

(வி - ரை) மற்றுமோரிடத்து "ஆர்வன பரிசன தெரிசன கந்த ஓசைகள் பலநல விதழள துன்பமாகி" என்று கூறியவாறு, விஷய சுகங்கள் சுகங்களாகத் தோன்றினும் உண்மையில் துன்பத்தை விளைவிக்குமாதலால் "மாயத் துன்ப" என்றும், ஜடவுலக வாழ்க்கையில் உழலுவதற்குப் புல்லறிவே காரணமாதலால் "வேண் கும்பி" என்றும், அவ்வாழ்க்கையில் சிக்கினவர் மீள்வது அரிதாதலின் அதைக் "கும்பி" என்றும், குற்றம் பொருந்திய அவ்வாழ்க்கையிலுள்ள ஆசையை யொழித்து இறைவனுக்குத் தொண்டு புரிவதே நற்கதியடைவதற்கு உறுதியான நெறியாதலால் "வெண்கும்பி யங்கண் தவிர்ந்துன் பெருந் தொண்டனென்று" என்றும் கூறப்பட்டது. (எக)

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன—தனதான.

பஞ்ச பாதக முறுபிறை யெயிறெரி
குஞ்சி கூர்விட மதர்விழி பிலவக
பங்க வாண்முக முடுகிய நெடுகிய திரிசூலம்

பந்த பாசமு மருவிய கரதல
மிஞ்சி நீடிய கருமுகி லுருவொடு
பண்பி லாதெரு பகடது முதுகினில் யமராஜன்

அஞ்ச வேவரு மவதர மதிலொரு
தஞ்ச மாகியெ வழிவழி யருள்பெறும்
அன்பி னூலுன தடிபுக ழடிமையெ னெதிரேநீ

அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்த மோகர மயிலினி லியலுடன் வரவேணும்!

மஞ்சு போல்வள ரளகமு மிளகிய
ரஞ்சி தாம்ருத வசனமு நிலவென
வந்த தூயவெண் முறுவலு மிருகுழை யளவோடும்

மன்றல் வாரிச நயனமு மழகிய
குன்ற வாணர்த மடமகள் தடமுலை
மந்த ராசல மிசைதுயி லழகிய மணவாளா!

செஞ்சொல் மாதிசை வடதிசை குடதிசை
விஞ்சு கீழ்திசை சகலமு மிகல்செய்து
திங்கள் வேணியர் பலதளி தொழுதுயர் மகமேரு

செண்டு மோதின ரரசரு ளதிபதி
தொண்ட ராதியும் வழிவழி நெறிபெறு
செந்தில் மாநக ரினிதுறை யமரர்கள் பெருமாளே!

(ப - ரை) மஞ்சுபோல் வளர் அளகமும் - மேகத்தைப்போலக் (கறுத்துப் பரந்து) வளர்ந்துள்ள கூந்தலும், இளகிய ரஞ்சித அம்ருத வசனமும் - மனமுருகிய உள்ளன்பை யுணர்த்துவதும் அமுதத்தைப்போல் இனிமை பொருந்தியுள்ளதுமான மொழியும், நிலவு என வந்த தூய வெண் முறுவலும் - சந்திரனது ஒளியேபோலத் தோன்றும் சுத்த வெண்ணிறம் வாய்ந்த பற்களும், இருகுழை அளவு ஓடும் - இரு செவிகளிலும் அணிந்துள்ள குழைகள் வரையில் பாய்ந்து செல்லும், மன்றல் வாரிச நயனமும் - பரிமளமிக்க தாமரைமலரை யொத்த கண்களும், அழகிய-அழகு தரப்பெற்றவரும், குன்ற வாணர் (வாழ்நர்) தம் மட மகள்-மலையில் வசிக்கும் வேடுவர்களுடைய அழகிய மகளாக வளர்ந்தவருமான வள்ளி நாயகியின், மந்தர அசல தட முலை மிசை - மந்தர பர்வதத்தைப்போல (பருத்துயர்ந்து) விசாலமாகவுள்ள தனபாரங்களின் மீது, துயில் - அமர்ந்து கண்வளரும், அழகிய மணவாளா - அழகிய நாயகனே! செம் சொல் மா திசை - இனிய தமிழ் மொழியின் இருப்பிடமாகிச் சிறந்துள்ள திசையாகிய தென்றிசை, வடதிசை - , குடதிசை - மேற்குத் திசை, விஞ்சு கீழ்த்திசை-மேன்மை பொருந்திய கிழக்குத் திசை, (என்னும்), சகலமும் இகல் செய்து-எல்லாத் திக்குக்களிலும் போர்செய்து, (திக்கு விஜயஞ் செய்து), திங்கள் வேணியர் பல தளி தொழுது - சந்திரனைத் தரித்த சடாமுடியையுடைய சிவபெருமானது பல கோயில்களுக்குச் சென்று அப் பெருமானை வணங்கி, மகமேரு செண்டு மோதின-சிறந்த மேருமலையைச் செண்டினால் அடித்த, அரசருள் அதிபதி - இராஜாதி ராஜனே!, தொண்டராதி (உம்-அசை) வழி வழி நெறி பெறு - உனக்குத் தொண்டு புரியும் அடியவர்கள் தலைமுறை தலைமுறையாக முத்தி நெறியை அடைவதற்குச் சாதனமாக விருக்கும் தலமான, செந்தில்மா நகர் இனிது உறை - திருச்செந்தூர் என்னும் சிறந்த நகரத்தில் களிப்புடன் எழுந்தருளி யிருக்கும், அமரர்கள் பெருமாளே-தேவர்கள் நாயகனே!, பஞ்சபாதகம் உறு-களவு கள் குடித்தல் குருநிந்தை கொலை பொய்கூறல் என்னும்

ஐந்து பாதகங்களையும் அடியேன் செய்ததனால் வந்து தோன்றும் (யமராஜன்), பிறை எயிறு - பிறைச்சந்திரனை யொத்த வக்கிர தந்தங்களையும், எரி குஞ்சி - நெருப்பைப்போல ஒளி வீசும் தலை மயிரையும், கூர் விட மதர் விழி - கூர்மை யான பார்வை யுடையவைகளும் விஷத்தைக் கக்குபவைகளும் செருக்குற்றிருப்ப வைகளுமான கண்களையும், பில அக பங்க வாண் முகம் - குகையின் உட் புறத்தை யொத்ததும் குற்றமுள்ளதும் ஒளி வீசுவதுமான முகத்தையும், முடுகிய நெடுகிய திரிசூலம் - வலிமை பொருந்தியதும் நீண்டதுமான முத்தலைச் சூலாயுத மும், பந்த பாசமும் - உயிர்களைக் கட்டியிழுப்பதற்குரிய பாசக்கயிறும், மருவிய காதலம் - பொருந்திய கைகளையும், மிஞ்சி நீடிய கரு முகில் உரு ஒடு - மிகவும் உயர்ந்ததும் கரிய மேகத்தை யொத்ததுமான வடிவத்தையும் உடையவனாய், பண்பு இலாத ஒரு பகடு அது முதுகினில் - இலக்ஷணம் என்பதே யில்லாத ஒரு எருமைக் கடாவின் முதுகின்மீது அமர்ந்து, யமராஜன் அஞ்சவே வரும் அவதரம் அதில் - யமராஜன் அடியேன் அஞ்சுமாறு வந்து தோன்றும் சமயத்தில், ஒரு தஞ்சம் ஆகியெ - ஒப்பற்ற புகலிடமாக உதவுவதற்காக, வழி வழி அருள்பெறும் அன்பினால் - மேன்மேலும் நினது அருளைப் பெறவேண்டுமென்ற ஆசையினால், உனது அடி புகழ் அடிமையென் எதிரே - உனது பாதமலர்களைத் துதிக்கும் அடிமையாகிய அடியேனுக்கு முன்னே, அண்ட கோளகை வெடிபட - உருண்டை வடிவமாகவுள்ள அண்டத்தின் சுவரானது பிளவுபடுமாறும், இடிபட - இடிமுழக்கம் உண்டாகுமாறும், எண் திசாமுகம் மட மட - எட்டுத்திசைகளினு முள்ள இடங்களில் பேரொலி யுண்டாகுமாறும், நடமிடும் - நிர்த்தனஞ் செய்யும், அந்த மோகர மயிலினில் - அந்த உக்கிரமான மயிலின்மீது அமர்ந்து, இயலுடன் - உனக்குரிய சகல இலக்ஷணங்களுடனும், நீ வரவேணும் - நீ வந்தருளவேண்டும்.

(வி - ரை) உக்கிரகுமார பாண்டியன் மேருமலையைச் செண்டாலடித்த வரலாறு:— மலயத்துவச பாண்டியன் புத்திரகாமேஷ்டி யாகம் செய்தபோது, சிவபெருமான் பார்வதி தேவியாரை அந்த யாக அக்கினியில் தோன்றும்படி செய்து, அத்தேவியார் தடாதகைப் பிராட்டியார் என்னும் திருநாமத்துடன் வளர்ந்து முடிசூட்டப் பெற்றுத் திக்குவிஜயஞ் செய்த பின்னர், சோமசுந்தர பாண்டியன் என்னும் திருநாமத்துடன் அத்தேவியாரை மணந்துகொண்டு மதுரையில் அரசு புரிந்துவந்தார். அக்காலத்தில் தமது தேவியார் பாண்டிய குலம் தம்மோடு முடிவடையாம லிருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டதனால், சிவபெருமான் குமாரக் கடவுளை அத்தேவியாரிடத்தே கருப்ப சம்பந்த மில்லா மல் தோன்றும்படி பணிக்க, குமாரக்கடவுள் அவ்வாறே உக்கிர குமாரனாகத் தோன்றினார். உக்கிர குமாரனுக்குத் தக்க வயது வந்தபின், சிவபெருமான் அவ னுக்கு முடிசூட்டி, இந்திரனையும் கடலையும் மேருவையும் அடக்குவதற்கு வளை வேல் செண்டு என்னும் மூன்று படைக்கலங்களைக் கொடுத்துவிட்டுப் பின்னர் தமது தேவியாருடனும் பூதகணங்களுடனும் மறைந்தார்.

உக்கிரகுமார பாண்டியன் தொண்ணூற்றுறு அசுவமேத யாகம் செய்ததைக் கண்டு பொறாமையுற்ற இந்திரனுல் ஏவப்பெற்ற கடல் ஓரிரவில் பொங்கிக் கிளம்பி மதுரை நகர் வாயிலையடைய, உக்கிரகுமார பாண்டியன் கடலின்மீது வேற்படையை எறிந்து அதைச் சுவறச் செய்தான்.

பிறகு பாண்டிய நாட்டிலும் அயல் நாடுகளிலும் மழையில்லாமற் போக, உக்கிரகுமார பாண்டியன் மேகங்களைச் சிறையிலிட்டு, அதற்காகத் தன்னுடன் போருக்கு வந்த இந்திரன்மீது வளையை எறிந்து அவன் முடியைத் தகர்த்தான்.

மற்றுமொரு காலத்தில் மழை யில்லாமையினுல் பாண்டிய நாட்டில் பஞ்சம் உண்டாக, உக்கிரகுமார பாண்டியன் சிவபெருமானது கட்டளைப்படி மேரு மலையிலுள்ள பொன்னறையைத் திறந்து பொருள்கொண்டு வருவதற்காக அம் மலையினிடம் சென்று முகமன் கூறி, அது செருக்குற்றுச் சும்மாவிருந்ததைக் கண்டு அதன்மீது செண்டை எறிய, மேரு அரசன் அவன்முன்னே தோன்றி, முகமன் கூறிப் பொன்னறையைத் திறந்துவிட்டான்.

பஞ்ச மகா பாதகங்களைச் செய்தவர்களுடைய உயிரைக் கவர வரும்போது தான் யமராஜன் கோரமான வடிவத்துடன் தோன்றுவான் என்பது இங்கு உணர்த்தப்பட்டது. இப்பாடலில் " இயலுடன் வரவேணும் " என்று கூறியது வேறு பாடல்களில் விரித்துரைக்கப்பட்டிருக்கிறது. முருகப்பெருமான் அடியவருக்குத் தரிசனமளிக்க வரும்போது பூணும் இலக்ஷணங்களில் சில பின் வருமாறு :—

" உனதுமுக கருணைமல ரோராறு மாறிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வார்காது நீள்விழியு
முபயபத மிசைகுலவு சீரேறு நூபுரமும் அந்தமார்பும்
மறையமறை அமரர்தரு பூமாரி யேசொரிய
மதுவொழுகு தரவில்மணி மீதேமு நூலொளிர
மயிலின்மிசை யழகுபொலி யாளாயு ளூரடியர் வந்துகூட
மறலிபடை யமபடரு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து
மதலையொரு குதலையடி நாயேனை யாளஇங்ஙன் வந்திடாயோ ?"

" சுடரனைய திருமேனி யுடையழகு முதுஞான
சொருபகிரி யிடமேவு முகமாறும்
சுரர்தெரிய லளிபாட மழலைகதி நறைபாய
துகிரிதழின் மொழிவேத மணம்வீச

அடர்பவள வொளிபாய அரியபரி புரமாட
அயில்கரமொ டெழில்தோகை மயிலேறி
அடியனிரு வினைநீறு படஅமர ரிதிபூரை
அதிசயமெ னருள்பாட வரவேணும்."

" பவுரி வருமொரு மரகத துரகத மிசையேறி
பழைய அடியவ ருடனிமை யவர்கண
மிருபு டையுமிகு தமிழ்கொடு மறைகொடு
பரவ வருமதி லருணையி லொருவிசை வரவேணும்."

119-ம் பக்கத்தில் " தவர்வாட் டோமரசூலந் " என்று தொடங்கும் பாடல் மேற்கோளாகக் குறிக்கப்பட்டிருப்பதையும் காண்க. மயிலின் உக்கிரமான வேகத்தைக் குறித்து 44-ஆம் பக்கத்தில் கூறப்பட்டிருப்பதைப் பார்க்க.

" சென்று மோதின நரபதி யுலவிய
தொண்டை நாடினி லறநெறி முறைபயில்
செஞ்சி மாநக ரினிதுறை யமரர்கள் பெருமாளே "

என்றும் பாடம். அதற்குப் பொருள் :—மேரு பர்வதத்தினிடத்தே சென்று அதைத் தாக்கிய மானிடராஜனாகிய உக்கிரகுமார பாண்டியன் தனது இச்சைப்படி உலாவிச் சென்ற தொண்டைநாட்டில் தரும மார்க்கமானது முறைப்படி நிலை பெற்றுள்ள செஞ்சி என்னும் சிறந்த நகரத்தில் மனமகிழ்ச்சியுடன் அமர்ந்திருக்கும் பெரியோனே ! (எ௨)

தாந்தாத்தன் தான தத்தன
தாந்தாத்தன் தான தத்தன
தாந்தாத்தன் தான தத்தன—தனதான.

மான்போற்கண் பார்வை பெற்றிடு
மூஞ்சாற்பண் பாடு மக்களை
வாய்ந்தாற்பொன் கோடு செப்பெனு முலைமாதர்

வாங்காத்திண் டாடு சித்திர
நீங்காச்சங் கேத முக்கிய
வாஞ்சாற்செஞ் சாறு மெய்த்திடு மொழியாலே

ஏன்காற்பங் காக நற்புறு
பூங்காற்கொங் காரு மெத்தையில்
ஏய்ந்தாற்பொன் சாரு பொற்பண முதல்நீதா

ஈந்தாற்கன் றோர மிப்பென
ஆன்பாற்றென் போல செப்பிடும்
ஈண்டாச்சம் போக மட்டிக ளுறவாமோ ?

கான்பாற்சந் தாடு பொற்கிரி
தூம்பாற்பைந் தோளி கட்கடை
காண்பாற்றுஞ் சாமல் நத்திடும் அசுரேசன்

காம்பேய்ப்பந் தாட விக்ரம
வான்றோய்க்கெம் பீர விற்கணை
காண்டேர்க்கொண் டேவு மச்சுதன் மருகோனே !

தீம்பாற்கும் பாகு சர்க்கரை
காம்பாற்செந் தேற லொத்துரை
தீர்ந்தார்க் கங்காளி பெற்றருள் புதல்வோனே !

தீண்பார்க்குன் போத முற்றுற
மாண்டார்க்கொண் டோது முக்கிய
தேன்போற்செந் தூரில் மொய்த்தருள் பெருமாளே !

(ப - ரை) கான் பால் சந்து ஆடு பொன் கிரி - மணம் வீசும் இயல்புடைய சந்தனம் பூசப்பெற்ற அழகிய தனபாரங்களை யுடையவளும், தூம்பு (ஆல் - அசை) பைம் தோளி - மூங்கிலை யொத்து இளமை பொருந்தியுள்ள தோள்களை யுடையவளுமான சீதாதேவியின், கண் கடை காண்பால் அஞ்சாமல் - கடைக்கண் பார்வையினால் மனச்சோர்வுற்று ஆசை நீங்கப்பெறாமல், நத்திடும் - அத்தேவியை நாயகியாக அடைய விரும்பிய, அசுரேசன் - இராக்கதர் தலைவனான இராவண னுடைய, காம் (கம்) பேய் பந்தாட - தலைகளைப் பேய்கள் பந்துகளாக உபயோ கித்து விளையாடுமாறு, காண் தேர் கொண்டு - அழகிய தேரின்மீது ஏறிச் சென்று, விக்ரம - வலிமை பொருந்தியதும், வான் தோய் - நிறத்தினால் வானத்தை யளாவிநிற்கத் தக்கதும், கெம்பீர - (நாணொலியினால்) ஆரவாரிப்பது மான, வில் கணை ஏவும் - கோதண்டம் என்னும் வில்லினால் பாணத்தைப் பிர யோகித்த, அச்சுதன் மருகோனே - ஸ்ரீராமனது சகோதரியின் புதல்வனே !, தீம் பாற்கும் - இன்சுவை பொருந்திய பாலுக்கும், பாகு சர்க்கரை, (இவை களுக்கும்), காம் பால் - சோலையினிடத்தே காணப்படும், செம் தேறல் - சிவந்த தேனுக்கும், ஒத்து உரை தீர்ந்தார் - சமானமாக இனிய மொழி பேசும் திறமை வாய்ந்தவரான, கங்காளி - பார்வதி தேவியார், பெற்றருள் புதல்வோனே—,

தீண் (திண்) பார்க்கு - மெய்யான பார்வை யடைவதற்கு, உன் போதம் உற்று - நினது உபதேசத்தை யடைந்து, உற மாண்டார் - உலகப்பற்று மிகவும் அழியப் பெற்றவர்கள், கொண்டு - யாவற்றினும் பெரிய பொருளாக மதித்து, ஓது முக்கிய - துதிக்கும் தலைவனே !, செந்தூரில் மொய்த்து தேன்போல் அருள் பெருமாளே - திருச்செந்தூரில் அடியவர்களை நெருங்கி நின்று தேன்போல் இனிமை பொருந்திய அருளை யுதவும் பெரியோனே !, மான்போல் கண் பார்வை பெற்றிடு மூஞ்சால் பண்பாடு - மானைப் போன்ற கண்பார்வை அமைந்துள்ள முகத்திலுள்ள வாயினால் இனிய பண்களைப் பாடுபவர்களும், பொன் கோடு செப்பு எனும் முலை மாதர் - பொன்மலை செப்பு இவைகளை யொத்த தனபாரங்களை யுடைய மாதர்கள், மக்கள் (ஐ - சாரியை) வாய்ந்தால் - ஆடவர்கள் தமது கைகளிற் சிக்கினால், வாங்கா - பின்வாங்காமல், (சிறிதும் கருணையின்றி), திண்டாடு - அலைந்து திரியச்செய்து, சித்திர நீங்கா - விசித்திரம் நீங்காத, சங்கேதம் உக்கிய வாஞ்சால் - சைகைகளைச் செய்வதுடன் நிற்கப் பயமுறும் ஆசையினால், செம் சாறும் எய்த்திடு(ம்) மொழியாலே - செழுமை மிக்க கரும்பின் இரசமும் தோல்வியடையும்படி இனிமை மிகுத்துள்ள வார்த்தைகளினாலே, என் (என்) கால் பங்கு ஆக - என்னிடத்தே வந்து என் உடலின் மற்றொரு கூறாக ஆக வேண்டுமென்று கூறி, (அழைத்துச் சென்று), நற்பு உற - நலம் பெற்ற, பூங்கா(வி)ன் - பூஞ்சோலையின், கொங்கு - வாசனை, ஆரு மெத்தையில் - நிறைந்துள்ள படுக்கையின்மீது, எய்ந்தால் - இசைந்து அமர்ந்தால், பொன் சாரு பொன் பணம் - அழகிய கிளிச்சிறைப் பொன்னாலாகிய காசை, முதல் ஈதா - முதலில் முறைப்படி, ஈந்தார்க்கு அன்றோ ரமிப்பு - கொடுத்தவர்க்கல்லவா எங்கள் கலவியின்பம் கிடைக்கும், என - என்று, ஆ(வி)ன் பால் தெ (தே)ன்போல செப்பிடும்- பசுவின் பாலைப்போலும் தேனைப்போலும் இனியமொழிகளினால் கூறுகிறவர்களும், ஈண்டா சம்போக மட்டிகள் - ஆசை பூர்த்தி யடையப் பெறாமல் கலவியிலேயே உழலும் மதிகேடர்களுமாகிய அவர்களுடைய உறவு ஆ(கு)மோ - நட்பு கொள்ளத்தக்கதோ ?

(வி - ரை) மகா பதிவிரதையான சீதாப்பிராட்டியின் வெறுப்பை யுணர்த்தும் கடைக்கண் பார்வையினாலேயே அவள் தன்மீது ஒரு நாளும் காதல் கொள்ள மாட்டாளென்று உணர்ந்து மோகம் நீங்கப்பெறாமல் இராவணன் அப்பிராட்டியை இச்சித்துக் கொண்டே யிருந்தது இங்கு கூறப்பட்டது. "முருகன் தனிவேல் முனி நம் குருவென்று, அருள்கொண்டறியார் அறியுந்தரமோ, உருவன்று அருவன்று உளதன்று இலதன்று, இருளன்று ஒளியன்றென நின்றதுவே" என்று கந்தரநுபூதியில் கூறியபடி, ஞான தேசிகராகிய முருகப்பெருமானைக் குருவாக அடைந்து ஞான போதகத்தைப் பெற்றவருக்கே பூதபேதங்கள் புலப்படாமல் எங்கும் ஒன்று போலே யிருக்கும் பொருள் தோன்றும், பூதபேதங்களை

அறியாமல் எங்கும் இறைவனுடைய ஜோதி யுருவத்தைக் காண்பதுவே ஜடவுலக மாயையினால் பீடிக்கப்படாமல் உண்மைப் பொருளைக் காண்பதாகும். அவ்வாறு முருகப்பெருமானிடம் ஞானோபதேசம் பெற்று மெய்ப்பொருளைக் கண்டவர்கள், அப்பெருமானது “அன்பு அருளால் ஆசாநிகளம் துகளாக”ப் பெற்றுச் செத்தாரைப்போ லிருப்பர். அவர்கள் ஜடவுலக ஆசைகளினால் பீடிக்கப்பட மாட்டார்கள். அந்த மெய்ஞ்ஞானிகள் இறைவனைக் கொண்டாடும் தெய்வம் முருகப் பெருமானேயாவர். தங்கள் கைகளில் சிக்கிய ஆடவர்கள் தாங்கள் சைகைகளினால்மட்டும் அழைத்தால் அவைகளை யறியமாட்டாமல் நழுவி விடுவார்களோவெனப் பயந்து விலைமாதர்கள் தங்கள் இச்சையை விளக்கமாகக் கூறுகிறார்களென்பது “சங்கேத முக்கிய வாஞ்சால் * * * மொழியாலே ஏன்காற் பங்காக” என்றவிடத்துத் தெரிவிக்கப்பட்டது. (௭௮)

தனதன தந்தாத் தந்தத்
தனதன தந்தாத் தந்தத்
தனதன தந்தாத் தந்தத்—தனதான.

தொடரிய மன்போற் றுங்கப்
படையவ ளாந்தோட் டுந்துட்
டரையிள குந்தோட் கொங்கைக் கிடுமாயத்

துகில்விழ வுஞ்சேர்த் தங்கத்
துளைவிர குஞ்சூழ்த் தண்டித்
துயர்வினை யுஞ்சூட் டின்பத் தொடுபாயற்

கிடைகொடு சென்றீட் டும்பொற்
பணியரை மென்றேற் றங்கற்
றனையென இன்றோட் டென்றற் கிடுமாதர்க்

கினிமையி லொன்றாய்ச் சென்றுட்
படுமன முன்றாட் கன்புற்
றியலிசை கொண்டேத் தென்றுட் டருவாயே?

நெடிதுத வங்கூர்க் குஞ்சற்
புருடரும் நைந்தேக் கம்பெற்
றயர்வுற நின்றார்த் தங்கட் கணையேவும்

நிகரில்ம தன்றேர்க் குன்றற்
றெரியில்வி ழுந்தேர்ப் பொன்றச்
சிறிதுநி னைந்தாட் டங்கற் றிடுவார்முன்

திடமுற அன்பாற் சிந்தைக்
கறிவிட முஞ்சேர்த் தும்பர்க்
கிடர்களை யும்போர்ச் செங்கைத் திறல்வேலா!

தினவரி வண்டார்த் தின்புற்
றிசைகொடு வந்தேத் திஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே!

(ப - ரை) நெடிது தவம் கூர்க்கும் சத் புருடரும் - வெகுகாலம் தவம் புரிந்து வந்த சத்துக்களான பெரியோர்களும், நைந்து ஏக்கம் பெற்று - மனந் தளர்ந்து ஏக்கமடைந்து, அயர்வு உற - மனச்சோர்வு அடையும் வண்ணம், நின்று ஆர்த்து அங்கண் கணை ஏவும் - அவர்களை யணுகி நின்று ஆரவாரித்து அவ் விடத்தே பாணங்களைப் பிரயோகிக்கும், (வல்லமை வாய்ந்த), நிகர் இல் மதன் தேர் குன்று அற்று எரியில் விழுந்து - இணையில்லாத மன்மதன் தனது குன்றை யொத்த தேரை யிழந்து தீயில் விழுந்து, ஏர் பொன்ற - அழகிய வடிவம் அழியப் பெறுமாறு, சிறிது நினைந்து - சற்று மனத்தினில் நினைத்து, ஆட்டம் கற்றிடுவார் - திருவிளையாடல் புரிந்த சிவபெருமான், முன் - முன்னொரு காலத்தில், திடம் உற - (மனத்தினில் சந்தேகமற்று) நிச்சயமடையுமாறு, அன்பால் - அப்பெருமான் மீது அன்பு பூண்டு, சிந்தைக்கு அறிவு இடம் (உம் - அசை) சேர்த்து - அப்பெருமானது மனத்தினில் யாவற்றினும் பெரிதான (பரம) ஞானத்தைப் புகட்டி, உம்பர்க்கு இடர் களையும் போர் செம் கை திறல் வேலா - தேவர்களுக்கு நேர்ந்த துன்பத்தை யகற்றுவதற்காகப் போர் புரிய அழகிய கையினில் வலிமை பொருந்திய வேலாயுதத்தைத் தரித்தவனே!, தின(ம்) வரி வண்டு ஆர்த்து - எப்போதும் வரிகளை யுடைய வண்டுகள் ஆரவாரஞ் செய்து, இன்பு உற்று - இன்பமடைந்து, இசை கொடு வந்து ஏத்தும் - இன்னிசை பொருந்திய கானஞ் செய்துகொண்டு வந்து நின்னைத் துதிக்கும் (தலமான), இஞ்சி - மதில்களை யுடையதும், திரு வளர் - சகல ஐசுவரியங்களும் மேன்மேலும் அதிகரிக்கப் பெறுவதுமான, செந்தூர் - திருச்செந்தூரில், கந்த பெருமாளே - அடியவர் பகையை யோட்டுபவனும் அமர்ந்துள்ள பெரியோனே!, தொடர் இயமன்போல் - (ஜீவராசிகளின் உயிரைக் கவரத்) தொடர்ந்து வரும் இயமனைப் போல, துங்க படையை வளைந்து ஒட்டும் துட்டர் (ஐ - சாரியை)- சிறந்த சேனையைக்கொண்டு சூழ்ந்து துரத்தும் கொடியவர்களும், இள(க்)கும் - (ஆடவர்களை) மனங்குழையச் செய்யும், தோள் கொங்கைக்கு இடும் - தோள் களையும் தனபாரங்களையும் மறைக்க அணிந்துகொள்ளும், மாய துகில் விழ (உம் - அசை) - மருட்சியை உண்டுபண்ணும் ஆடையானது சரிந்து விழும்படி விட்டு, சேர்த்து - (ஆடவர்களை) அணைத்துக்கொண்டு, அங்கத்து உளை விரகுப்

சூழ்த்து - தங்கள் வடிவத்தின் அழகில் ஈடுபடும் விரகதாபமும் (ஆடவர்களைச்) சூழ்ந்துகொள்ளும்படி செய்து, அண்டி - நெருங்கி யமர்ந்து, துயர் விளையும் - (அதை யடையாதவர்க்குப் பெருந்) துயரத்தை விளைவிக்கும் இயல்புடையதும், சூட்டு இன்பத்து (ஒடு-இசைநிறை இடைச்சொல்)-விஷய சுகங்களுள் தலைமை பெற்றுள்ளதுமான கலவியின்பத்தைத் தரும் இடமான, பாயற்கு இடை கொடு சென்று - படுக்கைக்கு அழைத்துச்சென்று, ஈட்டும் - பொருளைச் சம்பாதிப் பவர்களான, பொன் பணியர் (ஐ - சாரியை) - பொன்னையே தெய்வமாக வணங் கும் இயல்புடையவர்களும், மென் தேற்றம் கற்றனை என - அருமையான புத் தித் தெளிவை (இன்று) கற்றுக்கொண்டாய் என்று கூறி, இன்று ஓட்டு என்று- இன்று (இங்கு நில்லாமல்) ஓடிப்போவென்று சொல்லி, அல்கிடும் - (முன்பு மிகுதியாகக் காட்டிய) அன்பைச் சுருக்கிக் கொள்பவர்களுமான, மாதர்க்கு - விலைமாதர்களுக்கு, இனிமையில் ஒன்றாய் சென்று - கலவியின்பத்தில் ஈடுபட் டுச் செல்வதனால், உட்படும் மனம் - அடிமைப்படும் மனமானது, உன் தாட்கு அன்பு உற்று - நினது பாதமலர்களை யடைய ஆசை பூணப்பெற்று, இயல் இசை கொண்டு - வசனநடை செய்யுள் என்னும் தமிழ்மொழியின் இருவகை களினாலும், ஏத்த - நின்னைத் துதிக்க, என்று - எப்போது, உள் தருவாயே - கருத்தைத் தந்தருள்வாயோ ?

(வி - ரை) "நிகரில் மதன்...பொன்ற...ஆட்டங் கற்றிடுவார்முன் திட முற" என்றவிடத்து, ஞானதேசிகராய் அவதரித்த முருகப்பெருமான் தாம் உலகத்துக்கெல்லாம் ஞானத்தைப் போதிக்கவல்லவர் என்பதைப்பற்றிச் சிவ பெருமான் சந்தேகமின்றி நிச்சயமடைவதற்காகவே அப்பெருமானுக்குப் பிரண வப்பொருளை உபதேசித்தாரென்று குறிப்பாகக் கூறப்பட்டிருக்கிறது. விலை மாதர் தங்களிடம் வரும் ஆடவர்களது கைப்பொருளைப் பறித்துக்கொள்ளும் வரையில் இனிமை தந்து, பிறகு தங்கள் அன்பு கிடைத்த பொருளளவேயன்றி உறுதியும் உண்மையும் வாய்ந்ததல்ல வென்னும் அரியவுண்மையை அவர்களுக்கு உணர்த்தி அவர்களைத் துரத்திவிடுவார்களென்ற உண்மை இப்பாடலில் "மென் றேற்றங் கற்றனையென இன்றோட்டென்றற் கிடுமாதர்" என்ற விடத்து எடுத்துரைக்கப்பட்டது. முருகப்பெருமானது பாதமலர்களை யடையவேண்டு மென்ற இச்சை யுதித்து அவரை ஆராதிக்கத் தொடங்கிய பிறகுதான், அந்த ஆராதனைக்கு இடைஞ்சல் செய்யும் விஷயசுகவாசையை யகற்றவேண்டு மென்ற எண்ணமும் அதற்கவசியமான வலிமையும் ஒருவருக்கு உதிக்கும்.(எச)

தந்தா னந்தா தந்தா னந்தா
தந்தா னந்தத்—தன தானா.

**தண்டே னுண்டே வண்டார் வஞ்சேர்**
**தண்டார் மஞ்சுக்** குழல்மானார்

தம்பா லன்பார் நெஞ்சேகொண்டே
சம்பா வஞ்சொற் றடிநாயேன்

மண்டோ யந்தீ மென்கால் விண்டோய்
வண்கா யம்பொய்க் குடில்வேறய்

வன்கா னம்போ யண்டா முன்பே
வந்தே நின்பொற் கழல்தாராய்!

கொண்டா டும்பேர் கொண்டா டுஞ்சூர்
கொன்றய் வென்றிக் குமரேசா!

கொங்கார் வண்டார் பண்பா டுஞ்சீர்
குன்ற மன்றற் கிரியோனே!

கண்டா கும்பா லுண்டா யண்டார்
கண்டா கந்தப் புயவேளே!

கந்தா மைந்தா ரந்தோள் மைந்தா
கந்தா செந்திற் பெருமாளே!

(ப - ரை) கொண்டாடும் பேர் கொண்டு - யாவராலும் புகழப்படும் கீர்த்தியை யடைந்து, ஆடும் - தன்னிச்சைப்படி உலவி வந்த, சூர் கொன்றய் - சூரபதுமனைச் சங்கரித்தருளியவனே!, வென்றி குமரேசா - எப்போதும் வெற்றியையே அடையும் இளமை மாருத நாதனே!, கொங்கு ஆர் - (மலர்மாலையிலுள்ள) தேனைக்குடித்த, வண்டு ஆர் பண் பாடும் - வண்டுகள் அருமையான பண்களைத் தம்மிடத்தே பாடப்பெற்றவைகளும், சீர் குன்ற - அழகு ஒரு போதும் குறையாமலிருப்பவைகளும், மன்றல் - பரிமளம் வீசுபவைகளும், கிரியோனே - மலைகளை யொத்தவைகளுமான புயங்களை யுடையவனே!, கண்டு ஆகும் பால் உண்டாய் - (சரவணப் பொய்கையில்) கற்கண்டைப்போல் இனிமை பொருந்திய உமாதேவியாரது திருமுலைப்பாலை உண்டவனே!, அண்டார் கண்டா - பகைவர்களைத் தண்டிப்பவனே!, கந்த புய வேளே - வாசனை தங்கும் புயங்களை யுடையவனாய் மன்மதனைப் பழிக்கும் கட்டழகு வாய்ந்தவனே!, கந்து ஆம் மைந்து ஆர் அம் தோள் மைந்தா - (உலகங்களில் வைதிக மார்க்கத்தை நிலைநிறுத்தி நிற்கும்) கம்பங்களானவைகளும் வலிமை பொருந்தியவைகளும் அழகு வாய்ந்தவைகளுமான புயங்களையுடைய பராக்கிரமசாலியே!, கந்தா -அடியவர் பகையை ஓட்டுபவனே!, செந்தில் பெருமாளே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் பெரியோனே!, தண் தேன் உண்டு (ஏ - அசை) குளிர்ந்த தேனையுண்டு, (அதனால் களிப்புற்று), வண்டு ஆர்வம் சேர் - வண்டுகள் பாடுவது பொருந்தப்பெற்ற, தண் தார் - குளிர்ந்த மலர் மாலையை அணிந்

துள்ளதும், மஞ்சு குழல் மாஞர் தம்பால் - மேகத்தை யொத்த நிறமுடையது மான கூந்தலையுடைய பெண்களினிடத்து, அன்பு ஆர் நெஞ்சு (ஏ - அசை) கொண்டு (ஏ - அசை) - ஆசை நிறைந்த மனத்தைப் பெற்று, சம் பாவம் சொற்று அடி நாயேன் - (பெண்களின் கலவியினுல்) சுகம் அடையும் பாவனையாகப் பேசும் கீழ்மகனுகிய அடியேன், மண் தோயம் தீ மென் கால் விண் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பஞ்சபூதங்கள், தோய் - பொருந்தியிருக்கப் பெற்ற, வண் காயம் - வளமையான தேகமாகிய, பொய் குடில் - மாயையின் செய்கையினுல் ஆன்மா வசிக்கத் தோன்றிய சிற்றில்லம், வேருய் - அடியேனை விட்டுப் பிரிந்து, வன் கானம் போய் அண்டா முன்பே-கொடிய சுடுகாட்டுக்குப் போய்ச் சேருவதற்கு முன்னமேயே, வந்து - அடியேன் முன்னே தோன்றி, நின் பொன் கழல் தாராய் - நினது அழகிய பாதங்களைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) "கொண்டாடும் பேர் கொண்டாடுஞ்சூர்" என்பதற்கு எல்லோராலும் கொண்டாடப்படுகிறவர்களான தேவர்களால் புகழப்பெற்ற சூரபதுமன் என்று பொருள் கூறினும் பொருந்தும். கலவியின்பமானது, அது தோன்றியவுடனே துன்பத்திஞல் தொடரப்படுவதனுல், சுகம் என்று சொல்லப் பெறும் தகைமை வாய்ந்ததன்றென ஈங்கு குறிப்பாக வுணர்த்தப்பட்டது. (எரு)

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த—தனதான.

விதிபோலு முந்த விழியாலு மிந்து
நுதலாலு மொன்றி — யிளைஞோர்தம்

விரிவான சிந்தை யுருவாகி நொந்து
விறல்வேறு சிந்தை — வினையாலே

இதமாகி யின்ப மதுபோத வுண்டு
இனிதாளு மென்று — மொழிமாதர்

இருளாய துன்ப மருள்மாயை வந்து
எனையீர்வ தென்றும் — ஒழியாதோ?

மதிசூடி யண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு — விடையேறி

மறவாத சிந்தை யடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு — தருபாலா!

அதிமாய மொன்றி வருசூரர் பொன்ற
அயில்வேல்கொ டன்று — பொரும்வீரா!

அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த பெருமாளே!

(ப - ரை) மதி சூடி - (தம்மைச் சரண் புகுந்த) சந்திரனைச் சடாமுடியில் தரித்துக்கொண்டவரும், அண்டர் பதி வாழ - தேவலோகம் வாழும் பொருட்டு, மண்டி வரும் ஆலம் உண்டு - (தேவர்களை) நெருங்கித் தொடர்ந்து வந்த ஆலாகலம் என்னும் விஷத்தை யுண்டு, விடை ஏறி - (உலகங்களில் தருமம் நிலைநிற்கும் பொருட்டு) தருமதேவதையையே இடபமாக்கி அதை வாகனமாகக் கொண்டவரும், மறவாத சிந்தை அடியார்கள் பங்கில் வரு தேவ - தம்மை மறவாத மனத்தையுடைய அடியவர்களுக்கு உதவியாகவரும் தேவரும், சம்பு - ஆன்மாக்களுக்குச் சுகத்தையே செய்பவருமான சிவபெருமான், தரு பாலா - தந்தருளிய பாலனே! அதி மாயம் ஒன்றி வரு சூரர் பொன்ற - மிகுந்த மாயத்துடன் வந்த சூரபதுமன் முதலாயினோர் மடியுமாறு, அயில் வேல் கொடு அன்று பொரும் வீரா - கூர்மையான வேலாயுதத்தினால் அந் நாளில் போர்செய்த வீரனே!, அழகான செம்பொன் மயில்மேல் அமர்ந்து - அழகு வாய்ந்ததும் சிவந்த பொன்னின் ஒளி வீசுவதுமான மயிலின்மீது அமர்ந்து, அலைவாய் உகந்த பெருமாளே - அலைவாய் என்னும் திருச்செந்தூரில் மகிழ்ச்சியுடன் எழுந்தருளி யிருக்கும் பெரியோனே!, விதிபோலும் உந்து - (யாவரையும் வசமழிந்து தன்னிச்சைப்படி நடக்கச்செய்யும் வல்லமை வாய்ந்த) தலைவிதியைப் போலத் தன்னிச்சைப்படி செலுத்தும், அ விழியாலும் - அந்த விழிகளினாலும், இந்து நுதலாலும் - சந்திரனை யொத்த முகத்தினாலும், ஒன்றி(ய) - தமக்கு வசப்பட்ட, இளைஞோர் தம் விரிவான சிந்தை - இளமை பொருந்திய ஆடவர்களைப்பற்றிய பெரிய கவலையானது, உரு ஆகி நொந்து - அதிகரிக்கப் பெற்று மனம் நொந்து, விறல் வேறு சிந்தை வினையால் (ஏ - அசை) - (தமது இச்சையை எப்படியும் பூர்த்தி செய்து கொள்ள வேண்டுமென்ற ஆசையினால்) திடப்படுத்திக்கொண்டு முன்னிலைமையிலிருந்து மாறுபாடடைந்த மனத்தினால் தூண்டப்பட்ட செய்கையினால், இதமாகி - (அந்த இளமை பொருந்திய ஆடவர்களுக்கு) இன்பத்தைத் தந்து, இன்பம் அது போத உண்டு - (எங்கள் கலவி) யின்பத்தைப் போதுமான வளவு அநுபவித்து, இனிது ஆளும் என்று மொழி மாதர் - தயைபுரிந்து எங்களைக் காக்கவேண்டும் என்று கூறும் பெண்களின் (மீது கொள்ளும் ஆசையான), இருள் ஆ(கி)ய துன்ப - அஞ்ஞானத்தைப் புகட்டி அதனால் துன்பத்தைத் தருவதான, மருள் மாயை - மனமயங்கச் செய்யும் மாயையானது, வந்து எனை ஈர்வது - வந்து என்னை யிழுப்பது, என்றும் ஒழியாதோ - ஒரு நாளும் தீராதோ?

(வி - ரை) தமது விழிகளின் பார்வையினாலும் முகத்தின் காந்தியினாலும் தமக்கு வசமான ஆடவர் மீது காமுற்ற விலை மாதர்கள் அவர்கள் தம்மைக்

கூடுவாரோ மாட்டாரோ என்ற கவலை அதிகரிக்கப் பெற்று மனம் வருந்திப் பின்னர் தமது இச்சையை எப்படியாவது பூர்த்தி செய்து கொள்ளவேண்டு மென்று மனத்தில் உறுதி செய்து கொண்டு, அவ்வாறு உறுதி கொண்டதனுல் சோர்வு நீங்கி மாறுபட்டுத் திடமான நிலைமையிலுள்ள மனத்தினுல் தூண்டப் பட்டுப் பல சாசலீலைகளைச் செய்து அவர்களுக்கு இன்பத்தை யளித்து அவர் களை முற்றிலும் தம் வசமாக்கிக் கொள்வார்கள் என்பது இப்பாடலில் தெரி விக்கப்பட்டிருக்கிறது. (எகு)

தந்தனு தந்தனத் தந்தனு தந்தனத்
தந்தனு தந்தனத்—தனதான.

சங்குபோல் மென்கழுத் தந்தவாய் தந்தபற்
சந்தமோ கின்பமுத் தெனவாணிற்
றங்குகார் பைங்குழற் கொங்கைநீள் தண்பொருப்
பென்றுதாழ் வொன்றறுத் துலகோரைத்
துங்கவேள் செங்கைபொற் கொண்டல்நீ யென்றுசொற்
கொண்டுதாய் நின்றுரைத் துழலாதே
துன்பநோய் சிந்தநற் கந்தவே ளென்றுனைத்
தொண்டினு லொன்றுரைக் கருள்வாயே !
வெங்கண்வ்யா ளங்கொதித் தெங்கும்வே மென்றெடுத்
துண்டுமே லண்டருக் கமுதாக
விண்டநா தன்திருக் கொண்டல்பா கன்செருக்
குண்டுபே ரம்பலத் தினிலாடி
செங்கண்மால் பங்கயக் கண்பெரு தந்தரத்
தின்கணு டுந்திறற் கதிராழித்
திங்கள்வா ழுஞ்சடைத் தம்பிரா னன்புறச்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே !

(ப - ரை) வெங்கண் - கொடிய, வ்யாளம் - ஆலாகலம் என்னும் விஷ மானது, கொதித்து - அழலை வீசி, எங்கும் வேம் என்று - சகலவுலகங்களையும் வெந்தழியச் செய்யுமே யென்று, (கருணை மேலீட்டினுல்), எடுத்து உண்டு - அதைத் தாம் எடுத்து உண்டு, மேல் - அதன் பிறகு, அண்டருக்கு அமுது ஆக விண்ட நாதன் - தேவர்கள் உண்பதற்கு அமுதம் உண்டாகட்டு மென்று திருவாய் மலர்ந்தருளிய சர்வேசுவரரும், திரு கொண்டல் பாகன் - மேகநிறம்

பொருந்திய உமாதேவியாரைத் தமது வாமபாகத்தில் அமர்த்திக் கொண்டவரும், செருக்குண்டு - களிப்புற்று, பேரம்பலத்தினில் ஆடி - பேரம்பலம் என்னும் சபையினில் நிர்த்தனஞ் செய்பவரும், செம் கண் மால் - சிவந்த கண்களை யுடைய திருமால், பங்கய கண்பெறு து - (தாம் இழந்த) தாமரை மலரை யொத்த கண்ணை மீண்டும் பெறுததனல், அந்தரத்தின் கண் நாடும் - தம் அகத்தினுள் தேடி(க் கண்டுகொண்ட), திறல் - மெய்ப்பொருளாகிய, கதிர் ஆழி - சோதிப் பிழம்பும், திங்கள் வாழும் சடை தம்பிரான் - சந்திரன் அமர்ந்துள்ள சடாமுடியையுடைய நாயகருமான சிவபெருமான், அன்பு உறு - விரும்பும் தலமான, அ செந்தில் வாழ் - அந்தத் திருச்செந்தூரில் எழுந் தருளி யிருக்கும், செம் தமிழ் பெருமாளே - இனிய தமிழைத் தந்து அதன்மீது அன்பு பூண்டிருக்கும் பெரியோனே !, மென் கழுத்து சங்கு போல் - அழகிய கழுத்து சங்கத்தை யொத்திருக்கிறது ; அந்த வாய் தந்த பல் - அழகிய வாயில் தோன்றும் பற்கள், சந்த மோக இன்ப முத்து என - அழகு வாய்ந்து விருப் பத்தை யுண்டுபண்ணிக் காட்சிக்கு இனிமையாக விருக்கும் முத்துக்கள் என் றும், பைம் குழல் வானில் தங்கு கார் - அழகிய கூந்தல் ஆகாயத்தில் தங்கியிருக் கும் மேகத்தை யொத்திருக்கிறது ; கொங்கை நீள் தண் பொருப்பு என்று - தனபாரங்கள் உயர்ந்து குளிர்ச்சி பொருந்தியுள்ள மலையை யொத்திருக்கின்றன வென்றும் கூறி, (பெண்களைப் புகழ்ந்தும்), தாழ்வு ஒன்று அறுத்து - குறைவு ஒன்றும் இல்லாதவராகப் பாவித்து, உலகோரை - பூலோகத்தில் பிறந்துள்ள மானிடரை, துங்க வேள் (நீ) - யாவர்க்கும் மேலான குமரக்கடவுள் நீயே, செம் கை பொன் கொண்டல் நீ - அழகிய கையினல் பொன்னை மேகத்தைப் போல் சொரிந்து கொடை யளிப்பவன் நீயே, என்று சொல் கொண்டு தாய் நின்று - என்னும் மொழிகளைப் பாடமாக வைத்துக்கொண்டு ஆவலுடன் தாவி அவர் களை யணுகி நின்று, உரைத்து உழலாதே - அம் மொழிகளை யுரைத்து (ஜடவுலக வாழ்க்கையில்) உழன்று திரியாமல், துன்ப நோய் சிந்த - துன்பத் தைத் தரும் பிறவிநோய் அகலுமாறு, உனை தொண்டினல் ஒன்றி - உனக்குத் தொண்டு புரிவதனல் உன்னை நெருங்கி நின்று, நல் கந்த வேள் என்று உரைக்க அருள்வாயே - அடியவர் பகையைத் துரத்தி மன்மதனைப் பழிக்கும் அழகு வாய்ந்தவனுய் நிற்கும் நல்லோனே ! என்று சொல்லி உன்னை நான் துதிக்கு மாறு அருள்புரியவேண்டும்.

(வி - ரை) திருப்பாற்கடலை அமுதம்பெறக் கடைந்த காலத்தில், எதுவும் தமது திருவருளினலேயே கிடைக்கு மென்பதை அறிவுறுத்தவுன்னி, சர்வேசு வரரான சிவபெருமான் அக்கடலினின்றும் தோன்றி உலகங்களை யெல்லாம் அழிக்கத் தொடங்கிய ஆலாகலம் என்னும் விஷத்தை யுண்டு தேவர்களையும் உல கங்களையும் காத்த பின்னர், தேவர்கள் கோரிய அமுதம் அக்கடலினின்றும்

தோன்றும்படி அநுக்கிரகஞ் செய்தருளினர். வ்யாளம்-பாம்பு; பாம்பினிடத்தே தோன்றிய நஞ்சு. "திங்கள் வாழுஞ்சடைத் தம்பிரா னன்புறு அச்செந்தில்"—தம்மைச் சரண்புகுந்த சந்திரனைக் காத்தருளிய சிவபெருமான் தம்முடைய புதல்வராகிய முருகப்பெருமானைச் சரண்புகும் அடியவர்களுடைய பகைவர்களாகிய அகங்காரம், மாயை முதலியவைகளை அழிப்பதற்காக நிலைமையாக அமர்ந்திருக்கும் திருச்செந்தூரின்மீது அன்பு பூண்டுள்ளார் என்றபடி. குற்றங்கள் நிறைந்துள்ள மானிடரைக் குற்றமேயில்லாத குணக்குன்றாகப் பாவித்து, இறைவனுக்குச் சமானமானவராக அவர்களைப் புகழ்வது துன்பம் நிறைந்த பிறவிக் கடலில் மீண்டும் மீண்டும் வீழ்வதற்கு ஏதுவாகும். நமது பகைவர்களாகிய அகங்காரம் முதலியவைகளை அழிப்பதற்காகச் சதாகாலமும் போர்க் கோலத்துடன் அமர்ந்திருக்கும் திருச்செந்தூர் நாதனை நமக்கு உற்ற துணையாகும் நல்லோனாக அறிந்து அப்பெருமானுக்குத் தொண்டு புரிந்து அவரைத் துதித்தால் பிறவிக்கடலைக் கடப்பது சாத்தியமாகும். (எஎ)

*தந்தத் தனனத் தந்தத் தனனத்*
*தந்தத் தனனத்—தன தான.*

கொங்கைப் பணையிற் செம்பொற் செறிவிற்
கொண்டற் குழலிற் கொடிதான

கொன்றைக் கணையொப் பந்தக் கயலிற்
கொஞ்சுக் கிளியுற் றுறவான

சங்கத் தொனியிற் சென்றிற் கடையிற்
சந்திப் பவரைச் சருவாதே

சந்தப் படியுற் றென்றற் றலையிற்
சந்தப் பதம்வைத் தருள்வாயே!

அங்கப் படைவிட் டன்றைப் படுகைக்
கந்திக் கடலிற் கடிதோடா

அந்தப் பொழிலிற் சந்துத் தலையுற்
றஞ்சப் பொருதுற் றொழியாதே

செங்கைக் கதிருற் றொன்றக் கடலிற்
சென்றுற் றவர்தற் பொருளானாய்!

சிந்தைக் கனிவைத் தந்தப் பொழிலிற்
செந்திற் குமரப் பெருமாளே!

(ப - ரை) அங்க படை விட்டு - (திருச்செந்தூரில் வந்து பாசறை அமைத்துக்கொண்டிருந்த) நான்கு வகைப்பட்ட சேனையை விட்டு நீங்கி, அன்றை - அன்றொரு நாளில், படுகைக்கு அந்தி கடலில் - (பாசறை அமைத்துக் கொண்டிருந்த) ஆற்றின் கரையை யொட்டி யிருந்த கடலில், கடிது ஓடா - வேகமாய்ப் பாய்ந்து கடந்து சென்று, அந்த பொழிலில் - அதற்கு அப்பாலுள்ள பூமியான வீரமாகேந்திர புரியில், சந்து தலையுற்று-தூதுத் தொழிலை மேற்கொண்டு பேசி, (பிறகு), அஞ்ச உற்று பொருது - (வீரமாகேந்திர புரியிலுள்ளோர்) அஞ்சும்படி பெரும்போர் செய்து, ஒழியாதே-(அத்துடன் திருப்தியடைந்து) விடாமல், செம் கை - தமது அழகிய கையினில், கதிர் உற்று ஒன்ற - ஒளி வீசும் வாள் இசைந்து பொருந்தியிருக்க, கடலில் சென்று - கடலைக் கடந்து (மீண்டும்) சென்று, உற்றவர் - (போர் புரிந்துவிட்டு) வந்தவரான வீரவாகுதேவர், தற்பொருள் ஆறுய் - யாவற்றினும் மேலானதாகக் கருதிய பொருளே!, சிந்தை கனி(ய) வைத்த - (வீரவாகு தேவரது) மனமானது உருகும்படிச் செய்த, அந்த பொழிலில் - அந்தப் பூமியிலுள்ள, செந்தில் குமர பெருமாளே - திருச்செந்தூரில் குமாரசுவாமியாக அமர்ந்திருக்கும் பெரியோனே!' கொங்கை பணை (இல் - சாரியை) - தனபாரங்களின் உயரம், செம் பொன் செறிவு (இல் - சாரியை)-சிவந்த பொன்னின் ஒளி பொருந்திய தேகம், கொண்டல் குழல் (இல் - சாரியை)-மேகத்தை யொத்த கூந்தல், கொடிதான கொன்ற ஐ கணை ஒப்பு - கொடிய குணமுடையவைகளும் வருத்தும் இயல்புடையவைகளுமான (மன்மதனது) ஐந்து பாணங்களுக்கு நிகரான, அந்த கயல் (இல் - சாரியை) - அந்தக் கயல்மீனைப்போலுள்ள கண்கள், கொஞ்சு கிளி உற்ற உறவான சங்க தொனி (இல்) - கொஞ்சி இனிமையாகப் பேசும் கிளி(யின் குரலு)க்கு நெருங்கின சுற்றமாயுள்ளதும் சங்கத்தைப் போன்ற கழுத்திலிருந்து வருவதுமான (இனிய) குரல், (இவைகளுடன்) சென்று இல் கடையில் சந்திப்பவரை - சென்று வீட்டின் தலை வாயிலில் நின்று சந்தி(த்து அழை)ப்பவரை, சருவாதே - (அடியேன்) நெருங்கா வண்ணம், சந்தப்படி உற்று - உனது இயல்பின்படி அடியேனிடம் வந்து, என்றன் தலையில் - அடியேனுடைய தலையின்மீது, சந்த பதம் வைத்து அருள்வாயே - (தேவரீருடைய) அழகிய பாதங்களை வைத்து அருள்புரியவேண்டும்.

(வி - ரை) வீரவாகு தேவர் முருகப் பெருமானது ஆணைப்படி வீரமாகேந்திர புரிக்கு தூதுசென்றபோதும், சூரபதுமன் முதலாயினாரோடு போர்செய்யச் சென்றபோதும் முருகப் பெருமானே தேவாதி தேவர் என்னும் நம்பிக்கையுடன் அப்பெருமானது பாதமலர்களைத் தியானித்துக் கொண்டு, எல்லாம் அவர் செயலேயன்றித் தம் செயல் யாதொன்றுமில்லை யென்ற தெளிவுடன், அப்பெருமான் மீதுள்ள அன்பினால் மனமுருகி நின்று அவரது ஆணையை நிறைவேற்றினார் என்பது இங்கு கூறப்பட்டிருக்கிறது. ஆன்மாக்களைக் காக்

கச்சித்தமாயிருக்கும் முருகப் பெருமான் ஒரு ஆன்மாவானது துன்புற்று வருந்தித் தம்மை ஒரு முறை அழைத்தாலும் வந்து அதன் துயரத்தை அகற்றும் இயல்புடையவராதலால், "சந்தப்படி யுற்று" என்று கூறப்பட்டது. (எஅ)

தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்—தனதான.

கரிக்கொம்பந் தனித்தங்கங்
குடத்தின்பந் தனத்தின்கண்
கறுப்புந்தன் சிவப்புஞ்செம் பொறிதோள்சேர்

கணைக்கும்பண் டுழைக்கும்பங்
களிக்கும்பண் பொழிக்குங்கண்
கழுத்துஞ்சங் கொளிக்கும்பொன் குழையாடச்

சரக்குஞ்சம் புடைக்கும்பொன்
றுகிற்றந்தந் தரிக்குந்தன்
சடத்தும் பண் பிலுக்குஞ்சம் பளமாதர்

சலித்தும்பின் சிரித்துங்கொண்
டழைத்துஞ்சண் பசப்பும்பெண்
தனத்துன்பந் தவிப்புண்டிங் குழல்வேனோ?

சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ்
செழுத்தின்பங் களித்துண்பண்
சுகத்துய்ந்தின் பலர்ச்சிந்தங் கசுரரைத்

துவைத்தும்பந் தடித்துஞ்சங்
கொலித்துங்குன் றிடித்தும்பண்
சுகித்துங்கண் களிப்புங்கொண் டிடும்வேலா!

சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந்தொங் கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே!

திணைத்தொந்தங் குறப்பெண்பண்
சசிப்பெண்கொங் கையிற்றுஞ்சுஞ்
செழிக்குஞ்செந் திலிற்றங்கும் பெருமானே!

(ப - ரை) சுரர் சங்கம் - தேவர்களின் கூட்டம், துதித்து - தோத்திரஞ் செய்து, அந்த அஞ்சு எழுத்து இன்பம் களித்து - (தோத்திர நாமங்களில்

மிகவும் விசேஷமான) அந்தப் பஞ்சாக்ஷரத்தினுல் உண்டாகும் இன்பத்தை யநுபவித்து ஆனந்தித்து, உண் பண் சுக(ம்) துய்ந்து (துய்த்து)-(அந்தப் பஞ்சாக்ஷரம்) பொருந்தியுள்ள இசைப் பாடல்களினுல் உண்டாகும் சுகத்தையும் அநுபவித்து, இன்ப அலர் சிந்த - இனிய மலர்களினுல் தேவரீரை யருச்சிக்க, அங்கு அசுராரை துவைத்தும் - அப்போதே அசுரர்களைக் கால்களினுல் மிதித்துத் துவைத்தும், பந்து அடித்தும் - அவர்களைப் பந்துபோல் உதைத்து எறிந்தும், சங்கு ஒலித்து - (எஞ்சியுள்ள அசுரர்களைப் போருக்கு அழைத்து) சங்கத்தை முழக்கியும், குன்று இடித்தும் - கிரௌஞ்சம் என்னும் மலையை யிடித்தும், பண் சுகித்தும் - (தேவர்கள் பாடிய) இசைப் பாடல்களைக் கேட்டு அக மகிழ்ச்சி யுற்றும், கண் களிப்பும் கொண்டிடும் வேலா - (அசுரர்கள் மாய்ந்ததையும் தேவர்கள் கவலை நீங்கிக் களிப்புற்றதையும்) கண்டு ஆநந்த மடைந்த வேலாயுதனே!, சிர பண்பும்-தேவரீருடைய சிரத்தின் பண்பாகிய (கண்களினின்றும் பொழியும்) கருணையையும், கர பண்பும் - கரங்களின் பண்பாகிய அபய வரதங்களையும், கடப்பம் தொங்கலின் பண்பும்-கடப்பமலர் மாலையின் பண்பாகிய அழகிய காட்சியையும், சிவ பண்பும் - சிவத்தின் பண்பாகிய தவத்திலமர்ந்த திவ்ய மங்கள தேஜோமய சொரூபத்தின் காட்சியையும், தவ பண்பும் - தவத்தினுல் அடையத்தக்க பலனையும், தருவோனே - தந்தருளும் (ஞானதேசிக கருணாநிதியான) பரம்பொருளே!, தினை தொந்தம் குற பெண் - தினைப் பயிருடன் அந்நியோன்ய சம்பந்தமுள்ள வேடர் மகளான வள்ளியம்மையார், பண் சசி பெண்-அழகு வாய்ந்த இந்திராணியின் மகளான தெய்வயானை யம்மையார், (இவர்களுடைய), கொங்கையில் துஞ்சும் - தனபாரங்களின்மீது படுத்துத் துயில் கொள்ளும் (நாயகனே!), செழிக்கும் செந்திலில் தங்கும் பெருமாளே - வளப்பமிக்க திருச்செந்தூரில் அமர்ந்திருக்கும் பெரியோனே! கரி கொம்பு (அம் - அசை) தனி தங்கம் குடத்து இன்பம் தனத்தின் கண் கறுப்பும் தன் சிவப்பும் - யானையின் தந்தத்தையும் ஒப்பற்ற தங்கக்குடத்தையும் ஒத்திருப்பவைகளும் இன்பத்தைத் தருபவைகளுமான தனபாரங்களின் நடுவே தோன்றும் கறுப்பும் அவைகளின் சிவந்த நிறமும், செம் பொறி தோள் சேர் - அழகிய தேமல்களையுடைய புயங்களின்மீது மோதும் இயல்புடையவைகளும், கணைக்கும் - அம்புக்கும், பண்ட உழைக்கும் - பொன்னிறமுடைய மானுக்கும், பங்கு அளிக்கும் - (மான) பங்கம் உண்டாகச் செய்யும் இயல்புடையவைகளும், பண்பு ஒழிக்கும் - புத்தியின் நல்ல நிலைமையை அகற்றும் சக்தியுடையவைகளுமான, கண் - கண்களும், சங்கு ஒளிக்கும் கழுத்தும் - சங்கமானது தன்னைக்கண்டு வெட்கி ஒளிந்து கொள்ளும்படி செய்யத்தக்க அழகு வாய்ந்த கழுத்தும், (பொருந்தியதும்), பொன் குழை ஆடு அ சர குஞ்சம் புடைக்கும்-(காதுகளில் அணிந்துள்ள) பொன்னினுற் செய்த குழைகளை ஆடச்செய்யும் அந்த (முத்து) சரக் குஞ்சங்களினுல் குத்தப்பெறும், பொன் துகிற்று அந்தம் தரிக்கும் - பொன்னிழைகள் சேர்ந்துள்ள

புடைவையின் அழகைப் பூண்டுள்ளதுமான, தன் சடத்து பண் பிலுக்கும் சம் பள மாதர் - தனது தேகத்தை அலங்கரித்துக் கொண்டு ஆடம்பரமாகத் தோன் றும் விலைமாதர்கள், சலித்தும்-வருந்தியதுபோற் பாசாங்கு செய்தும், பின் சிரித் தும் - பிறகு ஆனந்தமடைந்தாற்போற் பாசாங்கு செய்தும், கொண்டு அழைத் தும் - எதிர்கொண்டு சென்று அழைத்தும், சண் பசப்பும் பெண் - காமங்கொள் ளும்படி மயக்கும் இயல்புடைய பெண்களின் தன துன்பம் தவிப்புண்டு - தனபாரங்களை அநுபவிக்கவேண்டுமென்ற ஆசையினால் துன்பமுற்றுத் தவித்து, இங்கு உழல்வேனோ - அடியேன் இந்த உலகவாழ்க்கையில் அலைந்து திரியக் கடவேனோ? (அது தேவரீருக்கு நீதியோ? வென்றபடியாம்.)

(வி - ரை) "உனது முக கருணை மலர் ஓராறும்" என்றும், "தண் தருமா மென் கருணை பொழி கமலமுகம் ஆறும்" என்றும் கூறியுள்ளபடி, சிரத் தின் பண்பு கருணையே யாகும். முருகப்பெருமானுடைய கைகளோ அடியவர் களைக் காப்பதற்குரிய வில் வாள் தோமரம் சூலம் முதலிய சிறந்த படைகளையும் கோழிக் கொடியையும் தரிப்பதுடன், அடியவர்களை அஞ்சேல் என்று கூறும் அபயக்குறியையும் அவர்கள் வேண்டியவற்றை வேண்டியவளவு கொடுக்கும் வர தக் குறியையும் பூண்டிருக்கின்றன. சிவத்தின் பண்பு, தவத்திலமர்ந்து ஞானத் தீயினால் உலக ஆசைகளை எரித்து நீறுக்கி நீறு பூத்த நெருப்பு மேனியுடன் விளங்குவதே யாகும். "இளமகளிர் கலவிதனிலே மூழ்கி யாழுகினும் - இமை யாதே, இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும், இளமையுமுன் அழகு புனை ஈராறு தோள் நிரையும் இருபதமும் அறுமுகமும் யானோத ஞானமதை அருள்வாயே" என்றவிடத்துக் குறிப்பிட்டபடி, அவ்வாறு அப்பெருமானது புகழை ஓதுவதே முத்தியைத் தரவல்ல தவநெறியாகும். "தினைத் தோர்ந்தங் குறப்பெண்" என்றவிடத்து, முருகப்பெருமானுக்கும் வேல் மயில்களுக்கும் எவ்வளவு நெருக்கமான சம்பந்தமுண்டோ அவ்வளவு நெருங்கிய சம்பந்தம் குறமகளான வள்ளிநாயகிக்கும் தினைப்பயிருக்கும் உண்டு என்பது குறிப்பாக உணர்த்தப்பட்டிருக்கிறது. நல்வினைகளைச் செய்துகொண்டு, அவைகளைக் காமக் குரோத லோப மோகம் முதலியவைகள் அணுகா வண்ணம் தடுத்துக் காக்கும் ஜீவனை ஞானசொரூபியாகிய முருகப்பெருமான் வலிந்து சென்று தடுத்தாட் கொள்ளுதல் திண்ணம். சணைத்தல் - காமங்கொள்ளுதல்; சண் பசப்பல் - காமங்கொள்ளும்படி மயக்குதல். (எக)

தந்தத் தனதன தந்தத் தனதன
தந்தத் தனதன—தனதான.

வஞ்சத் துடனொரு நெஞ்சிற் பலநினை
வஞ்சிக் கொடியிடை மடவாரும்

வந்திப் புதல்வரும் அந்திக் கிளைஞரு
மண்டிக் கதறிடு வகைகூர

அஞ்சக் கலைபடு பஞ்சிப் புழுவுடல்
அங்கிக் கிரையென வுடன்மேவ

அண்டிப் பயமுற வென்றிச் சமன்வரும்
அன்றைக் கடியிணை தரவேணும்!

கஞ்சப் பிரமனை அஞ்சத் துயர்செய்து
கன்றச் சிறையிடு மயில்வீரா!

கண்டொத் தனமொழி அண்டத் திருமயில்
கண்டத் தழகிய திருமார்பா!

செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்திற் பதிநக ருறைவோனே!

செம்பொற் குலவட குன்றைக் கடலிடை
சிந்திப் பொரவல பெருமாளே!

(ப - ரை) கஞ்ச பிரமனை - திருமாலின் திருநாபிக் கமலத்தினின்றும் தோன்றிய பிரமதேவரை, அஞ்ச துயர் செய்து - அவர் அஞ்சும்படி அவருக்குத் துயரம் விளைவித்து, கன்ற சிறையிடு மயில் வீரா - அவர் மனம் வாடும்படி சிறையிலிட்ட மயில்வீரனே!, கண்டு ஒத்தன மொழி - கற்கண்டைப் போல இனிமையாகவுள்ள மொழிகளைப் பேசும், அண்ட திருமயில் - தேவகன்னிகையான அழகிய தெய்வயானை யம்மையாருடைய, கண் தத்து - கண்கள் ஆசையுடன் தமது பார்வையைச் செலுத்தும், அழகிய திருமார்பா - அழகிய மார்பையுடையவனே!, செம் சொல் புலவர்கள் சங்க தமிழ் தெரி - இனிய மொழியான தமிழில் தேர்ந்த புலவர்களின் சங்கத்தி லுள்ளோர் இயற்றிய தமிழ் நூல்களைச் சீர்தூக்கிப் பார்த்தவனே!, செந்திற் பதி நகர் உறைவோனே - திருச்செந்தூர் என்னும் நகரத்தில் அமர்ந்திருப்பவனே!, செம் பொன் குல வட குன்றை - சிவந்த பொன்னைப்போல் விளங்கியதும் குல பருவங்களையொத்ததும் வடக்கே யிருந்ததுமான கிரௌஞ்சம் என்னும் மலை, கடலிடை சிந்த - சமுத்திரத்தின் நடுவே சிதறி விழும் வண்ணம், பொரவல - போர் செய்யவல்ல, பெருமாளே - பெரியோனே!, வஞ்சத்துடன் ஒரு நெஞ்சில் பல நினை - வஞ்சக சுபாவமுடையவராய் ஒரு மனத்தினில் பல எண்ணங்களைக் கொள்ளும், வஞ்சி கொடி இடை மடவாரும் - வஞ்சிக் கொடியையொத்த நுண்ணிய இடையையுடைய மனைவிமார்களும், வந்தி புதல்வரும் - வணங்கும் பிள்ளைகளும், அந்தி கிளைஞரும் - நெருங்கிய சுற்றத்தார்களும்,

மண்டி கதறிடு வகை கூர - நெருங்கி வந்து அழுது புலம்பும் செயல் மிகுதியாகுமாறும், அம்சம் கலைபடு - பஞ்சபூதங்கள் இந்திரியங்கள் முதலிய தத்துவப் பகுதிகள் பிரிவுபடப் பெறுவதும், பஞ்சி புழு உடல் - பஞ்ச பூதங்களினால் உண்டாகி கிருமிகள் நிரம்பப் பெற்றுள்ள தேகமானது, உடன் அங்கிக்கு இரை என மேவ - உடனே அக்கினிக்கு இரையாகுமாறும், வென்றி சமன் - யாவரையும் வெல்லும் திறமைவாய்ந்த யமன், பயமுற - அடியேன் பயப்படும்வண்ணம், அண்டி வரும் அன்றைக்கு - அடியேனை நெருங்கி வரும் அந்நாளில், அடி இணை தரவேணும்-(தேவரீருடைய) பாதமலர்கள் இரண்டையும் தந்தருள வேண்டும்.

(வி - ரை) முருகப்பெருமான் ஊமைப் பிள்ளையாகத் தோன்றி தமிழ்ச் சங்கத்துப் புலவர்களது நூல்களைச் சீர்தூக்கிய வரலாற்றை 342-ம் பக்கத்திற் காண்க. (அ0)

தந்த னந்த தந்த னந்த
தந்த னந்த தந்த னந்த
தந்த னந்த தந்த னந்த—தந்ததான.

வந்து வந்து முன்த வழ்ந்து
வெஞ்சு கந்த யங்க நின்று
மொஞ்சி மொஞ்சி யென்ற மூங்கு ழந்தையோடு

மண்ட லங்கு லுங்க அண்டர்
விண்ட லம்பி ளந்தெ ழுந்த
செம்பொன் மண்ட பங்க ளும்ப யின்றவீடு

கொந்த ளைந்த குந்த ளந்த
ழைந்து குங்கு மந்த யங்கு
கொங்கை வஞ்சி தஞ்ச மென்று மங்குகாலம்

கொங்க டம்பு கொங்கு பொங்கு
பைங்க டம்பு தண்டை கொஞ்சு
செஞ்ச தங்கை தங்கு பங்க யங்கள்தாராய் !

சந்த டர்ந்தெ ழுந்த ரும்பு
மந்த ரஞ்செ ழுங்க ரும்பு
கந்த ரம்பை செண்ப தங்கொள் செந்தில்வாழ்வே !

தண்க டங்க டந்து சென்று
பண்க டங்க டர்ந்த இன்சொல்
திண்பு னம்பு குந்து கண்டி றைஞ்சுகோவே !

அந்த கன்க லங்க வந்து
கந்த ரங்க லந்தசிந்து
ரஞ்சி றந்து வந்த லம்பு ரிந்தமார்பா !
அம்பு னம்பு குந்த நண்பர்
சம்பு நன்பு ரந்த ரன்த
ரம்ப லும்பர் கும்பர் நம்பு தம்பிரானே !

(ப - ரை) சந்து - சந்தன மரங்களும், அடர்ந்து எழுந்து அரும்பு - தழைத்து உயர்ந்து முகிழ்க்கும், மந்தாரம் - மந்தார மரங்களும், செழும் கரும்பு - செழித்து வளரும் கரும்புகளும், கந்த அரம்பை - அடியில் கிழங்கையுடைய வாழை மரங்களும், செ(சே)சண் பதம் கொள்-ஆகாயத்தை யளாவி வளரப்பெற்ற, செந்தில் வாழ்வே - திருச்செந்தூரில் அமர்ந்திருப்பவனே !, தண் கடம் கடந்து சென்று - குளிர்ந்த நிழலையுடைய காட்டைக் கடந்து சென்று, பண்கள் தங்கு அடர்ந்த (அடர்ந்து தங்கு) இன் சொல் - இசைகள் மிகுதியாகப் பொருந்தி யுள்ள இனிய மொழிகளைப் பேசும் இயல்புடைய வள்ளிநாயகியார், (காவலாக விருந்த), திண் புனம் புகுந்து - செழுமையான பயிருள்ள தினைப்புனத்துக்குள் சென்று, கண்டு இறைஞ்சு கோவே-அத்தேவியாரைக் கண்டு வணங்கிய இறைவனே !, அந்தகன் கலங்க வந்து - யமன் மனங் கலங்கும்படி வந்து, கந்தரம் கலந்த - (அடியவர் இதயமாகிய) குகையில் அமர்கிற(வனே !), சிந்துரம் - (ஐராவதம் என்னும் இந்திரனது) யானையினால் வளர்க்கப்பெற்ற தெய்வயானையம்மையார், சிறந்து உவந்து - சிறப்பாகவும் மனமகிழ்ச்சி யுடனும், அலம் புரிந்த மார்பா - அணைந்து பொருந்தும் மார்பை யுடையவனே !, அம் புனம் புகுந்த நண்பர் சம்பு - (தவநிலைமைக்குத்) தக்க காட்டினுள் சென்று வசிக்கும் தமது நண்பர்களாகிய தபோதனர்களுக்கு நன்மையையே புரிபவரான சிவபெருமானும், நல் புரந்தரன்-நல்ல இந்திரனும், தரம் பல் உம்பர் - மேன்மை வாய்ந்த பலதேவர்களும், கும்பர் - கும்ப முனிவரான அகத்திய மாமுனிவரும், நம்பு - (ஒப்புயர்வற்ற ஞானதேசிகன் என்று) நம்பும், தம்பிரானே - நாயகனே !, வந்து வந்து முன் தவழ்ந்து - (தாயின் முன்னே) மீண்டும் மீண்டும் வந்து தவழ்ந்து, வெம் சுகம் தயங்க நின்று - ஆசையுற்ற தேகம் குலுங்கநின்று, மொஞ்சி மொஞ்சி என்று - (முலை யென்பதை யுணர்த்தும் குதலை மொழியான) மொஞ்சி என்னும் மொழியை யுரைத்து, அழும் குழந்தையோடு - அழுகிற குழந்தையும், மண் தலம் குலுங்க - (பாரம் தாங்க மாட்டாமல்) பூமியானது அசைந்து குலுங்கும் வண்ணம், அண்டர் விண்தலம் பிளந்து எழுந்த - தேவர்களுடைய வானுலகத்தைப் பிளந்துகொண்டு உயர்ந்துள்ளதும், செம் பொன் மண்டபங்கள் (உம் - அசை) பயின்ற வீடு - சிவந்த பொன்னினாலாகிய மண்டபங்கள் நெருங்கிப் பொருந்தியுள்ளதுமான வீடும், கொந்து அளந்த குந்தளம் தழைந்து

பூங்கொத்துடன் கலந்த கூந்தல் அடர்ந்து நீண்டு வளரப்பெற்றவளும், குங்குமம் தயங்கு கொங்கை - பரிமள மிக்க சிவந்த கலவைச் சாந்து விளங்கப்பெற்ற தனபாரங்களை யுடையவளும், வஞ்சி - கொடியை யொத்த இடையை யுடையவளுமான மனைவியும், (மக்களும் வீடும் மனைவியுமே), தஞ்சம் என்று மங்கு காலம் - புகலிடம் என்று கூறி (உலக வாழ்க்கையில் உழன்று) அறிவு குன்றப் பெறும் காலத்தில், கொங்கு - கொங்கு மலரும், அடம்பு - அடம்பு என்னும் மலரும், கொங்கு பொங்கு பை கடம்பு - வாசனை மிகுந்த அழகிய கடப்பமலரும், தண்டை - தண்டைகளும், கொஞ்சு செம் சதங்கை - இனிமையாக ஒலிக்கும் அழகிய சதங்கைகளும், தங்கு - பொருந்தப்பெற்ற, பங்கயங்கள் தாராய் - நினது பாததாமரைகளைத் தந்தருளவேண்டும்.

(வி - ரை) தவநெறியே முத்தியடையச் சிறந்த நெறி யென்பதை அறிவுறுத்துமாறு தாமே தவநிலையில் அமரும் சிவபெருமான் காட்டினிற் சென்று தவம் புரியும் முனிவர்களுக்கு நன்மையையே புரியும் **சம்பு**வாக விளங்குகிறார் என்றபடி. "வேதாமுதல் விண்ணவர் சூடு மலர்ப்பாதா குறமின் பத சேகரனே" என்று கந்தரனுபூதியிற் கூறியுள்ளவாறு, தேவர்களால் வணங்கப்படும் தேவாதி தேவரான முருகப்பெருமான் ஐம்புலன்களின் கைகளிற் சிக்கித் தம்மை யடையும் நெறியில் நிற்கும் வல்லமையற்றுத் தியங்கும் ஆன்மாக்களிடம் தாமே வலியச்சென்று அவ்வான்மாக்களை வணங்கியும் கெஞ்சியும் அவைகளைத் தம் வசமாக்கிக் கொள்கிறார். ஏனெனில், "பணியா வெனவள் ளிபதம் பணியும்" முருகப்பெருமான் "தணியா வதிமோக தயாபர"ராக இருக்கிறார். (அக)

தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்
தனத்தந்தந் தனத்தந்தந்—தன தான.

**ம**னத்தின்பங் கெனத்தங்கைம்
புலத்தென்றன் குணத்தஞ்சிந்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்

மலர்ச்செங்கண் கனற்பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத்தங்கும் பலவோரும்

எனக்கென்றிங் குனக்கென்றங்
கினத்தின்கண் கணக்கென்றென்
றிளைத்தன்புங் கெடுத்தங்கங் கழிவாமுன்

இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் றொழிற்பங்கங்
கெடத்துன்பங் கழித்தின்பந் தருவாயே!

கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித்தெங்குங்
கலக்கஞ்சிந் திடக்கண்துஞ் சிடுமாலும்

கதித்தொண்பங் கயத்தன்பண்
பனைத்துங்குன் றிடச்சந்தங்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளீவாய்!

தினைக்குன்றந் தனிற்றங்குஞ்
சிறுப்பெண்குங் குமக்கும்பந்
திருச்செம்பொன் புயத்தென்றும் புனைவோனே!

செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும் பெருமாளே.

(ப - ரை) *கனைக்கும் தண் கடல் சங்கம்* - ஒலிக்கும் குளிர்ந்த கடலில் பிறந்த (பாஞ்சசன்னியம் என்னும்) சங்கத்தை, *கரத்தின் கண் தரித்து* - தமது திருக்கரத்தினில் வைத்துக்கொண்டு, *எங்கும் கலக்கம் சிந்திட* - தமது ஆணைக் குட்பட்ட இடங்களிலுள்ள ஆன்மாக்களின் மனக்கலக்கம் நீங்குமாறு, *கண் துஞ்சிடு மால்* (உம் - அசை) - யோக நித்திரை செய்யும் திருமால், *கதித்த ஒண் பங்கயத்தன்* - அவரது திருநாபியினின்றும் கிளம்பிய பிரகாசம் பொருந்திய தாமரை மலரினின்றும் தோன்றிய பிரமதேவர், (இவர்களுடைய), *பண்பு அனைத்தும்* - குணங்களெல்லாம், *குன்றிட* - அழி(ந்து அவர்களும் அழி)வது அவர்களுடைய இயல்பாக விருக்க, *சந்தம்* (சந்ததம்) - தாம் மட்டும் அழிவே யில்லாமல்) சதாகாலமும், *களிக்கும்* - பரமானந்தத்தில் ஆழ்ந்திருக்கும் இயல்புடையவரான, *சம்புவுக்கும் செம் பொருள் ஈவாய்* - சிவபெருமானுக்கும் யாவற்றினும் மேலான பிரணவப் பொருளை உபதேசிக்கும் வல்லமை வாய்ந்தவனே!, *தினை குன்றம் தனில் தங்கும்* - தினை விளையும் குன்றில் வசிக்கும், *சிறு பெண்* - இளமை வாய்ந்த பெண்ணான வள்ளி நாயகியின், *குங்கும கும்பம் திரு செம்பொன் புயத்து* - பரிமளமிக்க செஞ்சாந்து பூசப்பெற்றுக் கும்பங்களை யொத்திருக்கும் தன பாரங்களை அழகு வாய்ந்தவைகளும் செம்பொன்னின் ஒளி வீசுபவைகளுமான நினது தோள்களின் மீது, *என்றும் புனைவோனே* - எப்போதும் அணைத்துக் கொண்டிருப்பவனே!, *செழிக்கும்* -

செழுமையாக வளர்ந்தவைகளும், குண்டு அகழ் சங்கம் - ஆழத்தில் தரையில் ஊர்ந்து செல்பவைகளுமான சங்கங்கள், கொழிக்கும் - வீசி யெறியப்படும் (தலமும்), சந்தனத்தின் பைம் பொழில் தண் - சந்தனமரங்கள் அடர்ந்த பசுமையான சோலைகளினால் குளிர்ச்சி பெறும் (தலமுமான), செந்தியில் தங்கும் பெருமாளே - திருச்செந்தூரில் அமர்ந்திருக்கும் பெரியோனே !, மனத்தின் பங்கு என தங்கு - மனத்தின் கூறுகளென்று சொல்லுமாறு அதனுடன் மிகவும் நெருங்கிக் கலந்துள்ள, ஐம்புலத்து என் தன் குணத்து - (ஆர்வன பரிசன தரிசன கந்த ஓசைகளை யறியும்) ஐம்புலன்களினால் விஷய சுகங்களை நுகர இச்சை கொள்ளும் அடியேனது குணத்துக்கு, அஞ்சு இந்த்ரிய தம்பம் தனை - (உதவியாக வுள்ள) ஐந்து பொறிகளான மெய் வாய் கண் மூக்கு செவி இவைகள் நிலைபெறுவதற்கு ஆதாரமாகவுள்ள தேகத்தை, சிந்தும்படி - அழியச் செய்யக் கருதி, காலன் - யமன், மலர் செம் கண் கனல் பொங்கும் திறத்தின் - விரிந்து சிவந்துள்ள கண்களினின்றும் அனல் மிகுத்து வரும் இயல்புடையவனாய், தண்டு எடுத்து - தனது தண்டாயுதத்தைக் கையிலேந்திக் கொண்டு, அண்டம் கிழித்து - அண்ட முகட்டைக் கிழித்துக் கொண்டு, இன்று இங்கு உற - இன்று அடியேனிருக்கு மிடத்துக்கு வந்து சேர, தங்கும் பலவோரும் - அந்தத் தேகத்தில் வசிக்கும் பஞ்சபூதங்கள் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் தன்மாத்திரைகள் அந்தக்கரணம் என்னும் தத்துவக் கூட்டத்தவர் பலரும், இங்கு எனக்கு என்று - இவ்விடம் எனக்கு வேண்டும் என்றும், அங்கு உனக்கு என்று - அவ்விடத்தில் நீ இருக்கலாம் என்றும், இனத்தின் கண் கணக்கு என்று என்று - (பூதங்கள், ஞானேந்திரியங்கள் என்றும் மற்றும் வகுப்புக்கள் ஏற்பட்டுள்ளபடி) ஒவ்வொரு வகுப்புக்கும் இன்னவிடமென்று கணக்கிடவேண்டுமென்றும் பன்முறை கூறி, இளைத்து - (என்ன சொல்லியும் பயனில்லாமையைக் கண்டு) சோர்வுற்று, அன்பும் கெடுத்து - தேகத்தில் இருக்க வேண்டுமென்ற ஆசையையும் இழக்க, (அதன்பின்), அங்கம் கழிவு ஆ(கு)முன்- தேகம் மரிப்பது என்னும் நிலைமையானது ஏற்படுவதற்குமுன், இசைக்கும்-இன்னிசை பொருந்திய, செம்தமிழ் கொண்டு - திருத்தமான தமிழ்மொழியிலுள்ள தேர்ச்சியை உபயோகித்து, அங்கு - ஓரிடத்துக்குச் சென்று, இரக்கும் புன்தொழில் பங்கம் கெட-பொருள் யாசிப்பதான அற்பத் தொழிலை மேற்கொண்டுள்ள குறைவு அடியேனைவிட்டு அகலும் வண்ணம், துன்பம் கழித்து - (உலக வாழ்க்கையில் உழல்வதான) துன்பத்தைத்தரும் ஆசையை அகற்றி, இன்பம் தருவாயே - (நினது பாதமலர்களை யடைந்தோர் பெறும்) இன்பத்தைத் தந்தருள வேண்டும்.

**(வி - ரை)** பிரளய காலத்தில் பிரமதேவரும் விஷ்ணுவும் அழிந்த பின்னும், ஆதியந்த மற்ற இறைவரான சிவபெருமான் அழியாமல் நின்று ஆனந்தக்

கூத்தாடுகிறார். கருணைக் கடலான சிவபெருமான் ஆன்மாக்களின் அயாததை யகற்றவே பிரளய காலத்தில் பிரமவிஷ்ணுக்களையும் சகல தேவர்களையும் சகல ஆன்மாக்களையும் சங்கரித்துவிடுகிறு ராதலின், அந்த ஆன்மாக்கள் அடைந்த சுகத்தை யுன்னி ஆனந்தக் கூத்தாடுகிறார் எனப்பட்டது. சப்த ஸ்பரிச ரூப ரச கந்தம் என்பவைகளை மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம் பொறிகளின் வழியே நுகரும் ஐம்புலன்கள் அந்தக்காரணமாகிய மனத்துடன் மிகவும் நெருங்கின சம்பந்த முள்ளவைகளாக இருக்கின்றன. ஐம்புலன்களின் சம்பந்தமில்லாவிடில் ஐம்பொறிகள் விஷய சுகங்களை இன்ன தன்மையனவென் றும் அறியமாட்டா. ஐம்புலன்களே விஷயசுக ஆசைகளுக்குக் காரணமாகும். ஆனல், அச்சுகங்களை நுகரும் வாயில்கள் மெய் வாய் கண் மூக்கு செவி. அந்த ஐம்பொறிகள் நிலைபெற் றிருப்பதற்கு ஆதாரமாகவுள்ளது தேகம். அந்தத் தேகத்தை அழிப்பதற்காக யமன் அணுகி வருங்கால், பஞ்சபூதங்கள் ஞானேந் திரியங்கள் கன்மேந்திரியங்கள் முதலாகவுள்ள தத்துவக் கூட்டங்களுள் ஒவ் வொன்றும் தான் மட்டும் அழியாமலிருப்பதற்கு அத்தேகத்திலேயே ஒரு இடத் தைத் தேடிக்கொள்ளப் பெரும்பாடு படுகிறது. பிறகு, ஒவ்வொரு வகுப்பும் தத் தமக்கு ஒரு பத்திரமான இடம் வேண்டுமெனத் தேடுகிறது. கடைசியாக, எவ் வளவு கதறியும் பயனில்லாமையைக் கண்டு சோர்ந்து அவைகள் தத்தம் ஆசையை ஒழித்துக் கொள்ளுகின்றன. யமனும் அவைகளிருக்கச் சிறிதளவும் இடம் வைக்காமல் தேகமுழுவதையும் அழிக்கிருன். அதுவே இப்பாடலில் விசித்திரமாகக் கூறப்பட்டிருக்கிறது. (அஉ)

தானதன தான தானந்த தானந்த
தானதன தான தானந்த தானந்த
தானதன தான தானந்த தானந்த—தனதான.

மூளும்வினை சேர மேல்கொண்டி டாஐந்து
பூதவெகு வாய மாயங்கள் தானெஞ்சில்
மூடிநெறி நீதி யேதுஞ்செ யாவஞ்சி யதிபார

மோகவினை வான போகஞ்செய் வேனண்டர்
தேடஅரி தாய ஸ்ரேயங்க ளாய்நின்ற
மூலபர யோக மேல்கொண்டி டாநின்ற துளதாகி

நாளுமதி வேக கால்கொண்டு தீமண்ட
வாசியன லூடு போயொன்றி வானின்க
ணாமமதி மீதி லூறுங்க லாஇன்ப அமுதூறல்

நாடியதன் மீது போய்நின்ற ஆநந்த
மேலைவெளி யேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே?

காளவிட மூணி மாதங்கி வேதஞ்சொல்
பேதைநெடு நீலி பாதங்க ளால்வந்த
காலன்விழ மோது சாமுண்டி பாரம்பொ டனல்வாயு

காதிமுதிர் வான மேதங்கி வாழ்வஞ்சி
ஆடல்விடை யேறி பாகங்கு லாமங்கை
காளிநட மாடி நாளன்பர் தாம்வந்து தொழுமாது

வாளமுழு தாளு மோர்தண்டு ழாய்தங்கு
சோதிமணி மார்ப மாலின்பி ன்னின்சொல்
வாழுமுமை மாத ராள்மைந்த னேயெந்தை யிளையோனே!

மாசிலடி யார்கள் வாழ்கின்ற வூர்சென்று
தேடிவிளை யாடி யேயங்ங னேநின்று
வாழுமயில் வீர னேசெந்தில் வாழ்கின்ற பெருமாளே!

(ப - ரை) காள விடம் ஊணி - ஆலாகலம் என்னும் விடத்தை யுண்டவரும், மாதங்கி - மதங்கரிஷியின் புத்திரியாக அவதரித்தவரும், வேதம் சொல் பேதை - வேதங்களால் உலகங்களின் தாய் என்று சொல்லப்படுபவரும், நெடு நீலி - பெருமை வாய்ந்த துர்க்கையும், வந்த காலன் விழ - தம்மை யணுகிவந்த யமன் அழிந்து விழும் வண்ணம், பாதங்களால் மோது சாமுண்டி - காலினல் உதைத்த காளியும், பார் அம்பொடு அனல் வாயு - பிருதிவி (பூமி), அப்பு (நீர்), அக்கினி, காற்று, கா(ந்)தி முதிர் வானம் (ஏ - அசை) - (சந்திர சூரியர்கள் அமர்ந்து) பேரொளி பரப்பும் ஆகாயம், (ஆகிய ஐந்து பூதங்களிடத்தே), தங்கி வாழ் வஞ்சி - உறைந்தருளும் சத்தியும், ஆடல் விடை ஏறி - நிர்த்தனஞ் செய்(து உலகங்களை ஆட்டுவிப்)பவரும் இடபத்தை வாகனமாகவுடையவருமான சிவபெருமானது, பாகம் குலாம் (குலவும்) மங்கை - வாமபாகத்தில் மகிழ்ச்சியுடன் அமர்ந்திருக்கும் உமாதேவியாரும், காளி நடமாடி - பத்திரகாளியாக (சிவபெருமானுக்கு எதிரே) நிர்த்தனஞ் செய்த சத்தியும், நாள் அன்பர் தாம் வந்து தொழும் மாது - தினந்தோறும் அன்புபூண்ட அடியவர்கள் தம்மிடம் வந்து வணங்கப்பெறும் பராபரையும், வாளம் முழுது(ம்) ஆளும் - சக்கரவாள பர்வதத்தினல் சூழப்பட்டுள்ள உலகங்களெல்லாவற்றையும் காக்கும் (அளிக்கும்) (மூர்த்தியும்), ஓர் தண் துழாய் தங்கு - ஒப்பற்றதும் குளிர்ச்சி பொருந்தியதுமான துளசிமாலை பொருந்தப்பெற்ற, சோதி மணி மார்ப - ஒளிவீசும் அழகிய மார்பையுடையவருமான, மாலின் - திருமாலின், பி(ன்)னள் - தங்கையும், இன் சொல் வாழும் உமை மாதராள் மைந்தனே - இனிய மொழி நிலையாகப் பொருந்தி யிருக்கும் உமாதேவியாருமான அம்பிகையின் புதல்வனே !, எந்தை இளையோனே - சகல ஆன்மாக்களுக்கும் தந்தையான சிவபெருமானது இளைய

குமாரனே !, மாசு இல் அடியார்கள் வாழ்கின்ற ஊர் தேடி சென்று - குற்றமற்ற மெய்யடியார்கள் வசிக்கும் ஊருக்குத் தேடிச்சென்று, விளையாடி-(ஏ - அசை) - (நினது கருணையை நன்கு உணர்த்துமாறு பல) திருவிளையாடல்களைப் புரிந்து, அங்ஙனே நின்று வாழும் மயில் வீரனே - அவ்வூரிலேயே நிலையாக அமர்ந்தருளும் மயில்வீரா !, செந்தில் வாழ்கின்ற பெருமாளே - திருச்செந்தூரில் நிலையாக எழுந்தருளி யிருக்கும் பெரியோனே !, மூளும் வினை சேர - பயனைத் தருங்காலம் கூடப்பெற்ற (முந்தை) வினைகள் ஒருங்கே வந்துசேர, மேல்கொண்டிடா ஐந்து பூத - (அது காரணத்தினால்) வலிமைபெற்று எழும்பும் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களின், வெகுவாய மாயங்கள் தாம் நெஞ்சில் மூடி - அநேக மாயங்கள் அடியேனது மனத்தில் வந்து மூடப் பெற்று, நெறி நீதி ஏதும் செயா - நன்னெறிக்குரிய தருமச்செயல் ஒன்றும் செய்யாமல், அதி பார வஞ்சி மோக நினைவான போகம் செய்வேன் - மிகுத்து வருத்தும் பெண் காதலையே எப்போதும் நினைக்கச் செய்யும் (விஷய) சுகங்களை அனுபவிப்பவனாகிய அடியேன், அண்டர் தேட அரிது ஆ(கி)ய ஞேயங்கள் - தேவர்களும் தேடியறிவதற்கு அரியவைகளும் மெய்ஞ்ஞானத்தினாலே அறியக்கூடியவைகளுமான பொருள்களை, ஆய் நின்ற-ஆராய்வதற்கு அமர்வதான, மூல பர யோகம் மேல்கொண்டிடா நின்றது உளதாகி - உலகங்களெல்லாவற்றிற்கும் ஆதி காரணமான பரம்பொருளைக் கண்டறிவதற்குரிய யோக நிஷ்டையில் அமர்வதைப் பெற்று, நாளும் அதி வேக கால் கொண்டு தீ மண்ட - தினந்தோறும் சுவாசத்தினால் உட்செல்லும் காற்றானது வீசுவதனால் மூலாதாரத்திலுள்ள அக்கினியானது பற்றி யெரியப் பெற்று, வாசி அனலூடு போய் ஒன்றி - சுவாசமானது (சுழுமுனை நாடியினூடே) அவ்வக்கினியுட் சென்று பொருந்தப்பெற்று, வானின்கண் - பிரமரந்திரத்துக்கு அப்பாலுள்ள ஆகாசத்திலே, நாம மதி மீதில் ஊறும் கலா இன்ப அமுதூறல் நாடி - பூரண சந்திரனிடத்திலிருந்து பொழியும் அமுதகலை என்னும் இனியஅமுதப்பொழிவை விரும்பித்தேடி, அதன்மீது போய் நின்ற ஆநந்தமேலை வெளி ஏறி-அந்த ஆகாசத்தில் போய் நிற்பதனால் உண்டாகும் (துன்ப சம்பந்தமில்லாத) ஆநந்தமான உயர் நிலையில் ஏறியமர்ந்து, நீ இன்றி நான் இன்றி நாடி - நீ நான் என்னும் வேற்றுமையற்றிருக்கும் நிலைமையை ஆராய்ந்தறிந்து, இ(ன்)னும் வேறு தான் இன்றி வாழ்கின்றது ஒரு நாளே - அப்பால் அப்படிப்பட்ட வேற்றுமையின்றி சுகமாக (அடியேன்) வாழும் நாள் உண்டோ ?
(அ௬)

தான தானனந் தானனந் தானதன
தான தானனந் தானனந் தானதன
தான தானனந் தானனந் தானதன—தந்தான.

பாத நூபுரம் பாடகஞ் சீர்கொள்நடை
யோதி மோகுலம் போலசம் போகமொடு
பாடி பாளிதங் காருகம் பாவையிடை வஞ்சிபோலப்

பாகு பால்குடம் போலிரண் டானகுவ
டாட நீள்வடஞ் சேரலங் காரகுழல்
பாவு மேகபொன் சாபமிந் தேபொருவ ரந்தமீதே

மாதர் கோகிலம் போல்கரும் பானமொழி
தோகை வாகர்கண் டாரைகொண் டாடிதகை
வாரும் வீடேயென் றேதிதம் பாயல்மிசை யன்புளார்போல்

வாச பாசகஞ் சூதுபந் தாடஇழி
வேர்வை பாயசிந் தாகுகொஞ் சாரவிழி
வாகு தோள்கரஞ் சேர்வைதந் தாடுமவர் சந்தமாமோ

தீத தோதகந் தீததிந் தோதிதிமி
டோடு டேடுடுண் டேடுடுண் டேடுடுடு
டீகு டீகுகம் போலவெண் பேரிமுர சங்கள்வீறச்

சேடன் மேருவுஞ் சூரனுந் தாருகனும்
வீழ ஏழ்தடந் தூளிகொண் டாடமரர்
சேசெ சேசெயென் றாடநின் றாடிவிடு மங ்கிவேலா

தாதை காதிலங் கோதுசிங் காரமுக
மாறும் வாகுவுங் கூரசந் தானசுக
தாரி மார்பலங் காரியென் பாவைவளி யெங்கள்மாதைத்

தாரு பாளிதஞ் சோரசிந் தாமணிக
ளாட வேபுணர்ந் தாடிவங் காரமொடு
தாழை வானுயர்ந் தாடுசெந் தூரிலுறை தம்பிரானே.

(ப - ரை) தீத தோதகந்...........டீகு, (என்று), கம்பு - சங்கங்களும், ஓல - ஒலிக்கும், எண் - அநேக, பேரி முரசங்கள் - பேரிகைகளும் முரசங்களும், வீற - பேரொலிசெய்து முழங்கவும், சேடன் மேருவும் சூரனும் தாருகனும் வீழ - ஆதிசேஷனும் மேருமலையும் சூரபதுமனும் தாருகாசுரனும் நின்றவிடத்தி லிருந்து பெயர்ந்து விழுமாறும், ஏழ்தடம் தூளிகொண்டு ஆட - (மேல்) உலகங்கள் ஏழும் தூளி எழப்பெற்றுச் சுழலுமாறும், அமரர் சேசெ சேசெ என்று ஆட - தேவர்கள் ஜெய ஜெய! ஜெய ஜெய! என்று கூவிக் களிப்புடன் நிர்த்தனஞ் செய்யுமாறும், நின்று ஆடி விடும் அங்கி வேலா - போர்க்களத்தில் நின்று திருவிளையாடலாக அக்கினியின் உருவமான வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே!, தாதை காதில் அங்கு ஓது(ம்) - நினது தந்தையின் காதில் அன்று (பிரணவப்பொருளை) உபதேசித்த, சிங்காரமுகம் ஆறும் - அழகிய திருமுகங்கள் ஆறும், வாகுவும் - (பன்னிரு) தோள்களும், கூர் - விரும்பும், அ - அந்த, சந்தான சுகதாரி - தனது சந்ததிக(ளான ஆன்மாக்க)ளின் நன்மையையே மனத்தில் அமைத்துக்கொண்டவளும், மார்பு அலங்காரி - வடிவம் மிகவும் அலங்காரமாயிருக்கப் பெற்றவளும், (என் - அசை),

பாவை - சித்திரப் பாவையைப்போல் அழகு வாய்ந்தவளுமான, வளி எங்கள் மாதை - வள்ளி என்னும் எங்கள் பெண்மணியை, தாரு பாளிதம் சோர - (அவள் உடுத்திருந்த) மாவுரிப் புடவை அவிழுமாறும், சிந்தாமணிகள் - (அவள் அணிந்திருந்த ஆபரணங்களிலுள்ள) தெய்வத்தன்மை பொருந்திய இரத்தின மணிகள், ஆட (ஏ - அசை) - ஆடுமாறும், புணர்ந்து ஆடி - கலவிசெய்து திருவிளையாடல்களைப் புரிந்து, வங்க(ம்) ஆரமொடு தாழை வான் உயர்ந்து ஆடு - நாவாய்களும் முத்துக்களும் தென்னைமரங்களும் ஆகாயத்தை யளாவிநின்று ஆடப்பெற்ற, செந்தூரில் உறை தம்பிரானே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் நாதனே!, நூபுரம் பாடகம் பாத சீர்கொள் நடை - தண்டைகளையும் பாடகங்களையும் அணிந்துள்ள பாதங்களின் அழகிய நடையானது, ஓதிம ஒகுலம் போல - அன்னங்களுள் சிறந்த இனத்தின் நடையை ஒத்திருக்கும்; சம்பை ஒகம் (ஓடு - இசைநிறை இடைச்சொல்) பாடி (படி) - மின்னற் கூட்டத்துக்கு ஒப்பான, (ஒளி பொருந்திய) காருகம் பாளிதம் - நெய்த பட்டுப் புடவை, பாவு - பொருந்தியுள்ள, ஐ இடை - நுண்ணிய இடையானது, வஞ்சி போல - கொடியை ஒத்திருக்கும்; பாகு பால் குடம்போல் - கற்கண்டு சேர்த்த பால் நிரம்பிய குடங்களைப் போன்ற, இரண்டு ஆன குவடு ஆட - இரண்டாகப் பிரிந்துள்ள மலைகள் அசையப் பெற்றும், நீள் வடம் சேர - நீண்ட (இரத்தின) மாலைகள் அவைகளின்மீது பொருந்தப் பெற்றும், அலங்கார குழல் பாவு மேக - அழகிய கூந்தல் பரவியுள்ள மேகத்தையும், (புருவங்களும் முகமும்), அந்தம் மீதே - (கார்காலத்து) இருண்ட மேகங்களினிடையே (தோன்றும்), பொன்சாபம் இந்து (ஏ) - பொன்னிறமுள்ள வான விற்களையும் சந்திரனையும், பொருவர் - ஒத்தவைகளாய் இருக்கப்பெற்றுள்ளவர்; மாதர் கோகிலம்போல் கரும்பான மொழி - அழகிய கிளியைப்போல் இனிமையாகப் பேசுபவர்; தோகை வாகர் - மயிலைப்போல் அழகு வாய்ந்தவர்கள்; கண்டாரை கொண்டாடி - சந்திப்பவர்கள் யாவராயினும் அவர்களைப் புகழ்ந்து, தகை வாரும் வீடே என்று ஓதி - சிறப்புடையீர்! எனது வீட்டுக்கு வரவேண்டுமென்று சொல்லி, (அழைத்துச் சென்று), தம் பாயல் மிசை - தமது படுக்கையின்மீது அமர்த்தி, அன்பு உ(ள்)ளார்போல் வாச(ர) - உண்மையான அன்புள்ளவர் போலப் பேசி, பாசகம் சூது பந்தாட - சொக்கட்டான் முதலிய சூதாட்டங்களுக்குரிய கருவிகளையொத்த தனபாரங்கள் திரண்டு அசையப்பெற்றும், வேர்வை இழி பாய - வியர்வையானது இறங்கிப் பெருகப் பெற்றும், சிந்து ஆகு விழி கொஞ்சாா - கடலைப் போல் விசாலமாகவுள்ள கண்கள் கொஞ்சி நோக்கி, வாகு தோள் கரம் சேர்வை தந்து - அழகிய புயங்களையும் கைகளையும் கலக்கத் தந்து, ஆடும் அவர் சந்தம் ஆமோ - மதன லீலைகளைச் செய்பவர்கள்; அவர்களுடைய குணம் ஏற்றுக் கொள்ளத் தக்கதோ?

(அச)

திருச்சீரலைவாய் எனும் திருச்செந்தூர் பாட்டுகள் ௮௪ - ம் முற்றிற்று.

உ

வேலுமயிலுந்துணை

# பாட்டு முதற்குறிப் பகராதி

# திராவிட வேதத் திரட்டு

## பன்னிரு திருமுறைத் திரட்டும்

திருப்புகழ்த் திரட்டும், ஸ்தலமான்மியச் சுருக்கமும் கொண்டன

சிவரஹஸ்யப் பதிப்பாசிரியர் கயப்பாக்கம் திருவாளர் சதாசிவ செட்டியார், பி. ஏ., அவர்கள் மிகவும் அழகாய்த் தொகுத்தது.

புதிய பதிப்பு : : **560**—பக்கங்கள் : : விலை ரூபா **3—8—0**

—— அரிய வெளியீடு ——

**நவசக்தி.**—அல்லயன்ஸ் கம்பெனியார் வெளியீட்டைப்பற்றி நாம் புதிதாக ஒன்றுஞ் சொல்லவேண்டுவதில்லை. அவர்கள் வெளியீட்டுத் திறமை தமிழுலகம் அறிந்ததொன்று. திராவிட வேதத்திரட்டில் பன்னிரு திருமுறைத் திரட்டும், திருப்புகழ்த் திரட்டும் அடங்கி யிருக்கின்றன. இத்திரட்டில் எல்லாத் திருப்பதிகட்குமுரிய பதிகங்களின் பாக்களிற் சிலச்சில க்ஷேத்திர முறையாக ஒழுங்கு செய்யப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு திருப்பதியின் மாண்பும் ஆங்காங்கே சுருங்கச் சொல்லப்பட்டிருக்கிறது. பாராயணத்துக்குரிய பாடல்கள் பல சேர்க்கப்பட்டிருக்கின்றன. திருப்புகழ்த் திரட்டும் ஒருபால் ஒளிர்கிறது. க்ஷேத்திர யாத்திரை செய்வோர்க்கு எல்லா வழியிலும் வழிகாட்டியா யிருப்பது இத் திராவிட வேதத்திரட்டு.

**லோகோபகாரி.**—இதில் மூவர் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம் முதலிய பன்னிரு திருமுறைகளிலும் திருப்புகழிலும் திரட்டிய அரிய பாடல்கள் அடங்கி யிருக்கின்றன. மூவர் தேவாரத்தில் சிறந்த பாடல்கள் இதில் திரட்டப்பட்டிருக்கின்றன. இதில் (274) இருநூற்றெழுபத்தி நாலு தலங்களில் மூவர் பாடிய பாடல்கள் அடங்கி யிருக்கின்றன. சிவத்தல யாத்திரை செய்ய விரும்பும் அன்பர்களுக்கு இது சிறந்த துணையாகும். இதனைத் திரட்டிய அன்பர் தமிழறிஞரும், சைவப் பெரியாருமான கயப்பாக்கம் உயர் திரு. சதாசிவ செட்டியார் என்றால் இதுபற்றி விரித்துரைத்தல் வீணாகும். சைவ சமயத்தில் தோன்றும் பாக்கியம் பெற்ற ஒவ்வொருவரிடமும் இந்த நூலின் ஒரு பிரதி இருக்கவேண்டும். இது அவர்களுக்கு உயிர்த்துணையாகும். இதன் காகிதம் அச்சு கட்டடம் அனைத்தும் நேர்த்தி. டிம்மி $\frac{1}{3}$ அளவு 560 பக்கம். விலை ரூபாய் மூன்றரை. இதனை வெளியிடும் பாக்கியம் பெற்ற சென்னை, திருமயிலை அல்லயன்ஸ் கம்பெனியார் சைவ உலகத்திற்குப் பெருந் தொண்டு புரிந்திருக்கிறார்கள். அவர்கள் தொண்டை நாம் போற்றுகின்றோம்.

**குமரன்.**—திருமுறையை நியம பாராயணஞ் செய்பவருக்குப் பெரிதும் உபயோகமாகும் பொருட்டு சைவத் திருமுறை பன்னிரண்டிலும் இருந்து திரட்டப்பட்டுள்ளது. இதில் தேவாரம் பெற்ற 274 தலங்கட்கும் முதல் பாட்டும் இறுதிப் பாட்டும் சேர்க்கப் பெற்றுள்ளன. சில தலங்கட்கு அதிகமான பாக்களும், திருவாசகம் முதலிய மற்ற திருமுறைகளிலிருந்து பல அரிய பாக்களும், திருப்புகழிலிருந்து சில பாக்களும் சேர்க்கப்பெற்றுள்ளன. ஒவ்வொரு தலத்தின் புராண குறிப்புகளும், இருக்குமிட விவரமும் குறிக்கப்பட்டிருக்கின்றன. பாட்டு முதற் குறிப்பும் தலங்களின் அட்டவணையும் நூன் முகப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. உயர்ந்த காகிதத்தில் திறம்பட அச்சிடப் பெற்றிருக்கிறது.

---

அல்லயன்ஸ் கம்பெனி, ஷண்முக விலாஸம், மயிலாப்பூர், சென்னை.

# நால்வர் சரித்திரம்

[மா. துரைசாமி முதலியார் அவர்கள் இயற்றியது]

## நால்வர் திருவுருவப்படத்துடன் கூடியது

அட்டை பைண்ட் அணு **12** : : சாதா பைண்ட் அணு **10**

இந்நூலைப்பற்றிய சில முக்கிய அபிப்பிராயங்கள்

லோகோபகாரி. — * இனிய தமிழில், எளிய நடையில் தெளிவான முறையில் எழுதியிருக்கிறார். நால்வர் பாடிய மேலான பாடல்களும் இதில் இடையிடையே கலந்து நிலவுகின்றன. சைவர்கள் மட்டுமேயன்றித் தமிழர் ஒவ்வொருவரும் நால்வர் சரித்திரத்தைப் படித்து இன்பமும் பயனும் அடைதல் இன்றியமையாதது. பெரியோரும், சிறியோரும், பெண்களும் பிள்ளைகளும் இதனைப் படித்துப் பயனடையலாம். கல்வியிலாகாத் தலைவர்கள் இப்புத்தகத்தைப் பள்ளிப் பிள்ளைகட்குப் பாடமாக வைத்தல் நலம். இதனை வெளியிட்ட அல்லயன்ஸ் கம்பெனியார் திருப்பணியை நாம் போற்றுகிறோம்.

---

நவசக்தி.—* சைவப் பயிரைத் தழைத்தோங்கச்செய்த சமய குரவரான நால்வருடைய சரித்திரங்களைச் சுருக்கமாக அழகான தெள்ளிய நடையில் எழுதியிருக்கிறார். இந்நூலைக் காணும்போதே எமக்கு ஆனந்தம் உண்டாயிற்று. இதனுடைய மேல் அமைப்பும் உள் அங்கங்களும் எம்மைப் பெரிதும் மகிழ்வித்தன. நால்வர் ஒவ்வொருவருடைய சரித்திரத்திலும் அவரவர் அவ்வப்பொழுது பாடிய பதிகங்கள் படிப்பவருடைய உள்ளத்தைப் பரவசப் படுத்துகின்றன. அழகான தமிழ் நடையில், நால்வருடைய சரித்திரத்தையும் ஒரே நூலில் நாம் இப்பொழுது முதன்முதலாகக் காண்கிறோம்.

---

சுதேசமித்திரன்.—சைவச் செழும் பயிரைத் தேவார திருவாசகங்கள் என்ற நீர் பாய்ச்சி வளர்த்த திருநெறித் தலைவர்களாகிய நால்வர் சரிதத்தை இனிய தமிழ் நடையில் எழுதியுள்ளார். சென்னை மயிலாப்பூரில், அரிய நூல்களைப் பதிப்பித்துத் தமிழுலகுக்குதவி வரும் அல்லயன்ஸ் கம்பெனியார் இந்நூலையும் பதிப்பித் திருக்கின்றனர். சைவர்களிற் பெரும்பாலோர் நால்வர் சரிதத்தினைப் படித்திருப்பினும், சுருக்கமாக விஷயங்கள் ஒன்றையும் விடாமல் அறிந்துகொள்ள விரும்புவோருக்கு இந்த நூல் தோன்றாத் துணையாக விருக்கும். ஆங்காங்கு சரிதப் போக்கை ஆதரிப்பனவாகவுள்ள பாடல்களும் இதில் சேர்க்கப்பட் டிருக்கின்றன. 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்றதற்கேற்ப கருங்கல் மனதையும் கரைத் துருக்கவல்ல திருவாசகத்தை எழுதிய ஸ்ரீமாணிக்கவாசகரின் சரிதை வெகு அழகாக எழுதப்பட்டிருக்கிறது.

---

அல்லயன்ஸ் கம்பெனி, ஷண்முக விலாஸம், மயிலாப்பூர், சென்னை.